# கிட்கிந்தா காண்டம்

(முதற் பகுதி)









அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

R. Padmanabhan.
27. 8. 66

உ

கவிச்சக்கரவர்த்தி

# கம்பர்

இயற்றிய

# இராமாயணம்

## கிட்கிந்தா காண்டம்

(முதற் பகுதி)






அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

1965




# உள்ளுறை



# கம்பராமாயணப் பதிப்பாசிரியர் குழு

தலைவர் :

பேராசிரியர், வித்துவான், திரு. கோ. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள், M.A., B.L.

உறுப்பினர்கள் :

பேராசிரியர், திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள்

திருவாளர் பி. ஸ்ரீ. ஆச்சாரியார் அவர்கள்

„ நீ. கந்தசாமிப் பிள்ளை அவர்கள்

„ மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்கள்

„ பு. ரா. புருஷோத்தம நாயுடு அவர்கள்




# கிட்கிந்தா காண்டம்

## முன்னுரை

பேராசிரியர், வித்துவான், கோ. சுப்பிரமணிய பிள்ளை, M.A. B.L.,
தமிழ் ஆராய்ச்சித்துறைத் தலைவர், அண்ணுமலைப் பல்கலைக் கழகம்.

கிட்கிந்தா காண்டம் இராமாயணத்துள் நான்காவது பகுதியாகும். இதன்கண் பதினேழு படலங்களும் ஆயிரத்திற்கும் மேற்பட்ட பாடல்களும் அமைந்துள்ளன. கிட்கிந்தை என்பது ஒரு மலை. கிட்கிந்தையிலும் அதன் சுற்றுப் புறங்களிலும் நடந்த வரலாறு கூறும் பகுதி கிட்கிந்தா காண்டம் எனப்பட்டது. முன் ஆரணிய காண்டத்தில் கபந்தனும் சபரியும் கூறியவண்ணம் இராம இலக்குவர், சுக்கிரீவன் தங்கியிருந்த இரலை மலையின் சாரலை அடைந்தது முதல் சுக்கிரீவன் ஆணையால் சீதை இருந்த இடத்தை நாடி வானர வீரர்கள் பலவிடங்களுக்கும் அலைந்து சென்று முடிவில் மகேந்திர மலையைச் சேர்ந்தது வரையுள்ள வரலாறு கிட்கிந்தா காண்டத்துள் கூறப்படும்.

கம்பர் இதனுட் கூறும் வரலாறு:—இராமனும் இலக்குவனும் மதங்கனது தவப்பள்ளியை விட்டு நீங்கிச் சூரிய குமரனுகிய சுக்கிரீவன் உறையும் இரலை மலையை நோக்கிச் செல்லும் வழியில் அம் மலையடிவாரத்திலுள்ள பம்பைக் கரையை அடைகின்றனர். அவ் விடத்துக் காட்சிகளெல்லாம் இராமனுக்குப் பிராட்டி நினைவால் வந்த விரகவேதனையை மிகுதிப்படுத்துகின்றன. அதனை ஒருவாறு அடக்கிக்கொண்டு இரலை மலையை நோக்கிச் செல்கின்ருன். இராம இலக்குவர் வருகை கண்டு சுக்கிரீவன் அஞ்சி ஒளிந்துகொண்டு அவர்களைப் பற்றிய உண்மையை அறிந்து வரச் செவ்வழி உள்ளத்தனுகிய அனுமனை ஏவ, அவன், தன் அறிவாற்றல், பேச்சுத்திறன் முதலியவற்ருல் அவர்களின் தன்மைகளை அறிந்து, சுக்கிரீவனை அவர்களிடம் அழைத்துச் செல்கிருன். வாலி சுக்கிரீவனுக்கு இழைத்த கொடுமையை அனுமன் கூறக்கேட்டு இராமன், சுக்கிரீவனுக்கு அடைக்கலம் அளிக்கின்ருன். இருவர்க்கும் நட்பு முகிழ்க்கின்றது. வாலியைக் கொல்லும் திறம் இராமன்பால் உண்டு என்பதைச் சுக்கிரீவன் இரண்டு சோதனைகளால் அறிந்து, அவன் துணைகொண்டு வாலியைப் போருக்கு அழைக்கிருன். அப்போரில் இராமனது அம்பால் வாலி உயிரிழக்கவும், சுக்கிரீவனுக்கு முடிசூட்டி அங்கதனை

இளவரசாக்கினர் இராம இலக்குவர். கார்காலம் குறுக்கிட்டதால் அக்காலம் முடிந்தவுடன் சுக்கிரீவன் தன் படைகளை ஏவி இராவணனால் சீதை சிறைப்பட்டிருக்கும் இடத்தை அறிய ஏற்பாடு செய்ய வேண்டும் என்று முடிவு செய்யப்படுகிறது. களி மயக்கில் ஆழ்ந்த சுக்கிரீவன், கார்காலம் முடியவும் தன் வாக்கை நிறைவேற்ருனய்க் காலங்கழிக்க, இராம இலக்குவர் வெகுண்டனர். சுக்கிரீவன் நிலையறிந்துவர இலக்குவனை அனுப்ப, அவன் சுக்கிரீவனை இராமனிடம் அழைத்து வருகிருன். சீதையைத் தேடுவதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. தெற்கு நோக்கிச் சென்ற அனுமன் முதலிய வீரர்கள், சீதை இலங்கையில் சிறைவைக்கப்பட்டிருக்கும் செய்தியைச் சம்பாதி என்னும் கழுகரசனல் அறிந்து அவ்விடத்திற்கு அனுமனை அனுப்ப முடிவு செய்தனர். கடலைக் கடப்பதற்காக அனுமன் மகேந்திர மலைமேல் பேருருவம் எடுத்து நிற்கிருன். இதனேடு இக்காண்டம் முடிகிறது.

கம்பரும் வான்மீகியும் :—இக்காண்டத்துள் கூறப்படும் கதைப் பகுதியுள் பெரும்பகுதி வான்மீகி இராமாயணத்தை அடியொற்றிச் செல்கின்றது. எனினும் கம்பர் சிற்சில இடங்களில் முதனூலினின்றும் மாறுபட்டுள்ளார். பண்பின் உறைவிடமெனப் போற்றப்படும் தமிழர்களது சிறந்த பண்பாட்டு நோக்கில் பாத்திரங்களைப் படைத்துள்ளார் கம்பர். அவர் தாரையை முதனூலினின்றும் முற்றிலும் வேருன படைப்பாகவும், சுக்கிரீவன் அங்கதன் முதலிய பாத்திரங்களைச் சிறிது மாற்றங்களுடனும் தமக்கே உரிய முறையில் அமைத்துள்ளார்.

பாத்திரங்கள் : காவியம் சிறக்கவேண்டுமானல் புலவனின் காவியப் புலமை மட்டும் போதாது. காவியச் சிறப்பிற்கு முக்கிய காரணமாய் அமைவது பாத்திரங்களின் அமைதியே. இவ்வுண்மையை நன்குணர்ந்தவர் கம்பர். கம்பரது காவியப் புலமையும் காவிய மாந்தரைப் படைத்துக் காட்டும் திறனும் அவரை இணையில்லாத உலகப் பெருங்கவியாக ஆக்கியுள்ளன. கிட்கிந்தா காண்டப் பகுதியில் சுக்கிரீவன், அனுமன், வாலி, தாரை, அங்கதன், சுயம்பிரபை, துமிரன், சம்பாதி முதலிய புதிய பாத்திரங்கள் இடம் பெறுகின்றனர். முதல் ஐவரும் சிறப்பான நாடகமாந்தர் ஆவர். சுயம்பிரபை, துமிரன் என்னும் இரு பாத்திரங்களும் அனுமன், அங்கதன் ஆகிய இவர்களின் வலியைக் காட்டவும், சம்பாதி, மேல் நடக்க இருக்கும் வரலாற்றுக்குக் கால் கொடுக்கவும் பயன்படுகின்றனரேயன்றி வேறு சிறப்பில்லை.

இராமன் : இராமனைப் பற்றிய செய்திகள் முன்னைய காண்டங்களில் கூறப்பட்டிருப்பினும் இங்கு அவனை நாம் உணர்ச்சிகளுக்கு

அடிமைப்படும் மனிதனைக் காண்கிறோம். பம்பைப் பொய்கைக் காட்சிகள் அவன் உள்ளத்தில் தோன்றும் விரக வேதனையை மிகு விக்கின்றன ; சீதையின் பிரிவால் நலிந்து மெலிந்து அவளைக்காண அலைந்து திரியும்படிச் செய்கின்றன. மாலைக்கடன் ஆற்றுவதையும் மறந்து நிற்கிறான் இராமன். இராமனும் உணர்ச்சிகளுக்கு ஆட்படும் சாதாரண மனிதன் தான் என்பதை உணருகிறோம். "முனிவிலா தாய்" என்று வாலியாலும் பாராட்டப் பெற்ற இராமன், கார்காலம் முடிந்ததும் சுக்கிரீவன் வாராமை கண்டு வெகுண்டு,

"நன்றி கொன்றுஅரு நட்பினை நார் அறுத்து
ஒன்றும் மெய்ம்மை சிதைத்துஉரை பொய்த்துளாற்
கொன்று நீக்குதல் குற்றத்தின் நீங்குமால் ?"

என்று கூறுகிறான். வாலியின் பழிப்பு மொழிகளைக் கேட்டு வெகுளாமல் அதற்கு நிதானமாகச் சமாதானம் கூறுகின்றான். இவை இராமன் மனிதப் பண்பு நிரம்பியவன் என்பதைக் காட்டுகின்றன. அளவு கடந்த அறிவாற்றலும் உலகியலறிவும் நிரம்பப் பெற்றவனாக இராமனை இங்கே காண்கிறோம். அனுமனைக் கண்டபோது அவனது முழு ஆற்றலையும் கூறிப் "பின்னர்க் காணுதி மெய்ம்மை'' என்று இலக்குவனிடம் கூறுகிறான். சுக்கிரீவனோடு உறவாடலாகாது என்ற இலக்குவற்குச் சமாதானம் கூறும் இராமன் கூற்று, உலகிய லறிவு நிரம்பிய கூற்றாகும். மராமரங்கள் துளைபட எய்தமையாலும் வாலியைப் படுத்தமையாலும் இராமனது வில்லின் ஆற்றல் இனிது காட்டப்பெறுகின்றது. இராமனது நூலறிவு, சுக்கிரீவற்கு அரசியல் நீதியை உணர்த்துமிடத்து நன்கு புலனாகிறது. வெகுளியும் பெரு மிதமும் சிற்சில இடங்களில் இவன்பால் தோன்றினும், பெரும்பாலும் இவனைச் சாந்தமூர்த்தியாகவும் அருளுடையண்ணலாகவும் யோகியாகவும் காண்கிறோம். கம்பர் இராமனுக்குச் "சாதுவாம் என்ற அத் தனுவின் செல்வன்" என்றே ஒரு பெயரும் சூட்டுகிறார். இராமனை மனிதப் பண்பும் தெய்வப்பண்பும் கலந்த பாத்திரமாக அமைக்க முயன்று அதில் கம்பர் வெற்றியும் பெற்றுள்ளார். இராமன் அழகிலே ஈடுபட்ட கம்பர், இக்காண்டத்துள்ளும் அவனை அழகன், ஆடவர் திலகன், ஓவிய உருவன், கோல மேனியன் என்றெல்லாம் புகழ்கின்றார். இராமனைத் திருமாலாகவும் காண்கின்றார் கம்பர். இராமனை 'ஆயிரம் பெயருடை...அமரன்' என்றும், 'ஆலிலைப் பள்ளியான்', என்றும், 'கடல் துயின்ற களிறு' என்றும் 'திருமறு மார்பன்' என்றும், 'திருமால்' என்றும், 'திருவுறை மார்பன்' என்றும் புகழ்வதால் அறியலாம். திருமால் என்று சுட்டியதோடு அமையாது இராமனையே பரம்பொருள் என்று பல இடங்களில் கூறுகிறார். "மும்மையால் உலகங்காக்கும் முதல்வன்" என்றே பாடுகிறார். இராமனது தெய்வத் தன்மையிலே மூழ்கி விடுகிறார் கம்பர். மானி

டத்தின் வெற்றியைப் பாடினும் தெய்வத்தின் சீர்மையினையும் பாடியே செல்கிறார்.

இலக்குவன் : பொன்னொளிர் மேனியானும் அன்பெனும் அணி பூண்டவனும் தாளில் தாக்கணங்கு உறைபவனும் தன்னைத் தானே ஒப்பவனும் ஆகிய இவ்விளைய கோவைப் பற்றி முந்திய காண்டங்களில் கூறியிருப்பினும் இவனது சிறப்பான குணவியல்புகள் இரண்டு இக்காண்டத்தில்தான் மிக இனிதாக விளக்கம் பெறுகின்றன எனலாம். இராமன்பால் இவன் கொண்ட அன்பும் இவனது சீற்றமும் இக்காண்டத்துள் கிட்கிந்தைப் படலத்தில் நன்கு காட்டப் பெறுகின்றன. இராமன் வெகுண்டு சுக்கிரீவன்பால் இலக்குவனை ஏவ, அவன் மரனும் மலையும் நெறிநீங்கிட, மேருமண்ணுட்புக்கு அழுந்த, மராமரத்து ஊடுசென்ற அம்புபோல் சென்றனன். அவனது வெகுளி கண்டு கிட்கிந்தை நகரமே நடுங்கியது. அவனது சினத் தீயினின்றும் தம்மைப் பாதுகாத்துக்கொள்ள அரிகள் அரிதின் முயன்றமைத்த காவற் சுவர் இலக்குவனது தாளால் நூக்கி எறியப்பட்டது. இவ்வாறாக இலக்குவன் சீற்றம் இனிது எடுத்துரைக்கப்படுகிறது. சீற்றம் தணிவிக்கப்பட்ட இலக்குவன், அன்பின் உருவாக, அருட்கடலாகக் காட்சியளிக்கிறான். அவனைச் சுக்கிரீவன் அரிதுன்னுபொற்பீடத்து அமரும்படி வேண்ட, அவன்,

“கல்லணை மனத்தினை யுடைக்கை கேசியால்
எல்லணை மணிமுடி துறந்த எம்பிரான்
புல்லணை வைக, யான் பொன்செய் பூத்தொடர்
மெல்லணை வைகவும் வேண்டுமோ.........”

என்று பகர்கிறான். மஞ்சனமாடி இன்னமுதருந்த அழைத்தபோது,

“பச்சிலை, கிழங்கு, காய், பரமன் நுங்கிய
மிச்சிலே நுகர்வது; வேறுதான் ஒன்று
நச்சிலேன் ; நச்சினேன் ஆயின், நாய் உண்ட
எச்சிலே அது; இதற்கு ஐயம் இல்லையால்”

என்று கூறி மறுக்கிறான். இலக்குவனது அன்புள்ளம் இருந்தவாறென்னே! தாரையோடு கூடிய பெண்களின் குழாங்கண்டபோது “மாமியர் குழுவின் வந்தான் ஆம் என”த் தலைகுனிந்து நின்றான். தாரையை நோக்கியபோது அவள் கோலத்தில் தன் தாயரைக் கண்டான். சுக்கிரீவன் தவறிழைத்த காரணம் அறிந்தபோது வெகுளி மாறிக் கனிந்த உள்ளத்துடன் நின்றான். இவையெல்லாம் இலக்குவன் மானிடப்பண்பும் தூய்மையும் நிரம்பியவன் என்பதை நிலைநிறுத்துகின்றன. இளவல் என்றால் தன்னைப்போல் தமைய

னிடம் அன்பு கொண்டவனாக இருக்கவேண்டும் என்பது இலக்குவன் எண்ணம். எனவேதான் தன் தமையனைக் கொல்லுவதற்கு இராமன் துணையை வேண்டி நிற்கும் சுக்கிரீவனை நம்பக்கூடாது என்கிறான் இலக்குவன். இக்காண்டம் முழுமையும் இலக்குவன் இராமனின் நிழல்போல் நிற்கிறான். இராமனுக்கு அடித்தொண்டு செய்வதோடு அமையாது, அவன் இடருற்று நைந்தபோது ஆறுதல் கூறித் தேற்றவும் செய்கிறான். இராமனுக்குப் பாதசேவை செய்யும் தொண்டனாகவும், பரிந்தூட்டும் தாயாகவும், இடர்நீக்கும் இனிய நண்பனாகவும், தன்னேரில்லாத் தம்பியாகவும் இலங்குகிறான் இலக்குவன்.

அனுமன் : இராமாயணம் என்னும் தேருக்கு அச்சாணி போல்பவன் அனுமன். இந்த அனுமன் அறிமுகமாகும் காண்டம் இதுவே சுந்தரகாண்டம் முழுமையும் தனக்கே உரியதாகக்கொண்டு, யுத்த காண்டத்துள் இராம இலக்குவர்க்கு அடுத்த பதவியைப் பெற இருக்கும் அனுமனைக் கம்பர் இனிய முறையில் நாடகத்தலைவன் வாயிலாக அறிமுகப்படுத்துகிறார். அனுமனது பரிபூரண நிலையை இராமன் எடுத்த எடுப்பில் அறிந்து கூறுவதோடு "பின்னர்க் காணுதி மெய்ம்மை" என்றும் கூறுதலால், இவன் இராமாயணத்தில் பெரும்பங்கு வகிக்கப்போகிறான் என்பது அங்கை நெல்லிக்கனி யெனச் சங்கையின்றிப் புலனாகின்றது. அனுமனைச் 'சொல்லின் செல்வன்' என்று இராமன் பாராட்டியது முற்றிலும் பொருந்தும் என்பதை இக்காண்டத்துள் பலவிடங்களிற் காண்கிறோம். சான்றாக இராம இலக்குவர் யார் என்பதை அறிந்துகொள்ள, "யார் என விளம்புகேன் நான் எங்குலத்தலைவற்கும்மை வீர நீர் பணித்திர்" என்று வினவுமிடத்தும், பின்னர்க் கிட்கிந்தைப் படலத்துள் இலக்குவன் சினத்தைச் சிறிது மாற்றிய பின்னர் அவனிடம்

"ஈண்டு, இனி, நிற்றல் என்பது இனியதோர் இயல்பிற்றன்றால்
வேண்டலர், அறிவரேனும், கேண்மைதீர் வினையிற்று ஆமால்
ஆண்தகை, ஆளி மொய்ம்பின்ஐய! நீர் அளித்தசெல்வம்
காண்டியால், உன்முன் வந்த கவிக்குலக்கோனொடு......"

என்று மொழியுமிடத்தும் அவனது சொல்லின் வன்மையை உணரலாம். இயம்பவல்லான் அனுமன் என்பதை அனைவரும் ஏற்பர். அனுமனது பரிபூரண நிலையை இராமன் திருவாய்ச் சொற்களாக அமைத்து, கதையின் போக்கில் பற்பல இடங்களில் தோற்றி மறைத்துக் காண்ட இறுதியில் "பொன்னெடுந் தூணின் பாதச்சிலை எனப் பொலிந்து" நிற்கச் செய்கிறார் கம்பர். இக்காண்டத்தில் இவன் காட்டிய செயல்கள் பின்னர் இவன் நிகழ்த்தவிருக்கும் மிக மிக அரிய சாதனைகளின் முன்னுரையாக அமைந்துள்ளன.

"தருமத்தின் தனிமை தீர்ப்பான்" என்று கம்பர் பாடுவது முற்றவும் சாலும்.

சுக்கிரீவன் : சூரியன் மகன் சுக்கிரீவன்; இந்திரன் மகற்கு இளையோன்; அஞ்சனை வயிற்றில் வந்த அனுமனை அமைச்சனாகப் பெற்றவன். இக்காண்டத்தில் அறிமுகமாகும் நாடக மாந்தருள் சிறப்பிடம் பெறுபவன். கள்ளிலும் காமத்திலும் தன் கடமையை மறப்பவன். இராமனிடமே ஐயங்கொண்டவன். இவனது குற்றங் களுள் தலையாயவை இவ்விரண்டுமேயாகும். இதனை, வாலி வதைப் படலத்துள், வாலி சுக்கிரீவனை இராமபிரானிடம் அடைக்கலமாகக் கொடுத்துச் சுக்கிரீவனுக்கு அறிவுரை கூறுமிடத்து,

"அரசியல் பாரம் பூரித்து அயர்ந்தனை இகழாது, ஐயன்
மரைமலர்ப் பாதம் நீங்கா வாழுதி"

என்றும்,

"மறைகளும் முனிவர் யாரும் மலர்மிசை அயனும், மற்றைத்
துறைகளின் முடிவும், சொல்லும் துணிபொருள் தனிவில் தாங்கி
அறைகழல் இராமன் ஆகி, அறநெறி நிறுத்த வந்தது;
இறை ஒரு சங்கை இன்றி எண்ணுதி"

என்றும் கூறலால் உணரலாம். சுக்கிரீவன், வாலி பிலத்துட் சென்று ஈரேழிருதுகள் சென்ற பின்னும் வாராமையால் பிலத்தை அடைத்து முடிசூட்டிக் கொண்டான் என்று வான்மீகம் கூறும். இராமனால் நண்பனாக ஏற்றுக்கொள்ளப்பட்டவன் சுக்கிரீவன். எனவே அவனது குற்றங்களை மெலிவுபடுத்திக் காட்டுதலே தகுதி என்று எண்ணிய கம்பர், அனுமன் வாயிலாகச் சுக்கிரீவன் குற்றமற்றவன் என்பதை எடுத்துக் காட்டுகிறார். பிலத்துட் சென்ற தமையன் வாராதொழியவே தானே பிலத்துட்புக்குத் தன் தமையனைக் கொன்றவனைக் கொல்வேன், கொல்லா தொழியின் இன்னுயிர் மாய்ப்பேன் என்று கூறலும், அமைச்சர்கள் இவனை அங்ஙனம் செய்ய விடாது அரசை ஏற்று ஆளுமாறு இறைஞ்ச, இவன் ஒருவாறு உடன் பட்டான் என்று அனுமன் இராமனிடம் கூறுகிறான். குற்றமே செய்யாதாரில்லை. குணமும் குற்றமும் நாடிக் குணம் மிக்கவழி அவரை நண்பராகக் கொள்ளுதலிற் கேடில்லை என்ற கொள்கையை இராமன் இலக்குவனிடம் கூறலால், சுக்கிரீவன் குணங்கள் பல நிறைந்தவன் என்பதும் பெறப்படுகின்றது. இராமன்பால் பக்தியும், நன்றியறிவுக் குணமும் வீரமும் இவனது சிறப்பியல்புகளாம். கார்காலம் முடிந்தவுடன் இராமனுக்கு உதவ வேண்டுமென்பதை மறந்து களிமயக்கில் இவன் கிடப்பதைக்கண்டு வெகுள்கிறோம். ஆனால் பிழையுணர்ந்து தன் செயலுக்கு வருந்தும்போது அவனது

பிழையை நாமும் மறந்துவிடுகிறோம். எனவே சுக்கிரீவனைக் கம்பர் குற்றமற்றவனாகக் காட்டுவதில் வெற்றியடைந்துள்ளார் எனலாம்.

தாரை : கம்பரது பாத்திரப் படைப்புக்களுள் தலை சிறந்தது என்று கருதப்படுவது தாரை என்னும் பாத்திரமாகும். வான்மீகத்தினின்றும் முற்றிலும் வேறுபட்டுத் தமிழர் நாகரிகத்திற்கேற்பத் தாரையைக் கம்பர் படைத்துள்ள திறம் வியக்கத்தக்கது. வாலி இறந்தபின் தாரையைச் சுக்கிரீவன் வைத்துக் கொள்வதாகவும், சுக்கிரீவன் சீதாபிராட்டியைத் தேட உரிய நாளில் படையோடு வாராமைபற்றி இலக்குவன் வெகுண்டு வந்தபோது, தாரையோடு கூடி இன்பம் அனுபவித்துக் கொண்டிருந்த சுக்கிரீவன், தாரையை இலக்குவன்பால் சமாதானம் செய்ய அனுப்பியதாயும், அவள் கலைந்த ஆடைகளுடனும் சிதைந்த அணிகளுடனும் இலக்குவன் முன் சென்று "உங்களைப்போல் ஆசையை அடக்கி வாழ்தல் வானரச் சாதியாகிய எங்களுக்கு ஆகுமோ? உயர்ந்தோர்களாகிய நீங்கள் சிறியவர்களாகிய எங்கள் பிழையைப் பொறுக்காவிட்டால் யார் பொறுப்பது" என்று வாதிட்டதாகவும் வான்மீகம் கூறும். ஆனால் கம்பர், தாரையைக் கற்பரசிகளில் தலைசிறந்தவளாக, அரசியலறிவும் சொல்வன்மையும் வாய்க்கப் பெற்றவளாக, கிட்கிந்தைக்குத் தாய் போன்றவளாக, சுக்கிரீவனைக் காத்துவரும் தெய்வமாக அமைத்துக் காட்டுகிறார்.

வாலி: கிட்கிந்தாகாண்டம் என்றவுடன் நினைவிற்கு வருவது வாலி என்னும் பெயரே. இவனே இக்காண்டத்தில் மிக மேலாகத் தோற்றமளிப்பவன். கதையின் தொடர்பிற்கு வேண்டாத பாத்திரமெனினும், கற்போர் மனத்தில் நிலையான இடத்தைப் பிடித்துவிடும் பாத்திரம் வாலியே. இவன் இந்திரகுமரன்; சிறந்த சிவபக்தன்; இராமனுக்கு இடையூறு செய்யாதவன். நீலமாமணி நிறத்தரக்கனை இருபது கரத்தொ டொல்க வாலினாற் கட்டியவன் இவ்வாலி. இவனை வாலியார் என்று திருநாவுக்கரசரும் திருஞான சம்பந்தரும் தேவாரத்தில் போற்றுகின்றனர். வாலியின் தோழன் இராவணன். அதுபற்றியன்றே இராவணன் படைவீரர்களாகிய கரதூஷணர்கள் தங்கத் தன் நாட்டிற்கருகில் இடம் கொடுத்தான்? தயரதன், இராமன், சீதை முதலியோர் இயல்புகளை உள்ளவாறு அறிந்து போற்றிய வாலி, தவறிழைத்த இராவணனைக் கண்டியாது விட்டதும், இவன் நல்லோர் தோழன் அல்லன் என்பதை உணர்த்தா நிற்கும். இவன் வலி மிக்கவன். இவனது வலிமையை அனுமன், சுக்கிரீவன் முதலியோர் கூற்றுக்களாலும், இராமனே வாலி வடிவு கண்டு வியத்தலானும், மார்பில் தைத்த இராமபாணத்தைப் புறம் போகாது தடுத்து நிறுத்தியமையானும், அப் பாணத்தை மார்பி

னின்றும் பறித்து எடுத்தமையானும் அறிகிறோம். "வீரரை யார் வியவாதார்?" என்று கூறி, யாவரும் அவனது வீரத்தைப் பாராட்டுவதாகக் கம்பர் அமைத்துள்ளார். கதைப் போக்கோடு ஒட்டிய பாத்திரமாகாது போயினும் கற்பவர் மனத்தில் என்றும் நின்று நிலவும் பாத்திரமாக வாலி உதவுகின்றான் என்றால் அதற்குக் காரணம் கம்பர் அவனைப் படைத்து அளித்துள்ள முறையேயாம். ஒவ்வொருவரின் இயல்பையும் உள்ளவாறு அறிந்து வைத்திருக்கிறான் வாலி. இவ்வியல்பை நம்மால் பாராட்டாதிருக்க முடியவில்லை. கேள்விச் செல்வன், சிறியன சிந்தியாதான், பொய்யுரையாத புண்ணியன் என்று கம்பர் அவனுக்குக் கொடுத்துள்ள சிறப்புப் பெயர்கள் அவன் குண நலன்களை இனிது புலப்படுத்தா நிற்கும்.

அங்கதன்: இவன் வாலி காதலன்; தாரை தன் சேய். சுக்கிரீவன் மீது பொருமையும் ஐயமும் கொண்டவனாக இவனைப் படைத்துள்ளது முதனூல். ஆனால் கம்பர் அங்கதனைச் சுக்கிரீவனுக்குத் தூய உதவியாளனாகவும் உண்மையுள்ள ஊழியனாகவும் காட்டுகிறார். அறத்தை நிலைநாட்டும் இராமன் வாலிக்குரிய அரசை அவன் மகன் அங்கதனுக்கன்றோ அளிக்கவேண்டும்? சுக்கிரீவன் மனைவியை வாலி கொண்டமையால் வாலியைக் கொன்று சுக்கிரீவன் மனைவியை மீட்டுக் கொடுப்பதுதான் அறமாகுமேயொழிய, அரசையும் அவனுக்குப் பெற்றுக் கொடுப்பேன் என்று சூளுரைத்தது பொருந்தாததாகத் தோன்றுகிறது. அங்கதனை இளையகோ வாக்கியதைவிட அவனை அரசனாக்கிச் சுக்கிரீவனை அரசுப் பாதுகாவலனாக அமைத்திருக்கலாம். இராமனுக்குச் சுக்கிரீவன் உதவி தேவைப்பட்டதால் பயன் கருதி அவ்வாறு செய்தான் என்று கோடல் கூடுமேயொழிய வேறுவகையால் அமைதி கொள்ளல் கூடாதாகின்றது. இராமனும் சுக்கிரீவனும் பயன் கருதியே நட்புக் கொள்கின்றனர். கதைப் போக்கிற்காக அங்கதன் பாத்திர நிலை தாழ்கிறது.

கிளைக் கதைகள்: கதைப் போக்கிற்கு இன்றியமையாதன, கதைப் போக்கோடு மெலிவான தொடர்புடையன எனக் கிளைக் கதைகளை இருகூறுகளாகப் பகுக்கலாம். இக்காண்டத்துள் வரும் வாலி வதை, சுயம்பிரபை வரலாறு, சம்பாதி வரலாறு முதலியன இரண்டாவது பிரிவின்பாற்படும். இவ்வரலாறுகளை நீக்கிவிடினும் கதையின் கட்டுக் கோப்புக் குறையாது. வாலி வதைப்படலம் கிளைக் கதையின் இரண்டாவது வகையைச் சார்ந்ததாக அமையினும் அதுவே இக்காண்டத்துள் தலைசிறந்த படலமாக அமைந்துள்ளது. கம்பரின் நாடகப் புலமையும் கவியாற்றலும் இங்கே ஒளிரக் காண்கிறோம்.

இயற்கை வருணனை : இக் காண்டத்துள் கதைப் பகுதி மிகக் குறைவு. இயற்கை வருணனையே மலிந்து காணப்படும். பம்பைப் படலத்துள் பொய்கை வருணனையும், மராமரப் படலத்துள் மராமரங் களின் வருணனையும், வாலி வதைப் படலத்துள் மலைவருணனையும், கார்காலப் படலத்துள் இயற்கைக் காட்சிகள் பலவும், ஆறு செல் படலத்துள் பல்வேறு நாட்டு இயற்கைக் காட்சிகளும் கற்போர் மனத்தைக் களிப்பூட்டுகின்றன. குறிஞ்சியின் தண்மையும் பாலை யின் வெம்மையும் பாடப் பெற்றுள்ளன. நெய்தலுக்குரிய இரங்கல் குறிஞ்சிக்கு அமைவது ஓர் அரிய சேர்க்கையாகும்.

நெஞ்சை ஈர்க்கும் சொற்றொடர்கள் : கம்பர் கவிதையில் கவிதைச் சுவையோடு சிறந்த சொல்லாட்சிகளையும் கண்டு இன்புறலாம். அசகாய சூரன் என்ற வடமொழித் தொடரைக் "கூட்டொரு வரையும் வேண்டாக் கொற்றவன்" என மொழி பெயர்த்துள்ளார். ருசியமூக பர்வதம் என்பதை இரலைக்குன்றம் எனப் பாடியுள்ளார். 'கரும்பு அழிசொல்லி' 'ஈன்றவள் மாற்றவள்' 'எண்ணுற்றாய் என் செய்தாய்' 'வெற்றரசு எய்தி எம்பி வீட்டரசு எனக்கு விட்டான்' 'உயர்கரம் உச்சி வைத்தான்' 'வால் செலாத வாய் அலது இராவணன் கோல் செலாது', "கதலியின் கனியினைச் சேரும் ஊசி" போன்ற இனிய சொற்றொடர்கள் இக்காண்டத்துட் பொலிந்து தோன்றுகின்றன.

நெஞ்சைக் கவரும் பாடல்கள் : நட்புக்கோட் படலத்துள் வரும்

"சூழிமால் யானையார் தொழுகழல் தயரதன்
பாழியால் உலகுளலாம் ஒருவழிப் படர வாழ்
ஆழியான் மைந்தர், பேர் அறிவினர், அழகினர்
ஊழியார், எளிதுனக்கு அரசுதந்து உதவுவார்"

என்னும் பாடலில் இராம இலக்குவரது குலச் சிறப்பும், அவர்தம் உள்ளழகு புறவழகுகளும், அவர்கள்பால் சுக்கிரீவன் அடையக் கூடிய பயனும் இனிது விளக்கப்படுகின்றன. கம்பரது சொற்செட் டிற்குச் சான்றாய் அமைந்துள்ளது இப்பாடல். (வாலியின் அரசைச் சுக்கிரீவன் இராமனைக் காணுமுன்னரே அடைய விரும்பினான் என்பது அனுமன் கூற்றால் நன்கு புலனாகிறது) கலன்காண் படலத் துள் வரும்

"அறங்கள் நாறும் மேனியார் : அரிக்கணங்களோடும், அங்கு
இறங்குபோதும், ஏறுபோதும், ஈறுஇலாத ஓதையால்
கறங்குவார் கழற்கலன் கலிப்ப, முந்துகண் முகிழ்த்து
உறங்குமேகம் நன்குணர்ந்து, மாகமீது உலாவுமே"

என்ற பாடல் சிறந்த தற்குறிப்பேற்றமாய் அமைந்து, உள்ளத்தைக் கவர்கின்றது. இப் பாடலை அடுத்து அமைந்துள்ள

“ நீடு நாகமூடு மேகம் ஓட, நீரும் ஓட நேர்
ஆடு நாகம் ஓட, மானயானை ஓட' ஆளிபோம்—
மாடு நாகம் நீடு சாரல், வாளை ஓடும் வாவியூடு
ஓடு நாகம் ஓட வேங்கை ஓடும், யூகம் ஓடுமே ”

என்ற பாடல் சந்தத்தாலும் நாகம் என்ற சொல்லை வான், பாம்பு, சுரபுன்னை, யானை என்ற பொருள்கள்பட அமைத்துள்ள திறத்தாலும் நம் நெஞ்சைக் கவர்கின்றது. தாரை புலம்புறு நிலையில்

“ செரு ஆர்தோள ! நின் சிந்தையேன் எனின்
மருவார் வெஞ்சரம் எனையும் வவ்வுமால்
ஒருவேனுள் உளை ஆகில் உய்தியால்
இருவேமுள் இருவேம் இருந்திலேம் ”

என்ற பாடல் தாரை, வாலி என்னும் இருவரின் அன்பின் மாட்சியையும் சிறந்த கருத்தையும் உள்ளடக்கிய பாடலாக ஒளிர்ந்து நம் உள்ளத்தை உருக்குகின்றது. கார்காலப் படலத்துள் மேகத்தின் கருமையைப் பாட வந்த கம்பர்,

“ நஞ்சினின் நளிர்நெடுங் கடலின் நங்கையர்
அஞ்சன நயனத்தின் அவிழ்ந்த கூந்தலின்
வஞ்சனை அரக்கர்தம் வடிவின், செய்கையின்
நெஞ்சினின் இருண்டது—நீல வானமே ”

என்று குறிப்பிடுகிறார். பெண்களின் விழியைப் போன்று கரியது என்றோ கூந்தலைப் போன்று கரியதென்றோ கூறாது “ நங்கையர் அஞ்சன நயனத்தின் அவிழ்ந்த கூந்தலின் ” கரியது என்றலால், கருமை மிகுதியினையும் அது பரந்துள்ள தன்மையினையும் இனிது பெற வைக்கிறார் கம்பர். இக் கவிதை சிறந்த சொல்லோவியமாக அமைந்துள்ளது.

படலச் சிறப்பு: இக் காண்டத்துள் வாலி வதைப் படலமும் கிட்கிந்தைப் படலமும் நாடகக் காட்சிபோல் அமைந்து இறும்பூது விளைக்கின்றன. பம்பைப் படலமும் கார்காலப் படலமும் இயற்கை வருணனைகளில் இணையற்று நிற்கின்றன. நாடவிட்ட படலம் சீதையின் சீர்மையைத் தெரிப்பதால் கற்போர் உள்ளத்தைக் கொள்ளை கொள்கின்றது. இக் காண்டத்துள் சுவைமிகக் குன்றியதாக அமைந்துள்ள படலம் தானைகாண் படலமே யாகும். இப் படலத்துள் இரண்டு மூன்று பாடல்களை இசைத்தவுடனேயே இவ்வாறுதான் செல்லும் என்ற எண்ணம் ஏற்பட்டு விடுகிறது.

படையின் பெருக்கத்தைக் காட்ட எழுதிய இப்படலம் நம் உள்ளத்தில் உவகைப் பெருக்கை ஏற்படுத்தவில்லை.

காண்டச் சிறப்பு: இராமாயணத்துள் இராமனை நேரில் காண இயலாத காண்டமொன்றும், சீதையை நேரில் காண இயலாத காண்டமொன்றும் உண்டு. சீதையை இக் காண்டத்துள் நாம் நேரில் காண முடியவில்லை. ஆயினும் இங்கு நாம் அவள் அணி கலன்களைக் காண்கிறோம். அவள் குண நலன்களை இராமன் காண்டம் முழுதிலும் பேசிப் புலம்பக் காண்கிறோம். நம் நினைவில் நீங்காது நிலவிக்கொண்டே யிருக்கிறாள். இராமகாதை ஓட்டத்திற்கு இன்றியமையாதவர்களான அனுமன் முதலிய வானரர்கள் தோன்று வதும் ஏனைய காண்டங்களிலும் இயற்கை நலம் பொலிந்து திகழ் வதும், இராமனது மானிட இயல்புகள் வெளிக்குப் புலனாவதும், இக் காண்டத்திலேயாகும். கதைச் சிறப்புக் குறைவாக இருப்பினும் கம்பர் தமது கவிதைத் திறமையால் இக் காண்டத்தையும் சிறந்த காண்டமாக மாற்றியுள்ளார்.

இக் காண்டம் நமக்கு அறிவுறுத்துவன பலவாகும். அவற்றுள் அரசர்கள் நடந்துகொள்ள வேண்டிய முறை, அடைக்கலம் புகுந் தோரைக் காக்கும் திறன், சரணமாக அடைந்தவனைக் காப்பாற்றா விடின் வருங்கேடு, கள்ளுண்ணாமை, செய்ந்நன்றியறிதல், தூதரின் இலக்கணம், சீதையின் அடிமுதல் முடிவரை வருணனை, கார்கால கூதிர்கால வருணனைகள், சீல நெறி யொழுகுவோர்க்கு விலங்கு களும் துணை புரியும் சிறப்பு, தீநெறியினனைத் துணைவனும் கைவிடும் நிலை, தமிழின் சிறப்பு, இராமாவதாரத் தத்துவம் என்பன சிலவாகும். இக் காண்டத்தின் தொடக்கத்திலும் இறுதியிலும் அனுமன் பேருருவம் எடுத்து நமக்குக் காட்சியளிக்கிறான். முத்தமிழ்த் துறையின் முறைபோகிய உத்தமக் கவியாகிய கம்பர், பம்பைப் படலத்தில், "குழல்வண்டு தமிழ்ப் பாட்டிசைக்கும் தாமரையே" என்று தமிழ்ப் பாடலுக்கு ஒரு பெருமை யளித்துப் பாடுகிறார்.

"அத்தி ருத்தகு நாட்டினை யண்டர்நாடு
ஒத்தி ருக்குமென் றாலுரை யொக்குமோ
எத்தி றத்தினு மேழுல கும்புகழ்
முத்து முத்தமி ழுந்தந்து முற்றுமோ"

என்று பாண்டி நாட்டைச் சிறப்பிக்கிறார். தமிழ் முனிவன் தமிழ்ச் சங்கத்தையும் பாராட்டுகின்றார்.

எல்லாச் சமயங்களுக்கும் பொதுவான பெருங் கடவுளின் அவதாரமே இராமன் என்பதை இக் காண்டத்தில் கம்பர் நன்கு நிலை நாட்டியுள்ளார் என்னலாம்.

பரசுராமன் திருமாலின் ஆறுவது திருவவதாரம்; அவன் ஆவேசாவதாரம். அவனிடத்து ஆவேசித்திருந்த சக்தி அமிசாவதாரமான தசரதராமனுற் கவர்ந்து கொள்ளப்பட்டது. இவ்வாறு இராமன், பால காண்டத்தில் பரசுராமனின் தவம் முழுதையும் அம்பால் தழுவி வாங்கிய முறையால், தேவர்களோடு தான் ஒன்ருயிருத்தலே விளக்கினுன். அயோத்தியா காண்டத்தில் இராமனுக்கு முடிசூட்டு விழா என்றவுடன் மன்னரும் மக்களும் மகிழ்கின்றனர். இராமன் காடு செல்கையில் எல்லாரும் கவன்று பின் சென்றனர். இராமன், தம்பியரோடும் வேட்டுவன் குகனேடும் அன்புடன் கலந்து ஒன்ருயினுன். இந்நிலேயில் இராமன் மனித இனத்தோடு தான் ஒன்ருதலேக் காட்டினுன். ஆரணிய காண்டத்தில் இராமன் சடாயுவின் அன்பைப் பெற்றுத் தந்தையாக் கொண்டு ஈமக் கடன்களேயும் செலுத்தித் தான் பறவைகளோடும் ஒன்ருவதைக் காட்டினுன். கிட்கிந்தா காண்டத்தில் பொய்கையையும் பூவையும் பொழிலேயும் மேகத்தையும் கல்லேயும் நோக்கி, சீதா சீதா என்று கதறி உரையாடிக் கலந்து உயிரில் பொருள்களிடத்தும் ஒன்ருகின்ருன். கல்லும் கரைகிறது. பேயும் பேழ்கணிக்கின்றது. இக் காண்டத்தில் குரங்குகளோடும் கரடியான சர்ம்பவான் போன்ற மற்ற விலங்குகளோடும் கலந்து இராமன் தான் விலங்குகளோடு ஒன்ருவதைக் காட்டினுன். சுந்தர காண்டத்தில் நேர்முகத் தோற்றம் இராமனுக்கு இல்லே. யுத்த காண்டத்தில் வீடணனேடு நட்புக் கொண்டு அரக்கரோடும் தான் ஒன்ருயதைக் காட்டினுன். இவ்வாறு தேவர்களோடும் மனிதர்களோடும் பறவை விலங்குகளோடும் அரக்கர்களோடும் ஒன்ருய்க் கலந்து எப்பொருளுந்தானுய் எல்லா மதங்களுக்கும் பொதுவான கடவுளாக இராமன் இலங்குகிருன் என்பதைக் கம்பர் கிட்கிந்தா காண்டத்தில் நன்கு காண்கிருர். இந்த உண்மையைக் கடவுள் வாழ்த்திலேயே நன்கு பதியவைத்துப் பாடுகிருர் :

“ மூன்றுரு வெனக்குண மும்மை யாமுதல்
தோன்றுரு வெவையுமம் முதல சொல்லுதற்கு
ஏன்றுரு வமைந்தவும் இடையி னின்றவு
மூன்றுரு வுணர்வினுக் குணர்வு மாயினுன் ”

அம்பால் அடிபட்டு விழுந்த வாலி இராமனேத் துதிக்கும் பொழுது அவன் பொதுவாய் நிற்கும் நிலேயை அழகாகக் குறிப்பிடுகின்ருன் :

“ யாவரும் மெவையுமா யிருதுவும் பயனுமாய்ப்
பூவுநல் வெறியுமொத் தொருவரும் பொதுமையாய்
யாவனீ யாவதென் றறிவிஞ ரருளினுர்
தாவரும் பதமெனக் கருமையோ தனிமையோய் ”

தன் தம்பியாகிய சுக்கிரீவனுக்கு வாலி உறுதி கூறும்பொழுது,

" நிற்கின்ற செல்வம் வேண்டி நெறிநின்ற பொருள்களெல்லாம்
கற்கின்ற திவன்ற ளுமங் கருதுவ திவனைக் கண்டாய்
பொற்குன்ற மனைய தோளாய் பொதுநின்ற தலைமை நோக்கின்
எற்கொன்ற வலியே சாலும் இதற்கொன்றும் ஏதுவேண்டா "

என்று கூறி, இராமன் எல்லா உயிர்களுக்கும் எல்லாப் பொருள் களுக்கும் எல்லா நெறிகளுக்கும் பொதுவாய் நிற்கிற தலைமைத் தன்மையை நன்கு எடுத்து விளக்குகின்றான். இந்தக் காண்டத்தில் இராமனுடைய பொதுநிலையே கம்பர் கருத்தைக் கவர்வதாய் இருக் கிறது. அதனாலேயே நாடவிட்ட படலத்தில்

" அரனதிகன் உலகளந்த அரியதிகன் என்றுரைக்கும்
[அறிவிலோர்க்குப்
பரகதி சென் றடைவரிய பரிசேபோல் "

என்று பாடி அரியும் சிவனும் ஒன்று என்பதை ஆணித்தரமாய்ப் பாடியுள்ளார் என்பதும் ஈண்டு நோக்கற்பாலது,

இக் காண்டத்தில் இராமநாமத்தின் பெருமை சிறப்பாக வெளி யாகின்றது. வாலி தன் மார்பில் தைத்த அம்பை வாங்கி யெடுத்துப் பார்த்தபொழுது, அதில் இராமநாமம் தீட்டப்பட்டிருந்தது என்ப பதைக் கம்பர் அருமையாகப் பாடியுள்ளார் :

" மும்மைசா லுலகுக் கெல்லா மூலமந் திரத்தை முற்றும்
தம்மையே தமர்க்கு நல்குந் தனிப்பெரும் பதத்தைத்தானே
இம்மையே யெழுமை நோய்க்கு மருந்தினை யிராமனென்னும்
செம்மைசேர் நாமந்தன்னைக் கண்களிற் றெரியக்கண்டான் "

மற்றும் மேலே குறித்ததுபோல் வாலி சுக்கிரீவனிடம்

" நிற்கின்ற செல்வம் வேண்டி நெறிநின்ற பொருள்களெல்லாம்
கற்கின்ற திவன்ற ளுமம் "

என்று குறிப்பிடுகின்றான். மேலும் சம்பாதிப் படலத்தில் வானர வீரர்கள் இராமநாமத்தை இடைவிடாது ஓதியவுடன் சம்பாதிக்கு வெந்து தீய்ந்த சிறகு முளைத்திட்டது என்ற வரலாற்றால் இராம நாமத்தின் பெருமை நன்கு வெளியாகிறது. இந்த நிகழ்ச்சியால் அனுமன் இராமநாமத்தின் தத்துவத்தை நன்கு உணர்ந்து அதனையே தனது மந்திரமாகக் கொண்டு பின்னர்ப் பெரும்பயன் கொண்டான் என்பதும் ஈண்டு நோக்கத்தகும்.

# பதிப்புரை

இதன்கண் பம்பைப் படலம், கலன்காண் படலம் ஆகிய இரண்டுக்கும் திரு. தி. கி. இராமநுஜ ஐயங்கார் அவர்களும், மராமரப் படலம், துந்துபிப் படலம், அரசியற் படலம் ஆகிய மூன்றுக்கும் பேராசிரியர், வித்துவான், திரு. கோ. சுப்பிரமணிய பிள்ளை M. A., B. L. அவர்களும், வாலி வதைப் படலத்திற்கு வித்துவான் திரு. க. வெள்ளைவாரணன் அவர்களும், அனுமப் படலம், நட்புக்கோட் படலம், கார்காலப் படலம் ஆகிய மூன்றுக்கும் வித்துவான் திரு. செ. வேங்கடராமச் செட்டியார் அவர்களும் உரை வரைந்துள்ளார்கள்.

பதிப்பாசிரியர்.






# நான்காவது
# கிட்கிந்தா காண்டம்

## கடவுள் வாழ்த்து

**3810.** மூன்றுரு வெனக்குண மும்மை யாமுதற்
றேன்றுரு வெவையுமம் முதல சொல்லுதற்
கேன்றுரு வமைந்தவு மிடையி னின்றவு
மூன்றுரு வுணர்வினுக் குணர்வு மாயினன்.

மூன்று உரு எனக் குணம் மும்மை ஆம் முதல்,
தோன்று உரு எவையும் அம்முதல; சொல்லுதற்கு
ஏன்ற உரு அமைந்தவும் இடையில் நின்றவும்
ஊன்று உரு உணர்வினுக்கு உணர்வும் ஆயினன்.

பொழிப்பு :—முதற்கடவுள், மூன்றுருவுடைமைபோல, மூன்று குணங்களையும் உடையனுவன்; காணப்படும் உருவமெல்லாம் அம் முதலையே முதலாக உடையன; வழங்குதற்கேற்றனவான உருவுடையனவும், (அம்முதலின்கண்) தங்கினவையும், அம்முதலின் நிலைத்த உருவமாம்; (அம்முதல்வன்) உணர்வினுக்கு உணர்வுமாயினன்.

குறிப்பு :—முதல், மூன்று உரு என மும்மைக் குணம் ஆம்; தோன்று உரு எவையும் அம் முதல; சொல்லுதற்கு ஏன்ற உரு அமைந்தவும், (அம்முதலின்) இடையில் நின்றவும் (அம்முதலின்) ஊன்று உரு; (அம்முதல்) உணர்வினுக்கு உணர்வும் ஆயினன் என்க. மூன்று உரு என்றது அரி அயன் அரன் என்னும் தேவர் மூவர் உருவங்களை. மும்மைக் குணம் எனமாறுக. மும்மை - மூன்று. மூன்று குணமாவன: சாத்துவிகம் இராசதம் தாமதம் என்பவை. மூன்றுருவெனக் குணம் மும்மையாம் முதல் என்பதனேடு, 'மூன்றவன் குணங்கள் செய்கை மூன்றவ னுருவ மூன்று' (யுத்த. இரணியன், 122) என ஆசிரியர் பின்னே கூறுதலும் நோக்கத்தகும். தோன்று உரு எவையும் அம்முதல என்றது (இயங்குதிணையும் நிலைத்திணையுமாகக்) காணப்படும் உருவம் (உலகம்) எல்லாம் அம் முதலையுடையன என்றவாறு. முதல் என்பது, காரணம் தலைமை என்னும் இருபொருளும் தந்தது. எனவே உலகத் தோற்றத்துக்குக் காரணமானவனும் உலகுக்குத் தலைவனும் அம்முதல்வன் என்ற

வாறு. இது 'அகர முதல' என்று தொடங்கும் முதற்குறளைத் தழுவியமைந்தது. சொல்லுதற்கு ஏன்ற உருவமைந்தவும் என்றது, வழங்குதற்கு ஏற்ற (சிறிது பெரிது நுண்ணிது எனவும், கரிது வெளிது எனவும், ஆண் பெண் எனவும், விலங்கு பறவை எனவும், அறிவுடையது அறிவில்லது எனவும் பிறவாருகவும் அமைந்த) உருவுடையனவும் என்றவாறு. இடையில் நின்றவும் என்றது, அம்முதற் கடவுளினுருவிடைத் தங்கியவையும் என்றவாறு. ஊன்று உரு என்றது (அம்முதற் கடவுளின்) நிலேத்த உருவம் என்றவாறு. ஏன்ற உரு என்பது எதுகைக்கியைய ஏன்றுரு என விகாரப்பட்டு நின்றது. எனவே அரி அயன் அரன் எனும் மும்மூர்த்திகளாய், மூன்று குணமுமேற்கொண்டு உலகுக்கு முதல்வனுய், இயங்கு திணேயும் நிலேத்திணேயும் பிறவுமாகிய உலகத்தை யெல்லாம் தோற்றுவித்து, அவற்றைத் தன்கண் தாங்கி, அவற்றிடைத் தான் ஒழிவறத் தங்கி, அவற்றைத் தன் நிலேத்த உருவாகவும் கொண்டு விளங்கும் முதற்கடவுள் என் உணர்வுக்கு உணர்வுமாயினுன் (அவனருளால் யான் மேற்கொண்ட இந்நூற்பணி இனிது நிறைவுறும்) என்றவாறு.

இதனுள், நான்கடியினும் உரு என்னும் சொல் வடிவு (–உடம்பு) என்னும் ஒரே பொருள் கொள்ள நின்றது, சொற்பொருட் பின்வரு நிலேயணி என்னும் அணி தழுவியதாகும். இச்செய்யுள், முதற் கடவுளிலக்கணம் கூறியது; 'தானும் சிவனும் பிரமனுமாகிப் பணேத்த தனிமுதலேத்; தேனும் பாலும் கன்னலும் அமுதுமாகித் தித்தித்து என், ஊனில் உயிரில் உணர்வினில் நின்ற ஒன்று' (திருவாய்மொழி 8-8-4) என்பதனேத் தழுவி அமைந்தது. இஃது ஏற்புடைக் கடவுள் வாழ்த்தின்பாற்படும். நூற்ருெடக்கத்து மட்டு மின்றி இடையிடையே பெரும் பிரிவுகளின் தொடக்கத்தும் கடவுள் வாழ்த்துக் கூறல் முன்னோர் வழக்கு. இவ்விராமாவதார நூலுள் அமைந்த கடவுள் வாழ்த்துப் பாடல்கள் திருக்குறட் கடவுள் வாழ்த்து, திருவாய்மொழி முதற்பத்துள் முதற் பதிகம் முதலியவற்றின் சாரமாய் அமைந்தனவென்பது முன்னமே கூறப்பட்ட தொன்று. இதற்கு மற்றையோர் கூறும் உரைகளும் வருமாறு:

இரண்டாம் அடியில் அம்முதலேச் சொல்லுதற்கு எனவும், நான்காம் அடியில் சான்றுரு எனவும் பாடம்கொண்டு, வை. மு. கோ. அவர்கள் வரைந்த உரை:

"(காண்பவர் கேட்பவர்களின்) நல்லறிவினுக்கு உவப்பைத் தரும் பொருளாயிருக்கின்ற ஸ்ரீ ராமபிரானுக்கு, மூன்று நிறங்களென்று சொல்லும்படி மூன்று குணங்களேயுமுடைய மூலப்பிரகிருதியும் (அந்த மூலப் பிரகிருதியினின்று) உண்டாகிய எல்லாத் தத்து

வங்களும், அந்த மூலப்பிரகிருதியை (நிரூபிக்குமாறு பெயரும் உருவமும் கொடுத்து)ச் சொல்லும்படி பொருந்தி வடிவமைந்த பிரபஞ்சங்களும் அப்பிரபஞ்சத்தினிடையே புகுந்துநின்ற சீவன்களும் (தனக்குச்) சிறந்த சரீரமாம்: (என்றவாறு.)"

"மூலப்பிரகிருதியும் சேதநாசேதநங்களின் வடிவமான எல்லாப் பிரபஞ்சங்களும் பரமான்மாவுக்குத் திருமேனி என்னும் இடத்தை ஸ்ரீ விஷ்ணு புராணம், ஸ்ரீ பாகவதம் முதலியவற்றிலே மிகத் தெளி வாய்ப் பரக்கக் காண்க. 'ராமன்' என்னும் சொல்லுக்கு—'தன்பக்கல் யாவரும் மனம் களிக்கப் பெற்றவன்' என்பது பொருளாதலால், அக்கருத்துப் பற்றி இங்கு 'உணர்வினுக் குவந்ததாயினுன்' என்றார். ஆகவே இது, ஸ்ரீ ராமபிரானைப் பற்றியதாயிற்று. 'மூன்றுரு' என்னுமிடத்தில் 'உரு' - நிறம்; இரண்டாம் அடியிலுள்ள உரு என்பது வடிவுள்ள தத்துவங்களையும், மூன்றும் அடியில் உள்ள 'உரு' என்பது பிரபஞ்சத்தையும், நான்காமடியில் உள்ள 'உரு' என்பது சரீரத்தையும் காட்டும்."

"நிறம் மூன்றுவன: வெண்மை செம்மை கருமை என்பன. குணம் மூன்றுவன: ஸத்வம் ரஜஸ் தமஸ் என்பன. மூலப் பிரகிருதிக்கு இந்த மூன்று நிறங்களும் முக்குணங்களும் சாஸ்திரங் களிற் கூறப்பட்டிருக்கின்றன. இடையினின்றவன், உணர்வதா யினுன் என்ற பாடத்துக்கு—முதல் தோன்றுரு எவையும், அம் முதலைச் சொல்லுதற்கு ஏன்றுஉரு அமைந்தவையும், இடையில் தன்னிடத்திலே நிற்கப்பெற்றவன்; (பிராணிகள் புரியும் கருமங் களெல்லாவற்றுக்கும்), சான்றுஉரு - சாட்சியான வடிவுள்ளவன்; உணர்வினுக்கு உணர்வது ஆயினுன்-அறிவு என்னத் தக்க ஆன்மா வுக்கும் உயிராக அமைந்தவன் என்று பொருள்."

"'முதல்' என்னும் பண்புப்பெயர் - ஆகுபெயராய், முதன்மை யான மூலப் பிரகிருதியை உணர்த்திற்று. முதல் என்பதன் ஈற்றில் எண்ணும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது. மூலப்பிரகிருதி யினின்று உண்டாகிய தத்துவங்கள்:—மான் 1, அகங்காரம் 1, மனம் 1, ஞானேந்திரியம் 5, கர்மேந்திரியம் 5, தன்மாத்திரை 5, பூதம் 5 என இவை. சான்ற என்ற பெயரெச்சத்தின் இறுதி தொகுத்தல். அமைந்த, நின்ற - பெயர்."

கம்பராமாயண சாரத்தில், வெ. ப. சுப்பிரமணிய முதலியார் எழுதியவுரை: [2-ஆம் அடியில் 'அம்முதலைச் சொல்லுதற்கு' எனவும், 3-ஆம் அடியுள் 'இடையில் நின்றவன்' எனவும் 4ஆம் அடியில், 'உணர்வினுக்குணர்வதாயினுன்' என்றும் பாடம் கொள்ளப் பட்டது.]

"கொண்டு கூட்டு ;—மூன்றுஉரு-(நிறம்) என, குணம் மும்மை ஆக, முதல் தோன்றுஉரு (-தத்துவம்) எவையும், அம்முதலைச் சொல்லுதற்கு ஏன்றவையாய், உரு (-வடிவு) அமைந்த(யா)வும் தன் இடையில் நின்றவனும், சான்றும் ஆனவன், உரு [-உடம்பு(ள் உயிரின்)] உணர்வுக்கு உணர்வு ஆயினன்."

"பொருள்: (முறையே வெண்மை, செம்மை, கருமை யென்னும் நிறங்களுடைய சாத்துவிகம், ராசதம், தாமதம் என்ற முக்குணங்களையுடைய மூலப்பிரகிருதியும், அந்த மூன்று நிறங்கள் உடையன என்று சொல்லும்படி அந்த முக்குண அமிசங்களாக மூலப் பிரகிருதியினின்று தோன்றிய தத்துவங்கள் யாவும், அந்த மூலப் பிரகிருதியை (விவரிக்குமுகமாக, அதுவும் அதினின்று தோன்றிய மற்றைத் தத்துவங்களும் இவ்வாறு பரிணமித்திருக்கின்றன என்று) எடுத்துச் சொல்லுதற்குப் பொருத்தமானவையாய், (புடைபெயர்வனவும் நிற்பனவுமான சராசரங்களென்றும் உணர்வுடையனவும் இல்லனவுமான சேதனுசேதனங்களென்றும்) வடிவம் அமைந்தன (வான பிரபஞ்சங்கள் யா)வும், தன் (விராட்புருட மேனியின்) இடத்தே நிற்கப் பெற்றவனும், (சர்வாந்தர்யாமியாய் உயிர்கள் செய்யும் கருமங்களெல்லாவற்றையும் தவருது காண்கின்ற) சாட்சியும் ஆன இறைவன், உடம்பின் (கண் உள்ள உயிரின்) உணர்வுக்கு உணர்வானவன்."

* * * *

"மூலப்பிரகிருதி, முதல் தத்துவமாயிருத்தல் பற்றி இந்தக் கவியில், முதல் எனப்பட்டது போலத் தத்துவப் பிரகாசமென்ற நூலில், 'பூதங்கடனிற்ருேன்றும்' என்ற கவியில் 'மூலம்' எனச் சுருக்கிக் கூறப்பட்டிருத்தல் காண்க."

* * * *

"நான்காம் உருவை 'உணர்வினுக்கு' என்பதனேடு சேர்க்காமல் 'சான்று' என்பதனேடு இயல்பாகச் சேர்ந்து நிற்கிறபடியே கொண்டு, 'சான்றுரு' என்பதற்குச் 'சாக்ஷிரூபம்' என்று பொருள் கொள்ளலுமாம்.

* * * *

முதற்ருேன்றுரு எவையும் அம்முதலைச் சொல்லுதற்கு ஏன்றுருவமைந்தவும் இடையினின்றவன், மூன்றுரு என ஆயினன் ; குணம் மும்மையா ஆயினன் ; சான்று ஆயினன் : உணர்வுக்கு உணர்வது ஆயினன் எனக் கொண்டு கூட்டித் தத்துவங்களும், பிரபஞ்சங்களும் (ஆதேயமாய்த் தன்னை ஆதாரமாகக் கொண்டு) தன்னிடத்தே நிற்கும் இறைவன் (நிறம், வெண்மை, செம்மை, கருமை யென) மூன்று நிறமாகவும், (குணம் சாத்துவிகம், இராசதம் தாமதம் என) மூன்றுகுணமாகவும், (எனவே, அந்நிறங்களும் அக்குணங்களு

முடைய திரிமூர்த்திகளாகவும்) சாட்சியாகவும் உணர்வுக்கு உணர்வாகவும் ஆனவன் என்றும் பொருள் கூறலாம்.

கட்புலனாகாத சாத்துவிகம் முதலிய குணங்கள் நிறமுடையன என்றது, கட்புலனாகாத புகழை வெண்மையென்பதும் கோபத்தைச் செம்மை யென்பதும் போலும்.

"அயோத்தியா காண்டக் கடவுள் வாழ்த்தில் 'ஊனும் உயிரும் உணர்வும்' என்றவற்றில் ஊன் என்ற உடம்பு இங்கே 'உரு' என்பதனால், உணர்த்தப்பட்டது. செய்யுளில் 'உரு உணர்வு' என்பதனால், உரையில் மேற்கூறிய 'ஊனும் உயிரும் உணர்வும் என்ற மூன்றனுள், இடையில் நின்ற உயிர் உபலக்கணத்தால் வருவிக்கப் பட்டுப் பொருள் கூறப்பட்டிருத்தல் காண்க."

"உடம்புக்கு உயிர்போலவும், உயிர்க்கு உணர்வுபோலவும் உணர்வுக்கு இறைவன் உளனென்பது, 'உணர்வினுக்குணர்வதாயினன்' என்பதன் கருத்து."

* * * *

"உடம்பின்(கண் உள்ள உயிரின்) உணர்வு எனப் பொருள் படும் 'உருவுணர்வு' என்றதனல் ஜீவனும், 'இடையில் நின்றவன்' 'சான்று' 'உணர்வதாயினன்' என்றதனல் ஈசுவரனும், 'மூன்றுருவெனக் குணம் மும்மையா முதல் தோன்றுரு எவையும் அம்முதலைச் சொல்லுதற்கேன்றுரு வமைந்தவும்' என்றதனல் ஜகத்தும், ஆகிய ஜீவேசுவர ஜகத் என்ற முப்பொருள்களும் இந்தக் கடவுள் வாழ்த்துக் கவியில் அமையக் கூறியிருத்தல் கவனிக்கத்தக்கது."

41, 42, 45, 46ஆம் பிரதிகளில் மேற்குறித்த கடவுள் வாழ்த்துச் செய்யுளுக்குமுன் பின்வருவாறு ஒரு பாடல் காணப்படுகிறது. அது, கவிச் சக்கரவர்த்தியாகிய கம்பர் பெருமையினையும் அவரியற்றிய இவ்விராமாவதார நூலின் பெருமையினையும் நுவல்கிறது. பால காண்டத்தின் முன் இணைத்த பாயிரப் பாடல்களில் அது சேரவில்லை; ஆதலால் இங்கே சேர்க்கப்பெற்றது.

3810 (a) தரலாற்றுங் கவிச்சக்ர வர்த்திசெய்யு
டானுழ முடைமை நோக்கி
வரலாற்று முறையின்மும்மைத் தமிழுணர்ந்த
முதியோரு மற்று ளோரும்
முரலாற்றுங் கடற்பாரிற் கம்பசூத்திர
முதுசொன் மொழிப வன்னேற்
கெரலாற்று மால்சங்க மொக்குமெனின்
யாம்வேறெப் பியம்ப லாமால்.

---

# 1. பம்பைப் படலம்

சீதையைத் தேடிச் செல்லுங்கால் இராமஇலக்குவர் சென்ற டைந்த பம்பை என்னும் பொய்கையின் தகைமை பேசுதலின், இஃது இப்பெயருடையதாயிற்று. கிட்கிந்தா காண்டத்தின் முதற் படலமான இது, பம்பைவாவிப் படலம் (13, 15, 17-19, 22-24, 26, 27, 40, 43, 44, 49, 52, 56) எனவும், பம்பாநதிப் படலம் (30, 31, 39) எனவும் ஏடுகளில் வரையப்பட்டுள்ளது. இப்படலத்துள் அமைந்த பாடல்கள் 42. சந்தம் ஆறு.

பம்பை என்பது மதங்கமுனிவர் இருக்கைக்கு அப்பால் இரலை யின் குன்றத் தாழ்வரையிலுள்ளதொரு பொய்கை. இனிய நீர் நிறைந்தது; தெய்வத்தன்மை வாய்ந்தது; ஆழமும் பரப்பும் உடையதாய்க் கடல்போல் விளங்குவது; பலவகை நீர்ப்பூக்களாலும் பறவைகளாலும் கரையிலுள்ள மலர் மரங்களாலும் பொலிவு பெற்றது; தேவமாதர் வந்து புனலாட்டயரும் சிறப்புடையது; யானைகள் ஒருங்கு திளைத்து விளையாடினும் கலங்காத தெளி வுடையது.

இப்படலத்தின் முதல் 21 செய்யுட்கள் இப்பொய்கையின் வருணனையாய் அமைந்தவை. 22 முதல் 33 வரையுள்ள பாடல்கள் இப்பொய்கையிலும் கரையிலும் உள்ள பூக்கள் மீன்கள் பறவைகள் முதலியவற்றை நோக்கி, அவற்றில் சீதையின் உறுப்பமைதிகண்டு சீதையை நினைந்து இராமன் வருந்திப் பேசுவனவாய் அமைந்தன. 34 முதல் 36 முடியவுள்ள பாடல், இலக்குவன் கூற இராமன் நீராடி மாலை வழிபாடு செய்தமை கூறுவன. 37 முதல் 40 வரையுள்ள செய்யுட்கள் இரவு வருணனையாய் அமைந்தவை. 41ஆம் பாடல் சூரியோதய வருணனை, 42ஆம் செய்யுள் இராமஇலக்குவர் சீதை யைத் தேடிச் செல்லுதல் கூறுவது.

பம்பையை வருணிக்கப்புக்க ஆசிரியர், அதன் தெளிவும் ஆழமும் இனிமையும் நினைந்த அளவில், அத்தன்மைகள் நிறைந்த சான்றோர் செய்யுட்களையே அப்பொய்கைக்கு உவமையாக்கிக் 'கற்பகமனைய அக்கவிஞர் நாட்டிய சொற்பொருளாமெனத் தோன் றல் சான்றது' என்று கூறுகிறார். ஆறுகளையும் நீர் நிலைகளையும் காணுங்கால், இவர்க்கு இந்நினைவு எழுவது இயல்பு. முன் கோதாவிரி ஆற்றை வருணிக்குமிடத்துச் 'சான்றோர்கவியெனக் கிடந்த கோதாவிரி' என்றதும் அயோத்தியின் நீர் அரணான அகழியின் தெளிவின்மை கூறுமிடத்துப் 'புன் கவியெனத்தெளி

வின்றி' என்று புன்கவிகளை உவமை கூறியதும் நினைவு கூரத் தக்கன. பம்பைப் புனல் தெளிவுடையதாயினும், கரைகளிற் செறிந்த மணியொளியாய வேற்றுநிறமடைதலால், அதற்குத் தீயவர் கூட்டுறவால் வேறுபடும் புல்லறிவாளர் மனத்தை உவமையாக்கி, 'ஓர்ந்துணர் வில்லவர் உள்ளமொப்பது' என்றதும், பம்பையின் தெளிந்த நீர் அதிற்பரவிய தாமரையிலையால் மறைந்தமை கூறுமிடத்து அதற்குப் பேதைமையால் மயங்கிய நல்லறிவை உவமையாக்கி, 'பேதைமையிடை மயக்கலால்—ஆசடை நல்லுணர்வனையது' என்று கூறியதும் இங்கு நோக்கத்தகும். இவ்வாறு வரும் உவமைகளும் கற்பனைகளும் படித்துப் படித்து மகிழத்தக்கன.

'காடும் செடியும் அவளாகத் தோன்றுமென் கண்களுக்கே' என்பது காதலியைப் பிரிந்து துயருற்ற காமுகன் ஒருவன் கூற்றாய் அமைந்தது. பம்பைப் பொய்கைச் சூழலில் உள்ளவையெல்லாம், தெய்வக் காதலனான இராமன் கண்களுக்குச் சீதையாகவும் அவள் உறுப்புக்களாகவும் தோன்றுகின்றன. அவள் பிரிவால் இராமன் வருந்துவதனை ஆசிரியர் நன்கு விரித்துக் கூறியுள்ளார்.

பம்பை வருணனை, வான்மீகத்துள் ஆரணிய காண்டத்தில் 73-ஆம் சருக்கத்திலேயே தொடங்கி, கிட்கிந்தா காண்டத்தின் முதற்சருக்கத்தில் முற்றுப்பெறுகிறது. அங்குப் பம்பை வருணனை வசந்த கால வருணனையை முன்னே கொண்டுள்ளது. பம்பைக் கரையில் சீதையை நினைத்து இராமன் வருந்திக் கூறியவை, இலக்குமணனை நோக்கி எழுந்தனவாக வான்மீகத்திற் காணப்படுகிறது; தனிமைப் புலம்பலாக இராமாவதாரத்திற் காணப்படுகிறது. இராமன் மதங்கசரசில் நீராடினன் என்கிறது வான்மீகம் ; பம்பையில் நீராடினன் என்கிறது கம்பர் காவியம். இவையே இவற்றிடையுள்ள வேறுபாடுகள்.

# 1. பம்பைப் படலம்

## பம்பை வருணனை 3811-3831

3811. தேன்படி மலரது செங்கண் வெங்கைமா்த்
தான்படி கின்றது தெளிவு சான்றது
மீன்படி மேகமும் படிந்து வீங்குநீர்
வான்படிந் துலகிடைக் கிடந்த மாண்பது.

தேன்படி மலரது, செங்கண் வெம்கைமாத்
தான் படிகின்றது, தெளிவு சான்றது,
மீன்படி மேகமும் படிந்து வீங்கும் நீர்
வான் படிந்து உலகிடைக் கிடந்த மாண்பது.

பொ :—(அப்பொய்கை) தேன் பொருந்திய மலர்களையுடையது; சிவந்த கண்ணினையும் வெவ்விய கையினையும் உடைய யானைகள் முழுகித் திளைக்கப்பெற்றது; தெளிவுமிக்கது; (ஆதலால்) விண் மீன்கள் தங்கிய, பரவும் இயல்பினையுடைய ஆகாயமானது, மேகமும் பொருந்தப்பெற்று, நிலமிசைப் படிந்து கிடந்த மாண்பினையுடையது.

கு :—ஆரணிய காண்ட முடிவில், 'பம்பையாம் பொய்கை புக்கார்' என்று இப்படலத்துக்குத் தோற்றுவாய் செய்த ஆசிரியர், இப் பகுதியில் அப்பொய்கையினை வருணிக்கின்றாராகலின், அப்பொய்கை என்னும் எழுவாய் வருவித்துரைக்கலாயிற்று. பின்வரும் பாடல் களுக்கும் இஃதொக்கும். அப்பொய்கை, மலரது; மா படிகின்றது; தெளிவு சான்றது; (ஆதலால்) மீன்படி வீங்கு நீர்வான், மேகமும் படிந்து உலகிடைப் படிந்து கிடந்த மாண்பது என்க. விரிந்து பரந்து தெளிந்த பொய்கைக்கு விரிந்து பரந்து மாசற்ற வானமும், அப்பொய்கையில் மலர்ந்த பூக்களுக்கு வான்மிசைத் தோன்றும் நாண்மீன்களும் அப்பொய்கையுள் முழுகித் திளைக்கும் யானைகளுக்கு மேகங்களும் உவமை. யானை மதங்கொண்ட நிலையில் அதன் கண்கள் சிவப்புறுதலும் கை வெதும்புதலும் இயல்பென்பர். யானைகள் படியப் பெற்றது; தெளிவு சான்றது எனவே யானைகள் முழுகித் திளைத்த நிலையிலும் கலங்காத பொய்கையின் ஆழமுடைமை கூறியவாறு. படிதல் என்பது தங்குதல் குளித்தல் பதிதல் என்னும் பொருள்களிற் பயின்றது. மீன் - நட்சத்திரம். வீங்குதல் - மிக்குவிரிதல். நீர் - தன்மை; இயல்பு. வான் - ஆகாயம். மலர், மா, மீன் என்பன பால்பகா அஃறிணைப் பெயர்கள். (1)

3812. ஈர்ந்தநுண் பளிங்கெனத் தெளிந்த வீர்ம்புனல்
பேர்ந்தொளிர் நவமணி படர்ந்த பித்திகைச்
சேர்ந்துழிச் சேர்ந்துழி நிறத்தைச் சேர்தலா
லோர்ந்துணர் வில்லவ ருள்ள மொப்பது.

ஈர்ந்த நுண் பளிங்கு எனத் தெளிந்த ஈர்ம்புனல்,
பேர்ந்து ஒளிர் நவமணி படர்ந்த பித்திகைச்
சேர்ந்துழிச் சேர்ந்துழி நிறத்தைச் சேர்தலால்
ஓர்ந்துணர்வில்லவர் உள்ளம் ஒப்பது.

பொ :—அறுத்துச் செம்மை செய்த மெல்லிய பளிங்குபோலத் தெளிந்த குளிர்ந்த (அப்பொய்கை) நீர், இடைவிட்டு ஒளிவீசும் நவமணிகள் பரவிய (பதிந்த) சுவர் போன்ற கரைகளை அடையுந் தோறும் அவ்வம் மணிகளின் நிறத்தினை அடைதலால், ஆராய்ந்து தெளியும் அறிவில்லாத கீழ்மக்களின் மனம் போல்வது.

கு :—ஈர்தல் - அறுத்தல். நுண்மை - மென்மை. ஈர்ம்புனல் - குளிர்ந்த நீர். பேர்ந்து ஒளிர்தல் - இடைவிட்டு விளங்குதல். படர்தல் - பரவுதல் ; அடைதலுமாம். ஓர்தல் - ஆராய்தல். ஓர்ந்துணர்வு – ஆராய்ந்து தெளியும் அறிவு. பளிங்குபோல் தெளிந்த அப்பொய்கைநீர், மதில்களில் பதிந்த நவமணிகளை யடைந்தபோது அவ்வம் மணிநிற முடையதாய்க் காணப்படுதற்கு, யார்யார் என்னென்ன கூறினும் அவற்றையெல்லாம் மெய்யென்று கொள்ளும், மெய்யறிவில்லாதார் உள்ளம் உவமை. பளிங்கு, தன்னை அடுத்த பொருளின் நிறமுடையதாகும் என்பது 'அடுத்ததுகாட்டும் பளிங்கு' என்னும் திருக்குறளாலும் (706) விளங்கும். (2)

3813. குவான்மணித் தடந்தொறும் பவளக் கோலிவர்
கவானர சன்னமும் பெடையுங் காண்டலிற்
றவாநெடு வானகந் தயங்கு மீனெடு
முவாமதி யுலப்பில வுதித்த தொத்தது.

குவால் மணித் தடம் தொறும் பவளக் கோல் இவர்
கவான் அரசன்னமும் பெடையும் காண்டலில்
தவாநெடு வானகம் தயங்கும் மீனெடும்
உவாமதி உலப்பு இல வுதித்தது ஒத்தது.

பொ :—கூட்டமான இரத்தினங்களையுடைய அப்பொய்கையின் இடந்தொறும் பவளக்காம்பு போன்ற கால்களையுடைய அரச

அன்னங்களும் பெட்டையன்னங்களும் காணப்படுதலால், கெடாத நீண்ட ஆகாயத்தின்கண் விளங்கும் நாண்மீன்களோடு அளவற்ற நிறைமதிகள் தோன்றியதைப்போல விளங்குவது.

கு:—குவால் - கூட்டம். தடம் - இடம். பவளக்கோல் - பவளக் காம்பு. இவர்தல் - ஒத்தல். கவான் - கால். அரசவன்னம் என்பது அரசன்னம் என நின்றது விகாரம். தவா - அழியாத. தயங்குதல் - விளங்குதல். மீன் - நட்சத்திரம். உவாமதி - நிறைமதி. உலப்புஇல - அளவற்றவை. பொய்கைக்கு வானமும், அன்னங்களுக்கு மதியும், பொய்கையிலுள்ள மீன்களுக்கு வானிலுள்ள நட்சத்திரங்களும் உவமை. (3)

**3814.** ஓதநீ ருலகமு முயிர்கள் யாவையும்
வேதபா ரகரையும் விதிக்க வேட்டநாட்
சீதநீ ருவரியைச் செகுக்கு மாறொரு
காதிகா தலன்றரு கடலி னன்னது.

ஓதம் நீர் உலகமும் உயிர்கள் யாவையும்
வேத பாரகரையும் விதிக்க வேட்ட நாள்,
சீதம் நீர் உவரியைச் செகுக்குமாறு, ஒரு
காதி காதலன் தரு கடலின் அன்னது.

பொ:—ஒப்பற்றவனான விசுவாமித்திர முனிவன், (திரிசங்குவுக் காகப் பிரமன் படைப்பின் வேறான) குளிர்ந்த கடலாற் சூழப்பட்ட உலகத்தையும் அவ்வுலகில் வாழும் உயிர்களையும் வேதங்களைக் கரை கண்டவரான முனிவர்களையும் படைக்க விரும்பிய காலத்தில் (பிரமன் படைப்பான) குளிர்ச்சி மிக்க நீரையுடைய உவர்க்கடலை வெல்லும்படி படைத்த (நன்னீர்க்) கடல் போல்வது.

கு:—(அப்பொய்கை), ஒரு காதி காதலன், உலகமும் உயிர்கள் யாவையும் வேதபாரகரையும் விதிப்ப வேட்டநாள், சீதநீருவரியைச் செகுக்குமாறு தருகடல் அன்னது என இயைக்க. காதி - விசுவாமித் திரன் தந்தை. காதிகாதலன் - காதியின் அன்புக்கு உரியான்; விசுவாமித்திரன். ஓதம் - குளிர்ச்சி. வேதபாரகர் - வேதமாகிய கடலைக் கரை கண்டோர். பாரம் - கரை. பாரகர் - கரைகண்டோர். விரித்தல் - படைத்தல். வேட்டல் - விரும்புதல். வீங்குதல் - மிகுதல். உவரி - உவர்க்கடல். செகுத்தல் - வெல்லுதல். 'வானகம் செகுக்குமே' (1903) என்பது சீவகசிந்தாமணி. கடலின் என்பதில் இன்சாரியை. முன்னர் உவரி என்றமையால், பின் கடல் என்பதற்கு நன்னீர்க்கடல் என்று பொருள் கொள்ளலாயிற்று. (4)

3815. எற்படர் நாகர்த மிருக்கை யீதெனக்
கிற்பதொர் காட்சிய தெனினுங் கீழுறக்
கற்பக மனையவக் கவிஞர் நாட்டிய
சொற்பொரு ளாமெனத் தோன்றல் சான்றது.

எல் படர் நாகர்தம் இருக்கை ஈது எனக்
கிற்பது ஓர் காட்சியது எனினும் கீழ் உறக்
கற்பகம் அனைய அக் கவிஞர் நாட்டிய
சொற்பொருள் ஆம் எனத் தோன்றல் சான்றது.

பொ :—(அப்பொய்கை) ஒளிபரவிய நாகர் வாழும் இடம் இது என்று சுட்டிக்காட்டும் தோற்றமுடையதெனினும் (ஆழமுடையதாயினும்) கற்பகம்போன்ற உலகறிந்த பெருமையினையுடையபுலவர்கள் வரையறை செய்து விளக்கிய சொற்பொருள்போல அடிப்பரப்பிலும் விளக்கம் மிக்கது.

கு :—எல் - ஒளி. படர்தல் - பரவுதல். நாகர்தம் இருக்கை - நாகர் (வாழும்) உலகம்; பாதாளம். காட்சி - தோற்றம். அக்கவிஞர் என்பதில் அ பண்டறிசுட்டு. கற்பகம் அனைய அக்கவிஞர் என்றது, கற்பகம் வேண்டுவார் வேண்டியவற்றைத் தடையின்றி யீதல்போல் பயில்வோர் விரும்பும் சுவைபயன் முதலிய நலம் பலவும் உதவும் கவிகளையியற்றும் ஆற்றல் படைத்த பழம் புலவர்களை. அக்கவிஞர் சொல் தன் பொருளை விளக்கப் பிறிதொன்றை வேண்டாமல் தானே விளக்கமுடையதாதல் போலப் பம்பையின் அடிப்பகுதியும் கலக்கமின்றித் தெளிந்த இயல்புடைய தென்றவாறு. (5)

3816. களநவி லன்னமே முதல கண்ணகன்
றளமலர்ப் புள்ளொலி தழங்க வின்னதோர்
கிளவியென் றறிவருங் கிளர்ச்சித் தாதலால்
வளநகர்க் கூலமே போலு மாண்பது.

களம் நவில் அன்னமே முதல கண்ணகன்
தள மலர்ப் புள்ஒலி தழங்க, இன்னதோர்
கிளவி என்று அறிவு அரும் கிளர்ச்சித்து; ஆதலால்
வள நகர்க் கூலமே போலும் மாண்பது.

பொ :—பெருமை வாய்ந்த அகன்ற இதழ்களையுடைய தாமரை மலரில் வசிக்கின்ற இனிதாக ஒலிக்கும் அன்னம் முதலிய பறவைகளின் ஒலி ஒருங்கு எழுதலால், இன்னபேச்சு என்று அறிதற்கரிய

மிகுதியினையுடையதா யிருத்தலால், (அப்பொய்கை) வளம்மிக்க (அரசர் தங்கும் பெரிய) நகரங்களின் கடைத்தெருவை ஒத்த சிறப் பினையுடையது.

கு :—களம் - இன்னோசை. 'களங்கொள் திருநேரிசை' (திரு நாவுக்கரசர் 337) என்பது பெரிய புராணம். நவிலுதல் - ஒலித்தல். கண் - பெருமை (திவா.) தளம் - இதழ். புள் - பறவை. ஒலிதழங்க- ஒலிக்க. கிளவி - பேச்சு. கிளர்தல் - மிகுதல். கூலம் - கடைத் தெரு. பொய்கைக்கு நகர்க்கூலமும், பொய்கையில் இன்னதன் ஒலியென்று அறிதற்கரிதாய் ஒருங்கெழுந்த புட்களின் ஒலிக்கு நகர்க்கடைத் தெருவில் கொள்வோரும் கொடுப்போருமாகிய பலவகை மக்களில் இவர் பேச்சென்று பிரித்தறிய இயலாதவாறு ஒருங்கெழுந்த பேச் சொலியும் உவமை கொள்ளத்தகும். இச்செய்யுள், அன்னம் முதலிய ஓரினப்புட்களின் ஒலிபற்றி யெழுந்தது; 3823ஆம் செய்யுள் அன்னம் அல்லாத வேற்றினப் புட்களின் ஒலிபற்றி யெழுந்தது என்று கொள்ளல்தகும். (6)

3817. அரிமலர்ப் பங்கயத் தன்ன மெங்கணும்
புரிகுழல் புக்கிடம் புகல்கி லாதயாந்
திருமுக நோக்கல மிறந்து தீர்துமென்
றெரிபுகு வனவெனத் தோன்று மீட்டது.

அரி மலர்ப் பங்கயத்து அன்னம், எங்கணும்,
'புரி குழல் புக்கிடம் புகல்கிலாத யாம்,
திருமுகம் நோக்கலம், இறந்து தீர்தும்' என்று
எரி புகுவன எனத் தோன்றும் ஈட்டது.

பொ :—எல்லாப் பக்கத்திலும் வண்டுகள் சுழலும் தாமரை மலரி லுள்ள அன்னங்கள், (கடைகுழன்று) 'சுருண்ட கூந்தலையுடைய சீதை சென்ற இடத்தை அறிந்து (இராமன்பால்) கூறும் ஆற்ற லற்ற யாம், அவனுடைய அழகிய முகத்தைப் பாராமல் இறந் தொழிவோம்' என்று தீப்புகுவனபோலக் காணப்படும் தன்மை யுடையது (அப்பொய்கை).

கு :—அரி - வண்டு. பங்கயமலர் என மாறுக. அத்து சாரியை. புரிகுழல் - சுருண்ட கூந்தல்; அது அன்மொழித் தொகையாய்ச் சீதையை யுணர்த்தியது. புக்க இடம் என்பது புக்கிடம் என நின்றது விகாரம். 'புரிகுழல்............இறந்துதீர்தும்' என்பது, அன்னங் களின் உட்கோள். இறந்து தீர்தல் - செத்தொழிதல்; ஒருசொல்.

எரி - நெருப்பு. ஈடு - தன்மை. அலர்ந்த தாமரைமலர்க்கு எரியும் நெருப்பு உவமை; 'சேஞர் சுனைத்தாமரை செந்தீ மலரும்' என்பது திருவாய்மொழி (6-10-2.). இயல்பாகத் தாமரை மலரில் தங்கும் அன்னங்களை எரிபுகுவனவாக்கி, அதற்கு ஒரு காரணமும் கற்பித்தவாறு. (7)

3818. காசடை விளங்கிய காட்சித் தாயினு
மாசடை பேதைமை யிடைம யக்கலா
லாசடை நல்லுணர் வனைய தாமெனப்
பாசடை வயின்ருறும் பரந்த பண்பது.

காசு அடை விளங்கிய காட்சித்து ஆயினும்
மாசு அடை பேதைமை இடை மயக்கலால்
ஆசு அடை நல் உணர்வு அனையது ஆம் எனப்
பாசு அடை வயின்தொறும் பரந்த பண்பது.

பொ :—(அப்பொய்கைநீர்), அடியில் தங்கிய காசுகள் நன்கு தெரியும் தெளிந்த தோற்றமுடையதாயினும், குற்றம் பொருந்திய அவிச்சை மயக்குதலால் இடையே கலக்கமுறும் நல்லறிவுபோல்வது என்று சொல்லும்படி இடந்தொறும் (தாமரை முதலியவற்றின்) பசியஇலை பரவி மறைத்த தன்மையினையுடையது.

கு :—காசு - மணி முதலியவை. அடை காசு - என மாறுக, மாசு - குற்றம். பேதைமை - யாதும் அறியாமை. ஆசு - குற்றம்; பிழை. பாசடை - பசிய இலை. வயின்தொறும் - இடந்தொறும். பொய்கைநீர் தெளிந்த நிலைக்கு நல்லுணர்வும், அந்நீர் தாமரை யிலை முதலியவற்ருல் மறைப்புண்ட நிலைக்குப் பேதைமையால் மயங்கிய நல்லுணர்வும் உவமை. (8)

3819. களிப்படா மனத்தவன் காணிற் கற்பெனுங்
கிளிப்படா மொழியவள் விழியின் கேளெனத்
துளிப்படா நயனங்க டுளிப்பச் சோருமென்
ருெளிப்படா தாயிடை யொளிக்கு மீனது.

களிப்பு அடா மனத்தவன் காணின், கற்பு எனும்
கிளிப் படா மொழியவள் விழியின் கேள் எனத்
துளிப் படா நயனங்கள் துளிப்பச் சோரும் என்று
ஒளிப் படாது ஆயிடை ஒளிக்கும் மீனது.

பொ :—(சீதையைப் பிரிந்தமையால்) மகிழ்ச்சி தோன்ருத மனமுடைய இராமன் (நம்மைக்) கண்டால், கற்பின் உருவென்று கூறத்தக்க—கிளியினிடம் அமையாத இனிய மொழியினையுடைய—சீதையின் கண்களுக்கு இவை ஒப்பாவன என்று நீர் துளிக்காத தன் கண்களில் நீர் துளிக்கத் தளர்வான் என்று ஒளிபரவிய இடங்களில் தோன்ருமல் அங்கு மறையும் மீன்களையுடையது.

கு :—பகைக்கு ஒதுங்கி நீருள் மீன்கள் மறைதல் இயல்பாகவும் இராமன் நம்மைக்காணின் இவை சீதையின் கண்கள் போல்வன என்று எண்ணி வருந்துவான் என்று மீன்கள் மறைந்தமைக்குப் பிறிதொரு காரணம் கற்பித்தலால் இது ஏதுத்தற்குறிப்பேற்றம் என்னும் அணிதழுவியதாகும். களிப்பு - மகிழ்ச்சி. அடுத்தல் - பொருந்துதல். களிப்படா மனத்தவன் என்றது இராமனை. படுதல் - தோன்றுதல். மகளிர்மொழிக்குக் கிளிமொழி இனிமையால் உவமையாமெனினும், சீதா பிராட்டியின் மொழி கிளிமொழியினும் மேம்பட்டது என்பார் கிளிப்படாமொழியவள் என்ருர். கேள் - ஒப்பு. நயனம் - கண். சோர்தல் - தளர்தல். (9)

3820. கழைபடு முத்தமுங் கலுழிக் கார்மத
மழைபடு தரளமு மணியும் வாரிநே
ரிழைபடர்ந் தனையநீ ரருவி யெய்தலாற்
குழைபடு முகத்தியர் கோல மொப்பது.

கழை படு முத்தமும் கலுழிக் கார் மத
மழை படு தரளமும் மணியும் வாரி, நேர்
இழை படர்ந்தனைய நீர்அருவி எய்தலால்
குழை படு முகத்தியர் கோலம் ஒப்பது.

பொ :—மூங்கிலிற் பிறந்த முத்துக்களையும் கரிய மதப் பெருக்குடைய மேகம் போன்ற யானையிற்ருேன்றிய முத்துக்களையும் மணிகளையும் வாரிக்கொண்டு நுண்ணிய நூல் படிந்தாற் போன்ற அருவி வந்து கலத்தலால் குண்டலம் பொருந்திய முகத்தையுடைய மகளிரின் ஒப்பனை போல விளங்குவது.

கு :—கழை - மூங்கில். கலுழி - வெள்ளம். கார் - கரிய. மத மழை என்றது யானையை. மூங்கிலும் யானையும் முத்துப் பிறக்கும் இடங்களுள் சேர்ந்தவை என்பது கவி மரபு. வாருதல் - அள்ளுதல். நேர்மை - நுண்மை. இழை - நூல். படர்தல் - பரவிப் படிதல். குழை - குண்டலம். கோலம் - அணி. மூங்கில் முத்தும் யானை

மத்தகமுத்தும் மணியும் வாரிக்கொண்டு மலையருவி பாயப் பெற்ற பம்பைப் பொய்கை முத்தணியும் மணியணியும் பூண்ட மகளிர் கோல முடையதாயிற்று என்றவாறு. (10)

**3821.** பொங்குவெங் கடகரி பொதுவி னுடலிற்
கங்குலி னெதிர்பொரு கலவிப் பூசலி
னங்கநொந் தலசிய விலையி னுய்வளை
மங்கையர் வடிவென வருந்து மெய்யது.

பொங்கு வெம் கடகரி பொதுவின் ஆடலின்
கங்குலின் எதிர் பொரு கலவிப் பூசலின்
அங்கம் நொந்து அலசிய விலையின் ஆய் வளை
மங்கையர் வடிவு என வருந்தும் மெய்யது.

பொ :—மிக்க கொடுமை வாய்ந்த மதப்பெருக்குடைய யானைகள் பொதுவாக மூழ்கித் திளைத்தலால், இரவில் தம்முள் எதிர்ப்பட்டுப் பொருகின்ற கலவிப் போரினல் உறுப்புக்கள் நொந்து வருந்திய சிறந்த வளைகளை யணிந்த விலைமாதர் உடல்போல வருந்தும் வடிவுடையது.

கு :—பொது - சமவுரிமை. ஆடுதல் - முழுகித் திளைத்தல். கங்குல் - இரவு. பூசல் - போர். அங்கம் - உறுப்பு. அலசுதல் - வருந்துதல். ஆய்வளை - சிறந்தவளை. விலையின் மங்கையர் என இயையும். (11)

**3822.** விண்டொடர் நெடுவரைத்தேனும் வேழத்தின்
வண்டுளர் நறுமத மழையு மண்டலா
லுண்டவர் பெருங்களி யுறலி னோதியர்
தொண்டையங் கனியிதழ்த் துப்பிற் சான்றது.

விண் தொடர் நெடு வரைத் தேனும் வேழத்தின்
வண்டு உளர் நறு மத மழையும் மண்டலால்
உண்டவர் பெருங்களி உறலின், ஓதியர்
தொண்டை அம் கனி இதழ்த் துப்பின் சான்றது.

பொ :—வானளாவிய நீண்ட மலைகளிலுள்ள தேனும், வண்டுகள் குடைகின்ற நறுமணம் வாய்ந்த யானைகளின் மதப் பெருக்கும் மிக்கு நிறைதலால் அப்பொய்கை நீரை உண்டார் மிக்க மகிழ்ச்சியைப்

பொருந்தலின், கூந்தலழகுடைய மகளிரின் தொண்டைக்கனி போன்ற அதரத்தின் நுகர்ச்சியினும் மேம்பட்டது.

கு :—உளர்தல் - குடைதல். மண்டுதல் - நிறைதல். ஓதி - கூந்தல். தொண்டை - ஆதொண்டை. அம் சாரியை. மகளிர் இதழ்க்குத் தொண்டைக் கனியை உவமை கூறுவது கவி மரபு. துப்பு- நுகர்ச்சி. துப்பினும் என உம்மை விரிக்க. சான்றது - மிக்கது மேம்பட்டது. (12)

3823. ஆரிய முதலிய பதினெண் பாடைபிற்
பூரிய ரொருவழிப் புகுந்த தாமென
வோர்வில கிளவிக ளொன்ரெு டொப்பில
சோர்வில விளம்புபுட் டுவன்று கின்றது.

ஆரியம் முதலிய பதினெண் பாடையில்
பூரியர் ஒருவழிப் புகுந்ததாம் என
ஓர்வு இல கிளவிகள் ஒன்ரெுடு ஒப்பு இல
சோர்வு இல விளம்பு புள் துவன்றுகின்றது.

பொ :—ஆரியம் முதலான பதினெட்டு மொழிகளில் புலமை நிரம்பாதார் ஓரிடத்து ஆரவாரத்தோடு சென்று கூடியது போல, அறிதற்கியலாதனவும் ஒன்ரேடொன்று தொடர்பில்லனவும் ஆகிய ஒலிகளைத் தளர்ச்சியின்றி ஒலிக்கின்ற வேற்றினப் பறவைகள் நிறைந்தது.

கு :—ஆரியம் - வடமொழி. பாடை - மொழி. பூரியர் - புல்லறிவாளர். ஒருவழி - ஓரிடம், புகுதல் - சென்று சேர்தல். ஓர்வு - அறிவு. கிளவி - பேச்சு = ஒலி. விளம்புதல் - பேசுதல் = ஒலித்தல். புள் - பறவை. துவன்றுதல் - நிறைதல். 3816-ஆம் பாடல் மலரில் தங்கும் அன்னம் முதலிய ஒரு சாதிப் பறவைகளின் ஒலிபற்றி எழுந்தது. இப்பாடல் அன்னமல்லாத வேற்றினப் பறவைகளின் ஒலிபற்றி எழுந்தது என்பது, இப்பறவைகளின் ஒலிக்குப் புலமை நிரம்பாதவரும் வெவ்வேறு நாட்டு வெவ்வேறு மொழியாளருமாகிய பதினெண்மொழி மாந்தரின் ஆரவாரத்தை உவமை கூறுதலால் புலனுகும். (13)

3824. தானுயி ருறத்தனி தழுவும் பேடையை
யூனுயிர் பிரிந்தெனப் பிரிந்த வோதிமம்

வானர மகளிர்தம் வயங்கு நூபுரத்
தேனுகு மழலையைச் செவியி னோர்ப்பது.

தான் உயிர் உறத் தனி தழுவும் பேடையை
ஊன் உயிர் பிரிந்தெனப் பிரிந்த ஓதிமம்
வான் அரமகளிர் தம் வயங்கு நூபுரத்
தேன் உகு மழலையைச் செவியின் ஓர்ப்பது.

பொ :—உயிர் தளிர்க்கும்படி சிறப்பாக அணைந்த பேடையன்னத்தை உடல் உயிரை விட்டுப் பிரிந்து சென்றாற்போலப் பிரிந்து சென்ற சேவலன்னம், தேவருலகில் வாழும் அரமகளிருடைய விளக்கம் மிக்க சிலம்பினின்றெழும் இனிமை மிகும் மெல்லோசையைத் தன் பெடையின் ஒலி என்று காது கொடுத்துக் கேட்பதற்கு இடமானது.

கு :—தான் என்றது சேவலன்னத்தினை. ஊன் - உடல். ஓதிமம் என்றது அன்னச் சேவலை. அரமகளிர் - தேவமாதர். தம், சாரியை. வயங்குதல் - விளங்குதல். நூபுரம் - சிலம்பு. மழலை - மெல்லோசை. செவி - காது. ஓர்த்தல் - நுனித்தறிதல். சிலம்பொலியும் அன்னத்தின் ஒலியும் தம்முள் ஒன்றற்கொன்று உவமையாவன; ஆதலின், ஓதிமம், நூபுரத் தேனுகு மழலையைச் செவியின் ஓர்ப்பது என்றார். ‘அரங்கிளுடுவார் சிலம்பின் அன்னம் நின்—றிரங்கும் வார்புனற் சரயு வெய்தினர்’ (338) என்றார் முன்னும். (14)

3825. ஏறிட லரியமால் வரைநின் றீர்த்திழி
யாறிடு விரையகி லார மாதிய
வூறிட வொண்ணக ருறைத்த வொண்டளச்
சேறிடு பரணியிற் றிகழுந் தேசது.

ஏறிடல் அரிய மால் வரை நின்று ஈர்த்து இழி
ஆறு இடு விரை அகில் ஆரம் ஆதிய
ஊறிட ஒண் நகர் உறைத்த ஒண் தளச்
சேறிடு பரணியில் திகழும் தேசது.

பொ :—ஏறுதற்கரிய பெரிய மலைகளினின்று இழுத்துக்கொண்டு இறங்கி வருகின்ற ஆறுகள் இட்ட நறுமணம் உள்ள அகிற் கட்டைகளும் சந்தனக் கட்டைகளும் முதலியவை ஊறுதலால், சிறந்த பெரிய நகரிலுள்ளார் அரைத்த ஒள்ளிய கற்பூரஞ் சேர்ந்த சந்தனக் குழம்பினை இட்டு வைத்த பரணியைப்போல விளங்கும் ஒளியுடையது.

கு :—ஈர்த்தல் - இழுத்தல். இழிதல் - இறங்குதல். ஆரம் ஆதிய - சந்தனம் முதலியவை. நகர் ஆகுபெயராய் நகரத்துள்ளாரைக் குறிக்கும். ஒண் தளச்சேறு - ஒள்ளிய கற்பூரஞ் சேர்ந்த சந்தனக் குழம்பு. பரணி - கிண்ணம். ஆறுகளால் பெரிய மலையினின்று இழுத்து வந்து இடப்பட்ட அகில் ஆரம் முதலியவை தன்கண் ஊறி மணங் கமழ நின்ற நிலையில், பம்பை, நகர மாந்தரால் அரைத்த கற்பூரஞ் சேர்ந்த சந்தனக் குழம்பு வைத்த பரணிபோலத் தோன்றியது என்றவாறு. (15)

3826. நவ்வி நோக்கிய ரிதழ்நிகர்
★ குமுதத்து நறுந்தேன்
வவ்வி மாந்தரிற் களிமயக்
குறுவன மகர
மெவ்வ மோங்கிய விறப்பொடு
பிறப்பிவை யென்னக்
கவ்வு மீனொடு முழுகின
வெழுவன கரண்டம்.

நவ்வி நோக்கியர் இதழ் நிகர் குமுதத்து நறுந்தேன்
வவ்வி, மாந்தரில் களி மயக்கு உறுவன மகரம்
எவ்வம் ஓங்கிய இறப்பொடு பிறப்பு இவை என்னக்
கவ்வும் மீனொடு முழுகின எழுவன கரண்டம்.

பொ :—மீன்கள், மானின் நோக்குப் போலும் மருண்ட நோக்கினையுடைய மகளிரின் அதரம் போன்ற குமுத மலரிலுள்ள நல்ல தேனை உட்கொண்டு (மகளிர்பால் அதரபானம் கொண்ட) மாந்தரைப்போல் களிப்பும் மயக்கமும் பொருந்துவனவாயின; நீர்க் காக்கைகள், துன்பம் மிக்க இறப்பும் பிறப்பும் இத்தன்மையன என்று விளங்க அலகிற் கவ்விய மீனொடு அப் பம்பைப் பொய்கையுள் முழுகுவனவாயும் எழுவனவாயும் உள்ளன.

கு :—நவ்வி - மான். இதழ் - உதடு. வவ்வுதல் - கவர்தல். எவ்வம் - துன்பம். மகரம் – மீன். மகரம், குமுதத்து நறுந்தேன் வவ்விக் களிமயக்குறுவன ; கரண்டம், எவ்வம் ஓங்கிய இறப்பும் பிறப்பும் இவையென்னக் கவ்வும் மீனொடு முழுகின எழுவன என இயையும். இறப்பொடு என்பதனுள் ஒடு எண்ணுப் பொருளிற் பயின்றது. மீனொடு என்பதனுள் ஒடு உடனிகழ்ச்சிப் பொருளது. (16)

3827. கவள யானையன் ஞற்கந்தக் கடிநறுங் கமலத்
தவளை யீகில மாவது செய்துமென் றருளித்
திவள வன்னங்க டிருநடை காட்டுவ செங்கண்
குவளை காட்டுவ துவரிதழ் காட்டுவ குமுதம்.

கவள யானை அன்னற்கு அந்தக் கடிநறுங் கமலத்து
அவளை ஈகிலம், ஆவது செய்தும், என்று அருளித்
திவள அன்னங்கள் திருநடை காட்டுவ, செங்கண்
குவளை காட்டுவ, துவர் இதழ் காட்டுவ குமுதம்.

பொ :—கவளங்கொள்ளும் யானை போல்வானை இராமனுக்கு நறுமணம் உள்ள நல்ல தாமரை மலரில் வாழும் அத் திருமகளின் அமிசமான சீதையைக் காட்டித் தந்தோமில்லை; (அது நமக்கு இயலாததேனும்) நம்மால் இயன்ற உதவியையேனும் செய்வோம் என்று இராமன்பால் இரக்கமுடையனவாய், அன்னங்கள், அப்பிராட்டியின் நடையினை விளங்கக் காட்டுவனவாயின; (அவளுடைய) செவ்விய கண்களைக் குவளைகள் காட்டுவனவாயின; செந்நிறம் வாய்ந்த இதழைக் குமுதங்கள் மலர்ந்து காட்டுவனவாயின.

கு :—கவளம் – உருண்டை வடிவான யானையுணவு. யானையன்ஞன் என்றது இராமனை. திருமகளே சீதாபிராட்டியாக அவதரித்தமையால் சீதாபிராட்டியைக் கமலத்தவள் என்ஞர். ஆவது - இயன்றது. 'யானையன்ஞற்குக் கமலத்தவளை ஈகிலம் ஆவது செய்தும்' என்பது, அன்னம் குவளை குமுதம் என்பவற்றின் உட்கோள். அருளி - இரக்கமுடையனவாய். திவளுதல் - விளங்குதல். திரு என்றது சீதாபிராட்டியை. துவர் - செந்நிறம். பொய்கைக்கரையில் இயல்பாய் நிகழும் அன்னத்தின் நடையினையும் குவளையும் குமுதமும் மலர்தலையும் இராமன்பால் இரங்கி முறையே சீதையின் நடையினையும் கண்களையும் அதரத்தையும் அவை காட்டியவாகக் குறித்தது என்றது தற்குறிப்பேற்ற அணிதழுவியதாகும். (17)

3828. பெய்க லன்களி னிலங்கொளி
மருங்கொடு பிறழ
வைக லும்புனல் குடைபவர்
வானர மகளிர்
செய்கை யன்னங்க ளேந்திய
சேடிய ரென்னப்
பொய்கை யன்னங்க ளேந்திய
பூங்கொம்பர் பொலிவ.

பெய் கலன்களின் இலங்கு ஒளி மருங்கொடு பிறழ,
வைகலும் புனல் குடைபவர் வான் அரமகளிர்,
செய்கை அன்னங்கள் ஏந்திய சேடியர் என்னப்
பொய்கை அன்னங்கள் ஏந்திய பூங்கொம்பர் பொலிவ.

பொ :—அப் பம்பைப் பொய்கையின்கண் தேவமாதர், தாம் அணிந்துகொண்ட அணிகலன்களின் மிக்க ஒளியானது, தம் வடிவின் ஒளியொடு விளங்க நாள்தோறும் நீராடுபவராவர்; அன்னங்களைத் தாங்கிய (கரையிலுள்ள பொழிலின்) பூங்கொம்புகள், (இளமகளிர் விளையாடுதற்காக இயற்றிய) செயற்கை யன்னங்களைத் தாங்கிய அவ்வானர மகளிரின் சேடியர்போல் விளங்குவன.

கு :—பெய்தல் - அணிதல். கலன்கள் - அணிகள். மருங்கு - வடிவு; வடிவு ஆகுபெயராய் வடிவின் ஒளியினை யுணர்த்தியது. 'பொன்னனூர் மருங்குபோன்று' (சீவகசிந்தாமணி 1195) என்பதனுள், மருங்கு என்பதற்கு வடிவு என்று நச்சினார்க்கினியர் பொருளுரைத்தமையும் நோக்கத்தகும். பிறழ்தல் - விளங்குதல், புனல் குடைதல் - நீராடுதல். செய்கையன்னம் - செயற்கையன்னம். சேடியர் - பணிப்பெண்டிர். (அப்) பொய்கை(யின்கண்) வானரமகளிர் பெய்கலன்களின் இலங்கொளி மருங்கொடு பிறழ வைகலும் புனல் குடைபவர் (ஆவர்) அன்னங்களேந்திய பூங்கொம்பு, செய்கையன்னங்களேந்திய சேடியர் என்னப் பொலிவ என இயையும். பம்பைப் பொய்கையின் கரையிலுள்ள பொழிலின் அன்னங்களைத் தாங்கிய பூங்கொம்புகள், விளையாடுதற்குரிய செயற்கை யன்னங்களைத் தாங்கிய சேடியர் போல விளங்க, நாள்தோறும் அப்பொய்கையின்கண் வானர மகளிர் தம் அணிகலன்களின் ஒளியும் வடிவின் ஒளியும் விளங்க நீராடுவர் என்றவாறு. செயற்கை யன்னம் என்பதற்கு '(சமைக்கப்பட்ட) சித்திரான்னங்கள்' என்று பொருள் கொள்ளலும் ஆம். வானர மகளிர் வைகலும் புனல் குடைபவர் என்றதனால் பம்பையின் பெருமை கூறியவாறு. (18)

3829. ஏலு நீர்நிழ லிடையிடை
யெறித்தலிற் படிகம்
போலும் வார்புனற் புகுந்துள
வாமெனப் பொங்கி
யாலு மீன்கண மஞ்சின
வலமர வஞ்சிக்
கூல மாமரத் திருஞ்சிறை
புலர்த்துவ குரண்டம்.

ஏலும் நீர் நிழல் இடையிடை எறித்தலின், படிகம்
போலும் வார்புனல் புகுந்துளவாம் எனப் பொங்கி,
ஆலும் மீன் கணம் அஞ்சின அலமர, வஞ்சிக்
கூல மா மரத்து இருஞ்சிறை புலர்த்துவ குரண்டம்.

பொ :—கொக்குகள், மிக்க (பம்பை) நீரின்கண் இடையிடை அவற்றின் நிழல் விளங்குதலால், படிகம் போன்ற நிறைந்த நீரையுடைய பொய்கையுள் அவை புகுந்தன என்று மிக்கு அசையும் மீன் கூட்டம் அஞ்சும்படி, கரையிலுள்ள பெரிய வஞ்சி மரத்திடைத் தம்முடைய பெரிய இறகுகளைப் புலர்த்துவன வாயின.

கு :—ஏலுதல் - மிகுதல். நிழல் - கொக்கின்நிழல். எறித்தல் - விளங்குதல். தெளிவுடைமை பற்றிப் பளிங்குபோலும் புனல் என்றார். பொங்குதல் - மிகுதல். ஆலுதல் - அசைதல். அலமரல் - கலக்கம். கூலம் - கரை. வஞ்சி - மரவகையுள் ஒன்று; மருதநிலத்துக்குரியது. (19)

3830. அங்கொர் பாகத்தி லஞ்சன மணிநிழ லடையப்
பங்கு பெற்றதிற் பதுமரா கத்தொளி பாயக்
கங்கு லும்பக லும்மெனப் பொலிவெய்து கரைய
மங்கை மார்தட முலையெனப் பொலிவன வாளம்.

அங்கு ஒர் பாகத்தில், அஞ்சன மணிநிழல் அடையப்,
பங்கு பெற்று அதில், பதுமராகத்து ஒளி பாயக்,
கங்குலும் பகலும் எனப் பொலிவு எய்து கரைய;
மங்கைமார் தடமுலை எனப் பொலிவன வாளம்.

பொ :—ஒரு பக்கத்தே நீலமணியின் ஒளி தவழ்தலாலும் அதன் மற்றொரு பகுதியில் செம்மணியின் ஒளி பரவுதலாலும், இரவும் பகலும் போல விளங்குகின்ற அப்பொய்கையின் கரையின்கண் உள்ளனவாகிய சக்கரவாளங்கள், மகளிர் தனங்கள் போல் விளங்குவனவாயின.

கு :—அஞ்சனமணி - நீலமணி. பதுமராகம் - செம்மணி. கங்குல் - இரவு. கரைய வாளம் என இயைக்க. வாளம் - சக்கரவாளம் என்னும் பறவை; பெயரின் ஒரு பகுதியால் முழுப்பெயரும் சுட்டியவாறு; இப்பறவையுள் ஆணும் பெண்ணும் பகலில் இணைந்து இரவில் இரைதேடப் பிரிதல் இயல்பென்பர். மகளிர் தனத்துக்குச் சக்கரவாளத்தை உவமை கூறுதல் கவிமரபு. உவமையாகிய வாளத்தை உவமேயமாக்கியது எதிர்நிலை என்னும் அணி பற்றி.

பம்பைப் பொய்கைக் கரையின் ஒரு பக்கத்தே நீலமணியின் ஒளி தவழ்தலாலும் மற்றொரு பக்கத்தே செம்மணியின் ஒளிபடர்தலாலும் இரவும் பகலும் ஓரிடத்தை ஒருசேர நிகழ்ந்தனைய காட்சி உண்டாக, சக்கரவாளங்கள் இரவென்று இரை தேடப் பிரியாமலும் பகலென்று தம்முள் இணையாமலும் தங்குவனவாயின என்றவாறு. (20)

3831. வலிந டத்திய வாளென
வாளைகள் பாய
ஒலி நடத்திய திரைதொறு
முகள்வன நீர்நாய்
கலிந டக்கழைக் கண்ணுள
ரெனநடங் கவினப்
பொலிவு டைத்தெனத் தேரைகள்
புகழ்வன போலும்.

வலி நடத்திய வாள் என வாளைகள் பாய,
ஒலி நடத்திய திரைதொறும் உகள்வன நீர்நாய்,
கலிநடக் கழைக் கண்ணுளர் என நடம் கவினப்
பொலிவு உடைத்து எனத் தேரைகள் புகழ்வன போலும்.

பொ :—ஆற்றலால் செலுத்திய வாள்களைப் போல வாளைகள் பாய, ஒலியை எழச் செய்துவரும் அலைதோறும் பிறழ்வனவாகிய நீர்நாய்கள் ஆரவாரத்தோடு கூடிய கூத்தினை மேற்கொண்ட கழைக்கூத்தாடிகள்போல் ஆட, (தேரைகள் ஒலித்தல்) அந்நடம் கண்டு, 'அழகாயுள்ளது' என்று புகழ்வனபோலும்.

கு :—வலி - ஆற்றல். நடத்துதல் - செலுத்துதல்=வீசுதல். திரை - அலை. உகளுதல் - பிறழுதல். கலி - ஆரவாரம். நடம் - கூத்து. கழைக் கண்ணுளர் - கழைக் கூத்தாடிகள். தேரை - தவளை. வாளை பாய்தலுக்கு வாள்வீச்சு உவமையாதல், 'வாளெனவாளை பாய்வன' (1180) 'வாளென வாளைபாய' (2583) என்று சீவக சிந்தாமணியுள்ளும், 'வாளை வாளிற் பிறழ' (390) என நற்றிணையுள்ளும் பயின்றமையால் அறியலாம். வாளைகள் பாய்தலும் நீர்நாய்கள் அலைதொறும் உகளுதலும் தேரைகள் ஒலித்தலும் இயல்பாக உடைய பொய்கையைக் கழைக்கூத்து நிகழும் இடமாக வருணித்தவாறு. அலை கயிற்றுவடமாகவும், அலையில் உகளும் நீர் நாய் கயிற்றில் நடக்கும் கழைக்கூத்தியாகவும், வாளைகள் பாய்தல் கழைக்கூத்தி கைக்கொண்டு வீசும் வாளின் வீச்சாகவும்

தேரையின் ஒலி கூத்துக் காண்போரின் பாராட்டுரையாகவும் கொள்ளத்தகும். (21)

## இராமன் சீதையை நினைந்து புலம்புதல் 3832-3843

3832. அன்ன தாகிய வகன்புனற்
பொய்கையை யணுகிக்
கன்னி யன்னமுங் கமலமு
முதலிய கண்டான்
றன்னி னீங்கிய தளிரியற்
குருகினன் றளர்வா
னுன்னு நல்லுணர் வொடுங்கிடப்
புலம்புத லுற்ருன்.

அன்னது ஆகிய அகன் புனல் பொய்கையை அணுகிக்
கன்னி அன்னமும் கமலமும் முதலிய கண்டான்,
தன்னின் நீங்கிய தளிர் இயற்கு உருகினன் தளர்வான்,
உன்னும் நல் உணர்வு ஒடுங்கிடப் புலம்புதல் உற்ருன்.

பொ :—அத்தன்மையுடையதான பெரிய நீர் நிறைந்த பம்பைப் பொய்கையை நெருங்கி, அங்கே இளவன்னம் தாமரை மலர் முதலியவற்றைக் கண்ட இராமன், தன்னைவிட்டுப் பிரிந்தவளான தளிர் போலும் மென்மைத் தன்மையுடைய சீதையின் பொருட்டு மனம் அழிந்து தளர்பவனுகி, நினைதற்குரிய நல்லறிவு குறையப் புலம்புவானுயினன்.

கு :—கன்னியன்னம் - இளவன்னம். அன்னத்தைக் கண்டு சீதையின் நடையழகினையும், கமலத்தைக்கண்டு சீதையின் முகப் பொலிவினையும் நினைந்து உருகுவானுயினன் என்றவாறு. அன்னமும் கமலமும் கொண்டு சீதையின் அடியழகும் முகப்பொலிவும் கூறி, அவளுடைய பிறவுறுப்புக்களை நினைப்பிக்கும் குவளை, கொடி ஆகிய வற்றை முதலிய என்றதனுற் கொள்ள வைத்தார். (22)

3833. வரியார் மணிக்கால் வாளமே
★ மடவன் னங்கா ளெனைநீங்கத்
தரியா ணடந்தா ளில்லளேற்
றளர்ந்த போதுந் தகைவேயோ

வெரியா நின்ற வாருயிருக்
கிரங்கி ஞலீ திசையன்றே
பிரியா திருந்தீ ரொருமாற்றம்
பேசிற் பூசல் பெரிதாமோ.

வரி ஆர் மணிக் கால் வாளமே!
மட அன்னங்காள் எனை நீங்கத்
தரியாள் நடந்தாள்; இல்லளேல்,
தளர்ந்த போதுந் தகைவேயோ ?
எரியா நின்ற ஆர் உயிருக்கு
இரங்கினல், ஈது இசையன்றே !
பிரியாது இருந்தீர் ஒரு மாற்றம்
பேசில் பூசல் பெரிதாமோ ?

பொ :—கீற்றுக்கள் பொருந்திய அழகிய கால்களையுடைய சக்கர வாளமே! இளவன்னங்களே! என்னைப் பிரிந்திருக்க ஆற்ருதவளாகிய சீதை என்னைவிட்டு நீங்கிவிட்டாள் ; அவள் என்பால் இல்லையேல் அவள் பிரிவால் நான் தளர்ந்தபோதும், (நீங்கள் என்மீது இரங்குதற்குத்) தடையுண்டோ? வெதும்புகின்ற என் அரிய உயிர்க்கு நீவிர் இரங்கினல் உங்களுக்குப் புகழன்றே? சேவலும் பெடையுமாய்க் கூடியிருக்கின்ற நீங்கள் ஒரு வார்த்தை சொன்னல் அதனல் வருத்தம் மிகுமோ ?

கு :—வரி - கீற்று. மணி - அழகு. வாளம் - சக்கரவாளம். இசை - புகழ். மாற்றம் - சொல். பூசல் - துன்பம். 'கண்ணுறுபூசல் கைகளைந் தாங்கே' (34) என்பது கலித்தொகை. (23)

3834. வண்ண நறுந்தா மரைமலரும்
வாசக் குவளை நாண்மலரும்
புண்ணி னெரியு மொருநெஞ்சம்
பொதியு மருந்திற் றரும்பொய்காய்
கண்ணு முகமுங் காட்டுவாய்
வடிவு மொருகாற் காட்டாயோ
வொண்ணு மென்னி னஃதுதவா
துலோவி ஞரு முயர்ந்தாரோ.

வண்ண நறும் தாமரை மலரும்
வாசக் குவளை நாண் மலரும்
புண்ணின் எரியும் ஒரு நெஞ்சம்
பொதியும் மருந்தின் தரும் பொய்காய் !
கண்ணும் முகமும் காட்டுவாய் ;
வடிவும் ஒருகால் காட்டாயோ ?
ஒண்ணும் என்னின் அஃது உதவாது
உலோவினரும் உயர்ந்தாரோ ?

பொ :—(சீதையைப் பிரிந்தமையால் உளதான) புண்ணால் காந்து கின்ற என் மார்பில் வைத்துக் கட்டும் மருந்தைப்போல அழகிய நல்ல தாமரை மலரையும், நறுமணம் வாய்ந்த அப்பொழுது அலர்ந்த குவளைமலரையும் தரும் பொய்கையே ! நீ உன் செயலால் சீதையின் முகமும் கண்ணுமாகியவற்றைக் காட்டுவாய் ; அவளுடைய வடிவத் தையும் ஒருமுறை (யான் காணக்) காட்டலாகாதோ ? தம்மால் இயலு மாயின் அதனைக் கொடாது உலோபம் செய்தவரும் உயர்ந்தோரா வரோ ? ஆகார்.

கு :—பொதிதல் - கட்டுதல். முகமும் கண்ணும் காட்டுவாய் என இயைக்க. தாமரைமலர் குவளை நாண்மலர் என்று உவமானப் பொருள்களை எண்ணியதற்கேற்ப உவமேயப் பொருள்களை முகமும் கண்ணும் என எண்ணாது, கண்ணும் முகமும் என எண்ணியது எதிர் நிரனிறை. முகமும் கண்ணும் காட்டிய நீ வடிவும் காட்டவல்லையா யிருந்தும் அது காட்டாமையால் சிறுமையெய்தினை என்றவாறு. (24)

3835. விரிந்த குவளை சேதாம்பல்
விரைமென் கமலங் கொடிவள்ளை
தரங்க நெருங்கு வராலாமை
யென்றித் தகைய தமைநோக்கி
மருந்தி னனையா ளவயவங்க
ளவைநிற் கண்டேன் வல்லரக்க
னருந்தி யகல்வான் சிந்தினவோ
வாவி யுரைத்தி யாமன்றே.

விரிந்த குவளை சேதாம்பல்
விரைமென் கமலம் கொடிவள்ளை
தரங்கம் நெருங்கு வரால் ஆமை
என்று இத்தகையதமை நோக்கி,

மருந்தின் அனையாள் அவயவங்கள்
அவை நிற்கண்டேன்; வல் அரக்கன்
அருந்தி அகல்வான் சிந்தினவோ?
ஆவி! உரைத்தி ஆம் அன்று ஏ.

பொ:—மலர்ந்த குவளையும் செவ்விய ஆம்பலும் நறுமணமுடைய மெல்லிய தாமரையும் வள்ளைக் கொடியும் அலைகளும் செறிந்த வரால் மீன்களும் ஆமைகளும் ஆகிய இத்தன்மையுடையவற்றைநோக்கி, ஆவி! அமுது போன்றவளான சீதையின் உறுப்புக்களாகிய அவற்றை உன்னிடம் கண்டேன்; அவை அச் சீதையை உண்டு செல்பவனான கொடிய இராவணனால் சிந்தப்பட்டனவோ? (அவை) உன்பால் வந்தவாறு கூறுவாயாக.

கு:—விரிந்த என்பதனை ஆம்பல் கமலம் என்பவற்றோடும் ஒட்டுக. வள்ளைக்கொடி என மாறுக; கொடியும் வள்ளையும் என இரண்டாகக் கொள்ளுதலும் ஆம். அவ்வாறு கொள்ளுங்கால் கொடியால் இடையும், வள்ளையால் காதும் குறிக்கப்படும். தரங்கம் - அலை. வரால் - ஒருவகை மீன். மருந்து - அமுதம். ஆவி - பொய்கை. ஆம் அன்று ஏ என்பவை அசைநிலைகள். மகளிர் உறுப்புக்களுள், கண்ணுக்குக் குவளையும், வாய்க்கு ஆம்பலும், முகத்துக்குக் கமலமும், காதுக்கு வள்ளைக் கொடியும், இடைக்குக் கொடியும், வயிற்று மடிப்புக்கு அலையும், கணைக்காலுக்கு வராலும், புறவடிக்கு ஆமையும் உவமமாவன. தரங்க நெருங்கு வரால் என்பதற்கு அலைகளிற் செறிந்து பயிலும் வரால் என்று பொருள் கொள்ளலும் ஆம். சீதையின் உறுப்புக்களுக்கு உவமமாகும் பொருள்களைக் கண்ட அளவில் அவளுறுப்புக்களைக் கண்டதாகவே கொண்டு, ‘மருந்தினனையாள் அவயவங்களவை நிற்கண்டேன்’ என்றான். (25)

3836. ஓடா நின்ற களிமயிலே
சாயற் கொதுங்கி யுள்ளழிந்து
கூடா தாரிற் றிரிகின்ற
நீயு மாகங் குளிர்ந்தாயோ
தேடா நின்ற வென்னுயிரைத்
தெரியக் கண்டாய் சிந்தையுவந்
தாடா நின்றா யாயிரங்க
ணுடையாய்க் கொளிக்கு மாறுண்டோ.

ஓடா நின்ற களி மயிலே!
சாயற்கு ஒதுங்கி, உள் அழிந்து
கூடாதாரில் திரிகின்ற
நீயும் ஆகம் குளிர்ந்தாயோ!
தேடா நின்ற என் உயிரைத்
தெரியக் கண்டாய்! சிந்தை உவந்து
ஆடா நின்ருய், ஆயிரம் கண்
உடையாய்க்கு ஒளிக்குமாறு உண்டோ?

பொ :—என்னைக்கண்டு விலகியோடுகின்ற செருக்குடைய மயிலே! சீதையின் சாயலுக்குத் தோற்று மனமழிந்து பகைவரைப் போலத் திரிகின்ற நீயும் (இப்போது சீதை மறைந்தமையால்) மனங் குளிர்ந்தனையோ? என்ருல் தேடப்படுபவளும், என் உயிர்போல் பவளுமான அச்சீதையை நீ நன்கு கண்டனை; அதனுல் மனமகிழ்ந்து ஆடுகின்ருய்! ஆயிரங்கண் உடைய உனக்கு (த் தெரியாமல்) மறையும் வழியும் உண்டோ? இல்லை.

கு :—ஒதுங்குதல் - தோல்வியுறுதல். உள் - மனம். கூடாதார் - பகைவர். ஆகம் - அகம் = மனம். அகம் ஆகம் என்ருனது விகாரம். ஆயிரம் இங்கே பன்மைப் பொருளிற் பயின்றது. கண் என்றது பீலிக் கண்களை. உள்ளங்குளிர்ந்தாயோ? என்று வினவியவன், குளிர்தற்குக் காரணமும், அதன் விளைவும் கூறுவானய், கண்டாய், ஆடாநின்ருய் என்ருன். ஆயிரம் கண் உடையாய்க்கு ஒளிக்கு மாறுண்டோ? என்றது, நீ அளவற்ற கண்களையுடையை; ஆதலால் உன் கண்களுக்குப் புலப்படாதபடி மறையுமாறில்லை என்றவாறு. ஒளித்தல் - மறைதல். (26)

3837. அடையீ ரெனினு மொருமாற்ற
மறிந்த துரையீ ரன்னத்தின்
பெடையீ ரொன்றும் பேசீரோ
பிழையா தேற்குப் பிழைத்தீரோ
நடைநீ ரழியச் செய்தாரே
நடுவி லாதார் நனியவரோ
டுடையீர் பகைதா னுமைநோக்கி
யுவக்கின் றேனை முனிவீரோ.

அடையீர் எனினும் ஒரு மாற்றம்
அறிந்தது உரையீர் அன்னத்தின்
பெடையீர்! ஒன்றும் பேசீரோ?
பிழையா தேற்குப் பிழைத்தீரோ!
நடைநீர் அழியச் செய்தாரே
நடு இலாதார்; நனி அவரோடு
உடையீர் பகைதான், உமை நோக்கி
உவக்கின்றேனை முனிவீரோ.

பொ:—அன்னப் பேடைகளே! நீங்கள் என்பால் வரமாட்டீரா யினும், சீதையைப்பற்றி நீங்கள் அறிந்ததொரு வார்த்தையையா யினும் சொல்லுங்கள்; என்னிடம் ஒன்றும் சொல்லமாட்டீர்களோ? உங்கள்பால் தவறிழையாத என்னிடமும் தவறு செய்வீர்களோ? இடையில்லாதவராகிய சீதாபிராட்டியாரே நீர் நடையழகில் தோல்வி யுறும்படி செய்தார்; அவரோடுதான் நீங்கள் மிக்க பகையுடையீர்; உம்மைநோக்கி மகிழ்கின்ற என்னையும் வெறுப்பீரோ?

கு:—மாற்றம் - சொல். பிழைத்தல் - தவறு செய்தல். நடை என்றது நடையழகினை. நடு - இடை. நடுவிலாதார் என்பது நடு நிலையற்றவர் என்றும் பொருள்பட நின்றது. உவத்தல் - மகிழ்தல்.

(27)

3838. பொன்பாற் பொருவும் விரையல்லி
புல்லிப் பொலிந்த பொலந்தாது
தன்பாற் றழுவுங் குழல்வண்டு
தமிழ்ப்பாட் டிசைக்குந் தாமரையே
யென்பா லில்லை யப்பாலோ
விருப்பா ரல்லர் விருப்புடைய
வுன்பா லில்லை யென்றபோ
தொளிப்பா ரோடு முறவுண்டோ.

பொன் பால் பொருவும் விரை அல்லி
புல்லிப் பொலிந்த பொலம் தாது
தன்பால் தழுவும் குழல் வண்டு
தமிழ்ப் பாட்டு இசைக்கும் தாமரையே!

என்பால் இல்லை ; அப்பாலோ
இருப்பாரல்லர் ; விருப்புடைய
உன்பால் இல்லை என்றபோது
ஒளிப்பாரோடும் உறவு உண்டோ ?

பொ :—பொன்போலும் நிறமுடைய—நறுமணம் உள்ள—அகவிதழோடு கூடிய—அழகிய மகரந்தத்தைத் தன்னிடத்தே கொண்ட—குழல்போலும் இசையைச் செய்கின்ற வண்டுகள் (தங்கி) இனிய பாடலைப் பாடுகின்ற—தாமரையே ! சீதையார் என்னிடம் இல்லை ; வேறிடத்துத் தங்குபவரல்லர் ; ஆசையுடைய உன்னிடத்தும் அவர் இல்லை என்றால், மறைப்பவரோடும் உறவுண்டோ ? (உறவில்லை.)

கு :—பொன்பால் - பொன்னின்றன்மை = பொன்னிறம். பொருவுதல் - ஒத்தல். விரை - நறுமணம். அல்லி - அகவிதழ். பொலம் - அழகு. தமிழ் - இனிமை. ' தமிழ்தழிய சாயலவர் ' (சீவகசிந்தாமணி. 2026) என்பதனுள் தமிழ் இனிமை என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். சீதையை உன்னிடம் வைத்துக்கொண்டு மறைத்தியாதலால் நீ விரோதியாகிறாய் என்றவாறு. (28)

3839. ஒருவா சகத்தை வாய்திறந்திட்
டுதவாப் பொய்கைக் குவிந்தொடுங்குந்
திருவா யனைய சேதாம்பற்
கயலே கிடந்த செங்கிடையே
வெருவா தெதிர்நின் றமுதுயிர்த்து
விளங்குஞ் செவ்விக் கொழுங்கனிவாய்
தருவா யவ்வாய் முகிழ்நகையுந்
தண்ணென் மொழியுந் தாராயோ.

ஒரு வாசகத்தை வாய்திறந்திட்டு
உதவாப் பொய்கைக் குவிந்து ஒடுங்கும்
திருவாய் அனைய சேதாம்பற்கு
அயலே கிடந்த செங்கிடையே !
வெருவாது எதிர் நின்று அமுது உயிர்த்து
விளங்கும் செவ்விக் கொழுங்கனிவாய்
தருவாய், அவ்வாய் முகிழ் நகையும்
தண் என் மொழியும் தாராயோ.

பொ :—வாய்திறந்து ஒரு வார்த்தையும் சொல்லாததும் பொய்கையுள் குவிந்து கிடப்பதும் சீதையின் வாய் போன்றதுமான செவ்வாம்பலுக்குப் பக்கத்திற் கிடந்த நெட்டியே! சிறிதும் அஞ்சாது என் எதிர்நின்று, அமுதொழுகுகின்ற அழகிய செழித்த வீழிக்கனியை ஒத்த அச்சீதையின் வாயைக் காட்டுகிருய். அவ்வாயின்கண் தோன்றுகின்ற புன்சிரிப்பினையும் குளிர்ந்த சொல்லினையும் தாராயோ?

கு :—வாசகம் - சொல். வாசகத்தையும் என உம்மை விரிக்க. ஒரு வாசகத்தை வாய்திறந்திட்டுதவாச் சேதாம்பல், பொய்கைக் குவிந்தொடுங்கும் சேதாம்பல், திருவாய் அனைய சேதாம்பல் என்க. கிடந்தவாறே ஒரு வாசகத்தை வாய்திறந்திட்டுதவாப் பொய்கை என இயைத்தலும் ஆம். திறந்திட்டு - திறந்து; கிடை - நெட்டி. வீழி - விழுதிக்கனி. சீதையின் வாய்க்குத் தோற்று ஒடுங்கிக் கிடந்தகிடை சீதை மறைவால் வெளிப்பட்டு எதிர்நின்றதென்பான், வெருவாது எதிர்நின்று என்ருன். வீழிக்கனியும் கிடையும் மகளிர் இதழ்க்கு உவமமாவன. சீதையின் வாய்போன்று தோன்றுதலால் மட்டும் பயனில்லை; அவ்வாயின் நகையும் மொழியும் தரவேண்டும் என்றவாறு. முகிழ்த்தல் - தோன்றுதல். (29)

3840. அலக்க ணுற்றேற் குற்றுதவற்
கடைவுண் டன்ருே கொடிவள்ளாய்
மலர்க்கொம் பனைய மடச்சீதை
காதே மற்ருேன் றல்லையால்
பொலக்குண் டலமுங் கொடுங்குழையும்
புனைதாழ் முத்தின் பொற்ருேடும்
விலக்கி வந்தாய் காட்டாயோ
வின்னும் பூசல் விரும்புதியோ.

அலக்கண் உற்றேற்கு உற்று உதவற்கு
அடைவு உண்டன்ருே! கொடிவள்ளாய்!
மலர்க் கொம்பு அனைய மடச் சீதை
காதே, மற்ருேன்று அல்லை; ஆல்
பொலக் குண்டலமும் கொடுங்குழையும்
புனைதாழ் முத்தின் பொன்தோடும்
விலக்கி வந்தாய் காட்டாயோ?
இன்னும் பூசல் விரும்புதியோ?

பொ :—வள்ளைக்கொடியே! நீ பூங்கொம்புபோல்வாளாகிய சீதையின் காதே யாதி; பிறிதொன்றில்லை; ஆதலால், (சீதை பிரிந்தமையால்) துன்பம் அடைந்த என்பால் நெருங்கி உதவுவதற்கு உனக்கு இயைபு உண்டு; பொன்னுலான குண்டலமும் வளைந்த காதணியும் அழகிய தாழ்ந்த முத்துக்கள் பதித்த பொன் தோடுகளும் நீக்கி வந்தாய்; அவற்றைக் காட்டுதி; காட்டாது மேலும் பகையினை விரும்புவாயோ ? (விரும்பலாகாது.)

கு :—அலக்கண் - துன்பம்; அது சீதையைப் பிரிந்தமையால் உண்டானது; அடைவு - இயைபு. பொலம் - பொன். குண்டலம் குழைதோடு என்பவை மகளிர் காதணிகள். பூசல் - பகை. குழை - ஓலைச்சுருள் வடிவமான காதணி. (30)

3841. பஞ்சு பூத்த விரற்பதுமம்
பவளம் பூத்த வடியாளென்
நெஞ்சு பூத்த தாமரையி
னிலையம் பூத்தா ணிறம்பூத்த
மஞ்சு பூத்த மலர்பூத்த
குழலாள் கண்போன் மணிக்குவளாய்
நஞ்சு பூத்த தாமன்ன
நகையா லென்னை நலிவாயோ.

பஞ்சு பூத்த விரற் பதுமம்
பவளம் பூத்த அடியாள் என்
நெஞ்சு பூத்த தாமரையின்
நிலையம் பூத்தாள், நிறம் பூத்த
மஞ்சு பூத்த மலர் பூத்த
குழலாள் கண்போல் மணிக் குவளாய்!
நஞ்சு பூத்ததாம் அன்ன
நகையால் என்னை நலிவாயோ.

பொ :—செம்பஞ்சுக் குழம்பாற் பொலிவினையுடைய விரல்களால் தாமரை பவளத்தைத் தோற்றுவித்தாலன்ன அடியினையுடையவளும், என் மனமாகிய மலர்ந்த தாமரைப் பூவில் எப்பொழுதும் விளங்குபவளும், நிறத்தால் விளங்கிய மேகம்போன்ற பூக்களையணிந்த கூந்தலையுடையவளுமாகிய சீதையின் கண்ணையொத்த அழகிய நீலமே! நஞ்சு தோன்றினாற்போன்ற நகையினால் என்னை வருத்துதியோ ? (வருத்தலாகாது)

கு :—பஞ்சு - செம்பஞ்சுக்குழம்பு. பூத்தல் என்ற சொல் பலமுறை பயின்றமையால் இச்செய்யுள், சொற்பின்வருநிலையணி தழுவிய தாகும். பூத்தல் என்பது முறையே பொலிவுடையதாதல், தோற்று தல், மலர்தல், விளங்குதல் என்னும் பொருள்களிற் பயின்றது. சீதா பிராட்டியின் திருவடிகள் தாமரை மலராகவும், செம்பஞ்சூட்டிய அவ் வடிகளின் விரல்கள் பதுமம்பூத்த பவளமாகவும் கொள்ளத்தகும். 'பாற்கடற் பிறந்த செய்ய பவளத்தைப் பஞ்சியூட்டி மேற்பட மதியஞ் சூட்டி விரகுற நிரைத்த செய்ய - காற்றகை விரல்கள்' (நாடவிட்ட. 33), 'பஞ்சியூட்டி பரட்டிசை கிண்கிணிப்பதுமச், செஞ்செவிச்செழும் பவளத்தின் கொழுஞ்சுடர்' (ஊர்தேடு. 4) என்பனவும் இங்கு நோக் கத்தகும். அடியாள், பூத்தாள் குழலாள் ஆன சீதையின் கண்போன் மணிக்குவளாய் என்க. நகை என்பது சிரிப்பு, மலர்ச்சி என்னும் இரு பொருளும் கொள்ள நின்றது. நலிதல் - வருத்துதல். (31)

3842. என்ற யாவுயிர்க் கின்றவ னேடவிழ்
★ கொன்றை யாவிப் புறத்திவை கூறியான்
பொன்ற யாதும் புகல்கிலை போலுமால்
வன்ற யாவிலி யென்று வருந்தினன்.

என்று அயாவுயிர்க்கின்றவன், ஏடு அவிழ்
கொன்றை ஆவிப் புறத்து இவை கூறி, யான்
பொன்ற யாதும் புகல்கிலை போலும் ஆல்
வன் தயா இலி என்று வருந்தினன்.

பொ :—என்று, நெட்டுயிர்ப்புக் கொள்பவனை இராமன், இதழ் விரிந்த கொன்றை (தங்கிய கரை) யினையுடைய பம்பைப் பொய்கை யின் பக்கம் நோக்கி இவற்றைக்கூறி, 'யான் இறந்தொழியும் நிலையினையடைவும், ஒன்றும் கூறுகின்றுயல்லை; ஆதலின் நீ வலிய அருளற்ற கொடியை; என்று கூறி வருந்துவானாயினன்.

கு :—அயாவுயிர்த்தல் - நெட்டுயிர்ப்புக்கொள்ளல். ஏடு - இதழ். அவிழ்தல் - விரிதல். ஆவி - பொய்கை. பொன்றுதல் - சாதல். பொன்றவும் என உம்மை விரிக்க. போலும் உரையசை. தயா - தயை; அருள். 'தயாமுதல்' (2518) என்றார் முன்னும். (32)

3843. வார ளித்தழை மாப்பிடி வாயிடைக்
கார ளிக்கலு ழிக்கருங் கைம்மலை

நீர ளிப்பது நோக்கின னின்றனன்
பேர ளிக்குப் பிறந்தவில் லாயினான்.

வார் அளித் தழை மாப் பிடி வாயிடைக்
கார் அளிக் கலுழிக் கருங்கைம்மலை
நீர் அளிப்பது நோக்கினன் நின்றனன்
பேர் அளிக்குப் பிறந்த இல் ஆயினான்.

பொ :—பெரிய கருணைக்குப் பிறப்பிடமாக விளங்கும் இராமன், கரிய வண்டுகள் மொய்க்கும் மதப் பெருக்கினையும் பெரிய கையினையும் உடைய களிற்றியானை, நீண்ட குளிர்ந்த தழைகளை உண்ணுகின்ற கரிய பிடியின் வாயின்கண், நீரை (முகந்து) கொடுப்பதை நோக்கி (வருந்தி) நின்றான்.

கு :—வார் - நீட்சி. அளி - தன்மை. தழை - குழை. மாப் பிடி - பெரிய பிடி ; கரிய பிடி எனலும் ஆம். கார் - கருமை. அளி - வண்டு. கலுழி - மதப்பெருக்கு. கருங்கை - பெரியகை, கைம்மலை - யானை. முன்னே பிடி கூறப்பட்டமையின், கைம்மலை யென்றது களிற்றி யானையினை. அளித்தல் - கொடுத்தல் ; அது ஊட்டுதலைக் குறித்தது. பேர் அளி - பெருங் கருணை. அளிக்குப் பிறந்த இல்லாயினான் என்றது இராமனை. அளிக்குப் பிறந்த இல்லாயினான் கருங் கைம்மலை பிடிவாயிடை நீரளிப்பது நோக்கினன் நின்றனன் என்க. மதமயக்கமுடைய களிறும் தன் பிடி வருந்தாதவாறு நீரூட்டிப் புரப்பது கண்ட இராமன், அறிவும் ஆற்றலும் அமைந்த தான் தன் மனையாளான சீதையை வருந்தாது புரக்க இயலாமை எண்ணி வருந்தி நின்றான் என்றவாறு. இங்கே, "அம்பலத்தான், சேய்கண்டனையன் சென்றாங்கோ ரலவன்றன் சீர்ப்பெடையின் - வாய் வண்டனையதோர் நாவற்கனி நனிநல்கக்கண்டு - பேய்கண்டனையதொன்றாகி நின்றானப் பெருந்தகையே" (84) என்னும் திருக்கோவையார்பாடலும் நோக்கத்தகும். (33)

## இலக்குவன் இராமனை மாலைக்கடன் இறுக்குமாறு தூண்டுதல்

3844. ஆண்டவ் வள்ளலை யன்பெனு மாரணி
பூண்ட தம்பி பொழுது கழிந்ததா
லீண்டி ரும்புன ரேய்ந்துன் னிசையென
நீண்ட வன்கழ ரூழ்நெடி யோயென்றான்.

ஆண்டு அவ் வள்ளலை அன்பு எனும் ஆர் அணி
பூண்ட தம்பி பொழுது கழிந்ததால்
ஈண்டு இரும்புனல் தோய்ந்து உன் இசை என
நீண்டவன் கழல் தாழ் நெடியோய் என்ருன்.

பொ :—அப்பொழுது பெருங் கொடையாளியான அவ்விராமனை, அன்பென்னும் நிறைந்த அணிகலன் அணிந்த தம்பியாகிய இலக்குவன், 'பெரியோய்! பொழுது போயிற்று, இப்பொழுது நிறைந்த நீருள் முழுகி உன் புகழ்போல நெடியோனுன திருமாலின் அடிகளை வணங்குவாயாக' என்று கூறினுன்.

கு :—ஆண்டு - (இராமன் அவ்வாறு வருந்தி நின்ற) அப்பொழுது. வள்ளல் என்றது இராமனை. ஆர் அணி - நிறைந்த அணிகலன். தம்பி என்றது இலக்குவனை. (34)

## இராமன் நீராடி மாலைக்கடனிறுத்தல் 3845-3847

3845. அரைசு மவ்வழி நின்றரி தேகியத்
திரைசெய் தீர்த்தமுஞ் செய்தவ முண்மையால்
வரைசெய் மும்மத வாரண நாணுற
விரைசெய் பூம்புன லாடலை மேயினுன்.

அரைசும் அவ்வழி நின்று அரிது ஏகி அத்
திரை செய் தீர்த்தமும் செய் தவம் உண்மையால்
வரை செய் மும்முத வாரணம் நாண் உற
விரைசெய் பூம்புனல் ஆடலை மேயினுன்.

பொ :—இராமனும், அங்கு நின்று அரிதாகச் சென்று, அலையெறிகின்ற அப்பம்பைப் பொய்கையும் முன் செய்த தவமுடைமையால், மலைபோன்ற தோற்றத்தினையும், மும்மதங்களையும் உடைய யானையும் நாணும்படி நறுமணம் வாய்ந்த பூக்களையுடைய அதனுள் நீராடலைப் பொருந்தினுன்.

கு :—அரைசு என்றது இராமனை. அரைசு - என்பது அரசு என்பதன் போலி. அத் தீர்த்தம், திரை செய் தீர்த்தம் என்க. திரை - அலை. தீர்த்தம் என்றது பம்பையினை. தீர்த்தமும் என்பதனுள் உம்மை உயர்வு சிறப்புணர நின்றது; தானும் தூய்தாய்த் தன்னிடம் வந்து முழுகினுர்க்கெல்லாம் கடுவினை நீக்கித் தூய்மையும் நல்கும் சிறப்புடையதொன்றென்றவாறு. அத்தகைச் சிறப்புடைய தீர்த்தமும், தன்னிடை எல்லாவுயிர்க்கும் நல்லனவே புரியும் தீர்த்தனுன

இராமன் நீராடும் பேறு பெற்றது; அது முன் செய்த தவப்பயன் என்பது தோன்ற, தீர்த்தமும் செய்தவ முண்மையால், அரைசும் புனலாடலை மேயினன் என்றார். செய் உவமவுருபு; 'வேல் நிரை செய் கண்ணி' (சீவகசிந்தாமணி 2490) என்பது காண்க. (35)

3846. நீத்த நீரி னெடியவன் மூழ்கலுந்
தீத்த காமத் தெறுகதிர்த் தீயினாற்
காய்த்தி ரும்பைக் கருமகக் கம்மியன்
றோய்த்த தண்புன லொத்தது தோயமே.

நீத்த நீரில் நெடியவன் மூழ்கலும்
தீத்த காமத் தெறுகதிர்த் தீயினால்
காய்த்து இரும்பைக் கருமகக் கம்மியன்
தோய்த்த தண் புனல் ஒத்தது தோயமே.

பொ:—நெடியோனான இராமன், பம்பைப் பொய்கையின் வெள்ள நீரில் முழுகின அளவில், அப்பொய்கை நீர், இராமனை வெதுப்பிய காமமாகிய அழிக்கும் இயல்புள்ள விளக்கம் வாய்ந்த நெருப்பினால், கருமானாகிய தொழிலாளி காய்ச்சிய இரும்பைத் தோய்த்த குளிர்ந்த நீரை யொத்துக் கொதித்தது.

கு:—நீத்தம் - வெள்ளம். நெடியவன் என்றது இராமனை. தீத்தல் - தகித்தல். காமத்தீ, தெறு கதிர்த்தீ என்க. காய்த்தல் - காய்ச்சுதல். கருமகன் - கொல்லன். கம்மியன் - தொழிலாளி. கருமகனாகிய கம்மியன் என இருபெயரொட்டாக்குக. இருப்புக் கொல்லர் இரும்பைப் பழுக்கக் காய்ச்சி நீரில் தோய்ப்பது வழக்கு. அவ்வாறு தோய்த்த நீர் சுடுவதுபோல் இராமன் முழுகிய பொய்கை நீரும் கொதித்தது என்றவாறு. (36)

3847. ஆடினா னன்னமா யருமறைகள் பாடினா
★ னீடுநீர் முன்னைநூ னெறிமுறையி னேமிதாள்
சூடினான் முனிவர்தந் தொகுதிசேர் சோலைவாய்
மாடுதான் வைகினா னெரிகதிரும் வைகினான்.

ஆடினான் அன்னமாய் அருமறைகள் பாடினான்,
நீடுநீர் முன்னை நூல் நெறி முறையின் நேமிதாள்,
சூடினான் முனிவர் தம் தொகுதிசேர் சோலைவாய்
மாடுதான் வைகினான்; எரிகதிரும் வைகினான்.

பொ :—அன்னமாகி அரிய வேதங்களை வெளியிட்டருளிய (திருமாலின் அமிசமான) இராமன், பம்பையின் மிக்க நீரில் நீராடி, பழைய வேதங்களிற் கூறிய் நெறியால் முறைப்படத் திருமாலின் திருவடித் தாமரைகளைத் தலைக்கணியாக்கி வணங்கி, முனிவர் கூட்டம் தங்கிய சோலையில் ஒரு பக்கத்தே தங்கினன். வெய்ய கிரணங்களையுடைய சூரியனும் அத்தமித்தான்.

கு :—மது கைடவன் என்னும் அசுரரால் கடலில் மறைக்கப்பட்ட வேதத்தைத் திருமால் அவர்களைக் கொன்று மீட்டு அன்னவுருவில் அவற்றைப் பிரமனுக்கு அறிவித்த வரலாறு 'அன்னமாய் அருமறைகள் பாடினன்' என்பதில் குறிக்கப்பட்டது. இராமன் திருமாலின் அமிசமாதலின் திருமாலின் செயல்கள் இராமன் செயலாகச் சுட்டப்பட்டன. மறைகள் பாடினன் நீராடினன் நேமிதாள் சூடினனாய் முனிவர் தந்தொகுதிசேர் சோலைவாய் மாடு வைகினன் ஆக, கதிரும் வைகினன் என்க. முன்னை நூல் என்றது வேதங்களை. நேமி - திருமால். ஆடினன் சூடினன் என்பவை முற்றெச்சம். தான் - அசை. (37)

## மதி தோன்றுதல்

3848. அந்தியாள் வந்துதா னணுகவங் கணுகுருச்
சந்தமார் கொங்கையா டனிமைதா ஞயகன்
சிந்தியா நொந்துதேய் பொழுதுதெறு சீதநீ
ரிந்துவா னுந்துவா னெரிகதிரி ஞனென.

அந்தியாள் வந்து, தான் அணுக, அங்கு அணுகுருச்
சந்தம் ஆர் கொங்கையாள் தனிமைதான் நாயகன்
சிந்தியா நொந்து தேய்பொழுது தெறு சீத நீர்
இந்து வான் உந்துவான் எரி கதிரினன் என.

பொ :—மாலைக் காலமாகிய பெண் வருதலும் பேரழகு வாய்ந்த தனங்களையுடைய சீதை அங்கே அணுகாமையால் உளதான தனிமையை நினைந்து, தலைவனை இராமன் வருந்தி மெலிகின்ற பொழுது, வருத்துகின்ற குளிர்ந்த தன்மையனை சந்திரன், வெய்ய கிரணமுடைய சூரியனைப்போல வானில் எழுவானாயினன்.

கு :—அந்தியாள் - மாலைக் காலமாகிய பெண் ; வடமொழி முறை பற்றி மாலைக்காலத்தை அந்தியாள் என்றார். 'நாணென்னும் நல்லாள்' (924) என்னும் திருக்குறளும் இங்கு நோக்கத்தகும். சந்தம் - அழகு. தேய்தல்-மெலிதல். தெறுதல் - வருத்துதல். சீதம் -

குளிர்ச்சி. நீர் - தன்மை. இந்து - சந்திரன். உந்துதல் - எழுதல். எரிகதிர் - வெய்யகிரணம். என - உவமவுருபு. (38)

## இரவில் யாவும் துயில இராமன் துயிலாமை 3849-3850

**3849.** பூவொடுங் கினவிரவு
★ புள்ளொடுங் கினபொழில்கண்
மாவொடுங் கினமரனு
மிலையொடுங் கினகிளிக
ணவொடுங் கினமயில்க
ணடமொடுங் கினகுயில்கள்
கூவொடுங் கினபிளிறு
குரலொடுங் கினகளிறு.

பூ ஒடுங்கின ; விரவு புள்ஒடுங்கின, பொழில்கள்;
மா ஒடுங்கின; மரனும் இலை ஒடுங்கின ; கிளிகள்,
நா ஒடுங்கின ; மயில்கள் நடம் ஒடுங்கின ; குயில்கள்
கூ ஒடுங்கின ; பிளிறு குரல் ஒடுங்கின களிறு.

பொ :—(இரவு வருதலும்) பூக்கள் குவிந்தன ; சோலைகளில் வந்து கலந்த பறவைகள் ஒலியவிந்தன ; விலங்குகளும் துயின்றன ; மரங்களும் குவிந்த இலைகளை உடையவாயின ; கிளிகளும் பேச்சின்றி அடங்கின ; மயில்கள் ஆடுதல் ஒழிந்தன ; குயில்கள் கூவுதல் ஒழிந்தன : களிற்றியானைகள் முழக்கம் ஒடுங்கின.

கு :—விரவுதல் - கலத்தல். புள் - பறவை. மா - விலங்கு. மரன் - மரம் ; போலி. பிளிறுதல் - முழங்குதல். (39)

**3850.** மண்டுயின் றனநிலைய மலைதுயின்றன மறுவில்
பண்டுயின் றனவிரவு பணிதுயின் றனபகரும்
விண்டுயின் றனகழுதும் விழிதுயின் றனபழுதில்
கண்டுயின் றிலநெடிய கடறுயின் றதொர்களிறு.

மண் துயின்றன ; நிலைய மலை துயின்றன ; மறு இல்
பண் துயின்றன ; விரவு பணி துயின்றன ; பகரும்
விண் துயின்றன ; கழுதும் விழி துயின்றன; பழுது இல்
கண் துயின்றில, நெடிய கடல் துயின்றது ஒர் களிறு.

பொ :—நிலமிசை உயிர்கள் துயின்றன ; அசையாத நிலையுடையவான மலையில் உள்ள உயிர்களும் உறங்கின ; (மண்ணினும் மலையினும் உள்ளார் பாடிய) குற்றமற்ற இசைப்பாடல்களும் ஒடுங்கின ; (அப்பாடல்கள் ஒடுங்குதலால் அவற்றைக் கேட்டு மகிழ்ந்த) செறிந்த பாம்புகளும் துயின்றன ; சொல்லப்படும் விண்மிசை யுயிர்களும் துயின்றன ; பேய்களும் கண் உறங்கின ; (இவையெல்லாம் உறங்கவும்) பெரிய திருப்பாற்கடலில் விழிதுயின்றதாகிய ஒப்பற்ற களிற்றின் குற்றமற்ற கண்கள் உறங்கவில்லை.

கு :—மண், மலை, விண் என்பவை ஆகுபெயராய் அவற்றிலுள்ள உயிர்களை உணர்த்தின. மறு - குற்றம். பண் - இசைப் பாடல்கள். துயிலுதல் - ஒடுங்குதல். இசைப்பாடல்கள் இரவில் ஒலியாது அடங்குதல், 'பண்ணிமை யடைத்த பல கட்பொருநர்பாடல்' (ஊர்தேடு. 162) என்றுசுந்தரகாண்டத்தும் குறிக்கப்படும். விரவுதல் - கலத்தல். பணி- பாம்பு. கழுது - பேய். இரவில் துயிலாது திரியும் பேயும் துயின்றது என்பார் கழுதும் விழிதுயின்றன என்றார். கடல் என்றது பாற்கடலை. களிறு என்றது இராமனை. இராமன் திருமாலின் அமிசமாதலின், திருமாலுக்குரிய கடற்றுயில் நிலை இராமனுக்கும் ஏற்றிக் கூறப்பட்டது. (40)

## சூரியன் உதித்தல்

3851. பொங்கிமுற் றியவுணர்வு
புணர்தலும் பகையினொடு
பங்கமுற் றளவில்வினை
பரிவுறும் படிமுடிவில்
கங்குலிற் றதுகமல
முகமெடுத் தனகடலில்
வெங்கதிர்க் கடவுளெழ
விமலன்வெந் துயரினெழ.

பொங்கி முற்றிய உணர்வு புணர்தலும் பகையினொடு
பங்கம் உற்று அளவு இல் வினை பரிவுறும்படி முடிவு இல்
கங்குல் இற்றது கமலம் முகம் எடுத்தன; கடலில்
வெம் கதிர்க் கடவுள் எழ, விமலன் வெம் துயரின் எழ.

பொ :—மலமற்றவனை இராமன், கொடிய துயர்க்கடலினின்றெழும்படி குணகடலில் வெய்ய கிரணங்களையுடைய சூரியன் உதித்

தலும், நிரம்பி முதிர்ந்த மெய்யறிவு தலைப்பட்ட அளவில், அஞ்ஞான மாகிய பகையும், அளவற்றதான தீவினையும் கெட்டு ஒழியுமாறு போல, எல்லையில்லாது நீண்ட இரவு கழிந்தது; தாமரைகள் நிமிர்ந்த முகமுடையவாய் மலர்ந்தன.

கு :—இருளொடு கூடிய கங்குலுக்கு அஞ்ஞானத்தொடு கூடிய தீவினை உவமை. சூரியன் தோன்றிய நிலையில் இருளொடு நிகழும் இரவு கழிந்தமைக்கு, மெய்யுணர்வு தலைப்பட்ட நிலையில் அஞ்ஞான மும் அதனுல் உண்டான அளவில் வினைகளும் அழிந்தொழிதல் உவமம். பொங்குதல் - மிகுதல். முற்றுதல் - முதிர்தல். பொங்கி முற்றிய உணர்வு என்றது மெய்யறிவினை. புணர்தல் - கூடுதல். பகை என்றது அஞ்ஞானத்தினை. பங்கம் உற்று - கேடு அடைந்து. வினை என்றது வினைப்பயன்களை. பகையினெடு அளவில் வினைபங் கம் உற்றுப் பரிவுறும்படி என்க. மெய்யுணர்வுடையார்க்கு வினைக ளால் வரக் கடவ துன்பநுகர்ச்சி இல்லை என்பது, 'காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன், நாமங் கெடக் கெடும் நோய்' (360) என் னும் திருக்குறளாலும், அதற்குப் பரிமேலழகர் எழுதிய, 'காரண மாய அக்குற்றங்களைக் கெடுத்தார் காரியமாகிய இருவினைகளைச் செய்யாமையின், அவர்க்கு வரக்கடவ துன்பங்களும் இல்லை என்பது இதனுற் கூறப்பட்டது' என்னும் விளக்கவுரையாலும் புலனும். கங்குல் -இரவு. வெங்கதிர்க் கடவுள் - சூரியன். விமலன் - இராமன். இராமனுக்கு வெம் துயராவது - பிராட்டியைப் பிரிந்தமையால் உண் டான துன்பமாகும். துயர் - துன்பம். வெங்கதிர்க் கடவுள் கடலில் எழ என்றதற்கு ஏற்ப, விமலன் வெம் துயர்க் கடலினெழ என்க. (41)

### இராம இலக்குவர் சீதையைத் தேடிச் செல்லுதல்

3852. காலையே கடிதுநெடி தேகினர் கடல்கவினு
சோலையேய் மலைதழுவு கானநீ ணெறிதொலைய
வாலையேய் துழனியக ஞடரார் கலியமிழ்து
போலவே யுரைசெய்புன மானைநா டுதல்புரிஞர்.

காலையே கடிது நெடிது ஏகினர் கடல் கவினு
சோலை ஏய் மலை தழுவு கான நீள் நெறி தொலைய
ஆலை ஏய் துழனி அகன் நாடர் ஆர்கலி அமிழ்து
போலவே உரை செய் புன மானை நாடுதல், புரிஞர்.

பொ :—கரும்பாலைகளினின்று எழுகின்ற ஒலியினையுடைய விரிந்த நிலப்பரப்புள்ள கோசல நாட்டையுடையவரான இராம இலக்கு

வர், கடலில் எழுந்த அமுதுபோல இனியதான மொழியினைப் பேசும் புனமான் போல்பவளான சீதையைத் தேடுபவராய், கடல்போல விளங்குகின்ற சோலைகளோடு கூடிய இடையிடை மலைகளையுடைய காட்டுவழி முடிவுறும்படி காலைப் பொழுதிலே விரைவாகவும் நெடி தாகவும் சென்றனர்.

கு :—நாடர், மானை நாடுதல் புரிஞராய், நீள் நெறி தொலைய காலையே கடிது நெடி தேகினர் என்க. கவினுதல் - விளங்குதல். தொலைதல் - முடிவுறுதல். ஆலை - கரும்பாலை; துழனி - ஒலி. ‘மள்ள ராலைபாயரவமாலைச் சாறுபாயோதை’ (34) என்றார் முன்னும். ஆர் கலி - கடல். புனமான் - காட்டில் வாழும் மான்போல்பவளான சீதா பிராட்டி. நாடுதல் புரிஞர் - நாடுதல் செய்வோர்=நாடுவோர். நாடு தல் - தேடுதல். (42)

பம்பைப் படலம் முற்றிற்று

# 2. அனுமப் படலம்

அனுமன் இராம இலக்குவரைக் கண்டு உரையாடிய நிகழ்ச்சியைக் கூறும் பகுதியாகலின், இது 'அனுமப் படலம்' எனப் பெயர் பெறுகின்றது; அனுமனது படலம் என விரியும். இப்படலப் பகுதி, சில சுவடிகளில் மராமரப் படலம் என்ற தலைப்பில் சேர்ந்து காணப் படுகின்றது. சில சுவடிகளில் 'அனுமன் வந்தனைப் படலம்' என்ற தலைப்பில் காணப்படுகின்றது.

பம்பைக் கரையில் இரவைக் கழித்த இராம இலக்குவர், ஞாயிறு தோன்றியவுடன் புறப்பட்டுச் சவரி கூறிய வழியைப் பின்பற்றிச் சென்று ருசியமூகம் என்னும் மலையினை அண்மி அம்மலைமேல் ஏறுகின்றார்கள். அம்மலையில் வாழும் சுக்கிரீவன் என்னும் வானரத் தலைவன் அவர்களைக் கண்டு வாலியின் ஏவலால் தன்னைக் கொல்ல வரும் பகைவர்களே இவர்கள் என நினைந்து அஞ்சி ஓடி ஒரு மலைக் குகையில் ஒளிந்து கொள்கின்றான். அச்சுக்கிரீவனைச் சார்ந்தவர்களும் அச்சமுற்றவர்களாய் அனுமனை அழைத்து, 'கையில் வில்லேந்தி வரும் இவ்வீரர்கள் நம் பகைவர்களா என்பதை நீ சென்று ஆராய்ந்து வருவாயாக' என வேண்டிக்கொண்டு சுக்கிரீவன் நுழைந்த மலைக் குகைக்கு ஓடுகின்றார்கள். அனுமன் அவர்களை நோக்கி, 'நீவிர் இவ்விடத்தில் இனிதே இருங்கள்; அஞ்சாதீர்கள்' என்று சொல்லி விட்டுப் பிரமசாரி வடிவம் தாங்கிக்கொண்டு இராம இலக்குவர் வருகின்ற வழிக்கு அருகிற்போய் மறைந்து நின்று அவர்களை நோக்கித் தன் கல்வி மாட்சியால் அவர்கள் நிலையை உய்த்துணர்கின்றான். பிறர்க்கு இதம் செய்வதன்றிக் கொடுமை செய்யும் இயல்பில்லாதவர்கள் என்பதையும் அமுதம் போன்ற அரிய பொருள் ஒன்றுக்கு இடையில் அழிவு வந்துள்ளமையால் இருமருங்கினும் அதனைத் தேடுகின்றனர் என்பதையும் அவர்களுடைய குறிப்பாலும் செய்கையாலும் அறிந்து கொள்கின்றான். எழில்நல மிக்க அவர்கள் உருவங்களைக் காணும்போதே தன் உள்ளமும் உடம்பும் உருகுவதையும் அளவில்லாக் காதல் பெருகுவதையும் உணர்கின்ற அனுமன், இவர்கள் துன்பங்களைத் துடைத்து மீளா நெறியில் செலுத் ,கின்ற கடவுளரோ, என்று எண்ணி வியந்து அவர்கள் காணுமாறு எதிர்சென்று 'உங்கள் வரவு தீதில்லாத வரவாகுக' என வரவேற்கின்றான்.

இராமன், மாணவ வடிவம் தாங்கியுள்ள அவ்வனுமனைப் பார்த்து 'நீயார்? எங்கிருந்து வருகின்றாய்?' எனக் கேட்கின்றான்

செந்தாமரைக் கண்ணினேய்! யான் வாயுதேவனுக்கு அஞ்சனை என்பவளின் வயிற்றில் தோன்றியவன்; அனுமன் என்று பெயர் கூறப்படுவேன்; இம்மலையில் இருந்து வாழ்கின்ற சூரியனுக்கு மகனுகிய சுக்கிரீவன் என்ற தலைவனுக்கு ஏவல் செய்கின்றவன்; நும் வரவு நோக்கி விம்முதலுற்று அத்தலைவன் ஏவ யான் தங்களைக் கேட்டறிய வந்தேன்' என அனுமன் சுருக்கமாக—தெளிவாக விடை கூறுகின்ருன். அது கேட்ட இராமன் அனுமனின் நுண்ணறிவையும் திறமையையும் இலக்குவனுக்குக் கூறி வியந்து புகழ்கின்ருன். பின் அனுமனை நோக்கி, 'நீ சொன்ன வானர அரசன் எங்கு இருக்கின்ருன்? அவனைக் காணவே இங்கு வந்துள்ளோம்; அவனைக் காட்டுக' என்கின்ருன்.

அது கேட்ட அனுமன் மகிழ்ந்து "மலை போன்ற தோள்களையுடைய தூய்மை மிக்க வீரர்களாகிய நீங்களே அவனைக் காண ஆசைப்பட்டு இங்கு வந்தீர்கள் என்ருல் அச்சுக்கிரீவன் தீமை நீக்கிச் செய்த தவம் நன்ருயிற்று; வாலி என்பவன் வெகுண்டு தாக்கியதால் சுக்கிரீவன் அஞ்சி வந்து இம்மலையில் எங்களோடு இருக்கின்ருன்; அவனிடத்தில் செல்வம் வருதற்கு அறிகுறியாக நீங்கள் வந்திருக்கின்றீர்கள்" என்று கூறுகின்ருன். அனுமன் சொல்லைக் கேட்ட இராமன், 'நடுங்கினர்க்கு அபயம் நல்கும் அதனினும் நல்லதுண்டோ?' என்று கூறிச் சுக்கிரீவனுக்கு அபயம் அளிக்கும் குறிப்பைப் புலப்படுத்துகின்ருன். அனுமன் மகிழ்ந்து, 'உம்மைச் சரணடைந்த எமக்கு இதனினும் சிறந்த உறுதி யாதுளது?' என்று புகழ்ந்து கூறிவிட்டு, 'உம்மை யார் எனச் சுக்கிரீவனுக்குச் சொல்வது' என்று நயமுற வினவ, இலக்குவன் எல்லா நிகழ்ச்சிகளையும் விடாமற் கூறுகின்ருன். அதைக் கேட்ட அனுமன் இராமனுடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்குகின்ருன். அந்தணர் அரசரை வணங்குதல் முறையன்று என்ற கருத்தால் இராமன் 'வேதம் வல்லோனே! தகாததை ஏன் செய்கின்ருய்? இது தருமமன்று' என்று தடுக்க, அனுமன் 'யான் அந்தணன் அல்லன் யானும் வானர குலத்தில் பிறந்த ஒருவனே' என்று கூறித் தன் உண்மை உருவைக் கொண்டு நின்ருன். அவன் பேருரு விண்ணளாவி யிருந்தமையால் அவன் முகத்தையும் இராமனுல் காண இயலவில்லை. 'வேதங்களாலும் குற்றமற்ற ஞானத்தாலும் அறிய முடியாத பரம்பொருளே இந்தக் குரங்கு உரு எடுத்தது' என்று புகழ்ந்து கூறி 'இந்த நம்பியைக் காணப்பெற்றமையால் நாம் நல்ல நிமித்தம் பெற்ருேம் ஆனேம்; நம்பால் இனித் துன்பமில்லை, இன்பமே யெய்தும், இத்தகைய வீரனை ஏவலாளனுகப் பெற்ற சுக்கிரீவன் பெருமை சொல்லும் தரத்த தன்று' என்று இலக்குவனுக்குக் கூறி மகிழ்ந்து நிற்கும்போது அனுமன் 'வென்

றியையுடையீர்! யான் சென்று அந்தச் சுக்கிரீவனை அழைத்து வருகின்றேன். சிறிது போழ்து இங்கு இருங்கள்' என்று சொல்லிப் புறப்பட்டுப் போனான் என்பது இப்படலத்தில் கூறப்படும் நிகழ்ச்சி.

## கம்பர் வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

1. இராம இலக்குவரின் தோற்றம், அவர்களின் அங்க இலக்கணம், வீரம், பெருமை முதலியவற்றைப் பற்றி அவர்களிடத்திலேயே அனுமன் புகழ்ந்து கூறியதாக வான்மீகத்தில் உள்ளது. அனுமன் மறைந்து நின்று அவர்கள் அழகைக் கண்டு அக்கருத்துக்களைத் தனக்குள் எண்ணியதாகக் கம்பர் கூறுகின்றார். அவர்களை நேரில் புகழ்ந்ததாகக் கூறுவதினும், அவர்கள் புறத் தோற்றத்தைக் கண்டு அவர் பண்பு முதலிய அகத்தோற்றத்தை உய்த்துணர்ந்து தனக்குள் புகழ்ந்ததாகக் கூறியுள்ளது சிறப்பான அமைப்பாகக் காணப்படுகின்றது.

2. இராம இலக்குவரை அணுகிய அனுமன், தானே முன் பேசத் தொடங்கி அவர்களைப் புகழ்ந்து கூறி, 'நீங்கள் யார்? இங்கு ஏன் வந்தீர்?' என்று கேட்கவும் அவர்கள் மறுமொழி பேசாதிருக்கக் கண்டு பொருது, 'யான் மேலும் மேலும் பேசவும் நீங்கள் ஏன் என்னுடன் பேசாமல் இருக்கின்றீர்கள்?' எனக் கேட்டதோடு "சுக்கிரீவன் என்கின்ற வானர மன்னன் உங்களோடு நட்புக் கொள்ள விரும்புகின்றான்; அவனால் அனுப்பப்பட்டு வந்தவன் யான், என் பெயர் அனுமன்; சந்நியாசி வேடத்தில் மறைந்திருக்கும் யானும் வானரனே" என்று கூறியதாக வான்மீகத்தில் உள்ளது.

மறைவான இடத்திலிருந்து இராம இலக்குவரின் முகக்குறிப்பால் அவர்கள் இயல்புகளை யெல்லாம் உய்த்துணர்ந்த அனுமன், மாணவப் படிவத்தோடு இராம இலக்குவர் எதிரில் வந்து, 'உங்கள் வரவு துன்பமில்லதாகுக' என வரவேற்க, இராமன், 'நீயார்? எங்கிருந்து வருகின்றாய்? என்று வினவியபோது அனுமன், தன் பிறப்பும் பெயரும் கூறிச் சுக்கிரீவன் என்னும் வானர வேந்தன் அனுப்பத் தான் வந்ததையும் தெரிவிக்கின்றதாகக் கம்பர் கூறுகின்றார். கம்பரின் இந்த அமைப்பு மிகவும் பொருத்தமுடையதாகக் காணப்படுகின்றது. அனுமன் தன் பெயரையும் பிறப்பையும் வந்த காரணத்தையும் தானே கூறினான் என்பதைக் காட்டிலும், இராமன் அறிய அவாவி வினவிய பின் கூறினான் என்பது நாகரிகமாக உள்ளது. மேலும், 'சுக்கிரீவன் உம்மோடு நட்புச் செய்து கொள்ள விரும்புகின்றான்' என அனுமன் இராமனுக்குக் கூறியதாகக் கம்பர் கூறவில்லை. மறுமொழி கொடாமலும் தம் குறிப்பு இன்னது என்பதையே புலப்படுத்தாமலும் இருப்பவர்களிடத்தில் அவ்வாறு சொல்வது பொருத்தமாக இல்லை என விடுத்தார் போலும்.

3. அனுமன் இராமனை நோக்கி 'யாரும் புகமுடியாததாய்ப் பாம்புகளும் கொடிய விலங்குகளும் நிறைந்த வனத்திற்கு நீர் தம்பியோடு ஏன் வந்தீர்? என்று கேட்டதாக வான்மீகத்தில் உள்ளது. கம்பர் இக்கருத்தை மிக அழகாக மாற்றியமைத்துள்ளார். சுக்கிரீவனை அழைத்துவரச் செல்லுகையில் அனுமன் "யாரென விளம்புகேன் யான் எங்குலத் தலைவற் கும்மை" என்று கேட்பதாக அமைத்துள்ளமை காணலாம். பெரியோர்களைப் பார்த்து 'நீங்கள் யார்? இங்கு ஏன் வந்தீர்?' என்று வினவி யறிவதைக் காட்டிலும் எம் அரசனுக்கு உம்மை யார் என்று சொல்வது? என்று வினவி அவர்கள் வரலாற்றை யறியுமுறை நயமிக்கதாக–நாகரிகமானதாக அமைந்திருத்தல் காணலாம்.

4. இராமன் யாதும் வினவாது இருக்கும்போதே அனுமன், 'சந்நியாசி வேடத்தில் மறைந்திருக்கும் யானும் வானரனே' எனக் கூறியதாக வான்மீகத்தில் உள்ளது. அவ்வாறு கூறும்போதும் அவ்வேடத்தை மாற்றவில்லை. பின் இராம இலக்குவரைத் தோள் மேலேற்றிக்கொண்டு சுக்கிரீவனிடம் செல்லப் புறப்படும்போதே அவன் அவ்வேடத்தை விடுத்ததாக உள்ளது. இராமன் வரலாற்றை இலக்குவன் சொல்லக் கேட்டபின் அனுமன் தான் கொண்ட மாணவப் படிவத்தோடு இராமனை வணங்கினனாக 'மறைவலாளனாகிய நீ அரசனாகிய என்னை வணங்குதல் தருமமன்று' என்று இராமன் கூறியபின் அனுமன் தானும் வானரனே என்பதைக் கூறித் தன் பேருருவைக் காட்டியதாகக் கம்பர் அமைத்துள்ளார்.

அனுமன் மாறுவேடத்திலுள்ளபோதே 'சந்நியாசி வேடத்தில் மறைந்துள்ள யான் இன்னான்' என்று கூறுவானாயின் அவன் கொண்ட மாறுவேடத்திற்குப் பயன் யாது? அவன் மாறுவேடம் பூண்டது, வருகின்றவர்கள் ஐயுறாமல் தம் கருத்தைச் சொல்ல வேண்டும் என்பதற்காக்வேயாம். அவ்வேடத்திலிருக்கும் அனுமன் அவ்வேடம் உண்மை வடிவமே என அவர்கள் நம்புமாறு நடித்து, அவர்கள் நல்லவர்கள் என்பதை யறிந்தபின், அவ்வேடம் தேவை இன்மையின் அவ்வேடத்திற் கொவ்வாத வணக்கத்தைச் செய்து, இராமனைத் திடுக்கிடப் பண்ணிப் பின் தன் உண்மை யுருவம் இது என்று காட்டுதல் நாடகக் காட்சியாய் நாகரிக மிக்கதாய் உள்ளமை காணலாம். இராமன் தன் கண்களால் காண்டற்கு எட்டாத அளவு உயர்ந்த பேருருவைக் கொண்டு அனுமன் நின்றதாகக் கம்பர் கூறியுள்ள நிகழ்ச்சி வான்மீகத்தில் காணப்படவில்லை. சுந்தர காண்டத்தில் சீதைக்கு அனுமன் பேருருவைக் காட்டியதாக வான்மீகத்தில் கூறப்பட்டுள்ளமையால் அப்பேருருவை இராமனுக்கும் காட்டியதாகக் கூறுவதும் பொருத்தமுடையதே யென எண்ணிக் கம்பர் அவ்வாறு கூறினர் போலும்.

5. இலக்குவன் அனுமனுக்கு இராமன் வரலாற்றைக் கூறிமுடித்த பின் 'நானும் இராமனும் சுக்கிரீவனைச் சரணமடைந்து விட்டோம்' என்றும், 'எல்லா உயிர்களையும் காப்பாற்றும் இராமன் இப்பொழுது சுக்கிரீவனையே தனக்குப் பாதுகாவலனாகக் கொள்ள விரும்புகின்றான்' என்றும், 'இதுகாறும் எவ்வுயிர்க்கும் அருள் புரிந்து வந்த இராமன், இன்று வானர மன்னனாகிய சுக்கிரீவன் அருளை நாடிச் சரணம் அடைகின்றான்' என்றும் கூறியதாக வான்மீகத்தில் உள்ளது. திருமாலின் அமிசமாகிய இராமன் பெருமைக்கு இவ்வாறு கூறுவது ஏலாது எனக் கருதிப்போலும் கம்பர், அதை மாற்றிவிட்டு அனுமன், "மும்மையேழ் உலகும் காக்கும் முதல்வர்நீர், முருகற்செவ்வி உம்மையே புகல்புக்கேமுக்கு இதின்வரும் உறுதியுண்டோ" என்று கூறியதாக அமைத்துள்ளார்.

வான்மீகம் முதல் நூலாகலின் அது கூறியதே உண்மை நிகழ்ச்சியாகும் என்பது உறுதியாயினும், அதற்கு வழிநூல் செய்ய வந்த கம்பர், அவர்காலச் சூழ்நிலைக்கேற்ப எவ்வாறு மாற்றினால் பொருத்தமாயிருக்கும் எனச் சிந்தித்துச் சில கருத்துக்களை அழகுற மாற்றியமைத்துள்ளார் என்று அமைதியுறல் தக்கது.

## படலப் பொருட் சிறப்பு

இப்படலத்தின் சிறப்பு உறுப்பினன் அனுமனே என்பது படலப் பெயரானே புலனாகும். அனுமனுடைய நுண்ணிய அறிவுத்திறனை யும், தான் கருதியதை நிரந்தினிது சொல்லும் சொற்றிறனையும் கம்பர் மிக அழகாக இப்படலத்தில் விளக்கியுள்ளார். அனுமன் வரலாற்றையோ, சுக்கிரீவன் வாலிக்கு அஞ்சி ருசிய மூகமலையில் ஒளிந்து வாழும் நிலையினையோ, அவனுக்கு அமைச்சர் பலர் உளர் என்பதையோ கம்பர் இங்குப் புலப்படுத்தவில்லை; இதற்கு முன் புலப்படுத்தவுமில்லை. நாடக அரங்கில் நடிக்கும் உறுப்பினர் நுழைந்து, தாம் இன்னார் என்பதைக் காண்போர் கருதி உணரு மாறு தம் சொல்லாலும் செயலாலும் உணர்த்துதல் போலச் சுக்கிரீ வனும் அவனுடைய அமைச்சர்களும் தம்மை யுணர்த்திக்கொள்ளு மாறு செய்துள்ளார் கம்பர். வாலிக்கு அஞ்சி வாழும் சுக்கிரீவன் தான் வாழும் மலையில் ஏறிவரும் வில்வீரர் இருவரைக் கண்டு, இவர் பகைவர் எனக்கொண்டு, 'உய்தும் நாம்' என ஓடிச்சென்று ஒரு குகையில் ஒளிந்து கொண்டானாக, அவன் அமைச்சர்கள், தமக்குள் அறிவும் திறனுமிக்க அனுமனை நோக்கி 'வாயுவின் குமாரரே!' இவர்கள் நீலமால்வரை யனையராய் வில்லேந்தி வருதலின் வாலி ஏவலின் வருபவர்தாமோ? காண்மின்! நீதியால் நினைமின்! எனக் கூறிவிட்டு மனங்கலங்கிச் சுக்கிரீவனைப் பின்பற்றி ஓடத் தொடங்கு கின்றனர்.

காலின் மாமதலே! என விளித்துக் கூறினவரும் ஓடத் தொடங்கி னவரும் ஏனை அமைச்சரே என்பதைப் படிப்போர் உய்த்துணர்ந்து கொள்ளுமாறு கம்பர் செய்துள்ளமுறை, இது நாடகக் காப்பியம் என்பதற்கேற்புடையதாய் அமைந்து அழகு செய்தல் காணலாம்.

அமைச்சர்களுக்கு அஞ்சல் கூறிப் புறப்பட்ட அனுமன். மாணவப் படிவத்தோடு மறைந்து நின்று, இராம இலக்குவர் இரு புறமும் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டு வருவதைக்கண்டு, 'அருமருந்தனைய திடையழிவு வந்துளததனை இருமருங்கினும் நெடிது துருவுகின்றனர் இவர்கள்' என உய்த்துணர்தலும், அவர்தம் முகத் தைக் கண்டே, 'கதமெனும் பொருண்மையிலர் கருணையின் கடல னையர், இதமெனும் பொருளலதொ ரியல்புணர்ந்தில ரிவர்கள்' எனத் தெளிதலும் மிக மிகச் சிறப்புடையனவாய் அவ்வனுமனின் நுண் ணறிவின் மேன்மையை விளக்குவனவாய் விளங்குதல் காணலாம்.

சுக்கிரீவன் முதலியோரால் தெவ்வர் என ஐயுறப்பெற்ற இராம இலக்குவரைக் கொண்டே சுக்கிரீவனுடைய பகைவனுகிய வாலியை அழிக்கலாம் என அவர் தோற்றத்தால் துணிவுகொண்ட அனுமன், தன் கருத்தை முதற்கண் அவர்க்குத் தொகுத்துக்கூறலும் பின்னர் வகுத்துக்கூறலும் நட்புக்கோட் படலத்தில் விரித்துக்கூறலும் அவ னுடைய நிரந்தினிது சொல்லும் சொல்வன்மையைப் புலப்படுத்து கின்றன. 'எவ்வழி நீங்கியோய்? நீ யார்? என்ற இராமன் வினு விற்கு விடைகூறும்போதே அனுமன் தன் கருத்திற்கு வித்திடு கின்ருன். "இம்மலே யிருந்துவாழும் எரிகதிர்ப் பரிதிச் செல்வன் செம்மலுக் கேவல் செய்வேன்; தேவ! நும்வரவு நோக்கி, விம்மல் உற்று அனையான் ஏவ, வினவிய வந்தேன்" என்பது அனுமனின் விடை. இதில் 'தேவ! நும் வரவு நோக்கி விம்மலுற்று அனையான் ஏவ' என்பதுதான் அனுமனுடைய கருத்திற்கு வித்தாகும். 'வாலி யென்னும் வலிய பகைவனல் துன்புறுவோன் சுக்கிரீவனுகலின், தன்பால், பகைமையே கொள்ளாத நும்மையும் பகைவராக - பகை வனின் சார்புடையவராக அச் சுக்கிரீவன் கருதித் தேம்பி அழுது கொண்டு என்னை விசாரித்து வர ஏவினன்' என்பதே அத்தொடர்க் குப் பொருளாகலின் பின் வகுத்தும் விரித்தும் கூறப்படும் வாலியின் கொடுமைகளையெல்லாம் தன்னுள் அடக்கிக்கொண்டுள்ள வித்தாய் அத்தொடர் மிளிர்தல் காணலாம். 'விம்மலுற்று' என்பது வாலி யால் சுக்கிரீவன் பட்ட அல்லலையெல்லாம் நினைப்பிக்கின்றமையின் அது தொகுத்துச் சுட்டலாக அமைந்திருத்தலும் காணலாம்.

'சுக்கிரீவன் எங்குளான்? அவனைக் காணும் ஆசையோடே நாங்கள் வந்தோம்' என்று இராமன் கூறியவுடன் அனுமனுடைய நம்பிக்கை மேலும் உறுதி பெறுகின்றது. 'நிகரற்ற வீரர்களாகிய

நீங்கள் அவனைக் காணும் ஆசையோடு வந்தீர்கள் என்றால், அவன் தீதுநீக்கிச் செய்த தவம் நன்றாயிற்று' என்று பாராட்டிவிட்டு, முன் தொகுத்துச் சுட்டியதை வகுத்துக் காட்டுகின்றான்.

இரவிதன் புதல்வன் றன்னை யிந்திரன் புதல்வ னென்னும்
பரிவிலன் சீறப் போந்து பருவரற் கொருவ னாகி
அருவியங் குன்றி னென்னோ டிருந்தன னவன்பாற் செல்வம்
வருவதோ ரமைவின் வந்தீர் வரையினும் வளர்ந்த தோளீர்.

என்பது காண்க. சுக்கிரீவன் பெருமை புலப்படவேண்டி அவன் இயற்பெயரைக் கூறாது 'இரவிதன் புதல்வன் தன்னை' எனக் குறிப்பிடு கின்றான். தந்தையே மகனாகின்றான் என்ற மரபை நோக்கின், சூரியனுடைய பெருமையும் நடுவு நிலைமையும் அவன் மகனாகிய சுக்கிரீவனுக்கும் உண்டு என்பதை, அத்தொடர் கேட்பவர் உள்ளத்தில் பதியவைக்கும் என்பதில் ஐயமில்லை. இதனால் சுக்கிரீவன் பெருமை புலப்படுத்தியவாறு. அவன் பகைவனாகிய வாலியைக் குறிப்பிடும்போது, 'இந்திரன் புதல்வனென்னும் பரிவிலன்' என்று கூறி அவ்வாலியின் சிறுமையைப் புலப்படுத்துகின்றான். யாங்ஙன மெனின்? 'இந்திரன் தனக்குரிய இந்திராணியை விடுத்துக் கவுதம முனிவனுக்குரிய அகலிகையை விரும்பிச் சாபம் பெற்ற தகவிலி யாதலின், அவன் மகனாகிய வாலியும் தந்தைபோலவே தனக்குரிய தாரை யிருக்கவும் தம்பிக்குரிய உருமையை விரும்பிக் கவர்ந்த தகவிலனாக உள்ளான்' என்ற குறிப்பை அத்தொடர் புலப்படுத்த லால் என்க.

மேலும் 'பரிவிலன்' எனவே வாலி அன்பில்லாத கொடியவன் என்பது பட்டு அவ்வாலியின் கொடுமையும், ஒன்றுநின்றே ஏனையது முடிக்கும் முறைமையால் சுக்கிரீவன் அன்பு நிறைந்தவன் என்பதும் பட்டு அச் சுக்கிரீவனின் செம்மையும், புலப்படுத்தி இராமனுக்கு இரவிதன் புதல்வன்பால் அன்பையும் இந்திரன் புதல்வன்பால் பகைமையையும் உண்டாக்குதல் காணலாம். இராமன் சூரிய குலத்துத் தோன்றல் என்பதையும் இங்கு நினைதல் வேண்டும். 'சீறப்போந்து' என்றமையால், வாலி வலியனாதலும், வலியவந்து சீறிய கொடுமையனாதலும், சுக்கிரீவன் அவனை யெதிர்க்கும் வலியும் சீற்றமுமின்றிப் பொறுமையுடன் இங்கு வந்து மறைந்திருக்கும் குற்றமற்றவன் ஆதலும் புலப்படுத்தியவாறும்.

'பருவரற்கொருவனாகி' என்றதால் சுக்கிரீவன் தன் துன்பத்திற்குத் துணையாக வேண்டிய மனைவியையும் இழந்து இம்மலையில் இருக்கின்றான் என்பதும் குறிப்பிட்டவாறாயிற்று. 'அவன்பாற் செல்வம் வருவதோர் அமைவின் வந்தீர்' என்றமையால், நீங்கள்

அறத்திற்கு மாறுபட்ட கொடியவனுகிய வாலியைக் கொன்று, அறந் திறம்பாத சுக்கிரீவனுக்கு அரசச் செல்வம் அளிப்பது உறுதி என் பதும் கூறினுயிற்று. 'வரையினும் வளர்ந்த தோளீர்' என்றது, அவ்வலியனுகிய வாலியைக் கொல்லும் வலிமை நும் தோளுக்கு உண்டு என்பதை நினைப்பித்தவாறு.

இராமனல் 'சொல்லின் செல்வன்' எனப் பாராட்டப்பெற்ற அனுமன் அப் பெயர்க்கேற்ப வரும்பொருளைத் தெரிந்துரைக்கும் சொல்லில் வல்லவனுதலை இச் செய்யுள் தெளிவுபடுத்தல் காணலாம். இங்குத் தொகுத்தும் வகுத்தும் கூறிய கருத்துக்களையே பின் நட்புக் கோட் படலத்தில் 'நாலு வேதமாம் நவையி லார்கலி' என்ற செய் யுள் தொடங்கி, முப்பத்தொரு செய்யுட்களால் விரித்துக்கூறி, வாலி யின் வலிமையும் கொடுமையும், சுக்கிரீவனின் மெலிவும் செம்மையும் புலப்படுத்தி இராமனை வாலி வதத்திற்கு ஒருப்படுத்திய அனுமனின் சொல்லாற்றல் சொல்லுந் தரத்ததன்று. 'விம்மலுற்று அனையான் ஏவ' என முன் அனுமன் வித்திய வித்துப் பின் 'இரவிதன் புதல்வன் தன்னை' என்ற செய்யுளில் மரமாக நாறிப் பின் நட்புக்கோட் படலத்தில் கவடுவிட்டுக் கோடும் வலாருமாய் வளர்ந்து வாலிவதம் என்னும் கனியைத் தந்தது என உருவகமாக்கிக் கூறலாம்.

# 2. அனுமப் படலம்

## இராம இலக்குவர் வருவதைக் கண்டு சுக்கிரீவன் ஓடிஒளிதல் 3853—3854

**3853.** எய்தினர் சவரிநெடி
☆ தேயமால் வரையெளிதி
னெய்தினே றினரதனி
னேன்மைசால் கவியரசு
செய்வதோர் கிலனிவர்க
டெவ்வரா மெனவெருவி
யுய்துநா மெனவிரைவி
னேடினன் மலைமுழையின்.

எய்தினர், சவரி, நெடிது ஏய மால்வரை எளிதின்;
நொய்தின் ஏறினர் அதனின்; நோன்மைசால் கவி அரசு,
செய்வது ஓர்கிலன், 'இவர்கள் தெவ்வராம்' என வெருவி,
'உய்தும் நாம்' என, விரைவின் ஓடினன், மலை முழையின்.

பொ :—(காடும்மலையும் கடந்து சென்ற இராம இலக்குவர்) சவரி என்பவள் நெடிது நினைந்து அரிதில் நெறி கூறி ஏவிய பெரிய ருசியமூகம் என்னும் மலையை எளிதாக எய்தினர்கள்; பின் அம்மலை யின்கண் விரைவாக ஏறினர்கள்; (அம்மலை வாழும்) வலிமை மிக்க குரங்கினத்து அரசனாகிய சுக்கிரீவன், 'வருகின்ற இவர்கள் நம் பகைவராவர்' என்று பயந்து, செய்வது இன்னதென்று அறியாதவ னாய்ப் பின் 'இவர்கள் கண்ணில் படாது, நாம் மறைந்து உய்வோம்' என்று கூறி அம்மலையிலுள்ள ஒரு குகைக்குள் நுழைந்து கொள்ள விரைவாக ஓடினான்.

கு :—சுக்கிரீவன் வாழும் ருசிய மூகம் என்னும் மலைக்குப் போகும் வழியெலாம் நினைந்து சொல்லி ஏவினவள் சவரி ஆதலின், இங்கு, 'சவரி நெடிதேய மால்வரை' என்றார். "வினையறு நோன்பினாளும் மெய்ம்மையினோக்கி வெய்ய, துனைபரித் தேரோன் மைந்த னிருந்தவத் துளக்கில் குன்றம், நினைவரி தாயற் கொத்த நெறி யெலாம் நினைந்து சொன்னாள்" (ஆரணிய சவரி–6) என்றது காண்க. சவரி அரிதென்று கூறிய கடுநெறியை இராம இலக்குவர் தம் ஆற்றலால் எளிதாகக் கடந்து மால்வரை எய்தினர் என்றவாறு.

ஏய மால்வரை எளிதின் எய்தினர் என இயையும். ஏய-ஏவிய. நொய்தின்-விரைவாக. கவந்தனும் சவரியும் புகழ்ந்து கூறிய நற்பண்புடைய சுக்கிரீவனை நண்பனாகக் கொள்ளும் ஆர்வ மிகுதியால் விரைந்து ஏறினமை தோன்ற, 'நொய்தின் ஏறினர் அதனின்' என்றார். நோன்மை-வலிமை; கவி-குரங்கு. கவியரசு என்றது சுக்கிரீவனை. தான் இருக்கும் மலையில் விரைந்து ஏறி வருவதைக் கண்டானாகலின் இவர்கள் என அண்மைச் சுட்டால் நினைந்தான். இவர்கள் தெவ்வராம் என வெருவிச் செய்வதோர்கிலனாய்ப் பின் நாம் உய்தும் என மலைமுழையின் விரைவின் ஓடினான் என இயையும் வெருவுதலால் முன் செய்வதோர்கிலனாய்ப் பின் சிறிது தெளிந்து மலைமுழையில் நுழைந்து பிழைக்க முயன்றான் என்றவாறு. முழை குகை. தெவ்வர் என்றது, வாலியால் அனுப்பப் பெற்றவர்களே இவர்கள் என்ற எண்ணத்தால் ஆகும். இது வரும் செய்யுளால் விளங்கும். உய்தும் நாம் என்றது, அமைச்சரையுளப்படுத்திக் கூறியது. (1)

### அமைச்சர் அனுமனை ஏவி ஒளிதல்

3854. காலின்மா மதலையிவர் காண்மினோ கறுவுடைய
வாலியே வலின்வரவி னர்கடாம் வரிசிலையர்
நீலமால் வரையனையர் நீதியா நினைமினென
மூலமோர் கிலர்மறுகி யோடினர் முழையதனின்.

காலின் மா மதலை! இவர் காண்மினோ! கறுவுடைய
வாலி ஏவலின் வரவினர்கள் தாம்; வரிசிலையர்;
நீல மால் வரை அனையர்; நீதியா நினைமின் என,
மூலம் ஓர்கிலர், மறுகி ஓடினர், முழை அதனின்.

பொ:—இராம இலக்குவர் வருங்காரணத்தை யுணராத அவன் அமைச்சர்கள், 'காற்றின் புதல்வனாகிய மாருதி! இவர்கள் நம்மேல் பகைமை கொண்டுள்ள வாலி ஏவலினால் வருகின்றவர்களே; கட்டமைந்த வில்லையுடையராயிருக்கின்றனர்; நீல நிறமுடைய பெரிய மலைபோன்ற தோற்றத்தையுடையவராக இருக்கின்றனர்; இவர்களைப்பார்; முறையாக இவர்களை ஆராய்வாயாக' எனக் கூறிவிட்டுக் கலங்கி அம்மலைக் குகையுள் ஓடினார்கள்.

கு:—மேல் சுக்கிரீவன் ஓடியதைக் கூறியவர், இச்செய்யுளில் அவன் அமைச்சர்கள் ஓடியதைக் கூறுகின்றார். மூலம்-காரணம். சுக்கிரீவனோடு நட்புக் கொண்டு நலம் பல புரிய வருகின்றமை

தெரிந்தால் இங்ஙனம் மறுகி ஓடுவாரல்லர் என்பது புலப்பட ‘மூலமோர்கிலர்’ என்றார். வரும்பொருளை ஓர்ந்துரைக்க வேண்டிய அமைச்சரும் அச்சத்தால் அது செய்திலராய் மாருதியை ஆராயுமாறு கூறிவிட்டுச் சுக்கிரீவனைத் தொடர்ந்து குகையுள் ஓடினர் என்றவாறு. மாருதி அமைச்சர்களில் மிக்க துணிவும் சூழ்ச்சியும் நுண்ணறிவும் உடையனாதல்பற்றி அவனையே கண்டு ஆராயுமாறு பணித்தனர் என்க. கறு - பகைமை. வாலி, சுக்கிரீவனிடம் பகையுடையனாய்ச் சாபத்தால் ருசிய மூகம் என்னும் மலைக்கு வாராமல் இருப்பவனாதலின் தனக்குப் பதிலாக இவ்வீரர்களை ஏவியிருத்தல் கூடும் என்ற எண்ணத்தால் “கறுவுடைய வாலி யேவலின் வரவினர் கடாம்” என்றனர். அக்கருத்தை நிறுவுதற்காக ‘வரிசிலையர்’ எனப் போர்க் கருவியையும் ‘வரையனையர்’ என அவர் தோற்றத்தையும் விவரித்தனர். நீலமால்வரை இராமன் மேனிக்கு ஏற்ற உவமையாதல் காணலாம். இலக்குவனுக்குங் கூறுங்கால் நீலம், மலைக்கு அடையாக அமையும். நீதி - முறை. நீதியாய்! எனப் பாடங் கொண்டு விளியாக்கலும் ஆம். மதலை, அண்மை விளி. மறுகி - கலங்கி. சுக்கிரீவன் சென்ற முழையிலேயே அமைச்சர்களும் ஓடி ஒளிந்தனர் என்பது தோன்ற ‘முழையதனின்’ என்றார்; அம் முழையில் என்றவாறு. காண்மின், நினைமின், என்புழி மின் ஒருமைக்கண் வந்தது, வழுவமைதி. ஓர்கிலர், மதலை! நினைமின், என ஓடினர் என இயையும். (2)

இப்பாடலுக்குப் பின்; 12-ஆம் ஏட்டில்,

3854. (a) “அன்னவா மெனவெருவி யங்கணில் லாதருகு
துன்னுவா னரர்களொடு தோமிலா மேருநிகர்
என்னுமா மலைமுழையி லெய்தினா ரெய்தியபின்
நன்னலம் தெரிமனதின் நாடிமா ருதிமொழியும்”

என்ற பாடலும், வேறு பல ஏடுகளில்,

3854. (b) “தாரனீலனைமருவு தாமமா ருதியைமுதல்,
வீரரோ டிரவிசுதன் மேருமால் வரையைநிகர்
பாரமா மலையினொரு பாகமோ டுதல்புரிய,
ஆரமார் பருமதனின் ஆகுமா றுறல்கருதி”

என்ற பாடலும் காணப்படுகின்றன. நல்ல பல ஏடுகளில் இவை இரண்டும் இல்லை; செய்யுள் நடையும் பொருளும் பொருத்தமாகத் தோன்றவில்லை.

சில ஏடுகளிலும் அச்சுப் புத்தகங்கள் பலவற்றிலும் பின்வரும் பாடலும் இப்பாடலுக்குப் பின் காணப்படுகின்றது.

3854. (c) 'மானோ டுதல்புரிஞர் வாலியே வலின்வருதல்
ஆனவா றலர்மறுகி யாவிசோர் நிலையரென
ஏனைவா னரர்சிலரு மேகிமா முழையின்முழு
ஞானநா தரையறிவி ஞடிமா ருதிமொழியும்"

இப் பாடல் பின்வரும் செய்யுளொடு பொருள் பொருத்தமுடைய தாகக் காணப்படாமையால் மிகைப்பாடலாகக் கருதப்படுகின்றது.

## அனுமன் அவரை அஞ்சல் என்றல்

3855. அவ்விடத் தவர்மறுகி
யஞ்சிநெஞ் சழியமைதி
வெவ்விடத் தினைமறுகு
தேவர்தா னவர்வெருவல்
தவ்விடத் தனியருளு
தாழ்சடைக் கடவுளென
இவ்விடத் தினிதிருமி
னஞ்சலென் றிடையுதவி.

அவ் இடத்து, அவர் மறுகி, அஞ்சி, நெஞ்சு அழி அமைதி,
வெவ்விடத்தினை மறுகு தேவர், தானவர், வெருவல்
தவ்விடத், தனி அருளு தாழ்சடைக் கடவுள் என,
'இவ் இடத்து இனிது இருமின்; அஞ்சல்' என்று இடை உதவி.

பொ:—அந்தக் குகையில் சுக்கிரீவன் அமைச்சர் முதலியோர் மனம் கலங்கி அஞ்சி நெஞ்சு அழியும் அமையத்தில், கொடிய ஆல காலத்தைக் கண்டு கலங்கிய தேவர்க்கும் தானவர்க்கும் அச்சம் நீங்குமாறு, துணையாருமின்றித் தனித்து வந்து அருள் செய்த நீண்ட சடையையுடைய சிவனைப்போல, "இந்த இடத்தில் இனிதாக இருங்கள்; அஞ்சாதீர்கள்;" என்று இடைநின்று கூறியருளி,

கு:—குளகம். அழி அமைதி-அழியும்போது. வெவ்விடம் என்றது பாற்கடலில் வாசுகியால் தோன்றிய ஆலகாலத்தை. விடத்தினைக் கண்டு மறுகு என ஒரு சொல் வருவிக்க. வெருவல் - அச்சம். தவ்விட - நீங்கிட; கெட. நஞ்சுண்பதற்குத் துணையாவார் பிறர் இன்மையின் தனி அருளும் என்றார். தாழ்சடைக் கடவுள்–சிவபிரான். "நஞ்சட வெழுதலு நடுங்கி நாண்மதிச், செஞ்சடைக் கடவுளை யடையுந் தேவர்போல், வஞ்சனையரக்கரை வெருவி மாதவர், அஞ்சன வண்ணநின் னபயம் யாமென்றார்" (468) எனக் கம்பர் முன் இவ்வா

லாற்றைக் கூறியுள்ளதும் இங்கு நினைக்க. கரிய நிறத்தையுடைய நஞ்சைக் கண்டு அஞ்சிய வானவர்களைப்போலக் கரிய வண்ணனாகிய இராமனைக் கண்டு வானரர்கள் அஞ்சினார்களாக வானவரை யஞ்சற்க என்றருளிய சிவபிரானைப் போல அனுமன் இங்கு வானரரை அஞ்சல் என்றருளினான் என உவமையை விரித்துக் கொள்க. சிவபிரானுக்குத் தாழ்சடை கூறப்படுதலை, "காடமர்ந் தாடிய வாடலனீடிப் புறம்புதை தாழ்ந்த சடையன்" என்ற பதிற்றுப் பத்துக் கடவுள்வாழ்த்தாலும் உணரலாம். அஞ்சல் என்ற சொல்லை யுதவியதையே, 'இடையுதவி' என்றார். அஞ்சல் என்றது அல்லீற்று எதிர்மறை வியங்கோள். 'மகனெனல்' (குறள்-196) என்புழிப்போல. (3)

### அனுமன் இராம இலக்குவரைக் கண்டுணர்தல்

3856. அஞ்சனைக் கொருசிறுவ
னஞ்சனக் கிரியனைய
மஞ்சனைக் குறுகியொரு
மாணவப் படிவமொடு
வெஞ்சமத் தொழிலர்தவ
மெய்யர்கைச் சிலையரென
நெஞ்சயிர்த் தயன்மறைய
நின்றுகற் பினினினையும்.

அஞ்சனைக்கு ஒரு சிறுவன், அஞ்சனக் கிரி அனைய
மஞ்சனைக் குறுகி, ஒரு மாணவப் படிவமொடு,
'வெஞ்சமத் தொழிலர், தவமெய்யர், கைச்சிலையர்' என,
நெஞ்சு அயிர்த்து, அயல் மறைய நின்று, கற்பினின் நினையும்.

பொ:—அஞ்சனை என்பாளுக்கு ஒப்பற்ற மகனாகிய அனுமன், ஒரு மாணக்கன் வடிவம் தாங்கிச் சென்று, மையினாலாய மலை போன்ற இராமனை அணுகி, அருகில் மறையநின்று, (அவர்களை நோக்கி) இவர்கள் கையில் வில்லைத் தாங்கியிருக்கின்றனர் ஆதலின் கொடிய போர்த்தொழிலுடையர் என்று தெரிகின்றது; ஆயின் அத்தொழிற்கு மாறுபட்ட தவவேடம் தாங்கிய உடம்பினராக இருக்கின்றனரே என்று மனத்தில் ஐயங்கொண்டு, மேலும் தன் உய்த்துணர்ச்சியால் அவர்களைப் பற்றிச் சிந்திக்கின்றான்.

கு:—அனுமன் தன் வடிவத்தை மறைத்துக்கொண்டு ஐயுறத் தகாத மாணக்க வேடத்தோடு இராமனை அணுகினான் என்க.

மாணவப் படிவம் என்பது பிரமசாரி வேடத்தை. வருகின்றவர்கள் பகைவரோ என்று ஒற்றிநின்று ஆராயச் செல்கின்றுனுதலின் மாறு வேடம் பூண்டான்; ஒற்றர்களுக்கு அது இயல்பாதலின். அஞ்சனை, அனுமனுடைய தாயின் பெயர். சிறுவன் என்றது, மகன் என்னும் பொருளது. மஞ்சன் என்பதும் அப்பொருளதே; மைந்தன் என்பதன் போலியாய் வந்தது. தயரதன் மகன் என்னும் கருத்தால் மஞ்சன் என்ருர் போலும். தலைமை பற்றி இராமனைக்கூறி இனம் பற்றி இலக்குவனையும் கொள்ள வைத்தாராதலின், வெஞ்சமத் தொழிலர் எனப் பலர்பாலாற் கூறினர். அஞ்சனக்கிரியனைய மஞ்சன் என்றது இராமனையே யாதல் தெளிவு. குறுகுதல் - நெருங்குதல்; அணுகுதல். கைச்சிலையராதல் கண்டே வெஞ்சமத் தொழிலர் என்பது உய்த்துணர வேண்டுதலின், அதனை முதற்கண் கூறலே முறையாயினும் செய்யுளாதலின் மாறிநின்றது. தவவேடமும் கொலைக்கருவியாகிய வில் ஏந்துதலும் முரண்பட்டதாகலின் அனுமன், இவர் அரசரோ? முனிவரோ? என ஐயம் கொண்டான். இவ்வாறே சடாயுவும் இராம இலக்குவரைக் கண்டபோது, "வினையறு நோன்பினரல்லர் வில்லினர், புனைசடை முடியினர் புலவரோ" (சடாயுகாண் - 11) என அயிர்த்தது காணலாம். அவர்கள் நேரில் செல்லாது மறையநின்று புறத்தோற்றத்தைக் கண்டு அவர்கள் மன நிலையை உய்த்துணர வேண்டுதலின், 'கற்பினின் நினையும்' என்ருர். கற்பு - கல்வியறிவு; உய்த்துணர்ச்சி. (4)

## அனுமன் உய்த்துணர்ச்சி 3857-3860

**3857.** தேவருக் கொருதலைவ
ராமுதற் றேவரெனின்
மூவர்மற் றிவரிருவர்
மூரிவிற் கரரிவரை
யாவரொப் பவருலகின்
யாதிவர்க் கரியபொருள்
கேவலத் திவர்நிலைமை
தேர்வதெக் கிழமைகொடு.

'தேவருக்கு ஒருதலைவர் ஆம் முதல் தேவர் எனின்,
மூவர்; மற்று, இவர் இருவர்; மூரிவில் கரர்; இவரை
யாவர் ஒப்பவர், உலகின்? யாது இவர்க்கு அரிய பொருள்?
கேவலத்து இவர் நிலைமை தேர்வது எக்கிழமை கொடு?'

பொ :—தேவர்கட்கெல்லாம் ஒப்பற்ற தலைவராகிய முதல் தேவரோ இவர்? எனின், அவர் மூவர், இவர் இருவராய் இருக்கின்றனரே! (அவர் சூலமும் திகிரியும் வேதமும் ஆகிய வேறுபட்ட கருவிகளைத் தாங்கி நிற்பர்) இவர் வலிய வில்லைத்தாங்கிய கரத்தினராக இருக்கின்றனரே! (ஆதலால் தேவரலர்.) இவ்வுலகில் இவர்களை ஒப்பவர் யாருளர்? இவர்க்குச் செய்தற்கு அரிய செயல்தான் யாதுளது? இவர் நிலைமையை எந்தத் தகுதியைக்கொண்டு எளிதில் தெளிவது?

கு :—இராம இலக்குவர், முதல் தேவர் என்று எண்ணத்தக்க தோற்றமுடைமை கண்டு ஐயுற்று, இருவராயிருத்தலும், இருவரும் வில்லை மட்டுமே ஏந்தியிருத்தலும் ஆகிய காரணம்பற்றி அத்தேவரலர் என வேற்றுமைகண்டு தெளிந்தவாறு. இது வேற்றுமையணி. இவர்க்கு மூரிவிற்கரம் கூறினமையின், முத்தேவர்க்கு வேறுபட்ட கருவிகள் தாங்கு மியல்புண்மை நினைப்பித்து விலக்கியவாருயிற்று. மூரி - வலிமை; பெருமை. முத்தேவரல்லராயினும் யாவர்க்கு மேலாம் எழிலும், செயலும், இயல்பும் உடையவர் என்று அனுமன் தெளிந்தாகலின் இவரை யாவரொப்பவர்? யாதிவர்க்கரிய பொருள்? இவர் நிலைமை தேர்வது எக்கிழமை கொடு? என எதிர்மறை வினுவால் தனக்குள் வினவிக்கொண்டான். பொருள் என்றது இங்குச் செயலை. உயிர்களால் உணர்தற்கரிய பெருநிலையர் என்பான், எக்கிழமை கொடு தேர்வது? என்ருன். கிழமை; உரிமை; தெரிதற்குரிய தகுதி. அவர் நிலைமையை யுள்ளவாறு தெளியத் தனக்குத் தகுதியேது? என்பது அனுமன் கருத்து. கேவலம் - எளிமை. இனிக் கேவலத்திவர் என்று இராம இலக்குவர்க்கு அடையாக்கிப் பரம்பொருளாகிய இவர் எனவும் கேவலஞானத்தால் (பரஞானத்தால்) அறியத்தக்க இவர் எனவும் பொருள் கூறலாம்.

இதனுல், இராம இலக்குவர், தமக்குவமை யில்லாதவர்; செயற்கரும் செயலினர்; உயிர்களால் முற்றும் உணர்தற்கரிய இயல்பினர்; என்பன புலப்படுத்தியவாறு. (5)

3858. சிந்தையிற் சிறிதுதுயர் சேர்வுறத் தெருமரலி
ஞெந்தயர்த் தவரனையர் நோவுறச் சிறியரல
ரந்தரத் தமரரலர் மானிடப் படிவர்மயர்
சிந்தனைக் குரியபொரு டேடுதற் குறுநிலையர்.

சிந்தையில் சிறிது துயர் சேர்வுறத், தெருமரலின்
நொந்து அயர்த்தவர் அனையர் ; நோவுறச் சிறியர் அலர் ;
அந்தரத்து அமரர் அலர் ; மானிடப் படிவர் ; மயர்
சிந்தனைக்கு உரிய பொருள் தேடுதற்கு உறும் நிலையர்.

பொ:—இவர்கள் விண்ணுலகத்தில் வாழும் தேவரும் அல்லர் ; மானிட வடிவமுடையராகவே விளங்குகின்றனர் ; இவர்கள் சிந்தையில் சிறிது துயர் வந்து அடைய அத்துயரால் வருந்தி இளைத்தவர் போலக் காணப்படுகின்றனரே யன்றி எளிதில் பெருந் துன்புறுதற்குரிய சிறுமையுடையவரல்லர். மயங்கத் தக்க சிந்தனைக்கு உரியதாகிய ஒரு சிறந்த பொருளைத் தேடுதற்குப் பொருந்திய நிலையையுடையராக விளங்குகின்றனர்.

கு:—முதல் தேவரல்லர் என்பதை மேல் காரணங் கண்டு தெளிந்தவன் இங்குத் தேவரோ என ஐயுற்று மானிடப்படிவமுடையராதலின் அந்தரத்தமரர் அலர், எனத் தெளிந்து கூறுதலே மேலைச் செய்யுளோடு இயைபுடையதாகுமாதலின் அமரரல்லர் என்பதை முன் எடுத்து உரைக்கலாயிற்று. இராம இலக்குவரின் முகக்குறிப்பால் சிறிது துன்புற்றவர் என்பது காணப்படுதலின் இங்ஙனம் சிந்தித்தான். எளிய நிகழ்ச்சிகளுக்குத் துன்புறும் சிறுமையர் அல்லர் என்றமையால் அவர் சிந்தையிற் சிறிது துயர் சேர்தற்குக் காரணம் பெரிதாயிருத்தல் வேண்டும் என்பது புலப்படுத்தியவாறாயிற்று. மயர் – மயக்கம் ; சிந்தனைக்கு அடை. சீதையையே இங்குச் சிந்தனைக்குரிய பொருள் என்றான் என்பது தெளிவு. “இருவருமாறிப்புக் கிதயமெய்தினர்” (600) என முன் கூறலின், ‘இராமன் சிந்தனைக்குச் சீதையே உரிய பொருளாதல் தெளியலாம். தேடுதற்குறும் நிலையர்’ என்பதற்கு விளக்கம், வரும் செய்யுளில் ‘இருமருங்கினும் நெடிது துருவுகின்றனர்’ என்பதால் தருதல் காணலாம். (6)

3859. தருமமுந் தகவுமிவர்
தனமெனுந் தகையரிவர்
கருமமும் பிறிதொர்பொருள்
கருதியன் றதுகருதி
னருமருந் தனையதிடை
யழிவுவந் துளததனை
யிருமருங் கினுநெடிது
துருவுகின் றனரிவர்கள்.

'தருமமும், தகவும், இவர் தனம் எனும் தகையர்; இவர்,
கருமமும் பிறிது ஓர்பொருள் கருதி அன்று; அது கருதின்,
அருமருந்து அனையது, இடை அழிவு வந்துளது; அதனை,
இருமருங்கினும், நெடிது துருவுகின்றனர், இவர்கள்'.

பொ:—இவர்கள், தருமத்தையும் பெருங் குணத்தையுமே தமக்குரிய செல்வமாக எண்ணும் இயல்பினர். இவர்கள் முயற்சியும் எளிதாகிய வேறு ஒரு பொருளைக் கருதியன்று. அதுபற்றி ஆராய்ந்து பார்க்கின், பெறுதற்கரிய அமிழ்தம் போன்ற பொருள் ஆகும்; இடையே அப்பொருட்கு அழிவு வந்திருக்கின்றது; இவர்கள் அப்பொருளையே இரண்டு பக்கங்களிலும் நெடிதாகப் பார்வையைச் செலுத்தித் தேடுகின்றார்கள்.

கு:—தகவு – பெருங்குணம்; நடுவுநிலை. ஒழுக்கம் எனலும் ஆம். தனம் – செல்வம். தருமமும் பெருங்குணமும் எல்லாச் செல்வங்கட்கும் வாயிலாதலேயன்றி என்றும் நிலைபேறுடையவும் ஆதலின் இவற்றையே தனம் எனப் போற்றும் இயல்பினர் என்றவாறு. தகையர் - தன்மையர். கருமம் – முயற்சி. அருமருந்து அனையது எனப் பிற்கூறலின் பிறிதோர் பொருள் என்றது, எளிய பொருளையே என்பது புலனும். அருமருந்து கிடைத்தற்கரிய தேவாமிருதம். சீதை, அமிழ்தோடு தோன்றிய திருமகளின் அமிசம் ஆதலானும், அமிழ்தனைய இனிய இயல்பினளாதலானும் அவளையே இங்கு அருமருந்தனையது என அனுமன் உய்த்துணர்ந்து கூறினான். இடையழிவு வந்துளது என்றது, அச்சீதையை இராவணன் எடுத்துச் சென்றதை உய்த்துணர்ந்தவாறு. துருவுதல் – தேடுதல். அனுமன் சூரியனிடம் எல்லாக் கலைகளையும் கற்றவனாதலின் இராம இலக்குவரின் முகக்குறிப்புகளால் இத்துணை நிகழ்ச்சிகளையும் உய்த்துணர்ந்தான் என்க. (7)

3860. கதமெனும் பொருண்மையிலர்
கருணையின் கடலனையர்
இதமெனும் பொருளலதொ
ரியல்புணர்ந் திலரிவர்கள்
சதமனஞ் சுறுநிலையர்
தருமனஞ் சுறுசரிதர்
மதனனஞ் சுறுவடிவர்
மறலியஞ் சுறுவிறலர்.

'கதம் எனும் பொருண்மை இலர்;
கருணையின் கடல் அனையர்;
இதம் எனும் பொருள் அலது, ஓர்
இயல்பு உணர்ந்திலர் இவர்கள்;
சதமன் அஞ்சுறும் நிலையர்;
தருமன் அஞ்சுறு சரிதர்;
மதனன் அஞ்சுறு வடிவர்;
மறலி அஞ்சுறு விறலர்.

பொ:—இவர்கள், கோபம் என்னும் பொருளின் தன்மையே இல்லாதவர்கள்; கருணையின் கடல் போன்றவர்கள்; நன்மை என்கின்ற பொருளை அல்லது அதற்குமாறான தீயஇயல்பையே உணராதவர்கள்; இந்திரனும் அஞ்சத்தக்க தோற்றமுள்ளவர்கள்; தரும தேவதையும் அஞ்சத்தக்க ஒழுக்கமுடையவர்கள்; மன்மதனும் அஞ்சும் அழகுமிக்க வடிவத்தையுடையவர்கள்; எமனும் அஞ்சத்தக்க ஆற்றலையுடையவர்கள்.

கு:—வாலி ஏவலின் வரவினர் என ஐயுற்றோரால் அனுப்பப் பெற்றவனாதலின், அக்குறிப்பு அவ்விராம இலக்குவர்பால் இல்லா மையை யுய்த்துணர்வானானன். வாலி ஏவலின் வந்தவராயின் கதமிக்கிருப்பர் என்பது குறித்தவாறு. கோபம் இல்லாமை மட்டு மின்றி அதற்குரிய தன்மையும் அவர்பால் இல்லை என்பான், 'கதமெனும் பொருண்மையிலர்' என்றான். கதத்திற்கு மாறாகக் கருணை மிக்கவர்களாக உள்ளார்கள் என்றதால் சுக்கிரீவன் முதலி யோர் ஐயம் பொருளற்றது என்பதை வலியுறுத்தியவாறு. நீர்க்கடல் போலக் கருணையின் கடல் ஒன்று இருக்குமாயின் அக்கடலை ஒத்தவர் என அவர் கருணைமிகுதியைப் புலப்படுத்தியவாறு; இல்பொரு ளுவமை. இதம் - நன்மை. அதுவல்லாததோர் இயல்பு என்றது தீய இயல்பினை. நன்மையுடையவர்பாலும் சிறிது தீமை இருப்பது இயல்பாகவும் இவர்கள் தீய இயல்பு இன்னது என்பதையே உணராதவர்கள் என்று கூறி அவர் தீமைகலவா நன்மையர் என்ப தைப் புலப்படுத்தியவாறு. சதமகன் என்பது சதமன் என மருவியது. நூறு யாகங்களைச் செய்தவன் என்ற காரணத்தை யுணர்த்தி இந்திர னுக்குப் பெயராயிற்று. தோற்றப் பொலிவால் இந்திரனைக் காட்டி லும் இவர் சிறந்திருத்தலின் 'சதமனஞ்சுறு நிலையர்' என்றும், ஒழுக் கத்தால் அறக்கடவுளினும் சிறந்திருத்தலின் தருமன் அஞ்சுறு சரிதர் என்றும், மன்மதனைக் காட்டிலும் அழகுடையவர் ஆதலின், 'மதன னஞ்சுறு வடிவர்' என்றும், ஆற்றலால் கூற்றுவனைக் காட்டிலும் சிறந்தார் ஆதலின் மறலி அஞ்சுறு விறலர் என்றும் நினைந்தான். சரிதம் என்றது ஒழுகலாற்றினை. இராம இலக்குவர் அருளும்

நன்மையும் தோற்றமும், ஒழுக்கமும் அழகும் ஆற்றலும் மிக்கவ ராதலே அனுமன் உணர்ந்தான் என்பது கருத்து. (8)

இதன்பின் ஒரு சுவடியில் பின்வரும் இருபாடல்கள் காணப்படு கின்றன.

3860 (a) "உலகுதங் கியபலதொல் லுயிர்களுய்ந் திடுபரிசில்
இலகுமிங் கிதமுடைய ரிசையினின் புறுசுருதி
அலகில்விஞ் சைகளுடையர் அகிலமும் தொழுகழலர்
விலகுதிண் கொடுவினைகள் வெகுளிகொண் டடுவிறலர்.

3860 (b) "சிவனுமம் புயமலரி னயனுமிந் திரைகொழுநன்
அவனும் வந்திடவுதவு மரியெனும் பிரமமது
துவளுமஞ் சனவுருவு தொடருசெங் கமலமலர்
உவமைகொண் டிதிலொருவ னுலகில்வந் ததுகொலென."

## அனுமனின் அன்புணர்ச்சி

3861. என்பன பலவு மெண்ணி
★ யிருவரை யெய்த நோக்கி
யன்பினி னுருகு கின்ற
வுள்ளத்த னார்வத் தோரை
முன்பிரிந் தனையர் தம்மை
முன்னினு னென்ன நின்ருன்
தன்பெருங் குணத்தாற்
றன்னிற் ருனல தொப்பிலாதான்.

என்பன பல்வும் எண்ணி இருவரை எய்த நோக்கி,
அன்பினின், உருகுகின்ற உள்ளத்தன், ஆர்வத்தோரை
முன் பிரிந்து அனையர் தம்மை முன்னினுன் என்ன நின்ருன்
தன் பெருங் குணத்தால் தன்னைத் தான் அலது ஒப்பு இலாதான்.

பொ :—தன் சிறந்த குணத்தால் தன்னைத்தானே ஒப்பதன்றி வேறு ஒப்புமையில்லாதவனுகிய அனுமன், என்று இவ்வாறு பலவற்றையும் எண்ணி அவ்விருவரையும் ஊன்றி நோக்கி அன்பால் உருகு கின்ற உள்ளத்தவனுய், அன்புடையோரை முன்னம் பிரிந்து அவர் தம்மை மீண்டும் எதிர்ப்பட்டான்போல நின்ருன்.

கு :—உருகுதற்கு அவர்பால் உளதாய அன்பே காரணமாதலின் இன் ஏதுப் பொருளதாதல் காண்க. முன்னம் ஒருகாலும் காணுத

இராம இலக்குவர் அனுமனுக்கு முன் அன்புடன் பழகியவர் போலவே காணப்பட்டார்கள் என்றபடி. 'ஆர்வத்தோரை முன் பிரிந்து அனையர்தம்மை முன்னினுன் என்ன' என்றது, தற்குறிப் பேற்றமாகக் கூறியது. இவ்வாறே வீடணன் கண்டபோதும்,

"முன்புறக் கண்டிலேன் கேள்வி முன்பிலேன்
அன்புறக் காரணம் அறிய கிற்றிலேன்
என்புறக் குளிரும் நெஞ்சுருகும்" (யுத்த-வீடணனடைக்-21)

என்று கூறி வியந்தமை காணலாம்.

தன்னிற்ருனல தொப்பிலாதான் என்றது, பொது நீங்குவமை. அனுமன் குணத்தால் தனக்குவமை யில்லாதவன் என்றவாறு. "தன்னல தொருபொருள் தனக்கு மேலிலான்" (ஆரணிய - அயோமுகிப் - 86) என இராமன் கூறப்படுதலும் நினைக்க. ஆர்வத்தோர் என்றது அன்புடையாரை. அனுமான் தன்னுள்ளம் உருகுதலை யுணர்ந்தபின் கொடிய விலங்குகளும் அவர்பால் அன்புகொண் டுருகுவதை மேல் கூறல் காண்க. (9)

அனுமான், விலங்கின் அன்பைக் கண்டு வியத்தல்

3862. தன்கன்று கண்ட வன்ன
தன்மைய தறுகட் பேழ்வாய்
மின்கன்று மெயிற்றுக் கோண்மா
வேங்கையென் றினைய வேயும்
பின்சென்று காதல் கூரப்
பேழ்கணித் திரங்கு கின்ற
வென்கன்று கின்ற தெண்ணிப்
பற்பல விவரை யம்மா.

'தன் கன்று கண்ட அன்ன
தன்மைய, தறுகண் பேழ்வாய்
மின் கன்றும் எயிற்றுக் கோள்மா,
வேங்கை என்று இனையவேயும்,
பின் சென்று, காதல் கூரப்
பேழ்கணித்து இரங்குகின்ற;
என் கன்றுகின்றது எண்ணிப்
பற்பல இவரை? அம்மா!'

பொ :—கொடிய கண்ணையும் பெரிய வாயையும் மின்னலைப் போலும் பல்லினையும் உடைய சிங்கம், வேங்கை என்ற இத்தகைய கொடிய விலங்குகளும், (இராம இலக்குவரைக் கண்டு) தன் கன்றைக் கண்டாற் போன்ற தன்மையவாய் அவர் பின் சென்று அன்பு மிகுதலால் மருண்டு விழித்து உள்ளம் உருகுகின்றன; இங்ஙனமாகவும் இவரைப் பகைவராகப் பற்பல எண்ணி வருந்துவது ஏன் ?

கு :—சுக்கிரீவன் முதலியோர், 'இவர்கள் வாலியேவலின் வரவினர்கள்' என்று பற்பல எண்ணி அஞ்சியது பொருந்தாது என்பது இறுதியடியால் புலப்படுத்தியவாறு. தறுகண் - கொடிய கண்; அதன் கொடுமை கண்வழி புலப்படுதலின் தறுகண் எனப்பட்டது. 'எரியுமிழ் தறுகணர்' (அதிகாயன்-138) எனப் பின் கூறுதலும் காணலாம். எரியுமிழ்தல் கண்ணுக்கு அடையாதலும் நினைக்க. கன்றும் உவம உருபு. மின்னலும் வருந்துதற்குக் காரணமான எயிறு எனலும் ஆம். கோண்மா - சிங்கம்; விலங்கினுள் வலிமையது என்ற காரணத்தாற் பெற்ற பெயர். வேங்கைப் புலி, பதினறடி நீளமுடையதாய்ச் சிங்கம் போன்ற வலிமையுடைய விலங்கு. கொடிய விலங்குள் தலையாய இரண்டு காட்டியவாறு. கொடிய விலங்குகளிடம் அன்புடைமை புலப்படுவது தம் கன்றுகளைக் கண்டவழியே யாதலின் இராமன்பால் அன்பு காட்டும் விலங்குகட்கு அதனை யுவமை கூறினர். 'தன் கன்று கண்டவன்ன தன்மைய' என்றது, ஒருமை பன்மை மயக்கம். விலங்கு ஒவ்வொன்றையும் நினைத்து இங்ஙனம் கூறினர். 'இனையவேயும்' என்புழி உம்மை உயர்வு சிறப்பு; அன்பு காட்டுதற்குரியவல்லாத கொடிய விலங்களும் அன்பு காட்டுதல், இராம இலக்குவரின் உயர்வை விளக்குதல் காணலாம். பேழ் கணித்தல் - மருண்டு விழித்தல். இரங்குதல் - உள்ளம் உருகுதல். இரங்குகின்ற என்பது அன்சாரியை இன்றி அகர வீருய் நின்ற வினைமுற்று. இவரைப் பற்பல எண்ணிக் கன்றுகின்றது என்? என மாறிக்கூட்டுக. கன்றுதல் - வருந்துதல். அம்மா, வியப்பிடைச் சொல். (10)

### பறவை, மேகம் பணிபுரிதல்

3863. மயின்முதற் பறவை யெல்லா
மணிநிறத் திவர்கண் மேனி
வெயிலுறற் கிரங்கி மீதா
விரிசிறைப் பந்தர் வீசி

எயில்வகுத் தெய்து கின்ற
விண்முகிற் கணங்க ளெங்கும்
பயில்வுறத் திவலே சிந்திப்
பயப்பயத் தழுவும் பாங்கர்.

'மயில் முதல் பறவை எல்லாம், மணிநிறத்து இவர்கள் மேனி
வெயில் உறற்கு இரங்கி மீதா, விரிசிறைப் பந்தர் வீசி
எயில் வகுத்து எய்துகின்ற; விண்முகில் கணங்கள் எங்கும்
பயில்வுறத், திவலே சிந்திப் பயப் பயத் தழுவும், பாங்கர்'.

பொ :—மயில் முதலிய பறவைகள் எல்லாம், மணி போன்ற நிறத்தினையுடைய இவர்களுடைய மேனியில் வெயில் படுதற்கு மனம் வருந்தி, இவர்கள்மேல் விரிந்த சிறகுகளைப் பந்தர் போல வீசிக்கொண்டு அரண் வகுத்துப் பின்தொடர்ந்து வருகின்றன; விண்ணில் உள்ள மேகக் கூட்டங்கள் (இவர்கள் செல்லுமிடம்) எங்கும் பொருந்துமாறு நீர்த்துளிகளைச் சிந்திக்கொண்டு, இவர்கள் பக்கத்தில் மெல்ல மெல்லச் சார்ந்து வருகின்றன.

கு :—மயில் முதலிய பறவைகள் நிழல் செய்கின்றன; மேகங்கள் தண்ணீர்த் துளிகளைச் சிந்துகின்றன என்றவாறு. ஒளியாலும் நிறத்தாலும் அவர்கள் மேனிக்கு மணி உவமையாயிற்று. ஏற்புழிக் கோடலால் இராமன் நிறத்திற்கு நீலமணியும், இலக்குவன் நிறத்திற்கு மாணிக்க மணியும் உவமையாகக் கொள்ளலாம். சிறந்தோர் மேனி வெயிலால் வாடுங்கால் பறவைகள் இவ்வாறு பந்தர் வகுத்து நிழல் செய்தல் உண்டு என்பதை : "ஆஅய்எயினன்......மயங்கமர் வீழ்ந்தென .....ஒண்கதிர் தெருமைச் சிறகரிற்கோலி நிழல் செய்துழறல்" (அகநா - 208; 5-12) என்பதால் உணரலாம். எய்துகின்ற, அகர வீற்றுமுற்று. வெயிற்கதிர் பந்தரால் மறைந்த வழியும் வெப்பம் தாக்குமாதலின் அது தணியவேண்டி முகிற்கணங்கள் திவலே சிந்திக் கொண்டே சார்கின்றன என்க. "பனிபுரை துளி மேகம் புயறர... வழியினியன போனர்" (2089) என்பது காண்க. பந்தர், பாங்கர் என்பன பந்தல், பாங்கு என்பவற்றின் போலிகள். பையப் பைய என்பன பயப்பய எனப் போலியாயடுக்கின. பாங்கர் தழுவும் என இயையும். (11)

நிலத்திணைப் பொருள்களின் நெகிழ்ச்சி

3864. காயெரி கனலுங் கற்கள்
கள்ளுடை மலர்க ளேபோல்
தூயசெங் கமல பாதந்
தோய்தொறுங் குழைந்து தோன்றும்
போயின திசைக டோறு
மரனொடு புல்லு மெல்லாம்
சாய்வுறுந் தொழுவ போலிங்
கிவர்களோ தரும மாவார்.

'காய் எரி கனலும் கற்கள்,
கள்ளுடை மலர்களே போல்,
தூய செங்கமல பாதம்
தோய்தொறும் குழைந்து தோன்றும்;
போயின திசைகள் தோறும்,
மரனொடு புல்லும் எல்லாம்
சாய்வுறும், தொழுவபோல்; இங்கு,
இவர்களோ தருமம் ஆவார்?'

பொ :—(வெயிலால்) சுடும் நெருப்புப்போல வெதுப்புகின்ற கற்கள், இவர்களுடைய தூய்மையான சிவந்த தாமரை மலர்போன்ற பாதங்கள் பதியுந்தோறும் தேன் பொருந்திய புது மலர்களைப்போல மென்மையாகக் குழைந்து தோன்றும்; இவர்கள் சென்ற திசை தோறும் உள்ள மரங்களும் புற்களும் மற்ற எல்லாமும் இவர்களைத் தொழுவன போலச் சாய்ந்து தோன்றும்; இங்ஙனமெல்லாம் நிகழ்தலின், தருமதேவதைகள் ஆவார் இவர்கள்தாமோ?

கு :—போயின திசைகள்தோறும் என்பது இடைநிலை விளக்காய் முன்னும் இயையும். வன்மையும் வெம்மையும் உடைய கற்கள் இவர்கள் பாதம் பதியும்போது மென்மையும் தண்மையுமுடையவாக மாறின என்றவாறு. 'மரனொடு புல்' என ஒடு உருபு உயர்பின் வழித்தாயது. எல்லாம் என்றது, நின்ற செடி கொடிகளை; சாய்வுறுந் தொழுவபோல் என்றது, தற்குறிப்பேற்றம். "ஆயர் பெருமான் அவனொருவன் குழலூதினபோது, மரங்கள் நின்று மதுதாரைகள் பாயும் மலர்கள் வீழும் வளர் கொம்புகள் தாழும், இரங்கும் கூம்பும் திருமால் நின்ற பக்கம் நோக்கி அவை செய்யும் குணமே" (பெரியாழ்வார் 3-6-284) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். நிலத்திணைப் பொருள்களும் இயங்குதிணைப் பொருள்களும் இவ்வாறு மாற்றம்

பெற்று இனியவாகுமாறு வருகின்றூர்களாதலின் இவர்கள் தரும தேவதைகளோ? என வியந்து தனக்குள் வினவிக்கொள்கின்ருன் அனுமன். ஏனையோர் நடக்குங்கால் இங்ஙனம் நிகழாமையின் இங்ஙனம் வியந்து வினவலானுன். "வறுத்தி வித்திய வனையன வல்லயிற்பரல்கள், பறித்து வித்திய மலரெனக் குளிர்ந்தன" (2127) என்பது காண்க. காயெரி என்பது தன்மையணி. எரிபோல் கனலும் என உவமத்தொகை யாக்குக. கனலுதல்-வெதுப்புதல். "அடிதாங்கு மளவன்றி யழலன்ன வெம்மையாற் கடியவே கனங்குழாய் காடு" (கலி - 11) எனக் காட்டின் வெம்மை கூறப்படுதல் காணலாம்.

இராம இலக்குவரின் தெய்வத்தன்மையால் இங்ஙனம் நிகழ்கின்றன என்பது அனுமனின் உய்த்துணர்ச்சியாகும். (12)

### அனுமான் தன் அன்பிற்குக் காரணம் ஆராய்தல்

**3865.** துன்பினைத் துடைத்து மாயத்
தொல்வினை தன்னை நீக்கித்
தென்புலத் தன்றி மீளா
நெறியுய்க்குந் தேவ ரோதா
மென்புநெக் குருகு கின்ற
திவர்கின்ற தளவில் காத
லன்பினுக் கவதி யில்லை
யடைவென்கொ லறித றேற்றேன்.

துன்பினைத் துடைத்து, மாயத்
தொல்வினை தன்னை நீக்கித்
தென்புலத்து அன்றி, மீளா
நெறிஉய்க்கும் தேவரோ தாம்?
என்பு நெக்கு உருகுகின்றது;
இவர்கின்றது அளவுஇல் காதல்;
அன்பினுக்கு அவதி இல்லை;
அடைவு என்கொல்? அறிதல் தேற்றேன்.

பொ:—தம்மையடைந்த உயிரின் பிறவித் துன்பத்தை ஒழித்து, அத்துன்பத்திற்குக் காரணமாய மயக்கத்தால் உண்டாகும் பழவினை தன்னைப் போக்கித் தென் திசையிலுள்ள எமலோகத்தில் செலுத்தாமல், அடைந்தவர்கள் மீண்டு வருதலில்லாத முத்திநெறியில் செலுத்துகின்ற பெருந்தேவர் தாமோ இவர்கள்? எனக்கு எலும்பும் நெகிழ்ந்து உருகுகின்றது. இவர்கள்பால் அளவில்லாத காதல்

மேலும் மேலும் வளர்கின்றது; இவர்களிடம் எனக்குத் தோன்றும் அன்பினுக்கு எல்லை காண முடியவில்லை; இவ்வாறு உண்டாவதற்கு இவர்க்கும் எனக்கும் உள்ள தொடர்புதான் என்னையோ? அறிய இயலாதவனாக இருக்கின்றேன்.

கு:—மேல் இவர்களோ தருமமாவார்? என்று வினவியவன் இங்கு, மீளா நெறியுய்க்கும் தேவரோதாம்? என்று வினவுகின்றான். அறக் கடவுளினும் மீளா நெறியுய்க்கும் தேவரே பெருந்தேவர் என்பது தெளிவு. ஐயவினா இரண்டினுள் பின்னையது உண்மையாய் முடிதல் இங்கு நோக்கற்பாலது. முற்கூறியதிற் பிற்கூறியது வலியுடைத்தாதல் இயல்பு. துன்பு என்றது பிறவித் துன்பங்களை; அவையாவன: தன்னைப் பற்றி வருவனவும், பிறவுயிர்களைப்பற்றி வருவனவும், தெய்வத்தைப் பற்றி வருவனவுமான ஆதியாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதி தெய்விகம் எனப்படுபவை. மாயத் தொல்வினை யென்றது, மயக்கத்தைப் பற்றி வருகின்ற நல்வினை தீவினைகளாய பழவினையை. 'இருள்சேர் இருவினையும் சேரா' (குறள் 5) என்பது காண்க. வினைத்தொடர்பு உள்ளவரையில் பிறவியும் பிறவித் துன்பங்களும் நீங்காமையின், மாயத் தொல்வினை நீக்குதல் மீளா நெறியுய்த்தற்குமுன் செய்யத்தகும் கடப்பாடுடையதாகும். மீளாநெறி - மீண்டு இப்பிறப்பின்கண் வாராத முத்திநெறி. 'மற்றீண்டு வாரா நெறி' (குறள் 346) என்பர் வள்ளுவனார். இராமன் மீளா நெறியுய்க்கும் தேவனாதலைச் சரபங்கன் பிறப்பு நீங்கு படலத்தானும், சவரி பிறப்பு நீங்கு படலத்தானும் கம்பர் முன்னமே யுணர்த்தியுள்ளமை காணலாம். இறைவனைக் கண்டால் என்புஉருகும் என்பதை "நினைத்தொறும் காண்டொறும் பேசுந்தோறும் எப்போதும், அனைத்தெலும்புண்ணெக ஆனந்தத் தேன் சொரியும் குனிப்புடையான்" (திருவாசகம் 217) என்பதாலும், "இரும்பு தருமனத்தேனை யீர்த்தீர்த்தென் என்புருக்கி" (திருவாசகம் 544) என்பதாலும் அறியலாம். இவர்தல்–வளர்தல். அன்பு முறுகிய நிலை காதல் எனப்படும். அவதி - எல்லை. அடைவு – இயைபு. உடம்பும் உள்ளமும் இவ்வாறு உருகி அன்புறுதற்குக் காரணம் தனக்கும் அவர்க்கும் ஏதோ தொடர்பு இருத்தலேயாம் என்ற எண்ணத்தால் அனுமன் அடைவென்கொல்? என்றும் அத்தொடர்பு இன்னதெனத் தெளியப் புலப்படாமையின் 'அறிதரேற்றேன்' என்றும் கூறினான். இவ்வாறே வீடணனும் "என்புறக் குளிரு நெஞ்சுருகு மேலவன், புன்புலப் பிறவியின் பகைஞன் போலுமால்" (யுத்த – வீடணனடைக். – 21) என்று கூறுவதும் காணலாம். மீளாநெறியுய்க்கும் தேவர்க்கன்றித் தன்னுள்ளம் உருகாதென்பதையும் அனுமன் உணர்த்தியவாறு ஆயிற்று. (13)

## அனுமன் எதிர் சென்று வரவேற்றல்

3866. இவ்வழி யெண்ணி யாண்டவ்
விருவரு மெய்த லோடும்
செவ்வழி யுள்ளத் தானுந்
தெரிவுற வெதிர்சென் றெய்திக்
கவ்வையின் ருக நுங்கள்
வரவெனக் கருணை யோனு
மெவ்வழி நீங்கி யோய்நீ
யாரென விளம்ப லுற்ருன்.

இவ்வழி எண்ணி, ஆண்டு, அவ் இருவரும் எய்தலோடும்,
செவ்வழி உள்ளத் தானும், தெரிவு உற எதிர்சென்று எய்திக்
'கவ்வை இன்ருக, நுங்கள் வரவு!' எனக், கருணையோனும்,
எவ்வழி நீங்கியோய்? நீயார்? என, விளம்பல் உற்ருன்.

பொ :—இவ்வாறு எண்ணி நின்று, தானிருந்த அவ்விடத்திற்கு அவ்விருவரும் அடைந்த அளவில், செந்நெறி செல்லும் உள்ளத் தாளுகிய அனுமனும் அவர்க்குத் தெரியுமாறு அவர் எதிரில் சென்று அடைந்து, 'நும் வரவு துன்பமில்லாததாக!' என வரவேற்க, அருளுடையோனுகிய இராமனும், 'நீ எவ்விடத்திலிருந்து வருகின் ருய்! நீ யார்?' என்று வினவ அவ்வனுமன் சொல்லத் தொடங் கினன்.

கு :—முன் மறைய நின்று அவர் முகக் குறிப்புகளால் அவர் அகத்தியல்பை ஆராய்ந்தவனுதலின், அவர்கள் தானிருந்த இடத்தை அடையும்போது மறைந்து நில்லாமல் அவர் காணுமாறு எதிர் சென்றுற்ருன் என்பது தோன்றத் 'தெரிவுற எதிர் சென்று எய்தி' என்ருர். மறைந்து நிற்றற்குரிய வனல்லன் என்பார், 'செவ் வழியுள்ளத்தானும்' என அனுமனுக்குப் பெயர் கொடுத்தார். கவ்வை - துன்பம். இராம இலக்குவர் வரவைக் கவ்வையுடைய தாகச் சுக்கிரீவன் முதலியோர் கருதினமையின், 'கவ்வை யின்ருக நுங்கள் வரவு' என அனுமன் வரவேற்கலாஞன். சூர்ப்பணகை யின் வரவால் தீது நிறைந்திருக்க வேண்டுமென்ற கருத்தால் இராமனும், 'தீதில் வரவாக திரு நின் வரவு' (சூர்ப்பணகைப். 38) என்றதும் காண்க. இயல்பாகவே இவ்வாறு கூறி வரவேற்றலு முண்டு. கருணையோனும் என்றது இராமனை. மலையின் இடைவழி யில் காண்கின்றமையின் அனுமனை 'எவ்வழிநீங்கியோய்?' என்று வினவினன்; கண்ட அவ்விடத்திலிருத்தற்கு இயைபில்லை யாதலின். நீ யார்? என்ற வினவிற்கு, 'யான் காற்றின் வேந்தற்கு அஞ்சனை

வயிற்றில் வந்தேன்; நாமமும் அனுமன்' என்பதும், எவ்வழி நீங்கியோய்? என்ற வினவிற்கு, "இம்மலை இருந்து வாழும் எரிகதிர்ப் பரிதிச் செல்வன்.........ஏவ, வினவிய வந்தேன்" என்ப தும் பின்வரும் விடைகளாகும். எண்ணி, எதிர்சென்றெய்தி என இயையும். (14)

## அனுமன் விடை 3867-3868

**3867.** மஞ்செனத் திரண்ட கோல
மேனிய மகளிர்க் கெல்லாம்
நஞ்செனத் தகைய வாகி
நளிரிரும் பனிக்குத் தேம்பாக்
கஞ்சமொத் தலர்ந்த செய்ய
கண்ணயான் காற்றின் வேந்தற்
கஞ்சனை வயிற்றின் வந்தே
ஞமமு மனும னென்பேன்.

'மஞ்சு எனத் திரண்ட கோல
மேனிய! மகளிர்க்கு எல்லாம்
நஞ்சு எனத் தகைய ஆகி,
நளிர் இரும் பனிக்குத் தேம்பாக்
கஞ்சம் ஒத்து அலர்ந்த செய்ய கண்ண!
யான் காற்றின் வேந்தற்கு
அஞ்சனை வயிற்றில் வந்தேன்;
நாமமும் அனுமன் என்பேன்;'

பொ:—மேகம் என்று சொல்லுமாறு நீலநிறமுடையதாய்த் திரண்டு அமைந்த அழகிய மேனியையுடையவனே! பெண்டிர்க் கெல்லாம் வருத்தம் செய்வதால் விடம் என்று சொல்லத்தக்கதாகிக், குளிர்ச்சிமிக்க பெரும் பனிக்கு வாடாத செந்தாமரை மலரை ஒத்து மலர்ந்த சிவந்த கண்களையுடையவனே! யான் வாயு தேவ னுக்கு அஞ்சனை என்பவளின் வயிற்றில் பிறந்தேன்; பெயரும் அனுமன் எனப்படுவேன்.

கு:—பனிக்குத் தேம்பாக் கஞ்சம் இன்மையின் இது இல்பொருளு வமை. மனைவியைப் பிரிதல் போன்ற பெருந் துன்பத்தாலும் மலர்ச்சி குன்றாத கண் என்ற குறிப்பும் இவ்வுவமையால் புலப்படுத்தியவாறு. 'அருமருந்தனைய திடையழிவு வந்துளது' என முன்னமே அனுமன்

ஊகித்தவாறும் நினைக்க. நளிர் - குளிர்ச்சி. இராமன் ஏகதார விரதன் ஆகலின், அவன் கண்ணழகில் ஈடுபட்ட மகளிர்க்குத் துன்பத்தையன்றி இன்பம் தாராமை கருதி, 'மகளிர்க்கெல்லாம் நஞ்செனத் தகையவாகி...அலர்ந்த செய்ய கண்ண' என்றான். "ஏழைய ராவியுண்ணும் இணைக்கூற்றங்கொலோ வறியேன், ஆழியங் கண்ணபிரான் திருக்கண்கள் கொலோ வறியேன்'' (திருவாய்மொழி. 7-7) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். இராமன் கரிய திருமேனியிலும் செய்ய கண்ணிலும் அனுமன் ஈடுபாடு மிக்கவனாய் இவ்வாறு இருமுறை விளிக்கலானான். காற்றின் வேந்தன் என்றது வாயுதேவனை. அஞ்சனை என்பவள் புஞ்சகஸ்தலை என்ற அமர மாதின் சாபத்தால் வானரமாகிக் கேசரி என்னும் வானரனை மணந்தவள்; வாயுதேவன் காதலியாய் அனுமனை ஈன்றாள் என்பது உத்தரகாண்டத்தில் கண்டது. அனுமன், பிறந்தவுடன் உதயசூரியனைக் கனியென எண்ணித் தாவ, இந்திரன் சினந்து வச்சிரப்படையால் தாக்கியதால் சிதைந்த கன்னமுடையவன் ஆயினான்; அது காரணமாக அனுமன் எனப் பெயர் பெற்றான். அனு - கன்னம். இவனுக்குச் சுவர்ணமேரு என்பது இயற்பெயர். யார் என்ற வினாவிற்கு விடையாக இவ்வாறு மீண்டும் வினவ வேண்டா வகையில் விடைகூறிய திறம் வியத்தற்குரியதாகும். (15)

3868. இம்மலை யிருந்து வாழு
மெரிகதிர்ப் பரிதிச் செல்வன்
செம்மலுக் கேவல் செய்வேன்
றேவநும் வரவு நோக்கி
விம்மலுற் றனைய னேவ
வினவிய வந்தே னென்றா
னெம்மலைக் குலமுந் தாழ
விசைசுமந் தெழுந்த தோளான்.

'இம்மலை இருந்து வாழும் எரிகதிர்ப் பரிதிச் செல்வன்
செம்மலுக்கு ஏவல் செய்வேன்; தேவ! நும்வரவு நோக்கி
விம்மல் உற்று அனையன் ஏவ, வினவிய வந்தேன்' என்றான்—
எம்மலைக் குலமும் தாழ, இசை சுமந்து, எழுந்த தோளான்.

பொ:—'இந்த ருசிய மூகம் என்னும் மலையில் இருந்து வாழ்கின்ற, எரிகின்ற ஒளிக்கதிர்களையுடைய சூரிய தேவனின் மகனாகிய சுக்கிரீவனுக்குப் பணி செய்கின்றவனாவேன்; தேவ! நும்முடைய வருகையை நோக்கி, (வாலியாலனுப்பப்பட்டவர் என்ற ஐயத்தால்)

துன்புற்று, உண்மை யறியுமாறு அவன் என்னை அனுப்பத் தங்களை இன்னாரெனக் கேட்டறிய வந்தேன்' என்று கூறினான்; யார் எனின், எந்த மலைக்கூட்டமும் தாழ்ச்சியுறும்படி புகழைச் சுமந்துகொண்டு உயர்ந்த தோள்களை யுடையவனாகிய அநுமன்.

கு:—அநுமன் இராமனோடு பேசும் இடமே ருசியமூகம் என்னும் மலையாதலின், 'இம்மலை' என அண்மைச் சுட்டால் கூறினான். இருந்து வாழும் என்றமையால், சுக்கிரீவன் பிறப்புரிமையோடு சிறந்து வாழ்தற்குரிய இடம் வேறுண்டு என்பது புலப்படுத்தியவாறு. செல்வன் என்றது தேவன் என்னும் பொருளது. 'எரிகதிர்ச் செல்வனாகிய பரிதி, என மாறிக் கூட்டலுமாம். செம்மல் - தலைவன்; இங்குப் புதல்வன் என்னும் பொருளையும் தந்தது. வானரங்களுக்குத் தலைவன் சுக்கிரீவன் என்பதும் குறித்தவாறு. மலைக்குலந்தாழ எழுந்த தோள்களையுடையவன், 'ஏவல் செய்வேன்' என்று கூறித் தன் பெருமையையும் தன்னை ஏவல் கொள்ளும் சுக்கிரீவன் பெருமையையும் புலப்படுத்தியவாறு. இசை - புகழ். புகழ் ஆகிய சுமையைச் சுமந்தும் தாழாமல் உயர்ந்த தோள் என்று அத் தோள்களின் சிறப்பை மேலும் உயர்த்தியவாறு. தேவ, நும் என்றது ஒருமை பன்மை மயக்கம், 'கலம்பெறு கண்ணுள ரொக்கற்றலைவ!... நீயிரும்' (மலைபடுகடாம். 50-53) என்புழிப்போல. விம்மல், துன்பம், பூரிப்பு என்ற இருபொருளு முணர்த்தும். சுக்கிரீவன் துன்புற்றுத் தன்னை அனுப்பினான் என்பதே உண்மையாயினும் 'நும் வரவு நோக்கிப் பூரிப்புக்கொண்டு என்னை அனுப்பினான்' என்று கூறியதாக இராம இலக்குவர் கருதுமாறும் அமைந்துள்ளமை காணலாம். வினவிய, செய்யிய என்னும் வினையெச்சம். இப் பாடலில் விரித்துக்கூற வேண்டிய செய்திகள் யாவும் சுருங்க விளங்க உரைக்கப்பட்டிருத்தல் காணலாம். முன்னைச் செய்யுளில் இராமனை உறுப்புகளால் பெயர் கூறி விளித்தவன், இங்கு, முன் தான் எண்ணியவாறே 'தேவ! என்று விளித்தது மிகவும் பொருத்தமுடையதாகும். 'மீளா நெறி யுய்க்கும் தேவரோதாம்' என்று முன் அநுமன் எண்ணியது நினைக்க. (16)

## இராமன் அநுமனைத் தனக்குள் பாராட்டுதல்

**3869.** மாற்றமஃ துரைத்த லோடும்
வரிசிலைக் குரிசின் மைந்தன்
தேற்றமுற் றிவனி னூங்குச்
செவ்வியோ ரின்மை தேறி

யாற்றலு நிறையுங் கல்வி
யமைதியு மறிவு மென்னும்
வேற்றுமை யிவனோ டில்லை
யாமென விளம்ப லுற்றான்.

மாற்றம் அஃது உரைத்தலோடும்,
வரிசிலைக் குரிசில் மைந்தன்
தேற்றம் உற்ற, இவனின் ஊங்குச்
செவ்வியோர் இன்மை தேறி,
'ஆற்றலும், நிறையும், கல்வி
அமைதியும், அறிவும், என்னும்
வேற்றுமை இவனோடு இல்லையாம்'
என, விளம்பலுற்றான்.

பொ :—அந்த விடையை அனுமன் சொன்ன அளவில் கட்ட மைந்த வில்லையுடைய தசரத சக்கரவர்த்தியின் மைந்தனாகிய இராமன், தெளிவு பெற்றுள்ள இவ்வனுமனைக் காட்டிலும் மேம்பட்ட செம்மைக் குணமுடையோர் இவ்வுலகத்துப் பிறர் இன்மையைத் தெளிந்து, திறமையும் மன அடக்கமும் கல்வியால் வந்த அமைதித் தன்மையும் அறிவும் இவனோடு சிறிதும் வேற்றுமையுடையனவாக இல்லை; இவனோடு ஒன்றுபட்டனவே ஆம் எனக் கருத்துட் கொண்டு இலக்குவனுக்குச் சொல்லத் தொடங்கினான்:

கு :—மாற்றம் – மறுமொழி; விடை. இராமன் கேள்விக்கு அனுமான் கூறிய விடையையே இங்கு 'மாற்றம்' என்றார். குரிசில் – உபகாரி; இங்குத் தயரதனை உணர்த்திற்று. வரிசிலை மைந்தன் என இயையும். தேற்றமுற்ற இவன் என்புழி அகரம் தொகுத்தல் விகாரம் பெற்றது. 'புகழ் புரிந்தில்லிலோர்' (குறள் 59) என்புழிப் போல. அனுமன் கூறிய விடையால் அவன் தெளிவு மிகுதி புலனாதலின் இராமன் அதனையே முன் எடுத்துக் கூறினான். செவ்வியோர் – செம்மைக் குணத்தர். ஆற்றல் - திறமை. நிறை ஆடவர்க்குரிய குணங்களாகிய அறிவு நிறை ஓர்ப்பு கடைப்பிடி என்றவற்றுள் ஒன்று. கல்வியால் வந்த அமைதித்தன்மையை 'கல்வியமைதி' என்றான். அறிவு என்பது இயற்கையறிவை. கல்வி என்றமையால் செயற்கையால் வந்த அறிவு பெறப்பட்டது. என்னும் - சிறிதும். இவனோடு என்னும் வேற்றுமை யில்லையாம் என இயையும். 'என்னுமிமையாள்' (சீவக. 1658) என்புழியும் இச் சொல் இப்பொருள் படுதல் காணலாம். அனுமன்பால் ஆற்றல் முதலியன வேறுபாடின்றி அவனாகவே கலந்து மிளிர்கின்றன

என்றவாறு. என்றது, ஆற்றலின் வடிவம், குணங்களின் வடிவம், அமைதியின் வடிவம் அறிவின் வடிவம் அனுமான் என்னுமாறு அவனோடு அவை ஒன்றுபட்டுள்ளன என்றபடி. (17)

## இராமன் இலக்குவனிடம் அனுமனைப் புகழ்தல் 3870–3871

3370. இல்லாத வுலகத் தெங்கு
மீங்கிவ னிசைகள் கூரக்
கல்லாத கலையும் வேதக்
கடலுமே யென்னுங் காட்சி
சொல்லாலே தோன்றிற் றன்றே
யார்கொலிச் சொல்லின் செல்வன்
வில்லார்தோ ளிளைய வீர
விரிஞ்சனோ விடைவ லானோ.

“ இல்லாத உலகத்து எங்கும்
ஈங்கு இவன் இசைகள் கூரக்
கல்லாத கலையும், வேதக்
கடலுமே ” என்னும் காட்சி
சொல்லாலே தோன்றிற்று அன்றே ?
யார்கொல் இச்சொல்லின் செல்வன் ?
வில் ஆர் தோள் இளைய! வீர !–
விரிஞ்சனோ ? விடைவ்லானோ ?

பொ :—வில் அமைந்த தோளையுடைய இளையவனே! வீரனே ! இங்குள்ள இவன், புகழ்கள் மிகுமாறு கற்றுக்கொள்ளாத கலைகளும், வேதமாகிய கடலும் உலகத்து எங்கும் இல்லாதனவே என்னும் தெளிவு இவன் சொல்லாலேயே தோன்றியது அன்றோ? இத்தகைய சொல்லின் செல்வமுடையவன், கலைமகள் கேள்வனாகிய பிரமனோ ? அல்லது அவனுக்கு மேற்பட்டவனாய விடையை ஏறிநடத்தவல்ல உருத்திரனோ ? யாராயிருக்கலாம் ?

கு :—இவன் கல்லாத கலையும் வேதக்கடலும் உலகத்தெங்கும் இல்லாதவே என இயைத்து ஏகாரத்தைப் பிரித்துக் கூட்டுக. உலகத்துள்ள எல்லாக் கலைகளையும் எல்லா வேதங்களையும் அனுமன் நன்கு கற்றவன் என்பது அவன் சொல்லாலே புலனாயிற்று என்றவாறு. காட்சி - அறிவு; தெளிவு என்னும் பொருளில் இங்கு வந்தது. அனுமன் தன்னை இன்னான் என முன்னமே அறிவித்த பின்னும்

யார் கொல்' என்ற வினு நிகழலாமோ எனின்? அவன் பிறப்புப் பற்றிய ஐயம் அனுமன் சொல்லிய வரலாற்ருல் தீர்ந்தது; அவன் 'சிறப்புப் பற்றிய ஐயத்தால் இங்கு வினு நிகழ்ந்தது என்க. பிரமனின் அமிசமாகவோ உருத்திரனின் அமிசமாகவோ இருந்தாலன்றி இத்தகைய சொல்லின் செல்வம் பெறல் இயலாது; இச் சொல்லின் செல்வம் பெற்றுள்ள அனுமன் அவ்விருவருள் யார் அமிசமானவன்? என்று அவனைப் பாராட்டு முகத்தால் இலக்குவனை வினவியவாறு. கல்லாத வேதக்கடலும் என மேலும் இயையும். வேதத்தின் விரிவைப் புலப்படுத்த வேதக்கடல் என உருவகஞ் செய்தவாறு. (18)

3871. மாணியாம் படிவ மன்று
மற்றிவன் வடிவ மைந்த
வாணியிவ் வுலகுக் கெல்லா
மென்னலா மாற்றற் கேற்ற
சேணுயர் பெருமை தன்னைச்
சிக்கறத் தெளிந்தேன் பின்னர்க்
காணுதி மெய்ம்மை யென்று
தம்பிக்குக் கழறிக் கண்ணன்.

மாணி ஆம் படிவம் அன்று,
மற்று இவன் வடிவம்; மைந்த!
ஆணி இவ் உலகுக்கு எல்லாம்
என்னலாம் ஆற்றற்கு ஏற்ற
சேண் உயர் பெருமை தன்னைச்
சிக்கு அறத் தெளிந்தேன்; பின்னர்க்
காணுதி மெய்ம்மை என்று,
தம்பிக்குக் கழறிக், கண்ணன்,

பொ:—வலிமையுடைய இலக்குவ! இவன் வடிவம், நாம் காணும் பிரமசாரியாகிய வடிவம் அன்று; இவ்வுலகுக்கு எல்லாம் அச்சாணி என்றே சொல்லக்கூடிய இவன் திறமைக்கு ஏற்றதாகிய மிக உயர்ந்த பெருமையை ஐயம் இன்றித் தெளிந்தேன்; அது மெய்ம்மையாதலை நீயும் பின்பு காண்பாய்; என்று தம்பிக்குக் கூறி விட்டு இராமன்,

கு:—குளகம். வருஞ்செய்யுளில் 'என்ருன்' என்பதோடு முடியும். மாணி - பிரமசாரி; முன் மாணவப் படிவம் என்றதும் இவ்வேடத்தையேயாம். இலக்குவன் இராமனையே தந்தையெனக் கொண்டவ

ஞதலின் அவனை 'மைந்த' என அம் முறையான் விளித்தான் எனலும் ஆம். காணப்பட்ட மாணியாம் படிவத்தை 'அன்று' என மறுத்து 'இவ்வுலகுக்கு ஆணி என்னலாம்' என்று கூறியது பொருள் அவநுதி அணியாகும். 'சிறப்பினும் பொருளினும் குணத்தினும் உண்மை, மறுத்துப் பிறிதுரைப்பது அவநுதியாகும்' (தண்டி - 75 சூ) என்பது விதி. காட்சியால் மாணியாகத் தோன்றினும் கருத்துவகை யால் இவ்வுலகுக்கே அச்சாணி எனத்தக்க பெருமையுடையவன் என்றவாறு. "உருவுகண் டெள்ளாமை வேண்டும் உருள்பெருந் தேர்க், கச்சாணி யன்னா ருடைத்து" (குறள் - 667) என்றது நினைக்க. உருவாற் பெரிய தேரின் இயக்கத்திற்கு உருவாற்சிறிய அச்சாணி இன்றியமையாக் காரணமாதல் போல, இப் பெரிய உலகம் நன்கு நடைபெற இந்த மாணி இன்றியமையாத காரணமாவான் என்ற வாறு. சேனுயர் என்றது, மீமிசைச் சொல். சிக்கு என்றது இங்கு ஐயந்திரிபுகளை. யான் சிந்தனையால் அநுமானித்துக் கூறியதைப் பின் நீ கண்களால் காணப்போகின்ருய் என்பான், 'பின்னர்க் காணுதி' என்ருன். இராமன் அனுமனைப் பற்றிக் கூறியதில் இலக் குவனுக்கு உடன்பாடில்லை என்பதை அவன் முகக்குறிப்பால் உணர்ந்து 'காணுதி மெய்ம்மை' என்று கூறினுன். கழறி என்ற சொல்லைக் கம்பர் பெய்ததும் அக்கருத்தாற் போலும். கண்ணன் என்றது இராமனை; கண்ணழகு உடையவன்; எல்லோர் கண்ணிலும் இருப்பவன் என்ற காரணம் பற்றிய பெயர் எனினும் ஆம். (19)

இச் செய்யுட்குப்பின் பல அச்சுப்புத்தகங்களில் காணப்படும்,

3871 (a) "மற்றுமிவ் வுலகத் துள்ள முனிவர்வா னவர்க ளாரிச்
சொற்றிற முடையார் மற்றுச் சுருதியின்தொகுதி யாவும்
முற்றறி தருமிம் மாணி மொழிக்கெதிர் முதல்வ ராய
பெற்றியர் மூவர்க் கேயும் பேராற்ற லரிது மன்னே"

என்ற பாடல், பதினைந்து ஏடுகளில் இல்லாமையானும் முன்கூறிய கருத்தையே இப்பாடல் விளக்குதலானும் இடைச் செருகல் பாடல் என்பது தெளிவாகின்றது.

### இராமன் சுக்கிரீவனைக் காட்டுமாறு கூறல்

**3872.** எவ்வழி யிருந்தான் சொன்ன
கவிக்குலத் தரசன் யாங்க
ளவ்வழி யவனைக் காணு
மருத்தியா லணுக வந்தே

மிவ்வழி நின்னை யுற்ற
வெமக்குநீ யின்று சொன்ன
செவ்வழி யுள்ளத் தோனைக்
காட்டுதி தெரிய வென்றான்.

'எவ்வழி இருந்தான், சொன்ன கவிக்குலத்து அரசன் யாங்கள்
அவ்வழி அவனைக் காணும் அருத்தியால் அணுக வந்தேம்;
இவ்வழி நின்னை உற்ற எம்க்கு நீ இன்று சொன்ன
செவ்வழி உள்ளத் தோனைக் காட்டுதி, தெரிய' என்றான்.

பொ :—“நீ சொன்ன கவிக்குலத்துக்கு அரசனாகிய சுக்கிரீவன் எவ்விடத்து இருந்தான்? நாங்கள் அவனுள்ள இடத்துச் சென்று அவனைக் காணவேண்டும் என்னும் ஆசையால் இங்கு அடைந்தோம்; இவ்விடத்தில் அவன் துணைவனாகிய நின்னை அடைந்த எங்கட்கு அன்று நீ சொன்ன செந்நெறி செல்லும் உள்ளமுடைய அச்சுக்கிரீவனைத் தெரியுமாறு காட்டுவாயாக” என்று கூறினான்.

கு :—கவிக்குலம் - குரங்கினம். அரசனாதலின் அவன் இருக்குமிடத்தில் சென்று காண விரும்பினோம் என்று கூறினான். 'யாமுள்ள இவ்விடத்தில் அவனை அழைத்துவராது, அவனுள்ள இடத்திற்கு எம்மை அழைத்துச் செல்க' என்று சுக்கிரீவனுக்குப் பெருமை தந்து கூறியபடி. அருத்தி - ஆசை. சுக்கிரீவனுக்குத் துணையாக உள்ள நின்னை என்க. (20)

### அனுமன் பாராட்டு

3873. மாதிரப் பொருப்போ டோங்கு
வரம்பிலா வுலகின் மற்றுப்
பூதரப் புயத்து வீரர்
நும்மொக்கும் புனிதர் யாரே
யாதரித் தவனைக் காண்டற்
கணுகினி ரென்னி னன்னான்
றீதவித் தமையச் செய்த
செய்தவச் செல்வ நன்றே.

'மாதிரப் பொருப்போடு ஓங்கு
வரம்பு இலா உலகின், மற்றுப்
பூதரப் புயத்து வீரர்
நும் ஒக்கும் புனிதர் யாரே?

ஆதரித்து அவனைக் காண்டற்கு
அணுகினிர் என்னின், அன்னான்,
தீது அவித்து அமையச் செய்த,
செய்தவச் செல்வம் நன்றே!'

பொ :—திசைகளின் இறுதியிலுள்ள சக்கரவாளகிரி என்னும் மலை அளவு வரையில் (பெருமையால்) உயர்ந்து எல்லை பெற்று விளங்கும் இவ்வுலகில் உள்ள மலை போன்ற புயத்தையுடைய வீர ராகிய நும்மை ஒத்துவிளங்கும் தூயவர் யாருளர்? (எவருமிலர்) அத்தகைய நீர் ஆசைப்பட்டு அவனைக் காண்பதற்கு இங்கு வந்தீர் கள் என்றால், அச்சுக்கிரீவன் தீமைகளைச் செய்யும் ஐம்பொறியை அடக்கிப் பொருத்தமுறச் செய்த செய்தவமாகிய செல்வம் நல்லதே யாம்.

கு :—மாதிரப் பொருப்பு என்றது, சக்கரவாளகிரியை; அது திசைகளினிறுதியில் இருப்பதாகலின் அப்பெயர்த்தாயிற்று. உல கிற்கு அடை. மற்று - அசை. பூதரம் - மலை, பூமியைத் தாங்குவது என்ற காரணம் பற்றி வந்தது. மன்னவன் மக்களாகிய இவர் புயங்கட்கும் பூமியைத் தாங்கும் இயல்பு இருத்தல் பற்றி மலையைப் பூதரம் என்ற பெயரால் குறித்தார். மலை போன்ற தோள்களை யுடைய வீரர் என்பதே கருத்து. வாலி என்னும் பகைவனைவெல்லும் நோக்கத்தான் அனுமன் ஆதலின், இராம இலக்குவரின் தோட் பெருமையை நினைந்து கூறினான். வீரராகிய நும்மை ஒக்கும் புனிதர் யாரே என்க. ஏகாரம் எதிர்மறைப் பொருளது. வலிமையும் தூய்மையுமுடைய நீங்களே சுக்கிரீவனைக் காண விரும்பி வந்தது அவன் செய்த நற்றவத்தாலாகும் என்பான், 'அன்னான் தீதவித் தமையச் செய்த செய்தவச் செல்வம் நன்றே' என்றான். செய்தவம் என்புழிச் செய் என்பது பொருளின்றி நின்றது, பெயர்ச்சொற் கிளவி என்பதில் சொல் என்பது போல. தீது என்பது தீயன செய்யும் ஐம்பொறி வாயிலாகச் செல்லும் அவாவினை. நன்றே என்புழி ஏகாரம் தேற்றம். (21)

இச்செய்யுளின்பின் சில ஏடுகளில்,

3873 (a) இருக்கன்மா மைந்த ரான வாலியு மிளவ ருனும்
செருக்கினோ டிருக்குங் காலைச் செருநரிற் சீறி வாலி
நெருக்குற வெருவி யிந்த நெடுங்குவட் டிருத்தான் றன்பால்
மருக்குலாந் தாரீர் வந்த தவன்செய்மா தவத்தி னன்றே

என்ற செய்யுள் காணப்படுகின்றது.

### அனுமன் சுக்கிரீவனுடைய வரலாறு கூறுதல்

3874. இரவிதன் புதல்வன் றன்னை
யிந்திரன் புதல்வ னென்னும்
பரிவிலன் சீறப் போந்து
பருவரற் கொருவ னாகி
யருவியங் குன்றி னென்னோ
டிருந்தன னவன்பாற் செல்வம்
வருவதோ ரமைவின் வந்தீர்
வரையினும் வளர்ந்த தோளீர்.

'இரவிதன் புதல்வன் தன்னை,
இந்திரன் புதல்வன் என்னும்
பரிவு இலன் சீறப், போந்து,
பருவரற்கு ஒருவன் ஆகி,
அருவி அம் குன்றின், என்னோடு
இருந்தனன்; அவன்பால் செல்வம்
வருவது ஓர் அமைவின் வந்தீர்
வரையினும் வளர்ந்த தோளீர்!'

பொ:—மலையினும் பெரியதாக வளர்ந்த தோள்களையுடையவர்களே! சூரியன் மகனாகிய சுக்கிரீவனை இந்திரன் புதல்வன் என்று சொல்லப்படும் இரக்கமற்றவனாகிய வாலி என்பவன், கோபித்துத் துரத்தினமையால் அஞ்சி வந்து துன்பம் அனுபவிக்கத் துணையுமின்றி ஒருவனே ஆகி, அருவிகள் நிறைந்த அழகிய இந்த ருசியமூகம் என்னும் மலையில் என்னோடு தங்கி யிருக்கின்றான்; அவனிடத்துச் செல்வம் வருதற்குரிய ஒரு தன்மையினால் நீர் இங்கு வந்துளீர்.

கு:—இங்கும் தோள்களைச் சிறப்பித்தது, பகைவெல்லும் தகைமை நினைந்தேயாம். சூரிய குலத்துப் பிறந்த இராமனுக்குச் சுக்கிரீவன்பால் பற்றுண்டாதற்கு அவன், தன் குலமுதல்வனாகிய சூரியன் மகன் என்பதும் ஒரு காரணமாயிற்று எனலாம். இந்திரன் புதல்வனாயிருந்தும் அவன்போல் அன்பில்லாமையால் அவன் புதல்வன் என்பது பெயரளவே என்பது தோன்ற இந்திரன் புதல்வன் என்னும் பரிவிலன் என்றான். இதனால் சுக்கிரீவன் சூரியன் மகன் என்பதற்கேற்ற குணநலமுடையவன் என்பதும் புலப்படுத்தியவாறு. ஒரு தாய் வயிற்றுப் பிறந்தோராயினும் வாலி வலியனாய்ச் சுக்கிரீவனுக்கு நலிவு பல செய்தான் என்பான் பரிவிலன்சீற என்றான். போந்து - வந்து. பருவரல் - துன்பம்.

துன்பத்திற்குத் துணையாவார் பிறரின்மை தோன்றப் 'பருவரற்கு ஒருவனுகி' என்றுன். மனைவியாகிய துணையுமின்றி வருந்துகின்ருன் என்பதைக் குறிப்பித்தவாறு. குன்று என்பது ருசியமுக மலை. இனி அருவி ஒழுகும் குன்று போன்று கண்ணீர் பெருகிய உடம்பையுடையனுய் எனச் சுக்கிரீவனுக்கு உவமையாக்கலுமொன்று. நீங்கள் வந்தமையால் அவன்பால் இனிச் செல்வம் உளதாகும் என்பான், 'அவன்பாற் செல்வம் வருவதோர் அமைவின் வந்தீர்' என்றுன். இனிச் செல்வம் வருவதோர் தன்மைபோல வந்தீர் என உவமையாக்கலுமாம். சுக்கிரீவனைக் காண்பதற்குமுன் அவன்பால் இராமன் பற்றுக்கொள்ளுமாறு அனுமான் செய்தமையோடு அச் சுக்கிரீவன் செல்வம் பெற உங்கள் துணை வேண்டும் என்பதையும் தெரிவித்தமை காணலாம். (22)

அஞ்சினர்க்கு அடைக்கலம் கொடுத்தலின் சிறப்புக் கூறியது
3875-3876

**3875.** ஒடுங்கலி லுலகம் யாவு
முவந்தன வுதவி வேள்வி
தொடங்கின மற்று முற்றத்
தொல்லறந் துணிவ ரன்றே
கொடுங் குலப் பகைஞஞ்கிக்
கொல்லிய வந்த கூற்றை
நடுங்கினர்க் கபய நல்கும்
அதனினும் நல்லது உண்டோ?

'ஒடுங்கல் இல் உலகம் யாவும்
உவந்தன உதவி, வேள்வி
தொடங்கின, மற்றும், முற்றத்
தொல் அறம் துணிவர் அன்றே,
கொடுங்குலப் பகைஞன் ஆகிக்
கொல்லிய வந்த கூற்றை
நடுங்கினர்க்கு அபயம் நல்கும்
அதனினும், நல்லது உண்டோ?'

பொ :—சுருங்குதல் இல்லாது விரிந்துள்ள உலகத்துள்ள உயிர்கள் யாவும் விரும்பினவற்றையெல்லாம் கொடுத்துச் செய்ய வேண்டும் என்று தொடங்கின வேள்விகளையும், மற்றுமுள்ள பழைய அறங்களையும், முற்றுப்பெறச் செய்ய(ப் பெரியோர்கள்)

துணிவார்கள் அன்றே? அவ்வறங்களுள், தன் குலத்திற்கே கொடுமையான பகைவனாகித் தம்மைக் கொல்ல வந்த எமன் போன்றவனை அஞ்சி, நடுங்கினவர்கட்கு அபயம் கொடுக்கும் அவ் வறத்தினும் நல்லதோர் அறம் உண்டோ ? (இல்லையன்றே !)

கு :—ஒடுங்குதல் - சுருங்குதல் ; அது இல்லாமை, விரிந்திருத்தல் அறங்களுள் வேள்வி சிறந்தது ஆதலின் அதனை எடுத்துக் கூறிப் பிறவறங்களை 'மற்றும் தொல்லறம்' என்று தொகுத்துக் கூறினர். வேள்வி செய்யுங்கால் உயிர்கள் உவந்தன உதவல் இன்றியமையாக் கடன் ஆகலின், அதனை வேள்விக்கு அடையாக்கினர். வேள்வி முதலிய நல்லறங்களும் அஞ்சினர்க்கு அபயம் நல்குவதே சிறந்த அறம் என்பது புலப்படுத்திச் சுக்கிரீவனுக்கு அபயம் நல்கி அருள் புரிதல் வேண்டும் என்பதற்குத் தோற்றுவாய் செய்தவாறு. கொல்லிய, செய்யிய என்னும் வினையெச்சம். கூற்றுப் போன்றானைக் கூற்று என உவமையாகு பெயரால் கூறினன். பொதுவகையால் கூறினனாயினும் கொல்லிய வந்த கூற்று என்பது வாலியையும் நடுங்கினர் என்றது, சுக்கிரீவன் முதலியோரையும் உளங்கொண்டு கூறியதேயாம். கூற்றை நடுங்கினர் என்பது, "அச்சக்கிளவிக் கைந்து மிரண்டு மெச்சமிலவே பொருள் வயினான" (தொல் - சொல் - 100) என்ற விதியால் அமைந்தது. பயப்படாதே என்று அடைக்கலம் கொடுத்தலை 'அபயம்' என்றான் ; அபயம் - பயம் இல்லாது செய்தல். "கருணையோர்க்குச் சீரிய தன்மை நோக்கின் இதனின் மேல் சிறந்ததுண்டோ?" (யுத்த - வீடணனடைக். 119) என இராமனே அபயதானத்தின் சிறப்பைக் கூறுதல் காணலாம். "உடைந்தவர்க் குதவானாயின் உள்ளதொன் றீயானாயின் அடைந்தவர்க் கருளானாயின், அறம் என்னாம்? ஆண்மையென்னாம்?" (யுத்த- வீடணனடைக். 111) என்பதும் இங்கு ஒப்புநோக்கத்தகும், (23)

**3876.** எம்மையே காத்தி ரென்ற
லெளிதரோ விமைப்பி லாதோர்
தம்மையே முதலிட் டான்ற
சராசரஞ் சமைத்த வாற்றல்
மும்மையே மூலகுங் காக்கு
முதல்வர்நீர் முருகற் செவ்வி
யும்மையே புகல்புக் கேமுக்
கிதின்வரு முறுதி யுண்டோ.

"எம்மையே காத்திர்" என்றல்
எளிது அரோ! இமைப்பு இலாதோர்
தம்மையே முதலிட்டு, ஆன்ற
சராசரம் சமைத்த ஆற்றல்
மும்மை ஏழ் உலகும் காக்கும்
முதல்வர்நீர்; முருகற் செவ்வி
உம்மையே புகல்புக்கேமுக்கு,
இதின் வரும் உறுதி உண்டோ?

பொ:—கண் இமைத்தல் இல்லாதவர்களாகிய தேவர் முதலாக அமைந்த நிற்பவும் நடப்பவுமாய உயிர்களைப் படைத்த வலிமையுடைய மூன்று வகைப்பட்ட ஏழுலகங்களையும் காக்கத்தக்க தலைமையுடையீர் நீர் ஆதலின், எங்களைக் காப்பாற்றும் தகுதியுடையீர் என்று உங்களைக் கூறுதல் (உங்களுக்குப் பெருமை தருவதன்று) எளிமைத் தன்மையைக் கற்பித்ததேயாகும்; முருகனைப் போன்ற தகுதியுடைய உங்களையே புகலிடமாகக் கொண்டு அடைக்கலம் புகுந்த எமக்கு இவ்வடைக்கலம் புகுவதைக் காட்டிலும் உறுதிதருவது வேறு ஒன்று உண்டோ? இல்லை.

கு:—அரோ - அசைநிலை. ஆற்றல் அமைந்த உலகும் என்க உலகும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. மும்மையேழுலகும் காக்கும் முதல்வர்பால் ஒருலகத்தில் ஓரிடத்திலுள்ள ஒரு சிலர் வந்து எம்மையே காக்கும் தகுதியுடையீர் என்று கூறுதல் புகழாகாது; என்னை? அவராற்றலைத் தோற்றுவிக்கும் செயலன்று அது ஆகலின் என்றவாறு. மும்மை - மூன்று என்னும் பொருளது. 'மூவேழுலகமும்' (பரிபாடல் - 3:9) என்பதால் மும்மையேழுலகு உண்மை தெளியலாம். இதனால் அனுமன் இராம இலக்குவரின் ஆற்றலைப் புகழ்வதுபோல் தமக்கு அடைக்கலமீந்து காக்குமாறு வற்புறுத்தினனாயிற்று. முருகற் செவ்வி - முருகனைப் போன்ற தகுதி. உம்மையே என்புழி ஏகாரம் பிரிநிலை; தேற்றம் எனினும் ஒக்கும். இதின் என்புழி இன் உறழ்ச்சிப் பொருளது. உறுதி என்றது ஆகு பெயராய் உறுதிக்குக் காரணமான செயலை யுணர்த்தியது. இது என்னும் சுட்டுப் புகல்புகுதலாகிய தொழிலை யுணர்த்தினமையான் உறுதி என்பதும் செயலாதல் தெளிவு. (24)

## அனுமன் விரும்பியவாறு இலக்குவன் தம் வரலாறு கூறல் 3877-3880

3877. யாரென விளம்பு கேனு
னெங்குலத் தலைவற் கும்மை
வீரர்நீர் பணித்தி ரென்ருன்
மெய்ம்மையின் வேலி போல்வான்
வார்கழ லிளைய வீரன்
மரபுளி வாய்மை யாதுஞ்
சோர்வில னிலைமை யெல்லாந்
தெரிவுறச் சொல்ல லுற்ருன்.

'யார் என விளம்புகேன் நான்,
எம்குலத் தலைவற்கு, உம்மை?
வீரர்! நீர் பணித்திர்!' என்ருன்,
மெய்ம்மையின் வேலி போல்வான்;
வார்கழல் இளைய வீரன்,
மரபுளி, வாய்மை யாதும்
சோர்வு இலன், நிலைமை எல்லாம்
தெரிவுறச் சொல்லல் உற்ருன்.'

பொ :—மெய்ம்மையைப் பாதுகாக்கும் வேலி போல்பவனுகிய அனுமான், 'வீரர்களே! எங்குலத் தலைவனுகிய சுக்கிரீவனுக்கு உங்களை யார் என்று சொல்வேன்? நீங்கள் சொல்லுங்கள்' என்று வினவினன்; (உடனே) நீண்ட வீரக்கழல் அணிந்த இளைய வீரனுகிய இலக்குவன், முறைப்படி உண்மையாக நிகழ்ந்த நிகழ்ச்சி எதையும் மறந்துவிடாதவனுய்த் தங்களுக்கு நேர்ந்த நிலைமைகள் எல்லாவற்றையும் அனுமன் தெளியும்படி சொல்லத் தொடங்கினன்.

கு :—'நீங்கள் யார்' என்று இராம இலக்குவரை வினவுவது தகுதியன்று என்று விடுத்து, "யாரென விளம்புகேன் நான் எங்குலத் தலைவற்கு உம்மை" என்று அனுமன் வினவியது நாகரிகமாய் நயமாய் விளங்குதல் காணலாம். இராம இலக்குவர் மூலம் அவர் வரலாற்றை மெய்ம்மையாக அறிந்துகொண்டு சுக்கிரீவனுக்குக் கூறுவது முறையே யன்றித் தன் ஊகத்தால் யாதும் கூறலாகாது என்ற கருத்தினன் என்பது புலப்பட, 'மெய்ம்மையின் வேலிபோல்வான்' என்ருர். மெய்ம்மையைத் தவருது பாதுகாப்பவன் என்றவாறு. உளி மூன்றன் உருபின் பொருளில் வந்தது; முறையால் என்க. இராமன் குறிப்புணர்ந்து என்றும் இதற்குக் கருத்துக்

கூறலாம். இராவணன் சீதையைக் கவர்ந்த நிகழ்ச்சி பிறர்பால் சொல்லக் கூசுதற்குரிய நிகழ்ச்சியாயினும் அதையும் விடாது கூறினன் என்பார். 'வாய்மை யாதும் சோர்விலன் நிலைமையெல் லாம் தெரிவுற' என்ருர். சோர்தல் - மறத்தல். நெடிய வரலாறு கூறவேண்டி யிருத்தலின் இளைப்பு உண்டாகுமன்றே, அவ்விளைப்பு இல்லாமல் சொன்னன் என்றலுமொன்று. குகனுக்கும் இலக்குவனே தம் வரலாறு கூறியது இங்கு நினைக்கத்தகும். (25)

3878. சூரியன் மரபிற் றேன்றிச்
சுடர்நெடு நேமி யாண்ட
வாரிய னமரர்க் காகி
யசுரரை யாவி யுண்ட
வீரியன் வேள்வி செய்து
விண்ணுல கோடு மாண்ட
காரியன் கருணை யன்ன
கண்ணனக் கவிகை மன்னன்.

சூரியன் மரபில் தோன்றிச் சுடர்நெடு நேமி ஆண்ட
ஆரியன்; அமரர்க்கு ஆகி அசுரரை ஆவி உண்ட
வீரியன்; வேள்வி செய்து விண் உலகோடும் ஆண்ட,
காரியன்; கருணை அன்ன கண்ணன் அக்கவிகை மன்னன்.

பொ:—சூரியன் குலத்தில் தோன்றி, ஒளிமிக்க பெரிய ஆணைச் சக்கரத்தை யுடையவனாய் உலக முழுதும் அரசாண்ட தலைமை யுடையவன்; தேவர்களுக்குத் துணையாய்ச் சென்று சம்பரன் முதலிய அசுரரைக் கொன்ற வீரமுடையவன்; வேள்விகள் பல செய்து விண்ணுலகத்தோடு மண்ணுலகத்தையும் ஆண்ட செயல்திற முடையவன்; அருளே வடிவு கொண்டாற்போன்ற கண்ணோட்டமுடைய வன்; அந்தக் கொற்ற வெண்குடையை யுடையவன்.

கு:—அக் கவிகை மன்னன், தயரதன் என வருஞ் செய்யுளோடு முடியும்; குளகம். நேமி என்றது ஆணைச் சக்கரத்தை. நேமியுடைய வனாய் ஆண்ட என்க. ஆரியன் - தலைமையுடையவன். ஆவி உண்ட என்றது, உண்ணுமரபின உணக்கூறிய இலக்கணை. கொன்ற என் பதே கருத்து. அசுரர் என்றது சம்பரன் முதலியோரை. வீரியன் - வீரமுடையவன். சம்பரனிடமிருந்து மீட்ட விண்ணுலகத்தைத் தயரதன் இந்திரனுக்குக் கொடுத்த தலைமைபற்றி 'விண்ணுலகோடும் ஆண்ட' என்ருன். காரியன் - செயல் திறம் உடையவன். கண்

என்றது இங்குக் கண்ணோட்டத்தை. கருணை நிரம்பிய கண் என்பான் மிகுதி பற்றிக் 'கருணையன்ன கண்' என்றான். கவிகை - குடை; கவிந்து நிழல் செய்தலால் பெற்ற பெயர். (26)

3879. புயறரு மதத்திண் கோட்டுப்
புகர்மலைக் கிறையை யூர்ந்து
மயறரு மவுணர் யாரு
மடிதர வரிவிற் கொண்ட
வியறரும் புலமைச் செங்கோல்
மனுமுதல் யாரு மொவ்வாத்
தயரதன் கனக மாடத்
தடமதி லயோத்தி வேந்தன்.

'புயல் தரும் மதத்திண் கோட்டுப்
புகர் மலைக்கு இறையை ஊர்ந்து,
மயல் தரும் அவுணர் யாரும்
மடிதர, வரிவில் கொண்ட
இயல் தரும் புலமைச் செங்கோல்
மனு முதல் யாரும் ஒவ்வாத்
தயரதன், கனக மாடத்
தடமதில் அயோத்தி வேந்தன்.'

பொ :—மேகம் போலப் பொழியும் மதத்தினையும் திண்மையான கொம்புகளையும் உடையதாய்ப் புள்ளிகளையுடைய மலை போன்ற ஐராவதம் என்னும் யானைக்குத் தலைவனாகிய இந்திரனை விடையாக ஊர்ந்து மதமயக்கம் பொருந்திய அவுணர்கள் எல்லாம் மடியுமாறு கட்டமைந்த வில்லைக் கொண்டு போர் செய்த, இயல்பாகப் பொருந்திய அறிவினையும் செங்கோலினையும் உடைய மனு முதலாகிய எவ்வரசரும் ஒப்பாக மாட்டாத தயரதன், பொன் மயமான மாளிகைகளையும் பெரிய மதிலையும் உடைய அயோத்தி நகரத்திலிருந்த வேந்தன் ஆவான்.

கு :—மதத்தின் மிகுதி தோன்ற புயல் தருமதம் என்றார். புகர் மலை என்பது அடையடுத்த உவமையாகுபெயராய் ஐராவதம் என்னும் யானையை யுணர்த்தியது. புகர் - யானை முகத்துள்ள புள்ளி. இறை என்றது இந்திரனை. ஐராவதத்தை ஊர்தியாக உடையவன், வேறு ஒருவற்கு ஊர்தியானான் என்றவாறு. இந்திரனை விடையாக ஊர்ந்தவன் ககுத்தன் என்னும் சூரியகுலத்தரசன். சம்பரன்

முதலிய அவுணரை வென்ற தயரதனுக்கு உவமையாக வேண்டி முன் அவன் போலவே அவுணரை வென்ற ககுத்தனைக் கூறினான். அவன் மனுவின் குலத்தில் வந்தவனே ஆதலின், அம்மரபுப் பெயரால் மனு என்றே குறித்தான். இனி, ககுத்தன் செயலை மனுவுக்கேற்றி யுரைத்ததாகக் கூறலும் ஆம். தயரதன், பத்துத் தேர்களை வென்றவன், என்ற காரணத்தால் வந்த பெயர். "வெஞ்சினத் தவுணர் தேர் பத்தும் வென்றுளேற்கு" (1417) எனத் தயரதனே கூறியிருத்தல் காணலாம். சூரிய குலத்தில் பிறந்த அரசர்களில் தலைசிறந்தவன் தயரதன் என்பது உணர்த்தியவாறு. அயோத்தி, யுத்தமில்லாதது என்ற காரணத்தால் வந்த பெயர். "போர் முற்றொன் றறியாத புரிசைசூழ் புனலூரன்" (கலி. 97) என மதுரையும் கூறப்படுதல் காணலாம். தம் வீரமுடைமையைப் புலப்படுத்தத் தயரதன் வீரச் செயல்களைக் கூறியவாறு. (27)

3880. அன்னவன் சிறுவ னாமிவ்
வாண்டகை யன்னை யேவத்
தன்னுடை யுரிமைச் செல்வந்
தம்பிக்குத் தகவி னல்கி
நன்னெடுங் கானஞ் சேர்ந்தா
னாமமு மிராம னென்பா
னிந்நெடுஞ் சிலைவ லானுக்
கேவல்செய் யடியன் யானே.

'அன்னவன் சிறுவன் ஆம், இவ்
ஆண்டகை; அன்னை ஏவ,
தன்னுடை உரிமைச் செல்வம்
தம்பிக்குத் தகவின் நல்கி,
நல் நெடுங் கானம் சேர்ந்தான்;
நாமமும் இராமன் என்பான்;
இந் நெடுஞ் சிலை வலானுக்கு
ஏவல் செய் அடியன் யானே.'

பொ :—'இந்த ஆண்மையிற் சிறந்தவன் அந்தத் தயரதச் சக்கரவர்த்தியின் மகன் ஆவன்; தன் சிற்றன்னையின் ஏவலால், மூத்த மகனாகிய தனக்கு உரிமையுடைய அரசச் செல்வத்தைத் தன் தம்பிக்குப் பெருந் தன்மையோடு கொடுத்துவிட்டு, நல்ல நெடிய

காட்டை அடைந்தான்; 'பெயரும் இராமன் எனப்படுபவன்; இந்த நீண்ட வில்வலியுடையோனுக்குக் குற்றேவல் செய்யும் அடியவன் யான்.'

கு:—ஆண்டகை என்றது, புருடோத்தமன் என்ற கருத்தாலாகும். அன்னை என்றது சிற்றன்னையாகிய கைகேயியை. தயரதன் கருத்தின்றி நிகழ்ந்தது என்ற உண்மையை அன்னை ஏவ, என்பதால் இலக்குவன் புலப்படுத்தியவாறு. இராமன் சூர்ப்பணகைக்குத் தன் வரலாறு கூறுங்காலும், தரையளித்த தனி நேமித் தயரதன்றன் புதல்வரியாம் தாய் சொற்ருங்கி விரையளித்த கான் புகுந்தேம் (சூர்ப்பணகைப் - 136) என்றே கூறியிருத்தலும் காணலாம். மூத்தவர்க்குரித்தரசு என்பதே முறைமையாதலின் 'தன்னுடையுரிமைச் செல்வம்' என்ருன். தம்பி என்றது கைகேயியின் மகனுகிய பரதனை. "என் பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன், பெற்றதன்ரே" (1633) எனப் பெருந்தன்மையோடு மகிழ்ந்து கொடுத்தமை தோன்றத் 'தம்பிக்குத் தகவினல்கி' என்ருன். முற்றுந் துறந்த முனிவர் வாழ்கின்ற இடமாதலின் நற்கானம் என்ருன். கானத்தின் கடத்தற்கரிய பெருமையுணர்த்த 'நெடுங்கானம்' என்ருன். இராமன் தம்பி என்னுது. 'ஏவல்செய் அடியன்' என இலக்குவன் தன்னைக் கூறிக்கொண்டது, "தம்பி யெனும்படி யன்று அடியாரின் ஏவல் செய்தி" (1842) எனச் சுமித்திரையாகிய தன் அன்னை கூறிய சொல்லை நினைந்தேயாம். (28)

### இலக்குவன் சொல்லைக் கேட்ட அனுமன் இராமனை வணங்குதல்

3881. என்றவன் ருேற்ற மாதி
யிராவண னிழைத்த மாயப்
புன்ருெழி லிறுதி யாகப்
புகுந்துள பொருள்க ளெல்லா
மொன்றுமாண் டொழிவு ரும
லுணர்த்தின னுணர்த்தக் கேட்டு
நின்றவக் காலின் மைந்த
னெடிதுவந் தடியிற் ருழ்ந்தான்.

என்று, அவன் தோற்றம் ஆதி
இராவணன் இழைத்த மாயப்
புன் தொழில் இறுதி ஆகப்,
புகுந்து உள பொருள்கள் எல்லாம்,

ஒன்றும் ஆண்டு ஒழிவு உறுமல்,
உணர்த்தினன் ; உணர்த்தக் கேட்டு,
நின்ற அக் காலின் மைந்தன்,
நெடிது உவந்து, அடியில் தாழ்ந்தான்.

பொ :—என்று, அவ் இராமனுடைய பிறப்பு முதல் இராவணன் செய்த வஞ்சனையாகிய கீழ்மைச் செயல் ஈருக நிகழ்ந்துள்ள நிகழ்ச்சிகளில் ஒன்றும் அப்பொழுது தவறி விடாமல் எல்லாவற்றையும் உணர்த்தினன்; இலக்குவன் அவ்வாறு சொல்லக் கேட்டுக் கொண்டு நின்ற காற்றின் மகனுகிய அனுமன், பெரிதும் மகிழ்ந்து இராமனுடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கினன்.

கு :—இது கவிக் கூற்று. மாயப் புன்ருெழில் என்றது சீதையைக் கவர்ந்த வஞ்சனைச் செயலே. பொருள்கள் என நிகழ்ச்சிகளைக் குறித்தார். ஒழிவுருமல் எல்லாம் உணர்த்தினன் என இயையும். முடிந்தது முடித்தல் என்ற உத்தியால் கவி, இங்ஙனம் கூறினர். இலக்குவன் கூறிய வரலாற்றுனே இராமன் வணங்கத்தக்க பெருமையுடையன் என்பது புலனுகலின் அனுமான், நெடிது மகிழ்தலும் இராமனடி பணிதலும் செய்தான் என்க. தாழ்தல் இங்கு வணங்குதலையுணர்த்திற்று. (29)

அனுமன் தானும் வானர இனத்தினன் என்றல்

3882. தாழ்தலுந் தகாத செய்த
தென்னை நீ தரும மன்ருற்
கேள்விநூல் மறைவ லாளா
வென்றன னென்னக் கேட்ட
பாழியந் தடந்தோள் வீர
மாருதி பதுமச் செங்க
ணுழியா யடியேன் ருனு
மரிக்குலத் தொருவ னென்ருன்.

தாழ்தலும், ‘ தகாத செய்தது
என்னை நீ ? தருமம் அன்ருல் ;
கேள்வி நூல் மறை வலாளா !’
என்றனன் ; என்னக் கேட்ட

பாழி அம் தடந்தோள் வீர
மாருதி, 'பதுமச் செங்கண்
ஆழியாய்! அடியேன் தானும்
அரிக் குலத்து ஒருவன்' என்றான்.

பொ:—அனுமான் அவ்வாறு தன்னை வணங்கிய அளவில் இராமன், 'கேள்விக்கே யுரிய நூலாகிய வேதம் பயின்று வல்ல அந்தணனே! நீ செய்யத்தகாத வணக்கத்தைச் செய்தது, என்னையோ? (மன்னனாகிய என்னை அந்தணனாகிய நீ வணங்குதல்) தருமம் அன்று,' என்று கூறினானாக, அவன் கூறியது கேட்ட, வலிய பெரிய தோள்களையுடைய வீரமிக்க அனுமான், 'செந்தாமரை மலர் போன்ற சிவந்த கண்களையுடைய சக்கரவர்த்தியே! அடியேனும் குரங்குக் குலத்தில் பிறந்த ஒருவனேயாவன்' என்று கூறினான்.

கு:—வேதம் எழுதாக்கிளவி யாதலின், அதனை ஆசானிடம் கேள்வியாலன்றி அறிய இயலாமை நினைந்து 'கேள்வி நூல் மறை' என்றான். 'கேள்வியுட் கிளந்த ஆசானுரையும், (பரிபாடல் - 2: 61) என்புழி வேதத்திற்குக் 'கேள்வி' என்ற பெயர் கூறியிருத்தலும் காண்க. மறைவலாளன் எனவே அந்தணன் என்பது கூறியவாறு; என்னை? வேதம் அந்தணர்க்கே யுரியது என்பது மரபு ஆகலின் என்க. "செய்யா மொழிக்குந் திருவள்ளுவர் மொழிந்த, பொய்யா மொழிக்கும் பொருளொன்றே - செய்யா-வதற்குரிய ரந்தணரே" (திருவள்ளுவமாலை - 23) என்றது காண்க. நால்வருணத்தோருள் அந்தணர் உயர்ந்தோராதலின் அவர், அவர்க்குக் கீழ்ப்பட்ட அரச மரபினரை வணங்குதல் தகாது; தருமம் அன்று; என்பது இராமன் கருத்து. அனுமன் அந்தணச் சிறுவன் வேடத்தில் இருந்தமையால் இராமன் இங்ஙனம் கூற நேர்ந்தது. பாழி - வலிமை. மாருதிக்குக் கொடுத்துள்ள அடைகள் அவன் அந்தணன் அல்லன் என்பதை விளக்குவனவாக இருத்தல் காண்க. பாழியந்தடந்தோளும் வீரமும் அந்தணர்க்கு இன்மை தெளிவு. மருத்துவின் மதலையாதல் பற்றி மாருதி என்பதும் அனுமனுக்குப் பெயராயிற்று. ஆழியாய்! என்றது சக்கரவர்த்தி! என்னும் பொருளது; ஆணைச் சக்கரமுடையவன் என்பது கருத்து. தயரத சக்கரவர்த்தியின் புதல்வனாதல் பற்றி காடாளும் இராமனை இங்ஙனம் விளித்தான். பதுமச் செங்கண் ஆழியாய் என்றது, இராமனுடைய பண்டைத் தெய்வ நிலையை நினைந்து சக்கரப்படையுடையவனே என அனுமான் ஞானத்தால் உணர்ந்து கூறியதாகக் கொள்வது அத்துணை பொருத்தமுடையதன்று என்பது உய்த்துணரலாம். அரிக்குலம் - குரங்குக் குலம். சுக்கிரீவனே அன்றி எனப் பொருள்படுதலின் தானும் என்புழி உம்மை இறந்தது தழீயது. ஆல் - அசை. (30)

### அனுமன் பேருருக் கொண்டு நிற்றல் 3883-3884

**3883.** மின்னுருக் கொண்ட வில்லோர்
வியப்புற வேத நன்னூல்
பின்னுருக் கொண்ட தென்னும்
பெருமையாம் பொருளு நாணப்
பொன்னுருக் கொண்ட மேரு
புயத்திற்கு முவமை போதாத்
தன்னுருக் கொண்டு நின்றான்
றருமத்தின் றனிமை தீர்ப்பான்.

மின் உருக் கொண்ட வில்லோர்
வியப்புற, வேத நன்னூல்
பின் உருக் கொண்டது என்னும்
பெருமை ஆம் பொருளும் நாணப்,
பொன் உருக் கொண்ட மேரு,
புயத்திற்கும் உவமை போதாத்
தன் உருக் கொண்டு நின்றான்,
தருமத்தின் தனிமை தீர்ப்பான்.

பொ :—(துணையின்றி வருந்திக் கொண்டிருந்த) தருமத்திற்குத் துணையாய் நின்று உதவி அதன் தனிமையைப் போக்குபவனாகிய அனுமன், ஒளியுடைமையால் மின்னலின் உருவைத் தன்பாற் கொண்டாற் போன்ற வில்லையுடைய இராம இலக்குவர் வியப்படையவும், வேதமாகிய நல்ல நூல், முன் அருவாய் நின்றது, பின்னர் உலகு அளக்கப் பெரிய உருவு கொண்டது என்று சிறப்பித்துக் கூறும் அப்பெரும் பொருளாகிய திரிவிக்கிரமனும் நாணம் அடையவும், பொன் மயமான உருவத்தையுடைய மேருமலை தோளின் பெருமைக்கும் உவமைபோதாமைக்குக் காரணமாகிய தன்னுடைய உண்மை உருவத்தைக் கொண்டு நின்றான்.

கு:—அரக்கர்களால் தள்ளுற்ற தருமம் அனுமன் உதவியால் நிலைபெற இருக்கின்றமை நினைந்து அவனைத் "தருமத்தின் தனிமை தீர்ப்பான்" என்றார். "மெய்ம்மையின் வேலி போல்வான்" (25) என முன்னும், "அறத்துக் காங்கொரு தனித்துணையென நின்ற அனுமன்" (சுந்தரகாண்-1041) எனப் பின்னும் அனுமன் கூறப்பெறுதல் காணலாம். இங்குத் தருமம் என்றது அறத்தின் உருவாய சீதையை எனக் கொண்டு, 'தூது சென்று அவள் தனிமையைத் தீர்த்தற்கு உரியவன்' என்று பொருள் கூறலுமாம். வில் ஒளியுடைமையால்

மின்னலே உருவுகொண்டாற் போன்றுளது என்பது கருத்து. "மின்னின் மின்னும் வரிவிற் குமரா" (1752) என்று முன்னும் வில்லுக்கு மின்னை உவமை கூறியுள்ளமை நினைக. வில்லோர் என்றது இராம இலக்குவரை. வேதமாகிய நல்ல நூல் என்க. வேத நூலால் "பின்னுருக் கொண்டது" என்று சொல்லப்பட்ட பெருமையாம் பொருள் ஆவது, திரிவிக்கிரமாவதாரம். இயல்பாக முன்னரே கொண்ட உருவமன்றி மாவலிபால் உலகத்தைப் பெறப் பின்னர் இடைக்காலத்தே கொண்ட உருவம் என்பார், 'பின்னுருக் கொண்டதென்னும் பெருமையாம் பொருள்' என்றார். மாணியாய்ச் சென்று பேருருக் கொண்ட தன்மையில் அனுமானுக்கும் திரிவிக்கிரம னுக்கும் ஒப்புமையுண்டாயினும் திருமால் உலகளக்கக் கொண்ட பேருருவினும், அனுமன் இராமனுக்குக் காட்ட எடுத்த பேருருவம் பெரிதாகலின் அத் திரிவிக்கிரமனும் காணின் நாணுவான் என்பார், 'பெருமையாம் பொருளும் நாண' என்றார். சீதைக்கு அனுமன் தன்னுருவைக் காட்டும்போதும் இவ்வாறே 'ஆணியை யனுமனை யமைய நோக்குவான், சேணுயர் பெருமையோர் திறத்த தன்றென, நாணுறு முலகெலாம் அளந்தநாயகன்" (உருக்காட்டுப்-104) எனக் கூறுதலும் காண்க. என்னும் என்பது செய்பொருள் கொண்டு முடிந்த பெயரெச்சம். வியப்புற, நாண, தன்னுருக் கொண்டு நின்றான் என்க. தன்னுரு என்றமையால் அப்பேருருவே அனும னுக்குரிய உருவம் என்பது பெறலாம். இனி, முன்னைய தெய்வ நிலையில் தனக்குரியதாகிய விசுவ ரூபத்தைக் கொண்டு நின்றான் என்று கூறலுமாம். (31)

**3884.** கண்டில னுலக மூன்றுங்
காலினாற் கடந்து கொண்ட
புண்டரி கக்க ணாழிப்
புரவலன் பொலங்கொள் சோதி
குண்டல வதன மென்றாற்
கூறலாந் தகைமைத் தொன்றோ
பண்டைநூல் கதிரோன் சொல்லப்
படித்தனன் படிவ மம்மா.

கண்டிலன், உலகம் மூன்றும்
காலினால் கடந்து கொண்ட
புண்டரிகக் கண் ஆழிப்
புரவலன், பொலன் கொள் சோதி

குண்டல வதனம் என்ருல்,
கூறலாம் தகைமைத்து ஒன்ரே
பண்டை நூல் கதிரோன் சொல்லப்
படித்தனன் படிவம்? அம்மா.

பொ:—விண், மண், பாதலம் என்ற உலகம் மூன்றையும் திரிவிக்கிரம அவதாரத்தில் அடியால் அளந்து தனதாக்கிக் கொண்ட தாமரை மலர் போன்ற கண்களையும் சக்கரப் படையையும் உடைய காத்தற் கடவுளாகிய திருமாலின் அமிசமான இராமன், பொன்னிைலியன்ற ஒளியையுடைய குண்டலம் அணிந்த அனுமானின் முகத்தைக் காண இயலாதவன் ஆனுன் என்ருல், பழமையான இலக்கண முதலிய கலைகளைச் சூரியன் கற்பிக்கக் கற்றவனுகிய அவ்அனுமானின் பெருவடிவம் நம்போன்ரோரால் சொல்லத்தக்க தன்மையுடையதொரு பொருளோ? அன்று.

கு:—புரவலன், வதனம் கண்டிலன் என்ருல், படிவம் கூறலாம் தகைமைத்து ஒன்ரே? என இயையும். பெரிய உருவத்தையும் காண்டற்குரியவன் என்பார், இராமனை, 'உலக மூன்றும் காலினுல் கடந்து கொண்ட புரவலன்' என்றும், யாரும் எளிதில் காண்டற்குரிய ஒளிமுகம் என்பார், 'சோதிகுண்டல வதனம்' என்றும் கூறினுர். "மூவுலகு மீரடியால் முறை நிரம்பா வகை முடியத் தாவிய சேவடி" (சிலப். ஆய்ச்சியர் குரவை) என இளங்கோவடிகளும் உலக மூன்றும் காலினுல் திருமால் கடந்துகொண்ட செய்தியைக் கூறியிருத்தல் காணலாம். திரிவிக்கிரமனுக வடிவுகொண்ட திருமாலே இராமனுக வந்துள்ளமையால் இங்ஙனம் கூறினுர். மேல் திரிவிக்கிரமனே நாணத்தக்க பேருருவத்தைக் கொண்டான் அனுமன் என்றவர், இப்பாடலில் திரிவிக்கிரமன் அமிசமாகிய இராமனும் காண வியலாத அவன் உயர்ச்சியைக் கூறினுர். சூரியனுக்கு மாணவனுய் அவன்பால் கற்றற்குரிய பெருவடிவமுடையனுய் நின்று கற்றமை புலப்படக் 'கதிரோன் சொல்லப் படித்தனன் படிவம்' என்ருர். கல்விகற்கும் இளம் பருவத்தே விண்ணில் இயங்கும் சூரியனை நெருங்கிக் கேட்கும் பெருவடிவுடைய அனுமன், அமைச்சனுயிருக்கும் இப்போது அவ்வடிவுடையனுதல் வியப்பன்று என்றவாறு. அம்மா, வியப்பிடைச்சொல். (32)

## இராமன் இலக்குவனுக்கு அனுமன் வடிவத்தை வியந்து கூறல் 3885-3886

3885. தாட்படாக் கமல மன்ன
தடங்கணுன் றம்பிக் கம்ம
கீட்படா நின்ற நீங்கிக்
கிளர்படா தாகி யென்றும்
நாட்படா மறைக ளாலு
நவைபடா ஞானத் தாலும்
கோட்படாப் பதமே யைய
குரக்குருக் கொண்ட தென்ருன்.

தாள் படாக் கமலம் அன்ன
தடங்கணுன், தம்பிக்கு, 'அம்ம!
கீழ்ப் படா நின்ற நீங்கி,
கிளர்படாது ஆகி, என்றும்
நாட் படா மறைகளாலும்,
நவை படா ஞானத்தாலும்,
கோட்படாப் பதமே, ஐய!
குரக்கு உருக்கொண்டது' என்ருன்.

பொ:—நாளத்தில் பொருந்தாத தாமரை மலர் போன்ற பெரிய கண்ணையுடைய இராமன், தன் தம்பியாகிய இலக்குவனுக்கு(ச் சொல்கின்ருன்) 'ஐய! கேள்; கீழ்மை பொருந்தியுள்ள பாசத்தை இயல்பாகவே நீங்கப் பெற்று என்றும் ஞான ஒளி கெடாதது ஆகிக், காலவரையறைக்கு உட்படாத வேதங்களாலும் ஐயம் திரிபு அறியாமை என்ற குற்றங்கள் பொருந்தாத உயிர்களின் ஞானத்தாலும் அறிந்துகொள்ளப்படாத பரம்பொருளே குரங்கின் உருவத்தைக் கொண்டது' என்று புகழ்ந்து கூறினுன்.

கு:—தாள் - மலரின் கீழுள்ள தண்டு; நாளம். தாமரை மலரின் நாளம்போல இராமன் கண்களுக்குக் கீழ் அவற்றைத் தாங்குவது போன்ற உறுப்பு ஏதும் இன்மையால் 'தாட்படாக் கமலமன்ன' என்று இல்பொருள் உவமையாகக் கூறினுன். தடங்கணுன் என்றது இராமனை. 'ஐய' என்றது அன்பு பற்றிய விளி. 'அம்ம கேட்பிக்கும்' (தொல் - சொல் 271) என்ற விதியால் அம்ம என்றது 'கேள்' எனும் பொருளில் இங்கு வந்துளது; கீழ் என்பது கீள் எனப் போலியாய், வலிவர, கீட்படா என விகாரமுற்றது. கீழ்ப்படா நின்ற என்றது பாசங்களை; இயல்பாகவே பாசங்களினீங்கின பரம்பொருள்

என்பான், 'கீட்படா நின்ற நீங்கி' என்ருன். கிளர் என்றது இங்கு ஞான ஒளியை. என்றும் கெடாத ஞான ஒளியுடையதாய் முற்றும் உணரும் இயல்பினது என்பது கருத்து. இதனுல் இயல்பாகவே பாசங்களினின்று நீங்குதலும் கெடாத ஞானத்தால் முற்று முணர் தலும் ஆகிய கடவுளின் சிறப்பியல்பு கூறியவாறு. வேதம் காலத்திற்கு அப்பாற்பட்டது என்பான் 'நாட்படா மறை' என்ருன். காலத்திற்குட்படாதது என்றவாறு. மறைகளால் கோட்படாப்பதம் என்றமையால், பாச ஞானத்திற் கெட்டாத நிலேயும், நவைபடா ஞானத்தால் கோட்படாப்பதம் என்றமையால் பசு ஞானத்திற் கெட்டாத நிலேயுமாகிய அக்கடவுளின் பொதுவியல்பு புலப்படுத்திய வாறு. பதம் என்றது இங்குப் பரம்பொருளே. அனுமன் சிறிய திருவடி என்று பெயர்பெறுதற் கேற்பப் பதம் என்பதற்குக் கடவுளின் பாதம் என்று பொருள் கொள்ளுதலுமாம். பசு ஞானத்தில் சிறப்புடையதொன்றைக் கூறவேண்டி 'நவையிலா ஞானம்' என்ருன். கோட்படுதல் - கோசரமாதல்; புலப்படுதல். நீங்கி, ஆகி, கோட்படாப்பதம் என இயையும். இதனுல் பரம்பொருளே குரங்கின் உருவத்தைக் கொண்டது என அனுமனின் சிறப்பைப் புலப்படுத்திய வாறு. ஐய குரக்குரு என இயைத்து வியக்கத்தக்க குரக்குரு எனலுமாம். (33)

3886. நல்லன நிமித்தம் பெற்றே
நம்பியைப் பெற்றே நம்பா
லில்லேயே துன்ப மான
தின்பமு மெய்திற் றின்னும்
வில்லினு யிவனேப் போலாங்
கவிக்குலக் குரிசில் வீரன்
சொல்லினு லேவல் செய்வா
னவனிலே சொல்லற் பாற்ருே.

நல்லன நிமித்தம் பெற்றேம்;
நம்பியைப் பெற்றேம்; நம்பால்
இல்லேயே துன்பம் ஆனது;
இன்பமும் எய்திற்று; இன்னும்,
வில்லினுய்! இவனேப் போலாம்
கவிக்குலக் குரிசில் வீரன்
சொல்லினுல் ஏவல் செய்வான்;
அவன் நிலே சொல்லற் பாற்ருே?

பொ :—முன் நல்லனவாகிய சகுனத்தைப் பெற்ருேம் ஆதலின், இந்த அனுமாஞகிய நம்பியை இங்கு அடையப் பெற்ருேம்; இனி நம்மீடத்தில் துன்பம் என்பது இல்லை; இன்பமும் வந்ததே ஆம்; மேலும், வில்லையுடையவனே! இவனைப் போன்ற கவிக்குலத்தில் பிறந்த உபகாரியாகிய வீரன், சொல்லின்படி ஏவற் பணி செய்வான் என்ருல் (இவனை ஏவல் கொள்ளும்) அச்சுக்கிரீவன் நிலை சொல்லுந் தரத்ததோ? (அன்று என்றவாறு).

கு :—நம்பி - ஆடவரிற் சிறந்தோன்; அனுமன். சுக்கிரீவனை நோக்கிப் புறப்படுங்கால் நல்லனவாகிய சகுனங்களைப் பெற்ருேம் ஆதலின், இந்தச் சிறந்த அனுமனை இடைவழியில் அடையப் பெற்ருேம் என்றவாறு. இனி, நம்பியைப் பெற்றேம் ஆதலின், முன் நல்லன நிமித்தம் பெற்றிருத்தல் வேண்டும் எனக் காரியத்தைக் கொண்டு காரணத்தை அனுமானித்ததாகவும் கொள்ளலாம்; இங்ஙனம் கூறுவதாலும் அனுமனின் சிறப்பே மிக்குத் தோன்றுதல் காணலாம். நல்லவர் துணையைப் பெற்றமையால் துன்பம் நீங்குதலும் இன்பம் ஓங்குதலும் உறுதி என்பதுணர்த்தியவாறு. கவிக் குலக் குரிசில் வீரன் என்றது, உபகாரத்தன்மையும் வீரத்தன்மையுமுடைய அனுமனை. இவனைப் போலாம் குரிசில், வீரன் என்புழிப் 'போல்' ஒப்பில் போலி. குரிசில் - உபகாரி. குரிசில், வீரன் என்பன அனுமானைக் குறிக்க வந்த ஒரு பொருட் பல்பெயர். ஏவல் செய்வானெனின் என ஒரு சொல் வருவிக்க. அவன் என்றது ஏவல் கொள்ளும் சுக்கிரீவனை. இவ்வனுமானைப் போன்றவன் ஏவல் செய்வான் என்ருல் இவனை ஏவலனுகக் கொண்ட அவன் நிலை இவனிலைக்கு மேம்பட்டதேயாகும் என்பது அருத்தாபத்தியால் புலப்படுதலின், சொல்லற்பாற்ருே? என்ருன். இனி, செய்வான் என்பதைச் செயப்பாட்டு வினையாகக் கொண்டு ஏவல் செய்யப் பெறுவோனுகிய அச் சுக்கிரீவனிலை எனப் பொருள் கொள்ளுதலும் ஆம். இன்பமும் எய்திற்று; என்பது துணிவு பற்றி எதிர்காலம் இறந்தகாலமாயிற்று; வழுவமைதி. "தக்காரினத்தனய்த் தானெழுக வல்லானைச் செற்ருர் செயக்கிடந்ததில்" (குறள் 446) என்பவாகலின், காரணமாகிய தக்கவினம் பெற்றுவிட்டமையால் காரியமாகிய செற்ருரைச் செயலறச் செய்தலும் சீதையை மீட்டலும் இனித் தப்பா என்பது புலப்படுத்தி 'நம்பால் இல்லையே துன்பமான தின்பமுமெய்திற்று' என்ருன். (34)

அனுமன் சுக்கிரீவனைக் கொணரச் செல்லல்

3887. என்றக முவந்து கோல
முகமலர்ந் திமையா நின்ற
குன்றுறழ் தோளி னுரை
நோக்கியக் குரக்குச் சீயஞ்
சென்றவன் றன்னை யின்னே
கொணர்கின்றேன் சிறிது போது
வென்றியி ரிருத்தி ரென்று
விடைபெற்று விரைவிற் போனான்.

என்று, அகம் உவந்து, கோல
முகம் மலர்ந்து, இமையா நின்ற
குன்று உறழ் தோளினுரை
நோக்கி, அக்குரக்குச் சீயம்,
"சென்று அவன் தன்னை, இன்னே
கொணர்கின்றேன்; சிறிது போது
வென்றியிர்! இருத்திர்" என்று
விடைபெற்று விரைவில் போனான்.

பொ :—என்று சொல்லி மனமகிழ்ந்து, அதனால் அழகிய முகமும் மலரப் பெற்று வியப்பினால் இமையாது நின்ற மலைபோன்ற தோள்களையுடைய இராம இலக்குவரை நோக்கி, அந்த அனுமானாகிய சிங்கம், "வெற்றியுடையவர்களே! சிறிது போழ்து இங்கு இருங்கள்; (யான் அங்குச்) சென்று அச்சுக்கிரீவனை இப்பொழுதே அழைத்துக் கொண்டு வருகின்றேன்" என்று கூறி, அவர்பால் விடைபெற்றுக் கொண்டு விரைவாகச் சென்றான்.

கு :—நோக்கி - மனத்தால் நோக்கி; நோக்கல் நோக்கம். அவர் மனமொழி மெய்களில் வேறுபாடற்ற நிலையினராதலை, அனுமன் நோக்கி நன்குணர்ந்தான் என்பார், 'என்றக முவந்து கோல முகமலர்ந்திமையா நின்ற குன்றுறழ் தோளினுரை நோக்கி' என்றார். மகிழ்ச்சியான சொல்லைக் கூறியதற்கேற்ப முகமும் மலர்ந்து நின்றார் என்பதும், அவர் முகக் குறிப்பால் அவர் அகமுவந்தமையை யுய்த்துணர்ந்தான் அனுமன் என்பதும் புலப்படுத்தியவாறு. இங்கும் அனுமன் நோக்குப் பகைவெல்லும் தகைமையுடைய அவர் தோள்களின் மேலாதலைக் 'குன்றுறழ் தோளினுரை நோக்கி' என்பதால் புலப்படுத்தினர். தோற்றத்தால் குரங்காக இருப்பினும் நோக்கத்தால் சிங்கம் போல்வான் என்பார், அக் குரக்குச்சீயம் என்றார்.

சிங்கம் முன்னும் பின்னும் நோக்கித் தனக்கு வரும் நன்மை தீமைகளை யுணர்தல்போல அனுமானும், இராம இலக்குவரின் முன்னைய நிகழ்ச்சிகளையும் இனி நிகழ விருப்பனவற்றையும் நோக்கி, அவர்களால் தமக்கு வரும் நன்மைகளை ஆராய்ந்து சுக்கிரீவனை நட்புக் கொள்ளச் செய்தல் காண்க. வென்றியிர்! என்ற விளியும், வாலியை வெல்லும் தகுதியினர் என்ற கருத்து உடையதாகவே இருத்தல் காண்க. தகுதி மிக்கவரை நட்பாக்கும் ஆர்வம் தோன்ற 'விரைவிற் போனான்' என்றார். வென்றியிர்! சிறிது போது இருத்திர்; சென்ற வன்றன்னை யின்னே கொணர்கின்றேன், என்று...போனான் என இயையும். (35)

அனுமப் படலம் முற்றிற்று.

# 3. நட்புக்கோட் படலம்

இராமனும் சுக்கிரீவனும் நட்புக்கொண்ட நிகழ்ச்சியைக் கூறும் பகுதியாகலின் இது 'நட்புக்கோட் படலம்' என்று பெயர் பெறுகின்றது. சில சுவடிகளில் இப்பகுதி, மராமரப் படலத்துள் அடங்கியுளது; சில சுவடிகளில் 'சுக்கிரீவன் நட்புப் படலம்' எனவும், 'சுக்கிரீவன் நட்புப்புரி படலம்' எனவும், 'நட்புப் படலம்' எனவும் இப் படலப் பெயர் வேறுபட்டுக் காணப்படுகின்றது.

இராம இலக்குவரிடம் விடைபெற்றுப் போன அனுமன், சுக்கிரீவனை அணுகி, 'யானும் உன்குலமும் உய்ந்தனம்; வாலியின் உயிர் கவரக் காலன் வந்தனன்' எனக் கூறிக்கொண்டு அருநடம் புரிபவனாய், இராமனுடைய வரலாற்றில் சிறந்த நிகழ்ச்சிகளை யெல்லாம் எடுத்துக்கூறி, 'அத்தகையோன் நினக்கு அரசு தந்தருள்வது உறுதி; நீ முன் செய்த தவத்தாலும், உன்மனத் தூய்மையாலும் அவன் நின் துணையைப் பெற விரும்புகின்றான்; அவனை அடைந்து நட்புக் கொள்க' என வற்புறுத்துகின்றான். அனுமன் கூறியவாறே சுக்கிரீவன் இராமனை அடைந்து அவன் பெருமைகளை யறிந்து அன்பு கூர்ந்து, 'உலகுக்கெல்லாம் நாயகன் என்னத்தக்க பெருமையுடைய நின்னை நண்பனாக அடைந்தேன்; விதியே நல்கின் அடைய முடியாதது யாதுளது?' என்று இராமனைப் புகழ, இராமன், சுக்கிரீவனை நோக்கி 'ஐய! இம்மலையில் நீ தங்கியிருப்பதாகச் சவரி சொன்னார்; நாங்கள் அடைந்துள்ள பெருந்துயரத்தை நின்னால் நீக்கிக் கொள்ளலாம் என்று எண்ணி வந்தோம்' என்கின்றான்.

சுக்கிரீவன், 'என் முன்னவனாகிய வாலி என்னைத் தாக்கிக் கொண்டு உலகெங்கும் பின் தொடர்ந்து வந்தானாக, இந்த ருசிய மூகம் அவனால் அணுகப்படாதது என்ற சாப அரண் இருந்தமையால் உயிர் பிழைத்து இங்கு அஞ்சி வாழ்கின்றேன்; உயிர் துறக்க மனமிலாத யான் உன்னைச் சரண் அடைகின்றேன்; என்னைத் தாங்கிக் கொள்ளுதல் தருமம்' என்று இராமனை வணங்கிக் கூறுகின்றான். அங்ஙனம் கூறிய சுக்கிரீவனை இரக்கத்துடன் நோக்கி, "சுக்கிரீவ! இனிமேல் நினக்கு வரும் துன்பங்களை யான் தீர்ப்பேன்; நின் இன்ப துன்பங்கள் இனி, என் இன்ப துன்பங்களே ஆகும்: விண்ணிலும் மண்ணிலும் நின்னை வருத்தியவர் என்னை வருத்தியவராவர்; உன் உற்றார், என் உற்றார்; உன் சுற்றம், என் சுற்றம்; நீ என் இன்னுயிர்த் துணைவன்" என இராமன் கூறுகின்றான். அதைக் கேட்ட குரங்குச் சேனை மகிழ்ச்சியால் ஆரவாரம் செய்கின்றது. அனுமன்

உடம்பு பூரிக்கின்ருன். விண்ணவர் பூ மழை பொழிகின்றனர்; அனுமன் எழுந்து நின்று வணங்கி, ‘ஐய அண்மையிலுள்ள உங்கள் இருப்பிடத்தை யடைந்து நீங்களிருவீரும் ஒருங்கு-வீற்றிருத்தலைக் காண விழைகின்ருேம்’ என்ருனுக, இராமன் உடன்பட்டுச் சுக்கிரீவ ேனாடு வானர சேனைசூழ அவ்விருப்பிடம் சென்று அங்குள்ள புது மலர்ச் சோலையை அடைகின்ருன். வளமிக்க அவ் எழிலுறு பொழிலில் அமைந்துள்ள தூய மலரணையில் இராமனும் சுக்கிரீவனும் அமர்ந்து அன்போடு அளவளாவுகின்றனர்.

பிறகு இராமன், மஞ்சனம் ஆடிக் கடவுளை நீடு நினைந்து இனிதாக இருந்து பின் விருந்தினனுய்ச் சுக்கிரீவன் கொணர்ந்து அன்புடன் அளித்த காய்கனிகளை யுண்ணும்போது, விருந்தினரை உபசரிக்க வேண்டிய அவன் மனைவி உடனில்லாமையை நோக்கி நினைந்து, ‘தம்பி! நன்மனைக்கு உரிய மனைவியை நீயும் பிரிந்திருக்கின்ருயோ?’ என்று வினவுகின்ருன். உடனே மாருதி எழுந்து கைகூப்பிச் சுக்கிரீவன் மனைவியைப் பிரிந்துள்ளதற்குக் காரணம் கூறுவானுய் வாலிக்கும் சுக்கிரீவனுக்கும் நேர்ந்த பகைமைக்குரிய காரணங்களை விளக்குகின்ருன். வாலியோடு போர் செய்ய வந்த மாயாவி பிலவழியில் நுழைந்தமையால் வாலியும் நுழைந்து அவனைப் பின்பற்றிச் சென்றவன் இருபத்தெட்டுத் திங்கள்காறும் மீண்டுவராமையால் சுக்கிரீவன் அப்பிலத்துள் நுழைந்து வாலியைக் காண விழைந்தும், அமைச்சராகிய வானரங்கள் உடன்படாமையோடு வானரத் தலைமையேற்றுக் கொள்ளுமாறும் வற்புறுத்த, அவர்கள் ஆணையை மறுக்க அஞ்சி அச்சுக்கிரீவன் அரசேற்றுக் கொண்டதும், மாயாவியைக் கொன்று மீண்ட வாலி, சுக்கிரீவன் அரசைக் கவரும் நோக்கத்தோடு பிலவழியை அடைத்ததாகக் குற்றம் சார்த்தி அவனைத் துரத்தித் தாக்கியதும், சுக்கிரீவன் எப்படியோ தப்பி வந்து ருசியமூகம் என்னும் மலையை இடமாகக் கொண்டு வாழ்ந்து வருவதும், தம்பியைக் கொல்ல முனைந்த வாலி அத்தம்பியின் மனைவியாகிய உருமை என்பாளையும் கவர்ந்தமையும் விரிவாக எடுத்துரைக்கின்ருன்.

இதைக் கேட்ட இராமன் உள்ளத்தில் சினம் பொங்குகின்றது; தாமரை மலர் போன்ற அவன் கண்கள் செவ்வாம்பல் மலர்போல் மிகச் சிவக்கின்றன. வாய் இதழ்கள் துடிக்கின்றன. “அறிவு மிக்க சுக்கிரீவ! இந்தத் தகாத செயலைச் செய்த வாலிக்கு உதவியாகப் பதினன்கு உலகங்களும் வந்தாலும் என் அம்பால் அவனை வீழ்த்தி விட்டு வானரத் தலைமையோடு நின் மனைவியையும் நினக்குத் தருவேன்; அவனிருக்குமிடத்தைக் காட்டு” என்று கூறுகின்ருன். சுக்கிரீவன், அவன் சொல்லைக் கேட்டுத் “துன்பக் கட்லுக்குக் கரை கண்டோம்; வாலியின் வலி இனி வீழ்ந்தது” என நினைந்து மகிழ்

கின்றவனாய் 'யாம் தனியேயிருந்து எண்ணித் துணியவேண்டியுளது' என இராமனுக்குக் கூறிவிட்டு அமைச்சர்களுடன் தனியிடத்திருந்து சிந்திக்கலானான். அப்போது அனுமன் எழுந்து, சுக்கிரீவனை நோக்கி "அறிவின் வலிமையுடையவனே! நின்னுள்ளத்து உள்ளதை உய்த்துணர்கின்றேன். அந்த வாலியைக் கொல்லும் ஆற்றல் இந்த மானிடர்களாய வீரர்பால் இருக்குமோ? என்று ஐயங் கொள்கின்றாய். யான் சொல்வதைக் கேட்டு உறுதியாக நம்பு; இந்த இராமன் கைகால்களில் சங்கு சக்கர ரேகைகள் உள்ளன; இத் துணைச் சிறந்த இலக்கணம் எவர்க்கும் இல்லை; ஆதலால், அத் திருமாலே இவன்; நிலைகுலைந்த தருமத்தை நிலைநிறுத்த இங்கு அவதரித்துள்ளான். மேலும் திரிபுரம் எரித்துக் காலனையும் காலா லுதைத்த சிவனுடைய பெரிய வில்லை இவ்விராமன் ஒடித்துள்ளான் எனில் அவ்வாற்றல் திருமாலுக்கன்றி யுளதாமோ? மேலும் என்னைப் பெற்ற வாயுதேவன் என்னை நோக்கி, 'நீ திருமாலுக்கு அடிமை செய்' என்று கூறியபோது, யான், 'அவனை அறிவது எப்படி?'' என வினவ, என் தந்தை 'நீ அவனைக் கண்டவுடன் உன் உள்ளம் காரணமின்றி யுருகும்; அதுகொண்டு அவன் திருமால் என்பதை நீ உணர்ந்து கொள்ளலாம்' என்றான்.

என் தந்தை கூறியவாறே இவ்விராமனைக் கண்டவுடன் என் என்பும் நெகிழ்ந்து உருகியது; ஆதலால், இராமன் திருமாலே என் பதில் ஐயமில்லை. இராமன் பெருவலியைக் காண வேண்டின் அதற்கு ஓருபாயமும் உளது. நம் மலையில் வரிசையாக வளர்ந்துள்ள மரா மரங்கள் ஏழில் ஒரு மரத்தை அவன் அம்புகொண்டு துளைக்குமாறு செய்து காண்பதே அவ்வுபாயம்" என அனுமன் கூறிய அளவில் சுக்கிரீவன், 'நன்று நன்று' என்று அனுமனைத் தழுவிக்கொண்டு பின் இராமனை அணுகி, 'ஐய! யான் நினக்குச் சொல்வது ஒன்று உண்டு' என்ன, இராமனும் 'அதைச் சொல்' என்று பணித்தான்; என்பது இப்படலத்துக் கூறப்படும் கதை நிகழ்ச்சியாகும்.

## கம்பர் வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

1. இராம இலக்குவர் வரலாற்றை யறிந்த அனுமன், தன் சந்நியாசி வேடத்தை விடுத்து உண்மை யுருவம் தாங்கி அவ்விருவ ரையும் முதுகின்மேல் ஏற்றிக்கொண்டு சுக்கிரீவன் இருப்பிடத்திற்குச் சென்றதாக வான்மீகத்தில் உள்ளது. மும்மையேழ் உலகங்காக்கும் முதல்வராய இராம இலக்குவரை வானரத் தலைவனான சுக்கிரீவன் இருக்குமிடத்திற்கு அழைத்துச் சென்றதாகக் கூறுவது அவர்தம் பெருந்தகைமைக்கு ஏலாது என்ற கருத்தாற்போலும் கம்பர் அவ் வாறு கூறாமல், இராம இலக்குவர் இருக்குமிடத்திற்குச் சுக்கிரீவனை அனுமன் அழைத்து வந்ததாகவும், இராம சுக்கிரீவர் நட்புக்கொண்ட

பின்னர் அச்சுக்கிரீவன் இருப்பிடத்திற்கு அழைத்துச் சென்றதாகவும் மாற்றியமைத்துள்ளார். அனுமன் இராம இலக்குவரை முதுகில் ஏற்றிச் சென்ற நிகழ்ச்சியைக் கம்பர் கூறவில்லை.

2. இராமனும் சுக்கிரீவனும் நட்புக் கொள்வதற்காக அனுமன் இரண்டு கட்டைகளில் நெருப்பை மூட்டி மலர்களால் பூசித்து அந்த எரியை அவ்விருவர்க்கும் நடுவில் கொணர்ந்து வைத்ததாகவும், அந்த எரிக்கு முன்நின்று அவ்வங்கியங் கடவுளைச் சான்ருக வைத்து இராமன் சுக்கிரீவனை நோக்கி 'இன்ப துன்பங்கள் இனி நம்மிருவர்க்கும் ஒன்றே' என்று கூறி நட்புக் கொண்டதாகவும் வான்மீகத்தில் உளது. ஓர் ஆணும் பெண்ணும் கணவனும் மனைவியுமாய் நட்புக் கொள்ளும் திருமணத்தில் அங்கியங் கடவுளைச் சான்ருகக் கொள்வது போலவே, இராமனும் சுக்கிரீவனுமாகிய ஆடவர் இருவர் நட்புக் கொள்ளும்போதும் நெருப்பைச் சான்ருகக் கொண்ட நிகழ்ச்சியைக் கம்பர் கூறவில்லை. இருவர் ஒருவர் நீர்மையராய் நட்புக் கொள்வதற்குச் சான்ருக, இரண்டு கட்டைகள் ஒன்று சேர்ந்து எரியும் தீயைக் கொண்டது பொருத்தமாகக் காணப்படுகின்றது.

3. சுக்கிரீவன், தன் மனைவியை வாலி கவர்ந்து கொண்ட நிகழ்ச்சியைத் தானே இராமனுக்குக் கூறி, வாலியின் வலிக்கு ஆற்ருது அஞ்சி நடுங்கி வாழ்கின்ற தனக்குப் பாதுகாவலனுக இருந்து அருள் செய்ய வேண்டும் எனக் கேட்டுக் கொண்டதாக வான்மீகத்தில் உளது; கம்பர் இந்நிகழ்ச்சியை மிகவும் நாகரிகமாக மாற்றி அமைத்திருக்கின்ருர். சுக்கிரீவனின் இருப்பிடம் சென்று அவனுக்கு விருந்தினனுய் அவன் அன்புடன் அளித்த காய்கனிகளை இராமன் உண்ணும்போது, உடனிருந்து விருந்தூட்ட வேண்டிய அச்சுக்கிரீவன் மனைவி அவனுடன் இல்லாமையை நோக்கி 'தம்பி, நீயும் மனைவியைப் பிரிந்துள்ளாயோ' என வினவ, அவ்வினுவிற்குச் சுக்கிரீவன் விடைகூறுதல் தக்கதன்று என்ற எண்ணத்தால் அனுமன் எழுந்து, வாலியின் கொடுமைகளை விரித்துக்கூறி அவ்வாலியே சுக்கிரீவன் மனைவியாகிய உருமையையும் கவர்ந்தான் என்ற செய்தியைத் தெரிவித்ததாகக் கம்பர் அமைத்துள்ளார்.

4. சுக்கிரீவனுக்கும் வாலிக்கும் பகைமை ஏற்படக் காரணமாயிருந்த மாயாவியின் போரைப் பற்றிச் சுக்கிரீவனே இராமனுக்குக் கூறியதாக வான்மீகத்திலுள்ளது; சுக்கிரீவன் மனைவியை வாலி கவர்ந்த நிகழ்ச்சியைச் சொல்ல வந்த அனுமனே அப்போரைப் பற்றியும், அப்போர் முடித்து வந்த வாலி, சுக்கிரீவனேடு போர் தொடுத்துத் துன்புறுத்தியது பற்றியும் கூறியதாகக் கம்பர் மாற்றியமைத்துள்ளார். சுக்கிரீவன் தன்னைப்பற்றிய வரலாற்றைத் தானே கூறுங்கால் தன் குற்றங்களை மறைத்தும், வாலியின் குற்றங்களை

மிகைப்படுத்தியும் கூற இடமுண்டாகலின், மெய்ம்மையின் வேலி போல்வாகைிய அனுமனே அவ்வரலாற்றைக்கூறியதாக அமைத்தல் சிறப்புடையதாகும் எனக் கருதிக் கம்பர் இம்மாற்றம் செய்திருத்தல் கூடும்.

5. வாலியின் முறைதவறிய செயலைக் கேட்ட இராமன் சினந்து, 'வாலி உள்ள இடத்தைக் காட்டு' என்றபோது, சுக்கிரீவன் மகிழ்ந்து, 'யாம் எண்ணுவதுண்டு' எனக் கூறித் தனியிடம் சென்று அமைச்சர்களுடன் ஆலோசித்த செய்தியும், அனுமன், இராமனுக்கு வாலியைக் கொல்லும் ஆற்றலுண்டு என்பதைப் பல சான்றுகளால் நிறுவி, அவன் திருமாலே என்பதைத் தன் உள்ளம் காரணமின்றி உருகுகின்ற நிலையைக் கொண்டு தெளிவுபடுத்திய செய்தியும், 'மராமரம் ஏழினுள் ஒன்றை அம்பால் துளைக்கச் செய்து இராமன் வலிமையைக் காணலாம்' என்று கூறிய செய்தியும் வான்மீகத்தில் காணப் படவில்லை. சுக்கிரீவனே தன்னுள்ளத்தை வாட்டும் ஐயத்தைப் பணிவோடு இராமனுக்கு நேரே சொல்லி, 'இச்சால மரம் ஏழினுள் ஒன்றை நின் அம்பால் எய்தால் வாலியைக் கொல்லும் ஆற்றல் உனக்குண்டு என யான் துணிவுகொள்ள இயலும்' என அன்போடு தெரிவித்ததாகவே உள்ளது.

## படலப் பொருட் சிறப்பு

நட்புக் கோட்படலத்திலும் அனுமனே சிறப்பு உறுப்பினனாக விளங்குகிறான். வேறு வேறு இயல்பினரான இராம சுக்கிரீவர்களை நட்புச் செய்து கொள்ளச் செய்வது அனுமன் கடமையாகின்றது. இராம இலக்குவரைப் பகைவரென எண்ணிய சுக்கிரீவன் மன நிலையை மாற்றி நட்புக்குரியவரே என அவன் உடன்படச் செய்தது அரிய செயலாகும்.

இராமன் குணநலங்களை யறிந்து வந்த அனுமன், 'யானும் உன் குலமும் இவ்வுலகும் உய்ந்தனம்' என்று கூறிக் கொண்டே சுக்கிரீவனை யணுகியதாகக் கம்பர் கூறியுள்ளார். இராம இலக்குவரை இன்னாரென அறியச் சென்றவன் மீண்டு வந்து மகிழ்ச்சியோடு இவ்வாறு கூறுவானாயின், வருகின்றவர்கள் பகைவரல்லர் என்பது மட்டுமன்றி நம் நண்பராய் நம் பகைவரை யழித்து நம்மை யுய்விக்க வல்லவர்கள் என்ற கருத்து யார்க்கும் புலப்படல் இயல்பே. இராமன் பண்புகளைச் சுக்கிரீவன் மனத்தில் பதிய வைத்து அவனோடு நட்புக் கொள்ளுமாறு செய்ய எண்ணும் அனுமன் முதற்கண் தொகுத்துச் சுட்டலாக இத்தொடரைக் கூறிப் பல கருத்துக்களையும் உய்த்துணர வைத்துள்ள முறை சாலச் சிறப்புடையதாகும்.

நீயும் என் குலமும் இவ்வுலகும் உய்ந்தவாறு யாங்ஙனம் ? எனச் சுக்கிரீவன் உள்ளத்தில் எழும் வினவை எதிர்நோக்கிப் பின் 'வாலி என்றளவிலா வலியினு னுயிர்தெறக், காலன் வந்தனன்' அதனுல் நாம் 'இடர்க்கடல் கடந்தனம்' எனச் சிறிது தெளிவு பிறக்குமாறு வகுத்துக் கூறி, அனுமன் ஆலமுண்டவனைப்போல அருநடம் புரிவதாகக் கம்பர் கூறியுள்ளார். வருகின்றவர் இன்னுர் என அவர் வரலாறு தெரிவது சுக்கிரீவனுக்கு நோக்கமன்று; வருபவர் பகைவ ரல்லர் என்று தெரிந்தால் போதும்; அதற்கு மேலும் தன்னுல் வெல்ல முடியாத வலிய பகைவனுகிய வாலியைக் கொல்ல வந்த எமனே அவன் என்ருல், சுக்கிரீவன் உள்ளம் மகிழ்தற்குச் சொல்ல வேண்டுமோ ? அத்தகையோனை நண்பனுக ஏற்றுக் கொள்ளத்தான் தயங்குவானே ? சுக்கிரீவனுக்கு இத்தகைய உள நிலையை உண்டாக் கவே அனுமன் திறம்பட இங்ஙனம் கூறினுன்.

அனுமப் படலத்தில் சுக்கிரீவனும் அவன் அமைச்சர்களும் இராம இலக்குவரைத் தம் பகைவராகக் கருதி அஞ்சி நெஞ்சு அழியும் அமை யத்தில் அவர்களை அஞ்சல் என்று அனுமன் கூறி அமைதியுறச் செய்தமைக்கு 'வெவ்விடத்தினை மறுகு தேவர் தானவர் வெருவல், தவ்விடத் தனியருளும் தாழ்சடைக் கடவுளென' என உவமை கூறிய கம்பர் இங்கும் அவ்வுவமைக்கு இயைபுடையதாக 'ஆலமுண்ட வனின் நின்று அருநடம் புரிகுவான்' என்று கூறியுள்ளார். கரிய ஆலகாலம் பாற்கடலில் எழக் கண்டு கலங்கியவராய்த் தேவரும் தானவரும் அஞ்சித் தன்னை அடைந்தபோது அவர்கள் அச்சம் நீங்க 'அஞ்சல்' என்று அருளிய சிவபிரான் அப்பாற்கடலில் தோன்றிய ஆலகாலத்தைத்தான் உண்டு விட்டு, 'அக்கடலில் அமுதமே வந்துளது; நீங்கள் சென்று உண்ணுங்கள்' என்று கூறி மகிழ்ந்து ஆடினுர்; அதுபோலவே, கரிய நிறமுடைய இராமனைக் கண்ட சுக்கிரீ வனும் அவன் அமைச்சர்களும் 'நம்மைக் கொல்லவரும் பகைவனே' என அஞ்சி நடுங்கி ஓடத் தொடங்கும்போது, அனுமன் அவர்களை 'அஞ்சல்' என்று கூறி இனிதிருக்கச் செய்துவிட்டு, இராமனை அணுகி 'அவன் ஆலம் போன்ற பகைவன் அல்லன்; அமுதம்போல் நம்மால் விரும்பத்தக்கவனே' என்பதைச் சுக்கிரீவன் முதலியோர்க் குக் கூறி மகிழ்ச்சியால் ஆடுகின்ருன்; என்று முன்னைய உவமை யோடு இயைபுபடப் பின்னரும் உவமை கூறிய கம்பர் திறம் நினைந்து நினைந்து மகிழ்தற்குரியதாகும்.

இவ்வாறு இராமன் பெருமையைத் தொகுத்தும் வகுத்தும் கூறிய அனுமன், அதனை விரித்துக் கூறத் தொடங்கிப் பதின்மூன்று செய்யுட்களால் கூறி முடிக்கின்ருன். சுக்கிரீவன், வாலியின் வலி மைக்கு ஆற்ருது தோற்றவன் ஆதலின், அவ்வாலியின் வலிமை

யையே பெரிதாக எண்ணி அல்லும் பகலும் அஞ்சி வாழும் இயல்புடையவன் ; வந்துள்ள இராமன் அவ்வாலியை வெல்லும் வலிமையுடையவனே என அவன் உள்ளங் கொள்ளுமாறு, இராமன் வாழ்வில் இதுகாறும் நிகழ்ந்துள்ள வீரச் செயல்களை யெல்லாம் விடாமல் அடுக்கிக் கூறி, அத்தகைய வீரனால் 'இந்திரன் சிறுவனுக்கு இறுதி இன்று இசைதரும் ; புந்தியின் பெருமையாய்! போதர்' என இறுதியில் தன் கருத்தை எடுத்துரைக்கு முறை அனுமனுடைய சொல்லாற்றலைப் புலப்படுத்துவதாகும்.

சுக்கிரீவனும் இராமனும் நண்பர்களாய் அமர்ந்த நிலைக்கு 'அரக்கர் என்கின்ற பகையிருளைத் தள்ளி அறம் நிறுத்துதற்கேற்ற காலத்தின் கூட்டம் ஒத்தார்' எனவும். 'உவாவுற வந்து கூடும் உடுபதி இரவி யொத்தார்' எனவும், 'குறித்ததோர் பொருட்கு முன்னுளீட்டிய தவமும் பின்னர் முயற்சியுமியைந்த தொத்தார்' எனவும், 'அரக்க ரென்னும் தீவினை வேரின் வாங்கக் கேட்டுணர் கல்வியோடு ஞானமும் கிடைத்த தொத்தார்' எனவும் நான்கு வகையான உவமைகளைக் கூறி மகிழ்கின்றார் கம்பர். இவ்வுவமைகளின் சிறப்பு இயல்புகளை யெல்லாம் அப்பாடல்களின் உரை விளக்கக் குறிப்புகளில் கண்டு கொள்க.

இராமன் ஆற்றலைச் சுக்கிரீவன் மனங் கொள்ளுமாறு பதின்மூன்று பாடல்களால் புகழ்ந்து கூறியதுபோலவே, வாலியைக் கொல்லத் துணிந்த இராமனிடத்தில் அவ்வாலியின் ஆற்றலையும் பதின்மூன்று பாடல்களால் அனுமன் புகழ்ந்து கூறுகின்றான். வாலியின் வலிமை யறியாது அவனைக் கொல்லும் முயற்சியில் இராமன் ஈடுபடல் ஆகாது ஆதலால், வாலியின் பேராற்றலை அவனுக்கு விரித்துக் கூறியது மிகவும் பொருத்தமுடையதாகும். இராமன் அம்பால் அழிய இருக்கும் வாலியின் பேராற்றலைச் சொல்லின் செல்வனாகிய அனுமன் வாயால் கம்பர் புகழ வைத்துள்ள முறை சாலச் சிறப்புடையதாகும். அவியும் விளக்குச் சுடர்விட்டெரிதல் இயல்பன்றோ ?

வாலியின் சிறப்பைக் கூறவந்த அனுமன் முதற்கண் எடுத்துரைப்பது 'வாலி சிவனைப் பூசித்து அவன் அருள் நெறியில் நிறைவெய்தினன்' என்பதேயாகும். வாலியின் வலிமைக் கெல்லாம் காரணம் அச்சிவ பூசையே யாதலின் அச்சிறப்புப் புலப்பட அதனை முதற்கண் எடுத்துக் கூறியது சாலப் பொருத்தமுடையதாகும். வாலி என்ற பெயர் கேட்டவுடன் அவன் சிவபத்தன் என்பதே எல்லோருள்ளத்தும் முதலில் தோன்றுதற்குரியதாகும். குரங்காடுதுறைப் பதிகத்தில் திருஞான சம்பந்தர் இவ்வாலியார் வழிபடச் சிவன் இருக்கும் நிலையைச் சிறப்பாகக் கூறியிருத்தல் காணலாம்.

'கோலமா மலரொடு தூபமுஞ் சாந்தமுங் கொண்டு போற்றி
வாலியார் வழிபடப் பொருந்தினர்'

(3-91-6) எனவும்,

'நீலமா மணிநிறத் தரக்கனை யிருபது கரத்தொ டொல்க
வாலினாற் கட்டிய வாலியார் வழிபட மன்னுகோயில்'

(3-91-8) எனவும்,

வாலியின் சிவபூசையையும் ஆற்றலையும் விளக்கியிருத்தல் காண்க. இத்தகைய சிறப்பினை யுளங்கொண்டே கம்பரும்,

"தொன்மலையின் மேலுளான்
சூலிதன் னருட் டுறையின் முற்றினான்"

எனவும்,

"எட்டு மாதிரத் திறுதி நாளுமுற்று,
அட்ட மூர்த்திதாள் பணியு மாற்றலான்"

எனவும்,

"மெய்க் கொள் வாலினால் மிடலிராவணன்
தொக்க தோளுறத் தொடர்ப டுத்தநாள்
புக்கிலாதவும் பொழிய ரத்தநீர்
உக்கி லாதவே றுலகம் யாவதோ"

எனவும்,

"வென்றியான்
வால்செ லாதவா யலதி ராவணன்
கோல்செ லாதவன் குடைசெ லாதரோ"

எனவும் கூறியுள்ளார். இராமன் சுக்கிரீவனோடு உறுதியான நட்புக் கொண்ட பின்னர் இவ்வாறு வாலியின் வலிமையைச் சிறப்பித்துக் கூறியது, அனுமனின் அரசியல் நுண்ணறிவைப் புலப்படுத்துவதாகும். தன் மனையாளை வஞ்சனையால் கவர்ந்த இராவணனை எளிதில் வெல்லும் ஆற்றலுடையவன் வாலி என்பதை அனுமனால் அறிந்தும் இராமன், தான் முன் நட்புக்கொண்ட சுக்கிரீவனை விடுத்து அறநெறியின் நீங்கிய வாலியைத் துணையாகக் கொள்ள எண்ணத் திண்ணிய நிலையையும் இங்கு உய்த்துணர வைத்திருத்தல் காணலாம்.

# 3. நட்புக் கோட் படலம்

அனுமன் மகிழ்ச்சி புலப்படச் சுக்கிரீவனை அணுகுதல்

3888. போனவன் திரண்மணிப் புயநெடும் புகழினு
னைதன் பொருசினத் தரசன்மா டணுகினன்
யானுமுன் குலமுமிவ் வுலகுமுய்ந் தனமெனு
மானவன் குணமெலா நினையுமா மகிழ்வினன்.

போனவன் திரண்மணிப் புய நெடும் புகழினன்
ஆன, தன், பொருசினத்து அரசன்மாடு அணுகினன்;
'யானும் உன்குலமும் இவ்வுலகும் உய்ந்தனம்' எனு,
மானவன் குணம் எலாம் நினையும் மாமகிழ்வினன்.

பொ:—(அவ்வாறு) போனவனாகிய அனுமன், மனுக்குலத்துப் பிறந்த இராமனுடைய குணங்கள் எல்லாவற்றையும் நினைதலால் உளதாகிய பெரிய மகிழ்ச்சியுடையவனாய் 'யானும், உன் குலமும், இந்த உலகத்தோரும் உய்ந்தோம்' என்று சொல்லிக்கொண்டே திரண்ட அழகிய புயங்களையும், நீண்ட புகழினையும் உடையவனை, போர் செய்தற்குரிய கோபத்தையுடைய தன் அரசனாகிய சுக்கிரீவன் பால் அணுகினன்.

கு:—போனவன், மகிழ்வினனாய் உய்ந்தனம் எனாப் புகழினனை அரசன்மாடு அணுகினன் என இயையும். "விடைபெற்று விரைவிற் போனான்" என மேற்படலத்து இறுதியில் கூறியதை அநுவதித்து இங்குப் 'போனவன்' என அனுமனைக் குறித்தார்; வினைப்பெயர். மனுவின் வழித்தோன்றல் ஆதலின், இராமனை மானவன் என்றார். மணி - அழகு. தனக்குத் துணையாமாறு இராமன் விரும்புதற்கேற்ற தோள்வலியும், நீள்புகழும், பொருசினமும் சுக்கிரீவனுக்கு உள்ளமை விளக்கியவாறு. கவந்தனும், சவரியும் சுக்கிரீவனைத் துணையாகக் கொள்ளுமாறு இராமனுக்கு முன்னரே கூறினமையால் சுக்கிரீவனுடைய புயவலியும் புகழும் புலனாம். மாடு - பக்கம். மேவினார் பிரியலாகாப் பேரழகுடைமையும் அன்புடைமையும் அருளுடைமையும் இன்சொலுடைமையும் நேர்மையுடைமையும் என அனுமன் இராமன்பால் கண்ட குணங்கள் பலவாதலின் 'குணமெலாம்' எனப் பன்மையாற் கூறினார். தன் அரசன் அஞ்சுதற்கேற்ற குற்றமுடைய தீயவரோ என ஆராயச் சென்றவன் அனுமன் ஆதலின், அவர்பால் குணங்களே இருக்கக் கண்டு அவற்றை நினைந்து நினைந்து பெரிதும்

மகிழ்பவனானான் என்க. அவன் குணங்களை நினையுந்தோறும் மகிழ்ச்சி வளர்ச்சியுறுதல் காட்ட, 'மாமகிழ்வினன்' எனச் சிறப்பித்தார். மகிழ்வினனாய் என முற்றெச்சமாக்குக. இனி, ஆன் மூன்றன் உருபெனக் கொண்டு அதற்கேற்ப உரைத்தலுமாம். இராமன் தன்னைப் புகழ்ந்து அன்பு செய்தமை தோன்ற 'யானும்' என்றும், சுக்கிரீவன் துணையை நாடியே இராமன் இங்கு வந்துளான் என்பது தோன்ற, 'உன் குலம்' என்றும், இவ்விருவர் நட்பால் அரக்கரழிதல் உறுதி என்பது தோன்ற 'இவ்வுலகுமுய்ந்தனம்' என்றும் அனுமன் கூறிக்கொண்டு சென்றான். (1)

### வாலிக்குக் காலன் வந்தான் எனல்

3889. மேலவன் றிருமகற்
குரைசெய்தான் விரைசெய்தார்
வாலியென் றளவிலா
வலியினா னுயிர்தெறக்
காலன்வந் தனனிடர்க்
கடல்கடந் தனமெனா
வாலமுண் டவனினின்
றருநடம் புரிகுவான்.

மேலவன் திருமகற்கு உரை செய்தான், 'விரை செய்தார்
வாலி என்று அளவு இலா வலியினான் உயிர் தெறக்
காலன் வந்தனன்; இடர்க்கடல் கடந்தனம்' எனா
ஆலம் உண்டவனின் நின்று அருநடம் புரிகுவான்.

பொ :—(அனுமன்) கடலில் தோன்றிய நஞ்சினையுண்ட சிவனைப் போல மகிழ்ந்து அருமையான நடம் செய்கின்றவனாய், 'மணம் வீசுகின்ற வெற்றிமாலை யணிந்த வாலி என்ற அளவு இல்லாத பெருவலியுடைவனின் உயிரைப் பிரிக்க எமன் வந்து விட்டான் ; நாம் துன்பக் கடலைக் கடந்துவிட்டோம்' என்று விண்மேல் விளங்கும் சூரியனுக்கு மகனாகிய சுக்கிரீவனுக்குச் சொன்னான்.

கு :—'போனவன்' என்ற மேலைச் செய்யுளில் வந்த பெயரே இச்செய்யுளுக்கும் எழுவாயாகக் கொள்ளவேண்டும். சூரியன் விண்மேல் இயங்கும் இயல்புபற்றி 'மேலவன்' எனப்பெற்றான். சுக்கிரீவன் எதிர்பார்த்தவாறு வாலியேவலின் வருபவராக இன்றி அவ்வாலியைக் கொல்லும் ஆற்றலுடைய கூற்றம் போன்றவராக இராம இலக்குவர் வந்திருக்கும் மகிழ்ச்சியான நிகழ்ச்சியைச் சொல்லுங்கால்

அனுமன் நடம் ஆடிக்கொண்டே சொன்னான் என்றவாறு. நடஞ் செய்தற்குரியவன் சிவனே ஆதலின், அச்சிவனைப் போல நடம் புரிகுவான் என்றார். ஆலமுண்டவன் - சிவன். கரிய மேனியனாகிய இராமன் வருகையைக் கண்டு சுக்கிரீவன் முதலியோர் அஞ்சி ஓடுங் கால் அனுமன் இடைநின்று அஞ்சல் என்று அமைதி கூறியதற்கு உவமையாக "வெவ்விடத்தினை மறுகு தேவர்தானவர் வெருவல் தவ்விடத் தனியருளு தாழ்சடைக் கடவுளென" (அனுமப் - 3) என முன்கூறியதற்கேற்ப இங்கும், வருபவர் ஆலம்போல் நம்மை யழிவு செய்பவரலர்; நம்மைக் காத்தளிப்பவரே என்பதைத் தெரிவிக்கும் அவ்வனுமனுக்கு ஆலமுண்டவனை உவமை கூறியுள்ள பொருத்தத் தைக் காணலாம். அனுமனின் அருநடத்திற் கேற்பவே பாடலின் சந்தமும் அமைந்துள்ளமை கண்டு மகிழ்தற்குரியது. வாலி சென்ற போர் தோறும் வென்றியே புனைபவன் ஆதலின், அவன் வெற்றி மாலைக்கே யுரியவன் என்பான், 'விரைசெய் தார் வாலி' என்றான். இனி, வாலி பிறந்தபோது இந்திரன் வந்து தன் பொன்மாலையை அவனுக்கு அணிவித்து, யார் எதிர்ந்தாலும் எதிர்ந்தார் வலியில் பாதி வலிமை நினக்கு வருவதாக என வரமளித்ததை நினைந்து அங்ஙனம் கூறினான் எனலும் ஆம். யாராலும் வெலற்கரிய பெருவலியன் என் பான், 'அளவிலா வலியினான்' என்றான். தெறலாவது, இங்கு உயிரைப் பிரித்தல். காலன் என்றது உவமையாகுபெயராய் இராமனைக் குறித்தது. வாலியால் துன்புறுவோராதலின் அவனுக்குக் காலன் வரவே இனித் தமக்கு இடரில்லை என்பது தோன்ற 'இடர்க் கடல் கடந்தனம்' என்றான். இடரின் மிகுதிதோன்ற அதனைக் கடலாக உருவகஞ் செய்தான். (2)

### அனுமன், இராம இலக்குவர் இயல்பை விளக்குதல்

3390. மண்ணுளார் விண்ணுளார் மாறுளார் வேறுளா
ரெண்ணுளா ரியலுளா ரிசையுளார் திசையுளார்
கண்ணுளா ராயினர் பகையுளார் கழிநெடும்
புண்ணுளா ராருயிர்க் கமிழ்தமே போலுளார்.

'மண் உளார், விண்உளார், மாறுஉளார், வேறுஉளார்,
எண்உளார், இயல்உளார், இசை உளார், திசைஉளார்
கண்உளார் ஆயினர்; பகைஉளார், கழிநெடும்
புண்உளார் ஆர்உயிர்க்கு அமிழ்தமே போல் உளார்.

பொ :—(வந்தவர்கள்) மண்ணுலகத்தில் உள்ளாராகிய மனித ரும், விண்ணுலகத்துள்ளோராகிய தேவரும், இவ்வுலகங்கட்கு

மாறுபட்டதாய பாதலத்தில் உள்ளாராகிய நாகரும், திசைகாப்பவ ரும் இவற்றிற்கு வேருயுள்ள இடங்களில் உள்ள ஏனையோருமாகிய அவ்வவர் தம் மனத்தகத்தே யிருப்பவர்களும், அவர்களின் செயலிலே இருப்பவர்களும், அவ்வவர் சொல்லிலே இருப்பவர்களும், அவ்வவர் கண்ணிலே இருப்பவர்களுமாவார்; தமக்குப் பகையுடையவர்களாய், அப்பகைவரால் உளதாய மிகப் பெரிய புண்களையுடையவர் தம் ஆருயிர்க்கு அமிழ்தம் போன்றவராய் அப் பகையழித்துக் காத்தளிக்க வல்லவர்களுமாவர்.

கு :—இராம இலக்குவரின் தெய்வத்தன்மையும், தம்மை யடைந்தோரின் பகையழித்தருளும் அவர்தம் ஆற்றலும், அளியும் விளக்கியவாறு. மாறுளார் என்றது பாதலத்துள்ள நாகரை. 'திசை யுளார்' என்பது 'வேறுளார்' என்பதற்கு முன் கூட்டப்பட்டது. பிற இடங்களில் உள்ளாரை யெல்லாம் வேறுளார் என்று அடக்கிக் கூறினன். எண் - மனம். இயல் என்பது ஈண்டுச் செயலை யுணர்த்தி யது; இயலுதல், இயங்குதலாதலின் அது செயலை யுணர்த்தற்குரிய தாதல் காணலாம். இசை - சொல். "இசைதிரிந் திசைப்பினு மியையுமன் பொருளே" (தொல்பொருள்-195) என்புழியும் இச்சொல் இப் பொருள்படுதல் காணலாம். மனமொழி மெய் என்ற முக்கரணங் களினும் இருப்பவர் என, அவர் வியாபக நிலையை யுணர்த்துவான், 'எண்ணுளார் இயலுளார் இசையுளார்' என்ருன். "கூறுநாவே முத லாகக் கூறும் கரணம் எல்லாநீ" (திருவாசகம் - குழைத்தபத்து - 5) என்றதும் காண்க. செய்யுளாதலின் மாறிநின்றது. கண்ணுளார் என்றது, உறுப்புக்களில் சிறந்ததாகிய கண்ணுள் இருப்பவர் என்ற வாறு. "கண்ணகத்தே நின்று களிதருதேனே" (திருவாசகம்-திருப் பள்ளியெழுச்சி-9) என்புழிக் கடவுள் கண்ணுளாராதல் கூறப்படுதல் காணலாம். மண்ணுளார் முதல் திசையுளார், வேறுளார் ஈருகச் சொல்லப்பட்டவரின் எண்ணிலும் இயலிலும் இசையிலும் கண்ணி லும் உளார் ஆயினர் என்றதால், அவ்விராம இலக்குவர்தம் எங்கும் நீக்கமற நிறைந்துள்ள தெய்வத்தன்மையை விளக்கியவாறு. பகை யுளார், புண்ணுளார்க் கமிழ்தமே போலுளார் என்றதனுல், அவர்கள் தம்மை யடைந்தோரின் பகையழித்துக் காக்கும் வீரமும் அருளும் உடையவர் என்பதை விளக்கியவாறு. வாலியாகிய பகையால் புண் பட்ட சுக்கிரீவன் மனநிலைக்கேற்பச் சொல்லின் செல்வன் இவ்வாறு கூறினன். ஆலமெழக் கண்டு அஞ்சும் அமரர்போல ஆலம்போன்று கறுத்த நிறத்தனுகிய இராமனைக் கண்டு அஞ்சிய சுக்கிரீவன் முதலி யோர்க்கு அவன் தன்மையால் அமிழ்தம் போன்றவன் என்று கூறி அமைதி யுண்டாக்கியவாறு. (3)

அனுமன், இராமன் வரலாறு கூறல் 3891-3901

**3891.** சூழிமால் யானையார் தொழுகழற் றயரதன்
பாழியா லுலகெலா மொருவழிப் படரவா
ழாழியான் மைந்தர்பே ரறிவின ரழகின
ரூழியா ரெளிதுனக் கரசுதந் துதவுவார்.

'சூழிமால் யானையார் தொழுகழல் தயரதன்
பாழியால் உலகு எலாம் ஒருவழிப் படர வாழ்
ஆழியான், மைந்தர்; பேர் அறிவினர்; அழகினர்;
ஊழியார் எளிது உனக்கு அரசுதந்து உதவுவார்.

பொ :—முகபடாம் அணிந்த யானைச் சேனைகளையுடைய அரசர்களெல்லாம் வந்து தொழுகின்ற கழலணிந்த காலினனாகிய தயரதன் என்ற பெயருடையனுய்த் தன் தோள்வலியால் உலக முழுமையும் தன் கோலின்கீழ் ஒருவழிப்பட்டு வாழுமாறு சிறப்புற வாழ்ந்த சக்கரவர்த்தியின் புதல்வர்; பேரறிவினையுடையவர்கள்; பேரழகுடையவர்கள்; ஊழிக்காலம் வரையில் இருப்பவர்கள்; எளிதாக உனக்கு அரசு தந்து உதவத்தக்க இயல்புள்ளவர்கள்.

கு :—சூழி - முகபடாம். யானையார் என்றது, யானைச் சேனைகளையுடைய பேரரசரை. நால்வகைப் படையில் யானைப்படையே சிறப்புடைமையின் அதனைக்கூறி ஏனைத் தேர், குதிரை, காலாள் என்ற முப்படைகளையும் இனம்பற்றிக் கொள்ளவைத்தான். பெரும்படையுடைய வேந்தர் தொழும் கழல் தயரதன் என அவன் சக்கரவர்த்தித் தன்மையைப் புலப்படுத்தியவாறு. "திறையோடு மரசிறைஞ்சுஞ் செறிகழற்கால் தயரதனும்" (பால. குலமுறை - 24) என்று முன் கூறியுள்ளதும் நினைக்க. தயரதன் - ஆழியான் என்பன ஒரு பொருள் குறித்து வந்த சிறப்பும் பொதுவுமான பெயர்களாம். பாழி-வலிமை. சம்பரனை வென்று விண்ணுலகையும் தன்னடிப்படுத்தினனாதலின், 'உலகெலாம்' என விண்ணுலகமும் அடங்கக் கூறினான். ஒருவழிப் படர்தலாவது, தன் ஆணையின்கீழ் நிற்றல். ஆழியான் ஆணைச் சக்கரமுடைய சக்கரவர்த்தி. அவர்கள் சொல்லாலே அவர் பேரறிவு பெறப்பட்டதாகலின் 'பேரறிவினர்' எனத் தான் அறிந்ததைக் கூறினான். பேரழகினர் என அடையைப் பின்னுங்கூட்டுக. "ஓவியத்தெழுதவொண்ணாவுருவத்தாய்" (வாலிவதைப் - 323) எனப் பின் உயிர்விடும் வாலியும் புகழ்தல் காணலாம். வாலியைக் கொன்று நினக்கு அரசளிப்பது அவர் தகுதிக்கு எளியசெயலன்றி அரியதன்று என்பான், 'எளிதுனக் கரசு தந்துதவுவார்' என்றான். சுக்கிரீவனது அருத்தி அரசின்மேற்றே ஆதலின் அவன் குறிப்புணர்ந்து கூறியவாறு. (4)

3892. நீதியார் கருணையின் னெறியினர் நெறிவயிற்
பேதியா நிலைமையா ரெவரினும் பெருமையார்
போதியா தளவிலா வுணர்வினர் புகழினர்
காதிசேய் தருகடற் கடவுள்வெம் படையினர்.

'நீதியார்; கருணையின் நெறியினர்; நெறிவயின்
பேதியா நிலைமையார்; எவரினும் பெருமையார்;
போதியாது அளவு இலா உணர்வினர்; புகழினர்;
காதிசேய் தருகடல் கடவுள்வெம் படையினர்.

பொ :—நீதியை நிலைநிறுத்துகின்றவர்கள்; அருள் நெறியில் ஒழுகுகின்றவர்கள்; தாம் மேற்கொண்டொழுகும் நல்ல நெறியில் நின்றும் எக்காரணத்தானும் சிறிதும் பிறழாத உறுதிநிலை யுடையவர்கள்; உலகத்துப் பெருமையுடைய எல்லோரைக் காட்டிலும் பெருமையுடையவர்கள்; யாரும் போதிக்காமல் தாமே யுணர்ந்த அளவு கடந்த உணர்வினைவுடையவர்கள்; புகழுடையவர்கள்; காதி என்பானின் மகனாகிய கோசிக முனிவன் தந்த கடல்போன்று மிகுதியாகவுள்ள தெய்வத்தன்மைவாய்ந்த கொடிய படைக்கலங்களை யுடையவர்கள்.

கு :—உலகில் நீதி நிலைபெறச் செய்யவேண்டும் என்னும் நோக்க முடையர் என்பான், 'நீதியார்' என்றான். "ஆரறத்திறனுடன்றி நின்றாரவர் வேரறுப்பென்" (ஆரணிய - அகத்தியப் - 22) என இராமன் தன் கொள்கையைத் தண்டகாரணிய முனிவர்க்குக் கூறி யிருத்தல் இங்கு நினையத்தகும். வாலி நீதியற்றவனாய்த் தன் மனையாளைக் கவர்ந்தானே என்று கவலும் சுக்கிரீவன் மனம் மகிழ, நீதியற்ற வாலியைக் கொன்று நீதியை நிலைநிறுத்துவான் இராமன் என்பதை அனுமன் முதற்கண் தெரிவிக்கின்றான். நீதியை நிலைபெறுத்தும் நோக்கமுடையராயினும், குணநாடிக் குற்றமும் நாடி அவற்றின் மிகைநாடி மிக்க கொள்ளும் அருள் நோக்கமுடையவர் என்பான், 'கருணையின் நெறியினர்' என்றான். தன்கண் தவறு நிகழக் கண்டவழியும் தண்டிக்கத் தவறமாட்டார்களே என்று அஞ்சும் சுக்கிரீவன் மனம் அமைதியுற இதைக் கூறினான். முன்னர் வாலியை வதைப்பதாகக் கூறிவிட்டுப் பின் அவ்வாலியின் பெருவலி கண்டு மனமாற்றம் கொள்வரோ எனச் சுக்கிரீவன் ஐயுறுதபடி 'நெறிவயிற் பேதியா நிலைமையார்' என்றான். பெருவலியுடைய வாலியை வெல்லும் ஆற்றல் இவர்க்குண்டோ என்னும் ஐயத்தை நீக்கவேண்டி, 'எவரினும் பெருமையார்' என்றான். வாலியின் தகாத ஒழுக்கமும் நம் அவலநிலையும் அவர் நன்கறிவரோ? என்ற ஐயம் நீங்கப் 'போதியாதளவிலா வுணர்வினர்' என்றான். ஓதாமலுணர்

வாராகலின் நம் குறையை நாம் கூறுமுன் குறிப்பாலுணரவல்லார் என்றவாறு. யாரினும் மேம்பட்ட வலியாலும் உணர்வாலும் முன்னமே பெரும் புகழ் படைத்தவர் என்பான். 'புகழினர்' என்ருன். காதிசேய் என்றது விசுவாமித்திரனை. அவன் இராமனுக்குப் படைக் கலங்கள் தந்தமை: "மண்ணவர் வறுமை நோய்க்கு மருத்துவன் சடையன் வெண்ணெய், அண்ணறன் சொல்லேயன்ன படைக்கல மருளினனே" (419) எனப் பாலகாண்டத்துக் கூறியதாலறியலாம். அப்படைகளின் மிகுதி புலப்படுத்தக் கடல்வெம் படையெனவும் அவற்றின் தெய்வத்தன்மை புலப்படுத்த 'கடவுள் வெம்படை' எனவும் அப்படைகளின் ஆற்றல் தோற்ற 'வெம்படை' எனவும் கூறினன். அரசமாதவன் அருளிய ஆற்றல் சால்பெரும் படைக்கல முடைமையாலும் வாலியைக் கொல்லுதல் அவர்க்கெளிது என்பது புலப்படுத்தியவாறு. (5)

3893. வேலிகற் சினவுதா
டகைவிளிந் துருளவிற்
கோலியக் கொடுமையாள்
புதல்வனைக் கொன்றுதன்
காலியற் பொடியினு
னெடியகற் படிவமா
மாலிகைக் கரியபே
ருருவளித் தருளினன்.

வேல் இகல் சினவு தாடகை விளிந்து உருள வில்
கோலி அக்கொடுமையாள் புதல்வனைக் கொன்று தன்
கால் இயல் பொடியினுல், நெடிய கற் படிவம் ஆம்
ஆலிகைக்கு அரிய பேர் உருவு அளித்து அருளினன்.

பொ :—(நம்பியரில் முன்னவன்) சூலத்தையேந்தி மாறுபட்டவளாய்க் கோபித்து வருகின்ற தாடகை என்னும் அரக்கி இறந்து தரையில் உருளுமாறு வில்லை வளைத்து (அம்பெய்து,) அக்கொடுமையாளாகிய தாடகையின் புதல்வனை சுவாகுவைக் கொன்று, தன் காலில் பொருந்திய துகளால் நீண்ட கல்வடிவமாக இருந்த அகலிகைக்கு அருமையான பேரெழில் உருவத்தைக் கொடுத்துப் பண்டு போல் கவுதமரோடு வாழும் வாழ்வும் அருளினன்.

கு :—வரும் செய்யுளில் வரும் 'நல்லுறுப் பமையுநம்பியரின் முன்னவன்' என்பது இடைநிலை விளக்காய் இச்செய்யுளுக்கும் எழு

வாயாய் நின்றது. இதுகாறும் இராம இலக்குவரைப் பொதுவாகச் சிறப்பித்து வந்த அனுமன் இச்செய்யுள் முதலாக ஒன்பது கவிகளில் இராமன் வரலாற்றை மட்டும் கூறுகின்ருன். இது அனும இராமாயணமாய் அமைந்துளது. இச்செய்யுளின் முற்பகுதி, இராமன் தன்னைச் சார்ந்தவரின் பகையைத் தன் பகையாகக் கொண்டு அழிக்கும் ஆற்றலுடையன் என்பதற்கு எடுத்துக்காட்டாய் அவன் கை வண்ணத்தைப் புலப்படுத்திச், சுக்கிரீவனும் இராமனை யடைந்தால் அவன் பகையாகிய வாலியையும் இராமன் தன் பகையாக ஏன்று கொண்டு அழிக்கத்தக்கவன் என்பதைக் குறிப்பிப்பதாக அமைந்தது. பின்பகுதி, இராமனுடைய தெய்வத்தன்மைக்கு எடுத்துக்காட்டாய் அவன் கால்வண்ணத்தைப் புலப்படுத்தி, வாலியால் கவரப்பட்டுக் கற்புக்குறைந்த உருமையையும் தன் தெய்வத்தன்மையால் தூயவளாக்கிச் சுக்கிரீவன்பால் சேர்ப்பதற்குரியவன் இராமன் என்பதைக் குறிப்பிப்பதாக அமைந்தது. தாடகையையும் சுவாகுவையும் இராமன் கொன்றது, தனக்கினியனான கோசிக முனிவனுக்குப் பகையாய் அழிவு செய்தமையே யன்றித் தனக்குப் பகையன்மை யறியலாம். கற்பில் குறைபாடுற்றுச் சாபத்தால் கல்லுருப்பெற்ற அகலிகைக்கு நல்லுருக்கொடுத்துத் தூயளாக்கியதோடன்றி அவள் கொழுநராகிய கவுதம முனிவர்பால் சேர்த்துப் பண்டுபோல வாழவும் செய்தருளிய வரலாற்றை நினைதல் வேண்டும். 'உருவு அளித்து' என்று கூறியவன் பின் 'அருளினன்' என்றது, பண்டுபோல் வாழ்வருளியதைப் புலப்படுத்தவேயாம். 'விற்கோலி' என்ருரேனும் 'விளிந்துருள' என்றதால், அம்பெய்தமை பெறப்படும். அகலிகை என்பது எதுகை நோக்கி ஆலிகை என மருவிற்று. அப்பெயர் அழகின்மை இல்லாதவள் என்று பொருள் தருவது என்பர். (6)

**3894.** நல்லுறுப் பமையுநம் பியரின்முன் னவனயந்
தெல்லுறுப் பரியபே ரெழுசுடர்க் கடவுடன்
பல்லிறுத் தவன்வலிக் கமைதியம் பகமெனும்
வில்லிறுத் தருளினன் மிதிலைபுக் கனையநாள்.

'நல் உறுப்பு அமையும் நம்பியரில் முன்னவன்—நயந்து,
எல் உறுப்பு அரிய பேர் எழுசுடர்க் கடவுள் தன்
பல் இறுத்தவன் வலிக்கு அமை தியம்பகம் எனும்
வில் இறுத்தருளினன்—மிதிலைபுக் கனைய நாள்.

பொ :—நல்ல இலக்கணமுள்ள உறுப்புக்கள் அமைந்த அவ் ஆண் மக்களுள் முன்பிறந்தவனாகிய இராமன், மிதிலை நகரத்துள் புகுந்த அந்த நாளில், சீதையை மணக்க விருப்பங்கொண்டு, ஒளிக்

கதிர்களாகிய உறுப்புக்களையுடைய அரிய பெரிய ஏழுவண்ணங்களைக் கொண்டுள்ள சுடர்ப்பிழம்பான சூரியனுடைய பல்லை உடைத்த சிவனுடைய வலிமைக்கு ஏற்றவாறு அமைந்த திரியம்பகம் என்னும் வில்லை முரித்தான்.

கு:—இதனால் பாலகாண்ட நிகழ்ச்சி கூறப்பெற்றது. சக்கரவர்த்தி யாதற்கேற்ற இலக்கணம் அமைந்த அவயவங்களை யுடையராதலின், 'நல்லுறுப்பமையு நம்பியர்' என்றான். "உலகொரு மூன்றுந்தம் முடைமையாக்குறும் அலகறு மிலக்கண மமைந்த மெய்யினர்" (சடாயுகாண் - 14) என்பது காண்க. நம்பியர், ஆடவரிற் சிறந்தார். நயந்து, வில்லிறுத்தருளினான் என இயையும். எல் - ஒளி. சூரியனைப் போலும் சுடரில்லையாதலின், 'அரிய' என்றும், பூமியைவிடப் பத்து லட்சம் மடங்கு பெரிய கோளமாதல் தோன்ற, 'பேர்' என்றும், அவ்வொளிவட்டத்தில் ஏழு வண்ணங்கள் அமைந்துள்ளமை தோன்ற 'எழு சுடர்க் கடவுள்' என்றும் சூரியனைச் சிறப்பித்தார். இத்துணைச் சிறப்புள்ள சூரியனின் பல்லிறுத்தவன் வலிமை உயர்ந்ததாதலும், அச்சிவன் வில்லை இறுத்த இராமன் சிறப்பு அதனிலும் உயர்ந்ததாதலும் புலப்படுத்தியவாறு. அவியுணவு விரும்பித் தம் தலைவனாகிய சிவனைப் புறக்கணித்துச் செய்யும் தக்கன் வேள்விக்குச் சென்றிருந்த தேவர்களை வீரபத்திரர் பலவகையாகத் தண்டித்தார் என்பது புராணம். வீரபத்திரர் செயலைச் சிவன் செயலாகக் கூறியது உபசாரம். வீரபத்திரர் சிவனுக்குப் பிள்ளையாவார். "சூரியனார் தொண்டை வாயினிற் பற்களை, வாரி நெரித்தவாறுந் தீபற" (திருவாசகம் - திருவுந்தி - 15) என்றது காண்க. திரியம்பகம் என்பது ஓசை நோக்கித் 'தியம்பகம்' என மருவிற்று. புக்கனைய என்புழி அகரம் தொகுத்தல். முக்கணான் வில்லும் மூன்று கண் (கணுக்)களையுடையதா யிருந்தமையின் திரியம்பகம் எனப்பெற்றது. அம்பகம் - கண். வலிமைமிக்க சிவன் வில்லை ஒடித்த இராமனுக்கு வாலியைக் கொல்லுதல் எளிய செயலே எனச் சுக்கிரீவனுக்கு நம்பிக்கையூட்டியவாறு. (7)

3895. உளைவயப் புரவியா னுதவவுற் றொருசொலா
லளவில்கற் புடையசிற் றவைபணித் தருளலால்
வளையுடைப் புணரிசூழ் மகிதலத் திருவெலா
மிளையவற் குதவியித் தலையெழுந் தருளினான்.

'உளைவயப் புரவியான் உதவ உற்று, ஒரு சொலால்,
அளவுஇல் கற்புடைய சிற்றவை பணித்து அருளலால்,
வளையுடைப் புணரிசூழ் மகிதலத் திரு எலாம்
இளையவற்கு உதவி, இத்தலை எழுந்தருளினன்.

பொ:—பிடரியைக் கொண்ட வெற்றி மிக்க குதிரைகளையுடைய தயரதன் அரசை உதவ, முன் ஏற்றுக்கொண்டு, பின் அளவிலாது உயர்ந்த கற்புடைய சிற்றன்னையாகிய கைகேயி ஒரு சொல்லால் கட்டளையிட்டு அருளினதால், சங்குகளையுடைய கடல் சூழ்ந்த இவ்வுலகச் செல்வம் எல்லாவற்றையும் இளையவனாகிய பரதனுக்கு உதவிவிட்டு இக்காட்டிற்கு எழுந்தருளினன்.

கு:—இச் செய்யுளால் அயோத்தியா காண்ட நிகழ்ச்சி கூறியவாறு. தந்தை சொல் மருமல் பெற்ற நாட்டைத், தாய் சொல் மருமல் தம்பிக்குக் கொடுத்தான் என, இராமன் பெற்றோர் சொல்லைப் பேணினமையும் செல்வத்தில் பற்றின்மையும் புலப்படுத்தியவாறு. தந்தை சொல் தவறாத தாய் என்பான், அளவில் கற்புடைய சிற்றவை என்றான். அச்சிற்றவை பல சொல்லால் வற்புறுத்தாது பதினான்காண்டு பரதன் நாடாள நீ காடாள்க என்று ஒரு சொற்றொடரால் சொன்ன அளவிலே உதவிய எளிமை தோன்ற 'ஒரு சொலால் பணித்தருள' என்றும், யாரும் எளிதில் விடமுடியாத பெருஞ் செல்வம் என்பது தோன்ற, 'மகிதலத் திருவெலாம்' என்றும் கூறினன். மகி - பூமி. பூதலம் என்றாற்போல மகிதலம் எனப்பட்டது. தலை - இடம். இத்தலை என்றது காட்டைக் குறித்தபடி. இராமன் பெருமைக்கேற்ப 'எழுந்தருளினன்' என்றான்; வந்தான் என்பதே பொருள். வாலியைக் கொன்றபின் இவ்வரசைத் தான் ஏற்றுக்கொள்வானோ எனச் சுக்கிரீவனுக்குத் தோன்றும் ஐயத்தைக் களையவே அனுமன் இந்நிகழ்ச்சியைக் குறிப்பிட்டான். தனக்குரிய அரசச் செல்வத்தையே தம்பிக்குக் கொடுத்து வந்த கருணையாளன் இக்கவிக்குலத்தரசைக் கைக்கொள்ளான் என்பது இதனால் உறுதியாதல் காணலாம். "நீதியார், கருணையின் நெறியினர் நெறிவயின் பேதியா நிலைமையார்" (5) என மேற்கூறிய பண்புகள் இராமன்பால் அமைந்துள்ளமை இதனால் விளக்கியவாறு. தந்தையுதவப் பெற்ற தரணியைத் தாய் சொல்லால் துறந்தான் என்றமையால் நீதியார் என்பதும், மகிதலத் திருவெலாம் இளையவற்குதவி என்றமையால், "கருணையின் நெறியினர்" என்பதும், தனக்குரிய அரசையே துறந்து வந்தவன் பிறர் செல்வத்தை விரும்பான் என்ற போந்த பொருளால், "நெறிவயின் பேதியா நிலைமையார்" என்பதும் புலப்படுத்திய வாறுதல் காணலாம். (8)

3896. தெவ்விரா வகைநெடுஞ் சிகைவிரா மழுவினு
னவ்விரா மனையுமா வலிதொலைத் தருளினு
னிவ்விரா கவன்வெகுண் டெழுமிரா வனையனும்
அவ்விரா தனையிரா வகைதுடைத் தருளினுன்.

தெவ் இரா வகை நெடுஞ் சிகை விரா மழுவினுன்
அவ் இராமனையும் மா வலி தொலைத் தருளினுன்,
இவ் இராகவன் ; வெகுண்டு எழும் இரா அனையன் ஆம்
அவ் விராதனை இராவகை துடைத்தருளினுன்.

பொ :—இந்த இராமன், பகைவரே இல்லாதபடி செய்த நீண்ட ஒளிக்கொழுந்து பொருந்திய மழுவாயுதத்தினையுடையனுகிய அந்தப் பரசுராமனையும் வலி தொலைத்து அருள் செய்தான்; கோபித்து எழுகின்ற இரவைப் போன்றவனுகிய கொடிய விராதனையும் இவ் வுலகத்து இல்லாதபடி அழித்தருளினுன்.

கு :—விராதனை யழித்த ஆரணியகாண்ட நிகழ்ச்சி கூறுகின்றவன், பாலகாண்ட நிகழ்ச்சியாகிய பரசுராமனை வலி தொலைத்ததையும் உடன் கூறினுன் ; இராமனுடைய வெற்றிச் செயல் என்ற ஒற்றுமை பற்றி. தெவ் இராவகை 'செய்த' என ஒரு சொல் சொல்லெச்சமாக வருவிக்க. சிகை என்றது மழுவாயுதத்தின் ஒளிக் கொழுந்தினை. இனிச் சின அனலின் கொழுந்து எனலும் ஆம். விராவுதல் - பொருந்துதல். மழுவினுன் ஆகிய அவ்விராமன் என்க. பரசிராமன் என்ற பெயர்க் காரணத்தை விளக்கிக் கோதண்டராமனின் வேருனவன் என்பதைப் புலப்படுத்தியவாறு. தன் தந்தையைக் கொன்ற கார்த்த வீரியனின் மக்கள்பால் தோன்றிய கோபத்தால் மன்னவர் குலத்தையே வேரறுத்தவன் பரசிராமன் ஆகலின், 'தெவ் இராவகை செய்த மழுவினுன்' என்ருன். அவன் முனிவனுதலின் அவன் வலியை மட்டும் தொலைத்துக் கொல்லாது விடுத்தருளினுன். எப்பொழுதும் சின மிக்கவனுய்க் கரிய உடம்போடு விளங்கிய விராதனுக்கு வெகுண்டெழுமிரா இல்பொருள் உவமையாயிற்று. "தங்குதின் கரிய காளிமை தழைந்துதவழ" எனவும், 'கங்குல் பூசி வருகின்ற கலிகாலமெனவே' (ஆரணிய - விராதன் வதைப் - 14) எனவும் முன் கூறியுள்ளமை காணலாம். அரசர்களையெல்லாம் வென்ற தெய்வ அமிசமான பேராற்றலுடைய மனிதரிற் சிறந்த ஒருவனையும் அரக்கரிற் சிறந்த ஆற்றல் மிக்க ஒருவனையும் வென்றிகொண்டது கூறி வாலியைக் கொல்லும் தகுதி இராமனுக்கு உண்டு என்பதைச் சுக்கிரீவனுக்குப் புலப்படுத்தியவாறு. பகைவரை யழித்தலும் மறக்கருணையான் நிகழ்தலே யாதலின், 'தொலைத் தருளினுன், துடைத்தருளினுன்' என்று கூறினுன். (9)

3897. கரன்முதற் கருணையற் றவர்கடற் படையொடும்
சிரமுகச் சிலைகுனித் துதவுவான் றிசையுளார்
பரமுகப் பகைதுமித் தருளுவான் பரமரா
மரன்முதற் றலைவருக் கதிசயத் திறலினன்.

'கரன் முதல் கருணை அற்றவர், கடற்படை யொடும்
சிரம் உகச் சிலை குனித்து உதவுவான்; திசை உளார்
பரம் உகப் பகை துமித்தருளுவான்; பரமர் ஆம்
அரன் முதல் தலைவருக்கு அதிசயத் திறலினன்.

பொ :—(இராமன்) கரன் முதலாக இருந்த கருணையற்ற அரக்கர் கடல்போன்ற தம் பெரும்படையோடும் தம் தலைகளும் சிதற, வில் வளைத்தருளினவன்; மேலும் இந்திரன் முதலிய திசை காப்பாள ரின் துன்பப் பாரம் குறையுமாறு அறத்திற்குப் பகையாயுள்ளவர்களை யெல்லாம் கொன்றருளுவான்; மேம்பட்டவர் ஆகிய அரன் முதலா கிய முதல் தேவர்கட்கும் அதிசயம் உண்டாக்கும் பெருந் திறமை யுடையவன்.

கு :—கருணையற்றவர் என்றது அரக்கரை. "இரக்கமென் றொரு பொருள் இலாத நெஞ்சினர் அரக்கர் என்றுளர் சிலர்" (ஆரணிய - அகத்தியப் - 12) என்றது காண்க. குனித்துதவுவான் என்றது ஒரு சொல் நீர்மையது; துமித்தருளுவான் என்பது போல. இந்திரன் முதலிய திசைக் காவலர் இராவணனால் படும் துன்பமிகுதி தோன்றப் பரம் என்றார். துன்பமாகிய பாரம் என்க. பரம் - பாரம்; உகுதல், ஈண்டுக் குறைதலை யுணர்த்தியது. அரன் முதல் தலைவர் என்றது, மும்மூர்த்திகளை. அரன் முதலிய தலைவரினும் மேம்பட்ட பெருந் திறலுடையவன் என்பார். 'அரன் முதல் தலைவருக் கதிசயத் திறலினன்' என்றார். "சூரறுத்தவனும் சுடர்நேமியும், ஊரறுத்த வொருவனும் ஓம்பினும்......வேரறுப்பன் வெருவன்மின்" (அகத் தியப் - 22) என இராமனே கூறியுள்ளது காண்க. அதிசயம்-வியப்பு; சிறப்பு. பரமராம் மூவரினும் சிறந்த வலிமையுடையவன் என்றவாறு. உதவுவான் என்பது இறந்த காலம் எதிர்காலமாய் வந்த கால வழுவமைதி. இனி எதிர்காலத்தில் அறத்திற்குப் பகையாயுள்ள, இராவணன் முதலியோரை அழிக்க இருக்கின்றான்; அதற்கேற்ற மிகுவலியுமுடையன் என்றதனால், அறத்திற்குப் பகையாயுள்ள வாலியை அழிப்பதும் உறுதி என்பதைச் சுக்கிரீவனுக்குப் புலப் படுத்தியவாறும் ஆம். (10)

இச்செய்யுளுக்குப் பின் சில சுவடிகளில் கீழ்வரும் செய்யுள் காணப்படுகின்றது.

பிரிவில்கா னதுதனில் பெரிய சூர்ப்பணகைதன்
கரியமா நகிலொடும் காதொடும் நாசியை
அரியினு ரவர்சொலத் திரிசிரா வவனெடும்
கரனெடு மவுணரும் காலன்வா யாயினர்.

3898. ஆயமா னுகர்தா ழாழியா னேயலால்
காயமா னுயினுன் யாவனே காவலா
நீய்மா னேர்தியா னேரின்மா ரீசனும்
மாயமா னுயினுன் மாயமா னுயினுன்.

ஆயம் மால் நாகர் தாழ் ஆழியானே அலால்,
காயம் மான் ஆயினுன் யாவனே? காவலா!
நீ அ(ம்)மால் நேர்தியால், நேரில் மாரீசன் ஆம்
மாய மான் ஆயினுன் மாய, மான் ஆயினுன்.

பொ:—அரசே! உடம்பால் மனிதனுகத் தோன்றும் அந்த இராமன், மாய மானுக வந்தவனுகிய நிகரில்லாத வலிமையுடைய மாரீசன் என்கின்ற அரக்கன் மாய்ந்தொழியுமாறு சிங்கம் போன்ற வனுய் நின்று அழித்தவனுவன்; அவன், கூட்டமாகவுள்ள பெரிய தேவர்கள் எல்லாம் வணங்குகின்ற சக்கரப்படையை யுடைய திருமாலே அல்லாமல் வேறு யாவன்? எனவே நீ வந்து அந்தத் திருமாலை நட்பு செய்து கொள்வாயாக.

கு:—'காவலா! காயம் மானுயினுன், மாயமானுயினுன் ஆம் மாரீசன் மாய, மான் ஆயினுன்; அவன் ஆழியானே யலால் யாவனே? எனவே அம் மாலை நீ நேர்தி' என இயையும். காயம்- உடம்பு. மான் - மனிதன். ஆயம் - கூட்டம். நாகர் - தேவர். உடம் பால் மனிதனுகத் தோன்றினவன் என்றமையால் தன்மையால் தெய்வமே என்பது பெறப்படும். ஆழியானேயலால் யாவனே? என்ற வினு, அவன். ஆழியானே என்பதை வற்புறுத்த வந்தது; ஆதலால், 'அம்மால் நீ நேர்தி எனப் பின்னர்க் கூறுவானுயினுன். அமால் என்பது தொகுத்தல் விகாரம். நேர்தி என்றது, அவனை நேரே கண்டு நட்புக் கொள் என்றவாறு. மாயம் - 'பொய்'. மாய - அழிய. பொய் மானுயினுனுகிய மாரீசன் மாயச் சிங்கமாயினவன் என்க. மாரீசன் மேற்கொண்ட மான் உருவம் பொய் வேடமே யாதலின் அதனை மாயமான் என்முன். மான் பின்னது சிங்கம் என்னும் பொருளது. வலியில்லாத விலங்காகிய மான் வல்விலங் காய சிங்கத்தால் அழிதல் இயல்பு. "விலங்கு மான் குரல் கேட்பின் வெருவுவை." (கலித் - 18) என்புழி மான் என்பதற்குச் சிங்கம் என

நச்சினார்க்கினியரும் பொருள் கூறியிருத்தல் காணலாம். மான் ஆயினான் என்புழி ஆக்கம் உவமையுணர்த்தியது, "ஆள்வாரிலி மாடா வேனோ" (திருவாசகம் - மூத்த திருப்பதிகம் - 6) என்பதில் வந்த 'ஆவேனோ' என்பதற்கு ஆக்கச் சொல் உவமப்பொருட்டு எனச் சிவஞான முனிவர் சிவஞானபோதத்து வரைந்துள்ளமை காணலாம். இறுதியடி மடக்கு; நான்கு அடிகளிலும் முதற்சீர் முதலொழித்தொழிந்தன ஒத்தனவாதலின் திரிபு என்னும் சொல்லணியாகும். (11)

3899. உக்கவந் தமுமுடற் பகைதுறந் துயர்பதம்
புக்கவந் தமுநமக் குரைசெயும் புரையவோ
திக்கவந் தரநெடுந் திரள்கரஞ் சினவுதோ
ளக்கவந் தனுநினைந் தமரர்தாழ் சவரிபோல்.

உக்க அந்தமும் உடல் பகை துறந்து உயர்பதம்
புக்க அந்தமும், நமக்கு உரை செயும் புரையவோ-
திக்க அந்தர நெடுந் திரள்கரம் சினவுதோள்,
அக் கவந்தனும் நினைந்து அமரர் தாழ் சவரிபோல்.

பொ :—திசையெல்லைவரை நீண்ட நெடிய திரண்ட கைகளையும், விண் அளாவிய உயர்ந்த சினவுந்தன்மையுள்ள தோள்களையும் உடைய அந்தக் கவந்தனும் (இவர்கள் கைவாளால்) இறந்துபட்ட முடிவும், பின், தேவர்களும் நினைந்து வணங்கத்தக்க சவரி என்பவளைப் போல, உடம்பாகிய பகையை விடுத்து உயர்ந்த உலகம் புகுந்த அழகும் நம்மால் சொல்லத் தகும் தரத்தனவோ ? அல்ல.

கு :—இராமன் வீரச் செயல்களையே கூறிவந்த அனுமன் இறுதியாகக் கவந்தனை வதைத்த வீரத்தைக் கூறிப் பின் அவனுக்கு உயர் பதம் அளித்தமையும் இச்செய்யுளில் புலப்படுத்துவானாய் அவனுக்குப் பின் இராமன் அருளால் வீடுபெற்ற சவரியையும் உவமை முகத்தால் உடன்கூறி அவச்செயல் செய்த கவந்தனுக்கும் தவச்செயல் செய்த சவரிக்கும் ஒக்க அருள் புரிந்த அவ்விராமன் பெருங் கருணையை விளக்கியவாறு. அந்தம், முன்னது முடிவு ; பின்னது அழகு. திக்க என்ற குறிப்புவினைப் பெயரெச்சம் கரம் என்னும் பெயரைக்கொண்டு முடியும். திசையெல்லைக் கண்ணதாய் நீண்ட கரம் என்று பொருள் படும். "பாரிடம் வலம் வரப் பரந்தகையது" (கவந்தப்–23) என முன்கூறியுள்ளதும் காணலாம். திக்க நெடுந்திரள் கரம் எனவும், அந்தர சினவு தோள் எனவும் நிரனிறைப் பொருள்கோளாய் இயையும். கைகளின் நீட்சியும் தோள்களின் உயர்ச்சியும் புலப் படுத்தியவாறு. முன்னரே கவந்தனைப்பற்றி யறிந்துள்ளமை

தோன்ற, அக்கவந்தனும் எனப் பண்டறி சுட்டாகக் கூறினன். கவந்தனும் என்புழி உம்மை இழிவு சிறப்பு; பாதகம் செய்து பழகிய கவந்தனும் தவமுதுமகளாகிய சவரிபோல் உயர்பதம் புக்கானே என வியக்குமிடமாதலே நினைக. கவந்தன் சினத்தைத் தோள்மேலேற்றிச் 'சினவுதோள்' என்ருன்; முதலுக்கும் சினைக்கும் உள்ள ஒற்றுமை கருதி. உக்க அந்தம் இறந்துபட்ட முடிவு. சாபத்தால் வந்ததாய் முன்னைய தெய்வ உடம்பை இழக்கச் செய்த கொடுமை நினைந்து 'உடற்பகை' என்ருன். சவரி, தவத்தால் எய்திய உயர்பதவியைக் கவந்தன் கொலைத் தொழிலால் எய்தினமை வியப்பதன்றி உண்மையறிந்துகூறக் கூடாமையின் 'நமக்குரை செயும் புரையவோ' என்ருன். இராமன் கரம் பட்டதால் கவந்தன் முன்னைக் கந்தருவ உடம்பைப் பெற்ருன் என்பதே முன்னர்க் கூறப்பட்டிருத்தலின் தவத்தால் பரமபதம் எய்திய சவரிபோல் உயர்பதம் புக்கதாகக் கூறியது சொல்லளவில் பொருத்தமுடையதாகும். என்னை? உயர்பதம் என்றது பரமபதத்திற்கும் கந்தருவவுலகத்திற்கும் பொதுவாதலின் என்க. (12)

**3900.** முனைவரும் பிறருமேன் முடிவரும் பகலெலா
மினையர்வந் துறுவரென் றியறவம் புரிகுவார்
வினையெனுஞ் சிறைதுறந் துயர்பதம் விரவினு
ரெனையரென் றுரைசெய்கே னிரவிதன் சிறுவனே.

'முனைவரும் பிறரும் மேல், முடிவு அரும் பகல் எலாம்,
இனையர் வந்துறுவர் என்று: இயல்தவம் புரிகுவார்,
வினை எனும் சிறை துறந்து உயர்பதம் விரவினர்
எனையர் என்று உரை செய்கேன்?—இரவிதன் சிறுவனே!

பொ:—சூரியன் மைந்தனே! இராம இலக்குவராய இவர்கள் வனத்திற்கு வருவார்கள் என்பது அறிந்து, அவர்களைக் காண முனிவர்களும், அவர் போன்ற தகுதியுடைய பிறரும் முற்காலம் தொட்டு எல்லை இல்லாத பல நாட்களாகத் தத்தமக்கியன்ற வண்ணம் தவம் புரிவாராய்த், தவத்தின் பயனுக இவர்களைக் கண்களால் கண்டு, இருவினை என்கின்ற கட்டினையறுத்து உயர்ந்ததாகிய பரம பதத்தை அடைந்தவர்கள் எத்துணையர் என்று சொல்வேன்?

கு:—முனைவர் என்றது கடவுள் அருள்பெற்ற முனிவரை. இனையர் வந்து உறுவர் என்று முனைவரும் பிறரும் தவம்புரிகுவாராய் உயர்பதம் விரவினர் எனையர் என்று உரைசெய்கேன்? என

இயையும். தவம் உடம்புநிலைக் கேற்றவாறு செய்யவேண்டி யிருத்தலின் 'இயல் தவம்' என்றான். 'புரிகுவார்' முற்றெச்சம்; புரிகுவாராய் விரவினர் என இயையும். நல்வினையும் பிறவிக்குக் காரணமாய் வீட்டிற்குத் தடையாய் நிற்றலின் வினை என்பதற்கு இருவினை எனப் பொருள் கூறப்பெற்றது. 'இருள்சேரிருவினையுஞ் சேரா' (குறள் - 5) என வள்ளுவர் கூறியுள்ளதும் காணலாம். வீடுருதவாறு உயிரை வினை தடைசெய்து நிற்றலின் அதனைச் சிறையாக உருவகம் செய்தார். வினையினீங்கியவுடன் விளங்கிய அறிவுருவாய இறைவனடி யெய்தல் இயல்பாகலின், 'சிறைதுறந்துயர்பதம் விரவினர்' என்றான். எண்ணற்றவர் என்பான் 'எனையர் என்று உரைசெய்கேன்' என்றான். இராமனைக் கண்ட பேற்றால் முத்தியடைந்தோர் எண்ணற்றோர் என்றவாறு. சரபங்க முனிவர் முதலியோரையே இங்குச் சுட்டினான். இராமனால் உயர்ந்த பதம் பெற்றோரை மேலைச் செய்யுளில் சொல்லத் தொடங்கி அத்தகையோர் அளவிலர் என்பதை இச்செய்யுளால் கூறிமுடித்தான். சபரி உயர்பதம் முற்றதை மேலைச் செய்யுளில் உவமை முகத்தால் கூறினமை காணலாம். "ஆயிர முகமுள தவமயர்குவெனு, னீயிவண் வருதிகொலெனு நினைவுடையேன், போயின இருவினை புகலுறு விதியான், மேயினையினியொரு வினையிலை விறலோய்" (சரபங்கன் பிறப்பு நீங்கு - 40) என்ற சரபங்கன் சொல், இச்செய்யுளுக்கு விளக்கமாய் அமைந்திருத்தல் காணலாம். இதனால் இராமனோடு நட்புக்கொண்டால் புறப்பகையாகிய வாலியை அழித்தலேயன்றி அகப்பகையாகிய குற்றங்களையும் களைந்து உயர்பதமும் எய்தலாம் என்பது உணர்த்தியவாறு. என் குருவாகிய சூரியன் மைந்தன் என்ற உரிமையினால் இவ்வளவுங் கூறுகின்றேன் என்பான்போல் சுக்கிரீவனை 'இரவிதன் சிறுவனே' என்று விளித்தான். (13)

3901. மாயையான் மதியிலா
நிருதர்கோன் மனைவியைத்
தீயகா னெறியினுய்த்
தனனவட் டேடுவார்
நீயையா தவமிழைத்
துடைமையா னெடுமனம்
தூயையா வுடைமையா
லுறவினைத் துணிகுவார்.

'மாயையால் மதிஇலா நிருதர்கோன், மனைவியைத் தீயகான் நெறியின் உய்த்தனன்; அவள் தேடுவார்.

நீ ஐயா, தவம் இழைத்துடைமையால் நெடுமனம்,
தூயையா உடைமையால், உறவினைத் துணிகுவார்.

பொ :—ஐயா, புத்தியில்லாத அரக்கர் கோனாகிய இராவணன், இந்த இராமனுடைய மனைவியாகிய சீதையை வஞ்சனையால் கொடிய காட்டு வழியில் கொண்டு போனான்; அந்தச் சீதையைத் தேடுகின்றவர்களாகிய இராம இலக்குவர், நீ முன் தவஞ் செய்திருத்தலாலும் சிறந்த மனத்தால் தூய்மையுடையையாக இருத்தலாலும் உன் உறவைக் கொள்ளத் துணிவாராயினர்.

கு :—சீதை உலகின் மாதா என்பதையறியாது விரும்பினான் இராவணன் ஆகலின், அவனை 'மதியிலா நிருதர்கோன்' என்றான். "பேதாய் பிழை செய்தனை பேருலகின், மாதா வனையாளை மனக்கொடு நீ" (சடாயு உயிர்நீத்த - 35) எனச் சடாயு கூறுதலும் இங்கு நினைக்க. மாரீசனை மாயமானாக்கி யனுப்பி, தானும் தவசியாக மாய வேடம் பூண்டு சென்று இராவணன் சீதையைக் கவர்ந்தமை புலப்பட 'மாயையால்' என்றான். அவளைத் தேடுவார் எனப் பொருள் படுதலின், இயல்பாக வேண்டிய உயர்திணைப் பெயர் 'அவட்டேடுவார்' என விகாரமாயிற்று; இயல்பின் விகாரம். சுக்கிரீவனுடைய முன்னைத் தவமும் இப்போழ்தத்து மனத்தூய்மையுமே இராமன் வரவுக்கும் உறவுக்கும் காரணமாயின என அவர் வருகையின் அருமை புலப்படுத்தியவாறு. நெடுமனம் என்புழி நெடுமை இங்குச் சிறப்புணர்த்திற்று. இனிக் கொடுமைக்கு எதிர்மொழியாகக்கொண்டு நேர்மையான மனம் எனலும் அமையும். உறவு என்றது நட்புறவினை. கொள்ளத் துணிகுவார் என ஒருசொல் வருவிக்க. தேடுவார் என்ற வினைப்பெயர் துணிகுவார் என்ற வினைகொண்டு முடிந்தது. சீதையைத் தேடுகின்றவர்கள் வழியில் நின்னையும் கண்டு உறவு கொள்ள நினைத்தார் என்றது, அவர்கள் கூட்டொருவரையும் வேண்டாக் கொற்றவராதலைப் புலப்படுத்தியது. அனுமன் நவவியாகரண பண்டிதன் என்பதற்கேற்ப ஒன்பது பாடலால் இராமன் வரலாற்றைக் கூறிய நயம் காண்க. (14)

3902. தந்திருந் தனரருட்
டகைநெடும் பகைஞனை
மிந்திரன் சிறுவனுக்
கிறுதியின் றிசைதரும்

புந்தியின் பெருமையாய்
போதரென் றுரைசெய்தான்
மந்திரங் கெழுமுநூன்
மரபுணர்ந் துதவுவான்.

'தந்திருந்தனர் அருள்; தகைநெடும் பகைஞன் ஆம்
இந்திரன் சிறுவனுக்கு இறுதி இன்று இசைதரும்;
புந்தியின் பெருமையாய்! போதர்' என்று உரை செய்தான்
மந்திரம் கெழுமுநூல் மரபு உணர்ந்து உதவுவான்.

பொ :—தான் கூறவேண்டிய ஆலோசனைகளை, அவ்ஆலோசனைகள் பொருந்திய அரசியல் நூல்களின் மரபினை உணர்ந்து சுக்கிரீவனுக்குச் சொல்லுகின்றவனாகிய அனுமன், (சுக்கிரீவனை நோக்கி) அறிவின் பெருமையுடையவனே! (இராம இலக்குவர்) நம்பால் அருள் செய்து அங்குத் தங்கி இருக்கின்றார்கள்; தகுதி மிக்க பெரிய பகைவனாயுள்ள இந்திரன் மகனாகிய வாலிக்கு இப்போது அழிவு வந்து பொருந்தும்; அவர்பால் வருக என்று கூறினான்.

கு :—அருள் தந்திருந்தனர் என இயையும்; தர எனும் செயவெனெச்சம் தந்து எனச் செய்தெனெச்சமாய்த் திரிந்து நின்றது. அருள்தரல் உறுதியாதலின், துணிவுபற்றி எதிர்காலம் இறந்தகாலமாயிற்று என வழுவமைதி கூறலுமாம். தகை - தகுதி. நெடுமை, பெருமை யுணர்த்திற்று. கால நெடுமை யுணர்த்தியதாகக்கொண்டு பழம் பகைஞனும் சிறுவன் எனினும் ஆம். சுக்கிரீவன் வலிமையினும் வாலி வலியன் ஆகலின் தகைமையுள்ள பகைஞனாதல் அறியலாம். பிறன் மனையாளாகிய அகலிகையை விரும்பிச் சேர்ந்த சிறுமையன் ஆகிய இந்திரன் போலவே, அவன் மகனாகிய வாலியும் அந்தச் சிறுமையுடையனாயினான் என்பதைப் புலப்படுத்துவான் போல 'இந்திரன் சிறுவன்' என வாலியைக் குறித்தான். அந்தச் சிறுமை காரணமாகவே இராமனால் இறுதி அவனுக்கு இசையும் என்றவாறு. வாலியினும் வலியனாகிய இராமன்பால் நட்புப்பூண்டு வாலியை வெல்ல வேண்டும் என்ற அரசியல் அறிவு சுக்கிரீவனுக்கு இயல்பாக உண்டு என்பது தோன்றப் புந்தியின் பெருமையாய்! என்று விளித்தவாறு. போதர் என்பது வருக என்னும் பொருளுடைய பழைய சொல். "போதர் கண்டாயிங்கே போதர் கண்டாய்" (2-9-6) என்ற பெரியாழ்வார் பாசுரமும் காண்க. மந்திரம் - ஆலோசனை. கெழுமுதல் - பொருந்துதல். அனுமன் கூறும் ஆலோசனை அரசியல் நூல் மரபிற்கேற்றதாகவே இருக்கும் என்பது புலப்பட 'நூன்மர புணர்ந் துதவுவான்' என்று அனுமனைச் சிறப்பித்தார். சம்பரனுக்குத் தோற்ற இந்திரன் மகனைச் சம்பரனைவென்ற தயரதனுடைய மகன் வெல்லுதல் எளிது என்ற குறிப்பும் இதில் உண்டு. (15)

## அனுமனோடு சுக்கிரீவன் இராமனை யடைதல்

3903. அன்னவா முரையெலா
மறிவினு லுணர்குவா
னுன்னையே யுடையவெற்
கரியதெப் பொருளரோ
பொன்னையே பொருவுவாய்
போதெனப் போதுவான்
றன்னையே யனையவன்
சரணம்வந் தணுகினான்.

அன்ன ஆம் உரை எலாம் அறிவினால் உணர்குவான்,
'உன்னையே உடைய எற்கு அரியது எப்பொருள் அரோ ?
பொன்னையே பொருவுவாய் ! போது' எனப் போதுவான்
தன்னையே அனையவன் சரணம் வந்து அணுகினான்.

பொ:—அத்தன்மையவாகிய சொல்லை எல்லாம் தன் அறிவினால் பொருத்தமானதாக உணர்ந்தவனாகிய சுக்கிரீவன், (அனுமனை நோக்கி) (ஆலோசனை கூறுவதில் இந்திரனின் அமைச்சனாகிய) வியாழனையே ஒப்பவனே ! அறிவிற் சிறந்த உன்னையே துணையாக உடைய எனக்குப் பெறுதற்கரிதாக இருப்பது எப்பொருள்? (எப்பொருளும் பெறுதற்கரிதன்று ; அவர்பால் போகலாம்) வருக' என்று கூறிப் புறப்பட்டவனாய் வந்து தனக்குவமையில்லாதவனாய்த் தனக்குத்தானே ஒப்பாகின்ற இராமனுடைய பாதங்களை அடைந்தான்.

கு:—பொன் - வியாழன். தனக்குச் சிறந்த ஆலோசனைகளைத் தெரிவித்த அனுமனைப் புகழுங்கால் ஆலோசனை கூறுவதில் சிறப்புற்றுள்ள இந்திரனுடைய அமைச்சனாகிய பிரகஸ்பதியை உவமை கூறுவதன்றி உலோகத்தில் ஒன்றாகிய பொன்னைக் கூறுதற்கு இயைபின்மை காணலாம். வியாழன் இந்திரனுக்கு அமைச்சனாகவும் குருவாகவும் விளங்குகின்றவன். இந்திரனுக்கு வியாழன் அமைந்ததுபோல் எனக்கு யோசனை கூற நீயமைந்தாய் எனப் புகழ்ந்தவாறு. உணர்குவான் என்றது, பொருத்தமானவையே என உணர்ந்து உடன்பட்டதை யுணர்த்தியது. அவ்வாறு உடன்படுதற்கேற்ற நல்லறிவில் குறைவிலான் சுக்கிரீவன் என்பது தோன்ற அறிவினால் உணர்குவான் என்று சிறப்பித்தான். அறிவுடையார் எல்லா முடையாராதலின் அறிவிற் சிறந்த அனுமனை அமைச்சனாகப் பெற்ற சுக்கிரீவனுக்குப் பெறுதற்கரியதாக உள்ளது ஏதும்

இல்லை என்றவாறு. வீரமும் அருளும் மிக்க இராம இலக்குவர் நட்பு ஆம் பெரும்பேறு அனுமன் துணையாலேயே கிடைத்தது என்பது குறிப்பு. போதுவான் என்பது புகுதுவான் என்பதன் மரூஉ. போதுவானுய் வந்து அணுகினுன் என இயையும்; முற்றெச்சம். "தனக்குவமை யில்லாதான் தாள் சேர்ந்தார்க் கல்லால், மனக்கவலை மாற்ற லரிது" (குறள் - 7) என்பதைத் தழுவியதாக நான்காமடி அமைந்துள்ளமை காணலாம். தன்னையே அனையவன் எனவே இராமன் தனக்குவமையில்லாதான் என்பது உணர்த்தியவாருயிற்று. சுக்கிரீவன் தனக்குவமையில்லாதான் தாள் சேர்ந்தமையால் இனி மனக்கவலை மாற்றல் எளிது என்பதும் கூறியவாருயிற்று. இராமன் திருவடியை அணுகினுன் எனவும் இராமனையே சரணுக அடைந்தான் எனவும் இருபொருள்படுவதாய்ச் சரணம் என்ற சொல் அமைந்திருக்கும் நயம் காண்க. இராமனைச் சேய்மையிற் கண்ட போது அவன் திருவடிகளை வணங்கினுன் என்பதும் குறிப்பு. (16)

**3904.** கண்டன னென்ப மன்னே
★ கதிரவன் சிறுவன் காமர்க்
குண்டலந் துறந்த கோல
வதனமுங் குளிர்க்குங் கண்ணும்
புண்டரி கங்கள் பூத்துப்
புயறழீஇப் பொலிந்த திங்கண்
மண்டல முதயஞ் செய்த
மரகதக் கிரிய னானை.

**கண்டனன் என்ப மன்னே - கதிரவன் சிறுவன், காமர்க் குண்டலம் துறந்த கோல வதனமும், குளிர்க்கும் கண்ணும் புண்ட ரிகங்கள் பூத்துப் புயல் தழீஇப் பொலிந்த திங்கள் மண்டலம் உதயம் செய்த மரகதக் கிரி அனானை.**

பொ :—(அவ்வாறு வந்தணுகிய) சூரியன் மகனுகிய சுக்கிரீவன், தாமரை மலர்கள் மலரப் பெற்று, மேகத்தைத் தழுவிப், பொலிவுள்ள சந்திரமண்டலம் உதயம் செய்யப்பெற்ற மரகதமலை போன்ற இராமனை - அழகிய குண்டலங்களை அணியாமல் விட்ட அழகிய அவன் முகத்தை—கண்டவரைக் குளிரப் பண்ணும் அவன் கண்ணை—கண்டான்.

கு :—என்ப, மன், ஓ அசைகள். இராமனுடைய கண்களும் வாயும், கைகளும், உந்தியும் திருவடியும் தாமரை மலர் போன்ற

செந்நிறமுடையவாதலாலும், கரிய குடுமி மேகம் போன்றதாகலாலும், அவன் தண்ணொளி மிக்க முகம் சந்திரன் போன்றதாகலாலும் அவன் மேனி மரகதமலை போன்ற நிறமும் ஒளியும் தோற்றமுமுடையதாதலாலும் புண்டரிகங்கள் பூத்துப் புயல்தழீஇப் பொலிந்த திங்கள் மண்டலம் உதயஞ்செய்த மரகதக்கிரியனான் என இல்பொருளுவமை கூறினர். “திருவடியும் கையும் திருவாயும் செய்ய, கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே! கண் இமைத்துக் காண்பார் தம் கண்ணென்ன கண்ணே“ (சிலப் - ஆய்ச்சியர் குரவை.) என்பது ஒப்பு நோக்கத்தகும். ஒரு மரகதமலை தாமரைகள் பூக்கப் பெற்று, மேகத்தால் தழுவப்பெற்று, முழுமதி தன்பால் உதயம் செய்யவும் பெற்று விளங்குமாயின் இராமனை நிகர்க்கும் என்பது கருத்து. அத்தகையதோர் மலையின்மையின் இல்பொருளுவமையாயிற்று. கிரியனானை வதனத்தைக் கண்ணைக் கன்டனன் என இருவகைச் செயப்படு பொருளுடையதாக முடிக்க. ஒருவரை ஒருவர் காணுங்கால் முதலில் அவர் தம் உடம்பின் பொதுத் தோற்றத்தையும் பின் நெருங்கிச் சென்று அவர் தம் முகத்தையும் பின்னர் அவர் கண்களையும் காண்டலே இயல்பாதலின் அம்முறையான், சுக்கிரீவன் இராமனைக் கண்டதாகக் கூறப்பட்டது. இனி, முதலையும் சினையையும் வேறுபடுத்திக் கிரியனானது வதனமும் கண்ணும் கண்டனன் என ஒருவகைச் செயப்படு பொருளே வந்ததாகக் கூறலுமாம். அரசு துறந்து காடு புகுங்கால் அணிகளையும் துறந்தான் ஆகலின், காமர்க் குண்டலம் துறந்தமை கூறினர். அணிகட்கும் அழகு செய்யும் வனப்புமிக்க வதனமாகலின் காமர்க் குண்டலந் துறந்தவழியும் கோலமுடையதாகவே திகழ்ந்தது என்பது புலப்படுத்தியவாறு. தாம் குளிர்ச்சியுடையவாக இருத்தலோடு கண்டாரையும் குளிர்விக்கும் கண்கள் என இராமன் கண்களின் ஏற்றத்தை யுணர்த்தியவாறு. முனிவரும் பிறரும், தவம் செய்தும் காண இயலாத உருவத்தைக் காணப் பெற்றான் சுக்கிரீவன்; கண் விழித்துக் கண்ட அவன் கண்ணென்ன கண்ணே! என்று வியப்பார் போலக் ‘கண்டனனென்பமன்றே’ என அசைச் சொற்களைச் சேர்த்துக் கூறினர். குண்டலம் துறந்தமை அவன் அரசு துறந்து வந்தமைக்கு அடையாளமாய் அரசு துறந்திருக்கும் சுக்கிரீவனோடு இராமன் ஒப்புமையுடையவன் என்பதை யுணர்த்தி நட்புக்குரியவன் என்பதை நாட்டியவாறு. (17)

**3905.** நோக்கினா னெடிது நின்று
நொடிவருங் கமலத் தண்ண
லாக்கிய வுலக மெல்லா
மன்றுதொட் டின்று காறும்

பாக்கியம் புரிந்த வெல்லாங்
குவிந்திரு படிவ மாகி
மேக்குயர் தடந்தோள் பெற்று
வீரராய் விளைந்த வென்பான்.

நோக்கினன் ; நெடிது நின்றான் ;
'நொடிவுஅருங் கமலத்து அண்ணல்
ஆக்கிய உலகம் எல்லாம்
அன்று தொட்டு இன்று காறும்
பாக்கியம் புரிந்த எல்லாம்
குவிந்து இரு படிவ மாகி
மேக்கு உயர் தடந்தோள் பெற்று
வீரர் ஆய் விளைந்த' என்பான்.

பொ :—(அவ்வாறு சுக்கிரீவன் இராம இலக்குவரின் அழகை) நோக்கி நெடிது போழ்து அவ்வழகில் ஈடுபட்டு நின்றவனாய், அழிவு இல்லாத தாமரையில் இருக்கும் பிரமன் உண்டாக்கிய உலகம் முழுமையும் அன்று தொட்டு இன்று வரையில் புரிந்த நல்வினை எல்லாம் சேர்ந்து, இரண்டு வடிவமாகி, மேலே உயர்ந்த பெரிய தோள்களையும் பெற்று வீரர்களாகத் தோன்றின என்று எண்ணுவானானான்.

கு :—நோக்கினன், நின்றான் என்பன முற்றெச்சங்கள். நொடிவு-அழிவு. நொடிதல் சொல்லுதலாகக் கொண்டு சொல்லுதற்கரிய சிறப்பினையுடைய பிரமன் எனலும் ஆம். உலகம் என்றது இங்கு உயர்ந்தோரை. படைப்புக் காலம் தொட்டு இன்று வரையில் உலகம் செய்த பாக்கியம் எல்லாம் சேர்ந்து தம் அருவ நிலையை விடுத்து இருவடிவமாகிப் பெருந்தோளும் பெற்றுத் தோன்றினவே என எண்ணுவானாயினன் என்க. இராம இலக்குவர், உலகம் செய்த புண்ணியமெல்லாம் திரண்டாற் போன்றவர் என்றவாறு. மேக்கு - மேல். "வீரநின்குல மைந்தனை வேதியர் முதலோர், யாரும் யாஞ் செய்த நல்லறப் பயனென விருப்பார் "(1437) என முன் கூறியிருத்தலும் காண்க. சுக்கிரீவன் வாலியைக் கொல்லும் நோக்கமுடையவன் ஆதலின் அக்கருத்திற்கேற்ப அவர்கள் தடந்தோள் பெற்றிருத்தல் பற்றியும் வீரராய் விளங்குதல் பற்றியுமே எண்ணினான். நெடிது நின்றானாய் என்பான் என முடியும். (18)

3906. தேறின னமரர்க் கெல்லாந்
தேவராந் தேவ ரன்றே
மாறியிப் பிறப்பில் வந்தார்
மானுட ராகி மன்னோ
வாறுகொள் சடிலத் தானு
மயனுமென் றிவர்க ளாதி
வேறுள குழுவை யெல்லா
மானுடம் வென்ற தென்றே.

தேறினன் - அமரர்க்கு எல்லாம் தேவராம் தேவர் அன்றே,
மாறி, இப்பிறப்பில் வந்தார் மானுடர் ஆகி மன்னோ;
ஆறுகொள் சடிலத் தானும், அயனும் என்று இவர்கள் ஆதி
வேறு உள குழுவை எல்லாம், மானுடம் வென்றது' என்றே.

பொ :—தேவர்கட்கு எல்லாம் தேவராகிய கடவுள் அன்றோ தம் உருமாறி இப்பிறப்பில் மானிடர் ஆகி வந்துளார்! ஆதலால் கங்கை தங்கிய சடையையுடைய உருத்திரனும் பிரமனும் என்கின்ற இவர்கள் முதலாகத் தனக்கு வேருக உள்ள தேவர் கூட்டத்தை யெல்லாம் மானுடம் வென்றுவிட்டது என்றே சுக்கிரீவன் தெளிந்தான்.

கு :—' வென்றதென்றே தேறினன்' என்று இயையும். எழுவாய் இறுதி நிலைமொழி தம்முள் பொருள் நோக்குடையதாகலின் இது பூட்டுவில் பொருள்கோள் எனப்படும். தேவர் என்றது திருமாலை. திருமால் இராமனுகவும் அவன் பாயலாய்ப் பிரியாத ஆதிசேடன் இலக்குவனுகவும் பிறந்தார் என்பது திருவவதாரப் படலத்தால் அறியலாம். தேவர்கட்கு எல்லாம் தேவராகிய பரம்பொருள் பிற தேவருள் ஒருவனுகத் தோன்றுமல் மானிடனுகப் பிறந்தமையின் பிரமன் முதலிய தேவர் குழுவையெல்லாம் மானுடம் வென்றதாகக் கூறினர். திருமால் மானிடனுகப் பிறந்தமையால் மனித குலத்திற்கே பெருமை உண்டாயது என்பது கருத்து. ஞானசம்பந்தர் மண்ணுலகத்தில் தமிழ் வழங்கும் தென்னுட்டில் பிறந்த சிறப்பைக் கூறவந்த சேக்கிழார், 'திசையனைத்தின் பெருமை யெலாந் தென்றிசையே வென்றேற மிசையுலகும் பிறவுலகும் மேதினியே தனிவெல்ல, அசைவில் செழுந் தமிழ்வழக்கே யயல்வழக்கின்துறைவெல்ல" (பெ. பு. திருஞான, 24) "சிவம் பெருக்கும் பிள்ளையார் திருவவதாரஞ் செய்தார்" (பெ. பு. திருஞான. 26) எனக் கூறியுள்ளமை இங்கு ஒப்புநோக்கத்தகும். என்றே தேறினன் என இங்குக் கூறினமையால் முன்னைச் செய்யுளில், உலகம் புரிந்த பாக்கியமே இரு

படிவமாகி வீரராய் விளைந்த என எண்ணியது சுக்கிரீவனின் தெளி யாத நிலையில் தோன்றிய கருத்தே என்பது பெறலாம். (19)

வந்த சுக்கிரீவனை இராமன் வரவேற்றல்

3907. எனநினைந் தினைய வெண்ணி
யிவர்கின்ற காத லோதக்
கனைகடற் கரைநின் றேருக்
கண்ணிணை களிப்ப நோக்கி
யனகனைக் குறுகி னானவ்
வண்ணலு மருத்தி கூரப்
புனைமலர்த் தடக்கை நீட்டிப்
போந்தினி திருத்தி யென்றான்.

என நினைந்து இனைய எண்ணி,
இவர்கின்ற காதல் ஓதக்
கனைகடல் கரை நின்று ஏருக்
கண் இணை களிப்ப நோக்கி,
அனகனைக் குறுகினான்; அவ்
அண்ணலும், அருத்தி கூர,
புனைமலர்த் தடக்கை நீட்டிப்,
'போந்து இனிது இருத்தி' என்றான்.

பொ:—என இத்தன்மையானவற்றை ஆராய்ந்து எண்ணி, மேலும் மேலும் வளர்கின்ற அன்பு என்கின்ற அலைகளையுடைய ஒலிக் கின்ற கடலின் நின்று கரை ஏருமல் கண்கள் இரண்டும் களிக்குமாறு நெடிது நோக்கிக்கொண்டு குற்றமற்றவனாகிய இராமனைக் கிட்டி னான்; அப்பெருமையுடைய இராமனும் அன்புமீதூர அழகிய செந்தா மரை மலர்போன்ற பெரிய கைகளை நீட்டி, 'வந்து இனிதாக உட் காருக' என்று சொல்லி உபசரித்தான்.

கு:—என இனைய நினைந்து எண்ணி எனவும், கடல் நின்று கரையேரு எனவும் இயையும். இவர்தல் - வளர்தல். ஓதம் - அலை. கனை - ஒலி. அன்பினைக் கடலாக உருவகஞ் செய்தவாறு. இராமன் உருவத்தைப் பார்த்தவுடன் சுக்கிரீவன் உள்ளத்தில் தோன்றிய அன்பெனுங் கடலில் அழுந்திக் கண்களிப்ப அவன் உருவை நெடிது நோக்கிக்கொண்டே இராமனை அடைந்தான் என அவன் அன்பின் மிகுதி புலப்படுத்தியவாறு. அனகன் - குற்றமற்றவன்; இராமன்.

அருத்தி - ஆசை. கூர்தல் - மிகுதல். புனே - அழகு. 'உட்காருங்கள்' என ஒருவரை உபசரிப்போர் கைகளே நீட்டி யிடத்தைச் சுட்டிக் காட்டிக்கொண்டே சொல்லுதல் இயல்பு. அச்சமின்றி இருக்கலாம் என்பான் ' இனிதிருத்தி ' என்ருன். சுக்கிரீவன் தன்னே நோக்கி நெருங்கியதைக் கண்ட இராமனும் அச் சுக்கிரீவனே ' இனிதிருத்தி ' என வரவேற்று உபசரித்தான் என்க. (20)

இருவரும் ஒருங்கிருந்த காட்சி 3908-3909

3908. தவாவலி யரக்க ரென்னுந்
தகாவிருட் பகையைத் தள்ளிக்
குவாலற நிறுத்தற் கேற்ற
காலத்தின் கூட்ட மொத்தா
ரவாமுத லறுத்த சிந்தை
யனகனு மரியின் வேந்து
முவாவுற வந்து கூடு
முடுபதி யிரவி யொத்தார்.

தவா வலி அரக்கர் என்னும் தகா இருள் பகையைத் தள்ளிக், குவால் அறம் நிறுத்தற்கு ஏற்ற காலத்தின் கூட்டம் ஒத்தார்; அவா முதல் அறுத்த சிந்தை அனகனும், அரியின் வேந்தும், உவா உற வந்து கூடும் உடுபதி இரவி, ஒத்தார்.

பொ :—ஆசையை வேரோடு களேந்த சிந்தையையுடைய குற்ற மற்றவனுகிய இராமனும், குரங்கினத்து அரசனுகிய சுக்கிரீவனும் (ஒருவழிச் சேர்ந்தவராய்க்,) கெடாத வலிமையுடைய அரக்கர் என்கின்ற தகாத பகையாகிய இருளே அழித்துக், கூட்டமாகிய அறத்தை நிலேபெறச் செய்தற்கு ஏற்றதாகிய இருவகைக் காலங்களின் கூட்டுறவைப்போல் விளங்கினுர்கள்; மேலும், அமாவாசையாகிய திதிவரலால் வந்து சேர்கின்ற சந்திரனேயும் சேரப்படுகின்ற சூரியனேயும் போன்றும் விளங்கினுர்கள்.

கு :—முதல் என்றது வேரினே. மண்ணுசை பொன்னுசை பெண்ணுசை என்ற ஆசைகளே முழுதும் களேந்தவன் என இராமனுடைய தூய்மையை விளக்கியவாறு. மெய்த்திருப்பதம் மேவென்ற போதினும் இத்திருத்துறந் தேகென்ற போதினும், சித்திரத்தி னலர்ந்த செந்தாமரை, ஒத்திருக்கும் முகத்தனுக் இராமன் இருந்தமையால் அவன் அவா முதல் அறுத்தவன் என்பது நன்கு புலனுகும்.

அனகன் - குற்றமற்றவன்; இராமன். அரி - குரங்கு. குரங்கினத்தின் அரசனோடு நட்புக்கொள்ளுதற்கு ஏலாதவன், எளியனாய் நட்பு செய்தான் என்பது தோன்ற, அனகன் என இராமனைக் குறித்தார். இராமன் சுக்கிரீவனுக்கு முடிசூடா முன்னரே, கம்பர் அவனை அரியின் வேந்து ஆக்கிய விந்தை காணலாம். அரக்கர் என்ற பகையிருளைத் தள்ளுதற்கேற்ற காலமும் அறம் நிறுத்தற்கேற்ற காலமும் ஒன்று கூடியது போலச் சுக்கிரீவனும் இராமனும் ஒருங்கே சேர்ந்தனர் என்றவாறு. அறம் நிறுத்தற்கேற்ற காலம் இராமனாகவும், அரக்கராகிய பகையிருளைத் தள்ளுதற்கேற்ற காலம் சுக்கிரீவனாகவும் கொள்க. இராமன் நோக்கம் அறம் நிலைபெறுத்தலே யாதலும் சுக்கிரீவன் தன்மை அன்னதன்றிப் பகையழிக்க மட்டுமே துணையாய் நின்றமையும் ஓர்க. குவால் - குவியல்; கூட்டம். அறங்கள் பல திறத்தனவும் அடங்கக் குவாலறம் என்றார். அமாவாசை யன்று சந்திரன் சூரியனைச் சேர்வதுபோல, அரக்கர் அழியும் காலம் நெருங்கலால் சுக்கிரீவன் வந்து இராமனைச் சேர்ந்தான் என்க. கலைகளை யிழந்த சந்திரன் சூரியனைச் சேர்ந்தபின் கலைகளைப் பெறுதல் போலச் சுக்கிரீவனும் இராமனைச் சேர்ந்தபின் அரசச் செல்வம் முதலியவற்றைப் பெறுதலும் கொள்க. உடுபதி, நட்சத்திரங்களுக்குத் தலைவன்; சந்திரன். சந்திரன் போன்றவன் சுக்கிரீவன். வெண்ணிறத்தாலும் ஒப்புமை காணலாம். சூரியனைப் போன்றவன் இராமன். வெய்யோனொளி தன் மேனியின் விரிசோதியின் மறைய விளங்குபவனாதலும், கருஞாயிறு போல்வனாதலும் காண்க. 'இருளிடை வைகினேம் இரவிதோன்றினாய்' (அகத் - 16) எனத் தண்டக வனத்து முனிவர் இராமனைச் சூரியனாகக் கூறியிருத்தலும் காணலாம். இராமனைச் சந்திரனாகவும் சுக்கிரீவனைச் சூரியனாகவும் கொண்டு விளக்கினாருமுளர். அது பொருந்துமேற் கொள்க. (21)

**3909.** கூட்டமுற் றிருந்த வீரர்
குறித்ததோர் பொருட்கு முன்னா
ளீட்டிய தவமும் பின்னர்
முயற்சியு மியைந்த தொத்தார்
வீட்டுவா ளரக்க ரென்னுந்
தீவினை வேரின் வாங்கக்
கேட்டுணர் கல்வி யோடு
ஞானமுங் கிடைத்த தொத்தார்.

கூட்டம் உற்று இருந்த வீரர்,
குறித்தது ஓர் பொருட்கு முன்னுள்
ஈட்டிய தவமும், பின்னர்
முயற்சியும் இயைந்தது ஒத்தார்;
வீட்டு வாள் அரக்கர் என்னும்
தீவினை வேரின் வாங்கக்,
கேட்டு உணர் கல்வியோடு
ஞானமும் கிடைத்தது ஒத்தார்.

பொ :—ஒருங்கே கூடியிருந்த இராம சுக்கிரீவர், நினைத்ததொரு காரியம் நிறைவேறுவதற்கு, முற்காலத்துச் செய்த நல்வினையும் பின்னர் மேற்கொண்ட முயற்சியும் ஒன்று சேர்ந்ததை ஒத்து விளங்கினார்கள்; உயிர்களை அழிக்கின்ற கொடிய அரக்கர்கள் என்கின்ற தீவினையை வேரொடு களைவதற்கு, நல்லாசிரியர்பால் பலகாலும் கேட்டு உணர்ந்த கல்வியாகிய கலைஞானத்தோடு இயல்பாய பிரஞானமும் சேர்ந்ததைப் போன்றும் விளங்கினார்கள்.

கு :—நல்லூழும் முயற்சியும் கூடினால் நினைத்த காரியம் எளிதில் நிறைவேறும். 'பரியினும் ஆகாவாம் பாலல்ல' (குறள்-376) என்பதால் நல்லூழில்லாதவழி முயன்றாலும் நினைத்த காரியம் முடியாதென்பதும், 'ஆகூழாற் றோன்றும் அசைவின்மை'' (குறள்-371) என்பதால் நல்லூழ் உள்ளவழி முயற்சியும் தானே தோன்றும் என்பதும் அறியப்படுதலால் முயற்சியினும் நல்லூழே சிறந்ததாதல் அறியலாம். அச்சிறப்புணர்ந்தே 'ஈட்டிய தவமும் பின்னர் முயற்சியும்' என முறை தெரிந்தோதினார். அரக்கரை அழித்தலாகிய காரியம் நிறைவேறுதற்கு இராமன், முன்னுளீட்டிய தவம் போன்றவன் என்பதும், சுக்கிரீவன், பின்னர்த் தோன்றிய முயற்சியைப் போன்றவன் என்பதும் தெளியலாம். வீட்டுதல் - அழித்தல். வாள் - கொடுமை; வாட்படையுமாம். உயிர் செய்த தீவினை வேரோடு அழிதல் பரஞானம் கிட்டிய வழியன்றிக் கூடாது. அந்தப் பரஞானம் பெறுதற்குத் துணையாய் நிற்பது கலைஞானமாகும். இங்கு அரக்கராகிய தீவினையை வேரொடு களைதற்குப் பரஞானம் போன்றவன் இராமன் எனவும், அதற்குத் துணையாய் நிற்கும் கலைஞானம் போன்றவன் சுக்கிரீவன் எனவும் கொள்க. அரக்கரென்னும் தீவினை என்றது உருவகம். நல்லாசிரியர்பால் பல்கால் கேட்டும் சிந்தித்தும் தெளிய வேண்டுதலின் 'கேட்டுணர் கல்வி' என்றார். ஞானம் என்றது இங்கு வீட்டிற்குக் காரணமாய பரஞானத்தை. பரஞானத்தாலன்றி இருள் சேர் இருவினை நீங்கப் பெறாது என்பது இங்குத் தெளிவுபடுத்திய

வாறு. இராம சுக்கிரீவர் ஒருங்கு கூடியிருந்தமைக்கு இரண்டு செய்யுளிலும் நால்வகையான உவமை கூறி மகிழ்கின்றார் கம்பர். இது பல்பொருள் உவமை. (22)

### சுக்கிரீவன் இராமனைப் பாராட்டுதல்

3910. ஆயதோ ரவதி யின்க
ணருக்கன்சே யரசை நோக்கித்
தீவினை தீய நோற்றா
ரென்னின்யார் செல்வ நின்னை
நாயக னுலகுக் கெல்லா
மென்னலா நலமிக் கோயை
மேயினன் விதியே நல்கின்
மேவலா காதென் னென்றான்.

ஆயது ஓர் அவதியின்கண், அருக்கன்சேய், அரசை நோக்கி,
'தீவினை தீய நோற்றார் என்னின் யார்? செல்வ! நின்னை-
நாயகன் உலகுக்கு எல்லாம் என்னலாம் நலம் மிக்கோயை
மேயினன்; விதியே நல்கின் மேவல் ஆகாது என்? என்றான்.

பொ:—அவ்வாறு ஒருங்கு கூடியிருந்த அமையத்தில், சூரியன் மகனாகிய சுக்கிரீவன், இராமனை நோக்கி, செல்வ! நின்னை - உலகம் மூன்றற்கும் தலைவன் என்று சொல்லலாம்படி நல்லிலக்கணமிக்கிருக்கின்ற உன்னை யான் வந்து சேரப் பெற்றேன்; ஆதலால், தீவினை ஒழியுமாறு தவஞ் செய்தவர்கள் என்னைக் காட்டிலும் யார் இருக்கின்றார்கள்? (யாருமிலர்) விதியே இவ்வாறு கூட்டியருளுமாயின் அடைய முடியாதது யாதுளது? என்றான்.

கு:—அவதி - காலம்; அமையம். அரசு என்றது இராமனை. எல்லாச் செல்வங்களையும் தரவல்ல தகுதியுடையவன் இராமன் ஆதலின், அவனைச் செல்வ! என விளித்தான். நலம் என்றது உலகுக்கெல்லாம் நாயகனாதற்கேற்ற நல்லிலக்கணத்தை. "உலகொரு மூன்றுந் தம்முடைமையாக்குறும் அலகறு மிலக்கணம் அமைந்த மெய்யினர்" (சடாயு காண்-14) எனச் சடாயு எண்ணியதும் இங்கு நினைவு கூர்க. மிக்கோயை என்றது, இரண்டனுருபேற்ற முன்னிலைப் பெயர். நலமிக்கோயை மேயினனாதலின் தீவினை தீய நோற்றார் என்னின் யார்? விதியே நல்கின் மேவலாகாதென்? என இயையும். தீவினை தீருமாறு தவஞ் செய்தார்க்கன்றி இராமனை அடைய முடியாது என்பது உண்மையாகலின், இராமனைச் சேரப்

பெற்ற சுக்கிரீவன் 'தீவினை தீய நோற்றார் என்னின் யார்?' என்று மகிழ்ச்சியால் தன்னைப் புகழ்பவன்போல இராமன் பெருமையை விளக்குகின்றான். இராமனை அடையப் பெற்றதற்குத் தன் முயற்சி ஏதும் காரணமன்று; தன் நல்லூழே அப்பேற்றை நல்கியது என்பான், அதைப் பொதுப் பொருளாக்கி, 'விதியே நல்கின் மேவலாகாது என்' என வேற்றுப் பொருள் வைப்பணியால் கூறினான். "புண்ணியம் பயக்கின்றுழி யரிய தெப்பொருளே" (ஆரணிய-கவந்தப் - 41) என்று முன் கவந்தன் கூறியுள்ளதும் காண்க. 'ஆகாதது என்?' எனற்பாலது ஓசை நோக்கி ஆகாதென்? என விகாரமாயிற்று. விதி என்றது இங்கு நல்லூழினை. (23)

## இராமன் வந்த வரலாற்றைக் கூறுதல்

3911. மையறு தவத்தின் வந்த
சவரியிம் மலையி னீவந்
தெய்தினை யிருந்த தன்மை
யியம்பினள் யாங்க ளுற்ற
கையறு துயர நின்னாற்
கடப்பது கருதி வந்தே
மையநிற் றீரு மென்ன
வரிக்குலத் தரசன் சொல்வான்.

'மை அறு தவத்தின் வந்த சவரி, இம்மலையில் நீ வந்து
எய்தினை இருந்த தன்மை, இயம்பினள்; யாங்கள் உற்ற
கை அறு துயரம் நின்னால் கடப்பது கருதி வந்தேம்;
ஐய! நின்தீரும்' என்ன, அரிக்குலத்து அரசன் சொல்வான்.

பொ:—(இராமன் சுக்கிரீவனை நோக்கி) ஐய! குற்றமற்ற தவத்திற் பழகிவந்த சவரி, நீ இம்மலையில் வந்து சேர்ந்து இருந்த தன்மையைச் சொன்னாள்; நாங்கள் அடைந்துள்ள செயலறுதற்குக் காரணமான பெருந்துயரத்தை நின்னால் போக்குவது கருதி வந்தோம்; நின்னால் அப்பெருந்துயர் தீரும்' என்று கூறக் குரங்கினத்திற்கு அரசனாகிய சுக்கிரீவன் சொல்வானானான்.

கு:—மை - குற்றம்; தவத்திற்குக் குற்றம் காம, வெகுளி, மயக்கம் என்ற முக்குற்றங்களாகும். இளமை தொட்டுத் தவத்தின்கண் பழக்கமுடையவளாதலின் 'தவத்தின் வந்த' என்றான். சுக்கிரீவன் இருக்கு

மிடம் அறிந்ததெவ்வாறு? என்ற ஐயத்தை விளக்கியவாறு. இராமன், சுக்கிரீவனிடம் வந்தமைக்குக் காரணம் கூறுவானாய், ‘யாங்களுற்ற கையறு துயரம் நின்னாற் கடப்பது கருதி வந்தேம்’ என்றான். நிற்றீரும் என்றது, இராமன் தன் துணிவை உரைத்தவாறு. கடப்பது - போக்குவது. கையறுதுயரம் – செயலறுதற்குக் காரண மான துயரம்; சீதையைப் பிரிந்த துயரம். தவத்தில் சிறந்த சவரி யால் அறிவிக்கப் பெற்றவன் என்றமையால் சுக்கிரீவன் பெருமை யும் புலப்படுத்தியவாறு. தாமிருக்கும் ருசியமூக மலையையே இம்மலை எனச் சுட்டினான். ‘வந்து எய்தியிருந்த தன்மை’ என்றமையால், ருசிய மூகம் சுக்கிரீவனுக்கு உரிய மலையன்று என்பதும், வாலியால் உண்டாய அச்சத்தால் அங்கு வந்து இருந்தான் என்பதும் சவரியே குறிப்பால் அறிவித்தாள் என்பது பெறப்படும். இராமன், சுக்கிரீவன் உதவியால் இராவணனை வெல்ல நினைத்தமை இதனால் புலப்படுத் தியவாறு. (24)

### சுக்கிரீவன் தன் வரலாறு கூறிச் சரண்புகல்

3912. முரணுடைத் தடக்கை யோச்சி
முன்னவன் பின்வந் தேனை
யிருணிலைப் புறத்தின் காறு
முலகெங்குந் தொடர விக்குன்
றரணுடைத் தாக வுய்ந்தே
னாருயிர் துறக்க லாற்றேன்
சரணுனைப் புகுந்தே னென்னைத்
தாங்குத றரும மென்றான்.

‘முரணுடைத் தடக்கை ஓச்சி,
முன்னவன், பின் வந்தேனை,
இருள்நிலைப் புறத்தின் காறும்,
உலகு எங்கும் தொடர, இக்குன்று
அரண் உடைத்தாக உய்ந்தேன்;
ஆர் உயிர் துறக்க லாற்றேன்,
சரண் உனைப் புகுந்தேன் என்னைத்
தாங்குதல் தருமம்’ என்றான்.

பொ:—எனக்கு முன்னவனாகிய வாலி, பின்பிறந்த தம்பியாகிய என்னை (அடிக்க) வலிமையுடைய பெரிய கையை ஓங்கிக்கொண்டு

(சக்கரவாளகிரிக்கு அப்பாலுள்ள) இருள் நிலைப்புறம் வரையிலுள்ள உலகம் முழுமையும் என்னைத் துரத்தித் தொடர்ந்து வந்தமையால் இந்த ருசியமூகம் என்னும் மலை (வாலியாலடையப்படாத சாப முடைத்தாதலின்) எனக்குப் பாதுகாவலுடையதாக (இதில் தங்கி) உயிர் பிழைத்தேன்; (வாலியின் வலிக்காற்ருதயான்) அரிய உயிர் துறப்பதற்கும் ஆற்றேனாய் உன்னை அடைக்கலமாக அடைந்தேன்; (அஞ்சி வந்து சரண்புகுந்த) என்னைத் தாங்கிக் கொள்ளுதலே தரும மாகும் என்று கூறினான் சுக்கிரீவன்.

கு:—ருசியமூக மலையில் சுக்கிரீவன் தங்கியதற்குக் காரணங் காட்டி இராமனைச் சரணடைந்தமை கூறியவாறு. அண்ணன் தம்பி யென்ற உறவையோ; வலியவன் எளியவனை வாட்டலாகாது என்ற போர் முறையையோ, முதுகிட்டோனைப் பின்னிட்டுப் போர் செய்ய லாகாது என்ற வீர நெறியையோ வாலி எண்ணாமல், சுக்கிரீவன் அஞ்சி ஓடிய இடங்களிலெல்லாம் பின்தொடர்ந்து ஓடி வருத்தினான் என அவ்வாலியின் முறையற்ற செயலை யுணர்த்தியவாறு. மதங்க முனிவரின் சாபத்தால் வாலி இம்மலைக்கு வரின் மாள்வது நினைந்து வாரானாகவே இம்மலை எனக்கு அரணுடையதாயிற்று எனச் சுக்கி ரீவன் கூறினான். அரண் - பாதுகாப்பு. போரில் வெல்லுதல் இயலாதவழி உயிர் துறத்தலே வீரர் மரபாகவும் சுக்கிரீவன் அது செய்யாது மறைந்திருந்து உயிரைக் காப்பாற்றிக் கொண்டிருத்தல் தனக்கே நாணுத்தகவுடைத்தாகலின், 'ஆருயிர் துறக்கலாற்றேன்' எனத் தனக்கு உயிர்மேல் உள்ள காதலைப் புலப்படுத்தினான். உன் னைச் சரண்புகுகின்றேன்; என்னைத் தாங்குதல் வேண்டும் என்றது, என்னைக்காத்து வாலியை யழிக்கவேண்டும் என்னும் குறிப்பினது. சரண் - அடைக்கலம். தாங்குதலாவது அஞ்சத்தக்க பேரிடரிலிருந்து மீட்டுக் காப்பாற்றுதல். "தளர்ந்தேன் எம்பிரான் என்னைத் தாங்கிக் கொள்ளே" (திருவாசகம் - நீத்தல் விண்ணப்பம் - 1) என மணி வாசகர் வேண்டுதலும் காணலாம். இருணிலைப் புறத்தின் காறு முள்ள உலகு எங்கும் என்க. அண்டத்தின் இறுதியில் சக்கர வாளகிரி இருக்கின்றது என்பதும், அதற்கப்புறம் இருணிலைப்புறம் இருக்கின்றது என்பதும் புராணமரபு. இவ்வாறு சுக்கிரீவன் இரா மனைச் சரண்புகுந்தமையால், "கையறுதுயரம் நின்னால் கடப்பது கருதி வந்தோம்" என இராமன் சுக்கிரீவனை நோக்கிக் கூறியதை யேற்றுக் கொள்ளுந் தகுதியின்மை குறிப்பால் வெளிப்படுத்தியவாறு. தாங்குக என்னாது தாங்குதல் தருமம் என்றது தாங்காது விடுவானோ என்னும் அச்சத்தால் கூறிய வற்புறுத்தலாகும். (25)

இராமன் சுக்கிரீவனை நண்பனுகக் கொள்ளுதல் 3913-3914

3913. என்றவக் குரக்கு வேந்தை
யிராமனு மிரங்கி நோக்கி
யுன்றனக் குரிய வின்ப
துன்பங்க ளுள்ள முன்னுள்
சென்றன போக மேல்வந்
துறுவன தீர்ப்ப லன்ன
நின்றன வெனக்கு நிற்கு
நேரென மொழியு நேரா.

என்ற அக்குரக்கு வேந்தை, இராமனும் இரங்கி நோக்கி,
'உன் தனக்கு உரிய இன்ப துன்பங்கள் உள்ள, முன் நாள்
சென்றன போக, மேல் வந்து உறுவன தீர்ப்பல்; அன்ன
நின்றன எனக்கும் நிற்கும் நேர்' என மொழியும் நேரா.

பொ :—என்று கூறிய அந்தக் குரங்கினத்தரசனுகிய சுக்கிரீவனை இராமனும் மனமிரங்கிப் பார்த்து, 'உனக்கு உரிய இன்ப துன்பங்களுள் நேற்று வரையில் அனுபவித்துக் கழிந்தனபோக இனிமேல் வந்து சேரும் துன்பங்களை யான் தீர்ப்பேன்; அத்தன்மையனவாய் இனி அனுபவிக்க நின்றனவாகிய இன்பதுன்பங்கள் எனக்கும் நினக்கும் ஒத்தனவாகும்' என்று உறுதி வாக்கும் கொடுத்து,

கு :—குளகம். நேரா என்னும் செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம், மேல் 'என்ருன்' என்ற வினைகொண்டு முடியும். குரங்கு, வேற்றுமையில் மென்றொடர் வன்றொடராயிற்று. அண்ணனுக்கு அஞ்சிச் சரண்புக்க சுக்கிரீவன் நிலை இரங்கத்தக்கதாய் இராமனுக்குத் தோன்றலின் இரங்கி நோக்கலாஞன். உள்ளனவற்றுள் என்க. நட்புக் கொண்ட நாளின் முன்னுள் என்றவாறு. சென்றன என்றது அனுபவித்துக் கழிந்தவற்றை. மேல் வந்துறுவன என்பது இன்பத்தைச் சுட்டாமல் மேல்வரும் துன்பங்களையே சுட்டி நின்றது. 'உற்றுழி உதவியும்' (புறநா - 183) என்புழியும் ஒருறுபாடு உற்ற இடத்து என்றே உரைவரைந்துள்ளமையும் காண்க. நின்றனவாகிய இன்பதுன்பங்கள் என வினையாலணையும் பெயராக்குக. நேர் - நேர்வன; 'கொள்வாருங் கள்வருநேர்' என்புழிப்போல் பகுதியே வினைமுற்றுப் பொருளைத் தந்தது. மொழி என்றது, உறுதி மொழியை. நட்பிற்குச் சிறந்த இலக்கணம் இன்பதுன்பங்களில் பங்கு கொள்வதே என்பது இதனுல் பெற வைத்தவாறு. "உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே, யிடுக்கண் களைவதா நட்பு" (குறள் - 788) என்ற

தற்கேற்ப 'மேல்வந்துறுவன தீர்ப்பல்' என இராமன் கூறினன். தீர்ப்பல் என்பது அல்லீற்றுத் தன்மை ஒருமை வினைமுற்று. (26)

3914. மற்றினி யுரைப்ப தென்னே
வானிடை மண்ணி லுன்னைச்
செற்றவ ரென்னைச் செற்றார்
தீயரே யெனினு முன்னோ
டுற்றவ ரெனக்கு முற்றா
ருன்கிளை யெனதென் காதற்
சுற்றமுன் சுற்ற நீயென்
னின்னுயிர்த் துணைவ னென்றான்.

'மற்று, இனி உரைப்பது என்னே?
வானிடை மண்ணில் உன்னைச்
செற்றவர் என்னைச் செற்றார்;
தீயரே எனினும், உன்னோடு
உற்றவர் எனக்கும் உற்றார்;
உன்கிளை எனது; என் காதல்
சுற்றம், உன் சுற்றம்; நீ என்
இன் உயிர்த் துணைவன்' என்றான்.

பொ:—இனி, வேறு பிற உரைப்பது எதற்கு? விண்ணுலகத்திருந்தோ, மண்ணுலகத்திருந்தோ உன்னை வருத்தியவர் என்னை வருத்தியவரேயாவர். தீயராகவே யிருந்தாலும் உன்னோடு நட்புக் கொண்டவர்கள் எனக்கும் நண்பரேயாவர்; உன் உறவினர் என் உறவினராவர்; என் அன்புள்ள சுற்றம், உன் சுற்றமேயாம், 'நீ என் இனிய உயிர் போன்ற நண்பன்' என்று கூறினன்.

கு:—இராமன், தன் உயிர் போன்ற துணைவனாகச் சுக்கிரீவனைக் கொண்டமையால், அச்சுக்கிரீவனது பகையும் நட்பும் சுற்றமும் எல்லாம் தன் பகையும் நட்பும் சுற்றமுமாக ஏன்று கொண்டான் என்றவாறு. தான் கொண்ட நட்பின் உறைப்பைப் புலப்படுத்தவேண்டித் "தீயரே எனினும் உன்னோடு உற்றவர் எனக்கும் உற்றார்" என்றான். "நரகம் புகினும் எள்ளேன் திருவருளாலே யிருக்கப் பெறின் இறைவா" (திருவாசகம்– திருச்சதகம் - 2) என மணிவாசகர் தம் பத்தியினுறைப்பைப் புலப்படுத்தியிருத்தலும் காண்க. நல்லான் என நனிவிரும்பி நட்புக் கொள்ளப் பெற்ற சுக்கிரீவனுடைய உற்றார் நல்லோராக இருப்பரே யன்றித் தீயராக இரார்; ஒருகால் அந்நிலை

மாறித் தீயராக இருந்து விட்டாலும் அவரையும் என் உற்றூராகக் கொள்ளுவதன்றி நீக்கு நிலையில்லை என உறுதி கூறியவாறு. எனினும் என்புழி உம்மை இழிவு சிறப்பும்மை. "நல்லாறெனினுங் கொளல் தீது" (குறள் - 222) என்புழிப்போல அவர் தீயர் அன்மை விளக்கி நின்றது. உற்றவர் என்றது நண்பரை. கிளை என்றது சுற்றத்தை. உன் கிளை எனது; என் காதற் சுற்றம் உன் சுற்றம் என்று பரிமாறிக் கொண்ட இராமன், 'உன்னைச் செற்றவர் என்னைச் செற்றூர்' எனவும், "தீயரே யெனினும் உன்னேடுற்றவர் எனக்கு முற்றூர்" எனவும் தான் மேற்கொண்டவற்றைச் சுக்கிரீவனுக்கும் உரியவாகக் கூருமை என்னை? எனின், அவற்றைச் சுக்கிரீவனே விரும்பி ஏற்றுக் கொள்ள வேண்டுமே யன்றி அவனுக்குச் சுமையாக இராமன் ஏற்றிக் கூறுதல் முறையன்ருதலின் கூருது விடுத்தான். என்னைச் செற்றவர் உன்னைச் செற்றூர் எனின், சுக்கிரீவனுக்கு அது இயலாத செயலாய்ப் பெருஞ் சுமையாய்த் துன்பம் தரும் என்பது தெளிவு. 'உன்னைச் செற்றவர் என்னைச் செற்றவர்' என்று ஏன்று கொண்ட இராமன், அச்சொல்லிற்கேற்பச் சுக்கிரீவனைச் செற்ற வாலியைத் தன்னைச் செற்றவனுகக் கொண்டு அவனைக் கொன்ருன். இராமனைச் செற்ற இராவணனைச் சுக்கிரீவன் கொல்ல இயலாமையும் காண்க. (27)

### இராமன் சுக்கிரீவனேடு நண்பு பூண்டமை யறிந்த வானரங்களின் மகிழ்ச்சி

**3915.** ஆர்த்தது குரக்குச் சேனை
யஞ்சனை சிறுவன் மேனி
போர்த்தன பொடித்த ரோமப்
புளகங்கள் பூவின் மாரி
தூர்த்தனர் விண்ணேர் மேகஞ்
சொரிந்தன வனகன் சொன்ன
வார்த்தை யெக்குலத் துளோர்க்கு
மறையினு மெய்யென் றுன்ன.

ஆர்த்தது குரக்குச் சேனை;
அஞ்சனை சிறுவன் மேனி,
போர்த்தன, பொடித்த ரோமப்
புளகங்கள்; பூவின் மாரி

தூர்த்தனர் விண்ணோர் ; மேகம்
சொரிந்தன; அனகன் சொன்ன
வார்த்தை எக்குலத்துளோர்க்கும்,
மறையினும் மெய் என்று உன்ன.

பொ :—குற்றமற்றவனாகிய இராமன் சொன்ன சொல் குரக்கினத்திற்கே யன்றி எல்லாக் குலத்தினர்க்கும் வேதவாக்கியத்தினும் மெய்ம்மையதாய்ப் பயன்தரும் என்று எண்ணிக் குரங்குப்படை ஆரவாரம் செய்தது; அஞ்சனையின் புதல்வனாகிய அனுமன் மேனியில் அரும்பிய மயிர்க்கூச்சுகள் அம்மேனியை மறைத்து விட்டன; தேவர்கள் மலர்மாரி சொரிந்து அவ்விடத்தை நிரப்பினர்; (நல்ல சகுனமாக) மேகம் மழையைச் சொரிந்தன.

கு :—உன்னைச் செற்றவர் என்னைச் செற்றவர் என இராமன் கூறியதால் வாலிவதம் உறுதி என்ற மகிழ்ச்சியாலும், யாரினும் உயர்ந்தோனாகிய இராமனுக்கு உற்றவர் ஆயினம் என்ற களிப்பாலும் குரக்குச் சேனை ஆர்த்தது என்னலாம். அனுமன் புளகாங்கிதம் கொண்டமைக்குக் காரணம் தன் முயற்சி பயனுடையதாயிற்று என்னும் மகிழ்ச்சியாலாகும். விண்ணோர் மலர்மாரி சொரிந்தமைக்குக் காரணம் இராமன் சொல்லால் தம் துன்பம் தீர வழி உண்டாயிற்று என்ற மகிழ்ச்சியேயாகும். இந்த நட்பால் நற்பயன் விளையப் போகின்றது என்பதற்கு நன்னிமித்தமாக மேகம் சொரிந்தது என்னலாம். போர்த்தல் - மறைத்தல். தூர்த்தல் - நிரப்புதல். சிறுவன், மகன் என்னும் பொருளது. (28)

அனுமன் சுக்கிரீவனது மாளிகைக்கு அழைக்க இராமன் இசைதல்

3916. ஆண்டெழுந் தடியிற் றாழ்ந்த
வஞ்சனை சிங்கம் வாழி
தூண்டிர டடந்தோண் மைந்த
தோழனு நீயும் வாழி
யீண்டுநுங் கோயி லெய்தி
யினிதினு மிருக்கை காண
வேண்டுநும் மருளென் னென்றான்
வீரனும் விழுமி தென்றான்.

ஆண்டு எழுந்து, அடியில் தாழ்ந்த
அஞ்சனை சிங்கம், வாழி!
தூண் திரள் தடந்தோள் மைந்த!
தோழனும் நீயும் வாழி!
ஈண்டு நும் கோயில் எய்தி,
இனிதின் நும் இருக்கை காண
வேண்டும் நும் அருள் என்? என்றான்,
வீரனும் 'விழுமிது' என்றான்.

பொ :—அப்பொழுது எழுந்து இராமனது திருவடிகளில் விழுந்து வணங்கிய அஞ்சனை யீன்ற சிங்கம்போன்ற அனுமன், 'தூண்போல் திரண்ட பெரிய தோளினையுடைய தசரதனின் திருமகனே! வாழ்க! தோழனாகிய சுக்கிரீவனும் நீயும் நெடிது வாழ்க! அண்மையில் பொருந்தியுள்ள நும் மாளிகையை அடைந்து இனிதாக (இருவீரும் வீற்றிருக்கும்) நும் இருக்கையைக் காண வேண்டும் என்று விரும்புகின்றோம்; தங்கள் திருவுள்ளம் யாது?' என்றான்; இராமனாகிய வீரனும் 'நல்லது' என்று உடன்பட்டான்.

கு :—தனக்கு இடர்புகுதாமல் முன்னும் பின்னும் நோக்கிச் செல்கின்ற சிங்கம்போலச் சென்றகால நிகழ்ச்சியையும் இனி எதிர் காலத்து நிகழ இருக்கின்ற நிகழ்ச்சிகளையும் எண்ணிச் சுக்கிரீவனுக்கு நலம் செய்யும் இயல்பினன் அனுமானாதலின் அவனைச் சிங்கம் என்று உவமையாகுபெயரால் கூறினார். வாலியை வெல்லவல்ல தோளாற்றல் இராமனுக்கு உண்டு என்ற எண்ணமே அனுமனுக்கு மேற்பட்டுத் தோன்றுதலின் இங்கும், 'தூண்டிரள் தடந்தோள் மைந்த' என அத்தோளையே சிறப்பித்து விளித்தான். 'மைந்த' என்றது இராமனை; 'சக்கரவர்த்தி திருமகன்' என்ற கருத்தால் அச் சொல்லால் விளித்தான். 'வாழி' எனும் மங்கல வாழ்த்தை முற் கூறிப் பெரியோர்பால் பேசத் தொடங்குதலே முறையாதலின் அனுமன் அச்சொல்லைக் கூறித் தொடங்கினன். தோழமை கொள்ளப் பெற்ற சுக்கிரீவனும் இராமனும் அந்நட்புரிமையோடு நெடுங்காலம் வாழவேண்டும் என்ற கருத்தால் 'தோழனும் நீயும் வாழி' என்று வாழ்த்தினான். ஈண்டு நும் கோயில் என்றது, அண் மையில் ஈண்டியுள்ள நும்மாளிகை என்றவாறு. ஈண்டுதல் நெருங் குதல். இனி, ஈண்டு என்பதற்கு இப்பொழுது எனப் பொருள் கூறுவாருமுளர். சுக்கிரீவனுக்கு இராமன்பால் உள்ள நட்புரிமை தோன்றச் சுக்கிரீவன் மாளிகையை 'நுங்கோயில்' என இராமனை உளப்படுத்திக் கூறினான். திருவுள்ளக் கருத்து யாது? என்ற பொருளில் அருளென்? என்றான். விழுமிது - நல்லது; உடன் பாட்டை யுணர்த்தும் சொல். (29)

இதற்குப்பின் சில சுவடிகளில் கீழ்வரும் செய்யுள் காணப்படுகின்றது.

3916 (a) கடுத்தெழு மதத்தைச் சீறுங்
கதிர்ச்சுடர்க் கடவு ளாய்ந்து
வடித்தநூல் முழுதும் தானோர்
வைகலின் வரம்பு தோன்றப்
படித்தவன் வணங்கி வாழ்த்திப்
பருமணிக் கனகத் தோண்மேல்
எடுத்தன னிரண்டு பாலு
மிருவரு மேக லுற்றார்.

சோலைக்குப் போதல்

3917. ஏகின ரிரவி சேயு
மிருவரு மரிக ளேறு
மூகவெஞ் சேனை சூழ
வறந்தொடர்ந் துவந்து வாழ்த்த
நாகமு நரந்தக் காவு
நளினவா விகளு நண்ணிப்
போகபூ மியையு·மேசும்
புதுமலர்ச் சோலை புக்கார்.

ஏகினர் இரவி சேயும்
இருவரும் அரிகள் ஏறும்
ஊக வெஞ்சேனை சூழ,
அறம் தொடர்ந்து உவந்து வாழ்த்த,
நாகமும் நரந்தக் காவும்,
நளின வாவிகளும் நண்ணி,
போக பூமியையும் ஏசும்
புதுமலர்ச் சோலை புக்கார்.

பொ :—சூரியன் மகனாகிய சுக்கிரீவனும், இராம இலக்குவரும், வானரங்களுள் சிங்க ஏறு போன்றவனாகிய அனுமனும், கொடிய குரங்குச் சேனை தம்மைச் சூழ்ந்து வரவும், தருமதேவதை பின் தொடர்ந்து வந்து மகிழ்ந்து வாழ்த்தவும், புறப்பட்டுச்சென்று சுர புன்னை மரங்களும் நரந்தமரச் சோலையும் தாமரைத் தடாகங்களும் பொருந்தப்பெற்று (இன்பமிக்கிருப்பதால்) போக பூமியாகிய துறக்-

கத்தையும் இகழ்கின்ற, அன்றலர்ந்த மலர்கள் நிறைந்த, சோலையில் புகுந்தார்கள்.

கு :—அரி - குரங்கு. ஊகம் என்பதும் அப்பொருளதே. அரிகளேறு என்றது அனுமனை. இவ்விருவர் கூட்டுறவால் அறம், வாழ்வு பெறப் போகின்றமை நினைந்து மகிழ்ந்து வாழ்த்துவதாயிற்று. அவ்விருவரும் புகுமிடமெல்லாம் தனக்குப் புகுமிடமாகும் என்ற நம்பிக்கையால் அறம் பின்தொடர்வதுமாயிற்று. நாகம் - சுரபுன்னை. நரந்தம் - நாரத்தை. நளினம் - தாமரை. போகபூமி என்றது இந்திரனுடைய பொன்னுட்டை. நினைந்த எலாம் பெற வளிக்கும் கற்பகச் சோலைசூழ்ந்த துறக்கத்தில் பெறும் இன்பத்தினும் சிறந்த இன்பத்திற்கு இடனாதல் பற்றிப் 'போக பூமியையும் ஏசும் புது மலர்ச்சோலை' என்ருர். ஏசுதல் - இகழ்தல்; இன்பம் தருதலில் எனக் கொப்பாகாய் என இகழ்தல். போகபூமியினும் சிறந்த சோலை என்பார் தற்குறிப்பேற்ற அணிபற்றி இங்ஙனம் கூறினர். சுக்கிரீவன், தன் மாளிகைக்கு அழைத்துச் செல்வோன் ஆகலின், அவன் முன்னும் அவனுக்குச் சிறந்த விருந்தினராய்ச் செல்வோராதலின் இராம இலக்குவர் அவனுக்குப் பின்னும், தன் அன்பும் அடக்கமும் தோன்ற அனுமன் அவ்விருவர்க்குப் பின்னும், ஏனைய வானரங்கள் அவனுக்குப் பின்னும் சென்ருர்கள் என்பதை வைப்பு முறையினுல் விளக்கியுள்ள அருமை காண்க. (30)

### சோலையின் சிறப்பு 3918–3919

**3918.** ஆரமு மகிலுந் துன்றி
யவிர்பளிக் கறைய ளாவி
நாரநின் றனபோற் ருேன்றி
நவமணித் தடங்க ணீடும்
பாரமு மருங்குந் தெய்வத்
தருவுநீர்ப் பண்ணை யாடுஞ்
சூரர மகளி ருச
றுவன்றிய சும்மைத் தன்றே.

ஆரமும் அகிலும் துன்றி,
அவிர் பளிக்கு அறை அளாவி,
நாரம் நின்றன போல் தோன்றி,
நவமணித் தடங்கள் நீடும்

பாரமும் மருங்கும் தெய்வத்
தருவு நீர்ப் பண்ணை ஆடும்
சூர் அரமகளிர் ஊசல்
துவன்றிய சும்மைத்து; அன்றே.

பொ:—சந்தன மரங்களும் அகில் மரங்களும் நெருங்கப்பெற்றும், விளக்கமிக்க பளிங்குப் பாறைகள் பொருந்தப்பெற்றும் இருக்கின்றமையால் (நீரே இல்லாத அவ்விடம்) தண்ணீர் நிலைத்துள்ளது போலக் காணப்பட்டுப் புதிய மணிகளையுடைய தடாகங்களாகவே நீடித்துத் தோன்றுகின்ற அவற்றின் கரைகளிலும், கரையின் பக்கங்களிலும் உள்ள தெய்வத்தன்மை வாய்ந்த தேவதாருபோன்ற மரங்களில், நீர் விளையாட்டு ஆடும் சூர் அரமகளிரின் ஊசல்கள் நெருங்கியுள்ளமையாலாய ஆரவாரத்தை யுடையதாக அச்சோலை விளங்கிற்று.

கு:—மேல் 'சோலை புக்கார்' என்புழி வந்த சோலையையே இச்செய்யுளுக்கு எழுவாயாக்கி 'அச்சோலை சும்மைத்து' என இயைக்க. சந்தனமரம் முதலியவற்றின் செறிவாலும் அவற்றின் நடுவில் அமைந்த பளிக்குப் பாறையின் விளக்கத்தாலும் தண்ணீர் இல்லாத அவ்விடம் தண்ணீர் நிலைபெற்றது போலத் தோன்றிப் புதுமணி செறிந்த பொய்கையாகவே நீடித்துத் தோன்றும் பொய்த் தடாகங்கள் அங்கு உண்டு எனவும், அப் பொய்த்தடாகங்களை மெய்த் தடாகங்களாகவே எண்ணிச் சூரர மகளிர் அங்கு வந்து அதில் இறங்கிப் பார்த்து நீரின்மை தெளிந்து அப்பொய்த் தடாகக் கரையிலும் கரையின் பக்கங்களிலுமுள்ள தேவதாரு முதலிய மரங்களில் ஊசல் தொடுத்து ஆடுகின்றார்கள் எனவும், அவ்வூசலாட்டின் ஆரவார முடையதாகச் சுக்கிரீவன் சோலை உளது எனவும் கொள்க. தெளிந்தநீர் பளிங்குபோலக் காட்சியளிப்பதும், பளிங்குப்பாறை நீர் நிலைபோலக் காட்சியளிப்பதும் இயல்பு. இச்செய்யுளில் கூறப்பெற்றதுபோன்ற் பளிங்கின் தலமாகத் தெளிந்த நீர்ச்சுனையைக் கண்டு மயங்கி அதில் அமர்தற்குச் சென்று நனைந்த மகளிரைக் கண்டு வீரர் சிரித்த செய்கையை, "படிகத்தின் தலமென் றெண்ணிப் படர்சுனை முடுகிப்புக்க, கடிகைப்பூங் கமலமன்ன, சுடர்மதி முகத்தினர் தம் வடகத்தோடுடுத்த் தூசு மாசினீர் நனைப்ப நோக்கிக் கடகக்கை மறித்துத் தம்மில் கருங்கழல் வீரர் நக்கார்" (பால - வரைக்) (945) என முன் கூறப்பட்டிருத்தலை இங்கு நினைவுகூர்தல் தகும். பாரம் - கரை. 'காளிந்தி நதியின் பாரம்' (பாரதம் - குரு - 90) என்றது காண்க. நவமணித்தடங்களாக நீடுமவற்றின் பாரம் எனவும், பாரமும் மருங்குமுள்ள தெய்வத்தருவில் சூரர மகளிரின் ஊசல் துவன்றியதால் ஆய சும்மைத்து எனவும், வேண்டும் சொல் வருவித்து

இயைக்க. தருவு என்புழி உகரம் சாரியை. பண்ணை - விளையாட்டு. சும்மை - ஆரவாரம். சூர்அர மகளிர் - அச்சமுண்டாக்கும் தெய்வப் பெண்டிர். அவர் ஊசாலாடும் இயல்பினர் என்பதை "வானவர் மகளிராடும் வாச நாறூசல் கண்டார்" (பால - 947) என வரைக் காட்சியில் வந்துளதாலும் அறியலாம். அன்று, ஏ அசைகள். துவன்றிய என்பது காரணப்பொருளில் வந்த பெயரெச்சம். (31)

3919. அயர்வில் கேள்விசா லறிஞர் வேலைமுன்
★ பயில்வில் கல்வியார் பொலிவில் பான்மைபோல்
குயிலு மாமணிக் குழுவு சோதியால்
வெயிலும் வெள்ளிவெண் மதியு மேம்படா.

அயர்வு இல் கேள்விசால் அறிஞர் வேலைமுன்,
பயில்வு இல் கல்வியார் பொலிவுஇல் பான்மைபோல்,
குயிலும் மாமணிக் குழுவு சோதியால்,
வெயிலும், வெள்ளி வெண்மதியும், மேம்படா.

பொ :—தளர்ச்சியில்லாத நூற்கேள்விமிக்க அறிஞர்கள் கூடியுள்ள அவைக்குமுன் கல்வி பயிலாதவர்கள் மேம்படாததுபோல, அச் சோலையில் பதிக்கப்பட்ட சிறந்த மணிகளின் திரண்ட சோதியால், அங்குச் சூரியன் வெயிலும் வெள்ளிபோன்ற வெண்திங்களின் நிலவும் மேம்பட்டுத் தோன்றமாட்டா.

கு :—வேலை - கடல்; கடல்போன்ற அவையை உவமையாகு பெயரால் குறித்தது. அறிஞர் அவைமுன் அறிவிலார் சிறந்து தோன்ற மாட்டாது அடங்கி நிற்றல் போல, அச்சோலையில் பதித்துள்ள மணிகளின் சோதியால் வெயிலும் நிலவும் விளக்கமாகத் தோன்ரு என்றவாறு. உடம்பின் அயர்ச்சி நோக்காது கேள்விக்கு முயன்றவர் என்பார், "அயர்வில் கேள்விசாலறிஞர்" என்ருர். கல்வி பயில்விலார் என்பதைப் 'பயில்வில் கல்வியார்' என மாற்றிக் கூறியவாறு. 'அருங்கேடன்' (குறள் - 210) என்பது போலக் கொள்க. குயிலுதல் - பதித்தல். மதி என்றது மதியின் நிலவை. அச்சோலையில் வெயிலும் நிலவும் தோன்ருமல் மணிகளின் ஒளியே இரவினும் பகலினும் மிக்குத் தோன்றும் என்றவாறு. "கல்லாது நீண்ட ஒருவன் உலகத்து, நல்லறிவாளர் இடைப்புக்கு மெல்ல, இருப்பினும் நாயிருந்தற்றே; இராஅது, உரைப்பினு நாய்குரைத் தற்று" (நாலடியார் - 254) என்பதால், அறிஞர்முன் அறியார் படும் இழிவு நன்குணரப்படும். (32)

### பூவணையிலிருந்து உரையாடல்

3920. ஏய வன்னதா மினிய சோலைவாய்
மேய மைந்தருங் கவியின் வேந்தனுந்
தூய பூவணைப் பொலிந்து தோன்றினு
ராய வன்பினே டளவ ளாவுவார்.

ஏய அன்னது ஆம் இனிய சோலைவாய்
மேய மைந்தரும், கவியின் வேந்தனும்
தூய பூஅணைப் பொலிந்து தோன்றினர்,
ஆய அன்பினேடு அளவளாவுவார்.

பொ :—இத்தகைய சிறப்புக்கள் பொருந்திய அந்த இனிமையான சோலையை அடைந்த இராம இலக்குவரும் வானர வேந்தனுகிய சுக்கிரீவனும் அங்கிருந்த தூய்மையான மலர்களால் ஆய ஆசனத்தில் அமர்ந்து பொலிவுமிக்குத் தோன்றினவர்களாய் நட்பு பூண்டமையால் உளதாய அன்பினேடு கலந்து உரையாடுவாராயினர்.

கு :—ஏய - பொருந்திய. அன்னதாமினிய ஏய சோலை என இயைத்துக் கூறலுமாம். சக்கரவர்த்தி குமாரர் என்ற கருத்தால் 'மைந்தரும்' என்ருர். கவி - குரங்கு. சோலையிலுள்ள மலர்களைக் கொண்டு அமைத்த ஆசனம் ஆதலின் 'பூவணை' எனப்பட்டது. தனித்திருந்த நிலையினும் மலரணையில் அமர்ந்திருந்த தோற்றம் பொலிவு மிக்கதாக இருந்தது என்பார், 'பூவணை பொலிந்து தோன்றினர்" என்ருர். தோன்றினர், முற்றெச்சம். தோன்றினவராய் அளவளாவுவார் என்க. அளவளாவுதல் - நெஞ்சு கலந்து பேசுதல்; நெஞ்சு கலப்புத் தன்னளவும் அதனளவும் உசாவுதலான் வருவதாகலின், அளவளா வென்பது ஆகுபெயர் (523) என்று பரிமேலழகர் வரைந்துள்ளமையும் காண்க. இதனுல், இராம இலக்குவரும் சுக்கிரீவனும் மலரணையில் ஒருங்கமர்ந்து அன்போடு உரையாடினமை புலப்படுத்தியவாறு. (33)

### இராமன் நீராடி விருந்துண்ணல்

3921. கனியுங் கந்தமுங் காயுந் தூயநன்
கினிய யாவையுங் கொணர யாரினும்
புனிதன் மஞ்சனத் தொழில்பு ரிந்துபி
னினிதி ருந்துநல் விருந்து மாயினன்.

கனியும், கந்தமும், காயும், தூயநன்கு
இனிய யாவையும் கொணர, யாரினும்

புனிதன் மஞ்சனத் தொழில்புரிந்து, பின்
இனிது இருந்து, நல் விருந்தும் ஆயினான்.

பொ :—தூய்மையுடையனவும் மிக்க இனிமையுடையனவுமான பழமும் கிழங்கும் காயும் ஆகிய எல்லாவற்றையும் சுக்கிரீவன் கொணர்ந்து வைக்க, யாரினும் சிறந்த தூயோனாகிய இராமன் நீராடுதலைச் செய்து முடித்துப் பின்னர் இனிதாகத் தியானத்திலிருந்து பின் விருந்தினனாய் அவற்றை உண்ணுதலும் செய்தான்.

கு :—தூய நன்கினிய கனியும் கந்தமும் காயும் யாவும் கொணர என இயையும். இராமன் உண்ணுதற்கேற்ற தூய்மையும் இனிமையும் உடைய கனியும் கிழங்கும் காயும் ஆய யாவற்றையும் என்க. இராமன் பால் வைத்த பேரன்பால் தனக்குக் கிடைத்த இனியன எல்லாவற்றையுமே சுக்கிரீவன் கொணர்ந்து வைத்தான் என்க. உண்பதற்கு முன் நீராடுதலும் கடவுளை வணங்குதலும் உயர்ந்தோர் மரபு என்பதை விளக்க இராமனும் நீராடித் தியானத்தில் இனிதிருந்த பின் விருந்துண்டான் என்றவாறு. கங்கைக் கரையில் முனிவர்கள் விருந்தூட்டிய போதும் இராமன், 'துறைநறும்புன லாடிச் சுருதியோருறையுளெய்தி யுணர்வுடை யோருணர் இறைவற் கைதொழுதேந்தெரி யோம்பிப்பின், அறிஞர் காதற் கமைவிருந் தாயினான். (2041) என நீராடிய பின் இறைவனைத் தொழுத நிகழ்ச்சி கூறப்பட்டிருத்தல் காணலாம். விருந்துண்ணுதற்காக இருத்தலை 'இனிதிருந்து' எனச் சிறப்பித்துக் கூறவேண்டியதில்லை யாகலானும், நீராடிய பின் உண்டிக்கு முன் இறைவனைத் தியானித்ததாகக் கூறுதல் இன்றியமையாதது ஆதலானும், இன்ப உருவாகிய கடவுளை நினைந்து இன்புற்றிருத்தலையே 'இனிதிருந்து' எனக் குறிப்பால் அறியக் கூறியுள்ளார் என்று கொள்ளுதலே பொருத்தமுடையதாகும். கொணர என்பதற்கு வினைமுதல் சுக்கிரீவனேயாகும். அவன் தன் மனைவியோடிருந்து விருந்தூட்டாமை நோக்கி இராமன், 'பூவையைப் பிரிந்துளாய் கொலோ நீயும்' என வினவியமை பின் கூறப்படுதலும் காணலாம். 'விருந்தும் ஆயினான்' என்புழி உம்மை இறந்தது தழுவிய எச்சப் பொருளதாகும். நண்பினன் ஆயதே யன்றி விருந்தும் ஆயினான்; எனப் பொருள்படுதல் காணலாம். விருந்தும் உண்டான் என்பதே கருத்து. (34)

## இராமன் சுக்கிரீவனை வினவுதல்

3922. விருந்து மாகியம் மெய்ம்மை யன்பினோ
டிருந்து நோக்கிநொந் திறைவன் சிந்தியாப்
பொருந்து நன்மனைக் குரிய பூவையைப்
பிரிந்து ளாய்கொலோ நீயும் பின்னென்றான்.

விருந்தும் ஆகி, அம் மெய்ம்மை அன்பினேடு
இருந்து நோக்கி, நொந்து, இறைவன், சிந்தியா
பொருந்தும் நன் மனைக்கு உரிய பூவையைப்
பிரித்துளாய் கொலோ நீயும்? பின்! என்ருன்.

பொ :—அவ்வாறு விருந்தினனுயிருந்து பழ முதலியவற்றை உண்டு, அந்த உண்மையான விருந்தினர்க்குரிய அன்பினேடு இருந்து அவ்விடமெலாம் நோக்கி (யாண்டும் அவன் மனைவியைக் காணுமையால்) மனம் நொந்து இராமன் சிந்தித்து, பின்னவனே! பொருத்தமான நல்ல மனைக்கு உரிய நாகணவாய்ப்புள் போன்ற மனைவியை நீயும் பிரிந்து இருக்கின்ருயோ? என்று வினவினன்.

கு :—விருந்தூட்டுவோர் கணவனும் மனைவியுமாக இருந்து உபசரித்தலே முறையாகும். தன்னைப் பிரிந்த நிலையில் இராமன், விருந்து வந்தபோது, உடனிருந்து உபசரிக்கத் தான் இல்லாமையால் எத்தகைய துன்பம் உறுவானே எனச் சீதை வருந்தியதை, "விருந்து வந்தபோ தென்னுறுமோ வென விம்மும்" (சுந்தர-344) என்றதால் அறியலாம். இதனல் விருந்தினரை உபசரிக்க மனைவி இன்றியமையாதவள் என்பது புலனுதல் காணலாம். விருந்தினராய் வந்தோர்க்குரிய உண்மையான அன்பு என்பார் அம்மெய்ம்மை யன்பு எனச் சுட்டிக் கூறினர். இறைவன் என்றது இங்கு இராமனை. சுக்கிரீவன் மனைவி அப்பகுதியில் வேறிடத்தில் இருப்பாளோ என்ற ஐயத்தால் இருந்து நோக்கினன் எனவும், எங்கும் அவள் காணப் படாமையால் மனம் நொந்தான் எனவும் கொள்க. பூவை - நாகண வாய்ப்புள்; உவமையாகு பெயராய் மனைவியைக் குறித்தது. மனை என்றது மனையறத்தை. பின் - பின்னவன்; தம்பி; என்றது சுக்கிரீவனை. நண்பு பூண்டவர்களை எல்லாம் தம்பியராகக் கொள்வதே இராமன் கருத்து என்பதைக் 'குகனெடு மைவராஞேம் முன்பு பின், குன்றுசூழ்வான், மகனெடு மறுவராஞேம்' (யுத்த - வீடணனடைக் - 146) எனப் பின் கூறுதலாலும் உணரலாம், 'மன்முன்னே தழீஇக் கொண்ட மனக்கினிய துணைவனேல், என் முன்னே' (2417) என்புழி 'முன்' என்பது அண்ணன் என்ற பொருளில் வந்துளதும் காண லாம். யான் மனையாளைப் பிரிந்ததுபோல நீயும் பிரிந்துளாய் கொலோ எனப் பொருள்படுதலின் உம்மை இறந்தது தழீஇய எச்சப் பொருளது. அண்ணனுக்கு நேர்ந்த கதி தம்பிக்கும் நேர்ந்ததோ என இரங்கியவாறு. (35)

### சுக்கிரீவன் நிலையை அனுமன் விளக்குதல்

3923. என்ற வேலையி லெழுந்து மாருதி
குன்று போலநின் றிருகை கூப்பினன்
நின்ற நீதியாய் நெடிது கேட்டியா
லொன்றி யானுனக் குரைப்ப துண்டெனா.

என்ற வேலையில் எழுந்து, மாருதி,
குன்று போல நின்று இருகை கூப்பினன்—
'நின்ற நீதியாய்! நெடிது கேட்டியால்!
ஒன்று யான் உனக்கு உரைப்பது உண்டு' எனா.

பொ :—என்று இராமன் வினவியபொழுது, அனுமன், குன்று போன்ற பெருந்தோற்றத்துடன் இராமன் எதிரில் நின்று இரண்டு கைகளையும் கூப்பினவனாய், 'நிலைபெற்ற நீதியையுடையவனே! யான் உனக்குச் சொல்ல வேண்டுவது ஒன்று உண்டு. அது நெடிது ஆயினும் கேட்பாயாக' என்று தொடங்கி.

கு:—எனா என்ற எச்சம் 66 ஆம் செய்யுளில் வரும் 'இயம்ப' எனும் வினை கொண்டு முடியும். வேலை - வேளை. தன் மனைவியை யிழந்த செய்தியைச் சுக்கிரீவன் தானே கூறுதல் நாகரிகமன்று ஆதலின், அனுமன் அதைக் கூறுகின்றான். மேலும் அதையே தலைக்கீடாகக் கொண்டு வாலியைக் கொல்விப்பதற்குரிய காலம் இதுவென வறிந்து நிரந்து இனிது சொல்லவல்லவன் அவனேயாதலின் கூறத் தொடங்குகின்றான். துளக்கலாகா நிலையுடையவன் அனுமன் ஆதலின், அவனுக்குக் குன்று பொருந்திய உவமையாயிற்று. கூப்பி னனாய் என முற்றெச்சமாக்குக. இல்லறத்தோர் மனைவியுடனிருந்து விருந்து புறந்தரல் வேண்டும் என்னும் நிலைபெற்ற நீதியை யுளங் கொண்டு இராமன் வினவினன் ஆகலின், அக்கருத்தால் அவனுக்குப் பெயர் கொடுத்து 'நின்ற நீதியாய்!' என்று விளித்தான். 'உரைப்பது ஒன்றுண்டு' என்றானாயினும் தான் கூறப் போகும் வாலி சுக்கிரீவர் வரலாறு நெடிது என்பதையும் உணர்த்தி, நெடிதாயினும் பொறுமை யுடன் கேட்க வேண்டும் என்று வேண்டுவோனாதலின் 'நெடிது கேட்டியால்' என்றான். 'கேட்டி' என்பது இகரவீற்று வியங்கோள். ஆல் - அசை. (36)

### வாலியின் பெருமை கூறல்

3924. நாலு வேதமா நவையி லார்கலி
வேலி யன்னதொன் மலையின் மேலுளான்

சூலி தன்னருட் டுறையின் முற்றினன்
வாலி யென்றுளான் வரம்பி லாற்றலான்.

நாலு வேதம் ஆம் நவையில் ஆர்கலி
வேலி அன்ன தொல் மலையின்மேல் உளான்,
சூலி தன் அருள் துறையில் முற்றினன்
வாலி என்று உளான், வரம்பு இல் ஆற்றலான்.

பொ :—நான்கு வேதங்களாகிய குற்றம் அற்ற கடலுக்கு அரண் போன்று விளங்கும் பழமையான கயிலாய மலையின்மேல் இருப்பவனாகிய சூலப்படையுடைய சிவபிரானின் அருள் நெறிப் பூசையில் முதிர்ச்சி பெற்றவனாய் அளவில்லாத வலிமையுடையவனாய் வாலி என்று ஒருவன் உளன்.

கு :—நான்கு என்பது நாலு என மருவிற்று. வேதங்களின் பரப்பை யுணர்த்தக் கடலாக உருவகஞ் செய்தார். நீர்க்கடலுக்குள்ள உவர்ப்பு முதலிய குற்றங்கள் வேதக் கடலுக்கு இல்லையாதலின் அதனை நவையில் ஆர்கலி என்றார். நவை - குற்றம். ஆர்கலி - கடல்; நிறைந்த ஒலியுடையது என்ற காரணத்தான் வந்த பெயர். ஆர்கலிக்கு வேலி என நான்கனுருபு விரிக்க. வேலி - அரண். வேலியன்ன சூலி என இயையும். 'நால் வேதன் காண் (தேவாரம்-6-8-3) 'மந்திரமும் மறைப்பொருளு மானான்றன்னை' (தேவாரம் - 6 - 3 - 4) எனவும், 'ஆறறியந்தணர்க் கருமறை பல பகர்ந்து' (கலி - 1) எனவும், 'தூமறைபாடும் வாயார்' (பெரியபுராணம் - தடுத்தாட் -70) எனவும் சிவபிரான் வேதங்களாகவும் வேதப் பொருளாகவும் வேதங்களைக் கற்பிப்போனாகவும் வேதங்களை எப்பொழுதும் பாடுவோனாகவும் கூறப்படுதலின்; அவ்வேதங்கள் அழியாமல் பாதுகாப்பவன் என்ற கருத்தால், அவன் வேதக்கடலுக்கு வேலி போன்றவன் எனப்பட்டான். ஈறிலாத ஈசனுக்கு இருப்பிடமாய் என்றும் உள்ளது கயிலாயமலை யாதலின் அது தொன்மலை எனப்பட்டது. மலையின் மேலுளானாகிய சூலி என்க. சூலபாணியனாதலின் சிவன் சூலி எனப்பட்டான். சூலத்தையுடையவன் என்ற காரணம்பற்றி வந்த பெயர். சூலம் என்பதில் அம் சாரியை கெட்டுச் சூல் என நின்று இகரவிகுதி பெற்றுச் சூலி என ஆயது. சூலிதன் அருட்டுறையில் முற்றுதலாவது, அவன் அருள் நெறிப் பூசையில் பயிற்சி மிகுதல். வாலி சிவபூசை செய்தவன் என்பதை: "கோலமாமலரொடு தூபமுஞ் சாந்தமுங் கொண்டு போற்றி வாலியார் வழிபடப் பொருந்தினர்... குரங்காடுதுறை நீலமாமணி மிடற்றடிகளை" (தேவாரம் - 3 - 91 - 6) எனவும், 'நீலமா மணிநிறத் தரக்கனை யிருபது கரத்தொடொல்க வாலினாற் கட்டிய வாலியார் வழிபட மன்னுகோயில்......குரங்காடு

துறையே" (தேவாரம் - 3 - 91 - 8) எனவும் திருஞானசம்பந்தர் கூறுமாற்ருனுணரலாம். "அணங்கார் பாகனை யாசைதோறுமுற், றுணங்கா வொண்மலர் கொண்டு என்பொடும், இணங்காக் கால மிரண்டொ டொன்றினும், வணங்கா தித்துணை வைகவல்லையோ" (388) எனத் தாரை கூறிப் புலம்புதலும் காண்க. அவன் வரம்பி லாற்றலும் சிவபூசையின் முதிர்ச்சியால் பெற்றதேயாம். வாலின் வலிவுடையவன் ஆதலின் வாலி எனப் பெயர் பெற்ருன். வரம்பில் ஆற்றல் என்றது பிறரால் அழிவு படாத ஆற்றல்; எதிர்ந்தார் வலியில் பாதி தன்வலியாக வரம்பெற்றவன் என்ற குறிப்பும் இங் குண்டு. நவையில் சாலியின் எனப் பாடங் கொள்வாருமுளர். (37)

**3925.** கழலுந் தேவரோ டவுணர் கண்ணினின்
றுழலு மந்தரத் துருவு தேயமு
னழலுங் கோளரா வகடு தீவிடச்
சுழலும் வேலையைக் கடையுந் தோளினன்.

கழலும் தேவரோடு அவுணர் கண்ணின் நின்று,
உழலும் மந்தரத்து உருவு தேய, முன்,
அழலும் கோள்அரா அகடு தீவிடச்,
சுழலும் வேலையைக் கடையும் தோளினன்.

பொ :—(கடல் கடையும் தொழிலில் ஈடுபட்டுப் பின் இயலாமை யால் அதில் நின்றும்) விடுபட்ட தேவர்களுடன் அவுணர்களின் கண் முன் நின்று, மத்தாக நின்று சுழலுகின்ற மந்தரமலையின் வடிவு தேய வும், முன்னரே கோபங் கொண்ட வலிய வாசுகி என்னும் கடை கயிருகிய பாம்பின் வயிறு நெருப்பைக் கக்கவும் சுழன்று அலைகின்ற கடலைக் கடையும் தோளினையுடையவன்.

கு :—கழலுதல் - விலகுதல்; விடுபடல். தேவரோடவுணர் சேர்ந்து கடல் கடைய முயன்று முடியாமையால் விலகி நின்றவரின் கண் முன் நின்று வாலி தான் ஒருவனே கடைந்து முடித்துக் காட்டிய வலியினன் என்றவாறு. வரத்தாலும் வலியாலும் சிறந்தாராய் விளங்கிய அமரராலும் அவுணராலும் செய்ய இயலாத செயலை ஒருவன் செய்து முடித்தமையால் வாலியின் பெருவலி பெறப்படுதல் காணலாம். உழலுதல் - திரிதல். நெடிது கடைந்தமை தோன்ற, மந்தரமலையின் உருவுதேய வாசுகி யென்னும் பாம்பின் வயிறும் வெப்பமிக என்ருர். அழலுதல் - சினங் கொள்ளுதல், நெடிது கடைந்து வருத்தினமையால் உளதாயது சினம். கோள் - வலிமை; கொலையுமாம்; தீ விடலாவது, வெம்மை மிக்கதாதல். அகடு - வயிறு-

திருப்பாற்கடலில் அமுதம் எடுக்க நினைந்து தேவரும் அவுணரும் மத்து மந்தரமாகவும் கயிறு வாசுகியாகவும் கொண்டு கடைந்தபோது இளைத்து நின்று அங்குச் சிவபூசை செய்யவந்த வாலியை வேண்ட அவர் கண் முன் வாலி தானே இரு கையாலும் கடைந்து அமுதெழச் செய்தான் என்பது வரலாறு. "மற்றவன் முன்னே னந்நாள் இரா வணன் வலிதன் வாலின், இற்றுகக் கட்டி யெட்டுத் திசையினு மெழுந்து பாய்ந்த, வெற்றியன் தேவர் வேண்ட வேலையை விலங்கன் மத்தின், சுற்றிய நாகந்தேய வமுதெழக் கடைந்த தோளான்." (சுந்தர-519) என அனுமன் புகழுமாறும் காணலாம். இவ்வரலாறு காஞ்சி புராணத்து மணிகண்டேசுரப் படலத்தில் விரிவாகக் கூறப்படுகின்றது. (38)

3926. நிலனு நீருமா நெருப்புங் காற்றுமென்
றுலைவில் பூதநான் குடைய வாற்றலான்
அலையின் வேலைசூழ் கிடந்த வாழிமா
மலையி னின்றுமிம் மலையின் வாவுவான்.

நிலனும், நீரும், மாநெருப்பும், காற்றும், என்று
உலைவில் பூதம் நான்கு உடைய ஆற்றலான்;
அலையின் வேலை சூழ் கிடந்த ஆழி மா
மலையின் நின்றும் இம்மலையின் வாவுவான்.

பொ:—பெரிய பூமியும் நீரும் நெருப்பும் காற்றும் என்கின்ற அழிவில்லாத பெரும் பூதங்கள் நான்கினுடைய ஆற்றலைத் தான் ஒருவனே பெற்றவன்; அலைகளையுடைய எழு கடல்களைச் சூழ்ந்து கிடந்ததாகிய பெரிய சக்கரவாள மலையின் நின்றும் இங்குள்ள மலையில் தாவும் தன்மையுடையவன்.

கு:—மா என்பது, இடைநிலை விளக்காய் நிலமுதலிய எல்லா வற்றிற்கும் அடையாய் நின்றது. ஒடுக்க முறைபற்றி நில முதலாக எண்ணினர். பூதங்கள் ஒடுங்குங்கால் நிலம் தனக்குக் காரணமாய நீரிலும், நீர் நெருப்பிலும் நெருப்புக் காற்றிலும் ஒடுங்கும். ஐம்பூதங் களில் ஆகாயத்தைக் கூருதது என்னை? எனின் அதற்கு வடிவும் ஆற்றலும் புலப்படத் தோன்ருமையின் என்க. உலைதல் - அழிதல். "நீர்மிகிற் சிறையுமில்லை; தீ மிகின் மன்னுயிர் நிழற்றும் நிழலு மில்லை; வளிமிகின் வலியுமில்லை" (புறநா - 51) எனப் பூதங்களின் ஆற்றலைத் தனித்தனி புலப்படுத்தியிருத்தல் காண்க. அத்தகைய பூதங்கள் நான்கின் வலியைத் தான் ஒருவனே பெற்று விளங்கு கின்றவன் வாலி எனப் புகழ்ந்தவாறு. பூமியை எழுகடல் சூழ்ந்

துள்ளதாகவும் எழுகடலைச் சக்கரவாளகிரி சூழ்ந்துள்ளதாகவும் கூறுதல் புராண மரபு. ஆழிமா மலை - சக்கரவாளமலை. மாஆழிமலை என மாற்றிப் பெரிய சக்கரவாளகிரி என்று பொருள் கூறுக. இம்மலை என்றது, அண்மையிலுள்ள கிட்கிந்த மலையைச் சுட்டியபடி. வாவுதல் - தாவுதல்; தாண்டுதல். முன்னிரண்டடியில் வாலியின் ஆற்றலையும், பின்னிரண்டடியில் அவன் வடிவின் பெருமையையும் கூறியவாறு. சூழ்ந்து கிடந்த எனல் வேண்டியது சூழ் கிடந்த என முதனிலை மாத்திரையாய் நின்று வினையெச்சப் பொருளைத் தந்தது; வரிப்புனைபந்து என்புழிப்போல. (39)

**3927.** கிட்டு வார்பொரக் கிடைக்கி னன்னவர்
பட்ட நல்வலம் பாக மெய்துவா
னெட்டு மாதிரத் திறுதி நாளுமுற்
றட்ட மூர்த்திதாள் பணியு மாற்றலான்.

'கிட்டுவார் பொரக் கிடைக்கின், அன்னவர்
பட்ட நல்வலம் பாகம் எய்துவான்;
எட்டு மாதிரத்து இறுதி, நாளும் உற்று
அட்டமூர்த்தி தாள் பணியும் ஆற்றலான்'

பொ :—தன்னோடு போர் செய்ய வருவார் கிடைத்தால் அவரிடம் பொருந்தியுள்ள நல்ல வலிமையில் பாதியைத் தனக்கு உரியதாக அடைதற்கு உரியவன்; நாள்தோறும் எட்டுத்திசைகளின் இறுதியில் சென்று நில முதலிய எண்வடிவினனாகிய சிவபிரானது தாளைப் பூசிக்கும் ஆற்றலுடையவன்.

கு :—பொரக் கிட்டுவார் என இயையும். கிட்டுதல் - வருதல். உயிர்களின் ஆரவாரம் யாதும் இல்லாத இடம் திசைகளின் இறுதியிடம் ஆதலின், அமைதியாகச் சிவனைப் பூசித்தற்கு நாள்தோறும் அங்குச் செல்வானானன். அட்டமூர்த்தி என்றது சிவனுக்குப் பெயர். நில முதலிய பூதங்கள் ஐந்தாகவும் ஞாயிறு திங்கள் ஆகிய ஒளிப் பொருள்களாகவும் இயமானனாகவும் சிவன் இருக்கின்றான் என்பது சைவநூற் கொள்கை. "இருநிலனாய்த் தீயாகி நீருமாகி யியமானனா யெறியுங் காற்றுமாகி, அருநிலைய திங்களாய் ஞாயிருகி ஆகாச மாயட்ட மூர்த்தியாகி......நிமிர்புன் சடையடிகள் நின்றவாறே" (தேவாரம் - 6-94-1) எனத் திருநாவுக்கரசர் கூறுமாறு காணலாம். வாலி தன்னொடு எதிர்ந்தார் வலியில் பாதி தனக்கு வருமாறு சிவன்பால் வரம் பெற்றிருந்தான் என்றவாறு. சூரபன்மாவின் காவல் மரமாகிய மாமரமும் இவ்வாறே மந்திரங் கொண்டிருந்தது என்பர்.

'அவுணர் நல்வல மடங்கக் கவிழிணர் மாமுதல் தடிந்த' (திருமுருகாற் - 59, 60) என்புழி, நச்சினார்க்கினியர், "என்றது, அவுணரெல்லாரும் தம்முடனே எதிர்ந்தார் வலியிலே பாதி தங்கள் வலியிலே கூடும்படி மந்திரங் கொண்டிருந்து சாதித்ததொரு மாவை வெட்டினான் என்றவாறு" என விளக்கம் தந்திருத்தல் காண்க. ஆற்றலான் என்றது, நாளும் மாதிரத்திறுதி உற்றுப் பணியும் ஆற்றல் மிகுதியை யுணர்த்தியவாறு. (40)

**3928.** கால்செ லாதவன் முன்னர்க் கந்தவேள்
வேல்செ லாதவன் மார்பின் வென்றியான்
வால்செ லாதவா யலதி ராவணன்
கோல்செ லாதவன் குடைசெ லாதரோ.

கால்செலாது அவன் முன்னர்; கந்தவேள்
வேல் செலாது அவன் மார்பில்; வென்றியான்
வால் செலாத வாய் அலது, இராவணன்
கோல் செலாது; அவன் குடை செலாது அரோ.

பொ :—அவ்வாலியின் வேகத்திற்கு முன்னதாகக் காற்றும் போகாது; அவன் மார்பில் முருகனுடைய வேலும் நுழையாது; வெற்றியுடைய அவ்வாலியின் வால் செல்லாத இடத்திலன்றி இராவணனுடைய செங்கோலும் செல்லாது; அவன் வெற்றிக் குடையும் செல்லாது.

கு :—கால் - காற்று; வேகத்தில் சிறந்த காற்றும் வாலியின் வேகத்திற்குத் தோற்றுவிடும் என்றவாறு. கந்தவேள் - முருகன்; இருபெயரொட்டு. சரவணப் பொய்கையில் ஆறு உருவமாய்க் கிடந்து பார்வதிதேவியால் ஒருருவாக்கப்பட்டவன் ஆதலின், முருகன், கந்தன் எனப் பெயர் பெற்றான். கிரவுஞ்சம் என்னும் மலையைப் பிளந்த முருகன் வேலாலும் வாலியின் மார்பைத் துளைக்க முடியாது என அவன் மார்பின் வன்மை புலப்படுத்தியவாறு. வென்றியான் என்றது, வாலியை; காரணப் பெயர். இராவணன் கோலும் குடையும் வாலியின் வால் செல்லாத இடத்தில் செல்லுவனவேயன்றி அவன் வால் செல்லுமிடத்தில் செல்லா என்றவாறு. வாய் - இடம். கோல் என்றது அதிகாரத்தையும் குடையென்றது வெற்றியையும் குறிப்பாலுணர்த்தின. இறுதியடியில் வந்த செலாது என்பதற்குப் பலிக்காது எனப் பொருள் கூறலும் ஆம். இந்திரன் முதலிய தேவர்களையும் வென்ற இராவணன் அதிகாரம் வாலியின் வால் செல்லும் இடத்தில் செல்லாது என அவன் வாலின் வலிமை

யைப் புலப்படுத்தியவாறு. வாலி பூசையிலமர்ந்திருந்தபோது அவன் பின் சென்று துன்புறுத்த நினைத்த இராவணனை வாலில் கட்டிக் கொண்டு எட்டுத் திசையிலும் சுற்றிவர இராவணன் இளைத்து மன்னிக்குமாறு வேண்ட, இரங்கி அவ்வாலி விடுத்தருளப் பெற்றவனாதலின், அவன் வால் செல்லுமிடத்தில் இராவணன் செல்ல அஞ்சுவான் என நகைச்சுவை தோன்றக் கூறி வாலின் வலிமை புலப்படுத்தியவாறு. வாலிக்கு இராவணன் தோற்ற செய்தியை, " அரங்கி லாடுவார்க் கன்பு பூண்டுடைவரம் அறியேன், இரங்கியானிற்ப என்வலி யவன்வயினெய்த வரங்கொள் வாலிபால் தோற்றனன் " (யுத்த - மந்திரப் - 107) என இராவணனே கூறுமாற்று லறியலாம். ‘கால் செலாதவன்’ என்பதற்கு எங்கும் இயங்க வல்ல காற்றும் அவனாணையின்றி அவன்முன் செல்ல அஞ்சும் எனப் பொருள் கூறலுமாம். (41)

**3929.** மேரு வேமுதற் கிரிகள் வேரொடும்
பேரு மேயவன் பேரு மேனெடும்
காரும் வானமுங் கதிரு நாகமும்
தூரு மேயவன் பெரிய தோள்களால்.

மேருவே முதல் கிரிகள் வேரொடும்
பேருமே, அவன் பேருமேல்; நெடும்
காரும் வானமும், கதிரும், நாகமும்,
தூருமே, அவன் பெரிய தோள்களால்.

பொ :—அவ்வாலி இடம் பெயர்ந்து நடக்கத் தொடங்குவானாயின் (அவ்வதிர்ச்சியால்) மேருமலை முதலிய பெரிய மலைகளும் இடம் விட்டு வேரொடும் பெயரும்; அவனுடைய பெரிய தோள்களால் பெரிய மேகங்களும் ஆகாயமும் சந்திர சூரியராகிய கதிர்களும் விண்ணுலகமும் மறைவெய்தும்.

கு :—வாலி நடக்கும் வேகத்தில் பெரிய மலைகளும் பெயர்ந்து பின் செல்லும் என அவன் வேகத்தின் பெருமை புலப்படுத்தியவாறு. மேருவே என்புழி ஏகாரம் சிறப்புணர நின்றது. மேருவினும் பெரிய மலையின்மையின் அதனை முதற்கண் எடுத்துக் கூறியவாறு. ‘பெயருமேல் நெடும்பூதங்களைந்தொடும் பெயரும் ” (யுத்த - இரணியன்–13) என இரணியன் ஆற்றல் பின் கூறப்படுதலும் காணலாம். வாலி நின்று நடக்கத் தொடங்கின் அவன் பெரிய தோள்களில் மேகம் முதலிய மறையும் என அவன் தோள்களின் பருமையும் நெடுமையும் புலப்படுத்தியவாறு, வாலியின் தோள்களன்றிப் பிற யாதும் தோன்ரு

என்றபடி. வெண்கதிர், செங்கதிர் எனப்படுதலின் சந்திர சூரியரைக் கதிர் என்ற சொல்லால் குறிப்பிட்டார். நாகம் என்றது விண்ணுலகத்தை. தூரும் - மறையும். (42)

**3930.** பாரி டந்தவெம் பன்றி பண்டைநாள்
நீர்க டைந்தபே ராமை நேருளான்
மார்பி டந்தமா வெனினு மற்றவன்
தார்கி டந்ததோ டகைய வல்லதோ.

பார் இடந்த வெம்பன்றி, பண்டை நாள்
நீர் கடைந்த பேர் ஆமை நேர் உளான்;
மார்பு இடந்த மா எனினும், மற்றவன்
தார் கிடந்த தோள் தகைய வல்லதோ.

பொ :—முன் பூமியைத் தன் கொம்பால் பெயர்த்து எடுத்த கொடிய மாவராகத்தையும், பழைய காலத்தில் மந்தரமலையாகிய மத்தை யழுந்தாமல் தாங்கியிருந்து கடலைக் கடைந்த பெரிய கூர்மத்தையும் வலிமையால் நிகர்ப்பவன்; இரணியன் மார்பைப் பிளந்த நரசிங்கமே வந்ததாயினும் அவ்வாலியின் மாலையணிந்த தோளாற்றலை அடக்க வல்லதோ? அன்று.

கு :—இடத்தல்; முன்னது பெயர்த்தல்; பின்னது பிளத்தல். இரணியாக்கன் பூமியைச் சுருட்டிக்கொண்டு கடலில் புகுந்தானைத் திருமால் பெரிய பன்றியுருவெடுத்து அவ்விரணியாக்கனைக் கொன்று பூமியைப் பெயர்த்தெடுத்தார் என்பது புராண கதை. பூமியைப் பெயர்க்குமாற்றலும் வாலிக்கு உண்டு என்பான், 'பாரிடந்த வெம்பன்றி நேருளான்' என்றான். பண்டை நாள் என்பது இடைநிலை விளக்காய் முன்னும் சென்றியைந்தது. தேவாசுரர் திருப்பாற்கடல் கடைந்தபோது மந்தரமலையாகிய மத்து கடலுள் அழுந்தாதபடி திருமால் பெரிய ஆமையுருவுகொண்டு தாங்கி நின்று ஆயிரங்கைகளாலும் அம்மலையைச் சுழற்றினான் என்ற புராண கதையுட் கொண்டு 'நீர்கடைந்த பேராமை நேருளான்' என்றான். இதனால் வாலி மலையைத் தாங்கும் ஆற்றலும் கடலைக் கலக்குமாற்றலும் உடையவன் என்பது புலப்படுத்தியவாறு. மார்பிடந்தமா என்றது, இரணியன் மார்பைப் பிளந்த நரசிங்கத்தை. தகைதல் - அடக்குதல். திருமாலின் அவதாரங்களாகிய வராகம், கூர்மம், நரசிங்கம் என்ற மூன்றையும் நிகர்ப்பவன் வாலி என அத்திருமாலின் அவதாரமாக வந்துள்ள இராமன்பால் கூறிப் புகழ்ந்தவாறு. மற்று - அசை. இரணியன் மார்பையே பிளந்த நரசிங்கத்

திற்கு வாலியின் தோளையும் அடக்க முடியாது என்று அவன் தோளாற்றலை வியந்தவாறு. (43)

3931. படர்ந்த நீணெடுந் தலைப ரப்பிமீ
தடர்ந்து பாரம்வந் துறவ னந்தனுங்
கிடந்து தாங்குமிக் கிரியை மேயினுன்
நடந்து தாங்குமிப் புவன நாளெலாம்.

படர்ந்த நீள் நெடும் தலை பரப்பி, மீது
அடர்ந்து பாரம் வந்து உற, அனந்தனும்
கிடந்து தாங்கும்; இக்கிரியை மேயினுன்,
நடந்து தாங்கும்; இப்புவனம் நாள் எலாம்.

பொ :—ஆதிசேடனும் ஆயிரமாகக் கிளைத்துள்ள தன் நீண்ட பெரிய தலைகளைப் பரப்பிக்கொண்டு, அத்தலைகளின் மேலே நெருங்கி வந்து பாரம் மிகுதியாகப் பொருந்துதலால், நின்று தாங்க முடியாமல் கீழே கிடந்து இப்பூமியை நாள் எல்லாம் தாங்குவான்; இந்தக் கிட்கிந்த மலையில் பொருந்தியவனுன வாலியோ, நடந்துகொண்டே அப்பூமியை எளிதாகத் தாங்கக் கூடிய ஆற்றலையுடையவன்.

கு :—படர்தல் - கிளைத்தல். நெடுமை, பெருமை யுணர்த்தியது. பாரம் வந்து உறலால் என்க: காரணத்தின்கண் வந்த வினையெச்சம். ஆயிரம் தலைகளையுடைய ஆதிசேடன் பாரம் தாங்கமாட்டாது இளைத்துக் கிடந்து தாங்கும் பூமியை, வாலி நடந்து தாங்குவான் என ஆதிசேடனினும் வாலி வலியன் என்பதைப் புலப்படுத்தியவாறு. அடர்தல் - நெருங்குதல். அநந்தன் – ஆதிசேடன். மேல் வராக, கூர்ம, நரசிங்க அவதாரங்களினும் வலியன் என்று கூறியவன், இங்கு அத்திருமாலின் அமிசமான ஆதிசேடனினும் வலியன் என்பதைப் புலப்படுத்தினுன். 'அரவாகிச் சுமத்தியால்" (விராதன்வதை - 58) என்றதால் ஆதிசேடனுகி நின்று பூமியைச் சுமப்பவனும் திருமாலே என்பது புலப்படுதல் காணலாம். ஆயிரம் முடிகளையுடைய அனந்தனும் கிடந்துதாங்கும் புவனத்தை ஒரு தலையையுடைய வாலி நடந்து தாங்குவான் என உறுப்புக்குறை விசேடம் என்னும் அணி தோன்றக் கூறியவாறு. பாம்பு ஆதலின் ஆதிசேடன் கிடந்தன்றித் தாங்க முடியாமை ஓர்க. அனந்தனும் என்புழி உம்மை உயர்வு சிறப்புப் பொருளது. கிட்கிந்த மலை அருகில் தோன்றுவதால் 'இக்கிரி' எனச் சுட்டிக் கூறினுன். ஆதி சேடனுல் தாங்கப் பெற்ற பூமியின் ஒரு பகுதியிலுள்ள இச்சிறிய மலையில் பொருந்தியவனுயிருந்தும் அப்பெரிய பூமியையே தாங்கிக்

கொண்டு நடக்கும் ஆற்றலுடையனுயினுன் என்க. தாங்கும் என்பது நிகழூஉ நின்ற பலர் வரை கிளவி; உயர்திணை ஆண்பாலை உணர்த்தியது. எக்காலமும் என்பான், 'நாளெலாம்' என்ருன். செயல் நிகழாத வழியும் செய்ய இயலும் எனப் புகழ்தல் உண்டு என்பதை, —"மலையகழ்க்குவனே கடறூர்க்குவனே, வான் வீழ்க்குவனே வளி மாற்றுவனெனத் தான் முன்னிய துறைபோதலிற், பல்லொளியர் பணிபொடுங்க" (பட்டினப் - 271 – 274) எனக் கரிகாற் பெருவளத் தானைப் புகழ்ந்திருத்தலால் அறியலாம். (44)

**3932.** கடலொ லிப்பதுங் கால்ச லிப்பதும்
மிடல ருக்கர்தேர் மீது செல்வதுந்
தொடர மற்றவன் சுளியு மென்றலா
லடலின் வெற்றியா யயலி ளுபவோ.

கடல் ஒலிப்பதும், கால் சலிப்பதும்,
மிடல் அருக்கர்தேர் மீது செல்வதும்,
தொடர மற்றவன் சுளியும் என்று அலால்
அடலின் வெற்றியாய்! – அயலின் ஆபவோ ?

பொ :—வலிமையால் பெற்ற வெற்றியையுடையவனே! கரை கடவாமல் நின்று கடல் ஒலித்துக் கொண்டிருப்பதும், காற்று எப்பொழுதும் இயங்கிக் கொண்டிருப்பதும் வலிமையுடைய சூரியர்களின் தேர் இடைவிடாமல் விண்ணின்மீது செல்வதும் அவ்வாலி வெகுள்வானே என்ற காரணத்தால் நிகழ்வதன்றிப் பிறிதொரு காரணத்தால் நிகழ்வனவோ? அல்ல.

கு :—சலித்தல் – இயங்குதல். கடல்கரை கடந்து பெருகினுலும், காற்று இயங்காமல் நின்ருலும், சூரியன் விண்ணின் மீது போகாது மண் மீது வந்தாலும், உலகுயிர்கள் அழிவனவாம். அவ்வாறு நிகழாமல் கடல்கரைக்குள் அடங்கி ஒலித்துக் கொண்டிருப்பதும் காற்றுச் சஞ்சரித்துக் கொண்டிருப்பதும் சூரியர் தேர் விண்மீது செல்வதும் வாலி சினப்பானே என்னும் அச்சம் காரணமாக நிகழ்வதே என்று தற்குறிப்பேற்றமாகக் கூறியவாறு. பன்னிரண்டு மாதங்களிலும் பன்னிரு சூரியர் முறையே பகல் செய்வர் என்பது புராண மரபு. அம்மரபு பற்றி அருக்கர் எனப் பலர்பாலாகக் கூறினுன். தொடர - இடைவிடாமல், எப்பொழுதும். இச்சொல் இறுதிநிலை விளக்காய், முன் கடல் தொடர ஒலிப்பதும், தொடரச் சலிப்பதும், தொடர மீது செல்வதும் என இயையும். இறைவன் ஆணைக்கு அடங்கி நடப்பவற்றை அவ்விறைவன் நல்லருள்பெற்ற

வாலியின் ஆணைக்கு அடங்கி நடப்பனவாகக் கூறியவாறு. முன் திருமாலின் அவதாரங்களோடொப்பவன் எனவும் மிக்கவன் எனவும் கூறியவன், இறைவனோடு ஒப்பவன் வாலி என்பது இங்குப் புலப் படுத்தியவாறு. "நெடுங்கடல் நிற்பதும் ஞாயிறு காய்வதும் நித்த லுங்கால், ஒடுங்கி நடப்பதும்......அரங்கேசர் தந்திரு வாணையிலே" (திருவரங்கத்துமாலை - 15) என இறைவன் ஆற்றல் கூறப்படுதல் காணலாம். சுளிதல் - வெகுளுதல். அல்லால், அலால் எனத் தொகுத்தல் விகாரம் பெற்றது. (45)

3933. வெள்ள மேழுபத் துள்ள மேருவைத்
தள்ள லானதோ ளரியின் றானையா
னுள்ள மொன்றியெவ் வுயிரும் வாழுமால்
வள்ள லேயவன் வலியின் வண்மையால்.

'வெள்ளம் ஏழுபத்து உள்ள, மேருவைத்
தள்ளல் ஆன தோள் அரியின் தானையான்;
உள்ளம் ஒன்றி எவ் உயிரும் வாழுமால்
வள்ளலே! அவன் வலியின் வண்மையால்.

பொ:—(அவ்வாலி) எழுபது வெள்ளம் என்கின்ற அளவு உள்ளதும் மேருமலையையும் தள்ளக்கூடியதான தோள்வலிமை யுள்ளதும் ஆன வானரப் படையையுடையவன்; வள்ளல் தன்மை யுடையவனே! அவன் வலிமையின் வளத்தால் அவன் கீழுள்ள எல்லா உயிரும் மனம் ஒன்றுபட்டு வாழா நிற்கும்.

கு:—ஏழுபத் துள்ள தானை என இயையும். ஒவ்வொரு வானரமும் மேருமலையைத் தள்ளக்கூடிய தோளாற்றலையுடையது என அவன் சேனையின் வலிமையைச் சிறப்பித்தவாறு. இனி, மேருமலை தன் தோளுக்கு உவமை யாகாதென இகழக்கூடிய பெருந்தோளையுடைய வானரம் எனலும் ஆம். அரி - குரங்கு. முதலிரண்டு அடிகளில் வலிய தானையுடைமை கூறிப் பின்னிரண்டடியில் அவன் ஆட்சியின் சிறப்பைப் புலப்படுத்தினன். வலியின் வண்மை என்றது வலியின் பெருக்கத்தை யுணர்த்தியது. இனி, வலியானும் வண்மையானும் எவ்வுயிரும் உள்ளமொன்றி வாழும் என இரண்டு ஏது ஆக்கலும் ஆம். எவ்வுயிரும் உள்ளம் ஒன்றுதற்கும் நல்வாழ்வு வாழ்தற்கும் வாலியின் வலியும் வண்மையும் காரணமாகும் என்றபடி. வெள்ளம் என்றது பேரெண். அக்குரோணி எட்டு ஏகம்; ஏகம் எட்டு கோடி;

கோடி எட்டு சங்கம்; சங்கம் எட்டு விந்தம்; விந்தம் எட்டு குமுதம்; குமுதம் எட்டு பதுமம்; பதுமம் எட்டு நாடு; நாடு எட்டு சமுத்திரம்; சமுத்திரம் எட்டு வெள்ளம்; என்பர். (46)

**3934.** மழையி டிப்புரு வயவெஞ் சீயமா
முழையி டிப்புரு முரண்வெங் காலுமென்
றழைது டிப்புறச் சார்வு ருதவன்
விழைவி டத்தின்மேல் விளிவை யஞ்சலால்.

'மழை இடிப்பு உரு; வய வெஞ் சீயமா
முழை இடிப்பு உரு; முரண் வெங்காலும் மென்
தழை துடிப்புறச் சார்வுருது';—அவன்
விழைவிடத்தின் மேல், விளிவை அஞ்சலால்.

பொ:—வாலி வெகுண்டால் தமக்கு அழிவு நேருமே என்று அஞ்சுதலால், அவ்வாலி விரும்பியிருக்கும் இடத்திற்கு மேல் மேகம் இடிக்கமாட்டா; வலிய கொடிய சிங்கமாகிய விலங்குகளும் குகையில் இடிபோல் முழங்கமாட்டா; வலிமை மிக்க கொடிய காற்றும் அங்குள்ள மரங்களின் மெல்லிய தழை துடிப்பு எய்துமாறு வேகத்தோடு சாராது.

கு:—விளிவை யஞ்சலால் விழை விடத்தின்மேல் இடிப்புரு, இடிப்புரு, சார்வுருது என இயையும். மேகமும் சிங்கமும் காற்றும் வாலிக்கு அஞ்சி யடங்கி ஒழுகும் என்று வாலியின் வலிமையைப புலப்படுத்தியவாறு. மழை - மேகம். வய - வலி. சீயமா - சிங்கமாகிய விலங்குகள். சிங்கம் மலைக்குகையில் இருந்து முழங்கும் இயல்பின தாகலின் 'முழை இடிப்புரு' என்றார். இடிப்பு என்றது முழக்கத்தை. முரண் - வலிமை. மென்தழை துடிப்புறச் சார்வுருது எனவே, காற்று மென்மையாகி வீசும் என்பது பெறப்படும். விழைவிடம் என்றது வாலி விரும்பித் தங்குகின்ற இடத்தை. தொண்டைமான் இளந்திரையன் ஆட்சியில், "அவன் கடியுடை வியன்புலம், உருமு முரறுது அரவுந்தப்பா, காட்டுமாவும் உறுகண் செய்யா" (பெரும்பாண் - 42-44) எனக் கடியலூர் உருத்திரங் கண்ணனார் கூறியுள்ளமை இங்கு ஒப்பு நோக்கத்தகும். (47)

**3935.** மெய்க்கொள் வாலினுன் மிடலி ராவணன்
தொக்க தோளுறத் தொடர்ப டுத்தநாள்

புக்கி லாதவெம் பொழிய ரத்தநீ
ருக்கி லாதவே றுலகம் யாவதோ.

'மெய்க்கொள் வாலினுல், மிடல் இராவணன்
தொக்க தோள் உறத் தொடர் படுத்த நாள்,
புக்கிலாத—வெம் பொழி அரத்தநீர்
உக்கிலாத—வேறு உலகம் யாவதோ.

பொ :—தன் உடம்பில் ஒருறுப்பாகக் கொண்ட வாலினுல் வலிமைமிக்க இராவணனின் இருபதாகச் சேர்ந்த தோள்கள் அடங்கியிருக்குமாறு கட்டிய நாளில், அவன் புகாததும், வெம்மையுடைய தாய்ச் சொரிகின்ற இரத்தநீர் சிந்தாததும் ஆகிய வேறு உலகம் எது? ஏதும் இல்லை.

கு :—புக்கிலாத உலகம், அரத்தநீர் உக்கிலாத உலகம் வேறு யாவது? என்ற வினு, யாதும் இல்லை என மறுதலைப் பொருளைத் தந்தது. நீர்ப்பொருளாதல் ஒற்றுமை பற்றி 'அரத்தநீர்' என்ருன். வெம்பொழி அரத்தம் - வெம்மையோடு சொரிகின்ற குருதி. உக்கிலாத - சிந்தப்பெருத. வாலி சென்ற எல்லா உலகங்களினும் அவன் வாலில் கட்டுண்ட இராவணன் புகுந்தான்; அவன் குருதி எல்லாவுலகங்களினும் சிந்தியது என்றவாறு. இதனுல் இராவணனையும் வென்ற வீரமுடையவன் வாலி என்பது கூறியவாறு. சிவபூசை செய்து கொண்டிருந்த வாலியைப் பின்புறமாகப் பற்ற வந்த இராவணனை வாலால் கட்டிக்கொண்டு எல்லாவுலகங்களினும் அவன் இரத்தம் சிந்துமாறு சுற்றி வந்து பின் அவன் மன்னிப்புக் கேட்க வாலி விடுத்தான் என்பது வரலாறு. (48)

3936. இந்தி ரன்றனிப் புதல்வ னின்னளிச்
சந்தி ரன்றழைத் தனைய தன்மையா
னந்த கன்றனக் கரிய வாணையான்
முந்தி வந்தன னிவனின் மொய்ம்பினேய்.

இந்திரன் தனிப் புதல்வன், இன் அளிச்
சந்திரன் தழைத்தனைய தன்மையான்,
அந்தகன் தனக்கு அரிய ஆணையான்,
முந்தி வந்தனன் இவனின்—மொய்ம்பினேய்!

பொ :—வலிமையுடையவனே! (வாலி) இந்திரனுடைய ஒப்பற்ற புதல்வன்; இனிமையும் குளிர்ச்சியுமுடைய சந்திரன் வளர்ச்சி

பெற்றுற் போன்ற வெண்ணிறத்தினன்; எமனுக்கும் கடத்தற்கு அரிய ஆணையை உடையவன்; இந்தச் சுக்கிரீவனிலும் முன்னதாக (ஒரு தாய் வயிற்றில்) பிறந்தவன்.

கு:—இதனுல் வாலி இந்திரனுக்கு மகன் சுக்கிரீவனுக்கு அண்ணன் என்ற உறவும் அவன் நிறமும் ஆணையும் புலப்படுத்திய வாறு. அளி - குளிர்ச்சி. "திங்களு ளளியு நீ" (பரிபாடல்-3: 67) என்புழியும் அப்பொருளதாதல் காணலாம். சந்திரன் வடிவம் வாலியின் பேருருவிற்கு உவமை போதாமையின் விகார உவமையாகுமாறு 'சந்திரன் தழைத்தனைய தன்மையான்' என்று கூறினுன். நிறத்தால் மட்டுமன்றி வடிவினுனும் உவமையாதல் வேண்டி இங்ஙனம் கூறினுன். எமனும் வாலியின் ஆணைவழி நிற்பதன்றிக் கடக்கும் ஆற்றலன் அல்லன் என்றபடி. வாலி சுக்கிரீவர்க்குத் தாய் ஒருத்தி என்பதும் தந்தையர் இந்திரனும் சூரியனுமாகிய இருவர் என்பதும் இதனுலறியலாம். (49)

3937. அன்ன வன்னெமக் கரச ஞகவே
யின்ன வன்னிளம் பதமி யற்றுநாள்
முன்ன வன்குலப் பகைஞன் முட்டினுன்
மின்னெ யிற்றுவா ளவுணன் வெம்மையான்.

'அன்னவன் எமக்கு அரசன் ஆகவே
இன்னவன் இளம் பதம் இயற்றும் நாள்
முன்னவன் குலப் பகைஞன்—முட்டினுன்—
மின் எயிற்று வாள் அவுணன், வெம்மையான்.

பொ:—அத்தகையோனுகிய வாலி எங்கட்கு அரசனுக இருக்க, இச்சுக்கிரீவன் இளவரசப் பதவியை யேற்று நடத்துகின்ற நாளில், முன்னவனுகிய வாலியின் குலப் பகைவனுகிய மின்னல் போன்று ஒளிவீசும் பற்களையுடைய, வாளேந்திய மாயாவி என்கின்ற ஓரசுரன், கோபவெம்மையுடையவனுய் வந்து எதிர்த்தான்.

கு:—அன்னவன் என்ற சேய்மைச் சுட்டு வாலியையும் இன்னவன் என்ற அண்மைச் சுட்டு சுக்கிரீவனையும் உணர்த்தின. இளம் பதம் என்றது இளவரசப் பதவியை. முன்னவன். வாலி. குலம் சிறப் புணர்த்தியது; குலமணி என்புழிப்போல. பெரும் பகைஞன் என்றவாறு. இனி, வானரக் குலத்திற்கே பகைவன் எனலும் ஆம். பகைஞனுகிய அவுணன், வெம்மையனுய் முட்டினுன் என்க.

முட்டுதல் – எதிர்த்தல். வெம்மை என்றது, சினவெம்மையை. வெம்மையான், முற்றெச்சம். எயிற்றையும் வாளையுமுடைய அவுணன் என்க. வாள் கொடுமையுமாம். (50)

**3938.** முட்டி நின்றவன் முரணு ரத்திேனா
டொட்ட வஞ்சிநெஞ் சுலைய வோடினான்
வட்ட மண்டலத் தரிது வாழ்வெனா
வெட்ட ரும்பெரும் பிலனு ளெய்தினான்.

'முட்டி நின்றவன் முரண் உரத்தினோடு
ஒட்ட, அஞ்சி, நெஞ்சு உலைய ஓடினான்;
"வட்ட மண் தலத்து அரிது வாழ்வு" எனா,
எட்டரும் பெரும் பிலனுள் எய்தினான்.'

பொ :—அவ்வாறு, வாலியோடு எதிர்த்து நின்றவனாகிய மாயாவி, தன் வலிமை வாலியின் வலிமையோடு ஒட்டிக்கொள்ள (அதை அறிந்து) அஞ்சி நெஞ்சு நடுங்கத் தப்பி ஓடினான்; பின் 'இவ் வட்டமான பூமியில் யாண்டிருப்பினும் உயிர் வாழ்தல் அரிது' என்று எண்ணி எவரும் நெருங்க முடியாத பெரிய பிலத்துவாரத்துள் புகுந்தான்.

கு :—நின்றவன், ஓடினான்; பின் பிலனுள் எய்தினான் என இயையும். முரண், உரன் - வலிமை. பெருவலியுடைய மாயாவி வாலியை யெதிர்த்தபோது தன் வலிமை குன்றுவதையும், வாலியின் வலிமை மிகுவதையும் கண்டானாகலின் புறங்காட்டி ஓடினான் ; பின் பிலத்துள் நுழைந்து ஒளித்தான் என்க. "கிட்டுவார் பொரக்கிடைக்கின் அன்னவர் பட்ட நல்வலம் பாக மெய்துவான்" (40) என முன் கூறி யுள்ளதும் காண்க. முட்டி நின்றவனுடைய முரண் வாலியின் உரத்தினோடு ஒட்ட அஞ்சி என ஒரு சொல் வருவித்து, எதிர்த்து நின்ற மாயாவியின் வலிமை, வாலியின் வலிமையோடு சேர அஞ்சி எனப் பொருள் கொள்ள வேண்டும். உலைதல் – நடுங்குதல். மண்தலத்து யாண்டு ஒளிப்பினும் வாலி விடாது பின் சென்று அடுவானாகலின் 'வட்டமண்தலத்து அரிது வாழ்வு' என எண்ணிப் பிலத்துள் நுழைந்து ஒளித்துக் கொண்டான் என்க. எட்டுதல் - நெருங்குதல்; கிட்டுதல். மாயாவி நுழைந்த பிலத்தின் அருமை பெருமை புலப்பட 'எட்டரும் பெரும்பிலன்' என்றான். பிலம் என்றது பூமிக்குள் செல்லும் சுரங்க வழியை. அது இருள் நிறைந்ததாய் நெடிதாகச் செல்லுதலின் யாரும் எட்டுதற்கரிதாயிற்று. (51)

3939. எய்து காலையப் பிலனு ளெய்தியான்
நொய்தி னங்கவற் கொணர்வெ னோன்மையாய்
செய்தி காவனீ சிறிது போழ்தென
வெய்தி னெய்தினன் வெகுளி மேயினன்.

'எய்து காலை, "அப்பிலனுள் எய்தி, யான்
நொய்தின் அங்கு அவன் கொணர்வென் ;—நோன்மையாய்!
செய்தி, காவல், நீ, சிறிது போழ்து" என,
வெய்தின் எய்தினன், வெகுளி மேயினன்.'

பொ :—மாயாவி பிலத்துள் நுழைந்தபோது, கோபம் மிக்கவனாகிய வாலி, 'வலிமையுடைய சுக்கிரீவ! யான், அவன் நுழைந்த அப்பிலனுள் நுழைந்து அங்குள்ள அவனை விரைவில் கொணர்வேன்; நீ சிறிது போழ்து இப்பிலத்தைக் காவல் செய்வாயாக' என்று கூறிவிட்டு விரைவாக அப்பிலத்தை அடைந்தான்.

கு :—நொய்து, வெய்து என்பன விரைவுப் பொருள. யான் எய்திக் கொணர்வென் என இயையும். பிலத்தைக் காவல் செய்தற்குத் தகுதியுடையன் என்பது தோன்றச் சுக்கிரீவனை 'நோன்மையாய்' என விளித்தான். பிலத்துள் நுழைந்தவன் ஒருகால் அவ்வாயில் வழியாகத் தப்பியோட முயலலாம் ஆதலின், அப்பிலவாயிலைச் சிறிது போழ்து காவல் செய்யுமாறு சுக்கிரீவனுக்குக் கூறிச் சென்றான் வாலி. விரைந்து பிலத்துள் எய்தியதற்குக் காரணம் புலப்படுப்பானாய், 'வெகுளி மேயினன்' என்றான். இரண்டாம் வேற்றுமைத் தொகையாகலின் இயல்பாக வேண்டிய உயர்திணைப் பெயர், 'அவற் கொணர்வென்' என விகாரமாயிற்று. (52)

3940. ஏகி வாலியும் மிருதொ ரேழொடேழ்
வேக வெம்பிலந் தடவி வெம்மையான்
மோக வென்றிமேன் முயல்வின் வைகிடச்
சோக மெய்தினன் றுணை துளங்கினன்.

"ஏகி வாலியும் இருது ஓர் ஏழொடு ஏழ்
வேக வெம்பிலம் தடவி, வெம்மையான்
மோக வென்றிமேல் முயல்வின் வைகிடச்,
சோகம் எய்தினன், துணை துளங்கினன்."

பொ :—வாலியும் அவ்வாறு சென்று, கொடியவனுகிய மாயாவியை அக்கொடிய பிலத்தில் வேகமாத் தேடி விரும்பத்தக்க வெற்றி மேல் கருத்துடையனுய்ப் போர் முயற்சியில் பதினுன்கு பருவம் கழிக்க, அவன் துணைவனுகிய சுக்கிரீவன் (வாலியிறந்து பட்டானே என்று ஐயுற்றுச்) சோகமெய்தினவனுய் நடுங்கினுன்.

கு :—இருது - பருவம் ; இரண்டு மாதங்களைக் கொண்டது. கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்பவை ஓராண்டில் வரும் ஆறு பருவங்களாம். பதினுன்கு பருவம். எனவே, இருபத்தெட்டு மாதம் பிலத்துள் நின்று வாலி போர் செய்திருக்கின் ருன் என்பது பெறப்படும். வெம்மையானை வெம்பிலத்து வேகமாகத் தடவி முயல்வின் இருதொரேழொடேழ்வைகிட என்க. வெம்மை யான் என்றது கொடியவனுகிய மாயாவியை. தடவுதல் – தேடுதல். மோக வென்றி-விரும்பத்தக்க வெற்றி. வென்றிமேல் கருத்துடைய னுய்ப் போர் முயற்சியில் இருதொரேழொடேழ் கழிக்க என வேண்டுஞ் சொல் வருவிக்க. முயல்வு - முயற்சி. வைகிட - கழிக்க. "வைகலும் வைகல் வரக்கண்டும் அஃதுணரார் வைகலும் வைகலை வைகும் என்று இன்புறுவர்" (நாலடி – 39) என்புழியும் வைகல், 'கழிதல்' என்னும் பொருளதாதல் காணலாம். இனி ஏழொடேழ்காறு முயற்சி யில் தங்கியிருக்க எனப் பொருள் கூறலுமாம். சோகம் என்றது அவலச்சுவையை. துணை என்றது வாலியின் தம்பியாகிய சுக்கிரீ வனை. துளங்குதல் - நடுங்குதல். பிலத்துள் புகுந்து இருபத்தெட்டு மாதங்கள் கழித்தமையால் வாலி இறந்திருப்பானே என்ற ஐயம் சுக்கிரீவனுக்கு உளதாயிற்று. (53)

3941. அழுத ழுங்குறும் மிவனை யன்பினில்
தொழுதி ரந்துநின் றொழிலி தாகலா
லெழுது வென்றியா யரசு செய்கெனப்
பழுதி தென்றனன் பரியு நெஞ்சினுன்.

'அழுது அழுங்குறும் இவனை, அன்பினில்
தொழுது இரந்து, "நின் தொழில் இது ; ஆதலால்,
எழுது வென்றியாய் ! அரசு செய்க" எனப்
'பழுது இது' என்றனன், பரியும் நெஞ்சினுன்.'

பொ :—அழுது வருந்துகின்ற இச்சுக்கிரீவனை நாங்கள் அன்பி னுல் வணங்கி வேண்டி, "நூல்களில் எழுதத்தக்க வெற்றியை யுடைய சுக்கிரீவ ! இளவரசனுகிய நினக்குரிய தொழில் இவ்வரசு செய்தலே ஆதலின், வாலிக்குரிய அரசாட்சியை அவனிளவலாகிய

நீ செய்க" என்று கூற, வாலியின் பிரிவால் வருந்துகின்ற நெஞ்சினையுடைய சுக்கிரீவன், வாலிக்குரிய அரசை யான் செய்தல் குற்றமாகும் என்று மறுத்துக் கூறினன்.

கு :—இரத்தல், வேண்டுதல் என்னும் பொருளது. இளவரசனே அரசனுக்குப் பின் அரசாள வேண்டும் என்ற முறைமை கருதி 'நின் தொழிலிதாகலால்' என்றனர். வெற்றித் தூண்களில் எழுதத்தக்க வென்றி எனலுமாம். 'அரசு செய்க' என்றது, நீ அரசனாய் அரசாளுக என்றவாறு. இது பழுது என மாறுக. என் அண்ணனுக்குரிய அரசாட்சியை யான் மேற்கொள்ளுதல் குற்றமாகும் என்றபடி. பரிதல் – வருந்துதல்; இரங்குதல். இதனால் சுக்கிரீவனுக்கு அரசு புரியும் விருப்பமின்மை புலப்படுத்தியவாறு. (54)

**3942.** என்று தானுமவ் வழியி ரும்பிலம்
சென்று முன்னவற் றேடு வேனவற்
கொன்று ளான்றனைக் கொல்வெ னன்றெனிற்
பொன்று வேனெனப் புகுதன் மேயினன்.

'என்று, தானும், "அவ்வழி இரும் பிலம்
சென்று, முன்னவன்—தேடுவேன்; அவற்
கொன்றுளான் தனைக் கொல்வென்; அன்று எனின்,
பொன்று வேன்" எனப், புகுதல் மேயினன்.'

பொ :—என்று கூறிவிட்டுச் சுக்கிரீவனும் "அப்பெரிய பில வழியில் சென்று என் அண்ணனைத் தேடுவேன்; (அவன் கொலையுண்டிருந்தால்) அவனைக் கொன்றவனாகிய மாயாவியைப் போரில் கொல்வேன். கொல்ல இயலாதாயின், அவனால் இறப்பேன்" என்று அப்பிலத்தில் நுழையத் தொடங்கினன்.

கு :—அவ்விரும்பிலவழி என இயையும். முன்னவன் என்றது வாலியை. 'அவற்கொன்றுளான்றனை' எனப் பின்வருதலின் 'அவன் கொலையுண்டிருந்தால்' என்ற ஏது வருவிக்கப்பட்டது. தன் அண்ணனைக் கொன்றவனைக் கொல்ல இயலுமாயின் கொல்வது, இயலாதாயின் அம்மாயாவியால் தானும் இறப்பது என்ற உறுதியுடன் சுக்கிரீவன் பிலத்துள் நுழையத் தொடங்கினன் என்று சுக்கிரீவன் வாலிபால் கொண்ட அன்பினை எடுத்துக் காட்டியவாறு. அவற் கொன்றுளான் என உயர்திணையீறு இரண்டாம் வேற்றுமைத் தொகையாதலின் விகாரமுற்றது. (55)

3943. தடுத்து வல்லவா தணிவு செய்துநோய்
கெடுத்து மேலையோர் கிளத்து நீதியால்
அடுத்த காவலு மரிக ளாணையால்
கொடுத்த துண்டிவன் கொண்ட னன்கொலாம்.

தடுத்து வல்லவா தணிவு செய்து நோய்
கெடுத்து, மேலையோர் கிளத்து நீதியால்
அடுத்த காவலும், அரிகள் ஆணையால்
கொடுத்தது உண்டு; இவன் கொண்டனன் கொலாம்?

பொ :—அவ்வாறு புகுகின்ற சுக்கிரீவனைப் புகவொட்டாமல் வானரங்கள் தடுத்து அவன் கோபத்தை வல்லவாறு தணிவித்து, மேலோர்கள் கூறியுள்ள நீதி வாக்கியங்களால், வாலியின் பிரிவுக்கு வருந்தும் சுக்கிரீவன் மனநோயைத் தணித்து, இளவரசுக்கு அடுத்து வரத்தக்க அரசையும் வற்புறுத்தலால் கொடுத்தது உண்டு; ஆயின் இவன் விரும்பிக் கைக்கொண்டானோ? இல்லை.

கு:—பிலம்புகாமல் தடுத்து எனவும் கோபத்தைத் தணிவு செய்து எனவும் வருவித்து முடிக்க. நோய் என்றது, அண்ணன் கொல்லப் பட்டானோ என்ற ஐயத்தால் உளதாகிய மனத்துன்பத்தை. மேலையோர் கிளத்து நீதி என்றது, 'வீயாது உடம்பொடு நின்ற உயிரு மில்லை' என்றாற் போன்று நிலையாமையை யுணர்த்தும் நீதிகளை. இளவரசுக்கு அடுத்து வரக்கூடிய அரசு என்பான், அடுத்த காவலும் என்றான். அரிகள், தடுத்து, தணிவு செய்து, நோய் கெடுத்துக் காவலும் கொடுத்ததுண்டு என இயையும். அரிகள் என்றது இங்கு அமைச்சராகிய அரிகளையேயாம்; அமைச்சர்களின் ஆணை கடக்க இயலாமல் வெறுப்புடன் ஏற்றுக்கொண்டதே யன்றிச் சுக்கிரீவன் விரும்பியேற்றுக் கொள்ளவில்லை எனச் சுக்கிரீவன்பால் தவறின்மை காட்டியவாறு. சுக்கிரீவனே விரும்பிக் கொண்டதாக வாலி நினைத்துச் சினந்து துன்புறுத்தினான் ஆதலின், அதை யுளங் கொண்டு 'இவன் கொண்டனன் கொலாம்' என வினா வாய்பாட் டாற் கூறினான். இவன் கொண்டதில்லை என்பதே கருத்து. வல்ல வாறு என்பது வல்லவா என ஈறுகெட்டது. (56)

3944. அன்ன நாளின்மா யாவி யப்பிலத்
தின்ன வாயிலூ டெய்து மென்னயாம்
பொன்னின் மால்வரைப் பொருப்பொ ழித்துவே
றுன்னு குன்றெலா முடன டுக்கினோம்.

'அன்ன நாளில், மாயாவி, அப்பிலத்து,
இன்ன வாயிலூடு எய்தும் என்ன, யாம்,
பொன்னின் மால்வரைப் பொருப்பு ஒழித்து, வேறு
உன்னு குன்று எலாம் உடன் அடுக்கினேம்.'

பொ :—சுக்கிரீவன் அமைச்சர்களின் ஆணையின்படி அரசேற்றுக் கொண்ட அந்த நாளில் (வாலியைக் கொன்ற) மாயாவி அந்தப் பிலத்தின் இவ்வாயில் வழியாக இங்கு வருவான் என்று அஞ்சி, நாங்கள் பொன்னலாய மேரு மலையாகிய மலையைமட்டும் விடுத்து, அதற்கு வேருக எண்ணப்படுகின்ற குன்றுகளை யெல்லாம் கொண்டு வந்து அப்பில வாயிலில் ஒன்றின்மேல் ஒன்ருய் அடுக்கினேம்.

கு :—வாலியைக் கொன்ற மாயாவி; சுக்கிரீவனையும் கொல்ல இவ்வாயிலூடே வருவான் என அச்சத்தால் எண்ணி அவன் வாரா வண்ணம் குன்றுகளால் அப்பில வாயிலை அடைத்து விட்டோம் என வாயிலடைத்ததற்குரிய காரணங் கூறியவாறு. வாலி, தான் வாராமல் இருக்க வேண்டியடைத்ததாகச் குற்றம் சார்த்தினன் ஆகலின், இது கூற வேண்டியதாயிற்று. மாயாவி என்பவன் இராவணன் மனைவியாகிய மண்டோதரியின் உடன் பிறந்தவன். மேருமலை நீங்கலாக மற்ற எல்லா மலைகளையும் அடுக்கியதாகக் கூறியது உயர்வு நவிற்சி யணியின் பாற்படும். (57)

**3945.** சேம மவ்வழிச் செய்து செங்கதிர்க்
கோம கன்றனைக் கொண்டு வந்தியாம்
மேவு குன்றின்மேல் வைகும் வேலைவா
யாவி யுண்டன னவனை யன்னவன்.

'சேமம் அவ்வழிச் செய்து, செங்கதிர்க்
கோமகன் தனைக் கொண்டு வந்து, யாம்
மேவு குன்றின்மேல் வைகும் வேலை வாய்,
ஆவி உண்டனன் அவனை, அன்னவன்.'

பொ :—அந்தப் பிலவழியைக் குன்றுகளால் அடைத்துப் பாது காப்புச் செய்துவிட்டுச் சிவந்த கதிர்களையுடைய சூரியன் மகனுகிய சுக்கிரீவனை அழைத்துக் கொண்டு வந்து நாங்கள் முன் வாழ்ந்து வந்த கிட்கிந்த மலைமேல் தங்கியிருந்த அமையத்தில் அவ்வாலி அந்த மாயாவியைக் கொன்ருன்.

கு :—சேமம் - காவல். செங்கதிர்க்கோ என்றது சூரியனை. குன்று என்றது கிட்கிந்த மலையை. சுக்கிரீவனை அரசனுக்கிக் கிட்கிந்த

மலையில் தங்கியிருந்தபோது வாலி மாயாவியை வென்றான் என்றபடி. கொன்றான் என்பதையே ஆவியையுண்டதாகக் கூறினான். உண்ணு மரபின் உணக்கூறிய இலக்கணை வழக்கு. வேலை – வேளை; மேவு குன்று என்றது, முன் வாழ்ந்த இடத்திலேயே வாழ்ந்தோம்; புதுவதாக வேறிடம்புகும் குற்றமும் செய்யவில்லை என்றவாறு. (58)

3946. ஒளித்த வன்னுயிர்க் கள்ளை யுண்டுளம்
களித்த வாலியுங் கடிதி னெய்தினான்
விளித்து நின்றுவே றுரைபெ றானிருந்
தளித்த வாறுநன் றிளவ லாரெனா.

'ஒளித்தவன் உயிர்க் கள்ளை உண்டு,
களித்த வாலியும், கடிதின் எய்தினான்;
விளித்து நின்று, வேறு உரை பெறான்; "இருந்து
அளித்த வாறு நன்று, இளவலார்!" எனா.'

பொ:—பிலத்தில் புகுந்து ஒளித்தவனாகிய மாயாவியின் உயிராகிய கள்ளை உண்டு களிப்பு எய்திய வாலியும் விரைவாகப் பில வாயிலை அடைந்தான். சுக்கிரீவனை அழைத்து நெடிதுநேரம் நின்று பார்த்தும் அடைப்புக்கு அப்புறமிருந்து வேறு எதிர்மொழியைப் பெறாதவனாய் 'இளவல் இப்பிலவாயிலிருந்து காத்த விதம் நன்று' என்று வெகுண்டு.

கு:—கள், உண்டார்க்குக் களிப்பைக் யுண்டாக்குதல் போலப் பகையைக் கொன்ற வெற்றியும் களிப்பைத் தருதலால் மாயாவியின் உயிரைக் கள்ளாக உருவகஞ் செய்தான். அவனுயிரையுண்ட வாலியும் களித்ததாகக் கூறினான். வாயிலடைபட்டது எக்காரணத்தால் என்பதை யுய்த்துணராது மயங்கி யுணர்ந்து வெகுண்டமைக்குக் காரணம் அக்களிப்பே என்பது புலப்படுத்தியவாறு. இளவலார் என்றது, தாம் வந்தார் தொண்டனார் என்புழிப்போல இகழ்ச்சிக்கண் பலர்பாலாக வந்தது. 'நன்று' என்பதும், நன்றன்று என்ற குறிப்பையே யுணர்த்தியது. கற்கறித்து, 'நன்கட்டாய்' என்புழிப்போல. அளித்தவாறு என்றது, பிலத்தைக் காத்திருந்த வாறு என்றபடி. 'செய்தி காவல் நீ சிறிது போழ்து' என்று வாலி பணித்த பணியை மேற்கொண்டு அங்குக் காத்திருத்தலே சுக்கிரீவன் பணியாயிருக்க, அவ்வாயிலைக் காவாமையே யன்றித் தான் மீண்டு வாராதபடி குன்றுகளால் அடைத்தலும் செய்து அரசையும் கைப்பற்றியது அடாதசெயல் என்பான், 'இளவலார் இருந்து அளித்த வாறு நன்று' என்று இகழ்ச்சிக் குறிப்பாற் கூறினான். (59)

3947. வால்வி சைத்துவான் வளிநி மிர்ந்தெனக்
காலவி சைத்தவன் கடிதி னெற்றலும்
நீல்நி றத்துவிண் நெடுமு கட்டவும்
வேலை புக்கவும் பெரிய வெற்பெலாம்.

'வால் விசைத்து, வான்வளி நிமிர்ந்தெனக்
கால் விசைத்து, அவன் கடிதின் எற்றலும்,
நீல் நிறத்து விண் நெடு முகட்டவும்,
வேலை புக்கவும், பெரிய வெற்பு எலாம்.'

பொ :—அவ்வாலி தன் வாலை விரைவாக உயர்த்திக் கொண்டு வானின்கண் காற்று ஓங்கி வீசியதுபோலத் தன் காலை வீசிக் கடுமையாக உதைத்த அளவில், (பிலத்தை அடைத்திருந்த) பெரிய மலைகள் எல்லாம் நீல நிறத்தையுடைய ஆகாயத்தின் நெடிய உச்சியில் சென்றனவும் கடலில் புகுந்தனவும் ஆயின.

கு:—ஆயின என்ற பயனிலை வருவிக்கப்பட்டது. விசை - வேகம். 'வருவிசைப் புனலைக் கற்சிறை போல' (தொல். பொ. 63) என்றது காண்க. விசை என்ற பெயரடியாக விசைத்து என்ற வினையெச்சம் பிறந்தது. வளி - காற்று. 'வான்வழங்கியற்கை வளி பூட்டினையோ' (அகநா - 1) என்புழிக் காற்று ஆகாயத்தில் இயங்கும் இயல் பினது என்று கூறியிருத்தல் நினைந்து 'வான் வளி நிமிர்ந்தென' என்று கூறினர். வாலி காலை வீசியது, பெருங்காற்று வானில் ஓங்கி வீசியது போல இருந்தது என்றபடி. கால் விசைத்து - காலை வீசி; 'கால் விசைத்தோடிக் கடல்புகமண்டி' (திருவாசக. 2; 135) என்றதும் காண்க. குரங்கு சினந்து ஒன்றைத் தாக்குங்கால் வாலை உயரத் தூக்குதல் இயல்பு. அவ்வியல்பு புலப்பட 'வால் விசைத்து' என்றான். கடிதின் – கடுமையாக. 'கால் விசைத்து' என்றுமுன் கூறியதால் எற்றுதல் இங்கு உதைத்தலை உணர்த்தியது. நீலம் நீல் எனக் குறைந்து நின்றது. விண்ணின் தோற்றம் நீலமா யிருத்தல் பற்றி இங்ஙனம் கூறினர். வாலியா லுதைக்கப்பட்ட மலைகள் உயர்ந்து சென்றவை விண்ணின் முகடுவரையில் சென்றன. அவன் உதையால் தாழச் சென்றவை கடலில் புக்கன என்க. முகட்ட, அகரவீற்றுக் குறிப்பு வினைமுற்று. (60)

3948. ஏறி னானவன் னெவரு மஞ்சுறச்
சீறி னானெடுஞ் சிகர மெய்தினான்
வேறி லாதவன் புதவ மெய்ம்மையால்
ஆறி னானும்வந் தடிவ ணங்கினான்.

'ஏறினன் அவன்; எவரும் அஞ்சுறச்
சீறினன், நெடுஞ் சிகரம் எய்தினன்;
வேறு இலாத அன்பு உதவ, மெய்ம்மையால்
ஆறினனும் வந்து அடி வணங்கினன்.'

பொ :—அவ்வாலி பிலத்திலிருந்து ஏறினன்; பின் எத்தகையோரும் அச்சம் அடையுமாறு வெகுண்டவனாய்க் கிட்கிந்த மலையின் உயர்ந்த சிகரத்தை அடைந்தான்; தான் அவன் என்ற வேறுபாடில்லாத தன் அன்பு துணையாக, உண்மையாகவே (எதிர் வெகுளாது) ஆறினவனாகிய சுக்கிரீவன் வந்து அவ்வாலியின் பாதங்களை வணங்கினன்.

கு :—பிலம் தரைக்குக் கீழ்ச் செல்வதாகலின், அதினின்று தரைக்கு வந்ததையே ஏறினதாகக் கூறினன். சீறினனாய் எய்தினன் என முற்றெச்சமாக்கி முடிக்க. எவருமஞ்சுறச் சீறின வாலிக்கு எதிராகச் சுக்கிரீவனும் சீருது ஆறிவந்து அடிபணிந்தமைக்குக் காரணம் கூறுவாராய், 'வேறிலாத அன்பு உதவ' என்றார். உதவுதல் துணையாதல். அவ்வாலியின் சீற்றங் கண்டபோது சுக்கிரீவனுக்கு வந்த சீற்றம், வேறிலாத அவன் அன்பு துணையாக ஆறியது என்றவாறு. எத்துணை வெகுளினும் தன்னுடன் பிறந்தவன் அன்றோ? என்று எண்ணுதற்குக் காரணமான அன்பையே 'வேறிலாத அன்பு' என்றான். வேறிலாமையாவது, வாலியும் சுக்கிரீவனும் உள்ளத்தால் ஒருவரே எனலாம்படி ஒன்றினராதல். சினம் ஆறினதுபோல் வஞ்சகத்தால் நடிக்கவில்லை என்பது தோன்ற, 'மெய்ம்மையால் ஆறினனும்' என்றான். ஆறுதல் - சினம் தணிதல். சீறினவன் சிறுமையும், ஆறினவன் பெருமையும் புலப்படுத்தியவாறு. (61)

3949. வணங்கி யண்ண நின் வரவி லாமையா
லுணங்கி யுன்வழிப் படர வுன்னுவேற்
கிணங்க ரின்மையா லிறைவ நும்முடைக்
கணங்கள் காவலுன் கடன்மை யென்றனர்.

'வணங்கி. "அண்ண! நின் வரவு இலாமையால்,
உணங்கி, உன்வழிப் படர உன்னு வேற்கு,
இணங்கர் இன்மையால், இறைவ! நும்முடைக்
கணங்கள், 'காவல், உன் கடன்மை" என்றனர்.'

பொ :—அவ்வாறு வணங்கி, அண்ணா! அரசே! நெடுங்காலம் வரை நின் வரவு இல்லாமையால், மனம் வாடி, உன்பின் பிலவழிவர

எண்ணிய எனக்கு, நும் அமைச்சராகிய கணங்கள் இணங்காமை யோடு "எங்களைக் காவல் செய்வது உன் கடமையாகும்" என்றும் வற்புறுத்தினர்.

கு :—உறவு தோன்ற அண்ண! என்றும், பதவி நோக்கி இறைவ! என்றும் விளித்தான். இருபத்தெட்டு மாதம் வரை வராமையால் இங்ஙனம் எண்ணலாயிற்று என்றவாறு. உணங்குதல் - வாடுதல். உன்வழி என்றது, வாலி சென்ற பிலவழியை. படர்தல் - வருதல். நும்முடைக்கணங்கள் என்றது, வாலியின் அமைச்சராயுள்ள வானர கணங்களை. நும் அமைச்சர் சொன்னது நின் சொல்லொடொக்கும் என எண்ணினேன் என்பான், 'நும்முடைக் கணங்கள்' என்றான். இணங்கல் – உடன்படல். சாம்பல், சாம்பர் ஆனது போல ரகரம் போலியாக வந்தது. இன்மையால் என்புழி மூன்றனுருபு உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது; 'தூங்குகையா னோங்குநடைய' என்புழிப்போல, காவல் என்றது, அரசு செய்தலை யுணர்த்தியது; அரசனுக்குக் காவலன் என்ற பெயருண்மை, 'காவலன் காவா னெனின்' (குறள்-560) என்பதால் அறியலாம். கடன்மை என்றது, தவறாது செய்யத் தக்கது என்னும் பொருளது. இது, சுக்கிரீவன் கூற்றை அனுமன் வாங்கிக் கூறியது. அடுத்த செய்யுளில் 'பொறாய்' என்பதன் காறும் அவ்வாறேயாம். இறைவ என்பதைச் சுக்கிரீவனை நோக்கிய விளியாகக் கொண்டு என்றனர் என்பதற்கு 'அமைச்சர்' என்ற எழுவாய் வருவித்துரைத்தலும் ஆம். இறைவ! நும்முடை என்பது வழுவமைதி; ஒருமை பன்மை மயக்கம். (62)

3950. ஆணை யஞ்சியிவ் வரசை யெய்திவாழ்
நாணி லாதவென் னவையை நல்குவாய்
பூணு லாவுதோ ளிறைபொ றாயெனக்
கோணி னனெடுங் கொடுமை கூறினன்.

'"ஆணை அஞ்சி, இவ் அரசை எய்தி வாழ்
நாண் இலாத என் நவையை, நல்குவாய்
பூண் உலாவு தோள் இறை! பொறாய்!" எனக்,
கோணினன், நெடுங் கொடுமை கூறினன்.'

பொ :—வீரவளை முதலிய அணிகலன்கள் உலாவுகின்ற தோள் களையுடைய அரசே! நின்னுடைய அமைச்சர்களின் கட்டளைக்குப் பயந்து இந்த அரசாட்சியை மேற்கொண்டு வாழ்ந்த, நாணமில்லாத வனாகிய எனது குற்றத்தைப் பொறுப்பாயாக! எனக்கு உய்தி நல்கு வாயாக! என்று சுக்கிரீவன் இரந்து வேண்டவும், மனம் மாறுபட்ட

வணுகிய வாலி, அவன்மேல் பெரிய கொடுமையான குறறம் சார்த்திக் கூறினுன்.

கு :—என் நவையைப் பொருய்; நல்குவாய் என இயையும். உய்தி நல்குவாய் எனச் செயப்படு பொருள் வருவிக்க. நாணமாவது பழி பாவங்களில் மனம் பின் வாங்குதல்; பழிக்கும் பாவத்திற்கும் காரணமாய் அண்ணனுக்குரிய அரசை விரும்பியவனுதலின், 'நாணி லாத வென்' என்ருன். நவையாவது சிறிது காலம் வாலிக்குரிய அரசையாண்டது. 'அரசை யெய்தி வாழ் நவை' என இயையும். நவை - குற்றம். கோணுதலாவது மனம் மாறுபடுதல். நெடுங் கொடுமையாவது, தன்னை வராமற் செய்து அரசைக் கைப்பற்ற விரும்பினுன் என்ற குற்றச் சார்த்து.

இனி, 'தோள் இறைபொருய்' என்பதற்கு தோளில் இறை மையை - அரசைத் தாங்கிக் கொள் என்று பொருள் கூறினும் ஆம். அவ்வாறு பொருள் கொள்ளுங்கால் 'நவையை நல்குவாய்' என்ப தற்குக் 'குற்றத்தைப் பொறுத்தருள்வாயாக' எனப் பொருள் கொள்ள வேண்டும். (63)

3951. அடல்க டந்ததோ ளவனை யஞ்சிவெங்
குடல்க லங்கியெங் குலமொ டுங்கமுன்
கடல்க டைந்தவக் கரத லங்களா
லுடல்க டைந்தன னிவனு லைந்தனன்.

'அடல் கடந்த தோள் அவனை அஞ்சி, வெங்
குடல் கலங்கி, எம் குலம் ஒடுங்க, முன்
கடல் கடைந்த அக் கரதலங்களால்,
உடல் கடைந்தனன்; இவன் உலைந்தனன்.'

பொ :—பகைவரின் வலிமையையெல்லாம் அடக்கி வெற்றி கொண்ட தோள்களையுடைய வாலிக்குப் பயந்து எம் வானர இன முழுமையும் கொடிய குடல்கலங்கி, மறைவான இடங்களில் ஒடுங்கா நிற்க, முன் திருப்பாற்கடல் கடைந்த அக் கொடிய கைகளால் சுக்கி ரீவனுடைய உடலைத் தாக்கிக் கலக்கினுன்; ஆதலால் சுக்கிரீவன் தோற்றுப்போனுன்.

கு :—அடல் - வலிமை. கடத்தல் - வெல்லுதல். அச்சமிகுதி யால் மனமேயன்றிக் குடலும் கலங்கியது என்றவாறு. யார்க்கு என்ன நிகழுமோ என அறிதல் கூடாமையின் வாலியின் சினத் திற்குக் குரக்கின முழுமையும் அஞ்சிக் கலங்குவனவாயின. வாலியின்

கடல் கடைந்த கைகட்குச் சுக்கிரீவன் உடம்பைக் கலக்குதல் மிக எளிது என்பது தோன்றக் 'கடல் கடைந்த கைகளால் உடல் கடைந்தனன்' என்ருன். உடல் கடைதலாவது உடம்பைத் தாக்கிக் குருதி கலங்குமாறு செய்தல். உலேதல் - தோற்றுப்போதல். அண்மையிலுள்ள சுக்கிரீவனேக் குறிக்கின்ருஞதலின் 'இவன்' என அண்மைச் சுட்டால் கூறினுன். முன் கொடுமை கூறியதேயன்றி வெகுண்டு சுக்கிரீவன் உடலேக் கடைதலும் செய்தான் என்றவாறு. (64)

இச் செய்யுளுக்குப்பின் சில சுவடிகளில் :

3951 (a) இவனு லேந்துலேந் தெழுக டற்புறத்
தவனி யுங்கடந் தெயில டைந்தனன்
கவன மொன்றிலான் கால்க டாயென
அவனி வேலேயேழ் அரியின் வாவினுன்.

3951 (b) என்று கான் மக னியம்ப வீசனும்
நன்று நன்றெனு நனி தொடர்ந்துபின்
சென்ற வாலிமுன் சென்ற செம்மருன்
அன்று வாவுதற் கறிந்த னன்கொலாம்.

3951 (c) இனேய வாவியந் திளவ றன்னெடும்
வனேயும் வார்கழற் கருணே வள்ளல்பின்
பினேய வீரர்செய் தமையி யம்பெனப்
புனேயும் வாகையான் புகறன் மேயினுன்.

3951 (d) நக்க ரக்கடற் புறத்து நண்ணுநாள்
செக்கர் மெய்த்தனிச் சோதி சேர்கலாச்
சக்க ரப்பொருப் பிற்ற லேக்குமப்
பக்க முற்றவன் கடிது பற்றினுன்.

என்ற நான்கு செய்யுட்கள் காணப்படுகின்றன. இவற்றின் நடையாலும் பொருள் பொருத்தமின்மையாலும், கதைத் தொடர்பிற்கு வேண்டியவை யன்மையாலும், இவை இடைச் செருகல் என்றே கொள்ளத்தகும். பழைய சிறந்த ஏடுகள் சிலவற்றில் இந்நான்கு செய்யுளும் இல்லே என்பதையும் நினேதல் வேண்டும்.

**3952.** பற்றி யஞ்சலன் பழியை வெஞ்சினம்
முற்றி நின்றதன் முரண்வ லிக்கையா
லெற்று வானெடுத் தெழுதலும் பிழைத்
தற்ற மொன்றுபெற் றிவன கன்றனன்.

'பற்றி, அஞ்சலன் பழியை, வெஞ்சினம்
முற்றி நின்றதன் முரண் வலிக் கையால்,
எற்றுவான் எடுத்து எழுதலும், பிழைத்து,
அற்றம் ஒன்று பெற்று, இவன், அகன்றனன்.'

பொ :—(அவ்வாறு தோற்றவனிடம் மீண்டும் போர் செய்தலால் வரும்) பழிக்கு அஞ்சாதவனாய், வாலி அச்சுக்கிரீவனைப் பற்றிக் கடுங் கோபம் முற்றிநின்ற தன்னுடைய மிக்க வலிமையுடைய கையால் தாக்குதற்காக அக்கையை மேல் ஓக்கி எழுதலும், இடையீடு சிறிது பெற்றுத் தப்பித்து இச்சுக்கிரீவன் அவ்விடத்தைவிட்டு அகன்று ஓடினான்.

கு :—அழியுநர் புறக்கொடை யயில்வாளோச்சாக் கழிதறுகண் மைக்கு மாறாகத் தனக்குத் தோற்றவனை மீண்டும் வாலி பற்றியது சான்றோரால் பழிக்கப்படுவதாகலின் 'பழியை யஞ்சலன் பற்றி' என்றான். அஞ்சலனாய் என முற்றெச்சமாக்குக. சினம் முற்றியதற் கேற்ப உடம்பில் ஆற்றலும் மிகும் ஆதலின் 'முரண்வலிக்கை' என மீமிசைச் சொல்லால் கூறினான். எற்றுதல் - தாக்குதல்; மோதுதல். எடுத்து எழுதலும் என்றது, சுக்கிரீவனைத் தாக்குதற்காகக் கையை மேலுயர்த்திக்கொண்டு நிமிர்ந்து எழுந்த அளவில் என்றவாறு. அற்றம் ஒன்று பெற்றுப் பிழைத்து என மாறுக. தாக்குதற்காகக் கையை மேலேயுயர்த்திய சிறிது போழ்தினையே அற்றம் ஒன்று பெற்றதாகக் கூறினான். ஒன்று என்பது சிறிது என்னும் பொருளது. பொருதகர் தாக்கற்குப் பேர்தல்போல வாலி சுக்கிரீவனை எற்றுதற் காகக் கையையுயர்த்திச் சிறிது பெயர்ந்தெழுந்த நிலையில் சுக்கிரீவன் தப்பி ஓடினான் என்றவாறு. (65)

3953. எந்தை மற்றவன் னெயிற துக்குமே
லந்த கற்குமோ ரரண மில்லையா
லிந்த வெற்பின்வந் திவனி ருந்தனன்
முந்தை யுற்றதோர் சாப முண்மையால்.

எந்தை! மற்று அவன் எயிறு அதுக்குமேல்,
அந்தகற்கும் ஓர் அரணம் இல்லையால்;
இந்த வெற்பின்வந்து இவன் இருந்தனன்—
முந்தை உற்றது ஓர் சாபம் உண்மையால்.

பொ :—எம் ஐயா! அவ்வாலி கோபித்துப் பல்லைக் கடிப்பா னாயின் எல்லா உயிரையும் கவர்கின்ற எமனுக்கும் இவ்வுலகில் ஒரு

பாதுகாப்புள்ள இடம் இல்லை; ஆயினும், முற்காலத்து மதங்கமுனிவரால் கொடுக்கப்பெற்ற ஒரு சாபம் இருத்தலால், இந்த ருசியமூகம் என்னும் மலையில் வந்து இச்சுக்கிரீவன் இருந்தான்.

கு :—எயிறு அதுக்குதல் - பற்களைக் கடித்தல்; அது சினத்திற்கு அறிகுறியாதலின், 'கோபிப்பானுயின்' என்று சொல்லவேண்டிய இடத்தில் 'எயிறதுக்குமேல்' என்று கூறினன். காரியத்தால் காரணத்தை யுணர்த்தியவாறு. எவ்வுயிரையும் எமன் கவர்வதன்றி எமனது உரைக் கவர்வார் பிறர் இன்மையின் அந்தகற்கும் என உயர்வு சிறப்பும்மை கொடுத்தான். "கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கு மாற்றலதுவே படை" (குறள் - 765) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். வாலி கோபித்தால் தப்பியுய்தற்குரிய இடம் யார்க்கும் இல்லை என்றவாறு. ஆயினும் இம்மலைக்கு வந்தால் வாலி இறந்துபடுவான் என்று மதங்கமுனிவர் முன் சாபம் கொடுத்திருந்தார்; அதனல், சுக்கிரீவன் இம்மலையை அரணுகக்கொண்டு வாழ்கின்ருன் என்றவாறு. அரணம் - பாதுகாப்பான இடம். அந்தகன் - உயிர்களுக்கு இறுதியைச் செய்கின்றவன். ருசியமூக மலையிலிருந்து பேசுகின்ருர்களாதலின் 'இந்த வெற்பின்' என்று அண்மைச் சுட்டாற் கூறினன். முந்தை - முற்காலம். "முந்தைத்தான் கேட்டவாறே" (சீவக - 545) என்றதும் காண்க. சாபமுண்மையால் இந்த வெற்பின் வந்து இவனிருந்தனன் என இயையும். (66)

3954. உருமை யென்றிவற் குரிய தாரமா
மரும ருந்தையும் மவன்வி ரும்பினு
னிருமை யுந்துறந் திவனி ருந்தனன்
கரும மிங்கிதெங் கடவு ளென்றனன்.

'உருமை என்று இவற்கு உரிய தாரம் ஆம்
அரு மருந்தையும் அவன் விரும்பினன்;
இருமையும் துறந்து, இவன் இருந்தனன்;
கருமம் இங்கு இது; எம் கடவுள்!' என்றனன்.

பொ:—'உருமை என்று பெயர்பெற்று இச்சுக்கிரீவனுக்கு உரிய மனைவியாய் இருந்த, கிடைத்தற்கு அரிய தேவாமிர்தம் போன்றவளையும் அவ்வாலி விரும்பிக் கவர்ந்தான்; அதனல், இச்சுக்கிரீவன் இம்மை யின்பத்தையும் மறுமை யின்பத்தையும் துறந்து இருந்தான்; எம் தெய்வமே! நடந்த செய்தி இங்குக் கூறிய இதுவேயாகும்' என்று கூறி முடித்தான்.

கு :—ருமை என்ற வடசொல் தமிழ் நெறிப்படி உருமை என ஆயது. 'ரவ்விற்கம் முதலா முக்குறிலும்' (நன்னூல் - சூ. 147) என்பது விதி. வாலி தனக்குரிய அரசாட்சியைக் கவர்ந்ததோடு இவனுக்கு உரிய மனைவியையும் கவர்ந்தான்; என அவ்வாலியின் அடாச்செயலை அறிவித்தவாறு. உருமை, சுக்கிரீவன் மனைவி ; தேவ குருவாகிய வியாழனின் புதல்வனும் வாலி சுக்கிரீவர்க்கு மாமனும் ஆகிய தாரன் என்னும் வானர வீரனுக்கு மகள். மருந்தையும் என் புழி உம்மை, இறந்தது தழுவிய எச்சப்பொருளது. உயர்வு சிறப் பும்மையாகக் கொள்ளவும் இடமுண்டு. மருந்து - வானோர் அமிர்தம்; உவமையாகுபெயராய் உருமையைக் குறித்தது. இருமை என்றது, இம்மை மறுமைகளை; அது ஆகுபெயராய் இருமையினும் பெறும் இன்பத்தை யுணர்த்தி நின்றது. "உரிமை மைந்தரைப் பெறுகின்ற துறுதுயர் நீங்கி, இருமையும் பெறற்கென்பது பெரியவரியற்கை" (146) என முன்னும் 'இருமை' இப்பொருளில் ஆளப்பட்டிருத்தல் காணலாம். மனைவியை யிழந்தமையால், இப்பிறப்பில் அவள்பால் பெறுதற்குரிய ஐம்புல நுகர்ச்சியாகிய இன்பத்தை இழந்ததேயன்றி, அவளோடிருந்து விருந்து புறந்தந்து மறுமைக்கண் வானத்தவர்க்கு நல்விருந்தாய்ச் சென்று ஆங்குப் பெறும் துறக்க இன்பத்தையும் இழக்க நேர்ந்தமையின், 'இருமையுந் துறந்து' என்றான். "செல் விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான் நல்விருந்து வானத் தவர்க்கு" (குறள் - 86) என்றது காண்க. இனி, இருமை என்பது எண்ணின்கண் நின்றதாகக்கொண்டு, அரசாட்சியும் மனையாட்சியும் ஆகிய இரண்டையும் துறந்து எனப் பொருள் கூறலுமாம். கருமம் - செய்தி. "பொருந்து நன்மனைக்குரிய பூவையைப் பிரிந்துளாய் கொலோ நீயும்பின்" (35) என இராமன் வினவியதற்கு விடையாக அனுமன், 'ஒன்று யானுனக் குரைப்பதுண்டு' (36) எனக் கூறத் தொடங்கிய வரலாறு இதனோடு முடிகின்றமையின், 'கருமமிங்கிது கடவுள்' என்று கூறுவானாயினன். (67)

### இராமன் சினம்

3955. பொய்யி லாதவன் வரன்முறை யிம்மொழி புகல
★ வைய னாயிரம் பெயருடை யமரர்க்கு மமரன்
வைய நுங்கிய வாயிதழ் துடித்தது மலர்க்கட்
செய்ய தாமரை யாம்பலம் போதெனச் சிவந்த.

பொய் இலாதவன் வரன்முறை இம்மொழி புகல,
ஐயன், ஆயிரம் பெயருடை அமரர்க்கும் அமரன்,

வையம் நுங்கிய வாய் இதழ் துடித்தது; மலர்க்கண்
செய்ய தாமரை, ஆம்பல் அம் போது எனச் சிவந்த.

பொ :—பொய்மை மொழி புகன்றறியாத அனுமன், வரன்முறையாகச் சுக்கிரீவன் தன் மனைவியைப் பிரிந்த செய்தியாகிய இச் சொல்லைச் சொல்ல, ஆயிரம் திருப்பெயர்களையுடைய தேவதேவன் அமிசமான ஐயனுடைய, உலகமுண்ட வாயின் இதழ் கோபத்தால் துடித்தது ; அவன் கண்ணாகிய சிவந்த தாமரை மலர்கள், கோபத்தால் செவ்வாம்பல் மலர்போல மிகச் சிவந்தன.

கு :—சுக்கிரீவன் மனைவியை வாலி கவர்ந்த செய்தி பிறர்பால் சொல்லத்தகாதது ஆயினும், அதனையும் விடாது கூறியதுபற்றி அனுமனைப் 'பொய்யிலாதவன்' என்று சிறப்பித்தார். அனுமன் பொய் இலாதவன் ஆதலின், அவன் கூறிய இவ்வரலாறும் உண்மையானதே எனத் திருமாலின் அமிசமான இராமன் சினந்தான் எனலும் ஆம். அமரர்க்கும் அமரன் - தேவர்கட்கெல்லாம் தேவன். அமரர்க்கும் அமரன் என்பது ஒரு சொல் நீர்மைத்தாய், 'ஆயிரம் பெயருடை' என்ற அடையை யேற்றது. அமரன் அமிசமான ஐயன் என்க. ஐயன் என்றது, இராமனை. இராமன் வாயை வையநுங்கிய வாய் என்றது, பண்டைப் பரநிலை நினைந்து கூறியதாகும். நில மகளாகிய மனைவியை ஒருவாயில் விழுங்கியும் காக்கவேண்டும் என்னும் காதலுடையவன் ஆகலின், தன் நண்பன் மனைவியைப் பிறன் கவர்ந்தான் என்பதைக் கேட்டபோது அவன் வாயிதழ்கள் கோபத்தால் துடியாமலிருக்குமோ ? என்ற நயந்தோன்ற 'வைய நுங்கிய வாயிதழ்' என்று சிறப்பித்தார். வையநுங்கிய வாயாதலின் வாலியையும் விழுங்கத் துடித்தது எனலுமாம். கட் செய்ய தாமரை மலர் என மாற்றியியைக்க. இனி, செய்ய தாமரை மலர்க்கண் என மாற்றினும் அமையும். தாமரை மலரின் செம்மையினும் செவ்வாம்பல் மலரின் செம்மை மிக்கது ஆகலின், கட் செய்ய தாமரை மலர் 'ஆம்பலம் போதெனச் சிவந்த' என்றார். இயல்பாகவே தாமரை மலர் போலச் சிறிது சிவந்துள்ள இராமன் கண்கள், கோபத்தால் செவ்வாம்பல் மலர்போல மிகச் சிவந்தன என்றவாறு. 'போது' இங்கு, மலர் என்னும் பொருளது. ஆம்பலம்போது என்புழி 'அம்' சாரியை. (68)

இச் செய்யுளின்பின்,

3955 (a) திறத்து மாமறை யயனொ டைம்முகன் பிறர்தேடிப்
புறத்த கத்துண ரரியதன் பொலனடிக் கமலம்
உறச்சி வப்பவித் தரைமிசை யுறலற மாக்கள்
மறத்தை வீட்டுத லன்றியே பிறிதுமற் றுண்டோ.

என்ற பாடல் அச்சுப்புத்தகத்தில் காணப்படுகின்றது; ஏட்டுச் சுவடி களில் காணப்படவில்லை.

கவிக்கூற்று

**3956.** ஈர நீங்கிய சிற்றவை
சொற்றன ளென்ன
வாரம் வீங்குதோட் டம்பிக்குத்
தன்னர சுரிமைப்
பார மீந்தவன் பரிவில
னொருவன்ற னிளையோன்
தாரம் வௌவின னென்றசொற்
றரிக்குமா றுளதோ.

ஈரம் நீங்கிய சிற்றவை சொற்றனள் என்ன,
ஆரம் வீங்குதோள் தம்பிக்குத் தன் அரசுரிமைப்
பாரம் ஈந்தவன், 'பரிவு இலன் ஒருவன், தன் இளையோன்
தாரம் வௌவினன்' என்ற சொல் தரிக்குமாறு உளதோ?

பொ:—அன்பு நீங்கிய சிறிய தாயாகிய கைகேயி சொன்னாள் என்று, முத்தாரம் அணிந்த பருத்த தோளையுடைய தம்பியாகிய பரதனுக்கு, மூத்தவனாகிய தனக்கேயுரிய அரசுரிமையாகிய பாரத்தை அன்புள்ளத்தோடு கொடுத்துவிட்டு வந்தவனான இராமன், அன்பி லாத ஒருவன், தன் தம்பியின் மனைவியைக் கவர்ந்தான் என்ற சொல் லைக் கேட்டுப் பொறுத்திருக்கும் தன்மை யுளதாமோ? (ஆகாது.)

கு:—சிற்றவை – சிறியதாய். ஈரம் - அன்பு. கூனியின் சூழ்ச் சிக்கு முன் கைகேயி இராமன்பால் பேரன்புடையளாகவே இருந் தாள் என்பதை 'இராமனைப் பயந்தவெற் கிடருண்டோ' (1542) என்று அவள் கூனிக்குக் கூறியதாலும் அறியலாம். இராமன்பால் வைத்த அன்பைப் பின் கூனியின் சூழ்ச்சியால் மாற்றினாள் என்ற உண்மை புலப்பட, 'ஈரம் நீங்கிய சிற்றவை' என்றார். ஆரம் - முத் தாரம்; சந்தனம் எனலும் ஆம். மூத்தவற்கு உரித்து அரசு என்ற முறையாலும், தயரதன் வற்புறுத்திக் கொடுத்தமையாலும் அரசு இராமனுக்கே யுரியது ஆனமையின் 'தன்னரசுரிமைப் பாரம்' என்றார். அரசுரிமையைப் பாரம் என்றது, இராமன் கருத்துணர்ந்து கூறியதாகும். "உருளுடைச் சகடம்பூட்ட உடையவன் உய்த்த காரேறு, அருளுடையொருவன் நீக்க அப்பரம் அகன்ற தொத்தான்" (1692) என முன் உவமை கூறி அவன் உள்ளக் கருத்தை விளக்கி

யுள்ளமையும் காண்க. தன்னரசுரிமையையே தம்பிக்குக் கொடுத்து வந்த அருளாளன் தம்பியின் மனைவியை வாலி கவர்ந்தான் என்ற அறத்திற்கு மாறான செயலைப் பொறுப்பானே? என்று வினவி, இராமன் கோபித்தது தக்கதே என வற்புறுத்தியவாறு. கொடுத்தற்குரிய முறையினன் கொடாமையோடு, கொள்ளற்குரியதல்லாத உரிமையையும் கவர்ந்து கொண்டது பொறுத்தற்கரிய பெருங்குற்றம் என்பது விளக்கியவாறு. பரிவு–அன்பு. ஒருவன் என்றது வாலியை. தரித்தல் – பொறுத்தல். (69)

**3957.** உலக மேழினோ டேழும்வந்
தவனுயிர்க் குதவி
விலகு மென்னினும் வில்லிடை
வாளியின் வீட்டித்
தலைமை யோடுநின் றாரமு
முனக்கின்று தருவேன்
புலமை யோயவ னுறைவிடங்
காட்டென்று புகன்றான்.

‘உலகம் ஏழினோடு ஏழும் வந்து அவன் உயிர்க்கு உதவி
விலகும் என்னினும், வில்லிடை வாளியின் வீட்டித்,
தலைமையோடு, நின்தாரமும், உனக்கு இன்று தருவேன்;
புலமையோய்! அவன் உறைவிடம் காட்டு’ என்று புகன்றான்.

பொ:—‘பதினான்கு உலகங்களும் வந்து, அவ்வாலியின் உயிரைக் காப்பதற்கு உதவியாக நின்று, என்னைத் தடுக்குமாயினும், என் வில்லிடைத் தொடுத்து விடுத்த அம்பினால் அவனை அழித்து, வானரத் தலைமையோடு நின் மனைவியையும் உனக்கு இன்றைக்குத் தருவேன்; அறிவிற் சிறந்தோனே! அவ்வாலியின் உறைவிடத்தைக் காட்டுவாயாக’ என்று சொன்னான்.

கு:—வாலியைக் கொல்வது உறுதி என்பதைத் தெளிவுபடுத்த வேண்டிப் பதினாலுலகங்களும் அவனுக்கு உதவியாக நின்று என்னைத் தடுத்தாலும் அவனை வாளியின் வீட்டித் தலைமையும் தாரமும் நினக்குத் தருவேன் என்றான். முன் தண்டகவனத்து முனிவர்க்குக் கூறும்போதும், ‘சூரறுத்தவனுஞ் சுடர் நேமியும், ஊரறுத்த ஒருவனும் ஓம்பினும், ஆரறத்தினொ டன்றிநின்றா ரவர் வேரறுப்பன்’ (ஆரணிய - அகத்-22) எனக் கூறியுள்ளமை காணலாம். விலகுதல்–தடுத்தல். விலகும் என்னினும் என்பது, அங்ஙனம் விலகுவாரின்மை

விளக்கி நின்றது; 'நல்லாறெனினுங் கொளல் தீது மேலுலகம் இல்லெனினும் ஈதலே நன்று" (குறள் - 222) என்புழிப்போல. உலகம் என்பது, இடவாகு பெயராய் அங்கு வாழும் உயிர்களை யுணர்த்தி நின்றது; உதவுதற்கும் விலகுதற்கும் உரியன அவையே யாதலின் என்க. வீட்டி - வீழ்த்தி. தலைமை என்றது, குரங்கினத் தரசுரிமையை. ஓடு உயர்பின் வழி வந்தது. இன்று தருவேன் என்றது, வீட்டலும் தருதலும் விரைவினும் எளிதினும் முடியும் என இராமன் தன் ஆற்றலைப் புலப்படுத்தி உறுதி கூறியவாறு. பகைவெல்லும் காலங்கருதி அடங்கியிருந்த சுக்கிரீவன் அறிவுடைமையை நினைந்து, அவனைப் புலமையோய்! என விளித்தான். வாலி உறைவிடம் தெரிந்தால் போதும்; அவனை வீட்டுதல் என் கடன் என்பான் 'அவனுறைவிடங் காட்டு' என்றான். தன்றாரம் பற்றுண்ணலால் வெகுட்சி மிக்குள்ள இராமன், தன் துணைவன் தாரம் பற்றுண்டது கேட்டவுடன் அவ்வறங்கடையான செயலைச் செய்தது காரணமாகவே வாலியைக் கொல்லலாம் எனத் துணிந்து இங்ஙனம் கூறினான். (70)

இச்செய்யுளின் பின் சில ஏடுகளில் பின்வரும் பாடல் காணப்படுகின்றது.

3957 (a) நீலகண்டனும் நேமியுங் குலிசியும் மலரின்
மேலுளோனும்வந் தவனுயிர்க் குதவினும் வீட்டி
யாலு முன்னரசுரிமையோ டளிக்குவெ னனலோன்
சாலுமின்றென துரைக்கருஞ் சான்றெனச் சமைந்தான்.

### சுக்கிரீவன் மகிழ்ச்சியும் எண்ணமும்

**3958.** எழுந்த பேருவ கைக்கடற்
பெருந்திரை யிரைப்ப
வழுந்து துன்பினுக் கக்கரை
கண்டன னனையான்
விழுந்த தேயினி வாலிதன்
வலியென விரும்பா
மொழிந்த வீரற்கியா மெண்ணுவ
துண்டென மொழிந்தான்.

எழுந்த பேர் உவகைக்
கடற் பெருந்திரை இரைப்ப,
அழுந்து துன்பினுக்கு அக்கரை
கண்டனன் அனையான்,

'வீழுந்ததே இனி வாலிதன்
வலி!' என, விரும்பா,
மொழிந்த வீரற்கு, 'யாம் எண்ணுவது
உண்டு' என மொழிந்தான்.

பொ :—(இராமன் அவ்வாறு சொல்லக் கேட்டவுடன்) தன் உள்ளத் தெழுந்த பெரிய மகிழ்ச்சியாகிய கடலின் பெரிய அலைகள் ஒலி செய்யா நிற்க, தான் முன் அழுந்தியிருந்த துன்பமாகிய கடலுக்கு எல்லை கண்டவனைப் போன்றவனாகிய சுக்கிரீவன், 'இனி, வாலியின் வலிமை விழுந்ததேயாம்' என்று விருப்பத்தோடு நினைந்து, இவ்வாறு உறுதி கூறிய இராமனுக்கு, 'நாங்கள் சிந்திக்க வேண்டியது ஒன்று உண்டு' என விண்ணப்பம் செய்தான்.

கு :—இராமன் சொல்லைக் கேட்டவுடன் சுக்கிரீவன் பெருமகிழ்ச்சி யுற்றான் என்பார், எழுந்த பேருவகைக் கடற் பெருந்திரையிரைப்ப என்றார். 'பேருவகைக் கடல்' என்பது உருவகம் ; அவ்வுருவகத்திற் கேற்பப் பெருந்திரை யிரைத்தலுங் கூறினார். மகிழ்ச்சி பெருக் கெடுப்ப என்பதே கருத்து. 'உள்ளத் தெழுந்த பேருவகை' என்று எழுதற்கு இடம் வருவிக்க. கரையென்ற குறிப்பால் அழுந்து துன்பக் கடலுக்கு என உருவகமாக்குக. கரை என்றது எல்லையை. கடலில் அழுந்தியவன் கரையைக் கண்ட வழி மகிழ்ச்சி மீக்கூர்தல்போல் வாலியால் பெருந் துன்புற்ற சுக்கிரீவன் இராமன் துணையால் அத் துன்பம் நீங்கப் பெற்றவன் போன்றவனானான் என்பது கருத்து. வாலி தன் வலி இனி விழுந்ததே என்றது, தெளிவுபற்றி எதிர்காலம் இறந்த காலமாய் வந்த வழுவமைதி. விரும்புதல், விருப்பத்தோடு எண்ணுதல். வீரற்கு மொழிந்தான் என இயையும். மொழிந்த வீரற்கு-அவனுறை விடங்காட்டு என்று மொழிந்த வீரனாகிய இராம னுக்கு. 'எண்ணித் துணிக கருமம்' என்பவாகலின் 'யாம் எண்ணுவ துண்டு' எனச் சுக்கிரீவன் சொன்னான். யாம் என்றது, அனுமனை யுள்ளிட்ட அமைச்சரை யுளப்படுத்திக் கூறியதாகும் ; என்னை ? எண் ணுதற்குரியோர் அவரே ஆகலின். இதனால் சுக்கிரீவன், 'அமைச்ச ரோடு தனியிருந்து யோசித்துக் கூறுகின்றேன்' என்பதைக் குறிப்பா லறிவித்தவாறு. (71)

சுக்கிரீவன் அமைச்சரோடு தனியே ஆலோசித்தல்

3959. அனைய வாண்டுரைத் தனுமனே
முதலிய வமைச்சர்
நினையுங் கல்வியு நீதியுஞ்
சூழ்ச்சியு நிறைந்தா

ரெனைய ரன்னவ ரோடும்வே
றிருந்தன னிரவி
தனைய னவ்வழிச் சமீரணன்
மகனுரை தருவான்.

அனைய ஆண்டு உரைத்து, அனுமனே முதலிய அமைச்சர்,
நினைவும், கல்வியும், நீதியும், சூழ்ச்சியும் நிறைந்தார்
எனையர், அன்னவரோடும் வேறு இருந்தனன், இரவி
தனையன்; அவ்வழிச் சமீரணன் மகன் உரை தருவான்.

பொ:—சூரியன் மகனாகிய சுக்கிரீவன் அவ்வாறு அங்குச் சொல்லிவிட்டு, நினைவாற்றலும் கல்வியறிவும் நீதியும் ஆலோசனையும் நிறைந்தவராகிய அனுமன் முதலான அமைச்சர்கள் எத்துணைபேர் இருந்தனரோ அவர் அனைவரோடும் வேறிடத்தில் ஆலோசனைக்கு அமர்ந்தான்; அவ்விடத்தில் வாயுவின் மகனாகிய அனுமன் சொல்லு வானாயினன்.

கு:—வாலியை வெல்லும் ஆற்றல் இராமனுக்கு உண்டா? என ஆலோசிப்பதற்காகவே சுக்கிரீவன் தன் அமைச்சரோடும் இராம இலக்குவரிருக்கும் இடத்தை விடுத்து வேறிடத்திருந்தான் என்க. நிறைந்தாராகிய அமைச்சர் என்றியையும். வரும் பொருள் உரைக்கும் மந்திரிக்குச் சென்ற கால நிகழ்ச்சிகள் நினைவிலிருத்தல் வேண்டுமாகலின் முதற்கண் நினைவு கூறினார். கல்வி என்றது பொதுவகையான கல்வி அறிவையும், நீதி என்றது அமைச்சர்க்குச் சிறப்புரிமையுடைய நீதி நூலறிவையும் உணர்த்தின. சூழ்ச்சி என்றது, அந்நினைவும் அறிவும் கொண்டு அரசன் ஆக்கத்திற்குப் பொருந்துவனவற்றை ஆராயும் ஆலோசனையை. இந்நான்கும் உடையாரே அமைச்சர் எனத்தகுவார் என்றவாறு. அமைச்சர் எல்லோரோடும் சுக்கிரீவன் ஆலோசனையில் அமர்ந்தான் என்பார், அமைச்சர் எனையர் அன்னவரோடும் வேறிருந்தனன் என்றார். அனுமனுக்கு ஆசானாய் நவவியாகரணமும் கற்பித்த பேரறிவினனாய சூரியனுக்கு மகன் என்றமையால் சுக்கிரீவனுடைய அறிவு மிகுதியும் புலப்படுத்தியவாறு; 'மகனறிவு தந்தையறிவு' என்பது நினைக. சுக்கிரீவன் ஐயத்தை அவன் முகக்குறிப்பால் அறிந்து அனுமன் அவன் ஐயம் நீங்கச் சொல்லத் தொடங்கினான் என்றவாறு. சமீரணன் - காற்று; நன்றாகச் சஞ்சரிக்க வல்லவன் என்ற காரணம் பற்றி வந்த பெயர் என்பார். 72

அனுமன் இராம இலக்குவரின் ஆற்றலை விளக்குதல்

3960. உன்னி னேனின துள்ளத்தி
னுள்ளதை யுரவோ
யன்ன வாலியைக் காலனுக்.
களிப்பதோ ராற்ற
லின்ன வீரர்பா லில்லையென்
றயிர்த்தனை யினியான்
சொன்ன கேட்டவை கடைப்பிடிப்
பாயெனச் சொன்னான்.

'உன்னினேன், நினது உள்ளத்தின் உள்ளதை, உரவோய்!
"அன்ன வாலியைக் காலனுக்கு அளிப்பது ஓர் ஆற்றல்
இன்ன வீரர்பால் இல்லை" என்று அயிர்த்தனை; இனி, யான்
சொன்ன கேட்டு,அவை கடைப்பிடிப்பாய்' எனச் சொன்னான்.

பொ:—'அறிவுத்திண்மையுடையவனே! நின் மனத்தில் உள்ள கருத்தைக் குறிப்பால் யான் உய்த்துணர்ந்தேன், "அத்தகு பெரு வலி படைத்த வாலியை எமனுக்கு அளிக்கத் தக்கதோர் வலிமை, இந்த வீரரிடத்தில் இல்லைபோலும்" என்று ஐயமுற்றாய்; இனி, யான் சொல்லுகின்றவற்றைக் கேட்டு அக்கருத்துக்களை உறுதி யாகக் கொள்வாயாக' என்று சொன்னான்.

கு:—'துணிந்தபின் எண்ணுவம் என்பது இழுக்கு' என்பதை நினைவிற் கொண்டு இராம இலக்குவர்க்கு வாலியைக் கொல்லும் வல்லமை யுண்டா என்பதை முன்னரே ஆராயத் தொடங்கிய சுக்கிரீவனின் அறிவின் பெருமை நினைந்து அவனை, 'உரவோய்!' என விளித்தான் அனுமன். 'உரனென்னுந் தோட்டியான்' (குறள் 24) என்புழிப் பரிமேலழகர் உரன் - திண்மை என்று பொருள் கூறித் 'திண்மையீண்டறிவின்மேற்று' என விளக்கம் செய்திருத்தல் காணலாம். உள்ளத்தினுள்ளதை உன்னினேன் என்றது நின் மனத்தில் ஓடா நின்ற ஐயத்தை உய்த்துணர்ந்தேன் என்றவாறு. காலனுக்களிப்பது என்றது, 'கொல்வது' என்னும் பொருளது. அன்னவாலி என்றது, எதிர்ந்தார் வலியில் பாதி தன்னைச் சேர்தற் குரிய வரம் பெற்ற வாலி என அவன் பெருமையைக் குறித்து நின்றது. இன்னவீரர் என்றது இங்கு வந்துள்ள வீரராகிய இராம இலக்குவர் என்றவாறு. அவர் சிறுமையுணர நின்றது எனினும் ஆம். அயிர்த்தல் - ஐயுறுதல். கடைப்பிடித்தல் - உறுதியாகக் கொள்ளுதல். சொன்ன என்றது காலவழுவமைதி, எதிர்காலம்

இறந்த காலமாயிற்று. யான் சொல்லுவனவற்றைக் கேட்டால் பின் ஐயுருய் என்பது குறிப்பு. (73)

## இராமன் திருமாலே என அனுமன் நிறுவுதல் 3961-3964

**3961.** சங்கு சக்கரக் குறியுள
தடக்கையிற் ருளி
லெங்கு மித்தனே யிலக்கணம்
யாவர்க்கு மில்லே
செங்கண் விற்கரத் திராமனத்
திருநெடு மாலே
யிங்கு தித்தன னீண்டற
நிறுத்துதற் கின்னும்.

'சங்கு சக்கரக் குறிஉள தடக்கையில், தாளில்;
எங்கும் இத்தனே இலக்கணம் யாவர்க்கும் இல்லே;
செங்கண் விற்கரத்து இராமன் அத் திரு நெடுமாலே;
இங்கு உதித்தனன், ஈண்டு அறம் நிறுத்துதற்கு; இன்னும்'

பொ :—(இவனுடைய) பெரிய கைகளிலும் பாதங்களிலும் சங்கு சக்கர ரேகைகள் உள்ளன; இத்தனேச் சிறந்த இலக்கணம் எவ் விடத்தும் எவர்க்கும் அமைந்திருந்ததில்லே; ஆதலால், சிவந்த கண்களேயும், வில்லேந்திய கையினேயும் உடைய இராமன், அப் பரம்பொருளாகிய திருமாலே ஆவன்; இங்குத் தலேதடுமாறியுள்ள தருமத்தை நிலேநிறுத்துதற்காகவே இம்மண்ணுலகத்தில் அவன் அவதரித்துள்ளான்; மேலும்.

கு :—குளகம். இராமன் கைகளிலும் அடிகளிலும் சங்கு சக்கர ரேகை யிருத்தலால் அவன் திருமாலே என்பதை அனுமானித்து உணரலாம் என்றவாறு. கடவுள் நிலேயில் சங்கு சக்கரம் ஏந்தியவன் ஆதலின், மனிதனுக அவதரித்த நிலேயிலும் அப்படைகளின் வடிவமைந்த ரேகைகளேப் பெற்றிருக்கின்ருன் என விளக்கியவாறு. "நெய்த்தலே நேமியும் சங்கும் நிலவிய, கைத்தலங்கள் வந்து காணீரே" (1-2-12) எனவும், "ஒருகாலிற் சங்கொருகாலிற் சக்கர முள்ளடி பொறித்தமைந்த, இருகாலுங் கொண்டங்கங் கெழுதினுற் போலிலச்சனேபட நடந்து" (1-7-6) எனவும் பெரியாழ்வார், கண்ணபிரானின் கைகளிலும் அடிகளிலும் சங்கு சக்கர ரேகை இருந்தமை குறிப்பிடுவதையும் காணலாம். "சங்கு ரேகையும் சக்கர ரேகையும், அங்கையுள்ளன ஐயற்காதலால், சங்க பாணியான்

சக்கராயுதம், அங்கையேந்துமென் றறையல் வேண்டுமோ?" (சூளா மணி-குமார காலப்-45) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். செங் கண் உடைமையாலும் பஞ்சாயுதத்தில் ஒன்ருகிய வில்லுடைமை யாலும் இராமன் திருமாலே என்பதைத் தெளிதலுங் கூடும் என்ற குறிப்புத் தோன்ற, 'செங்கண் விற்கரத் திராமன்' என்ருன். அத் திருநெடுமால் என்புழி அகரம் உலகறிசுட்டு. திருவொடுங் கூடிய நெடிய வடிவத்தையுடைய மால் என்க. இராம அவதாரத்தின் நோக்கம் இதுவென்பது புலப்பட 'ஈண்டறம் நிறுத்துதற்கு உதித் தனன்' என்ருன். "அறந்தலை நிறுத்தி, வேதம் அருள் சுரந் தறைந்த நீதித், திறந்தெரிந் துலகம்பூணச் செந்நெறி நிறுத்தித் தீயோர் இறந்துக நூறித் தக்கோ ரிடர்துடைத் தேக வீண்டுப் பிறந்தனன் தன்பொற்பாதம் ஏத்துவார் பிறப்பறுப்பான்" (சுந்தர-1123) என இவ்வனுமனே பின் இராவணனுக்குக் கூறுதலும் காண லாம். (74)

3962. செறுக்கும் வன்றிறற் திரிபுரந்
தீயெழச் சினவிக்
கறுக்கும் வெஞ்சினக் காலன்றன்
காலமுங் காலா
லறுக்கும் புங்கவ ஞண்டபே
ராடகத் தனிவி
லிறுக்குந் தன்மையம் மாயவற்
கன்றியு மெளிதோ.

'செறுக்கும் வன்திறல் திரிபுரம் தீஎழச் சினவிக்,
கறுக்கும் வெஞ்சினக் காலன்தன் காலமும் காலால்
அறுக்கும் புங்கவன் ஆண்டபேர் ஆடகத் தனிவில்
இறுக்கும் தன்மை, அம்மாயவற்கு அன்றியும் எளிதோ?'

பொ :—எல்லோரையும் வருத்துகின்ற மிக்க வல்லமையுடைய முப்புரங்களும் எரியுமாறு கோபித்துப் பின், மார்க்கண்டேயனைக் கோபித்துப் பாசம் வீசிய கொடிய கோபத்தையுடைய எமனுடைய ஆயுட்காலத்தையும் காலால் உதைத்து அழித்த உருத்திரன் கையாண்ட பெரிய பொன்னுலியன்ற ஒப்பற்ற வில்லை ஒடிக்கும் தன்மை அத்திருமாலுக்கு அல்லது பிறர்க்கு எளிதாமோ? ஆகாது.

கு :—செறுத்தல் - வருத்தல். திரிபுரம் - முப்புரம். திரிபுரம் எரித்துக் காலனைச் சங்கரித்த உருத்திரன் வில் என அவ்வில்லின்

பெருமையும் உரனும் புலப்படுத்தியவாறு. அவ்வில்லைச் சீதையின் மணத்திற்காக ஒடித்த நிகழ்ச்சியே இராமன் திருமாலின் அமிசமே என்பதை மெய்ப்பிக்கும் என வேறும் ஒரு காரணம் காட்டியவாறு. சினவி, அறுக்கும் புங்கவன் என இயையும். சிவலிங்கத்தைப் பற்றி யுள்ள பான்மையும் பாராது மார்க்கண்டேயனைக் கோபித்துப் பற்ற முயன்ற எமனுடைய கடுங்கோபம் புலப்படக் 'கறுக்கும் வெஞ்சினக் காலன்' என்றான். கறுக்கும் காலன் என இயைத்துக் கரிய நிறக் காலன் எனலுமாம். மார்க்கண்டேயனைக் கறுக்கும் என ஒரு சொல் வருவிக்க. காலமும் காலால் அறுக்கும் என்றது, எமனுடைய ஆயுட் காலம் முடியுமாறு உதைத்து அழித்த என்றவாறு. புங்கவன் - தேவன்; இங்கு உருத்திரனைக் குறித்தது. சீதையை மணக்க இராமன் முறித்த வில் சிவன் வில்லாகலின் அவ்வில்லைத் திருமாலாலன்றி முறிக்க வியலாது எனவே, அதை முறித்த இராமன், திருமாலே என்பது தெளிவாகும் என்றவாறு. காலால் அறுக்கும் என்று எளி தின் முறித்த திறம் புலப்படுத்தினான். (75)

**3963.** என்னை யீன்றவ னிவ்வுல
கியாவையு மீன்றான்
தன்னை யீன்றவற் கடிமைசெய்
தவமுனக் கதுவே
உன்னை யீன்றவெற் குறுபத
முளதென வுரைத்தா
னின்ன தோன்றலே யவனிதற்
கேதுவுண் டிறையோய்.

'என்னை ஈன்றவன், "இவ்வுலகு
யாவையும் ஈன்றான்
தன்னை ஈன்றவற்கு அடிமை செய்;
தவம் உனக்கு அதுவே;
உன்னை ஈன்ற எற்கு உறுபதம்
உளது" என உரைத்தான்;
இன்ன தோன்றலே அவன்;
இதற்கு ஏது உண்டு;—இறையோய்!

பொ :—தலைவனே! என்னைப் பெற்ற தந்தையாகிய வாயு தேவன், (என்னை நோக்கி) "ஐயா! இவ்வுலகங்களை யெல்லாம் படைத்த பிரமனை உந்திக் கமலத்தில் ஈன்றவனாகிய திருமாலுக்கு அடிமை செய்வாயாக; அதுவே உனக்குத் தவமாகும்; அதனால்,

உன்னைப் பெற்ற எனக்கும் சிறந்த பதவி உளதாகும்” எனச் சொன்னான்; அத்திருமால் இந்த இராமனேயாவன்; இவ்வாறு யான் கூறுதற்குரிய காரணமும் உண்டு.

கு :—வாயு, தன் புதல்வனாகிய அனுமனை நோக்கித் ‘திருமாலுக்கு அடிமை செய்’ என்று உபதேசித்த நிகழ்ச்சியை இங்குக் குறிப்பிட்டவாறு. என்னையீன்றவன் என்றது வாயுவை. திருமால் பிரமனையீன்றவன் என்றது, தன் உந்திக் கமலத்தில் பிரமனைத் தோற்றுவித்தமை கருதி. “மூவுலகு மீன்றானை முன்னீன்றானை” (அயோத்தியா - 2454) என முன் கூறியுள்ளதும் காண்க. ஐயா என்றது, வாயு தன் மகனை அன்பால் விளித்த விளி. உறுபதம் என்றது, சிறந்த பதவியை. மக்கள் செய்யும் புண்ணியம் தந்தைக்கும் உரியதாய் அவரை உயர் பதவியில் சேர்க்கவல்லதாகும். “தம் பொருளென்ப தம் மக்கள் அவர் பொருள் தந்தம் வினையான் வரும்” (குறள்-63) எனத் தெய்வப் புலவர் கூறியுள்ளதுங் காணலாம். அவன் என்றது திருமாலை. இன்ன தோன்றல் என்றது இராமனை. தன் இச்சையால் இவ்வுலகில் தோன்றினவன் ஆதலின், இராமன் தோன்றல் எனப்பட்டான். இனி, ஆடூஉப் பெயர் எனலுமாம். இதற்கு - இவ்வாறு கூறுதற்கு. ஏது - காரணம். அக்காரணம் வரும் செய்யுளில் கூறப்படுகின்றது. (76)

3964. துன்பு தோன்றிய பொழுதுடன்
றோன்றுவ னெவர்க்கும்
முன்பு தோன்றலை யறிதற்கு
முடிவென்னென் றியம்ப
அன்பு சான்றென வுரைத்தன
னையவென் யாக்கை
என்பு தோன்றல வுருகின
தெனிற்பிறி தெவனோ.

‘துன்பு தோன்றிய பொழுது,
உடன் தோன்றுவன்; “எவர்க்கும்
முன்பு தோன்றலை அறிதற்கு
முடிவு என்?” என்று இயம்ப,
“அன்பு சான்று” என உரைத்தனன்;
ஐய! என் யாக்கை,
என்பு தோன்றல உருகினது
எனின், பிறிது எவனோ?’

பொ :—'உலகத்திற்குத் துன்பம் தோன்றிய போது அத்துன்பத்தைப் போக்க உடனே அவதரிக்கும் இயல்பினனுய் எல்லோர்க்கும் முன்னே தோன்றிய ஆதிப் பிரானுகிய திருமாலை யான் அறிந்து கொள்வதற்கு முடிவான உபாயம் யாது?' என்று வினவ, (என் தந்தை, அவனைக் கண்டவுடன் உன்னுள்ளத்தில் காரணமின்றித் தோன்றும்) அன்பே சான்ருகும்' எனச் சொன்னுன் ; ஐயனே! (அவன் சொல்லியவாறே இந்த இராமனைக் கண்டவுடன்) என் உடம்பு, வலிதாய எலும்புகளும் உருத்தோன்ருதனவாக உருகினது என்ருல், அவனை வேறு சான்று கொண்டு ஆராய்வது எதற்கு ?

கு :—முன்னைச் செய்யுளில் 'இதற்கு ஏது உண்டு' என்று கூறியதை இங்கு விளக்கியவாறு. வாயு சொன்ன முறைப்படி இராமனைக் கண்டவுடன் காரணமின்றி அனுமன் உள்ளம் உருகியதால் இராமன் திருமாலின் அமிசமே என்பது தெளிவாயது ஆதலின், வேறு காரணங்களைக் கொண்டு ஆராய வேண்டுவதில்லை என்றவாறு. திருமால் பூமியில் அவதரிக்கும் இயல்பினன் என்பான், துன்பு தோன்றிய பொழுது உடன் தோன்றுவன் என்ருன். 'உலகிற்குத் துன்பமுண்டாயபோது அதை நீக்க வேண்டி அவன் விரைந்து அவதரிப்பான் என்பது புலப்பட 'உடன் தோன்றுவன்' என்ருன். 'முன்பு தோன்றல்' என்பது ஆதிமூர்த்தியாய்த் தோன்றுதலைச் செய்தவன் எனப் பொருள்பட்டுத் திருமாலுக்குக் காரணக் குறியாயிற்று. துன்பு தோன்றிய பொழுது உடன் தோன்றுமியல்பினனுய் எவர்க்கும் முன்பு தோன்றினவன் திருமால் என்றவாருயிற்று. முடிவான உபாயத்தை முடிவு என்ருன். இராமனைக் கண்டவுடன் அனுமன் உருகிய நிலையை "என்பெனக் குருகுகின்ற திவர்கின்ற தளவில் காதல் அன்பினுக்கு அவதியில்லை" (அனுமப்-15) என முன் தனக்குள் கூறிக்கொண்டவாற்ருனும் அறியலாம். உள்ளமுருகுங்கால் என்பு முருகுதல் இயல்பாகலின் 'என்பு தோன்றல' என்ருன். 'இரும்புதரு மனத்தேனை ஈர்த்தீர்த்தென் என்புருக்கி' (திருவாசகம்) என்றதும் காணலாம். (77)

இராமனுற்றலைச் சோதிக்க அனுமன் கூறும் உபாயம்

3965. பிறிது மன்னவன் பெருவலி
யாற்றலைப் பெரியோய்
அறிதி யென்னினுண் டுபாயமு
மஃதரு மரங்கள்

நெறியி னின்றன வேழினொன்
றுருவவிந் நெடியோன்
பொறிகொள் வெஞ்சரம் போவது
காணெனப் புகன்றான்.

'பிறிதும், அன்னவன் பெருவலி ஆற்றலைப், பெரியோய்!
அறிதி என்னின், உண்டு உபாயமும்; அஃது அருமரங்கள்
நெறியில் நின்றன ஏழில், ஒன்று உருவ, இந்நெடியோன்
பொறிகொள் வெஞ்சரம் போவதுகாண்!' எனப் புகன்றான்.

பொ:—பெரியோனே! அவ்விராமனுடைய மிகப் பெரிய வலிமையை வேறுவகையானும் சோதித்தறிவதாயின், அதற்கு உபாயமும் உண்டு; அவ்வுபாயமாவது, ஒன்றையடுத்து ஒன்றாக நெறிப்பட்டு நின்றனவாகிய ஏறுதற்கரிய மராமரங்கள் ஏழில் ஒரு மராமரம் துளைபட இந்த நெடியோனாகிய இராமனது புள்ளிகளைக்கொண்ட கொடிய அம்பு செல்வதைக் காணுதலே என்று கூறினான்.

கு:—பிறிதும் அறிதி என்னின் என இயையும். பிறிதானும் என ஆன் விரிக்க. வலியாற்றல் என்பது ஒருபொருட் பன்மொழி. மராமரங்கள் ஏழில் ஒரு மரத்தை ஊடுருவும் ஆற்றல் இராமன் அம்புக்கு உண்டாயின், அவ்வம்பு வாலியின் மார்பைத் துளைக்கும் ஆற்றலையுடையதே என்பது துணியலாம் என்றவாறு. அஃது, நெடியோன் சரம் ஏழின் ஒன்றுருவப் போவது காண் என இயையும். காண் என்பது முதனிலைத் தொழிற்பெயராய் அஃது என்னும் எழுவாய்க்குப் பயனிலையாய் நின்றது. உருவுதல் - துளைத்தல். பொறி, அம்பில் அழகுறப் பொறித்த புள்ளிகள்; தீப்பொறியுடைய சரம் எனலும் ஒன்று. முன் தான்கூறிய ஏதுக்களைக்கொண்டு சுக்கிரீவன் நம்பாமல் வேறு வகையானும் இராமன் ஆற்றலைச் சோதித்த பின்னரே வாலிபால் ஏவலாம் என்ற குறிப்பினனாதலை அறிந்தே அனுமன் இங்ஙனம் கூறலானான் என்க. (78)

சுக்கிரீவன் உடன்பட்டு இராமனை அணுகிக் கூறல்

**3966.** நன்று நன்றெனா நன்னெடுங்
குன்றமு நாணும்
தன்று ணைத்தனி மாருதி
தோளிணை தழுவிச்

சென்று செம்மலைக் குறுகியான்
செப்புவ துளதா
லொன்று னக்கென விராமனு
முரைத்தியஃ தென்றான்.

'நன்று நன்று எனா, நல் நெடுங்
குன்றமும் நாணும்
தன் துணைத் தனி மாருதி
தோளிணை தழுவி,
சென்று, செம்மலைக் குறுகி, 'யான்
செப்புவது உளதால்,
ஒன்று உனக்கு' என, இராமனும்,
'உரைத்தி அஃது' என்றான்.

பொ :—(அது கேட்ட சுக்கிரீவன்) நீ சொன்னது 'நல்லது நல்லது' என்று மகிழ்ந்துகூறி, நல்ல நெடிய மலையும் நாணுதற் குரிய, தன் துணையாகவுள்ள ஒப்பற்ற அனுமனின் தோளிரண் டையும் தழுவிக்கொண்டு, பின் இராமனைச் சென்றடைந்து, 'யான் உனக்குச் சொல்வது ஒன்று உளது' என்று கூற, இராமனும் 'அதைச் சொல்' என்று பணித்தான்.

கு :—குன்றமும் நாணும் தோளிணை; மாருதி தோளிணை என இயையும். அனுமனின் அறிவின் பெருமையைப் பாராட்டி 'நன்று நன்று' என வாயால் கூறியதோடு அவன் தோள்களைத் தழுவியும் தன் மகிழ்ச்சியைப் புலப்படுத்தினான் சுக்கிரீவன் என்க. அமைச்சர் பலருள் தனக்குற்ற துணையாய் நின்று உதவி ஒப்பற்றவனாய் விளங்கு பவன் அனுமன் ஆதல் தோன்ற, 'தன்றுணைத் தனிமாருதி' என்றார். செம்மல் • தலைமையுடைய இராமன். 'யான் உனக்குச் செப்புவது ஒன்றுளது' என இயையும். (79)

இச் செய்யுளுக்குப் பின் சில ஏடுகளில்,

3966 (a) மண்ணுளோ ரரா முதுகிடை முளைத்த மா மரங்கள்
எண்ணிலேழுள அவற்றி லொன்றுருவ எய்திடுவோன்
விண்ணுள் வாலிதன் ஆருயிர் விடுக்கும் என்றுலகின்
கண்ணுளோர்கள் தாம் கழறிடும் கட்டுரை யுளதால்.

என்ற செய்யுள் காணப்படுகின்றது.

நட்புக்கோட் படலம் முற்றிற்று.

# 4. மராமரப் படலம்

இது, இராமன் ஏழு மராமரங்களை ஓர் அம்பு எய்து துளைத்த செய்தியைக் கூறும் பகுதியாதலின் மராமரப் படலம் என்னும் பெயர் பெற்றது.

இராமனோடு புதிதாக உறவு கொண்டவன் சுக்கிரீவன். அவனுக்கு இராமனுடைய ஆற்றல் முழுவதும் நன்கு தெரியாது. வர பலமும் உடல் வலியும் பெற்ற பெருவீரனாகிய வாலியை இராமனாற் கொல்ல முடியுமோ முடியாதோ என்ற ஓர் ஐயம் அவன் உள்ளத்தை வருத்திக் கொண்டிருந்தது. வாலி, மலை போன்று பெரிதாக வளர்ந்துள்ள ஏழு மராமரங்களை அசைத்து அவற்றின் இலை உதிருமாறும், அவை நிலை தளருமாறும் செய்திருக்கிறான். அவ்வாற்றல் இராமனுக்கும் உளதோ எனக் கண்டறிய அம்மரங்களில் ஒன்றில் அம்பெய்து அதனைத் துளைக்குமாறு கேட்டுக் கொண்டான். இராமனும் அவ்வாறே அம்பெய்யவும், அது சென்று அவ்வேழு மராமரங்களையும் துளைத்துப் பின் கீழுலகங்கள் ஏழையும் துளைத்து மீண்டும் இராமனிடம் திரும்பியது. அதுகண்டு சுக்கிரீவனும் மற்ற வானரர்களும் ஐயம் நீங்கி நிச்சயம் வாலி தொலைவான் என்று பெருமகிழ்வெய்தினர்.

இப்படலத்தில் மராமரங்களை ஒன்பது பாடல்களாலும், இராமன் வில்லின் நாணொலியை மூன்று பாடல்களாலும், இராமன் அம்பின் ஆற்றலை இரண்டு பாடல்களாலும் அழகுற வருணித்துள்ளார். மராமரம் என்பது ஒரு வகை ஆச்சா மரம் என்பர்.

வான்மீகத்தில் சுக்கிரீவனின் ஐயத்தைப் போக்குவதற்கு இராமன் முதலில் துந்துபியின் உடலைக் கால் விரலால் உந்தினான் என்றும், பின் மராமரங்களை எய்தான் என்றும் கூறப்பட்டுள்ளது. ஆனால், கம்பரின் இராமாவதார நூலில் இராமன் மராமரங்களை எய்தது முதலாவது நடந்த நிகழ்ச்சியாகக் கூறப்பட்டுள்ளது. அடுத்து வரும் துந்துபிப் படலத்தில், இராமன் ஏவலின்படி இலக்குவன் துந்துபியின் உடலைக் கால் விரலால் உந்தினான் என்று கம்பர் பாடியுள்ளார்.

# 4. மராமரப் படலம்

## மராமரங்கள் ஏழினுள் ஒன்றை எய்யும்படி சுக்கிரீவன் இராமனை வேண்டுதல்

**3967.** ஏக வேண்டுமிந் நெறியென
வினிதுகொண் டேகி
மாக நீண்டன குறுகிட
நிமிர்ந்தன மரங்க
ளாக வைந்தினோ டிரண்டினொன்
றுருவநின் னம்பு
போக வேயென்றன் மனத்திடர்
போமெனப் புகன்றான்.

'ஏக வேண்டும் இந்நெறி' என, இனிது கொண்டு ஏகி,
'மாகம் நீண்டன குறுகிட நிமிர்ந்தன மரங்கள்
ஆக ஐந்தினோடு இரண்டின் ஒன்று உருவ, நின் அம்பு
போகவே, என்தன் மனத்து இடர்போம்' எனப் புகன்றான்.

பொ :—(சுக்கிரீவன்) 'இந்த வழியே நாம் செல்ல வேண்டும்' எனக் கூறி, இராம இலக்குவரை இனிதே அழைத்துக் கொண்டு சென்று, 'நீண்ட ஆகாயமும் குறுகித் தோன்றுமாறு உயர்ந்துள்ளன வாகிய இம்மராமரங்கள் ஏழில் ஒருமரம் துளைபடுமாறு நின் அம்பு ஒன்று சென்ற அளவில் என் மனத்தில் உள்ள துன்பமும் செல்லும்' என்று கூறினான்.

கு :—'இம்மராமரங்களில் ஒன்றை நின் அம்பால் துளைத்தால் நீ வாலியைக் கொல்லும் ஆற்றலுடையாய் என யான் நம்புவேன்' என்பதே சுக்கிரீவன் கருத்தாயினும் அவ்வாறு கூறாமல் 'ஒன்றுருவ நின்னம்பு போகவே என்றன் மனத்திடர்போம்' என நயம்படக் கூறிய சொற்றிறம் காண்க. இராமன் அம்பு மராமரம் ஒன்றைத் துளைசெய்யவல்லதேல் அது வாலி மார்பையும் துளைசெய்யும் என்ற நம்பிக்கையால் சுக்கிரீவன் மனத்துயர் நீங்கும் என்றவாறு. மாகம் - ஆகாயம். நீண்டன மாகம் என்றது ஒருமைப் பன்மை மயக்கம். 'மரங்களின் நீளத்தால் இயல்பாக நீண்டுள்ள ஆகாயமும் குறுகித் தோன்ற' என்றது உயர்வு நவிற்சி; "படை பெருத்தலின் பார் சிறுத்ததோ" (கலிங்கத்துப் - 348) என்பது இங்கு நினையலாம். 'ஆக' அசை நிலை. பிரிவில் அசை நிலையாய் வரும் எனத் தொல்காப்பியர் கூறியுள்ளார்; (சொல் - 280) அது இங்குப் புதியன புகுதலாகப் பிரிந்து வந்தது. ஐந்தினோடிரண்டு - ஏழு. உருவுதலாவது, துளை

செய்து போதல். இராமன் பெருவீரன் என்பது தெரிந்தும், அவன் அம்புக்கு வாலியின் மார்பைத் துளைக்கும் ஆற்றலுண்டோ என வாலியிடத்துத் தனக்குள்ள அச்சத்தால் சுக்கிரீவன் ஐயமுற்று வருந்தினுன் என்பது இதனுல் புலனுகும். (1)

## இராமன் இசைதல்

3968. மறுவி லானது கூறலும்
வானவர்க் கிறைவன்
முறுவல் செய்தவன் முன்னிய
முயற்சியை முன்னி
யெறுழ்வ லித்தடந் தோள்களாற்
சிலையை நாணேற்றி
யறிவி ஞலளப் பரியவற்
றருகுசென் றணைந்தான்.

மறு இலான் அது கூறலும், வானவர்க்கு இறைவன்,
முறுவல் செய்து, அவன் முன்னிய முயற்சியை முன்னி,
எறுழ் வலித் தடந் தோள்களால் சிலையை நாண் ஏற்றி,
அறிவினுல் அளப்பரியவற்று அருகு சென்று அணைந்தான்.

பொ:—(உள்ளத்தில்) களங்கம் இல்லாத சுக்கிரீவன் அச்சொல்லைச் சொல்லுதலும், தேவர்கட்குத் தலைவனுகிய இராமன் புன்னகை புரிந்து, அச்சுக்கிரீவன் கருதிய முயற்சிக்குக் காரணத்தை உய்த்துணர்ந்து கொண்டு, மிக்க வலிமையுடைய தன் பெரிய தோள்களால் வில்லை வளைத்து நாணை ஏற்றி, மக்கள் அறிவால் அளந்து காணுதற்கரிய அம்மரங்களின் அருகில் சென்று சேர்ந்தான்.

கு:—மறு - குற்றம்; இங்கு உள்ளத்துக் களங்கத்தை உணர்த்தியது. சுக்கிரீவன் தன் உள்ளத்து உள்ள ஐயத்தை மறையாது வெளிப்படுத்தியது பற்றி அவனை, 'மறுவிலான்' என்ருர். இம்மராமரத்தைத் துளைப்பதினும் பெரிய காரியங்களை முடிக்க வல்லவன் இராமன் என்பது புலப்பட அவனை 'வானவர்க்கிறைவன்' என்ற பெயராற் குறித்தார். திருமாலின் அமிசமானவன் என்றவாறு. இராமன் வலிமைக்கு மராமரம் துளைத்தல் மிகவும் எளிய செயலாகத் தோன்றியதால் அவன் முறுவல் செய்வானுயினுன். இம்முறுவல் எள்ளல் பற்றித் தோன்றியது. முன்னுதல் - கருதுதல். முயற்சி என்றது முயற்சிக்குக் காரணமான ஐயத்தை யுணர்த்தியது; உபசாரம். சுக்கிரீவன் வெளிப்படக் கூறிய மராமரம் துளைத்தலாகிய முயற்சிக்குக் காரணம் அவன் உள்ளத்தில், வாலியைக் கொல்லும்

ஆற்றல் இராமன் அம்புக்கு உண்டோ என எழுந்த ஐயமே என்பதை இராமன் உய்த்துணர்ந்தான் என்க. எறும் - வலிமை; எறும்வலி என்றது ஒரு பொருட் பன்மொழி. சுக்கிரீவன் கருத்தை நிறைவேற்றுதற்குத் தான் ஆயத்தமாயதை யுணர்த்த வேண்டி இராமன் நாணேற்றினன். அம் மராமரத்தின் உயர்வும் பரப்பும் பருமையும் மக்களறிவிற்கு எட்டாதனவாதலின், 'அறிவினல் அளப் பரியவற்று' என்ருர். (2)

மராமரங்களின் வருணனை 3969-3977

3969. ஊழி பேரினும் பேர்வில
வுலகங்க ளுலைந்து
தாழுங் காலத்துந் தாழ்வில
தயங்குபே ரிருள்சூழ்
ஆழி மாநிலந் தாங்கிய
வருங்குலக் கிரிகள்
ஏழு மாண்டுசென் ஞெருவழி
நின்றென வியைந்த.

ஊழி பேரினும் பேர்வில; உலகங்கள் உலைந்து
தாழும் காலத்தும் தாழ்வில; தயங்கு பேர் இருள் சூழ்
ஆழி மாநிலம் தாங்கிய அருங் குலக் கிரிகள்
ஏழும், ஆண்டு சென்று ஒரு வழி நின்றென இயைந்த.

பொ :—(அம்மராமரங்கள்) ஊழிகாலம் மாறினும் அசையாதன; உலகங்கள் அழிந்து தாழ்வடையுங் காலத்தும் தாழ்வடையாதன; விளங்கும் இருள் சூழ்ந்த கடலாற் சூழப்பட்ட பூமியைத் தாங்கிய ஏழு அரிய குல மலைகளும் அங்கே (மதங்கமலையிற்) சென்று ஓரிடத்தில் நின்ருற்போல இயைந்தன.

கு :—இராமன் மராமரங்களுக்கு அருகில் போனன் என்ற ஆசிரியர் சில செய்யுள்களால் அவற்றை வருணிக்கத் தொடங்கு கின்ருர். (3)

3970. கலைகண் டோங்கிய மதியமுங்
கதிரவன் ருனுந்
தலைகண் டோடுதற் கருந்தவந்
தொடங்குறுஞ் சாரன்

மலைகண் டோமென்ப தல்லது
மலர்மிசை யயற்கு
மிலைகண் டோமெனத் தெரிப்பருந்
தரத்தன வேழும்.

கலை கண்டு ஓங்கிய மதியமும், கதிரவன் தானும்,
தலை கண்டு ஓடுதற்கு அருந்தவம் தொடங்குறும்; சாரல்
மலை கண்டோம் என்பது அல்லது, மலர்மிசை அயற்கும்,
இலை கண்டோம் எனத் தெரிப்ப அருந் தரத்தன, ஏழும்.

பொ :—கலைகள் அனைத்தும் தன்னிடத்தே தோன்றி வளர்ந்த சந்திரனும் சூரியனும் அம்மரங்களின் நுனியைக் கண்டு அவற்றின் மேல் தாம் ஓடுதற்கு அரிய தவத்தைத் தொடங்கிக்கொண்டே யிருக்கின்றன; தாமரை மலர்மேலிருக்கும் பிரமனுக்கும் சாரலையுடைய மலையைக் கண்டோம் என்று சொல்வதல்லது, அவற்றின் இலையைக் கண்டோம் என்று தெரிந்து கூறுவதற்கு அருமையான தரத்தையுடையன அம்மரங்கள் ஏழும். (4)

3971. ஒக்க நாளெலா முழல்வன
வுலைவில வாக
மிக்க தோர்பொரு ளுளதென
வேறுகண் டிலமால்
திக்கும் வானமுஞ் செறிந்தவத்
தருநிழற் சீதம்
புக்கு நீங்கலிற் றளர்வில
விரவிதேர்ப் புரவி.

ஒக்க நாள் எலாம் உழல்வன, உலைவு இல ஆக,
மிக்கது ஓர் பொருள் உளது என வேறு கண்டிலமால்,
திக்கும், வானமும் செறிந்த அத் தரு நிழல் சீதம்
புக்கு நீங்கலின் தளர்வு இல, இரவி தேர்ப் புரவி.

பொ :—எல்லாத் திக்குக்களிலும் வானத்திலும் நெருங்கிப் பரந்த அம்மரங்களின் நிழற் குளிர்ச்சியில் புகுந்து செல்வதனால் சூரியனது தேரிற் கட்டப்பட்ட (ஏழு) குதிரைகளும் தளர்ச்சி யில்லாதனவா யிருந்தன; நாள் முழுவதும் ஒரே தன்மையாய் ஓடிக்கொண்டிருக்கும் அக் குதிரைகள் சற்றும் வருத்தமில்லாதவையா யிருத்தற்கு இதை

விட வேறு சிறந்ததொரு காரணம் இருப்பதாக எமக்குத் தெரிய வில்லே.

கு :—இதனுல் அம்மரங்கள் சூரிய மண்டலத்திற்கும் அப்பால் உயர்ந்திருந்தன என்று கூறியவாறு. இது தற்குறிப்பேற்றம் என்னும் அணி. (5)

3972. நீடு நாள்களுங் கோள்களு
மென்னமே னிமிர்ந்து
மாடு தோற்றுவ மலரெனப்
பொலிகின்ற வளத்த
ஓடு மாச்சுடர் வெண்மதிக்
குட்கறுப் புயர்ந்த
கோடு தேய்த்தலிற் களங்கமுற்
ருலெனுங் குறிய.

நீடு நாள்களும், கோள்களும், என்ன, மேல் நிமிர்ந்து
மாடு தோற்றுவ மலர் எனப் பொலிகின்ற வளத்த;
ஓடு மாச்சுடர் வெண் மதிக்கு, உள் கறுப்பு, உயர்ந்த
கோடு தேய்த்தலின், களங்கம் உற்ருல் எனும் குறிய.

பொ :—மலர்கள் என்று (அம்மரங்களின்) இடத்தில் மேலே உயர்ந்து தோன்றுகின்றவை, பெருகிய நட்சத்திரங்களும் கிரகங் களும் என்று சொல்லும்படியாக விளங்குகின்ற செழுமையை யுடையன; வானத்திற் செல்லுகின்ற சிறந்த ஒளியையுடைய வெண்மையான சந்திரனுக்கு அகத்தேயுள்ளே கறை (அம்மரங் களின்) உயர்ந்த கொம்புகள் பட்டுத் தேய்த்தலால் காழ்ப்பு ஏற் பட்டது என்னும்படியான குறிப்பை யுடையனவாய் நீண்டிருந்தன.

கு :—பலவான நட்சத்திரங்களும் கிரகங்களும் அம்மரங்களில் பூத்திருந்தன என்னும்படியாகச் செழுமை மிகுந்த மலர்கள் மிக உயரத்தில் மலர்ந்திருந்தன என்றவாறு. முதலிரண்டு அடிகளுக்கு இவ்வாறு பொருள் கொள்ளாது, நாள்களும் கோள்களும் அம்மரங் களின் மலர்கள் என்னும்படியாக விளங்குகின்ற வளர்ச்சியையுடை யவை என்றும் பொருள் கூறுவர். நாள்கள் - இருபத்தேழு நட்சத் திரங்கள். கோள்கள் - ஒன்பது கிரகங்கள். (6)

3973. தீத றும்பெருஞ் சாகைக
டழைக்கின்ற செயலால்
வேத மென்னவுந் தகுவன
விசும்பினு முயர்ந்த
வாதி யண்டமுன் பளித்தவ
னுலகினங் கவனூ
ரோதி மந்தனிப் பெடையொடும்
புடையிருந் துறைவ.

தீது அறும் பெருஞ் சாகைகள் தழைக்கின்ற செயலால்
வேதம் என்னவும் தகுவன; விசும்பினும் உயர்ந்த;
ஆதி அண்டம் முன்பு அளித்தவன் உலகின், அங்கு அவன் ஊர்
ஓதிமம் தனிப் பெடையொடும் புடை இருந்து உறைவ.

பொ:—கெடுதலில்லாத பெரிய கிளைகள் செழித்து வளர்ந்துள்ள செய்கையால் (அம்மரங்கள்) வேதங்கள் என்று சொல்லவும் தகுதியுடையன; (அவை) வான மண்டலத்தினும் உயர்ந்து விளங்குவன; பழமையான இவ்வண்டங்களை முன் படைத்தளித்த பிரமனுடைய சத்தியலோகமாகிய அவ்விடத்தில், அவன் ஏறிச்செல்லும்படியான அன்னப்பறவை, தனது ஒப்பற்ற பெட்டையன்னத்தோடும் (அம்மரங்களின்) ஓர் இடத்திலே தங்கி வாழ இடமாவன.

கு:—சாகை - வேதங்களின் கிளைப்பகுதி: மரக்கிளை; இங்கே சிலேடை நயம் தோன்ற வந்தது. வேதங்களின் சாகைகள் அழிவற்றனவாயும் அளவற்றனவாயும் இருத்தல் போல, அம்மரங்களின் கிளைகளும் அழிவற்றன, அளவற்றன என்றவாறு. பிரம்லோகத்திற்கும் மேல் உயர்ந்து அம்மரங்கள் வளர்ந்திருந்தன என்பதைப் பின் இரண்டு அடிகள் தெரிவிப்பனவாகும். (7)

3974. நாற்ற மல்குபோ தடைகனி
காய்முத லுள
வீற்று மண்டலத் தியாவையும்
வீழ்கில யாண்டுங்
காற்ற லம்பினுங் கலிநெடு
வானிடைக் கலந்த
வாற்றின் வீழ்ந்துபோ யலைகடற்
பாய்தரு மியல்ப.

நாற்றம் மல்கு போது, அடை, கனி, காய் முதல் நானு
வீற்று, மண் தலத்து, யாவையும், வீழ்கில, யாண்டும்,
காற்று அலம்பினும், கலி நெடு வானிடைக் கலந்த
ஆற்றின் வீழ்ந்து போய், அலே கடல் பாய் தரும் இயல்ப.

பொ :—(பெரிய) காற்று அசைத்தாலும் (அம்மரங்களின்) நறு மணம் மிக்க மலர்களும், இலேகளும், பழங்களும், காய்களும் முதலிய பலவகைப்பட்ட அனைத்தும், மண்ணுலகில் எவ்விடத்தினும் விழா தனவாய், ஆரவாரத்தையுடைய பெரிய வானுலகத்திற் பொருந்திய ஆகாய கங்கை என்னும் ஆற்றில் விழுந்து (அதன்வழியாகச்) சென்று அலேகளேயுடைய கடலிற் சேர்கின்ற தன்மையையுடையன.

கு :—இதனுல் அம்மரங்கள் ஆகாய கங்கையினும் உயர்ந் துள்ளன என்றவாறு. வீற்று மண்டலத்து எனக் கூட்டி, வேறு வேருகிய பூமியில் என்றும் பொருள் கொள்ளலாம். இதற்குப் பின் வருமாறும் விளக்கம் கூறுவதுண்டு: "நறுமணம் மிக்க மலர் இலே காய்கனி முதலிய பதபேதங்களும் வெவ்வேறு மண்டலங்களில் எக் காலத்தும் வீழ்கில; காற்றடித்து வீழ்ந்தாலும், ஓசை நிறைந்த ஆகாயத்திற் பொருந்திய தேவ கங்கையில் விழுந்து அள்ளுண்டு போய்ப் புறவேலேயிற் படியுமியல்பின; எனவே அவைகள் மானச சரயுவென்னும் ஆற்றில் விழுந்து பின் ஆகாய கங்கையிற் சேர்ந்து, அக்கங்கை பாயும் புறவேலேயையே சேருவன என்பதாம்." (8)

**3975.** அடியி னுலுல களந்தவ
னண்டத்துக் கப்பால்
முடியின் மேற்சென்ற முடியன
வாதலின் முடியா
நெடிய மாலெனு நிலேயன
நீரிடைக் கிடந்த
படியின் மேனின்ற மேருமால்
வரையினும் பழைய.

அடியினுல் உலகு அளந்தவன் அண்டத்துக்கு அப்பால்
முடியின் மேல் சென்ற முடியன ஆதலின், முடியா
நெடிய மால் எனும் நிலேயன; நீரிடைக் கிடந்த
படியின் மேல் நின்ற மேரு மால் வரையினும் பழைய.

பொ :—தன்னுடைய திருவடியினலே உலகை யளந்தவனுகிய திருமாலினுடைய அண்டத்துக்கு அப்பாற் சென்ற முடியின் மேலும் சென்ற நுனியினையுடையன, ஆதலால், அழிவில்லாத அந்த நெடு மால் என்று சொல்லத்தக்க நிலைமையையுடையன. கடலாற் சூழப் பட்ட பூமியின் நடுவிலே நிற்கின்ற பெரிய மேருமலையைக் காட்டிலும் பழைமையையுடையன.

கு :—திருமாலினுடைய முடி என்க. திருமால் உலகை ஓரடியாக அளந்தபொழுது கொண்ட நெடுவடிவின் முடி அண்டமுகட்டுக்கும் அப்பாற் சென்றதன்றே. அந்த முடியினுக்கும் அப்பால் அம்மரங் களின் முடி சென்றிருக்கின்ற தென்பதாம். பூமி படைக்கப்பட்ட போதே அதற்கு ஆதாரமாக மேருவும் படைக்கப்பட்டது. அந்த மேருவினும் பழைமை படைத்தன அம்மரங்கள் என்பதாம். (9)

**3976.** வள்ள லிந்திரன் மைந்தற்குந்
தம்பிக்கும் வயிர்த்த
வுள்ள மேயென வொன்றினென்
றுள்வயிர்ப் புடைய
தெள்ளு நீரிடைக் கிடந்துபார்
சுமக்கின்ற சேடன்
வெள்ளி வெண்படங் குடைந்துகீழ்
போகிய வேர.

வள்ளல் இந்திரன் மைந்தற்கும் தம்பிக்கும் வயிர்த்த
உள்ளமே என, ஒன்றின் ஒன்று உள் வயிர்ப்பு உடைய;
தெள்ளு நீரிடைக் கிடந்து பார் சுமக்கின்ற சேடன்
வெள்ளி வெண் படம் குடைந்து கீழ் போகிய வேர.

பொ :—(அம்மரங்கள்) வரையாது கொடுப்பவனுன இந்திரன் மகனுன வாலிக்கும் (அவனது) தம்பியான சுக்கிரீவனுக்கும் (ஒருவர் மேலொருவர்) பகைமை கொண்ட மனம்போல, ஒன்றுபோ லொன்று உள்ளே வயிரத்தன்மையை யுடையவை; தெளிவான கடலினிடையே பொருந்திய பூமியைத் தாங்குகின்ற ஆதிசேடனது வெள்ளி போலும் வெண்ணிறமுள்ள படத்தைக் கிழித்துக்கொண்டு கீழே ஊன்றிச் சென்ற வேரினையுடையவை.

கு :—திருப்பாற்கடலைக் கடைந்து அமுதைத் தேவர்க்கு வழங் கினமை தோன்ற வாலி வள்ளல் எனப்பட்டான். வாலிக்கும் சுக்கி ரீவனுக்கும் பொருந்திய வயிரித்த மனம்போல ஒன்றிலொன்று

அதிகம் உள் வயிரத்தையுடையன மரங்கள். வாலி மன வயிரத்தைப் பார்க்கிலும் சுக்கிரீவன் மனம் வயிரத்தையுடையது. சுக்கிரீவன் மன வயிரத்தினும் வாலி மனம் வயிரத்தையுடையது. இப்படியே பின்னும் பார்க்க ஒருவர் மனதிலொருவர் மனம் வயிரமாயிருக்கும். அதுபோல அம்மரங்களும் ஒன்றுக்கொன்று மேற்பட்ட வயிரத்தையுடையன என்பதாம். ஆதிசேடனுடைய படத்தை ஊடுருவி ஆதிகூர்மம் வரைக்கும் போன வேரையுடையன என்று விளக்கம் கூறுவர். சேடன் வெண்ணிற முடையனுகையால், அவனுடைய படத்தை வெள்ளி வெண்படம் என்ருர். (10)

**3977.** சென்று திக்கினை யளந்தன
பணைகளிற் றேவ
ரென்று நிற்குமென் றிசைப்பன
விருசுடர் திரியும்
குன்றி னுக்குயர்ந் தகன்றன
வொன்றினுங் குறுகா
ஒன்றி னுக்கொன்றி னிடைநெடி
தியோசனை யுடைய.

சென்று திக்கினை அளந்தன; "பணைகளின்", தேவர்,
"என்று நிற்கும்" என்று இசைப்பன; இரு சுடர் திரியும்
குன்றினுக்கு உயர்ந்து அகன்றன; ஒன்றினுங் குறுகா;
ஒன்றினுக்கு ஒன்றின் இடை, நெடிது யோசனை உடைய.

பொ:—(அம்மரங்களின் கிளைகள்) போய் எல்லாத் திசைகளையும் அளவிட்டதுபோல் பரந்துள்ளன; "(அவற்றின்) கிளைகளால் சூரியன் (தடைப்பட்டு) நின்று விடுவான்" என்று தேவர்கள் சொல்லத் தக்கன; சூரிய சந்திரர்கள் வலம் வரும் மேருமலையை விட உயர்ந்தும் அகன்றும் இருந்தன; யாதொன்றினுலும் குறுக்கம் அடையாதன; ஒரு மரத்திற்கும் ஒரு மரத்திற்கும் உள்ள இடைவெளி பல யோசனை தூரத்தை உடையதாயிருந்தது.

கு:—மரங்கள் மிக உயர்ந்துள்ளனவாதலால், மேலுலகத்துத் தேவர்களே கண்டு கூறவல்லவர் என்க. அம்மரங்களைவிட உயரமாக வேறெதுவுமில்லையாதலால், 'ஒன்றினுங்குறுகா' என்ருர். ஒன்ருலும் குறைவுபடாதன என்றும், எவற்ருலும் கேடு அடையாதன என்றும் பொருள் கொள்ளலாம். யோசனை என்பது ஓர் எல்லையளவு: நான்கு குரோசங் கொண்டது; 10 மைல் அளவு. (11)

### இராமன் நாணொலி எழுப்புதல்

**3978.** ஆய மாமர மனைத்தையு
நோக்கிநின் றமலன்
தூய வார்கணை துரப்பதோ
ராதரந் தோன்றச்
சேய வானமுந் திசைகளுஞ்
செவிடுறத் தேவர்க்
கேய்வி லாததோர் பயம்வரச்
சிலையினா ணெறிந்தான்.

ஆய மாமரம் அனைத்தையும் நோக்கி நின்று, அமலன்,
தூய வார்கணை துரப்பது ஓர் ஆதரம் தோன்றச்
சேய வானமும், திசைகளும் செவிடு உறத் தேவர்க்கு
ஏய்வு இலாதது ஓர் பயம் வரச் சிலையின் நாண் எறிந்தான்.

பொ :—இராமபிரான் அவ்வியல்பிற்ருய பெரிய மராமரங்கள் ஏழையும் பார்த்து நின்று, தூய்மையான நீண்ட தன் அம்பைச் செலுத்துதற்கேற்ற ஒரு விருப்பம் மனதில் உண்டாகவும், தூரத்தி லுள்ள வானுலகத்திலும் எல்லாத் திக்குகளிலும் உள்ள உயிர்கள் செவிடுபடவும், தேவர்களுக்கு (இதுகாறும்) உண்டாகாததோர் அச்சம் உண்டாகவும், வில்லில் ஏற்றிய நாணியை(க் கைவிரலால்) சுண்டினான்.

கு :—தேவர்கள் இது போன்ற நாணோசையை இதுவரையிற் கேட்டிராமையின், ‘ஏய்விலாததோர் பயம் வர’ என்ருர். நாணெறிதலை, டங்காரத்தொனி செய்தல் என்பர். (12)

### நாணொலியின் வருணனை

**3979.** ஒக்க நின்றதெவ் வுலகமு
மங்கங்கே யோசை
பக்க நின்றவர்க் குற்றது
பகர்வதெப் படியோ
திக்க யங்களு மயங்கின
திசைகளுந் திகைத்த
புக்க யன்பதி சலிப்புற
வொலித்ததப் பொருவில்.

ஒக்க நின்றது எவ் உலகமும் அங்கு அங்கே ஓசை;
பக்கம் நின்றவர்க்கு உற்றது பகர்வது எப்படியோ?
திக்கயங்களும் மயங்கின; திசைகளும் திகைத்த;
புக்கு, அயன்பதி சலிப்பு உற ஒலித்தது, அப் பொரு வில்.

பொ:—அந்தச் சுண்டப்பட்ட நாணோசை எல்லா உலகங்களிலும் ஒரே தன்மைத்தாய் அவ்வவ்விடங்களிற் (போய்ப்) பரவி நின்றது; (அற்றேல்) அருகில் இருந்தவர்களுக்கு நேர்ந்ததைச் சொல்வது எவ்வாறோ? (எட்டுத்) திசையானைகளும் மயக்கம் அடைந்தன; எல்லாத் திக்குகளும் கலக்கம் அடைந்தன; பொருதற்குரிய அந்த வில்லின் நாணொலி பிரமலோகமும் அதிர்ச்சியடையும்படிப் புகுந்து முழங்கியது.

கு:—மிகச் சேய்மைக்கண் வெவ்வேறுலகத்துள்ளவர்களும் கலங்கி மயங்கி அதிர்ச்சி அடைவதானால் அண்மையில் உள்ளவர்கள் உற்ற நிலையை எடுத்து எவ்வாறு கூறுவது என்றவாறு. (13)

**3980.** அரிந்த மன்சிலை நாணெடி
தார்த்தலு மமர
ரிரிந்து நீங்கினர் கற்பத்தி
னிறுதியென் றயிர்த்தார்
பரிந்த தம்பியே பாங்குநின்
றான்மற்றைப் பல்லோர்
புரிந்த தன்மையை யுரைசெயிற்
பழியவர்ப் புணரும்.

அரிந்தமன் சிலை நாண் நெடிது ஆர்த்தலும், அமரர்
இரிந்து நீங்கினர், கற்பத்தின் இறுதி என்று அயிர்த்தார்;
பரிந்த தம்பியே பாங்கு நின்றான்; மற்றைப் பல்லோர்
புரிந்த தன்மையை உரைசெயின், பழி அவர்ப் புணரும்.

பொ:—பகைவர்களை அடக்குபவனான இராமனுடைய வில்லின் நாண் பெரிது ஆரவாரித்தலும், தேவர்கள் ஓடித் தம்மிடத்தை நீங்கி, யுகமுடிவென்று ஐயுற்றார்; (அண்ணனிடத்து) அன்புகொண்ட தம்பியாகிய இலக்குவன் ஒருவனே அருகில் (அசையாது) நின்றான்; மற்றை (சுக்கிரீவன், அநுமன் முதலிய) பலரும் அடைந்த நிலையைச் சொல்லத் தொடங்கினால், அவர்களுக்கு இகழ்ச்சி வந்து சேரும்.

கு :—அரிந்தமன் : வடசொல்; பாவத்தைப் போக்குபவன் என்றும் மற்றும் பலவாகப் பொருள் கூறுவர். கற்பத்தின் இறுதி - பிரளய காலம். தமையன்மேற் பேரவாவுடைமையாலும், அவனுக்கு வருந் துயரங்களைத் தனக்கும் வந்தனவாகக் கொண்டு வருந்துவோனுதலாலும், இலக்குவனை, 'பரிந்த தம்பி' என்ருர். 'ப்ழி அவற் புணரும்' எனப் பாடங் கொண்டு, "ஏனைப் பலர் செய்த தன்மையைச் சொன்னல் இராமனுக்கு வசைவரும், அதனுற் சொல்லேம். எனவே, சுக்கிரீவன், அநுமன், குமுதன், நீலன் முதலியோரெல்லாம் அவ்வோசையைக் கேட்டவுடனே, தடுமாறித் திகிலடைந்து நிலத்திற் றலைகீழாய் விழுந்துருண்டாரென்பதாம். அதனுலே தமக்கிதஞ் செய்வானென்று நம்பி வந்த இவர்க்கு இடைவழியில் அதஞ் செய்தான் என்பதும், அதனை நாம் சொன்னல் இராமனை நம்பிக்கைத் துரோகி என்போர் கேட்டோரென்பதும் பெற்றும்" என்று பொருள் கூறுவாரும் உளர். (இது, யாழ்ப்பாணத்துக் கையெழுத்துப் பிரதியொன்றிற்கண்டது.) (14)

### இராமன் மராமரங்களை எய்தல்

3981. எய்தல் காண்டுங்கொ லின்னமென்
றரிதின்வந் தெய்திப்
பொய்யின் மாருதி முதலினோர்
புகழ்வுறும் பொழுதில்
மொய்கொள் வார்சிலை நாணினை
முறையுற வாங்கி
வெய்ய வாளியை யாளுடை
வில்லியும் விட்டான்.

"எய்தல் காண்டும் கொல் இன்னம்" என்று,
அரிதின் வந்து எய்தி,
பொய் இல் மாருதி முதலினோர்
புகழ்வுறும் பொழுதில்,
மொய் கொள் வார்சிலை நாணினை
முறை உற வாங்கி,
வெய்ய-வாளியை, ஆளுடை
வில்லியும் விட்டான்.

பொ :—பொய்ம்மையில்லாத அனுமன் முதலானவர்கள் "இன்னமும் அம்பெய்தலைப் பார்ப்போம்" என்று சொல்லிக்கொண்டு

அருமையாக(ப் பெரும் பாடுபட்டவர்களாய்) வந்து சேர்ந்து (இராமன் ஆற்றலைப்) புகழ்ந்து பேசிய வேளையில், வலிமை பொருந்திய நீண்ட வில்லின் நாண் கயிற்றை முறைப்படியே நன்றாக இழுத்து ஒரு கொடிய அம்பை வில்லையாளுகின்றவனான இராமனும் எய்தான்.

கு :—முன் அஞ்சியோடியவர்கள் அவ்வச்சம் நீங்கித் திரும்புதல் எளிதாக நிகழவில்லையாதலின் "அரிதின் வந்தெய்தி" என்றார். அநுமன் சத்தியவான் ஆகையால், "பொய்யில் மாருதி" எனப்பட்டான். அகத்திய முனிவரால் மந்திரோபதேசத்தோடு கொடுக்கப்பட்ட நெருப்பு வடிவமாகிய பாசுபதம் என்னும் கணையை மராமரத்தின்மேல் இராமன் ஏவினான் என்று சொல்வர். ஏனையோரை வில்லேயாள்வது, இவன் வில்லையாளுவோன் என்பார், "ஆளுடை வில்லி" என்றார். எல்லா உயிர்களையும் அடிமையாகவுடைய வில்லில் வல்லவனான இராமன் என்றுமாம். (15)

### இராமனது அம்பின் செயல்

3982. ஏழு மாமர முருவிக்கீ
 ழுலகமென் றிசைக்கு
மேழு மூடுபுக் குருவிப்பின்
 னுடனடுத் தியன்ற
வேழி லாமையான் மீண்டதவ்
 விராகவன் பகழி
யேழு கண்டபி னுருவுமா
 லொழிவதன் றின்னும்.

ஏழு மாமரம் உருவிக் கீழ் உலகம் என்று இசைக்கும்
ஏழும் ஊடு புக்கு உருவிப் பின் உடன் அடுத்து இயன்ற
ஏழ் இலாமையால் மீண்டது, அவ் இராகவன் பகழி;
ஏழு கண்டபின் உருவுமால், ஒழிவது அன்று, இன்னும்.

பொ :—இராமன் எய்த அந்த அம்பு அந்தப் பெரிய ஏழு மராமரங்களையும் துளைத்துவிட்டு, கீழுலகம் என்று சொல்லப்படுகின்ற ஏழு பாதலங்களையும் துளைத்துச் சென்று, பின்பு அப்பாற்பொருந்தியிருக்கின்ற ஏழு என்னும் தொகையுடைய பொருள் வேறு இல்லாமையால் திரும்பி (இராமனிடம்) வந்து விட்டது; இன்னமும் ஏழென்னும் தொகையையுடைய பொருளைக் காணுமாயின் துளையாமல் விடுவதன்று, துளைத்தேவிடும்.

கு :—கீழுலகங்கள் ஏழாவன:—அதலம், விதலம், சுதலம், தராதலம், ரசாதலம், மகாதலம், பாதாளம். இக்காலத்தும் ஏழென்னுந் தொகைப்பட்ட பொருள் அழியாதிருந்தால் உருவிக்கொண்டே நிற்கும் என்று இராமபாணத்தின் வேகத்தையும் இலக்கைத் தவுறாது பாயும் இயல்பையும் கூறியவாறு. (16)

ஏழு என நின்றவை அஞ்சுதல்

3983. ஏழு வேலையு முலகமே
லுயர்ந்தன வேழு
மேழு குன்றமு மிருடிக
ளெழுவரும் புரவி
யேழு மங்கைய ரெழுவரு
நடுங்கின வென்ப
வேழு பெற்றதோ விக்கணைக்
கிலக்கமென் றெண்ணி.

ஏழு வேலையும், உலகம் மேல் உயர்ந்தன ஏழும்,
ஏழு குன்றமும், இருடிகள் எழுவரும், புரவி
ஏழும், மங்கையர் எழுவரும், நடுங்கின என்ப,
"ஏழு பெற்றதோ இக் கணைக்கு இலக்கம்?" என்று எண்ணி.

பொ :—ஏழு கடல்களும், மேலே உயர்ந்துள்ளனவான உலகங்கள் ஏழும், ஏழு குலமலைகளும், ஏழு முனிவர்களும், கதிரவன் தேரை இழுத்துச் செல்லும் ஏழு குதிரைகளும், ஏழு கன்னிமார்களும், "இந்த அம்புக்குக் குறி ஏழு என்னும் தொகைப் பொருள்கள் அனைத்துமோ?" என்று எண்ணி நடுக்கமுற்றன. (என்ப: அசை)

கு :—ஏழு வேலை :—உவர்நீர், கருப்பஞ்சாறு, மது, நெய், தயிர், பால், நன்னீர் இவற்றின் மயமானவை. மேலேழுலகங்கள் :—பூலோகம், புவலோகம், சுவலோகம், ஜநலோகம், மஹலோகம், தவலோகம், சத்தியலோகம் என இவை. ஏழு குலமலைகள் :—கயிலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி என்பன. எழுவர் முனிவர் :—அத்திரி, பிருகு, குச்சர், வசிட்டர், கௌதமர், காசியபர், ஆங்கீரசர். சூரியன் தேர்க் குதிரைகள் :—காயத்ரீ, உஷ்ணிக், அநுஷ்டுப், ப்ருஹதீ, பங்க்தி, த்ரிஷ்டுப், ஜகதீ என்ற ஏழு சந்தசுகள். கன்னி எழுவர் :—பிராஹ்மி, மாஹேச்வரி,

கௌமாரி, நாராயணி, வாராகி, இந்திராணி, சாமுண்டி. அஃறிணையும் உயர்திணையும் கலந்து எண்ணப்பட்டு மிகுதியினால் "நடுங்கின" என்னும் அஃறிணை முடிபைப் பெற்றன. (17)

## சுக்கிரீவன் பேசத் தொடங்குதல்

3984. அன்ன தாயினு மறத்தினுக்
காருயிர்த் துணைவ
னென்னுந் தன்மையை நோக்கின
ரியாவரு மெவையும்
பொன்னின் வார்கழற் புதுநறுந்
தாமரை பூண்டு
சென்னி மேற்கொளூஉ வருக்கன்சே
யிவையிவை செப்பும்.

அன்னது ஆயினும், அறத்தினுக்கு
ஆருயிர்த் துணைவன்
என்னும் தன்மையை நோக்கினர்
யாவரும், எவையும்;
பொன்னின் வார் கழல் புது நறும்
தாமரை பூண்டு,
சென்னி மேல் கொளூஉ, அருக்கன் சேய்
இவை இவை செப்பும்.

பொ :—அவ்வாறு அச்சமுண்டானாலும், (இராமன்) தருமத்திற்கு அருமையான உயிர் போன்ற பாதுகாவலன் என்னும் இயல்பை யாவரும், எல்லாமும், பார்த்து உணர்ந்து அச்சம் நீங்கினர். (அப் பொழுது) சூரியன் மகனான சுக்கிரீவன் பொன்னாலாகிய நீண்ட வீரக் கழல்களையுடைய புதிய மணமுள்ள தாமரை மலர் போன்ற இராம னது திருவடிகளைப் பொருந்தித் தலைமேற் கொண்டவனாய் இன் னின்ன சொற்களைச் சொன்னான். (அவற்றைப் பின்வரும் இரு செய் யுட்களிற் காணலாம்.)

கு :—அறநெறி பிறழாதவன் இராமன் ஆதலால் 'அறத்தினுக் காருயிர்த் துணைவன்' எனப் பட்டான். (18)

### சுக்கிரீவன் இராமனைத் துதித்தல்

**3985.** வையநீ வானுநீ மற்றுநீ மலரின்மே
★ லையனீ யாழிமே லாழிமா மாலுநீ
செய்யனீ வினைதெறுந் தேவுநீ நாயினே
னுய்யவந் துதவினா யுலகமுந் துதவினாய்.

"வையம் நீ! வானும் நீ! மற்றும் நீ! மலரின் மேல்
ஐயன் நீ! ஆழிமேல் ஆழிமா மாலும் நீ!
செய்யன் நீ! வினைதெறும் தேவும் நீ! நாயினேன்
உய்ய வந்து உதவினாய், உலகம் முந்து உதவினாய்!"

பொ :—"நிலமும் நீயே; வானமும் நீயே; பிறவும் (தீ, நீர், காற்று என்னும் பூதங்களும்) நீயே; தாமரைப் பூவின்மேல் வீற்றிருக்கிற பிரமனும் நீயே; திருப்பாற்கடலிற் பள்ளிகொண்ட சக்கரப் படையையுடைய நெடிய திருமாலும் நீயே; செந்நிறக் கடவுளாகிய சிவனும் நீயே; வினைகளை யெல்லாம் பொடி செய்கின்ற தெய்வமும் நீயே; உலகங்களை யெல்லாம் முன்னம் தந்தருளினவனும் நீயே; நாய் போன்றவனான நான் நற்கதியடையும் பொருட்டு நீயாக வலிய வந்து எனக்கு அருள் செய்தாய்." (19)

### சுக்கிரீவன் முகமன் கூறுதல்

**3986.** என்னெனக் கரியதெப்
பொருளுமெற் கெளிதலா
லுன்னையித் தலைவிடுத்
துதவினார் விதியினா
ரன்னையொப் புடையவுன்
னடியருக் கடியன்யான்
மன்னவர்க் கரசவென்
றுரைசெய்தான் வசையிலான்.

"என் எனக்கு அரியது, எப்பொருளும் எற்கு எளிதலால்?
உன்னை இத்தலை விடுத்து உதவினார் விதியினார்;
அன்னை ஒப்புடைய உன் அடியருக்கு அடியன் யான்,
மன்னவர்க்கு அரச!" என்று உரை செய்தான் வசை இலான்.

பொ :—அரசர்களுக்கு அரசனே! நல்லூழானது உன்னை இவ்விடத்தே கொண்டு வந்து எனக்கு அளித்தது; (இனி) எந்தக் காரி

யமும் எனக்கு(ச் செய்து முடித்தற்கு) எளிதாகுமேயன்றி எனக்கு அரியதாயிருக்கக் கூடியது என்னதான் உண்டு? தாய்க்கு நிகரான உன் அடியார்களுக்கு நான் அடியவனானேன் என்று குற்றமற்றவனான சுக்கிரீவன் கூறினான். (20)

## மற்றை வானரரின் மகிழ்ச்சி

3987. ஆடினார் பாடினா ரங்குமிங் குங்கலந்
தோடினா ருவகையின் னறவையுண் டுணர்கிலார்
நேடினாம் வாலிகா லனையெனா நெடிதுநாள்
வாடினார் தோளெலாம் வளரமற் றவரெலாம்.

ஆடினார், பாடினார், அங்கும் இங்கும் கலந்து
ஓடினார், உவகை இன் நறவை உண்டு உணர்கிலார்,
"நேடினாம் வாலி காலனை" எனா, நெடிது நாள்
வாடினார் தோள் எலாம் வளர, மற்றவர் எலாம்.

பொ :—(வாலிக்கு அஞ்சியவர்களாய்ப்) பல நாட்களாய் மெலிந்து கிடந்தோரான (சுக்கிரீவனைச் சேர்ந்த) மற்ற வானரர்கள் எல்லோரும் "வாலிக்கு யமனைத் தேடிப் பெற்று விட்டோம்" என்று கூறி, மகிழ்ச்சியாகிய மதுவைக் குடித்து அறியாதவர்களாய் (மெய் மறந்து) தோள்கள் எல்லாம் பூரிக்கப்பெற்று ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் கண்ட இடமெல்லாம் கூடிக்கூடி ஓடினார்கள். (21)

மராமரப் படலம் முற்றிற்று

# 5. துந்துபிப் படலம்

வாலியால் கொல்லப்பட்ட துந்துபி என்னும் அசுரனது உலறிய உடற் குவையை இராமன் ஏவலால் இலக்குவன் கால் விரலால் உந்திய செய்தியைக் கூறும்பகுதியாதலின் இது துந்துபிப் படலம் என்னும் பெயர் பெற்றது.

மயனுடைய மகனுன துந்துபி என்னும் அசுரன் எருமை வடிவம் கொண்டவன். இவன் பேரிகைபோல் போரொலி செய்பவன். ஆதலால் துந்துபி என்னும் பெயர் பெற்ருன். இவன் கடலிற் கண்வளரும் திருமாலைப் போருக்கழைத்தான். திருமால் அவனைச் சிவனிடம் அனுப்பினுன். சிவன் இந்திரனிடம் அனுப்பினுன். இந்திரன் வாலியிடம் அனுப்பினுன். அவ்வாறே துந்துபி சென்று வாலியை வலியப் போருக்கழைத்தான். இருவரும் ஓராண்டளவு விடாது வெம்போர் புரிந்தனர். பின்னர் வாலி துந்துபியைக் கொன்று அவன் உடலை வீசி யெறிந்தான். அது ருசியமூக மலையில் மதங்கமுனிவர் இருக்கையருகே போய் விழுந்தது. அவ்விடம் தூய்மை கெட்டதை அறிந்த மதங்கர் வெகுண்டார். வாலியே எறிந்தவன் என்பதை உணர்ந்து, அவன் அம்மலைக்கு வந்தால் தலை வெடித்து இறக்கக் கடவன் என்றும், அவனைச் சேர்ந்த நண்பர்கள் வந்தால் கல்வடிவமாகக் கடவர் என்றும் சபித்தார். அதனுல், வாலியிடமிருந்து தப்பித்து ஓடிய சுக்கிரீவன், அந்த ருசியமூக மலையைப் புகலாக அடைந்து அங்கு மறைந்து வாழ்ந்து வந்தான். பின்னர் இராமனேடு நட்புக்கொண்டு மராமரங்களை இராமன் எய்த பின்னர் அவ்வெலும்புக் கூட்டின் அருகே அவர்கள் வரவும் சுக்கிரீவன் அத் துந்துபியின் வரலாற்றைக் கூறினுன். அதனைக் கேட்ட இராமன் ஏவவும், இலக்குவன் தன் கால் விரலினுல் உந்தினுன். அது பிரம லோகத்தை யடைந்து திரும்பி வந்து விழுந்தது. வானரர்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர். இந்நிகழ்ச்சியே இப்படலத்திற் கூறப்பட்டுள்ளது.

துந்துபியைப் பற்றி வான்மீகத்தில் வேறு விதமாய்க் கூறப்படுகிறது. எருமை யுருக்கொண்ட துந்துபி என்னும் அசுரன் ஆயிரம் யானையின் பலத்தைக் கொண்டவன். அவன் முதலில் கடலரசனைப் போருக்கு அழைத்தான். கடலரசன் போர் செய்யாது அவனை இமய மலையரசனிடம் அனுப்பினுன். இமயமலையரசனும் போர் நேராது அவனை வாலியிடம் அனுப்பினுன். வாலி அவனைக் கொன்று அவன் உடலை மதங்கர் ஆசிரமத்தின் மேல் எறியவும் மதங்கரால் வாலி சபிக்

கப்பட்டான். சுக்கிரீவன் இராமனுக்குள்ள ஆற்றலில் தனக்குள்ள ஐயத்தைக் கூறி, வல்லமையுள்ள வாலியைக் கொல்லும் வல்லமை தனக்கு உண்டு என்பதைக் காட்ட, துந்துபியின் உடலைக் காலால் தூக்கி எறியும்படி இராமனை வேண்டினன். இராமனும் அப்படியே தன் காற்பெருவிரலால் தூக்கி விளையாட்டாகவே பத்து யோசனை தூரம் எற்றி விட்டான். அப்பொழுதும் சுக்கிரீவனுக்கு நம்பிக்கை பிறக்கவில்லை; ஏனெனில் துந்துபியின் உடல் அப்பொழுது காய்ந்து போன நிலையில் தசை கழிந்ததாய் இலேசாய்ப் புல்லைப் போன்றிருந்தது. ஆதலால் வாலிக்கு அதிக பலமா, இராமனுக்கு அதிக பலமா என்று சுக்கிரீவனால் நிச்சயிக்க முடியாதிருந்தது. ஏழு ஆச்சாமரங்களைச் சேர்த்தும் ஒவ்வொன்ருகவும் வாலி துளைத்திருக்கிருன். அதில் ஒன்றையாவது இராமன் துளைக்க வேண்டும் என்று சுக்கிரீவன் வேண்டுகிருன். இராமன் ஏழு மரங்களையும் துளைக்கிருன். இவ்வாருக வான்மீகத்தில் கண்டிருக்கிறது. இதை முற்றிலும் கமபன் மாற்றியிருக்கும் திறன் அறிந்து இன்புறற்பாலது.

## 5. துந்துபிப் படலம்

### இராமன் துந்துபியின் உடலைக் காணுதல்

**3988.** அண்டமும் மகிலமும்
மடையவன் றனலிடைப்
பண்டுவெந் தனநெடும்
பசைவறந் திடினும்வான்
மண்டலந் தொடுவதம்
மலையின்மேன் மலையெனக்
கண்டனன் றுந்துபிக்
கடலனு னுடலரோ.

அண்டமும் அகிலமும் அடைய அன்று அனலிடைப்
பண்டு வெந்தன நெடும் பசை வறந்திடினும், வான்
மண்டலம் தொடுவது, அம் மலையின் மேல் மலை எனக்
கண்டனன், துந்துபிக் கடல் அனுன் உடல், அரோ.

பொ :—(குருதி தசை முதலியன உலர்ந்து) மிகுந்த ஈரம் வற்றிக் காய்ந்து போய்க் கிடந்தாலும், அண்டகோளமும் (அதனிடத்துள்ள) எல்லா உலகங்களும் ஒருங்கே அந்நாளில் (ஊழி முடிவில்) முன்னே ஊழித் தீயிற்பட்டு வெந்து கிடந்தாற் போன்றதும், ஆகாய மண்டலத்தளவும் உயர்ந்ததுமான, கடல்போன்ற துந்துபி என்னும் அசுரனின் உடல் அந்த ருசியமூக மலையின் மீது மற்றொரு மலை கிடப்பது போன்று கிடப்பதை (இராமன்) பார்த்தான்.

கு :—அண்டகோளமும் உலகங்களும் ஊழித்தீயில் எரிந்து வெறுங்கூடாய்க் கிடப்பது போலத் துந்துபியின் எலும்புக் கூடு ஈரப்பசையில்லாது காய்ந்து போய்க் கிடந்ததாம். பேரொலியாலும் பெருமையாலும் கருநிறத்தாலும் கடல் துந்துபிக்கு உவமையாயிற்று. (1)

### இராமன் வினவுதல்

**3989.** தென்புலக் கிழவனூர் மயிடமோ திசையின்வாழ்
வன்புலக் கரிமடிந் ததுகொலோ மகரமீ

னென்புலப் புறவுலர்ந் ததுகொலோ இதுவெனு
வன்புலப் பரியநீ யுரைசெய்வா யெனவவன்.

'தென்புலக் கிழவன் ஊர் மயிடமோ? திசையின் வாழ்
வன்பு உலக் கரி மடிந்தது கொலோ? மகர மீன்
என்பு உலப்புற உலர்ந்தது கொலோ இது?' என,
'அன்பு உலப்பு அரிய நீ உரை செய்வாய்' என, அவன்.

பொ:—(அதனைக் கண்டவனை இராமன்) 'இது தெற்குத் திசைக்குத் தலைவனை இயமன் ஏறிச் செலுத்துகின்ற எருமைக் கடாவோ? (அல்லது) திக்குகளில் நிற்கின்ற வலிய திரண்ட கற் போன்ற யானைகளில் ஒன்று இறந்து கிடக்கின்றதோ? (அல்லது) மகரம் என்னும் பெரிய மீன் இறந்துபடவும் அதன் எலும்புக்கூடு காய்ந்து போய்க் கிடக்கின்றதோ? என்று (வியப்பெய்திச் சுக்கிரீவனைப் பார்த்து) 'அன்பு குறைவுபடாதவனை நீ சொல்லுவாயாக' என்று கேட்கவும், அச்சுக்கிரீவன்.

கு:—சுக்கிரீவன் கூறியன மேல்வரும் செய்யுட்களில் காணலாம். உலம் - திரண்ட கல். உலப்பு - இறப்பு, குறைவு. (2)

சுக்கிரீவன் துந்துபியின் வரலாற்றைக் கூறுதல் 3990-4002

**3990.** துந்துபிப் பெயருடைச்
சுடுசினத் தவுணன்மீ
திந்துவைத் தொடநிமிர்ந்
தெழுமருப் பிணையினன்
மந்தரக் கிரியெனப்
பெரியவன் மகரநீர்
சிந்திடக் கருநிறத்
தரியினைத் தேடுவான்.

'துந்துபிப் பெயருடைச் சுடு சினத்து அவுணன், மீது
இந்துவைத் தொட நிமிர்ந்து எழு மருப்பு இணையினன்,
மந்தரக் கிரி எனப் பெரியவன், மகர நீர்
சிந்திடக் கரு நிறத்து அரியினைத் தேடுவான்.'

பொ:—'மேலே (வானில்) உள்ள சந்திரனைத் தொடும்படியாக மேலெழுந்து வளர்ந்துள்ள இரண்டு கொம்புகளையுடையவனும், மந்தரமலை போன்று (உருவத்தில்) பெரியவனும், தீப்போலுங்

கொடிய சினத்தையுடையவனுமான துந்துபி என்னும் பெயருடைய அசுரன், சுருமீன்கள் நிறைந்த கடல்நீர் சிதறும்படியாகக் கரிய நிறத்தையுடைய திருமாலைத் தேடிச் சென்றான்.'

கு :—முன்பாடலில் 'மயிடமோ' என்றதாலும், இங்கு 'மருப்பிணையினான்' என்றதாலும் துந்துபி எருமை வடிவினன் என்பது புலனாகும். மகரம் - சுருமீன். மகரமீனோடு கூடிய நீரையுடைய கடலை மகரநீர் என்றார். மகரநீர் சிந்திடத் தேடுவான் என்றதால், கடலைக் கலக்கிக் கொண்டு சென்று தேடினான் என்பது போதரும்; நீரைக் கலக்குவது எருமைக் கியல்பாமாறும் அறியலாம். (3)

3991. அங்குவந் தரியெதிர்ந்
தமைதியென் னென்றலும்
பொங்குவெஞ் செருவினிற்
பொருதியென் றுரைசெயக்
கங்கையின் கணவனக்
கறைமிடற் றிறைவனே
யுங்கள்வெங் கதவலிக்
கொருவனென் றுரைசெய்தான்.

'அங்கு வந்து அரி எதிர்ந்து, "அமைதி; என்?" என்றலும்,
"பொங்கு வெஞ் செருவினில் பொருதி" என்று உரை செயக்
"கங்கையின் கணவன், அக் கறைமிடற்று இறைவனே
உங்கள் வெங் கதவலிக்கு ஒருவன்" என்று உரை செய்தான்.'

பொ :—'(அவ்வாறு துந்துபி தேடவும்) கடலினிடத்தே திருமால் அவன் எதிரே வந்து "அடங்குவாயாக. (நீ வந்த காரணம்) என்ன?" என்று கேட்டலும், (அத்துந்துபி) "சினம் பொங்கும் கொடிய போரிலே (என்னோடு) சண்டையிட வா" என்று சொல்லவும், (திருமால்) "கங்காதேவியின் கணவனான நீலகண்டத்தையுடைய கடவுளாகிய சிவபெருமானே உங்களைப் போன்றவர்களின் கோப மிக்க பெரிய வலிமைக்கு ஒத்த ஒருவனாவான்" என்று கூறினான்.'

கு :—துந்துபி சுடுசினத்தவுணனாதலாலும் மகர நீர் சிந்தும்படியாகக் கடலைக் கலக்கிக்கொண்டு ஆத்திரத்துடன் அங்கு வந்தானாதலாலும், அவனைத் திருமால் அடங்குவாயாக என்னும் பொருளில் 'அமைதி' என்றான். மற்றும், 'அமைதி என்?' என்று கொண்டு, 'என்ன செய்தி?' அல்லது 'என்ன தன்மை?' என்றும் பொருள் கொள்ளலாம். (4)

3992. கடிதுசென் றவனுமக்
கடவுடன் கயிலையைக்
கொடியகொம் பினின்மடுத்
தெழுதலுங் குறுகிமுன்
ெனுடிதிநின் குறையெனென்
றலுநுவன் றனனரோ
முடிவில்வெஞ் செருவெனக்
கருள்செய்வான் முயல்கெனு.

‘கடிது சென்று, அவனும், அக்
கடவுள் தன் கயிலையைக்
கொடிய கொம்பினின் மடுத்து
எழுதலும், குறுகி முன்,
“நொடிதி, நின் குறை என்?”
என்றலும், நுவன்றனன் அரோ,
“முடிவு இல் வெஞ் செரு எனக்கு
அருள் செய்வான் முயல்க” எனு.’

பொ :—‘அவ்வவுணனும் விரைந்துபோய் அச்சிவன் உறைகின்ற கயிலைமலையைத் தன் கொடுமையான கொம்புகளால் முட்டிக் கொண்டு பாய்ந்தபொழுது (சிவன்) அவன் முன்னுல் வந்து, “உனக்கு வேண்டுவது என்ன? சொல்” என்று கேட்கவும், தொலையாத கொடிய போரை எனக்கு அளிக்க முற்படுவாயாக” என்று (துந்துபி) கூறினுன்.

கு :—மடுத்தெழுதலும் என்றது, வலியப் போருக்கு அழைத்தான் என்பதாம். (5)

3993. மூலமே வீரமே மூடினு யோடுபோ
ரேலுமே தேவர்பா லேகெனு வேவினுன்
சாலநாள் போர்செய்வா யாதியேற் சாரல்போர்
வாலிபா லேகேனு வானுளோர் வானுளான்.

‘“மூலமே வீரமே மூடினுயோடு போர்
ஏலுமே? தேவர் பால் ஏகு” எனு ஏவினுன்;
“சால நாள் போர் செய்வாய் ஆதியேல், சாரல்; போர்
வாலி பால் ஏகு” எனு, வான் உளோர் வான் உளான்.’

பொ :—' " (அதைக் கேட்ட சிவன்) " ஆதி முதற்கொண்டு வீரத் தொழிலிலேயே மூழ்கிக்கிடக்கும் உன்னோடு போரிடுவது இயலுமோ? (இயலாது. ஆதலின்) நீ தேவர்களிடம் போர் செய்யப் போவாயாக" என்று சொல்லி அனுப்பினான்; (அவனும் சென்று தேவர்களைப் போருக்கு அழைத்தவுடன்) அந்த வானுலகத்தவர்க்குத் தேவனான இந்திரன் (துந்துபியை நோக்கி) " நீ நீண்டநாள் போர் செய்ய விரும்புவாயானால், இங்குச் சாராதே; போர்க்கு உரிய வாலியினிடம் செல் " என்று'

கு :—' எனா ' என்பது அடுத்த கவியில் ' விட ' என்பதோடு முடியும். வானுளோர் வானுளான் - தேவர்தேவன்; அதாவது, தேவேந்திரன். (6)

3994. அன்னவன் விடவுவந் தவனும்வந் தரிகடம்
மன்னவன் வருகபோர் செய்கென மலையினைச்
சின்னபின் னம்படுத் திடுதலுஞ் சினவியென்
முன்னவன் முன்னர்வந் தனையவன் முனைதலும்.

' அன்னவன் விட, உவந்து, அவனும் வந்து, "அரிகள் தம்
மன்னவன் ! வருக ! போர் செய்க !" என, மலையினைச்
சின்ன பின்னம் படுத்திடுதலும், சினவி, என்
முன்னவன், முன்னர் வந்து அனையவன் முனைதலும்.'

பொ :—' அத் தேவேந்திரன் அனுப்ப, துந்துபியும் மகிழ்ந்து (கிட்கிந்தைக்கு) வந்து, " குரங்குகளுக்கு அரசனே ! வந்து போர் செய்வாயாக " என்று சொல்லிக்கொண்டு அம்மலையைப் பலவாறு சிதைக்கலுற்றபொழுது, எனது அண்ணனான வாலி, கோபங் கொண்டு எதிரில் வந்து துந்துபியோடு போர் செய்த அளவில்.'

கு :—'முனைதலும் ' என்பது அடுத்து வருங் கவியில் ' உணர்ந் திலர்' என்பதனோடு முடியும். (7)

3995. இருவருந் திரிவுறும்
பொழுதினின் னவர்களென்
றொருவருஞ் சிறிதுணர்ந்
திலர்களெவ் வுலகமும்

வெருவருந் தகையராய்
விழுவர்நின் றெழுவரான்
மருவருந் தகையர்தா
னவர்கள்வா னவர்கடாம்.

'இருவரும் திரிவுறும் பொழுதின் இன்னவர்கள் என்று
ஒருவரும் சிறிது உணர்ந்திலர்கள்; எவ் உலகமும்
வெருவரும் தகையர் ஆய்விழுவர், நின்று எழுவரால்;
மருவ அருந் தகையர், தானவர்கள் வானவர்கள் தாம்.'

பொ :—'(வாலி துந்துபி ஆகிய) இரண்டு பேரும் (இடசாரி வல சாரியாகச்) சுழலும் போதில் (அவ்வேகத்தால்) இவர்கள் இன்னுரென்று எவரும் கொஞ்சமும் தெரிந்தாரில்லை; எந்த உலகத்தவரும் அஞ்சும்படியான தன்மையராய்க் கீழே விழுவார்கள், (மீண்டும்) எழுந்து நிற்பார்கள்; அசுரர்களும் தேவர்களும் (அவர்கள்) அருகே நெருங்கவும் முடியாத தன்மையர் ஆனுர்கள்.'

கு :—அவர்கள் இருவரும் சாரி வந்து வேகமாகச் சுழன்றபோது இன்னுரென்று அடையாளம் தெரியாதிருந்தமை முதலிரண்டு அடிகளிற் கூறப்பட்டது. (8)

**3996.** தீயெழுந் ததுவிசும் புறநெடுந் திசையெலாம்
போயெழுந் ததுமுழக் குடனெழுந் ததுபுகை
தோயநன் புணரியுந் தொடர்தடங் கிரிகளுஞ்
சாயழிந் தனவடித் தலமெடுத் திடுதலால்.

'தீ எழுந்தது விசும்புற; நெடுந் திசை எலாம்
போய் எழுந்தது முழக்கு; உடன் எழுந்தது புகை;
தோய நன் புணரியும், தொடர் தடங் கிரிகளும்,
சாய் அழிந்தன, அடித்தலம் எடுத் திடுதலால்.'

பொ —(அவர்கள்) கால்களைத் தூக்கி வைத்தலால், வானை யடையும்படியாக நெருப்புக் கிளம்பியது; (அதன்) ஆரவாரம் பெரிய திக்குக்கள் எல்லாவற்றிலும் சென்று பரவியது; (அதனோடு) புகையும் கூடவே பரவிற்று; நீரினையுடைய நல்ல கடலும், பெரிய மலைத் தொடர்களும் அழகு கெட்டன.

கு :—சாய் - அழகு : 'சங்கஞ் சரிந்தன சாயிழந்தேன்' (திவ். திருவாய்மொழி. 8, 2, 1.); ஒளி யென்றுமாம். (9)

3997. புயலும்வா னகமுமப் புணரியும் புணரிசூ
ழயலும்வீழ் தூளியா லறிவருந் தகையவா
மயனின்மா மகனும்வா லியுமறத் துடலினு
ரியலுமா மதியமீ ராறும்வந் தெய்தவே.

'புயலும் வானகமும் அப் புணரியும் புணரிசூழ்
அயலும் வீழ் தூளியால் அறிவருந் தகையவா,
மயனின் மாமகனும் வாலியும் மறத்து உடலினர்,
இயலும் மாமதியம் ஈர் ஆறும் வந்து எய்தவே.'

பொ :—(அவர்கள் போரில்) பரவி விழுகின்ற துகளினுல், மேகங்களும், வானின் இடங்களும், பெரிய கடலும், அக்கடல் சூழ்ந்துள்ள மற்றைய இடங்களும் அறிவதற்கு அருமையான தன்மையையுடையனவாம்படி, மயனது சிறந்த மகனுகிய துந்துபியும், வாலியும், செல்லுகிற பெரிய மாதங்கள் பன்னிரண்டும் வந்து சேர (ஓராண்டுக் காலமாக) வலிமையோடு போர் செய்தார்கள்.

கு :—மயன்: அசுரத்தச்சனுன ஒரு சிற்பி. ஈராறு மதியம் - ஓர் ஆண்டு. (10)

3998. அற்றதா கியசெருப் புரிவுறும் மளவினிற்
கொற்றவா லியுமவன் குவவுதோள் வலியொடும்
பற்றியா சையினெடும் பணைமருப் பிணைபறித்
தெற்றினு னவனும்வா னிடியினின் றுரறினுன்.

'அற்றது ஆகிய செருப் புரிவுறும் அளவினில்,
கொற்ற வாலியும் அவன் குவவுதோள் வலியொடும்
பற்றி, ஆசையின் நெடும் பணை மருப்பு இணை பறித்து
எற்றினுன்; அவனும் வான் இடியின் நின்று உரறினுன்.'

பொ :—அப்படிப்பட்டதான போரினைச் செய்கின்றபொழுதில், வெற்றியையுடைய வாலியும் திரண்ட தோள்களின் வலிமையுடனே அவ்வசுரனது திக்குக்களை அளாவி நீண்ட பருத்த இரண்டு கொம்புகளையும் பிடித்துப் பிடுங்கி (அவற்றைக் கொண்டே அவனை) அடித்தான் ; அவ்வசுரனும் மேகத்தில் எழுகின்ற இடிபோல முழங்கிக் கொண்டு நின்றுன்.

கு :—ஆசை - திக்கு. உரறுதல் - முழக்கமிடுதல். (11)

**3999.** தலையின்மே லடிபடக்
கடிதுசாய் நெடிதுதா
ளுலையவாய் முழைதிறந்
துதிரவா றொழுகமா
மலையின்மே லுருமிடித்
தென்னவான் மண்ணொடுங்
குலையமா திசைகளுஞ்
செவிடுறக் குத்தினான்.

'தலையின் மேல் அடிபடக் கடிது சாய் நெடிதுதாள்
உலைய, வாய் முழை திறந்து உதிர ஆறு ஒழுக, மா
மலையின் மேல் உரும் இடித்தென்ன, வான் மண்ணொடும்
குலைய, மாதிசைகளும் செவிடுறக் குத்தினான்.'

பொ :—(அவ்வாறு முழங்கி நின்ற அசுரனை வாலி) தலைமேலே அடிபடும்படியும், விரைவில் விழுந்து நீண்ட கால்கள் ஒடியும்படியும், மலைக்குகை போன்ற வாய் திறந்து குருதி ஆறாகப் பெருகும்படியும், மேலுலகமும் பூமியும் நடுங்கவும் பெரிய திக்குக்களெல்லாம் செவிடு படவும், பெரிய மலைமேல் இடியிடித்தாற்போன்று குத்தினான்.

கு :—மலையின் உச்சியில் இடி விழுந்தாற்போல வாலி அவ் வசுரன் தலையிற் குத்தினான். அப்பொழுது விண்ணும் மண்ணும் திசைகளும் அதிர்ந்தன. அவ்வாறு குத்தவும் துந்துபி தலையில் அடி பட்டுக் கால் ஒடிந்து கீழே விழுந்து வாய் வழியே குருதி கக்கினான் என்றவாறு. (12)

**4000.** கவரியிங் கிதுவெனக்
கரதலங் கொடுதிரித்
திவர்தலுங் குருதிபட்
டிசைதொறுந் திசைதொறுந்
துவரணிந் தனவெனப்
பொசிதுதைந் தனதுணைப்
பவர்நெடும் பணைமதம்
பயிலும் வன் கரிகளே.

'"கவரி இங்கு இது" எனக் கரதலம் கொடு திரித்து
இவர்தலும், குருதிபட்டு இசை தொறும், திசை தொறும்

துவர் அணிந்தன எனப் பொசி துதைந்தன, துணைப்
பவர் நெடும் பணை மதம் பயிலும் வன் கரிகளே.'

பொ :—'(அங்ஙனம் விழுந்த துந்துபியை வாலி) கையில் எடுத்து, "இது ஒரு சாமரை" என்று சொல்லும் விதத்தில் சுழற்றிக் கொண்டு உலாவியபொழுது, (அத் துந்துபியின்) உதிரம் துளித்துப் படும்போதெல்லாம், ஒவ்வொரு திக்கிலும் உள்ள இரண்டு நெருங்கிய நீண்ட கொம்புகளையுடைய மதம் ஒழுகுகின்ற வலிய (திசை) யானைகள் சிவப்புப் பூசப்பட்டனபோல அவ் வுதிரக்கசிவு அடர்ந்து படியப்பெற்றன.

கு :—கவரி - சாமரை; எருமை என்ற பொருளும் தரும். எருமைக் கடா (கவரி) சாமரை (கவரி) போன்று சுழற்றி வீசப்பட்டமையால், 'கவரியிங்கிது' எனத் திரித்திவர்ந்தனன் என்றார். இவர்தல் - உலாவுதல். துவர் - சிவப்பு. பவர் - நெருக்கம். பட்டு இசைதல் - பட்டுப் பொருந்துதல். துணை - இரண்டு. (13)

4001. புயல்கடந் திரவிதன் புகல்கடந் தயலுளோ
ரியலுமண் டிலமிகந் தெனையவுந் தவிரமேல்
வயிரவன் கரதலத் தவன்வலித் தெறியவன்
றுயிரும்விண் படரவிவ் வுடலுமிப் பரிசரோ.

'புயல் கடந்து, இரவி தன் புகல் கடந்து, அயல் உளோர்
இயலும் மண்டிலம் இகந்து எனையவும் தவிர, மேல்
வயிர வன் கரதலத்து அவன் வலித்து எறிய, அன்று,
உயிரும் விண் படர, இவ் உடலும் இப் பரிசு அரோ.'

பொ :—'அவ்வாலி, மேகமண்டலத்தைத் தாண்டி, சூரியனிருக்கும் இடத்தையும் தாண்டி, மற்றுமுள்ள தேவர்கள் வாழ்கின்ற மண்டலங்களையெல்லாம் தாண்டி, மற்றும் எல்லா மேலிடங்களையும் கடக்கும்படி, வயிரம்போன்று உறுதியான வலிய (தனது) கையினால் (அத்துந்துபியை) மேலே வேகமாக இழுத்து வீசவும், அப்பொழுது (துந்துபியின்) உயிர் மேலுலகிற்குச் செல்ல, இந்த (அவன்) உடலும் இவ்விதமாயிற்று (கீழே விழுந்து கிடந்தது).'

கு :—முட்டி வான்முகடு சென்றது என அடுத்த கவியில் கூறப் படுவதால், வான மண்டலங்கள் எல்லாவற்றையுங் கடந்து மேலே சென்றதாக இப்பாடலிற் கூறினார். (14

4002. முட்டிவான் முகடுசென் றளவியிம் முடையுடற்
கட்டிமால் வரையைவந் துறுதலுங் கருணையா
னிட்டசா பமுமெனக் குதவுமென் றியல்பினிற்
பட்டவா முழுவதும் பரிவின லுரைசெய்தான்.

'முட்டி, வான் முகடு சென்று அளவி, இம் முடை உடற்
கட்டி மால் வரையை வந்து உறுதலும், கருணையான்
இட்ட சாபமும் எனக்கு உதவும்' என்று இயல்பினின்
பட்டவா முழுவதும் பரிவினல் உரை செய்தான்.

பொ :—'முடைநாற்றமுடைய இவ்வுடற் பிண்டம் (வாலி எறிந்த விசையால்) வானத்தின் உச்சியை அளாவிச் சென்று தாக்கிவிட்டு இந்தப் பெரிய மலையில் வந்து விழுந்தவளவில், அருளையுடையரான மதங்கமுனிவர் (வெகுண்டு வாலிக்குக்) கொடுத்த சாபமும் எனக்கு இப்பொழுது உதவியாயிருக்கின்றது' என்று நடந்த வரலாறு முழுவதையும் அன்போடு சொன்னன் (சுக்கிரீவன்.)

கு :—'மால்வரையை' என்றது சுக்கிரீவன் இருந்த ருசியமூக மலையை. வாலி யெறிந்த துந்துபியின் உடல் அம்மலையில் மதங்க முனிவர் பன்னசாலையில் வந்து விழுந்து அதன் தூய்மை கெடச் செய்ததால் அம்முனிவர் சினம் கொண்டு, அதனை எறிந்தவன் வாலி என்பதை அறிந்து 'அவன் இங்கு வருவானயின் தலை வெடித்து இறக்கக்கடவன்' என்றும் 'அவனைச் சேர்ந்த நண்பர்கள் வந்தால் கல்வடிவமாகக் கடவர்' என்றும் சபித்தார். அச்சாபவுதவியாலேயே சுக்கிரீவன் கிட்கிந்தையிலிருந்து ருசியமூக மலைக்கு வந்து வாலியிடமிருந்து தப்பிப்பிழைத்து உயிர் வாழ்பவனுயினன். இவ்வாறு அவ்வெலும்பின் வரலாற்றையும் தான் அங்கு வாழுங் காரணத்தையும் தெரிவித்தனன் என்பதாம். (15)

## இராமன் பணித்த வண்ணம்
## துந்துபியின் உடலை இலக்குவன் எற்றுதல்

4003. கேட்டன னமலனுங் கிளந்த வாறெலாம்
★ வாட்டொழி லிளவலை யிதனை மைந்தநீ
யோட்டென வவன்கழல் விரலி னுந்தினன்
மீட்டது விரிஞ்சன டுற்று மீண்டதே.

கேட்டனன் அமலனும் கிளந்தவாறு எலாம்,
வாள் தொழில் இளவலை, 'இதனை மைந்த! நீ

ஓட்டு ’ என, அவன் கழல் விரலின் உந்தினன்;
மீட்டு அது விரிஞ்சன் நாடு உற்று மீண்டதே.

பொ :—இராமனும் (சுக்கிரீவன்) சொன்ன வரலாறு முழுவதையும் கேட்டு, வாளெடுத்துப் போர் செய்யும் தொழிலையுடைய தம்பியை (இலக்குமணனை) நோக்கி, “வீரனே! இவ்வுடம்பை(க் காலால்) எற்றுக” என்று கட்டளையிடவும், இலக்குவன் தன் கால் விரலினல் எற்றினன்; அவ்வெலும்புக் குவியல் மறுபடியும் (மேலே) பிரமலோகத்தை யடைந்து திரும்பி வந்து விழுந்தது.

கு :—இலக்குவன் ஆற்றலை அங்குள்ளோர் அறியவேண்டி இராமன் தம்பியை அவ்வாறு கட்டளையிட்டான் என்க. வாலி கையாலெறிந்த கூட்டை இலக்குவன் காலால் எற்றிக் கிளப்பிப் பிரமன் உலகை யடையச் செய்ததனல் தம்பியும் வாலியைவிட மிக்கவன் எனக் காட்டியவாறு. மராமரத்தை எய்து இராமன் தன் ஆற்றலை முன்னரே புலப்படுத்தியுள்ளான். (16)

துந்துபிப் படலம் முற்றிற்று.

# 6. கலன்காண் படலம்

சீதை துகிலிற் பொதிந்து இட்ட அணிகளைச் சுக்கிரீவன் கொணர்ந்து காட்ட இராமன் கண்டமை பேசுதலின் இப்பகுதி கலன்காண் படலம் என்று பெயர் பெற்றது. இப்படலத்துப் பயின்ற செய்யுட்கள் 34.

வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர் பதிப்பு முதலியவற்றுள், இப்படலம், 'இவ்வழி யாம்' என்னும் முதற்குறிப்புள்ள பாடலொடு தொடங்கி, 'அன்னதாய குன்றின்' என்னும் முதற் குறிப்புள்ள பாடலோடு முற்றுப் பெற்று, 42 பாடல்கள் உடையதாகக் காணப் படுகிறது.

அப்பதிப்புக்களுள், துந்துபிப் படலத்தின் இறுதிப் பாடலாயுள்ள 'ஆயிடையரிக்குலம்' என்று தொடங்குவது, கலன்காண் படலத்தின் முதற் பாடலாகவும், கலன்காண் படலத்தின் 33-ஆம் பாடலாக வுள்ள 'ஆதலால் அன்னதே' என்னும் தொடக்கமுடையது, கலன் காண் படலத்தின் இறுதிப் பாடலாகவும் பழைய - சிறந்த - பல ஓலைச் சுவடிகளில் வரையப்பட்டுள்ளன. ஆதலால் அம்முறையைத் தழுவி இப்பதிப்புள் கலன்காண் படலம் 34 பாடல்களை உடையதாக அமைக் கப்பட்டது.

வை. மு. கோ. பதிப்பு முதலியவற்றுள் துந்துபிப் படலத்தில், 'கேட்டனன் அமலனும்' என்னும் முதற் குறிப்புள்ள 14-ஆம் பாட்டு, 'மீட்டது விரிஞ்சனுடுற்று மீண்டதே' என்று முடிந்திருப்பது, அவ் வளவில் துந்துபிப் படலம் முற்றுப் பெற்றது என்று கொள்ளுதற்கு ஏற்ற அமைதியுடையதாகவும், அதன் பின் உள்ள 'ஆயிடையரிக் குலம்' என்னும் முதற் குறிப்புள்ள பாடலின், 'நாயகவுணர்த்துவ துண்டு நான் என' என்னும் நான்காமடியின் அமைப்பு, அது கலன் காண் படலத்தின் தொடக்கம் என்று கொள்ளுதற்கேற்ற அமைதி யுடையதாகவும், அப்பதிப்புக்களில், 33-ஆம் பாடல், 'போது நாம் வாலிபால் என்னப் போயினர்' என்று முற்றி நிற்பது, கலன்காண் படலத்தின் இறுதிச் செய்யுளாகக் கொள்ளுதற்கு ஏற்ற அமைதி யுடையதாகவும், அடுத்துள்ள 'வெங்கணுளி' என்று தொடங்கும் பாடல் முதலிய ஒன்பதும் வாலியின் உறைவிடமான கிட்கிந்தையின் வளம் முதலியவற்றை விரிப்பனவாயும், பின் வரும் பாடல்களோடு இயைபுடைய வேறு சந்தக்குழிப்புடையனவாயும் அமைந்து, வாலி

வதைப் படலத்தின் முதற்கண் இணைத்துக் கொள்ளுதற்கேற்றன வாகவும் இருத்தலால், மேற்குறித்த பழைய ஓலைச் சுவடிகளிலுள்ள முறையே பொருந்துவதாகும்.

இப்படலத்துள் பயின்ற 34 செய்யுட்களும் ஒரே சந்த அமைதி யுடையன. இராவணனால் கவர்ந்து செல்லப்பட்ட நிலையில், சீதை தன் அணிகலங்களைத் துணியின் முடிந்துபோட, அம்முடிப்பைத் தாங்கள் ஏந்திப் பாதுகாத்து வைத்தமை கூறி, அவ்வணிகலங்களைச் சுக்கிரீவன் கொணர்ந்து இராமனிடம் தருகிறான். அவ்வணிகளைக் கண்ட இராமன், சீதையையே கண்டாற் போன்று மகிழ்ச்சியும், சீதை பிரிவால் துயரும் மாறி மாறி எழ ஒரு நிலைப்படாது தளர் கிறான். தளர்ந்து சாய்ந்த இராமனைச் சுக்கிரீவன் தாங்கி நின்று ‘தன் வலியும் துணைவலியும் ஒருங்குடைய நீ விரைந்து சீதையை மீட்க முயலாது சோர்வுறுதல் தகாது’ என்று தேற்றுகிறான். சுக்கிரீவன் தேற்ற, ஒருவாறு சோகம் நீங்கிய இராமன், சுக்கிரீவனை நோக்கித் தன் முன்னோர் பெருமையும் அவர் வழி வந்த தன் பழிநிலையும் கூறி, ‘இந்நிலை எய்திய பின், இறந்துபடுவதினும் எனக்கு உறுதி வேறில்லை; ஆதலால் நின்குறை முடித்தபின் மாள்வேன்’ என்கிறான். சுக்கிரீவன் மீட்டும் தேற்ற இராமன் துயர்நீங்குகிறான். அந்நிலையில் அனுமன் இராமனை வணங்கி, வாலியைக் கொன்று, சுக்கிரீவனை அரசனாக்கிப் படைகளைத் திரட்டினாலன்றிச் சீதையினைத் தேடிக் காணுதல் இயலாததாகும். அரக்கர் ஆற்றல் பெரிது; அவர் செல்லாத வுலகம் இல்லை; அவர் செல்லுமிடங்களில் தாம் விரும்பிய வற்றை யெல்லாம் கவர்ந்து கொள்வர்; அவர் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்குச் செல்லுதலும் மீளுதலும் அவர் செயலும் நம்மால் அறிதற்கரியன. ஆதலால் வாலியைக் கொன்று, சுக்கிரீவனை அரசனாக்கி, அளவிடற்கரிய பேராற்றலுடைய வானர வீரரை யெல்லாம் திரட்டி, ஒரே சமயத்தில் உலகமெல்லாம் சென்று பரவித் தேடச் செய்து, சீதையிருக்கும் இடத்தை அறிந்து கொள்ளுதலே இப்போது தாழாது செய்யத்தக்கது என்கிறான்: என்பது இப்படலத்தின் நுவல் பொருட் சுருக்கம்.

சுக்கிரீவன் கொணர்ந்து தந்த சீதையின் அணிகளை இராமன் பார்த்த செய்தி வான்மீகத்துள் கிஷ்கிந்தா காண்டத்தின் ஆறும் சருக்கத்துப் பேசப்பட்டுளது. அணிகலன்களை மேலாடையில் பொதிந்திட்டனள் என்று வான்மீகம் கூறும். ‘இழை பொதிந்திட்டனள்’ என்பர் கம்பர். சீதையின் அணிகளைக் கண்ட இராமனுடைய துயர்நிலை வான்மீகத்துள் சுருங்கக் கூறப்பட்டது; கம்பரால் பல பாடல்களிற் பேசப்படுகிறது. சீதையின் அணிகளை இராமன் இலக்குவனுக்குக் காட்ட, அவன், ‘நான் தோள் வளைகளை அறி

யேன் ; குண்டலங்களையும் அறியேன் ; நாளும் திருவடி தொழுங்கால (பிராட்டியின்) சிலம்புகளை மட்டும் அறிவேன்' என்று கூறியதாக வான்மீகத்திற் காணப்படுவது, இராமாவதாரத்துக் கூறப்படவில்லை. வான்மீகத்துள், இராமன், கலன்கண்ட பின், மராமரம் எய்ததும் துந்துபி என்பை யெற்றியதும் பேசப்பட்டன. இராமாவதாரத்துள், இராமன் மராமரமெய்து துந்துபியென்பை எற்றுவித்தபின் கலன் கண்டமை பேசப்பட்டது.

# 6. கலன்காண் படலம்

## இராமனிடம் சுக்கிரீவன் சீதை அணிகலன்களை முடிந்திட்டமை கூறுதல் 4004-4007

**4004.** ஆயிடை யரிக்குல மசனி யஞ்சுற
வாய்திறந் தார்த்தது வள்ள லோங்கிய
தூயநற் சோலையி லிருந்த சூழல்வாய்
நாயக வுணர்த்துவ துண்டு நானென.

ஆயிடை, அரிக்குலம் அசனி அஞ்சுற
வாய் திறந்து ஆர்த்தது ; வள்ளல், ஓங்கிய
தூய நல் சோலையில் இருந்த சூழல்வாய் ,
'நாயக ! உணர்த்துவது உண்டு நான்' என.

பொ :—அப்பொழுது குரங்குக் கூட்டம் இடியும் அச்சமடையும்படி வாய் விட்டு ஆரவாரித்தது. (பின்னர்) வள்ளலாகிய இராமன் உயர்ந்த பரிசுத்தமான அழகிய பூஞ்சோலையிலே வந்து தங்கியிருந்த வேளையில் (சுக்கிரீவன் இராமனை நோக்கி) "தலைவனே! யான் சொல்ல வேண்டுவது (ஒன்று) உளது" என்று.

கு :—'என' என்னும் வினையெச்சம் இப்படலத்தின் நான்காங் கவியில் 'காட்டினன்' என்னும் வினைமுற்றைக் கொண்டு முடியும். (1)

**4005.** இவ்வழி யாமியைந் திருந்த தோரிடை
வெவ்வழி யிராவணன் கொணர மேலைநாட்
செவ்வழி நோக்கிநின் றேவி யேகொலாங்
கவ்வையி னரற்றினள் கழிந்த சேணுளாள்.

இவ் வழி யாம் இயைந்து இருந்தது ஓர் இடை,
வெவ் வழி இராவணன் கொணர, மேலைநாள்
செவ்வழி நோக்கி, நின் தேவியே கொல் ஆம்
கவ்வையின் அரற்றினள் கழிந்த சேண் உளாள்.

பொ :—முன் ஒருநாள் இங்கே நாங்கள் தொக்கிருந்தபொழுது, தீ நெறிச் செல்பவனான இராவணன் எடுத்துவரலால், நன்னெறியே

நோக்குபவளான நின் நாயகிதானோ? வானில் மிக்க வுயரத் துள்ள வளாய்த் துன்பத்தால் அழுவாளாயினள்.

கு :—மேலை நாள் இவ்வழி யாம் இயைந்திருந்த தோரிடை என இயைக்க. இவ்வழி - இங்கு. அனுமன் முதலியவர்களும் அடங்க யாம் என்றான். இடை யென்பது இங்கே பொழுதென்னும் பொருள்பட நின்றது. வெவ்வழி - தீ நெறி. செவ்வழி - நன்னெறி. நோக்கி - நோக்குபவள். அப்பொழுது இன்னார் என்று தெளிந்திலாமையின் நின் தேவியே கொல் என்றான். ஆம் அசை. கவ்வை - துன்பம். அரற்றுதல் - கதறியழுதல். சேண் - ஆகாயம். சேண் உளாள் என் பது முற்றெச்சம். கழிந்த சேண் என்றமையால் கண்ணுக்குப் புல னாகாமை குறித்தவாறு. கண்ணுக்குப் புலப்படாவிட்டாலும் அழுகை யொலியால் பெண் என்பது புலனாயிற்று என்றபடி. (2)

4006. உழையரி னுணர்த்துவ துளதென் றுன்னியோ
குழைபொரு கண்ணினள் குறித்த தோர்ந்தில
மழைபொரு கண்ணிணை வாரி யோடுதன்
னிழைபொதிந் திட்டனள் யாங்க ளேற்றனம்.

உழையரின் உணர்த்துவது உளது என்று உன்னியோ?
குழை பொரு கண்ணினள் குறித்தது ஓர்ந்திலம்;
மழை பொரு கண் இணை வாரியோடு தன்
இழை பொதிந்து இட்டனள்; யாங்கள் ஏற்றனம்.

பொ :—பணியாளர்போல உனக்குத் தன்னிலைமை தெரிவிப்பது உண்டு என்று நினைந்தோ? (வேறு என் நினைந்தோ?) மகர குண்ட லங்களோடு போர் செய்கின்ற (காதளவும் நீண்ட) கண்களையுடைய அவள் கருதியதனை அறிந்தோமில்லை; தன் அணிகலன்களைத் துணி யின் முடிந்து, மழையை யொத்த கண்களினின்று பெருகுகின்ற நீருடன் (கீழே) போட்டனள்; (அம்முடிப்பை அது தரையில் விழு முன்) நாங்கள் ஏந்திக் கொண்டோம்.

கு :—உழையர் - பணியாளர். உழையரின் உணர்த்துவது உளது என்று உன்னியோ? என்றது, (அவ்வணிகலன்கள்,) தன்னிலை யினைப் பணியாளர்போல உனக்கு அறிவிப்பது உண்டு என்று நினைந்தோ? என்றவாறு. இத்தொடர் (யாங்கள்) பணியாளர் போல உனக்குத் தன்னிலைமை தெரிவிப்பது உண்டு என்று நினைந்தோ? எனவும், யாங்கள் எங்கள் பணியாளரால் உனக்குத் தன்னிலைமை தெரிவிப்பது உண்டு என்று நினைந்தோ? எனவும்

பொருள் கொள்ள நின்றது. குழை - காதணி. பொருதல் - போர் செய்தல். குறித்தது - நினைந்ததனை. ஓர்தல்-அறிதல். மழை-மேகம். பொருதல் - ஒத்தல். கருமையுடைமையும் நீர் பொழிதலும் மழைக்கும் கண்ணுக்கும் பொதுவான தன்மைகள். வாரி - வெள்ளம். கண்ணீரின் மிகுதி தோன்ற வாரி என்றான். இழை என்பதனை மீட்டும் கூட்டி இழை இழை(யிற்) பொதிந்து என இயைக்க. இழை (முன்னது) அணிகலம்; (பின்னது) துணி. பொதிதல் - முடிதல். இராவணன் எடுத்துச் சென்றபோது சீதாபிராட்டி தன் அணிகலன்களைத் துகிலிற் பொதிந்திட்டமை, 'கடுந்தெற லிராமன் உடன்புணர் சீதையை, வலித்தகை யரக்கன் வவ்விய ஞான்றை, நிலஞ்சேர் மதரணி' (378) என்று புறநானூற்றுள்ளும் கூறப்பட்டுள்ளது. (3)

## சுக்கிரீவன் சீதையின் அணிகளைக் கொணர்ந்து இராமனுக்குக் காட்டுதல்

4007. வைத்தன மிவ்வழி வள்ள னின்வயி
னுய்த்தனந் தந்தபோ துணர்தி யாலெனக்
கைத்தலத் தன்னவை கொணர்ந்து காட்டினா
னெய்த்தலைப் பால்கலந் தனைய நேயத்தான்.

"வைத்தனம்! இவ்வழி; 'வள்ளல்! நின்வயின்
உய்த்தனம் தந்தபோது உணர்தி' ஆல் எனக்
கைத்தலத்து அன்னவை கொணர்ந்து காட்டினான்;
நெய்த்தலைப் பால் கலந்தனைய நேயத்தான்".

பொ:—தேனிற்பால் கலந்தாற் போன்ற (இனிய) நட்பினனாகிய சுக்கிரீவன், 'வள்ளலே! அவ்வணிகளை இங்கே (பாதுகாத்து) வைத்தோம்; அவற்றை நாங்கள் உன்னிடம் கொண்டு வந்து தந்தபோது அறிவாய் என்று கூறி, அவற்றைத் தன் கையினால் கொடுவந்து காட்டினான்.

கு:—நேயத்தான் காட்டினான் என்க. நேயத்தான் என்றது சுக்கிரீவனை. நேயம் - நட்பு. நெய் - தேன். 'நெய்ம்முதிர்தொடையல்' (1198) என்னும் சீவக சிந்தாமணிப் பாடலுள் நெய் தேன் என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். நெய்த்தலைப்பால் கலந்தனைய நேயம் என்றது, வேறு வேறு சுவையான தேனும் பாலும் கலந்துழி அக்கலவை இன்சுவைத்தாதல் போல, வேறுவேறு இயல்பினரான இராமனுக்கும் சுக்கிரீவனுக்கும் இடையே நிகழ்ந்த நட்பு இனிமை விளைப்பது என்றவாறு. கலந்தனைய என்பது கலந்தனைய

என விகாரமாயிற்று. உய்த்தல் - கொணருதல். உய்த்தனம் - உய்த்தேமாய்; முற்றெச்சம். அன்னவை என்றது அணிகலங்களை. 'நெய்த்தலைப்பால் கலந்தனைய' என்ற தொடர், 'தேனிற் பாலென' (சீவக சிந்தாமணி. 1761), 'நெய்த்தலைப்பாலுக்காங்கு' (சூளாமணி சுயம்வர. 275), 'ஆன்முலைப் பிறந்த வானிற வமிர்தம், மலைப்பெய் நெய்யொடு தலைப்பெய் தாங்கு' (பெருங்கதை 2.8. 11-12), 'பாலொடு தேன் கலந்தற்று' (திருக்குறள். 1121), 'ஆன்பாற்றெண்கடலமுதுற வளைஇய, தேன்பெய் மாரியின்' (பெருங்கதை. 1.34. 101-2), "பானிலத் துறையுந் தீந்தேனனைய' (சீவக சிந்தாமணி. 1915), 'தேம்பெய் மாரி பாற்கடற் பெய்தது' (சீவக. 2077) எனும் முன்னோர் பாடற் பகுதிகளைத் தழுவி யெழுந்தது. (4)

### சீதையின் அணிகலம் நோக்கிய இராமன் நிலை 4008-4012

4008. தெரிவுற நோக்கினன் றெரிவை மெய்யணி
யெரிகன லெய்திய மெழுகின் யாக்கைபோ
லுருகின னென்கில முயிருக் கூற்றமாய்ப்
பருகின னென்கிலம் பகர்வ தென்கொலாம்.

தெரிவுற, நோக்கினன் தெரிவை மெய் அணி;
எரிகனல் எய்திய மெழுகின் யாக்கைபோல்
உருகினன் என்கிலம்; உயிருக்கு ஊற்றம் ஆய்ப்
பருகினன் என்கிலம் பகர்வது என்கொல் ஆம்?

பொ:—(சுக்கிரீவன் கொணர்ந்து தந்த) சீதையின் மேனியில் அணியப்பட்ட அணிகளை இராமன் நன்ருகப் பார்த்தான்; (அவ்வாறு பார்த்தவன்) கொழுந்துவிட் டெரிகின்ற நெருப்பினையுற்ற மெழுகால் இயன்ற பொம்மைபோல உருகினுன் என்று சொல்ல வல்லேமல்லேம்; (அவ்வணியாகிய அமுதைத்) தன் உயிர்க்குப் பற்றுக்கோடாகப் பருகினுன் என்றும் சொல்ல வல்லேமல்லேம்; அப்போது அவன் நிலைபற்றி யாது சொல்லத்தக்கது?

கு:—தெரிவை என்றது சீதையை. தெரிவை என்று மகளிர்க்குரியதொரு பருவப் பெயராற் சுட்டியது, இராவணன் கவர்ந்து செல்லுங்கால் சீதாதேவி அப்பருவத்தினள் என்பது பெறவைத்தவாறு என்பாரும் உளர். ஊற்றம் - பற்றுக்கோடு; ஊன்றுகோலும் ஆம். ஆய் - ஆக; எச்சத்திரிபு. அணிகலன்களை நன்கு நோக்கிய இராமன், அவை சீதையின் அணிகளே என்று தெளிந்து, அவளைப் பிரிந்தமையால் சோர்ந்து நைந்து அவ்வணிகளே பற்றுக்கோடாக

உயிர் தாங்கி யிருந்தனன் என்றவாறு. பின் பருகினன் என்றமைக்கேற்ப முன் அணிகலமாகிய அமுது என்று (உருவக வாய்பாடுபட) விரித்துக் கொள்ளலாயிற்று. (5)

4009. நல்குவ தென்னினி நங்கை கொங்கையைப்
புல்கிய பூணுமக் கொங்கை போன்றன
வல்குலி னணிகளு மல்கு லாயின
பல்கலன் பிறவுமப் படிவ மானவே.

நல்குவது என்? இனி; நங்கை கொங்கையைப்
புல்கிய பூணும், அக் கொங்கை போன்றன;
அல்குலின் அணிகளும், அல்குல் ஆயின;
பல்கலன் பிறவும், அப்படிவம் ஆனவே.

பொ:—சீதையின் தனங்களைச் சேர்ந்த (மணிமாலை முதலிய) அணிகளும் அத்தனங்களாயின; (மேகலை முதலிய) இடையணிகளும் இடையே ஆயின; (பிறவுறுப்புக்களில் அணியும்) அணிகள் பலவும், அவ்வவ்வுறுப்புக்களாயின; மேலும் அவ்வணிகள் இராமனுக்கு உதவுவது யாது உளது? (ஒன்றும் இன்று).

கு:—நல்குதல்-உதவுதல். புல்குதல்-பொருந்துதல். அல்குல்-அரை=இடை; 'பூந்துகில் சேர் அல்குல் காமரெழில் விழலுடுத்து' (பெருமாள் திருமொழி. 9. 7), 'பட்டிசைந்த அல்குலாள்' (திருஞான சம்பந்தர் தேவாரம். 3. 52. 2) என்னும் பெரியோர் பாசுரங்களில் அல்குல் இடை என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். எவன் என்னும் வினா என் என்றாய் இங்கே இன்மை குறித்தது. (6)

4010. விட்டபே ருணர்வினை விளித்த வென்கொலோ
வட்டன வுயிரையவ் வணிக ளென்கொலோ
கொட்டின சாந்தெனக் குளிர்ந்த வென்கொலோ
சுட்டன வென்கொலோ யாது சொல்லுகேன்.

விட்ட பேர்-உணர்வினை விளித்த என்கொலோ?
அட்டன உயிரை அவ் அணிகள், என்கொலோ!
கொட்டின சாந்து எனக் குளிர்ந்த என்கொலோ!
சுட்டன என்கொலோ! யாது சொல்லுகேன்?

பொ :—(அவ்வணிகள்), அவனை விட்டு நீங்கிய மிக்க வுணர்வை அவன்பால் வந்து பொருந்துமாறு அழைத்தன (வருவித்தன) என் பேனே? அவனுயிரைப் போக்கின என்று சொல்வேனே? சொரிந்த சந்தனக் குழம்புபோல அவனுக்குக் குளிர்ச்சியை விளைத்தன என் பேனே? அவனை எரித்தன என்பேனே? என்ன சொல்லுவேன்?

கு:—அவ்வணிகள், விளித்த என்கெனே? அட்டன என்கெனே? குளிர்ந்த என்கெனே? சுட்டன என்கெனே என இயையும். பிராட்டியின் பிரிவால் உணர்விழந்து நின்ற இராமனுக்கு அவ்வணிகள் உணர்வை ஊட்டின; (பிராட்டி பிரிவை நினைப்பூட்டி) உயிரை அழித்தன; பிராட்டியின் உறுப்புக்களைத் தோற்றுவித்து ஆறுதல் அளித்தன; வெதுப்பின என்றவாறு. எனவே, இராமன் அவ்வணிகளைக் கண்டு, சீதை பிரிவால் துயருற்றுச் சோர்ந்தும் சீதையையே கண்டாற் போன்று தளர்வகன்றும் ஒருநிலைப்படா திருந்தனன் என்பது பெறப்படும். பிரிவு நிலையில் பிரிந்த பொருளொடு தொடர்புடையவற்றையும், அப்பொருள் போல்வனவற்றையும் காண்பார்க்கு ஒருகால் தளர்தலும் ஒருகால் தளர்வகன்றிருத்தலும் இயல்பாகலின், ஒன்றைத் துணிந்து கூருது, யாது சொல்லுகேன்? என்ருர். விடுதல் - விட்டுநீங்குதல். விளித்தல் - அழைத்தல். அடுதல் - கொல்லல். கொட்டுதல் - சொரிதல். சாந்து - சந்தனம். (7)

**4011.** மோந்திட நறுமல ரான மொய்ம்பினி
லேந்திட வுத்தரி யத்தை யேய்ந்தன
சாந்தமு மாயொளி தழுவப் போர்த்தலாற்
பூந்துகி லாயவப் பூவை பூண்களே.

மோந்திட நறுமலர் ஆன; மொய்ம்பினில்
ஏந்திட உத்தரியத்தை ஏய்ந்தன;
சாந்தமும் ஆய் ஒளி தழுவப் போர்த்தலால்
பூந்துகில் ஆய; அப் பூவை பூண்களே.

பொ :—பூவை போல்வாளான அச்சீதையின் அணிகள், இராமன் முகர்ந்திடும்படி நல்ல பூக்கள்போல மணமுடையவாயின; தோளில் தாங்க, மேலாடையை ஒத்தன; அவற்றின் ஒளி (அவன் மார்பைப்) பொருந்துதலால், சந்தனமும் ஆகி, அவற்றின் ஒளி இராமன் திருமேனி முழுதும் பரவுதலால் அவன் உருவை மறைத்தலால் அழகிய போர்வையும் ஆயின.

கு :—பூண்கள் மலரா(யி)ன; உத்தரியத்தை ஏய்ந்தன, சாந்தமும் ஆகித் துகில் ஆய: என இயைந்து முடியும். மொய்ம்பு - தோள்;

'பூந்தாது மொய்ம்பினவாக' (கலி. 88) என்பதனுள், மொய்ம்பு தோள் என்னும் பொருளிற் பயின்றமை காணத்தகும். உத்தரியம் - மேலாடை. இயல்பாயமைந்த நறுமணமுடைய சீதையின் திருமேனியிற் பூணப்பட்டமையால் அத்திருமேனியின் நறுமணம் அணிகளும் உடையவாயின. அணிகலன்களை இராமன் கைமிசையேந்தி நோக்கியும் தோள்மிசைத் தாங்கியும் கண்களில் ஒற்றிக்கொண்டும் பலபடியாகக் கொண்டாடினன் என்றவாறு. (8)

**4012.** ஈர்த்தன செங்கணீர் வெள்ளம் யாவையும்
போர்த்தன மயிர்ப்புறம் புளகம் பொங்குதோள்
வேர்த்தன னென்கெனோ வெதும்பி னுனென்கோ
தீர்த்தனை யவ்வழி யாது செப்புகேன்.

ஈர்த்தன செங்கண் நீர் வெள்ளம் யாவையும்;
போர்த்தன மயிர்ப்புறம் புளகம்; பொங்குதோள்
வேர்த்தனன் என்கெனோ? வெதும்பினன் என்கோ?
தீர்த்தனை அவ்வழி யாது செப்புகேன்?

பொ :—இராமனுடைய சிவந்த கண்ணினின்று பெருகிய மிக்க நீர்கள் (அவன் பக்கல் இருந்த) எல்லாவற்றையும் இழுத்துச் சென்றன; உரோமங்கள் செறிந்த அவனுடலைப் புளகங்கள் மறைத்தன; பூரித்த தோள்கள் வேர்த்தனன் என்று சொல்வேனோ? வெதும்பினன் என்று சொல்வேனோ? தூயோனான அவனை (இந்நிலையில்) என்ன சொல்லுவேன்?

கு :—கண்ணீர் வெள்ளம் யாவையும் ஈர்த்தன எனவும், புளகம் புறம்போர்த்தன எனவும் இயைக்க. ஈர்த்தல்—இழுத்தல். புறம் - உடல்; 'பைம்புறப் படுகிளியோப்பலர்' (ஐங்குறுநூறு. 260) என்பதனுள், புறம் உடல் என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். புளகம் - மயிர்க் கூச்செறிதல். பொங்குதல் - மிகுதல்; பூரித்தல். புளகம், மகிழ்ச்சியுற்ற நிலையில் நிகழும் மெய்ப்பாடு. வேர்த்தலும் வெதும்பலும் துன்புற்ற நிலையில் நிகழும் மெய்ப்பாடுகள். கண்ணீர் பொழிதல் இருவகை நிலையிலும் நிகழும் மெய்ப்பாடாகும். வேர்த்தல்- மிகுவெம்மையின் விளைவு. தீர்த்தன் - தூயோன் = இராமன். சீதையின் அணிகளைக் கண்ட இராமன் இன்பமும் துன்பமும் ஒருங்கெய்தினன் என்றவாறு. (9)

சோர்ந்து சாய்ந்த இராமனைச் சுக்கிரீவன் தாங்குதல்

4013. விடம்பரந் தனையதோர் வெம்மை மீக்கொள
நெடும்பொழு துணர்விேனா டுயிர்ப்பு நீங்கிய
தடம்பெருங் கண்ணனைத் தாங்கி னன்றன
துடம்பினிற் செறிமயிர் சுறுக்கொண் டேறவே.

விடம் பரந்தனையது ஓர் வெம்மை மீக்கொள,
நெடும்பொழுது உணர்விேனாடு உயிர்ப்பும் நீங்கிய
தடம்பெருங் கண்ணனைத் தாங்கினான்; தனது
உடம்பினில் செறிமயிர் சுறுக்கொண்டு ஏறவே.

பொ:—விடம் பரவினாற்போன்ற ஒப்பற்ற (கொடிய) வெப்பம் மிகுதலால் நெடுநேரம் நினைப்பும் உயிர்ப்பும் நீங்கிய(வனாய்த் தரையிற் சாய்பவனான) மிகப் பெரிய கண்களையுடைய இராமனை (அவனுடல் வெம்மையால்) தன் உடம்பில் அடர்ந்த மயிர் கரிந் தெழும் நாற்றம் மிகும்படி எரிகதிர்க் காதலன் (சுக்கிரீவன்) தாங்கினான்.

கு:—பரந்தது அனையது என்பது பரந்தனையது என்று விகாரமாயிற்று. மீக்கொளல் - மிகுதல். உணர்வு - நினைவு. உயிர்ப்பு - மூச்சு. 18-ஆம் பாட்டில் உள்ள எரிகதிர்க் காதலன் என்னும் எழுவாய் வருவித்துரைக்கலாயிற்று. சுறு - உரோமம் தீப்படுதலால் எழும் தீ நாற்றம். 'நறுமலர் சுறுக்கொண்டேறின' (பால. 613), 'மீசைகள் சுறுக்கொள வுயிர்ப்ப' (ஆரணிய. 602), 'மாலை வண்டொடுஞ் சுறுக்கொண்டேற' (சுந்தர. 930), 'அனுமன் மெய்ம்மயிர் சுறுக்கொள' (சுந்தர. 1110) என்று வரும் இடங்களும் நோக்கத் தகும். (10)

இராமனைச் சுக்கிரீவன் தேற்றுதல் 4014-4021

4014. தாங்கின னிருத்தியத் துயரந் தாங்கலா
தேங்கிய நெஞ்சின னிரங்கி விம்முவான்
வீங்கிய தோளினாய் வினையி னேனுயிர்
வாங்கினெ னிவ்வணி வருவித் தேயெனா.

தாங்கினன், இருத்தி, அத்துயரம் தாங்கலாது
ஏங்கிய நெஞ்சினன், இரங்கி விம்முவான்,
'வீங்கிய தோளினாய்! வினையினேன், உயிர்
வாங்கினென் இவ் அணி வருவித்தே' எனா.

பொ :—தாங்கி வீற்றிருக்கச் செய்து, (இராமனுக்கு நேர்ந்த) அத்துன்பத்தைத் தாங்க முடியாமல் வருந்திய மனமுடையவனான சுக்கிரீவன் (இராமனை நோக்கி)ப் பருத்த தோள்களையுடையவனே! தீவினையாளனான யான் இவ்வணிகளை வருவித்து (க் காட்டி) உன் உயிரை உடலினின்று நீக்கினேன் என்று இரங்கி ஏங்குவானாயினன்.

கு :—தாங்கினன்-தாங்கி; முற்றெச்சம். ஏங்குதல் - வருந்துதல். விம்முதல் - தேம்பியழுதல். நெஞ்சினன், 'தோளினாய்! வினையினேன், இவ்வணி வருவித்து (உன்) உயிர் வாங்கினேன்' என இரங்கி விம்முவானாயினன் என்க. (11)

4015. அயனுடை யண்டத்தி னப்பு றத்தையு
மயர்வற நாடியென் வலியுங் காட்டியு
னுயர்புகழ்த் தேவியை யுதவற் பாலனாற்
றுயருழந் தயர்தியோ சுருதி நூல்வலாய்.

'அயன் உடை அண்டத்தின் அப்புறத்தையும்
மயர்வு அற நாடி, என் வலியும் காட்டி, உன்
உயர் புகழ்த் தேவியை உதவற் பாலன்; ஆல்
துயருழந்து அயர்தியோ? சுருதி நூல் வலாய்'.

பொ :—'வேத நூல் வல்லோனே! பிரமாண்டத்துக்கு அப்பாற்பட்ட இடங்களையும் மயக்கமற (நன்றாக)த் தேடி, என் ஆற்றலையும் புலப்படுத்தி, உன்னுடைய மிக்க புகழ்வாய்ந்த நாயகியை (க் கண்டு) உதவும் பான்மை யுடையேன்; நீ துன்புற்றுச் சோர்வடைதலாகாது.

கு :—உடைய என்னும் எச்சம் ஈறுகெட்டு உடை என நின்றது. மயர்வு - மயக்கம். நாடுதல் - தேடுதல். வலி - ஆற்றல். தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற சொற்காத்துச் சோர்வில்லாதவளாதலின் உயர் புகழ்த் தேவி என்றான். துயருழத்தல் - துன்புறுதல். அயர்தல் - சோர்வடைதல். சுருதி - வேதம். அண்டத்தின் அப்புறத்தையும் நாடுதல் கூறவே அவ்வண்டத்தின் இப்புறத்தையும் நாடுதல் பெறப்படும். அயர்தியோ என்பதில் ஓகாரம் எதிர்மறை. சுருதி நூல்வலாய்! நாடி, காட்டி, உதவற்பாலன் என்க. (12)

4016. திருமக ளனையவத் தெய்வக் கற்பினாள்
வெருவரச் செய்துள வெய்ய வன்புய

மிருபது மீரைந்து தலையு நிற்கவுன்
னொருகணைக் காற்றுமோ வுலக மேழுமே.

திருமகள் அனைய அத் தெய்வக் கற்பினாள்
வெருவரச் செய்துள வெய்யவன் புயம்
இருபதும் ஈரைந்து தலையும் நிற்க; உன்
ஒரு கணைக்கு ஆற்றுமோ? உலகம் ஏழுமே.

பொ:—திருமகளை ஒத்த தெய்வக் கற்புடைய அச் சீதாபிராட்டியை அஞ்சும்படி செய்தும், அதனால் அழிந்துபடாமல் உள்ள கொடியவனான இராவணனுடைய இருபது தோள்களும் ஒருபது தலைகளும் கிடக்க; ஏழுலகமும் (ஒன்றுபட்டு எதிர்ப்பினும்) உன்னுடைய ஓர் அம்புக்கு எதிர்நிற்க வல்லனவோ? (அல்ல)

கு:—வெருவரல்-அஞ்சுதல். வெய்யவன் என்றது இராவணனை. மழை வளந்தரும் பத்தினிப் பெண்டிர் தொழுதேத்த வயங்கிய கற்பாதலின் தெய்வக் கற்பு என்றான் என்க. வெருவரச் செய்தும் என உம்மை விரிக்க. (13)

4017. ஈண்டுநீ யிருந்தரு ளேழொ டேழெனப்
பூண்டபே ருலகங்கள் வலியிற் புக்கிடைத்
தேண்டியவ் வரக்கனைத் திருகித் தேவியைக்
காண்டியா னிவ்வழிக் கொணர்வல் காவலோய்.

'ஈண்டு நீ இருந்தருள்; ஏழொடு ஏழ் எனப்
பூண்ட பேர் உலகங்கள் வலியில் புக்கு,' இடைத்
தேண்டி, அவ் அரக்கனைத் திருகித் தேவியைக்
காண்டி, யான் இவ்வழிக் கொணர்வல் காவலோய்.

பொ:—அரசே! இங்கே நீ தங்கியருளுக; யான் பதினான்கு என்று தொகை கொண்ட பெரிய உலகங்களில் (என்) ஆற்றலால் புக்கு, அங்கே தேடி, அவ்விராவணனைத் தலையறுத்து, நின்தேவியை இங்கே கொணர்வேன். அதனை நீ காண்பாயாக.

கு:—இடை - இடம். தேண்டி - தேடி. அவ்வரக்கன் என்றது இராவணனை. தேவியை இவ்வழிக் கொணர்வல். காண்டி என இயையும். நின் தேவியைக் காண்டி யான் இவ்வழிக் கொணரும் கைப்பணி என்று பாடங்கொண்டு, நின் தேவியை யான் இங்கே கொணரும் என் சிறு தொண்டினையும் காண்பாயாக என்று பொருள் உரைத்தலும் அமையும். கைப்பணி - சிறுதொண்டு. இக்கருத்து

அமையுமாறு, 'கைத்தொழில் செய்வனென்று கழலிணை வணங்குங் காலை' (அரசியற் படலம். 27) என்று ஆசிரியர் பின்னர்க் கூறுதலும் இங்கே நோக்கத்தகும். (14)

**4018.** ஏவல்செய் துணைவரேம் யாங்க ளீங்கிவன்
ருவரும் பெருவலித் தம்பி நம்பிநின்
சேவக மிதுவெனிற் சிறுக நோக்கலென்
மூவகை யுலகுநின் மொழியின் முந்துமோ.

ஏவல் செய் துணைவரேம் யாங்கள்; ஈங்கு இவன்
தா அரும் பெரு வலித் தம்பி; நம்பி! நின்
சேவகம் இது எனில், சிறுக நோக்கல் என்?
மூவகை உலகும் நின் மொழியின் முந்துமோ.

பொ:—புருடோத்தமனே! நாங்கள் நின்பணி செய்யும் நண்பர்; இவன் கெடாத பேராற்றலையுடைய தம்பி; உன் வீரம் இத்தகைத்து என்றால், மூன்றுலகமும் நின் கட்டளையினைக் கடக்குமோ? (கடக்க மாட்டா; இங்ஙனமிருப்பவும்) குறைபட மதித்தல் என்.

கு:—நாங்களோ நீ ஏவிய பணிகளைச் செய்யும் நண்பர்; நின் தம்பியோ கெடாத பேராற்றலுடையான்; நீயோ ஏழு மராமரங் களையும் ஓரம்பால் துளைத்த பேராற்றலுடையை; ஆதலின் மூன்றுல கத்தாரும் நின் கட்டளைப்படி நடப்பர்; அங்ஙனமிருப்பவும் வலியற்றார் போலவும் துணையற்றார்போலவும் நீ சோர்வுறுதல் தகாது என்ற வாறு. தா - கேடு. நம்பி - ஆடவரில் உயர்ந்தோன். சேவகம் - வீரப்பாடு. ஏழு மராமரங்களையும் ஓரம்பால் துளைத்த ஆற்றலை இது என்று சுட்டினான். உலகம் ஆகுபெயராய் அவற்றுள் வாழ்வாரை உணர்த்தியது. மொழி என்பது இங்கே கட்டளை என்று பொருள் படும். முந்துதல் – கடத்தல். (15)

**4019.** பெருமையோ ராயினர் பெருமை பேசலார்
கருமமே யல்லது பிறிதென் கண்டது
தருமநீ யல்லது தனித்து வேறுண்டோ
வருமையே துனக்குநின் றவலங் கூர்தியோ.

பெருமையோர் ஆயினர், பெருமை பேசலார்;
கருமமே அல்லது பிறிது என் கண்டது?

தருமம் நீ அல்லது தனித்து வேறு உண்டோ ?
அருமை ஏது உனக்கு ? நின்று அவலம் கூர்தியோ?

பொ :—பெருமையுடையோர், தம் பெருமை பேசார்; தம் கடமையாயினவற்றைச் செய்வதல்லது அவர்கள் அறிந்தது வேறு இல்லை. உன்னையன்றித் தருமம் என்று ஒன்று தனித்து வேறு இல்லை; உன்னால் செய்தற்கரியது ஒன்றும் இல்லை; (அவ்வாறிருக்கவும் விரைந்து சீதையை மீட்க முயலாது) தாமதித்து மிக்க துயரடையக் கடவையோ ?

கு :—கருமம் - செயல். அவலம் - துன்பம். கூர்தல் - மிகுதல். பெரியோர் தம் பெருமையைச் செயலாற் காட்டுவதல்லது தம் பெருமை தாமே பேசார்; பெரியோனும் நல்லற மூர்த்தியுமான நீ விரைந்து தேவியை மீட்டு, அச்செயலால் உன் பெருமையினை வெளிப்படுத்தாது தாமதித்து நின்று துன்புறுதல் தகாது என்றவாறு. (16)

4020. முளரிமேல் வைகுவான் முருகற் றந்தவத்
தளிரியல் பாகத்தான் றடக்கை யாழியா
னளவியொன் ருவரே யன்றி யையமில்
கிளவியாய் தனித்தனி கிடைப்ப ரோதுணை.

முளரி மேல் வைகுவான், முருகன்-தந்த அத்
தளிர் இயல் பாகத்தான், தடக்கை ஆழியான்,
அளவி ஒன்ருவரே அன்றி, ஐயம் இல்
கிளவியாய்! தனித்தனி கிடைப்பரோ? துணை.

பொ :—தெளிந்த சொற்களைச் சொல்லுபவனே! தாமரை மலரில் வசிப்பவனான பிரமனும், முருகனை உதவிய தளிர்போலும் இயல்புடைய உமாதேவியை ஒரு பக்கத்திலே உடையவனான அச் சிவபிரானும், பெரிய கையின்கண் சக்கரப் படையினைத் தாங்கிய திருமாலும் இணைந்து (நினக்கு) ஒப்பாவரே யன்றித் தனித்தனி உனக்கு ஒப்பாவரோ ? (ஆகார்).

கு :—முளரி-தாமரை; அது, முதலாகு பெயராய்ப் பூவை உணர்த்தியது. ஆழி-சக்கரப்படை. அளவுதல்-இணைதல். கிளவி-சொல். கிடைத்தல்-பொருந்துதல். துணை-ஒப்பு. கிடைப்பரோ என்பதனுள் ஓகாரம் எதிர்மறை. பிரமன் படைத்தலும், சிவபிரான் அழித்தலும் திருமால் காத்தலும் ஆகிய ஓரொருதொழிலின் வல்லராக, இராமன்

அம்முத்தொழிலும் இயற்றும் ஆற்றலுடையான் எனச் சுக்கிரீவன் இராமனை வியந்து பாராட்டியவாறு. ஐயமில்கிளவியாய் என்பதனால் இராமனுடைய சொல்லாற்றல் புலனாகும். (17)

4021. என்னுடைச் சிறுகுறை
முடித்த லீண்டொரீஇப்
பின்னுடைத் தாயினு
மாக பேதுறு
மின்னிடைச் சனகியை
மீட்டு மீடுமாற்
பொன்னுடைச் சிலையினாய்
விரைந்து போயென்றான்.

"என் உடைச் சிறு குறை முடித்தல், ஈண்டு ஒரீஇப்
பின் உடைத்தாயினும் ஆக; பேதுறும்
மின் இடைச் சனகியை மீட்டு மீள்தும் ஆல்
பொன் உடைச் சிலையினாய்! விரைந்துபோய்," என்றான்.

பொ:—'பொற்கட்டுக்களையுடைய வில்லைத் தாங்கியவனே! என்னுடைய சிறிய குறையைப் போக்குதல், இப்பொழுதின்றிப் பின் மேற்கொள்ளப் படுவதாயினும் ஆகட்டும்; விரைந்து சென்று, மயங்கிய - மின்போன்ற இடையினையுடைய - சனகியை மீட்டுக் கொண்டு திரும்புவோம்' என்று (சுக்கிரீவன்) கூறினான்.

கு:—சிறு குறை என்றது வாலியை வென்று, தன் மனைவியான உருமையை மீட்டுத்தருதலை. ஈண்டு-இப்போது. ஒருவுதல் - நீங்குதல். பேது - மயக்கம். சனகி-சனகன் மகள்; சீதை. பொன்னுடைச் சிலையினாய்! என்னுடைச் சிறுகுறை முடித்தல் பின் உடைத் தாயினுமாக; விரைந்து போய்ச் சனகியை மீட்டு மீள்தும் என்றான்: என இயையும். (18)

## சுக்கிரீவனிடம் இராமன் கூறுதல் 4022-4028

4022. எரிகதிர்க் காதல னினைய கூறலு
மருவியங் கண்டிறந் தன்பி னேக்கினன்
றிருவுறை மார்பனுந் தெளிவு தோன்றிட
வொருவகை யுணர்வுவந் துரைப்ப தாயினன்.

எரி கதிர்க்காதலன் இனைய கூறலும்,
அருவி அம் கண் திறந்து, அன்பின் நோக்கினன்,
திரு உறை மார்பனும், தெளிவு தோன்றிட,
ஒரு வகை உணர்வு வந்து, உரைப்பது ஆயினன்.

பொ :—சூரியன் மகனான சுக்கிரீவன் இவை போல்வனவற்றைச் சொன்ன அளவில், திருமகள் தங்கிய மார்பினை யுடையவனான இராமனும், (சோர்வு நீங்கித்) தெளிவு பிறக்க, அருவிபோல நீரைப் பெருகவிடுகின்ற அழகிய கண்களைத் திறந்து அன்பொடு பார்த்து, ஒருவகையாக (அரிதின்) நினைவு வரப்பெற்றுச் சொல்லுவானாயினன்.

கு :—எரிகதிர் - விளக்கம் மிக்க கிரணங்களையுடைய சூரியன். காதலன் - மகன். திருவுறை மார்பன் என்பது, 'அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல் மங்கை உறைமார்பா' (திருவாய்மொழி 6. 10. 10) என்னும் அருளிச் செயலைத் தழுவியமைந்தது; 'திருவுறையும் மணிமார்ப' (2661) என்றார் முன்னும். (19)

4023. விலங்கெழிற் றோளினாய்
வினையி னேனுமிவ்
விலங்குவிற் கரத்தின
னிருக்க வேயவள்
கலன்கழித் தனளிது
கற்பு மேவிய
பொலன்குழைத் தெரிவையர்
புரிந்து ளோர்கள்யார்.

விலங்கு எழில் தோளினாய்! வினையினேனும், இவ்
இலங்கு வில் கரத்தினன் இருக்கவே, அவள்
கலன் கழித்தனள்; இது கற்பு மேவிய
பொலன் குழைத் தெரிவையர். புரிந்துளோர்கள் யார்?

பொ :—மலைபோன்ற அழகிய தோள்களையுடையவனே! தீவினையாளனான யானும், விளக்கம் மிக்க இவ்வில்லைத் தாங்கிய கையினையுடையனாயிருக்கும்போதே, அவள்தன் அணிகலங்களைக் களைந்திட்டாள். பொற்குழையணிந்த மங்கல மகளிருள் இச்செயல் செய்தவர் எவர்? (ஒருவருமில்லை.)

கு :—விலங்கு - மலை. கரம் - கை. அவள் என்றது சீதையை. கலன் - அணி. பொலன் - பொன். குழை - குண்டலம். பொலன்

குழைத்தெரிவையர் இது புரிந்துளோர்கள் யார்? என இயைக்க. இது என்றது கலன் கழித்ததை. இராமன் வினைத்தொடர்பற்றவனு யினும், தன்னை மனிதனுக நினைந்து, அதற்கிசைய நடந்தமையாலும், தேவியைப் பிரிந்த துயர் நிலையாலும் வினையினேன் என்ருன். கணவர் உயிர் தாங்கியிருக்கும் நிலையில் கற்புடை மகளிர் தம் அணி களைக் களைதல் செய்யார்; அங்ஙனமிருப்பவும் சீதை அணி களைந் திட்டதனை ஒரு தீக்குறியாகக் கருதி, இது புரிந்துள்ளோர்கள் யார்? என வருந்துவானுயினன். இலங்குவில் கரத்தினன் என்றது, அவள் துன்பந் துடைத்தற்குரிய கருவி கையகத்ததாயிருந்தும் அது செய் திலேன் என்று வருந்தியவாறு. (20)

**4024.** வாணெடுங் கண்ணியென் வரவு நோக்கயான்
ருணெடுங் கிரியொடுந் தடங்க டம்மொடும்
பூணொடும் புலம்பினன் பொழுது போக்கினே
ஞணெடுஞ் சிலைசுமந் துழல நாணலேன்.

வாள் நெடுங்கண்ணி என் வரவு நோக்க, யான்
தாள் நெடும் கிரியொடும் தடங்கள் தம்மொடும்
பூணொடும் புலம்பினன், பொழுது போக்கினேன்;
நாண் நெடும் சிலை சுமந்து உழல நாணலேன்.

பொ:—வாள்போன்ற நீண்ட கண்ணையுடைய சீதை, (தன் துன்பம் நீக்க) என் வரவை எதிர்பார்த்திருக்க, அடிவாரத்தை யுடைய நீண்ட மலைகளோடும் பொய்கைகளோடும் அவள் (களைந்து இட்ட) அணிகலன்களோடும் புலம்பிப் பொழுதைக் கழித்த யான், நாணொடு கூடிய நீண்ட வில்லைச் சுமந்து திரிய வெட்கப்படாதவ னுனேன்.

கு:—வாள் நெடுங்கண்ணி என்றது சீதையை. தன் கண்களால் இராவணனைச் சுட்டெரித்து மீளும் ஆற்றலுடையளாயினும், அது செய்யின் என் ஆற்றல் மாசுபடும் என்று என் வரவு நோக்கினள் என்பதுபட 'வாணெடுங் கண்ணியென் வரவு நோக்க என்றனன். நாண் - முன்னது; வில்லின் நாண், பின்னது, வெட்கம் என்னும் குணம். தாள் - அடிவாரம். கிரி - மலை. தடங்கள் - பொய்கைகள். உழலுதல் - திரிதல். யான் நாணற்றேன் ஆனமையால் நாணுடைய வில்லும் பயன்படாமல் சுமையாயிற்று என்றவாறு. 'சீதை தன்னை மீட்க இராமன் வருவதை எதிர்பார்த்திருந்தமை, 'சுருதி நாயகன் வரும் வருமென்பதோர் துணிவால், கருதி மாதிரமனைத்தையும் அளக்கின்ற கண்ணுள்' (சுந்தர. 338) என்பதனுலும், இராமன்

சீதை பிரிவால் வருந்தி மலையொடு புலம்பி யிருந்தமை, 'குன்றே கடிதோடினை கோமளக் கொம்பரன்ன - என்றேவியைக் காட்டுதி' (சுந்தர. 575) என்பதனுலும், தடங்களோடு புலம்பியிருந்தமை, 'வண்ண நறுந்தாமரை மலரும் வாசக்குவளை நாண் மலரும் புண்ணின் எரியு மொரு நெஞ்சம் பொதியு மருந்திற் றரும் பொய்காய்!', கண்ணும் முகமுங் காட்டுவாய் வடிவும் ஒருகாற் காட்டாயோ' (பம்பைப். 24) என்பதனுலும் அறியலாம். பூவொடு புலம்பியிருந்தமை இப் படலத்துப் பேசப்பட்டது. (21)

**4025.** ஆறுடன் செல்பவ ரஞ்சொன் மாதரை
வேறுளார் வலிசெயின் விலக்கி வெஞ்சமத்
தூறுறத் தம்முயி ருகுப்ப ரென்னையே
தேறின டுயர நான் றீர்க்க கிற்றிலேன்.

ஆறு உடன் செல்பவர் அம் சொல் மாதரை
வேறு உளார் வலி செயின் விலக்கி, வெம்சமத்து
ஊறு உறத் தம் உயிர் உகுப்பர்; என்னையே
தேறினள் துயரம் நான் தீர்க்ககிற்றிலேன்.

பொ :—வழியில் உடன் செல்பவராகிய அழகிய மொழியினையுடைய மகளிரை அயலார் வலிந்து துன்புறுத்தின், (வீரராயுள்ளார்), அதனை விலக்கிக் கொடியோரில் (உடல்) ஊறுபடத் தம் உயிரையும் விடுவர்; இஃது இங்ஙனமாகவும், (எனக்கு மனைவியாய்) என்னையே காக்கும் துணையாகத் தெளிந்துகொண்ட சீதையின் துன்பத்தை யான் தீர்க்கும் ஆற்றலற்றவனுயினேன்.

கு :—ஆறு - வழி. வேறுளார் - அயலார். வலிசெய்தல் - வலிந்து துன்புறுத்தல். சமம் - போர். ஊறு - புண். 'ஊறறியாவுடல்' (புறம்-167) என்பதனுள் ஊறு புண் என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். உகுத்தல் - சிந்துதல்=விடுதல். தேறுதல் - தெளிதல். தொடர்பில்லாத வழிச் செல்வோர் துன்பத்தையும் நீக்குதல் வீரர் கடப்பாடாயிருக்க, யான் என்னொடு தொடர்புடையளாய் என்னையே ஆதரவாகப்பற்றி உடன்வந்த சீதையின் துன்பத்தைத் தீர்க்காதவனய் எளியனுயினேன் என்று இரங்கியவாறு. இங்கு, ஆறுடன் செல்பவ ரஞ்சொன் மாதரை' என்பதனுடன் முன் 'ஆறு தன்னுடன் வரும் அஞ்சொன்மாதரை' (2296) என்றதும் நினையத்தகும். (22)

**4026.** கருங்கட ரெட்டனர் கங்கை தந்தனர்
பொரும்புலி மானொடு புனலு மூட்டினர்
பெருந்தகை யென்குலத் தரசர் பின்னொரு
திருந்திழை துயரநான் றீர்க்க கிற்றிலேன்.

கருங்கடல் தொட்டனர்; கங்கை தந்தனர்;
பொரும்புலி மானொடு புனலும் ஊட்டினர்;
பெருந்தகை என் குலத்து அரசர், பின் ஒரு,
திருந்து இழை துயரம் நான் தீர்க்ககிற்றிலேன்.

பொ :—பெருங்குணங்களையுடையவரும் என் குலமுன்னோருமான அரசர்கள், பெரிய கடலை அகழ்ந்துதந்தனர்; (விசும்பின் வழிச் சென்ற) கங்கையாற்றை (நிலவுலகிற்) கொணர்ந்(து பாய்வித்)தனர்; தாக்குகின்ற புலியினை மானோடு (பகைநீங்கி உறவுகொள்ளச் செய்த தன்றி அவற்றை) ஒரு துறையில் நீர் உண்ணவும் செய்வித்தனர்; அவர்பின் வந்த நானோ திருந்திய அணிகலன்களை யணிந்தவளாகிய ஒரு பெண்ணின் துயரத்தைப் போக்கும் ஆற்றலற்றவனாயினேன்.

கு :—அரசர், தொட்டனர், தந்தனர், ஊட்டினர் என்க. கருமை - பெருமை. தொடுதல் - தோண்டுதல். பொருதல் - தாக்குதல். தகை - குணம். கடல் தொட்டவர் சகரர்; கங்கை தந்தவன் பகீரதன்; புலி மானொடு புனலூட்டியவன் மாந்தாதா. இவர் பெருமை குலமுறை கிளத்து படலத்தும் பேசப்பட்டது. இவ்வாறு செயற்கரிய செய்த பெரியோர் பலர் தோன்றிய குலத்தில், ஒரு பெண்ணின் துயர்தீர்க்கு மாற்றலற்ற யான் புல்லுருவிபோல் தோன்றினேன் எனத் தன்னை நொந்து கொண்டவாறு. (23)

**4027.** இந்திரற் குரியதோ ரிடுக்கண் டீர்த்திக
லந்தகற் கரியபோ ரவுணற் றேய்த்தன
னெந்தைமற் றவனின்வந் துதித்த யானுளேன்
வெந்துயர்க் கொடும்பழி வில்லிற் றாங்கினேன்.

இந்திரற்கு உரியது ஓர் இடுக்கண் தீர்த்து, இகல்
அந்தகற்கு அரிய போர் அவுணன் தய்த்தனன்;
எந்தை, மற்று அவனின் வந்து உதித்த யான் உளேன்
வெம் துயர்க் கொடும் பழி வில்லின், தாங்கினேன்.

பொ :—என் தந்தை (தசரத சக்கரவர்த்தி) இந்திரனுக்குரிய ஒப்பற்ற பெரிய துன்பத்தைப் போக்கி வலிய காலனுக்கும் (அடர்த்

தற்கு) அரிய போர்வலியுடைய சம்பராசுரனை இற்று ஒழியுமாறு செய்தான்; அவனிடத்து வந்து தோன்றிய யானோ எனில், கொடிய துன்பத்தைத்தரும் வெய்ய பழியினை, வில்லைத் தாங்குவதுபோலத் தாங்கியவனாயிருக்கின்றேன்.

கு:—எந்தை அவுணற் றேய்த்து, இடுக்கண் தீர்த்தனன் என இயைக்க. இடுக்கண் - துன்பம். அந்தகன் - இயமன். அவுணன் - அசுரன் = சம்பரன். பகையழித்தற்குப் பயன்படாத வில் எனக்குச் சுமையானவாறுபோலப் பழியும் சுமையாயிற்று என்றவாறு. தசரதன் இந்திரன் இடுக்கண் தீர்த்த வரலாறாவது, தண்டகாரணியத்தில் வைஜயந்தம் என்னும் நகரிலிருந்து அரசு புரிந்தவனும், திமித்துவசன் என்னும் மறு பெயருடையவனும், மாயவித்தை வல்லவனுமான சம்பரன் என்பான், அசுரரொடு கூடிப் படையெடுத்துச்சென்று இந்திரனைவென்று, அவன் அரசையும், நகரத்தையும் கவர்ந்து கொள்ள, அதனால் வருந்திய இந்திரன், தசரதனையடைந்து தன் துயர் துடைத்துதவுமாறு வேண்ட, அவன் சம்பரனை வென்று இந்திரனை அரசு நிலையிட்டனன் என்பதாம். (24)

4028. விரும்பெழி லெந்தையார் மெய்ம்மை வீயுமேல்
வரும்பழி யென்றியான் மகுடஞ் சூடலேன்
கரும்பழி சொல்லியைப் பகைஞன் கைக்கொளப்
பெரும்பழி சூடினேன் பிழைத்த தென்னரோ.

'விரும்பு எழில் எந்தையார் மெய்ம்மை வீயுமேல்
வரும் பழி என்று யான் மகுடம் சூடலேன்;
கரும்பு அழி சொல்லியைப் பகைஞன் கைக்கொளப்
பெரும் பழி சூடினேன்; பிழைத்தது என்? அரோ.

பொ:—கண்டோர் விழைவுறத்தக்க அழகினையுடைய என் தந்தையின் உண்மை(யான சொல்) அழிந்தால் பழி விளையும் என்று முடிசூடாத யான், கருப்பஞ்சாறும் மனமழியும் இனிய சொல்லினையுடைய சீதையைப் பகைவன் எடுத்துச்செல்ல, அளவிடலரிய பழியைச் சூடினேன்; யான் பழியினின்று நீங்கியது எவ்வாறு?

கு:—வீதல் - அழிதல். பழிவரும் என மாறுக. கரும்பு இங்கே கருப்பஞ்சாற்றினை உணர்த்தியது. கரும்பழி சொல்லி என்றது, சீதை. கருப்பஞ்சாற்றினும் இனிய சொல்லுடையாள் என்றவாறு. ஒரு பழி வராமல் தடுக்க முயன்ற யான், வேறு ஒரு பெரும்பழியினை யடைந்தேன்; யான் பழி நீங்கியவாறு நன்று என்று இராமன் நொந்து கூறியவாறு. (25)

சுக்கிரீவன் மீட்டும் ஆறுதல் கூறி இராமன் துயர்நீக்கல்

4029. என்னநொந் தின்னன பன்னி யேங்கியே
துன்னருந் துயரத்துச் சோர்கின் ருன்றனைப்
பன்னருங் கதிரவன் புதல்வன் பையுள்பார்த்
தன்னவெந் துயரெனு மளக்கர் நீக்கினுன்.

என்ன நொந்து, இன்னன பன்னி, ஏங்கியே
துன்னருந்துயரத்துச் சோர்கின்ருன் தனைப்
பன்னருங் கதிரவன் புதல்வன், பையுள் பார்த்து,
அன்ன வெம்துயர் எனும் அளக்கர் நீக்கினுன்.

பொ :—என்று வருந்தி, இவை போல்வனவற்றைச் சொல்லி மெலிந்து அடைதற்கரிய துயரத்திற் சோர்பவனுகிய இராமனை, அவனடைகின்ற துன்பத்தினைப் பார்த்து புகலுதற்கரிய (எல்லையற்ற) கிரணங்களையுடைய சூரியன் மகனுன சுக்கிரீவன், அத்தகைய துயரக் கடலினின்று நீக்கினுன்.

கு :—ஏங்குதல் - மெலிதல். துன்னுதல் - அடைதல். கதிரவன் - சூரியன். கதிரவன் புதல்வன் என்றது சுக்கிரீவனை. பையுள் - துன்பம். அளக்கர் - கடல். துயரெனும் அளக்கர் என்றது உருவகம். (26)

இராமன் சுக்கிரீவனிடம் மீட்டும் கூறுதல்

4030. ஐயநீ யாற்றலி ஞறி னேனல
துய்வனே யெனக்கிதி னுறுதி வேறுண்டோ
வையகத் திப்பழி தீர மாய்வது
செய்வனின் குறைமுடித் தன்றிச் செய்கலேன்.

'ஐய ! நீ ஆற்றலின், ஆறினேன், அலது
உய்வனே ? எனக்கு இதின் உறுதிவேறு உண்டோ ?
வையகத்து இப்பழி தீர, மாய்வது
செய்வன் ; நின் குறை முடித்தன்றிச் செய்கலேன்.

பொ :—வியக்கத்தக்கவனே! நீ ஆறுதல் கூறுதலால் ஆறினேனேயன்றி, (இப்பழி வந்தபின்) உயிர் தாங்கியிருப்பேனே? எனக்குச் சாவினும் நல்லது வேறு உண்டோ? (இல்லை); ஆதலால், இப்பழிதீரச் சாவேன்;அ துவும் நின் குறை முடித்தல்லது செய்யேன்.

கு:—உய்தல் - உயிர்தாங்கி யிருத்தல். ஏ ஓ என்பவை எதிர் மறைப் பொருளன. இது என்பது உய்யாமை சுட்டியது. உறுதி - நன்மை. (சீவகசிந்தாமணி. 1235). இப்பழி என்றது, உடன்வந்த சீதையின் துயர் துடைக்க மாட்டாமையால் உளதாகும் பழியினை. மாய்தல் - சாதல். பழியினையடைந்த யான், நின்குறை முடித்தபின் அப்பழிதீர இறந்துபடுவேன் என்றவாறு. சுக்கிரீவனுக்குக் குறை யாவது: வாலியால் மனைவியும் அரசுரிமையும் கவர்ந்து கொள்ளப் பட்டுத் துன்புற்ற நிலை. அக்குறை முடித்தலாவது: வாலியைக் கொன்று மனைவியினையும் அரசுரிமையினையும் மீட்டுதவல். (27)

## அனுமன் இராமனிடம் கூறுதல் 4031-4036

4031. என்றன னிராகவ னினைய காலையில்
வன்றிறன் மாருதி வணங்கி னனெடுங்
குன்றிவர் தோளினாய் கூற வேண்டுவ
தொன்றுள ததனைநீ யுணர்ந்து கேளெனா.

என்றனன் இராகவன்; இனைய காலையில்
வன்திறல் மாருதி, வணங்கினன்; 'நெடுங்
குன்று இவர் தோளினாய்! கூறவேண்டுவது
ஒன்று உளது; அதனை நீ உணர்ந்து கேள்' எனா.

பொ:—என்று இராமன் கூறினான்; இப்பொழுது மிக்க வலிய மைந்த அனுமன் (இராமனை நோக்கி) 'நீண்ட மலைபோன்ற தோளை யுடையவனே! யான் சொல்ல வேண்டுவது ஒன்று உண்டு. அதனை நீ சோர்வு நீங்கியிருந்து கேட்பாயாக' என்று வணங்கினான்.

கு:—இவர்தல் - ஒத்தல். உணர்தல் - சோர்வு நீங்குதல். மாருதி, 'தோளினாய்! கூறவேண்டுவது ஒன்று உளது; அதனை நீ உணர்ந்து கேள்' எனா வணங்கினன் என இயைத்து முடிக்க. (28)

4032. கொடுந்தொழில் வாலியைக் கொன்று கோமகன்
கடுங்கதி ரோன்மக னாக்கிக் கைவளர்
நெடும்படை கூட்டின லன்றி நேடரி
தடும்படை யரக்கர்த மிருக்கை யாணையாய்.

'கொடுந்தொழில் வாலியைக் கொன்று, கோமகன்
கடுங்கதிரோன் மகன் ஆக்கிக் கைவளர்

நெடும்படை கூட்டினுலன்றி, நேடரிது
அடும் படை அரக்கர்தம் இருக்கை, ஆணையாய் !

பொ :—ஆணைச்சக்கரத்தையுடையோனே ! கொடிய செயலை யுடைய வாலியைக் கொன்று வெய்ய கிரணங்களையுடைய சூரியன் மகனுன சுக்கிரீவனை அரசனுக்கிச் செயல்மிகுதியினையுடைய பெரிய படையினைக் கூட்டினுலன்றிக் கொல்லும் இயல்புள்ள படையினை யுடைய அரக்கர் உறையும் இடம் தேடுதற்கு அரியதாகும்.

கு :—தொழில் - செயல். கதிரோன் மகன் கோமகனுக்கி என்க. கை - செயல் ; படைவகுப்பும் ஆம். நேடுதல் - தேடுதல். இருக்கை - இருப்பிடம். அரக்கர்தம் இருக்கை நாடரிது என இயைக்க. (29)

4033. வானதோ மண்ணதோ மற்று வெற்பதோ
வேனமா நாகர்த மிருக்கைப் பாலதோ
தேனுலாந் தெரியலாய் தெளிவ தன்றுநா
மூனுடை மானிட மான துண்மையால்.

‘ வானதோ ? மண்ணதோ ? மற்று வெற்பதோ ?
ஏனை மா நாகர்தம் இருக்கைப் பாலதோ ?
தேன் உலாம் தெரியலாய் ! தெளிவது அன்று, நாம்
ஊன் உடை மானிடம் ஆனது உண்மையால் ’.

பொ :—வண்டுகள் சூழும் மாலையணிந்தவனே ! அவ்வரக்க ரிருக்கை, வானுலகத்துள்ளதோ ? மண்ணுலகத்துள்ளதோ ? மலையி லுள்ளதோ ? இவையல்லாத பெரிய நாகர்வாழும் கீழுலகத் துள்ளதோ ? நாம் ஊனுடைய மானிடப் பிறவியரானமையால், இன்னவிடத்ததென்று தெரியுந் தன்மையுடையதன்று.

கு :—வான் - வானுலகு. மண் - மண்ணுலகு. நாகர்தம்இருக்கை - நாகருலகம். தேன் - வண்டு. உலாவும் என்பது உலாம் என விகாரப்பட்டு நின்றது. உலாவுதல் - சூழ்தல். தெரியல் - மாலை. குரக்கினமும் மனிதவுருப்போன்ற உருவமைப்புடைமையால், ‘ நாம் மானிடமானதுண்மையால் ’ என்ருன். ஊன் - மாமிசம். மானிடம் - மனிதப்பிறவி. மானிடர்க்குத் தேவரைப்போல இருந்த இடத்தி னின்றே பிற இடங்களில் நிகழ்வனவற்றை அறிதல் அரிதாதலால் மானிடமானதுண்மையால் (அவரிருக்கை) தெளிவதன்று என்ருன். (30)

4034. எவ்வுல கங்களு மிமைப்பி னெய்துவர்
வவ்வுவ ரவ்வழி மகிழ்ந்த யாவையும்
வெவ்வினை வந்தென வருவர் மீள்வரா
லவ்வவ ருறைவிட மறியற் பாலதோ.

எவ் உலகங்களும் இமைப்பின் எய்துவர்;
வவ்வுவர் அவ்வழி மகிழ்ந்த யாவையும்;
வெவ்வினை வந்தென வருவர் மீள்வர்; ஆல்
அவ்வவர் உறைவிடம் அறியற் பாலதோ?

பொ :—(அவ்வரக்கர்) இமைப்பொழுதினுள் எல்லாவுலகங்களையும் அடைவர்; (அவ்வுலகங்களில்) தாம் விரும்பியவற்றையெல்லாம் கவர்ந்துகொள்வர்; கொடியவினை (உயிர்களிடம் பயனை ஊட்டத் தவருது) வந்தாற்போல (த் தம்மால் வெறுக்கப்பட்டாரை ஒறுக்கத் தவருது) வருவர்; (பயன் முழுதும் ஊட்டியபின் வினை உயிர்களை விட்டுச் செல்லுதல்போலத் தம்மால் வெறுக்கப்பட்டாரை ஒறுத்தபின் அவரை விட்டுத்) தம்மிடம் செல்வர். அந்த அந்த அரக்கர் உறையுமிடம் நம்மால் அறியுந் தரத்ததோ?

கு :—மகிழ்தல் - விரும்புதல்; 'மன்னனை மகிழ்ந்து நின்ருர்' (சீவகசிந்தாமணி. 2715), 'மங்கலவணியிற் பிறிதணி மகிழாள்' (சிலப். 4-50) என்பவற்றுள், மகிழ்தல் விரும்புதல் என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். உயிர்களை அவை செய்தவினை தொடர்தல், 'செல்லுறுகதியிற் செல்லும் வினையெனச் சென்றதன்றே' (28) என முன்னும் கூறப்பட்டது. (31)

4035. ஒருமுறை யேபரந் துலகம் யாவையுந்
திருவுறை வேறிடந் தேர வேண்டுமால்
வரன்முறை நாடிட வரம்பின் ருலுல
கருமையுண் டளப்பரு மாண்டும் வேண்டுமால்.

ஒரு முறையே பரந்து, உலகம் யாவையும்
திருஉறை வேறு இடம் தேரவேண்டும்; ஆல்
வரன்முறை நாடிட வரம்பு இன்று; ஆல் உலகு
அருமை உண்டு; அளப்பரும் ஆண்டும் வேண்டும் ஆல்.

பொ :—உலகு வரம்பில்லாதது; (அதனை) வரிசையாக (ஒன்றன் பின் ஒன்ருக)த் தேட இயலாது; அளவற்ற ஆண்டுகளும் வேண்டும்; (ஆதலால்) ஒரு சமயத்திலேயே (தக்கார் பலர்) உலகமெல்லாம்

(சென்று) பரவிச் சீதாபிராட்டி தங்கிய வேறிடத்தை ஆராய்ந்தறிய வேண்டும்.

கு :—உலகு வரம்பின்று; (அதனை) வரன்முறை நாடிட அருமை உண்டு; அளப்பரும் ஆண்டும் வேண்டும் (ஆதலால்) உலகம் யாவையும் ஒரு முறையே பரந்து திருஉறை வேறு இடம் தேர வேண்டும் என இயையும். ஒரு முறையே—ஒரே சமயத்தில். பரத்தல்—பரவுதல். திரு என்றது சீதாபிராட்டியை. வரன்முறை - வரிசை. நாடுதல் - தேடுதல். வரம்பு - எல்லை. (32)

4036. ஏழுபத் தாகிய வெள்ளத் தெம்படை
ஊழியிற் கடலென வுலகம் போர்க்குமா
லாழியைக் குடிப்பினு மயன்செ யண்டத்தைக்
கீழ்மடுத் தெடுப்பினுங் கிடைத்த செய்யுமால்.

ஏழுபத்து ஆகிய வெள்ளத்து எம் படை,
ஊழியிற் கடல் என உலகம் போர்க்கும்; ஆல்
ஆழியைக் குடிப்பினும், அயன் செய் அண்டத்தைக்
கீழ் மடுத்து எடுப்பினும் கிடைத்த செய்யும் ஆல்.

பொ :—எழுபது வெள்ளம் என்ற அளவினையுடைய எங்கள் சேனை, உகமுடிவில் கடல்போல உலகம் முழுதும் பரவும்; கடலைக் குடிப்பதாயினும், பிரமன் படைத்த உலக வுருண்டையைக் கையைக் கீழே செலுத்திப் பேர்த்தெடுப்பதாயினும் தமக்குக் கிடைத்த பணியைச் செய்யும்.

கு :—ஏழுபத்து - எழுபது. வெள்ளம் - ஒரு பேரெண். எம் படை போர்க்கும் செய்யும் என இயைந்து முடியும். ஆழி - கடல். அண்டம் - உலகவுருண்டை. மடுத்து - செலுத்தி. (33)

இராமன் முதலியோர் வாலிபாற் போதல்

4037. ஆதலா லன்னதே யமைவ தாமென
நீதியாய் நினைந்தனெ னெனநி கழ்த்தினன்
சாதுவா மென்றவத் தனுவின் செல்வனும்
போதுநாம் வாலிபா லென்னப் போயினர்.

"'ஆதலால் அன்னதே அமைவது ஆம் என,
நீதியாய்! நினைந்தனென்" என நிகழ்த்தினன்;

'சாது ஆம்' என்ற அத் தனுவின் செல்வனும்
'போதும் நாம் வாலிபால்' என்னப் போயினர்.

பொ :—'ஆதலால் நீதிமானே! (படைகளையெல்லாம் திரட்டி, ஒரே சமயத்தில் உலக முழுதும் சென்று பரவிச் சீதையைத் தேடுவதில் ஈடுபடச் செய்யும்) அச்செயலே பொருந்தியதாகும் என்று எண்ணினேன்' என்று அனுமன் சொன்னான்; 'நல்லதாகும்' என்று அவ்வாறு செய்ய இசைந்த அவ் வில்லின் செல்வனான இராமனும், 'நாம் வாலி பக்கல் செல்வோம்' என்ன (இராமன் சுக்கிரீவன் அனுமன் முதலியோர்) சென்றனர்.

கு :—அன்னது என்பது முன் 4034-ஆம் பாட்டில் கூறியபடி படைகளையெல்லாம் திரட்டி ஒரே சமயத்தில் உலக முழுதும் சீதையைத் தேடுதலைச் சுட்டி நின்றது. அமைதல் - பொருந்துதல். நிகழ்த்துதல் - சொல்லுதல். சாது - நல்லது; 'சாதுவாய் நின் புகழின் றகையல்லால் பிறிதில்லை' (திருவாய்மொழி. 3. 1. 6) என்னும் அருளிச் செயலுள் சாது நல்லது என்னும் பொருளிற் பயின்றமை காணலாம். 'சாது வென்றுணர்கிற்றியேல்' (சுந்தர. 1133) என்று ஆசிரியரே பின்னும் கூறுவர். தனுவின் செல்வன் என்றது இராமனை. தனு - வில். (34)

கலன்காண் படலம் முற்றிற்று.

# 7. வாலி வதைப் படலம்

இராமன், சுக்கிரீவனது நட்பினைப்பெற்று வாலியைக் கொன்ற செய்தியைக் கூறுவது, வாலி வதைப் படலம் ஆகும். இப்படலம் சில சுவடிகளில் 'வாலி மோட்சப் படலம்' எனவும் குறிப்பிடப்பெற்றுளது. பிற பதிப்புக்களில் இப்படலத்தின் முற்படலமாகிய கலன்காண் படலத்தின் இறுதியிற் சேர்க்கப்பெற்ற ஒன்பது பாடல்களும், வாலி வதைப் படலத்தின் பின்னே தாரை புலம்புறு படலம் எனத் தனியே ஒரு படலமாகப் பதிக்கப்பெற்ற இருபது செய்யுட்களும் பழமை வாய்ந்த சுவடிகளில் வாலி வதைப் படலம் என ஒரே படலமாக இணைந்து காணப்படுதலால், அம்முறையே இப்பதிப்பிலும் மேற் கொள்ளப் பெறுவதாயிற்று. இப்படலத்துள் அமைந்த பாடல் 181. மிகைப் பாடல் 1.

## படலப் பொருட் சுருக்கம்

வாலியைக் கொன்று வானரப் படைகளை ஒன்று சேர்த்துச் சீதையின் இருப்பிடத்தை நாடி யறிவதே தக்கது என்று அநுமன் கூற, இராமனும் அதற்கு இசைந்தனன். இராமன், இலக்குவன், சுக்கிரீவன், அநுமன் ஆகிய நால்வரும் நளன் தாரன் நீலன் முதலிய வானர வீரர்களும் வாலி இருக்கும் கிட்கிந்தை மலையை அடைந்து வாலியைக் கொல்லுதற்குரிய உபாயத்தை ஆராய்ந்தனர். இராமன் சுக்கிரீவனை நோக்கி, 'நீ வாலியைப் போருக்கு அழைத்துவந்து அவனொடு பொருது நிற்கும் நிலையில், யான் மறைந்து நின்று வாலிமேல் அம்பு எய்து கொல்வதே தக்கது என்று கருதுகின்றேன்' என்றான். சுக்கிரீவனும் அதற்கிசைந்து போர் முழக்கஞ் செய்து வாலியின் அரண்மனையை அடைந்து அவனைப் போருக்கு அறைகூவி அழைத்தான். வாலியும் பெருஞ் சினங்கொண்டு போருக்குப் புறப்பட்டான். அந்நிலையில் வாலியின் மனைவி தாரை என்பவள், தன் கணவனைத் தடுத்து நின்று, 'அரசே! இராமன் என்பவன் நின் தம்பி சுக்கிரீவனுக்கு இனிய உயிர்த்துணை வனாகி உன்னைக் கொல்லுதற்கு உடன்வந்துள்ளான் என்று நம்பால் அன்புடையார் சிலர் கூறினார்கள்' எனக் கூறினாள். அதுகேட்ட வாலி, இராமனுடைய நற்பண்புகளைத் தாரைக்கு அறிவுறுத்தி அவளைத் தேற்றி நிறுத்திவிட்டுப் பெருஞ்சினத்துடன் சுக்கிரீவனொடு போர் செய்ய விரைந்து நெருங்கினான். பேராற்றல் படைத்த வாலியும் சுக்கிரீவனும் உருத்தெழுந்து தம்முட் பொருதற்கு முந்தும் போர்த்தோற்றத்தைக்கண்டு வியந்த இராமன், இலக்குவனை நோக்கி, "ஐயனே! இவர்களைக் கூர்ந்து நோக்குவாயாக. ஊழிக்

காலத்திற் கிளர்ந்தெழும் கடலும் காற்றும் தீயும் இவர்களைப்போன்று கிளர்ந்தழிக்கும் பெருவலி படைத்தனவாமோ?" என வினவினன். அதுகேட்ட இலக்குவன், "சுக்கிரீவனாகிய இவன் தன் தமையனது வாழ்நாளைக் கொள்ளுதற்குக் கொடிய கூற்றுவனை அழைத்து வந்தான். 'குரங்கின் செயல்' என்று பலரும் இகழ்தற்குரிய செய்கையையே செய்தற்கு எண்ணினன் என்னும் எண்ணம் என் உள்ளத்தை வருத்துதலால் ஒன்றையும் உணரவியலாது கலக்கம் உறுகின்றேன்" எனக் கூறினன். அந்நிலையில் இராமன், இலக்குவனது மனத்திற் பதியுமாறு தக்க அறிவுரையினைப் பகர்ந்தான். தம்முட் போர் செய்ய நெருங்கிய வாலியும் சுக்கிரீவனும் ஒருவர் ஒருவர்க்கு இளையாதவராய்க் கடும்போர் புரிந்தனர். முடிவிற் சுக்கிரீவன் வாலியொடு எதிர்த்து நிற்கலாற்றாது பெரிதும் வருந்தியவனாய் இராமன் இருக்குமிடத்தை யடைந்து நடுங்கிப் பணிந்து நின்றான். சுக்கிரீவனது துயர்நிலைக்கு இரங்கிய இராமன், அவனை நோக்கி, "நீ வருந்தாதே. நீயும் நின் தமையனாகிய வாலியும் உருவத்தாலும் நிறத்தாலும் ஒத்த தோற்றமுடையீராய் இருத்தலால் வாலியைத் தெரிந்து அவன்மேல் அம்பு எய்ய முடியாமற் போயிற்று. நீ இக்கொடிப்பூ மாலையை அடையாளமாகச் சூடிச்செல்க" என்றுகூற, சுக்கிரீவனும் அவ்வடையாள மாலையைச் சூடிக்கொண்டு வாலியை யடைந்து கடும்போர் புரிந்தான். சுக்கிரீவனது நிலைகண்டு ஐயுற்று வெகுண்ட வாலி, அவனைப் பிடித்து நிலத்தில் மோதிக் கொல்லுதற்கு எண்ணி மேலே தூக்கினன். அதனைக்கண்ட இராமன் விரைந்து அம்பினையெடுத்து வில்லில் தொடுத்து வாலியின்மேல் எய்தான். அந்த அம்பு விரைந்துசென்று வாலியின் மார்பில் தைத்தது. வாலியும் உணர்விழந்து கீழே விழுந்தான். அந்நிலையில் சுக்கிரீவனை இறுகப்பற்றிய வாலியின் கைப்பிடி நெகிழ்ந்தது. ஆற்றல்மிக்க வாலி, தன் மார்பில் தைத்த அம்பினைக் கையாற்பற்றிப் பெரிதும் வெகுண்டு, 'இதனை எய்தவன் யார் கொலோ' என ஐயுற்றுத் தன் மார்பில் தைத்த அம்பினைத் தன் கையினாலும் பல்லினாலும் காலினாலும் வாலினாலும் முயன்று பறித்தெடுத்தான். அம்பினைப் பறித்த அளவில் அவன் மார்பினின்றும் வெள்ளம்போற் குருதி பெருகியது. தமையனது மார்பிற் குருதிப் பெருக்கைக்கண்ட சுக்கிரீவன் உடன்பிறப்பாகிய பாசத்தாற் பிணிப்புண்டு கண்களில் நீர்மல்க நிலமிசை விழுந்தான்.

வாலி தன் மார்பில் தைத்த அம்பினைப் பறித்து எடுத்தவன், அதன்கண் பொறிக்கப்பெற்ற இராமன் என்னும் செம்மைசேர் நாமந் தன்னைக் கண்களில் தெரியக் கண்டான். தான் மதித்துப் போற்றிய இராமனது பெருமைக்கும் அவன் தோன்றிய மறுவற்ற சூரியகுலத்திற்கும் மாசுண்டாயிற்றே என நாணமுற்று வருந்தினன். 'இராமன் தன் இறைமைக்குணத்தினின்றும் பிறழ்ந்தனன்; நீதிமுறையில்

தவறிவிட்டான். பெரியோனுகிய இவனது இயல்பே இதுவானுல் ஏனைச் சிறியோரது இயல்பு யாதாகும்' எனக்கூறி வருந்துபவனுகிய வாலியின் முன்னே, உலகத்தில் நல்லறங்களை நிலை நிறுத்துதற் பொருட்டு அவதரித்த இராமன் வந்து தோன்றினுன். பேரழகனுகிய இராமனை வாலி கண்ணுற்ருன். கண்களில் தீப்பொறி பறக்க இராமனை வெகுண்டு நோக்கி, "நீ என்ன நினைந்து என்ன காரியத்தைச் செய்தாய்? நீ அறநெறிகளை நன்கு அறிந்தவனுக இருந்தும் அறியாமையால் மறந்தாரைப்போன்று இங்ஙனம் தகுதியல்லாதனவற்றைச் செய்தல் முறையாகுமோ? நீ நின் வாழ்க்கைத் துணையாகிய சீதையைப் பிரிந்த பின்னர்ச் சிந்தை கலங்கி நினக்குரிய அறச் செயல்களினின்றும் வழுவினை போலும்? அரக்கர் ஒரு தீங்கினைச் செய்தால் குரங்கினத் தலைவனைக் கொல்லும்படி உங்கள் மனுநெறி கூறியதுண்டோ? நினக்கு இயல்பாகிய இரக்கத்தினைவிட்டு மறைந்து நின்று என்மேல் அம்பெய்து கொல்லும்படி நான் செய்த குற்றந்தான் யாது? வலியோர் மெலியோரை வருத்துவராயின் அதனுல் வரும் பழி அவ்வலியோர்க்கு இல்லையாய் விடுமோ? துணை வேண்டாச் செருவென்றியினையுடைய நீ, நின் தந்தை உனக்குத்தந்த பேரரசை நின் தம்பி பரதனுக்குக் கொடுத்து நின்னுட்டில் ஒரு காரியத்தைச் செய்தாய். என்னைக் கொன்று எனக்குரிய அரசினை என் தம்பி சுக்கிரீவனுக்குக் கொடுத்து இக்காட்டிலும் ஒரு காரியத்தைச் செய்தனை. நீ என்னைச் செய்த செயல் இதுவாயின், 'இராவணன் நீதியற்ற செயலைச் செய்துவிட்டான்' என்று நீ அவனை வெகுளுதற்கு வழியுண்டோ? நினது வீரத்திற்கும் அன்பின் பெற்றிக்கும் வாய்மைத் திறத்திற்கும் நடுவுநிலைக்கும் ஒவ்வாத இச்செயலைச் செய்தது எது கருதி? நின்னெடு தொடர்பில்லாத அயலானெருவன் வலியப் போர் செய்தற்கு அறைகூவி யழைத்தமையால் அவனெடு பொருது நிற்கும் என்னை மறைந்து நின்று அம்பினை யெய்து வஞ்சனையால் உயிர் கவர்ந்த கள்வனுகிய நீ, எனது உயிர்பிரியும் இவ்விடுக்கண் நிலையில் வலிமைமிக்க சிங்க ஏறுபோன்று என்னெதிரில் தலை நிமிர்ந்து நிற்கின்ருய் போலும். வெற்றியுடைய வீரனே! அறநூல் விதிகளையும் நின்குலவொழுக்கத்தினையும் போற்ருது விட்டாய். நின் செயலால் வாலியைக் கொன்ருயல்லை; நிலைபெற்ற அறத்தின் வேலியையே அழித்தொழித்தனை. நின்மனைவியை மாற்ருனெருவன் கைப்பற்றிக்கொள்ளவும் நின் கையிலுள்ள கொடிய வில்லானது நினது வீரத்தைப் பழித்துரைத்தல் தகுதியோ" என இவ்வாறு வாலி தன் கண்களில் தீப்பொறி பறக்கப் பற்கள் பொடிபடக் கடித்து வெகுண்டு பேசினுன்.

வாலி இகழ்ந்து கூறியவற்றையெல்லாம் அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்த இராமன், தான் இவ்வாறு தண்டிக்கும்படி வாலி

செய்த குற்றங்கள் இவை என்பதனை வாலியின் உள்ளத்திற் பதியு மாறு எடுத்துக் கூறினன். "வாலியாகிய நீ மாயாவி என்னும் அசுரனல் இறந்துபட்டாய் என்றெண்ணிய உன் தம்பி சுக்கிரீவன், நின் நாட்டிலுள்ள பெரியோர்களது வற்புறுத்தலுக்கு இசைந்து கிட்கிந்தையின் அரசாட்சியை ஏற்று நடத்தியதன்றி நினக்கு மாறு பட்டு அரசாட்சியைக் கவர்ந்தவனல்லன் என்பதை நீ தெளிவாகத் தெரிந்து கொண்டபின்பும் நின் தம்பி சுக்கிரீவன் நின்னை மகிழ்ந்து எதிர்கொண்டு வணங்கித் தன் பிழையைப் பொறுக்கும்படி நின்னை வேண்டி அடைக்கலம் புகுந்த நிலையிலும் அவனைக் கொன்றொழிக்கத் துணிந்தாய். அவனுடைய மனைக்கிழத்தியை வலிதிற் கவர்ந்து கொண்டாய். 'நீ வந்தால் இறந்துபடுவாய்' என மதங்கமுனிவர் இட்ட சாபமாகிய காவலையுடைய ருசியமூக பர்வதத்தினை நின் தம்பி அடைந்தமையால் அவனைத் தொடர்ந்து கொல்லாதொழிந்தாய். குடிப்பிறப்பு, வீரம், வாய்மை முதலிய எல்லாப் பண்புகளுக்கும் ஒத்த ஒழுக்கமாவது பிறன் மனையாளை விரும்பாமையாகிய பேராண்மை யன்றே? அறநெறியையும் இருமைப் பயன்களையும் அறிந்தனை யாயின், நின்பெருமையினை விட்டு நின் தம்பிக்குரிய மனைவியை வலிதிற் கவர்தலாகிய இத் தீச்செயலைச் செய்யத் துணிவாயோ? இங்ஙனமெல்லாம் நின் தம்பிக்குப் பெருந்தீங்கு புரிந்தமையாலும், நின்னல் துன்புறுத்தப்பட்டு அல்லலுற்ற சுக்கிரீவன் என்னைத் தஞ்ச மடைந்து எனக்கு உயிர்போலும் நட்பினன் ஆயினமையாலும், கொடியவனாகிய உன்னைக் கொன்று உயிர் கவர்ந்தேன். எனக்குத் தொடர்பில்லாத அயலாராயினும் அவர்கள் தம்மின் வலியோரால் துன்புறுத்தப்பட்டு எளியோராய் வருந்துவராயின் அன்னேரது துக்கத்தைத் துடைத்தல் என் மனக் கருத்தாகும்" என இராமன் வாலிக்கு அறிவுறுத்தினன்.

இராமனது அறிவுரையைக் கேட்ட வாலி இராமனை நோக்கி, "ஐயனே! அறநெறியாக நின்னற் குறிப்பிடப்பெற்ற இத்துணை நீதிகளும் குரங்கினத்தாராகிய எம்மவர்க்கு ஏற்புடையன அல்ல. விரும்பியவாறு ஒழுகுந் திறமே எமக்குரிய தொழிலாகும். நல்லறிவு டைய மக்கட் குலத்தார் கைக்கொண் டொழுகுதற்குரிய கற்பொடு பொருந்திய மனை வாழ்க்கைமுறை வானரர்களாகிய எம்மவர்க்குப் படைப்புக் கடவுளால் விதிக்கப் பெறவில்லை. எங்களது உடல் வன் மைக்கும் முயற்சிக்கும் ஏற்ற வண்ணம் கிடைத்தவற்றை நுகர்ந்து விரும்பியவாறு திரிதலே எங்களுடைய ஒழுக்கமாகும். வேத வழக் கொடு பொருந்திய மணமுறையோ நற்குடிக்கேற்ற குணங்களோ எங்களுக்கு இல்லை. இதுவே குரங்கினத்தாராகிய எமக்குரிய இயல் பாகும். இவ்வியல்பின்படி யான் எத்தகைய குற்றத்தையும் செய்தி

லேன். மனுகுலத்தானுகிய நீ என்பாற் சிறிதும் குற்றமில்லாமையை மனங்கொள்வாயாக" எனக் கூறினன்.

இவ்வாறு, வாலி தன்னை விலங்கெனக் கூறிக்கொள்ளு முகத்தால் தன்பாற் சிறிதும் குற்றமில்லை யென்பதனை யுணர்த்திய நிலையில், இராமன் அவனை நோக்கி, "நீ உருவத்தால் விலங்கெனத் தோன்றினும் உணர்வொழுக்கங்களால் விலங்கினத்தின் வேறுபட்டு மனவுணர்வுடைய உயர்திணையுயிராய் விளங்குகின்ருய். எக்குலத்திற் பிறப்பினும் யாவரேயாயினும் அவரவர் செய்யும் நன்றும் தீதுமாகிய வினை காரணமாகவே உயர்வும் தாழ்வும் உண்டாம் என்னும் உண்மையை யுணர்ந்த நல்லறிவுடைய நீ, பிறன் மனையாளின் கற்பு மாண்பினைச் சிதைக்கும் பெருந் தீங்கினைப் புரிந்தனை. அது பற்றியே உன்னை ஒறுத்தேன்" என்ருன். அம்மொழியினை மனம் பொருந்தக் கேட்ட வாலி, இராமனை நோக்கி, "பெரியோய்! குற்றஞ் செய்தவனுகிய என்னைத் தண்டிக்கும் நிலையில் என்னெதிரில் நின்று அம்பெய்யாமல் மறைந்து நின்று எய்தது எது கருதி?" என வினவினன். அந்நிலையில் இலக்குவன், வாலியை நோக்கி "உன் தம்பியாகிய சுக்கிரீவன் நின்னுல் துன்புறுத்தப்பட்டு முன்னமே என் தமையனைச் சரணடைந்தமையால் என் தமையன் நின்னைக் கொன்ருெழிப்பதாக நின் தம்பிக்கு உறுதி கூறினன். நின்னெடு நேர் நின்று பொருதழிக்க முற்பட்டால், நீயும் நின்னுயிரிடத்தே அன்புடையையாகி அடைக்கலம் என்று கூறித் தன்னைச் சரணடைவாய். அந்நிலையில் தான் சுக்கிரீவனுக்குக் கூறிய உறுதி மொழியை நிறைவேற்றுதல் தடைப்படும் என்பது கருதியே மறைந்து நின்று நின்மேல் அம்பெய்தது" என மறுமொழி கூறினன்.

நற்பொருள்களை அறிஞர்பாற் கேட்டுணர்ந்த கேள்விச் செல்வனும் சிறியன சிந்தியாதானுமாகிய வாலி, இலக்குவன் கூறிய பொருள் மொழியைத் தன் உள்ளத்தில் ஏற்றுக்கொண்டான். உலக முழுதுடையானுகிய இராமன் அறநெறி சிதையும்படி எதனையும் செய்ய மாட்டான் என்பதனை எண்ணினன். "தாய்போன்று எவ்வுயிர்க்கும் தலையளி செய்யும் தலைவனே! நாய்போன்று இழிந்த தன்மையினையுடைய எம்பால் நன்னெறியாகிய நேர்மைப் பண்பினைக் குற்றமறக் காணுதல் கூடுமோ? யான் அறியாமையாற் செய்த தீமைகளைப் பொறுத்தருள்க. யான் இழித்துரைத்த புன்மொழிகளை நின் திருவுள்ளத்திற் கொள்ளாதொழிக." என இராமனை இரந்து வேண்டினன். இராமன் தம்பியர் தன் தம்பி சுக்கிரீவனை இகழாதிருக்கச் செய்யுமாறும், தன் தம்பி சுக்கிரீவன் மதுவுண்டு மயங்கிப் பேதைமையாற் பிழை செய்யினும் அப்பிழைகளைப் பொறுத்து அவனைப் பாதுகாக்குமாறும் இராமனை வேண்டிக் கொண்

டான். சீதையைக் கவர்ந்து சென்ற கொடியோனுகிய இராவணனைப் பற்றி வந்து இராமன் முன்னிலையில் ஒறுத்தற்குரிய வாய்ப்பில்லாத தனது தளர் நிலையை யெண்ணி இரங்கினுன். சீதையை மீட்கும் செயலில் உதவி செய்தற்குரிய அறிவாற்றலுடைய அனுமனது ஆற்றலையும், அனுமன் சுக்கிரீவன் ஆகிய இவ்விருவரைப் போலும் துணைவர் பிறர் கிடைத்தற்கு அரியர் என்பதனையும் இராமனுக்கு எடுத்துரைத்து, "வானினும் உயர்ந்த தோளுடைய பெருவீரனுகிய நீ இவர்களைத் துணையாகக்கொண்டு சீதையை நாடிப் பெறுவாயாக" எனக் கூறினுன். பின் தன் தம்பி சுக்கிரீவனைத் தன் கைகளை நீட்டித் தழுவி, தன் பிரிவுக்கு வருந்தும் அவனைத் தேற்றி, "இறைவனே உலகில் அறத்தை நிலைநிறுத்தற் பொருட்டு இராமனுக அவதரித் தான். நீ அவனைப் பணிந்து ஏவல் செய்து இம்மை மறுமை அம்மையென்னும் மும்மை நலங்களையும் பெற்று உய்வாயாக" எனப் பலவகை உறுதியுரைகளைப் பகர்ந்தான். பின்னர் இராமனைப் பார்த்து "மன்னவ குமாரனே! இச் சுக்கிரீவன் தன் சுற்றத்தா ரோடும் உனக்கு அடைக்கலப் பொருளாவான்" என்று தலைமேற் கைகூப்பி வணங்கினுன். பின் சுக்கிரீவனை நோக்கி, 'நீ உன் மகனுகிய அங்கதனை அழைத்து வருக' எனப் பணித்தான். அவனது ஏவலால் அங்கதனும் அங்கு வந்து சேர்ந்தான். துன்பம் இன்னதென்றறியாத அங்கதன், இரத்த வெள்ளத்தில் வீழ்ந்து கிடக்கும் தன் தந்தையைக் கண்டு ஆற்ருது அவன்மேல் வீழ்ந்து அழுதரற்றிப் பலவாறு புலம்பி வருந்தினுன். அந்நிலையில் வாலி தன் மைந்தனைத் தழுவித் தேற்றித், தனக்கு வீடுபேறளித்த இராமனது பெருமையை அவனுக்கு அறிவுறுத்தினுன். இராமனை நோக்கி, 'இவன் உன் கையடையாகும்' என அங்கதனைக் காட்ட, அங்கதனும் இராமன் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினுன். அந்நிலையில் அறத்தின் மூர்த்தியாகிய இராமன் தன் உடைவாளை அங்கதன்பால் நீட்டி, 'நீ இதனைக் கைக்கொள்வாயாக' எனக் கொடுத்தனன். அச்செய்கை கண்டு ஏழுலகங்களும் இராமனைப் போற்றின. அந்நிலையில் மனக் கவலை நீங்கிய வாலி, உடம்பை விட்டு உயிர் நீங்கப்பெற்று வானேர்க்கும் எய்துதற்கு அரியதாய் உயர்ந்த வீட்டுலகத்தை அடைந்தான். வாலியின் இன்னுயிர் உடம்பை விட்டு நீங்கிய அளவில் அம்பினைப் பற்றிய அவனது கைநெகிழ்தலால் அந்த அம்பு வாலியின் மார்பினின்றும் விரைந்து வெளிபட்டுச் சென்று தூய நீர்க் கடலில் தோய்ந்து தேவர்கள் மலர்தூவிப் போற்ற இராமனது அம்பருத் தூணியை மீண்டும் வந்து பொருந்தியது.

வாலி விண்ணுலகடையவே, இராமன் சுக்கிரீவனது கையைப் பற்றிய வண்ணம் அங்கதனேடும் அவ்விடத்தை விட்டு அகன்று சென்றனன். வாலி இறந்த செய்தியைக் கேள்வியுற்ற அவன்

மனைவி தாரை, விரைந்து வந்து வாலியின்மேல் வீழ்ந்து புரண்டு அழுது பலவாறு புலம்பினள். அந்நிலையில் அனுமன் வானர மகளிரைக் கொண்டு தாரையைத் தேற்றி அவளை அந்தப்புரத்திற்கு அனுப்பிவிட்டு, வாலிக்குச் செய்யவேண்டிய இறுதிக் கடன்களைச் செய்வித்துப் பின் இராமனை யடைந்து நிகழ்ந்தவற்றை அறிவித்தான். அப்பொழுது சூரியனும் அத்தமன மலையில் மறைந்தனன். இராமன் சீதையின் துயர்நிலையை யெண்ணி வருந்தியவனாய் அன்றைய இரவுப்பொழுதை அரிதிற் கழித்தான்.

வாலிவதை பற்றிய இச்செய்தி வான்மீகத்தில் மிகவும் விரிவாகக் கூறப்பெற்றுள்ளது. சுக்கிரீவன் இராமனது உதவி பெற்று வாலியைப் போர்க்கு அறைகூவி யழைக்கும் முறையில் இருமுறை சென்று அழைத்து வாலியொடு போர் புரிந்ததாக வான்மீகம் கூறும். முதல் முறையாக வாலியொடு சுக்கிரீவன் போர் செய்யும் நிலையில் இராமன் அவ்விருவரையும் வேறு பிரித்துணர முடியாமையால் வாலியின்மேல் அம்பினைச் செலுத்தவில்லை. வாலியாற் புடைக்கப்பட்டு வருந்திய சுக்கிரீவன், தனக்குத் துணைவந்த இராமனைக் காண முடியாமல் மீண்டும் ருசியமூக பர்வதத்திற்கே ஓடிப்போய் விட்டான். இராமன் இலக்குவனோடும் அனுமனோடும் அவ்விடத்திற்கு மீண்டபொழுது சுக்கிரீவன் இராமனை யடைந்து தன்னிடம் உறுதி கூறியபடி வாலியின்மேல் அம்பினை எய்யாமைக்கு வருந்தினான். அந்நிலையில் இராமன் அவனுக்கும் வாலிக்கும் உள்ள வேற்றுமைகாண முடியாமையை எடுத்துரைத்து இலக்குவனைக்கொண்டு குருக்கத்திக் கொடியை அடையாளமாகச் சுக்கிரீவனுக்கு அணியச் செய்து, இலக்குவன், அனுமன், தாரன், நளன் முதலியோருடன் சுக்கிரீவனைத் தொடர்ந்து கிட்கிந்தைக்குச் சென்றான். செல்லும் வழியில் உள்ள தவவனத்தில் வாழும் முனிவர்களின் பெருமையைச் சுக்கிரீவன் இராமனுக்குக் கூறினான். எல்லோரும் கிட்கிந்தையை அடைந்தார்கள். சுக்கிரீவன் இராமனது உறுதியைப் பெற்றுக்கொண்டு வாலியைப் போர்க்கு அறைகூவி யழைத்தான். சுக்கிரீவனது போர் ஆரவாரத்தைக் கேட்ட வாலி பெருஞ் சினங்கொண்டு அரண்மனையை விட்டுப் புறப்பட்டான். அந்நிலையில் அவன் மனைவி தாரை பெரிதும் அஞ்சியவளாய் அவனைத் தடுத்து "வீரரே! அயோத்தி மன்னன் புதல்வர்களாகிய இராம இலக்குவர் சுக்கிரீவனுடைய விருப்பத்தை நிறைவேற்ற ருசியமூக பர்வதத்திற்கு வந்துள்ளார்கள் என்று அன்புடைய ஒற்றர்கள் தெரிவித்த செய்தியை அங்கதனால் அறிந்தேன். பேராற்றல் படைத்தவரும் நற்பண்புடையவருமாகிய இராமருடன் நீர் பகையாதல் முறையன்று. நும் தம்பியாகிய சுக்கிரீவரிடம் கொண்ட வெறுப்பினை நீக்கி அவருக்கு இளவரசுப் பட்டம் கட்டி உம்பால் அன்புடையவராக அமர்த்திக் கொள்வீராக" என வேண்டி

நின்றுள். அவளது மொழியை ஏற்றுக்கொள்ளாத வாலி, அவளை நோக்கி 'உத்தமியே! என்னைப் பகைத்த தம்பியின் செருக்கினை என்னுற் பொறுத்துக் கொண்டிருத்தல் இயலாது. இராமனுல் எனக்குத் தீங்கு வரும் என்று எண்ணிக் கலக்கமுருதே. அறத்தின் இயல்பினை யறிந்தவரும் நன்றி யறிந்தவருமாகிய இராமர் (தமக்குத் தீங்கு எதுவும் எண்ணுத என்னிடத்தில்) எவ்வாறு தீங்கு செய்ய முற்படுவார்? நான் சுக்கிரீவனுடன் சண்டை செய்யப் போகிறேன். நான் அவனது செருக்கினை மட்டும் ஒழிப்பேன்; அவனது உயிரைப் போக்க மாட்டேன். எனது தாக்குதலுக்கு ஆற்றுமல் அவனே அஞ்சி ஓடப்போகிருன். நீ எனது வெற்றியை எண்ணிக்கொண்டு திரும்பிச் செல்க' எனத் தாரையைத் தேற்றி அனுப்பிவிட்டுப் பெருஞ் சினத் துடன் சுக்கிரீவனெடு போர் செய்யப் புறப்பட்டான். வாலி சுக்கிரீவர் இருவரும் மண்ணிலும் வானிலும் திரிந்து கடும் போர் புரிந்தனர். வாலியின் முன் எதிர்த்து நிற்கும் வலியின்றி அடிக்கடி திசைகளைப் பார்த்து விழிக்கும் சுக்கிரீவனை இராமன் பார்த்தான். வாலியைக் கொல்லுதற்கென அம்பினை யெடுத்து வில்லில் தொடுத்து வாலியின் மார்பில் எய்தான். வாலியும் அடிபட்டுத் தரையில் விழுந்தான். இராமபாணமானது வீரனுகிய வாலிக்குத் துறக்க வழியைக் காட்டுவ தாகி அவனுக்கு நல்ல கதியை (வீடுபேற்றை)க் கொடுத்தது.

போர்க்களத்தில் விழுந்து, அம்பினைச் செலுத்திய வீரரான தம்மைப் புகழ்ந்து தலையசைத்துப் பார்க்கும் வாலியை இராமன் இலக்குவனுடன் போய்ப் பார்த்தான். வாலியானவன் அவ்விருவ ரையும் பார்த்து அறத்தின் வழிப்பட்டனவும் கடுமையுடையனவும் ஆகிய சொற்களைப் பணிவுடன் கூறினுன். இராமன் வாலியை நோக்கி அறத்தொடும் பொருளொடும் பொருந்திய சிறந்த அறிவுரை களைக் கூறினுன். "அறத்தின் இயல்பு பேரறிஞர்களாலும் அறிய வொண்ணுதது. உயிர்க்குயிராய் விளங்கும் இறைவன் ஒருவனே அறம், அறம் அல்லாதன என்பவற்றை உள்ளவாறு அறியவல்ல வன். நீ அறநெறியை விட்டு உன் மருமகளுக்குச் சமானமான உன் தம்பியின் மனைவி உருமையிடத்தில் சுக்கிரீவன் உயிருடனிருக்கும் பொழுதே காமத்தால் முறைபிறழ்ந்து நடக்கின்றுய். பிறன் மனை யாளை வலிதில் வெளவிய பெருங் குற்றத்திற்காக இத்தண்டனை விதிக்கப்பட்டது. உலக வழக்கத்தை மீறி அறங்கெட நடப்பவனை ஒறுப்பதற்குக் கொலையாகிய இத்தண்டனையைத் தவிர வேறென் றும் அறநூல்களிற் சொல்லப்படவில்லை" என இராமன் வாலிக்கு அறிவுறுத்தினுன்.

"நினக்கு எத்தகைய தீங்கும் செய்யாத யான் மற்றொருவனுடன் போர் புரிந்து கொண்டிருக்கும் நிலையில் நீ மறைந்து நின்று அம்

பெய்தது முறையோ” என வாலி கேட்ட வினவுக்கு, “வானரமன்ன மனிதர்கள் மறைந்து கொண்டும் வெளிப்படையாக எதிரில் நின்றும்! வலைகளையும் கயிறுகளையும் பலவகை வஞ்சனைச் சூழ்ச்சிகளையும் கொண்டு பற்பல விலங்குகளையும் வேட்டையாடிக் கொல்கிறார்கள். நீ குரங்கு வடிவாகிய விலங்காதலால் என்னால் அவ்வாறே மறைந்து நின்று அடிக்கப்பட்டாய்” என இராமன் மறுமொழி கூறினன். இராமன் கூறிய அறிவுரைகளால் தன் குற்றத்தினை யுணர்ந்து மனந் திருந்திய வாலி, தான் அறியாமையாற் கூறியவற்றைப் பொறுத்துக் கொள்ளும்படி வேண்டினன். தன் புதல்வன் அங்கதனைக் காத் தருளும்படியும் சுக்கிரீவனிடத்திலும் அங்கதனிடத்திலும் ஒத்த அன்பு செலுத்தும்படியும், தன் மனைவி தாரையைச் சுக்கிரீவன் அவமானப் படுத்தாதிருக்குமாறு செய்யும்படியும் இராமனை வணங்கி வேண்டிக் கொண்டான். இராமன் வாலியை நோக்கி, ‘வாலியே நீ இதற்காக வருந்தாதே. அறநூல் விதிப்படி நீ பெற்ற தண்டனையாற் பாவம் நீங்கி அறத்தின் இயல்புடைய உன் தூய நிலையை அடைந்தாய். அங்கதன் என்றும் உன்னிடத்தில் எப்படியிருந்தானே அது போலவே சுக்கிரீவனிடத்திலும் என்னிடத்திலும் இனிய முறையில் இருப்பான் என்பதிற் சிறிதும் ஐயமில்லை’ என்று கூறித் தேற் றினன். இராமனல் வாலி இறந்த செய்தியைக் கேள்வியுற்ற தாரை விரைந்தோடி வந்து வாலியின் அவல நிலையைக் கண்டு பலவாறு புலம்பினள். தன் மகன் அங்கதனை நோக்கியும் சுக்கிரீவனை நோக் கியும் பலவாறு அழுதரற்றி வாலியுடன் தானும் இறக்கத் துணிந் தாள். அப்பொழுது அனுமன் அவளருகில் வந்து பலவாறு தேறுதல் மொழி பகர்ந்து, உன் மைந்தன் அங்கதனுக்கு முடிசூட்டி அரசனுக்கி அவனுக்கு உறுதுணையாய் நீ உயிர்வாழ்தல் வேண்டும் என்று வற்புறுத்தினன். அச்சொல்லை ஏற்றுக்கொள்ளாத தாரை ‘இனி, சுக்கிரீவரே எதனையும் செய்யத்தக்கவர். அவரே அங்கதனைப் பார்த்துக் கொள்வார். யான் என் ஆருயிர்த் தலைவன் சென்ற இடத் திற்குச் செல்வேன்’ என்றாள். அந்நிலையில் வாலி சிறிது மூர்ச்சை தெளிந்து, சுக்கிரீவனைப் பார்த்துத் தன் அருகே அழைத்து, “சுக்கிரீ வனே! வானரர்க்குரிய அரசினை இப்பொழுதே ஏற்றுக்கொள். என் பிள்ளையாகிய இந்த அங்கதனை உன் பிள்ளையாகவே நினைத்துக் காப்பாற்று. இவன் போர்க்களத்திற் பகைவரைக் கொல்லும் நிலையில் உனக்கு முன்னே போய் நிற்க வல்லவன். இத் தாரையானவள் செய்யத்தக்க வினைத்திறத்தைக் கூர்ந்து அறிந்து துணிவதிலும் வரக் கூடிய துன்பங்களைச் சகுனங்களால் முன்னறிந்து நீக்குவதிலும் வல்லவள். அவள் நல்லதென்று சொல்வது உன்னாற் செய்யத்தக்க தாகும். என் மார்பிலுள்ள இப்பொன் மாலையைத் தரித்துக் கொள். நான் இறந்த பின் இதிலுள்ள இலக்குமி இதனை விட்டு நீங்கிவிடு வாள்’ எனக் கூறினன். சுக்கிரீவனும் வாலியின் பெரும் பிரிவிற்கு

இரங்கியவனுகி வாலியின் மார்பிலணியப் பெற்றிருந்த பொன் மாலேயை வாங்கிக் கொண்டான். வாலி உயிர் பிரியும் நிலேயில் தன் மகன் அங்கதனே நோக்கிப் பல அறிவுரைகளேக் கூறிச் சுக்கிரீவ னுக்கு அடங்கி நடக்கும்படி அறிவுறுத்தி உயிர் நீங்கினுன். தாரை வாலியைக் கட்டிக் கொண்டு விழுந்து பலவாறு புலம்பினுள். தாரை அழுதுகொண்டிருக்கும் பொழுது நீலன் என்பவன் வாலியின் உடம் பிற் பதிந்திருந்த பாணத்தைப் பிடுங்கி யெடுத்தான். அந்நிலேயில் அப்பாணம் சூரியனது ஒளியுடையதாய் விளங்கியது. அழுது புலம்பும் தாரையைப் பார்த்து மனம் வருந்திய சுக்கிரீவன் வில்லுடன் நிற்கும் இராமனே யடைந்து "அரசர் பெருமானே! நீர் உறுதி செய்தபடி வாலியின் வதை நிகழ்ந்து முடிந்தது. பட்டத்தரசியாகிய தாரை மிகவும் வருந்தி நகரமும் துக்கத்திற்பட்டு அங்கதனும் ஐயுற்று வருந்தும் இந்நிலேயில் என்மனம் அரச பதவியில் அமைதியுறவில்லே. வெகுளியினுலும் பொறுமையில்லாமையாலும் என் தமையன் எனக் குரியவற்றை வலிந்து பற்றிக் கொண்டமையாலும் அவனேக் கொல் வதற்கு என் மனம் முன் இசைந்தது. வானர குலத்தைக் காத்த அவன் மாண்டு விடவே இப்பொழுது பெரிதும் வருந்துகின்றேன். 'நான் உன்னேக் கொல்ல நினேக்கவில்லே, நீ எங்கேயாவது திரிந்து கொண்டிரு' என்று கூறிய பெருமை அவனுக்கேயுரியது, தீவினே யாளனுகிய யான் அக்கினியில் விழுந்து உயிர்விடப் போகிறேன். உம்முடைய ஆணேயினுல் வானர வீரர்கள் சீதையைத் தேடுவார்கள். நான் இறந்தாலும் உம்முடைய காரியம் முற்றும் கைகூடி விடும். என்னேத் தீயில் விழுதற்கு உத்தரவிடும்" என இரந்து வேண்டினுன். இராமன் மிகவும் மனம் வருந்தினுன். கணவனே யிழந்த சோகத்தால் மனங் கலங்கிய தாரை, வில்லேந்திய இராமனேக் கண்டு, தன்னேயும் ஓரம்பினுற் கொன்று வாலி சென்ற இடத்திற்கு அனுப்பும்படி வேண்டினுள். இராமபிரான் அவளே நோக்கி 'வீரபத்தினியே, உலகம் முற்றும் இறைவனுற் படைக்கப்பட்டது. மூவுலகத்து வாழ் வாரும் படைத்தோன் விதித்த விதியைத் தாண்ட வல்லவரல்லர். இன்பமும் துன்பமும் படைப்புக் கடவுளால் நியமிக்கப்பட்டன என் பதை யாவரும் உணர்வர். உன் பிள்ளே இளவரசுப் பட்டத்தையடை யப் போகிருன். சூரன் பத்தினிகள் அழமாட்டார்கள்' என்று கூறித் தேற்றினுன். சுக்கிரீவனும் துயரம் தணியப் பெற்ருன். பின் இராம னது கட்டளேப்படி சுக்கிரீவன் அங்கதனேக் கொண்டு வாலிக்குச் செய்ய வேண்டிய இறுதிக் கடன்களேச் செய்து முடித்து இராமனே அடைந்தான் என வான்மீகத்திற் கூறப்பட்டது.

கல்வியிற் சிறந்த கம்பர், முதல் நூலிற் கூறப்பெற்ற இந்நிகழ்ச்சி யைத் தமது புலமைத் திறத்திற்கும் சுக்கிரீவன், வாலி, தாரை ஆகிய காவிய மாந்தரைப் பற்றித் தாம் தம் உள்ளத்தில் அமைத்துக்

கொண்ட பண்புருவிற்கும் ஏற்பச் சுருக்கியும் விரித்தும் இப்படலத்தில் அழகுபெறக் கூறியுள்ளார். 'என்னை மறைந்து நின்று அம்பு எய்தது எது கருதி' என வாலி கேட்ட வினவுக்கு 'விலங்கினை வேட்டையாடுதல் குற்றமன்று' என்ற முறையில் இராமன் விடை கூறியதாக முதல் நூல் கூறியிருக்கவும், அக்கூற்று இராமனால் வீடு பேறளிக்கப் பெற்ற வாலியின் உணர்வு மிகுதிக்கு இயையாமை கண்ட கம்பர், தன்னைச் சரணடைந்தாரைப் புரக்கும் இராமனது அருள் நலம் விளங்க இலக்குவன் வாயிலாக ஏற்புடைய மறுமொழி கூறியுள்ளமை இவண் கருதத் தகுவதாகும். சுக்கிரீவன் ஒரு சிறிதும் குற்றமில்லாதவன் என்பதையும், தம்பியும் தூயோனும் ஆகிய அவனை வெகுண்டு வாலி கொல்லத் துணிந்தமையும் அவன் மனைவியை வலிதிற் கைப்பற்றினமையும் பொறுத்தற்கரிய பெருங் குற்றங்கள் என்பதையும் வாலி மனங்கொள்ளும்படி இராமன் வாயிலாக ஆசிரியர் அறிவுறுத்தும் முறை மிகவும் பாராட்டத் தக்கதாகும். வாலியின் மனைவி தாரை மறுவற்ற கற்புடையாள் என்பதனைக் கம்பர் தம் நூலில் தெளிவாக விளக்குகின்றார். இறக்கும் நிலையினனாகிய வாலி, தன் மகனைக் காட்டிலும் தம்பியினிடத்திற் பெரிதும் அன்புடையான் என்பதும், தம்பியை முதலில் இராமனிடம் அடைக்கலங் கொடுத்து அதன் பின்னரே தன் மைந்தனை அழைத்து இராமனிடம் சரணடையச் செய்தான் என்பதும், இராமன் தான் அங்கதனை அடைக்கலமாக ஏற்றுக்கொண்டதற்கு அறிகுறியாகத் தன் உடைவாளை அங்கதனிடம் அளித்தான் என்பதும், வாலி மிகச் சிறந்த சிவபத்தனென்பதும் ஆகிய செய்திகள் கம்பரது நூலிற் காணப்பெறும் சிறப்புடைய நிகழ்ச்சிகளாகும்.

# 7. வாலி வதைப் படலம்

## இராமன் முதலியோர் மலைச்சாரல் வழியே செல்லுதல்

4038. வெங்கணாளி யேறுமீளி
★ மாவும்வேக நாகமும்
சிங்கவே றிரண்டொடுந்
திரண்டவன்ன செய்கையார்
தங்குசால மூலமார்
தமாலமேல மாலைபோல்
பொங்குநாக முந்துவன்று
சாரலூடு போயினார்.

வெங்கண் ஆளி ஏறும், மீளிமாவும், வேக நாகமும்,
சிங்க ஏறு இரண்டொடும் திரண்ட அன்ன செய்கையார்,
தங்கு சாலம், மூலம் ஆர் தமாலம், ஏலம், மாலைபோல்
பொங்கு நாகமும் துவன்று சாரலூடு போயினார்.

பொ :—(கண்டார்க்கு அச்சந் தோன்ற விழிக்கும்) வெம்மை மிக்க கண்களையுடைய ஆண்யாளியும் வலிமை மிக்க புலிப்போத்தும், வெகுளி மிக்க யானையும் ஆண் சிங்கங்கள் இரண்டுடன் கூடி வந்தாற் போன்ற செய்கையினை யுடையராய (சுக்கிரீவன் அநுமன் முதலிய வானர) வீரர்கள், நிலத்து வளர்ந்த ஆச்சாமரங்களும் மூல மரங்களும் (மணம்) பொருந்திய பச்சிலை மரங்களும் ஏலமும் மாலை போல் (வரிசையாகத் தொடர்ந்த) செழுமை மிக்க சுர புன்னை மரங்களும் அடர்ந்துள்ள மலைச்சாரல் வழியே சென்றார்கள்.

கு :—ஆற்றல் மிக்க பெருவீரராகிய இராம இலக்குவருடன் வந்த சுக்கிரீவன் அநுமன் முதலிய வானர வீரர், ஆண் சிங்கங்கள் இரண்டுடன் யாளியும் புலியும் யானையும் ஒருங்கு திரண்டு வந்தாற் போன்று பகைவர் வெருவி விலகத்தக்க தோற்றமுடையராய் விளங்கினர் என்பார், 'வெங்கண் ஆளியேறும் மீளிமாவும் வேக நாகமும் சிங்க ஏறு இரண்டொடும் திரண்ட அன்ன செய்கையார்' என்றார். வீரருட் சிறந்தாராகிய இராமன் இலக்குவன் இருவரும் ஈண்டுச் 'சிங்க ஏறு இரண்டு' எனச் சுட்டப்பட்டனர். வெங்கண் ஆளி ஏறு - வெம்மை மிக்க கண்களையுடைய ஆண்யாளி; என்றது வானரர் தலைவனாகிய சுக்கிரீவனை. மீளிமா - வலிமையுடைய விலங்காகிய புலி. தான் வாழும்

காட்டில் மட்டுமன்றி யாண்டும் அச்சமின்றிப் பாய்ந்து திரியும் பெரு வன்மையுடையது புலியாதலின் மீளிமா எனப்பட்டது. மீளிமாவாகிய புலியினை ஒத்தவன் அநுமன். வேக நாகம் - வெகுளியினையுடைய யானை. வேகம் - வெகுளி. 'ஓவாவேகமொடுருத்து' (கலித்-103) என் புழி வேகம் இப்பொருட்டாதல் காணலாம். யானை போல்வார் நீலன், நளன், தாரன் என்னும் வானர வீரர். இனி 'சிங்க ஏறிரண் டொடும்' என்புழிவந்த 'இரண்டு' என்னும் எண்ணினை 'மீளிமா' என்பதனோடும் 'வேக நாகம்' என்பதனோடும் தனித்தனியே கூட்டி, மீளிமா இரண்டென்றது, சுக்கிரீவனுடைய அமைச்சர் நால்வருள் நளன், நீலன் என்ற இருவரையும் எனவும், வேகநாகம் இரண் டென்றது அநுமான் தாரன் என்ற இருவரையும் எனவும் விளக்கங் கூறுவாரும் உளர். 'சிங்க ஏறிரண்டொடும்' என முன்னவற்றி னின்றும் ஒடுக்கொடுத்துப் பிரித்தமையானும், இரண்டென்னுந் தொகை வெங்கண் ஆளியேறு என்புழிச் செல்லாது ஏனையிரண் டிற்கு மட்டும் இயைதல் பொருந்தாமையானும் அவ்விளக்கம் ஏற் புடையதாகத் தோன்றவில்லை. சாலம் - ஆச்சாமரம். மூலம் - ஒரு வகை மரம். மூலம் ஆர்தமாலம் எனத் தமாலத்திற்கு அடையாக் கலும் ஒன்று; மூலம் - வேர். தமாலம் - பச்சிலை மரம். ஏலம் - ஏலக்காய்ச் செடி. மூலம் என்றது சடாமாஞ்சில் என்னும் ஒருவகை மரம் என்பாருமுளர். நாகம் - சுர புன்னை. 'துவன்று நிறைவாகும்' (உரியியல்-34) என்பது தொல்காப்பியம். (1)

அவர்கள் சென்ற மலை வழியிலுள்ள காட்சிகள் 4039—4045

**4039.** உழையுலாநெ டுங்கண்மாத
ரூசலூச லல்லவேல்
தழையுலாவு சந்தலர்ந்த
சாரல்சார லல்லவேல்
மழையுலாவு முன்றிலல்ல
மன்றநாறு சண்பகக்
குழையுலாவு சோலைசோலை
யல்லபொன்செய் குன்றமே.

உழை உலாம் நெடுங்கண் மாதர் ஊசல்; ஊசல் அல்லவேல்,
தழை உலாவு சந்து அலர்ந்த சாரல்; சாரல் அல்லவேல்,
மழை உலாவு முன்றில்; அல்ல, மன்றல் நாறு சண்பகக்
குழை உலாவு சோலை; சோலை அல்ல, பொன்செய் குன்றமே.

பொ :—(இராம இலக்குவர் செல்லும் வழியில்) மான் போலும் மருண்ட பார்வையினையுடைய நீண்ட கண்ணினராகிய இளமகளிர் விளையாடும் ஊசல்களும், அவையல்லவாயின் தளிர்களுடன் தழைத்து அசையும் சந்தன மரங்கள் பூத்து விளங்கும் மலைப்பக்கங்களும், அவையல்லவாயின் முகில் தவழும் மனைமுற்றங்களும், அவையல்ல (எனின்) மணங்கமழும் தளிர்களுடன் அசையும் சண்பகச் சோலைகளும், அச்சோலைகள் அல்ல (எனின்) பொன்னினால் இயற்றப்பட்ட செய்குன்றங்களுமே (மிகுந்து காணப்பெற்றன.)

கு :—உழை - மான் ; மானின் மருண்ட நோக்கத்தைக் குறித்து நின்றது. 'உழையுலாம் நெடுங்கண் மாதர்' என்ற அடைமொழியினைப் பின்வரும் சாரல், முன்றில், சோலை, பொன் செய்குன்றம் ஆகிய எல்லாவற்றோடும் இயைத்துப் பொருள் கொள்க. சுக்கிரீவனுடன் இராம இலக்குவர்கள் செல்லும் நீண்ட வழி முழுவதும் மகளிர் மகிழ்ந்து விளையாடும் ஊசல்களும் சந்தனமரச் சாரல்களும், முகில் தவழும் மனைமுற்றங்களும் சண்பகச் சோலைகளும் பொன்னினாலியன்ற செய்குன்றங்களும் ஆக எழில் மிக்க இனிய விளையாட்டிடங்களே யாண்டும் காணப்பட்டன என அந்நாட்டில் வாழ்வாரது இன்ப நிலையினை ஆசிரியர் இனிது புலப்படுத்தினமை நுணுகி நோக்கத்தக்கதாகும். சந்து - சந்தன மரம். குழை - தளிர். (2)

4040. அறங்கணாறு மேனியா
ரரிக்கணங்க ளோடுமங்
கிறங்குபோது மேறுபோது
மீறிலாத வோதையால்
கறங்குவார் கழற்கலன்
கலிப்பமுந்து கண்முகிழ்த்
துறங்குமேக நன்குணர்ந்து
மாகமீ துலாவுமே.

அறங்கள் நாறும் மேனியார், அரிக்கணங்களோடும் அங்கு
இறங்கு போதும், ஏறுபோதும். ஈறு இலாத ஓதையால்,
கறங்கு வார் கழல் கலன் கலிப்ப, முந்து கண்முகிழ்த்து
உறங்கு மேகம் நன்கு உணர்ந்து மாகமீது உலாவுமே.

பொ :—அறங்கள் தோன்றுதற்கு விளைநிலமாய்த் திகழும் திருமேனியையுடையராகிய இராம இலக்குவர் இருவரும் வானரக் கூட்டத்தோடும் அம் மலைப்புறங்களில் இறங்கும் பொழுதும் ஏறும்

பொழுதும் (அவர்கள் அணிந்துள்ள) ஒலிக்கின்ற நீண்ட வீரக்கழலாகிய அணிகலன்கள் ஆரவாரிப்ப அவற்றின் முடிவில்லாத பெரிய ஓசையால் (அம்மலையிற் படிந்து) உறங்கும் மேகம் முற்பட்டுக் கண் விழித்தெழுந்து ஆகாயத்தின் மீது செல்லும்.

கு :—அறங்கள் நாறும் மேனியார் என்றது, இராம இலக்குவர்களை. உலகில் நல்லறங்களை நிலை நிறுத்தற் பொருட்டு அவதரித்தவராதலின் அவர்தம் திருமேனி அறங்கள் தோன்றி வளர்தற்கு விளைநிலமாய்த் திகழுந் திறத்தன என்பார், 'அறங்கள் நாறும் மேனியார்' என்றார். நாறுதல் - தோன்றுதல்; விளைதல். அரிக் கணங்கள் என்றது, சுக்கிரீவன், அநுமான், நளன், தாரன், நீலன் முதலிய வானர வீரர்களை. அரி என்னும் பல பொருளொரு சொல் ஈண்டுக் குரங்கு என்னும் பொருளில் ஆளப்பெற்றது. கறங்குதல், கலித்தல் என்பன ஒலித்தல் என்னும் பொருளன. பேராற்றல் படைத்த பெரு வீரராகிய இராம இலக்குவர்கள் மலை வழியில் மேடு பள்ளங்களில் ஏறியும் இறங்கியும் விரைந்து செல்லும் நிலையில் அவர்தம் காலிலணியப் பெற்றுள்ள வீரக்கழல்கள் இடைவிடா தொலித்தலால் மலையிற் படிந்துறங்கும் மேகங்கள் அவ்வோசையினைக் கேட்டு அஞ்சிச் சிதறின என்பதாம். (3)

**4041.** நீடுநாக மூடுமேக
மோடநீரு மோடநேர்
ஆடுநாக மோடமான
யானையோட வாளிபோம்
மாடுநாக நீடுசாரல்
வாளையோடும் வாவியூ
டோடுநாக மோடவேங்கை
யோடும்யூக மோடுமே.

நீடு நாகமூடு மேகம் ஓட, நீரும் ஓட, நேர்
ஆடும் நாகம் ஓட, மான யானை ஓட, ஆளி போம்
மாடு நாகம் நீடு சாரல், வாளை ஓடும் வாவியூடு
ஓடு நாகம் ஓட, வேங்கை ஓடும்; யூகம் ஓடுமே.

பொ :—நீண்ட மலைகளின் வழியே மழை மேகம் விரைந்து செல்ல (அம்முகில்கள் பொழியும்) நீர் (பெருகி ஆறாகி) ஓடவும், எதிரில் (சீறி நின்று படமெடுத்து) ஆடும் பாம்புகள் அஞ்சியோடவும், பெருமை மிக்க யானைகள் ஓடவும், சிங்கங்கள் திரியும் பக்கத்தில் சுர புன்னை

மரங்கள் நீண்டு வளர்ந்த மலைச்சாரலிலே, வாளை மீன்கள் உலாவும் வாவியின் கண்ணே ஓடுமியல்பினவாகிய நீர்ப்பாம்புகள் ஓடவும், புலிகள் (அஞ்சி) ஓடின ; கருங்குரங்குகள் (அஞ்சி) ஓடுவனவாயின.

கு :—நாகம் என்பது பலபொருள் ஒருசொல். அச்சொல், இங்கே வினை, இனம், சார்பு என்னும் சிறப்புடைய அடைமொழிகளைப் பெற்று முறையே 'நீடு நாகம்' என மலையினையும், 'நேர் ஆடும் நாகம்' என நல்லபாம்பினையும், 'நாகநீடு சாரல்' எனச் சுர புன்னை மரத்தினையும், 'வாளையோடும் வாவியூடு ஓடும் நாகம்' என நீர்ப் பாம்பினையும் உணர்த்தி நின்றது.

'அவற்றுள்,
வினைவேறு படூஉம் பலபொருள் ஒருசொல்
வேறுபடு வினையினும் இனத்தினும் சார்பினும்
தேறத் தோன்றும் பொருள்தெரி நிலையே'.
(தொல்-சொல்-கிளவி-53)

என்றார் தொல்காப்பியனாரும். 'ஆளிபோம் மாடு நாகம் நீடு சாரல்' என மலைச்சாரல் வழியின் அஞ்சத்தக்க தன்மையையும், 'வாளையோடும் வாவியூடு ஓடு நாகம்' என நீர்ப்பாம்பின் எளிமையையும் ஆசிரியர் ஒருங்கு குறிப்பிடுதலால், அம் மலைவழியில் வலியனவும் மெலியனவுமாக எதிர்ப்பட்டன யாவும் வாலியை வென்றழிக்கச் செல்லும் இராம இலக்குவரது விரைந்த செலவினால் அச்சமுற்றன என்பதனை நன்கு புலப்படுத்தினமை அறியத்தக்கதாகும். 'ஓட' என்னும் செயவென்னெச்சங்கள் 'வேங்கையோடும் யூகம் ஓடுமே' என்புழி ஓடும் என்னும் பிற கருத்தாவின் தொழில் கொண்டு முடிந்தன. ஆளி - சிங்கம். வேங்கை - புலி. யூகம் - கருங்குரங்கு. (4)

4042. மருண்டமா மலைத்தடங்கள்
செல்லலாவ வல்லமால்
தெருண்டிலா மதத்தயானை
சீறிநின்று சிந்தலால்
இருண்டகா ழகிற்றடத்தொ
டிற்றுவீழ்ந்த சந்துவந்
துருண்டபோ தழிந்ததே
னொழுக்குபே ரிழுக்கினே.

மருண்ட மா மலைத்தடங்கள் செல்லல் ஆவ அல்ல ; மால் தெருண்டிலா மதத்த யானை சீறி நின்று சிந்தலால்,

இருண்ட காழ் அகில் தடத்தொடு இற்று வீழ்ந்த சந்து வந்து
உருண்டபோது, அழிந்த தேன் ஒழுக்கு பேர் இழுக்கினே.

பொ :—மதமயக்கந் தெளியாத செருக்குற்ற யானை சினமுற்று நின்று தாக்குதலால் இருள்படத் தழைத்த திண்ணிய அகிற் பரப்புடன் ஒடிந்து வீழ்ந்த சந்தன மரங்கள் (மேலிருந்து) உருண்ட பொழுது (அவற்றுற்) சிதைவுற்ற தேனடைகளிலிருந்து (தேன்) ஒழுகுதலாலுண்டாகிய மிகுந்த வழுக்குதலால் மருட்சியை விளைக்கும் (நீண்டுயர்ந்த) பெரிய மலையிலுள்ள வழிகள் எளிதில் நடந்து செல்லத்தக்கன அல்லாதனவாயின.

கு :—மருண்ட மாமலை - (காண்போர்) மருளுதற்குக் காரணமாகிய பெரிய மலை. 'குறவரும் மருளுங்குன்றம்' (மலைபடுகடாம்-275) என்பது இங்கு நோக்கத்தக்கதாகும். மா - பெரிய. மலைத்தடங்கள் - மலையிலுள்ள வழிகள். மால் - மயக்கம். தெருண்டிலா - தெளிதல் இல்லாத. மதத்த - மதத்தினையுடைய. சிந்தல் என்றது சிதறும்படி மோதுதலை. இருண்ட - இருள்படத் தழைத்த. 'இருள்படப் பொதுளிய பராரை மராஅத்து' என்பது திருமுருகாற்றுப் படை. காழ் - திண்மை. இனி இருண்ட காழ் அகில் என்பதற்கு இருள் நிறங்கொண்ட வயிரம் பற்றிய அகில் மரம் எனப் பொருளுரைத்தலும் பொருந்தும். சந்து - சந்தனமரம். இறுதல் - ஒடிதல். இழுக்கின் - வழுக்குதலால்; இழுக்கல் - வழுக்குதல். 'இழுக்கலுடையுழி யூற்றுக்கோலற்றே' (415) என்பது திருக்குறள். (5)

4043. மினன்மணிக் குலந்துவன்றி
 வில்லலர்ந்து விண்குலாய்
அனல்பரப்ப லொப்பமீ
 திமைப்பவந் தவிப்பபோல்
புனல்பரப்ப லொப்பிருந்த
 பொன்பரப்பு மென்பவா
லினையவிற் றடக்கைவீர
 ரேகுகின்ற குன்றமே.

மினல் மணிக்குலம் துவன்றி, வில் அலர்ந்து, விண்குலாய்,
அனல் பரப்பல் ஒப்ப மீது இமைப்ப, வந்து அவிப்பபோல்,
புனல் பரப்பல் ஒப்ப இருந்த பொன்பரப்பும் என்பவால்;
இனைய வில் தடக்கை வீரர் ஏகுகின்ற குன்றமே.

பொ :—வில்லைத் தாங்கிய பெரிய கையினையுடைய (இராம இலக்குவராகிய) வீரர்கள் நடந்து செல்லும் இவ்வியல்பினதாகிய மலை, மின்னுதலையுடைய செம்மணிக்குவை நிறைந்து (அவற்றின்) ஒளி விரிந்து விசும்பளவும் பொருந்தித் தீச்சுடர் விரிந்து பரவுதலை யொத்து மேலே ஒளிவிட்டு விளங்க, (அத்தீயை விரைந்து) வந்து அவிப்பாரைப் போன்று (அம்மலையின்கண்) படிந்திருந்த பொன் நீரை எங்கும் பரப்புதலை யொத்துத் தன் ஒளியை (எங்கும்) பரவச் செய்யும் தன்மையினது எனக் கூறுவர் (புலவர்).

கு :—மினல் - மின்னுதல் ; இடைக்குறை. வில் – ஒளி. குன்றத்தி லுள்ள செம்மணிக் குவைகளின் ஒளி கொழுந்து விட்டெரியும் தீச் சுடரை யொத்து வானளவும் உயர்ந்து விளங்க, அக்குன்றத்திற் படிந் திருந்த நிறைந்த பொன் அலைமறியும் நீர்ப்பெருக்கினை யொத்த தன் ஒளிக்கற்றையால் மணியொளியினைத் தன்னகத்தடக்கி மேற் பட்டு விளங்கியது என்பது கருத்து. வீரர் ஏகுகின்ற குன்றம், மணிக் குலம் அனல் பரப்பல் ஒப்ப மீது இமைப்ப, வந்து அவிப்பபோல், இருந்த பொன் புனல்பரப்பல் ஒப்ப (ஒளி) பரப்பும் என முடிக்க. வந்து அவிப்பபோல் - விரைந்து வந்து அவிப்பாரைப் போன்று. ஒப்ப இருந்த=ஒப்பிருந்த என அகரம் தொக்கது. இருந்த பொன் வந்து அவிப்பபோல், (ஒளி) பரப்பும் என்ற நயம் கூர்ந்துணரத் தக்கது. ‘குன்றம் பொன்பரப்பும்’ என இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்தின்மேல் நின்றது. என்ப - என்று கூறுவர் ; என் றது அம்மலையின் இயற்கை வனப்பினைத் தெரிந்துரைப்பாரை. ஆல் - அசை. (6)

**4044.** மருவியாடும் வாவிதோறும்
வானயாறு பாயும்வந்
திருவியார் தடங்கடோறு
மேறுபாயு மாறுபோல்
அருவிபாயு முன்றிலொன்றி
யானைபாயு மேனலிற்
குருவிபாயு மோடிமந்தி
கோடுபாயு மாடெலாம்.

மருவி ஆடும் வாவிதோறும் வானயாறு பாயும், வந்து ; இருவி ஆர் தடங்கள்தோறும் ஏறுபாயும் ; ஆறுபோல் அருவி பாயும் முன்றில் ஒன்றி யானைபாயும் ; ஏனலில் குருவி பாயும் ; ஓடி, மந்தி கோடு பாயும், மாடெலாம்.

பொ :—மலைப் பக்கங்களிலெல்லாம் பொருந்தி நீராடுதற்குரிய தடாகங்கள் தோறும் ஆகாய கங்கையின் நீர் வந்து பாயும். கதிர் அரிந்த தாள்களோடு கூடிய புனங்கள் தோறும் எருதுகள் பாய்ந்து விளையாடும், (வெள்ளப் பெருக்குடைய) ஆறுகளைப்போன்று அருவிகள் பாயும் மலைமுற்றங்கள் தோறும் (அந்நீரிற்) பொருந்தி யானைகள் விளையாடும். (முற்றிய) தினைக்கதிர்களில் குருவிகள் படிந்து உண்டு மகிழும். குரங்குகள் மரக்கிளைகளில் தாவி விளையாடும்.

கு :—'மாடெலாம்' என்பதை முன்னர் இயைத்துரைக்க. மாடு - பக்கம். மருவுதல் - (மனம் விரும்பிப்) பொருந்துதல். 'வாவிதோறும் வானயாறு பாயும்' என்றதனால் வானளாவிய மலையின் உயர்ச்சியும், 'இருவி ஆர்தடங்கள் தோறும் ஏறுபாயும்' என்றதனால் அம்மலை வாழ்வாரது தொழில் முயற்சியும் பயனும் அங்குள்ள எருது முதலிய விலங்குகளின் உள்ளக் கிளர்ச்சியும், 'ஆறுபோல் அருவி பாயும் முன்றில் ஒன்றி யானை பாயும்' என்றதனால் அம்மலையினது அருவி நீர் வளமும் யானையது இன்ப மிகுதியும், 'ஏனலிற் குருவி பாயும்' என்றதனால், மலைவாணர் குருவிகளைக் கடிந்து விலக்க வேண்டாத அளவு அம்மலைக்கண் உளதாகிய உணவு மிகுதியும், 'ஓடி மந்தி கோடு பாயும்' என்றதனால் குரங்குகள் கனிகளை மிகுதியாகவுண்டு தாவி விளையாடுதற்கேற்ற பழமரங்களின் மிகுதியும் புலப்படுத்தினராயிற்று. இருவி ஆர்தடம் - தினை முதலியவற்றின் கதிர்கள் அறுக்கப்பட்ட தாள்களோடு கூடிய நிலப்பரப்பு. இருவி - கதிர் கொய்யப்பட்ட தட்டை. ஏனல் - தினை. (7)

**4045.** தேனிழுக்கு சாரல்வாரி
செல்லமீது செல்லுநாண்
மீனிழுக்கு மன்றிவான
வில்லிழுக்கும் வெண்மதிக்
கூனிழுக்கு மற்றுலாவு
கோளிழுக்கு மென்பவால்
வானிழுக்கு மேலவாச
மன்றனாறு குன்றமே.

தேன் இழுக்கு சாரல் வாரி செல்ல, மீது செல்லும் நாள் மீன் இழுக்கும்; அன்றி, வானவில் இழுக்கும்; வெண்மதிக் கூன் இழுக்கும்; மற்று உலாவு கோள் இழுக்கும் என்பவால் வான் இழுக்கும் ஏலவாச மன்றல் நாறு குன்றமே.

பொ :—வானத்து வாழும் தேவர்களையும் (நறுமணத்தால்) தன் பால் ஈர்க்கவல்ல ஏலக்காய்களின் வாசமும் (ஏனை மணப்பொருள் களின்) நறுமணமும் கமழும் அக்குன்றம், தேன், வழுக்குதலைச் செய் யும் நிலையில் மலைப்பக்கங்களில் (பெருகி) ஆறுகச் செல்லுதலால், வானத்தின் மீது செல்லும் நாள் மீன்கள், (அம்மலையிற் காலூன்றிச் செல்ல வியலாது) வழுக்குதலுறுவன; அவையன்றி வானவில்லும் வழுக்குதலடையும்; வெண்மதியாகிய கூனிய பிறையும் வழுக்குத லுறும்; (வானத்து) உலாவும் ஏனைய கோள்களும் வழுக்குதலுறும் என்று கூறுவர் (புலவர்).

கு :—இழுக்குதல் - வழுக்குதல். 'இழுக்கும்' என்பன சொற் பொருட் பின் வரு நிலை என்னும் அணிநலம் பெற அமைந்தன. இழுக்கும் என இடத்து நிகழ் பொருளின் தொழில் இடத்தின்மேல் நின்றன. வான் இழுக்கும் - வானத்தைத் தன்பால் ஈர்க்கவல்ல. வான் என்றது ஆகுபெயராய் அங்கு வாழும் தேவர்களையுணர்த்தி யது. வாரி - வெள்ளம் பெருகி வரும் ஆறு. நாள் மீன் - நட்சத் திரம். வானவில் - இந்திர வில். பிறைமதி வளைவுடையதாதலின் வெண்மதிக்கூன் என்றார்; வளைந்த யாக்கையினரைக் கூன் என வழங்கும் மரபு நோக்கி. கோள் - ஞாயிறு திங்கள் முதலிய கிரகங்கள். மன்றல் - மணம். நாறுதல் - கமழ்தல். மன்றல் நாறுகுன்றம், நாண் மீன்களும் கோள்களும் இயங்கும் நெறியாகிய வான வீதிக்கும் மேற் பட்டு விளங்கியது என அதன் உயர்ச்சியினைப் புனைந்து கூறியவாறு. (8)

## இராமன் முதலியோர் கிட்கிந்தை மலையை அடைதல்

4046. அன்னதாய குன்றினாறு
சென்றவீர ரைந்தொடைந்
துன்னலாய யோசனைக்கு
மும்பரேறி யிம்பரிற்
பொன்னினா டிழிந்ததன்ன
வாலிவாழ் பொருப்பிடந்
துன்னினார்கள் செய்வதென்னை
யென்றுநின்று சொல்லுவார்.

அன்னது ஆய குன்றின் ஆறு
சென்ற வீரர், ஐந்தொடு ஐந்து
உன்னல் ஆய யோசனைக்கும்
உம்பர் ஏறி, இம்பரில்

பொன்னின் நாடு இழிந்தது அன்ன
வாலிவாழ் பொருப்பு இடம்
துன்னினர்கள் ; 'செய்வது என்னே ?'
என்று நின்று சொல்லுவார்.

பொ :—(மேலே கூறிய) அத்தன்மைத்தாகிய மலைநெறியிற் சென்ற (இராம இலக்குவராகிய) வீரர்கள் ஐந்தும் ஐந்தும் என்று எண்ணுதற்குரிய பத்து யோசனை தூரத்திற்கும் மேலாக மலைமீது ஏறிச் சென்று, (வானோர் வாழும்) பொன்மயமாகிய வானுலகமே இம்மண்ணுலகில் இறங்கி வந்தாலொத்த (பொலிவுடையதாய்) வாலி என்பான் வாழும் (கிட்கிந்தை) மலையின் இடத்தை அடைந்தவர்களாய், 'மேற்செய்யத் தகுவது யாது?' என்று எண்ணி நின்று (தமக்குள்) பேசிக்கொள்வாராயினர்.

கு :—குன்றின் ஆறு - மலையிலுள்ள வழி. உம்பர் - மேல். பொன்னின் நாடு - பொன்மயமான நாடு ; வானுலகம். இம்பர் - இவ்வுலகம்; மண்ணுலகம். பொன்னின் நாடு இம்பர் இழிந்தது அன்ன பொருப்பு, வாலி வாழ் பொருப்பு எனத் தனித்தனி இயைத்துரைக்க. காண் போர் கண்களைக் கவரும் அழகிய தோற்றப் பொலிவினாலும், தன்கண் வாழ்வார் வேண்டிய இன்ப நுகர்ச்சிகளை யெல்லாம் குறைவற நுகர்தற்கேற்ற வாய்ப்புடைமையாலும் வாலியின் ஆட்சியிலுள்ள கிட்கிந்தை, தேவர்கள் வாழும் வானுலகமே இவ்வுலகில் வந்து இறங்கியதனையொத்து விளங்கியதென்பார், 'இம்பரில் பொன்னின் நாடு இழிந்தது அன்ன வாலி வாழ் பொருப்பிடம்' என்றார். 'மாந்தரஞ் சேரல் ஓம்பியநாடு, புத்தேளுலகத்தற்று' (புறம் - 22) என்பது இங்கு நினைக்கத் தக்கதாகும். சொல்லுதல் - உரையாடுதல். (9)

### வாலியைக் கொல்லும் உபாயத்தை ஆராய்தல்

4047. அவ்விடத்தி ராமனீ
யழைத்துவாலி யானதோர்
வெவ்விடத்தின் வந்துபோர்
விளைக்குமேல்வை வேறுநின்
றெவ்விடத்து ணிந்தமைந்த
தென்கருத்தி தென்றனன்
றெவ்வடக்கும் வென்றியானு
நன்றிதென்று சிந்தியா.

அவ்விடத்து, இராமன், 'நீ அழைத்து, வாலி ஆனது ஓர்
வெவ் விடத்தின் வந்து போர்விளைக்கும் ஏல்வை, வேறு நின்று
எவ் விடத் துணிந்து அமைந்தது, என்கருத்து இது' என்றனன்;
தெவ் அடக்கும் வென்றியானும், 'நன்று இது' என்று சிந்தியா.

பொ :—(வாலி வாழ் பொருப்பாகிய) அவ்விடத்தின்கண் இராமன் (சுக்கிரீவனை நோக்கி) 'நீ (போருக்கு) அழைத்து வாலி யென்னும் கொடிய நஞ்சுடனே வந்து போர் செய்யும் பொழுது மறை விடத்தில் நின்று அம்பினை எய்யத் துணிந்து பொருந்தியதாகிய இதுவே எனது கருத்தாகும்' என்று கூறினன். பகைவனைப் பொருதழிக்கும் வெற்றி விருப்பினனாகிய சுக்கிரீவனும் 'இது நல்லதோர் உபாயம்' என்று சிந்தித்து.

கு :—இச்செய்யுள் குளகம். சிந்தியா (சிந்தித்து) என்னும் வினையெச்சம் அடுத்த பாடலில் 'ஆர்த்த ஓசை' என்புழி ஆர்த்த என்னும் பெயரெச்சத்து ஆர்த்தல் என்னும் முதனிலையைக் கொண்டு முடிந்தது. சுக்கிரீவனோடு நட்புக்கொண்டு கிட்கிந்தை மலையை அடைந்த இராமன், சுக்கிரீவனை நோக்கி, 'நீ சென்று வாலியை வலியப் போருக்கு அழைத்து வந்து நஞ்சினுங் கொடியோனாகிய அவனுடன் போர் புரியும் நிலையில் யான் மறைவிடத்தில் நின்று வாலிமேல் அம்பினை எய்து கொல்லக் கருதினேன்' என்று, கூற, அது கேட்டுத் தன் பகையினை வென்றடக்கும் வெற்றித் திறனையே எதிர்பார்த்திருந்த சுக்கிரீவன், தான் வாலியைக் கொல்லுதற்கு இதுவே நல்லதோர் உபாயம் எனத் தன் மனத்துட்கொண்டான் என்பதாம்.

அழைத்தல் - பகைவன் எதிர்பாராத நிலையில் அவன்பால் தானே வலியச் சென்று போர்க்கு வருக என அறைகூவியழைத்தல். கடலிற்றோன்றிய ஆலகால நஞ்சினையொத்து எதிர்ந்தாரைத் தொடர்ந்து உயிர்கவரும் வெம்மையுடையனாதல் பற்றி 'வாலியான தோர் வெவ்விடம்' என்றார். வெவ்விடத்தின் வந்து - வெவ் விடத்தினொடு வந்து என மூன்றாமுருபு விரித்துரைக்க. ஏல்வை - சமயம். வேறு நிற்றல் - பிறரறியாதபடி மறைவில் நிற்றல். 'கொடியவல் வினையேன் திறங் கூறுமின் வேறு கொண்டே' (திருவாய் மொழி 6-1-9) என்புழியும், 'நானும் நீயும் வேறிடத் திருக்க வேண்டும்' (பெரியபுராணம் - மெய்ப்பொருள் 13) என் புழியும் 'வேறு' என்னுஞ்சொல் பிறர் புகுதற்கியலாத தனியிடம் என்ற பொருளில் ஆளப்பெற்றிருத்தல் இங்கு ஒப்புநோக்கத் தக்கதாகும். ஏ+விட=எவ்விட என எதுகை நோக்கிக் குறுகி நின்றது. ஏ - அம்பு. விடுதல் - செலுத்துதல். இனி, 'எவ்விட' என்பதனைச் செலுத்துதல் என்னும் பொருளுடைய ஏவுதல் -

எவ்வுதல் என்பதனடியாடிகப் பிறந்ததெனக் கொள்ளுதற்கும் இடமுண்டு. 'எவ்விய தென்னையென்றான்' (கம்பர்-வாலிவதை-116) என்பர் பின்னரும். தெவ் - பகை. தன் பகைவனை ஒறுத்து அடக்கி வெற்றி பெறுதற்குரிய நெறியினையே இடைவிடாது எண்ணியிருந்த சுக்கிரீவன், இராமன் கூறியதனை நல்லதோருபாயமாக ஏற்றுக் கொண்டான் என்பார், 'தெவ்வடக்கும் வென்றியானும் நன்றி தென்று சிந்தியா' என்றார். இனி, 'தெவ்வடக்கும் வென்றியான்' என்ற தொடர், இராமனைக் குறித்ததாகக் கொண்டு, 'தெவ் அடக்கும் வென்றியானாகிய இராமன், இது நன்று என்று சிந்தியா, (சுக்கிரீவனை நோக்கி) 'நீ வாலியானது ஓர் வெவ்விடத்தின் வந்து போர் விளைக்கும் எல்லை வேறு நின்று ஏ விடத் துணிந்து அமைந்தது இது என் கருத்து என்றனன்' என இச் செய்யுட் பொருளை முடித்துரைத்தலும் உண்டு. (10)

### இராமனது கருத்துக்குச் சுக்கிரீவன் இசைதல்

4048. வார்த்தையன்ன தாகவா
னியங்குதேரி னன்மகன்
நீர்த்தரங்க வேலையஞ்ச
நீலமேக நாணவே
வேர்த்துமண்ணு ளோரிரிந்து
விண்ணுளோர்கள் விம்மமேல்
ஆர்த்தவோசை யீசனுண்ட
வண்டமுற்று முண்டதே.

வார்த்தை அன்னது ஆக, வான் இயங்கு தேரினன் மகன்,
நீர்த் தரங்க வேலை அஞ்ச, நீலமேகம் நாணவே,
வேர்த்து மண்ணுளோர் இரிந்து, விண்ணுளோர்கள் விம்ம, மேல்
ஆர்த்த ஓசை, ஈசன் உண்ட அண்டம் முற்றும் உண்டதே.

பொ:—(இராமன் கூறிய) சொல் (தனது கருத்துக்குப் பொருந்தும்) அத்தன்மையதாகி அமைய, வானின் கண்ணே இயங்கும் (ஓராழித்) தேரினையுடைய கதிரோன் மகனாகிய சுக்கிரீவன், அலைகளோடு பொருந்திய பெருவெள்ளத்தினையுடைய கடல் அச்சமுற்று (ஒலியவிந்து) அடங்கவும், கருமுகில்கள் நாணி விலகவும், மண்ணுலகத்தவர்கள் உடல் வியர்த்து ஓடவும், வானுலகத்தவராகிய தேவர்கள் (மன நடுங்கி) விம்முதலடையவும் ஆரவாரித்த பேரோசையானது, ஈசனாகிய திருமாலால் உட்கொள்ளப்பெற்ற அண்டப் பரப்பு முழுவதனையும் தன்னகத்தடக்கி மேலோங்கியது.

கு:—வார்த்தை - மேற்செய்யுளிற் குறிக்கப் பெற்ற மொழி. அன்னது ஆக - (சுக்கிரீவன் கருத்துக்கு இசைந்த) அத் தன்மையதாகி அமைய. வானியங்கு தேரினன் - சூரியன்; மகன் என்றது சுக்கிரீவனை. தரங்க நீர் வேலை என இயையும். தரங்கம் - அலை. வேலை - கடல். சுக்கிரீவன் செய்த ஆரவாரம் அலை கடல் முழக்கத்தினையும் இடியொலியையும் கீழ்ப்படுத்தி மேலோங்கிய தென்பார், 'வேலையஞ்ச, மேகம்நாண, ஆர்த்த ஓசை' என்றார். சுக்கிரீவனது ஆரவாரத்தைக் கேட்ட அளவில் மண்ணவரும் விண்ணவரும் இன்னது செய்வதென்றறியாது விம்மி நடுங்கி ஓடி மறைந்தனர் என்பார், 'வேர்த்து மண்ணுளோர் இரிந்து விண்ணுளோர்கள் விம்ம ஆர்த்த ஓசை' என்றார். 'இரிந்து' என்னும் செய்தெனெச்சத்தினை 'இரிய' எனச் செயவெனெச்சமாகத் திரித்துக் கொள்க. இரிதல் - அஞ்சி ஓடுதல். ஈசன் என்றது இங்குத் திருமாலை. ஊழி முடிவில் திருமாலால் உட்கொள்ளப் பெற்ற அண்டப் பரப்பாகிய எல்லை முழுவதும் சுக்கிரீவனது ஆரவாரம் பரவி மேலோங்கியது என்பார், 'மேல் ஆர்த்த ஓசை ஈசன் உண்ட அண்டம் முற்றும் உண்டது' என்றார். உண்ணுதல் - தனக்குள் அகப்படுத்தி அடக்குதல். ஏ - அசை. (11)

### சுக்கிரீவனது போர் முழக்கம் உறங்கும் வாலியின் செவியிற் சென்று சார்தல்

4049. இடித்துரப்பி வந்துபோ
ரெதிர்த்தியே லடர்ப்பனென்
றடித்தலங்கள் கொட்டிவாய்
மடித்தடுத் தலங்குதோள்
புடைத்துநின் றுளைத்தபூசல்
புக்கதென்ப மிக்கிடந்
துடிப்பவங் குறங்குவாலி
திண்செவித் தொளைக்கணே.

இடித்து, உரப்பி, 'வந்து போர்
எதிர்த்தியேல் அடர்ப்பன்' என்று
அடித் தலங்கள் கொட்டி,
வாய்மடித்து, அடுத்து, அலங்கு தோள்

புடைத்து நின்று, உளைத்தபூசல்
புக்கது என்ப ; மிக்கு இடம்
துடிப்ப அங்கு உறங்கு வாலி
திண்செவித் தொளைக்கணே.

பொ :—('என்னுடன்) போர் மேற்கொண்டு வந்து எதிர்ப்பாயாயின் (நின்னை) அழித்தொழிப்பேன்' என்று கூறி இடியிடித்தாற்போன்று அதட்டிக் கால்களைக் கொட்டி (ச் சினமிகுதியால்) உதட்டை மடித்து (வாலியின் இருப்பிடத்தை) அடைந்து விளங்குகின்ற தோள்களைத் தட்டி நின்று வலியப் போர்க்கு அழைத்த (சுக்கிரீவனது) ஆரவாரம், அங்கு (கிட்கிந்தை நகரத்தில்) இடத்தோளும் இடக்கண்ணும் மிகத் துடிப்ப உறங்கிக்கொண்டிருக்கும் வாலியின் வலிய செவித்துளையிலே சென்று புக்கது என்பர்.

கு :—'என்ப' என்பது இக்கதையினைக் கூறும் நிலையில் அமைந்த கவியின் கூற்றாகும். 'கண்டனன் என்பமன்னோ' (கம்பர்-கிட்-நட்புக்கோட் 17) என முன்னரும் வந்தது. இதனை அசையாகக் கொள்வாரும் உளர். உரப்புதல் - தெழித்தல்; அதட்டிக் கூறுதல். ஆடவர்க்கு இடப்பக்கம் துடித்தல் பின்னர் விளையவிருக்கும் தீங்கினைப் புலப்படுத்தும் தீநிமித்தமாகும். அடித்தலங்கள் கொட்டுதல் - தொடையினைத் தட்டிக்கொண்டு போருக்கு முந்துதல். உளைத்தல் - அழைத்தல். பூசல் - போர் ஆரவாரம். உளைத்த பூசல், மிக்கு இடம் துடிப்ப அங்கு உறங்கு வாலி திண் செவித் தொளைக்கணே புக்கது என இயையும். (12)

அப்பேரொலியினைக் கேட்ட வாலி, உலகமெலாம் நடுங்கும்படி
அடங்காச் சினமுடையவனாய்ச் சுக்கிரீவனொடு
போர் செய்தற்கு விரைந்து எழுதல் 4050—4058

4050. மாற்பெருங் கடகரி முழக்கம் வாளரி
☆ ஓர்ப்பது செவித்தலத் தென்ன வோங்கிய
ஆர்ப்பொலி கேட்டன னமளி மேலொரு
பாற்கடல் கிடந்ததே யனைய பான்மையான்.

மால் பெருங் கடகரி முழக்கம், வாள் அரி
ஓர்ப்பது செவித்தலத்து என்ன, ஓங்கிய
ஆர்ப்பு ஒலி கேட்டனன் ; அமளிமேல் ஒரு
பாற்கடல் கிடந்ததே அனைய பான்மையான்.

பொ :—படுக்கையின்மேல் ஒப்பற்ற தன்மையினதாகிய பாற் கடல் படுத்திருந்தாற்போலும் தன்மையினையுடையவனாகிய வாலி, மிகப்பெரிய மதயானையின் முழக்கத்தினைக் கொடுமை வாய்ந்த ஆண் சிங்கம் தன் செவிகளில் ஓர்த்துக் கேட்டாற்போன்று (சுக்கிரீவனது) ஓங்கிய போர் முழக்கத்தை(த் தன் செவிகளாற் கூர்ந்து) கேட்டான்.

கு :—மால் - பெருமை. கட கரி - மதயானை. அரி - சிங்கம். ஓர்த்தல் - கூர்ந்து கேட்டல். தனக்குரியதாகிய மலைமுழையில் அடங்கியுறங்கிய சிங்கம், மதயானையின் முழக்கத்தைத் தன் செவி களில் ஓர்த்துத் துயிலுணர்ந்தாற்போன்று, கிட்கிந்தையில் தனக் குரிய அரண்மனையில் உறங்கிக் கிடந்த வாலி, சுக்கிரீவனது அறை கூவல் ஆரவாரத்தைக் கேட்டுத் துயில் நீத்தெழுந்தான் என்பதாம். தூய வெண்ணிற மேனியனாகி அமளியில் உறங்கிக் கிடக்கும் வாலி, தூய்மையுடையதாகிய பாற்கடல் ஒரு படுக்கையில் அலையடங்கித் துயில்கொள்வது போலும் இனிய தோற்றப் பொலிவினனாகி விளங் கினன் என்பார், 'அமளிமேல் ஒரு பாற்கடல் கிடந்ததே அனைய பான்மையான்' என்றார். வாலி என அவனுக்கு வழங்கும் பெயர் தூய வெண்ணிற மேனியினைக் குறிக்கும் காரணப் பெயராகவும் அமைந்துள்ளமை கூர்ந்து நோக்கத்தக்கதாகும். வாலி வெண்ணிற மேனியன் என்பதனை, 'இந்திரன் தனிப்புதல்வன் இன்னளிச், சந்திரன் தழைத்தனைய தன்மையான்' (நட்புக்கோட்-49) என முன்னருங் குறித்துள்ளமை காணலாம். வாலியும் அவன் தம்பி சுக்கிரீவனும் வெண்ணிற மேனியர் என்பதனைப் 'பாரிற்றிரியும் பனிமால் வரையன்ன பண்பார்' (வாலிவதை-45) எனவரும் தொடரில் ஆசிரியர் தெளிவாகக் குறித்துள்ளார். (13)

**4051.** உருத்தனன் பொரவெதிர்ந் திளவ லுற்றமை
வரைத்தடந் தோளினன் மனத்தி னெண்ணினன்
சிரித்தன னவ்வொலி திசையி னப்புறத்
திரித்ததவ் வுலகமொ ரேழொ டேழையே.

உருத்தனன் பொர எதிர்ந்து இளவல் உற்றமை,
வரைத் தடந் தோளினன், மனத்தின் எண்ணினன்;
சிரித்தனன்; அவ் ஒலி, திசையின் அப்புறத்து
இரித்தது, அவ் உலகம் ஓர் ஏழொடு ஏழையே.

பொ :—மலையினையொத்த பெரிய தோள்களையுடையவனாகிய வாலி, தன் தம்பியாகிய சுக்கிரீவன் சினந்து நோக்கித் தன்னுடன் போர் செய்ய எதிர்த்து வந்த தன்மையைத் தன் மனத்தில்

எண்ணினுன்; (இரங்கத்தக்க அவனது எளிமை நிலையை நினைந்து இகழ்ந்து) சிரித்தான்; அச்சிரிப்பொலி பதினுன்குலகங்களையும் திசைகளின் எல்லைக்கு அப்புறம் வெருவி ஓடும்படி செய்தது.

கு :—உருத்தல் - சினந்து நோக்குதல்; வெகுண்டெழுதல். உருத்தனன் முற்றெச்சம். வரைத்தடந்தோளினுன் என்றது வாலியை. இளவல் - தம்பி; சுக்கிரீவன். வரைத்தடந் தோளினுன், இளவல் உருத்தனன் பொர எதிர்ந்து உற்றமை மனத்தின் எண்ணினுன்; சிரித்தனன் எனவும், அவ்வொலி, உலகம் ஓர் ஏழொடு ஏழையும் திசையின் அப்புறத்து இரித்தது எனவும் இரு தொடராக இயைத்துப் பொருள்கொள்க. உலகம் ஓர் ஏழொடு ஏழையும் - பதினுலுலகங்களையும்; என்றது, அவ்வுலகங்களில் வாழ்வாரைக் குறித்தது; ஆகு பெயர். இரித்தது - ஓட்டியது. இரிதல் - ஓடுதல்; தன் வினை. இரித்தல் - ஓட்டுதல்; பிறவினை. (14)

4052. எழுந்தனன் வல்விரைந்
திறுதி யூழியிற்
கொழுந்திரைக் கடல்கிளர்ந்
தனைய கொள்கையா
னழுந்திய தக்கிரி
யருகின் மால்வரை
விழுந்தன தோள்புடை
விசைத்த காற்றினே.

எழுந்தனன், வல்விரைந்து, இறுதி ஊழியில்
கொழுந் திரைக் கடல் கிளர்ந்தனைய கொள்கையான்;
அழுந்தியது அக்கிரி; அருகில் மால் வரை
விழுந்தன, தோள்புடை விசைத்த காற்றினே.

பொ :—ஊழியிறுதியாகிய யுகமுடிவில் பெரிய அலைகளையுடைய கடல் பொங்கி மேலெழுந்தாற் போன்ற செருக்குடையனுய் விரைந்து எழுந்தான் (வாலி). அந்நிலையில் (கிட்கிந்தை யென்னும்) அம்மலை (அவனைத் தாங்கலாற்ருது) நிலத்தினுள்ளே அழுந்தியது. (அவன்) தோள்களைப் பக்கங்களிற் பெயர அசைத்தமையால் உண்டாகிய காற்றினுல் அருகிலுள்ள பெரிய மலைகள் பலவும் (நிலைகுலைந்து) சாய்ந்து வீழ்ந்தன.

கு :—இறுதியூழியில் என்பதனை ஊழியிறுதியில் என மாற்றுக. கடல் கிளர்ந்தனைய கொள்கையான் வல்விரைந்து எழுந்தனன் என

இயையும். கொள்கையான் என்பது முற்றெச்சம். கொள்கை - வீரமிகுதி; செருக்கு. அக்கிரி யென்றது, வாலி வாழும் இடமாகிய கிட்கிந்தை மலையினை. அழுந்துதல் - அவனைப் பொறுத்து நிற்கலாற்ருது தரையினுள்ளே தாழ்தல். விசைத்தல் - வீசுதல். 'கால் விசைத்தோடிக் கடல்புக மண்டி' என்பது திருவாசகம். (15)

4053. போய்ப்பொடித் தனமயிர்ப் புறத்த வெம்பொறி
காய்ப்பொடுற் றெழுவட வனலுங் கண்கெடத்
தீப்பொடித் தனவிழி தேவர் நாட்டினும்
மீப்பொடித் தனபுகை யுயிர்ப்பு வீங்கவே.

போய்ப் பொடித்தன மயிர்ப்புறத்த, வெம்பொறி;
காய்ப்பொடு உற்று எழு வட அனலும் கண்கெடத்
தீப் பொடித்தன, விழி; தேவர் நாட்டினும்
மீப் பொடித்தன புகை, உயிர்ப்பு வீங்கவே.

பொ:—(சினமுற்ற வாலி மேனியின்) மயிர்க்காலிடத்தனவாய் வெம்மையையுடைய தீப்பொறிகள் தோன்றிப் புறத்தே போய்ச் சிதறின. (அவனுடைய) விழிகள் கனன்று மீதெழும் வடவைத் தீயும் கண்ணொளி கெடும்படி தீத்திரளைச் சிந்தின. (அவனது மூக்கின்கண் வெம்மைமிக்கு) மூச்சுக் காற்று மிக்கு வெளிப்படுதலால் (உண்டாகிய) புகைத்திரள் தேவர்கள் வாழும் வானுலகிலும் மேலோங்கிப் பரவின.

கு:—பெருவீரனாகிய வாலி தன்னை வலியப் போருக்கு அறை கூவிய சுக்கிரீவனைச் சினந்தெழுந்த நிலையில் அவ் வாலி மேனியின் மயிர்க்கால் தோறும் தீப்பொறிகள் தோன்றிப் பக்கங்களிற் சிதறின. வடவைத் தீயும் பார்த்தால் கண்ணொளி கெடும்படி வாலியின் கண்கள் தீத்திரளைச் சிந்தின. அவனது மூச்சுக் காற்றுடன் வெளிப்பட்ட புகைத்திரள் தேவர்கள் வாழும் வானுலகத்திலும் சென்று பரவின என வாலியின் சினமிகுதியைப் புலப்படுத்தினர். காய்ப்பு - கொதிப்பு. வடவனல் என்பது, கடல் நடுவே அடங்கியிருந்து ஊழி முடிவிற் கனன்று மேலெழுந்து உலகங்களை யெல்லாஞ் சுட்டெரிக்குமியல்பினதாகிய தீப்பிழம்பு. அவ்வடவைத் தீயும் ஓர் உருக்கொண்டு தன் கண்களால் நோக்கின் அத்தீயின் கண் பார்வையும் கெட்டழியும்படி வாலியின் சினமிக்க விழிகள் வெந்தீயைச் சொரிந்தன என்பார் 'காய்ப்பொடுற்றெழு வடவனலும் கண்கெடத், தீப்பொடித்தன விழி' என்ருர். கண் கெடுதல் - கண்ணொளியிழந்து குருடாதல். வீங்குதல் - மிக்குச் செறிதல். (16)

4054. கைக்கொடு கைத்தலம் புடைப்பக் காவலின்
திக்கயங் களுமதச் செருக்குச் சிந்தின
வுக்கன வுருமின முலைந்த வும்பரும்
நெக்கன நெரிந்தன நின்ற குன்றமே.

கைக்கொடு கைத்தலம் புடைப்பக், காவலின்
திக் கயங்களும், மதச்செருக்குச் சிந்தின ;
உக்கன உரும் இனம் ; உலைந்த உம்பரும் ;
நெக்கன, நெரிந்தன, நின்ற குன்றமே.

பொ :—(வாலி) ஒரு கையினைக் கொண்டு மற்றொரு கையினைப் புடைப்ப (எழுந்த ஓசையால்) உலகினைத் தாங்கி நின்று காக்குங் கடமையினையுடைய திசையானைகளும் மதக் களிப்பாகிய செருக்கினை நீங்கின. (மேகத்தின் கண்ணவாகிய) இடித்தொகுதிகளும் தம் வலியழிந்து சிதர்ந்தன. வானுலகங்களும் நடுக்கமுற்றன. (அசைவின்றி) நிலைபெற்ற மலைகளும் பிளந்து பொடியாய் நொறுங்கின.

கு :—வாலி தன் இரு கரங்களையும் புடைத்து எழுப்பிய போர் முழக்கத்தால் இவ்வுலக வுயிர்களேயன்றி இவ்வுலகின் கீழும் மேலும் வாழும் உயிர்த் தொகுதிகளும் நடுங்கின என்பதாம். திக்+கஜம் என்னும் வடசொற்றொடர் தமிழில் திக்கயம் என்றாயிற்று. திக்கயம் - திசையானை. உகுதல் - பொடியாய் உதிர்தல். உரும் - இடி. உம்பர் - மேலுலகம். உலைதல் - நடுங்குதல். (17)

4055. வந்தனென் வந்தனெ னென்ற வாசக
மிந்திரி முதற்றிசை யெட்டுங் கேட்டன
சந்திரன் முதலிய தார கைக்குழாஞ்
சிந்தின மணிமுடிச் சிகரந் தீண்டவே.

'வந்தனென் வந்தனென்' என்ற வாசகம்,
இந்திரி முதல் திசை எட்டும் கேட்டன ;
சந்திரன் முதலிய தாரகைக் குழாம்
சிந்தின, மணிமுடிச் சிகரம் தீண்டவே.

பொ :—'வந்தேன் வந்தேன்' என்று (வாலி) கூறிய சொற்கள் கீழ்த்திசை முதலிய எட்டுத் திசைகளிலும் சென்று ஒலித்தன. (இங்ஙனம் வாலி போர்க்குக் கிளர்ந்து எழுந்தபோது அவனுடைய) மணிகள் இழைக்கப் பெற்ற முடியாகிய சிகரம்பட்டு உராய்ந்தமை

யால் (வானத்திலுள்ள) சந்திரனை முதலாகக் கொண்ட விண்மீன் தொகுதிகள் கீழே சிதறி வீழ்ந்தன.

கு :—இந்திரி - கிழக்குத் திசை; வானோர் தலைவனாகிய இந்திரன் காவல்புரியும் திசையாதலின் இந்திரி என்னும் பெயர்த்தாயிற்று. 'வந்தனென் வந்தனென்' எனப் பலமுறை கூறிய சொல்லாதலின், 'கேட்டன' எனப் பன்மையாற் கூறினார். கேட்டல் - செவிக்குப் புலனாதல்; செவிக்கண் சார்ந்து ஒலித்தல். விண்மீன்களுக்குத் திங்களைத் தலைவனாகக் கூறுதல் மரபாதலின், 'சந்திரன் முதலிய தாரகைக் குழாம்' என்றார். தாரகை - விண்மீன். குழாம் - கூட்டம். வாலியின் மணிமுடி தீண்ட வானத்திலுள்ள மீன்கள் சிந்தின என்றமையால், வாலி தவத்தினாற் பெற்றுள்ள பேருருவின் இயல்பினை ஆசிரியர் புலப்படுத்தினமை அறியத்தக்கதாகும். (18)

4056. வீசின கரத்தின்வேர் பறிந்த வெற்பின
மாசையை யுற்றன வண்டப் பித்திகை
பூசின வெண்மயிர் பொடித்த வெம்பொறி
கூசின னந்தகன் குலைந்த தும்பரே.

வீசின கரத்தின் வேர்பறிந்த வெற்பு இனம்,
ஆசையை உற்றன; அண்டப் பித்திகை
பூசின, வெண்மயிர் பொடித்த வெம் பொறி;
கூசினன், அந்தகன்; குலைந்தது உம்பரே.

பொ :—(போருக்கு விரைந்து செல்லும் வாலி) வீசிய கைகளின் விசையால் உண்டாகிய காற்றினால் அடியோடு பறிக்கப்பட்ட மலையின் தொகுதிகள் திசையின் எல்லையை யடைந்து வீழ்ந்தன. (அவன் மேனியில் அடர்ந்துள்ள) வெண்மை வாய்ந்த மயிர்க்கால் தோறும் தோன்றிய வெம்மையுடைய அனற்பொறிகள் அண்டப்பரப்பின் மதிற் சுவரைப் பொருந்தித் தடவின. (இங்ஙனம் வெகுண்டுவரும் வாலியைக் காணுதற்குக்) கூற்றுவனும் கண் கூசினான். மேலுலகமும் நடுங்கியது.

கு :—ஆசை - திசை. அண்டப் பித்திகை - அண்டப் பரப்பின் சுற்றுமதில். பித்திகை - மதிற்சுவர். பூசுதல் - பொருந்தத் தடவுதல். உம்பர் - மேலுலகம்; ஆகுபெயரால் அங்குள்ள தேவர்களைக் குறித்தது. அந்தகன் - உயிர்கட்கு அந்தத்தைச் செய்வோனாகிய இயமன். (19)

4057. கடித்தவா யெயிறுகு கனல்கள் கார்விசும்
பிடித்தவா யுகுமுரு மினத்திற் சிந்தின
தடித்துவீழ் வனவெனத் தகர்ந்து சிந்தின
வடித்ததோள் வலயத்தின் வயங்கு காசரோ.

கடித்த வாய் எயிறு உகு கனல்கள், கார் விசும்பு
இடித்த வாய் உகும் உரும் இனத்தின் சிந்தின;
தடித்து வீழ்வன எனத் தகர்ந்து சிந்தின,
வடித்த தோள் வலயத்தின் வயங்கு காசு அரோ.

பொ :—(வாலி வெகுண்டு) பற்களைக் கடித்தபொழுது அவற்றினின்று தோன்றிய தீப்பொறிகள் விசும்பின் கண்ணே கரிய மேகங்கள் ஒன்றோடொன்று மோதிய நிலையில் உண்டாகிய இடியின் தொகுதிகள் போன்று எங்கும் சிதறின. (வாலி தன் தோள்களைக் கொட்டி ஆர்த்த நிலையில்) அணிபெற அமைக்கப்பெற்ற (அவனுடைய) தோள் வளைகளில் விளங்கிய அழகிய மணிகள் மின்னல்கள் வீழ்வனபோன்று சிதறி வீழ்ந்தன.

கு :—பற்களைக் கடித்தல் வெகுளி பற்றிய மெய்ப்பாடு. கடித்த வாய் - கடித்த பொழுது. எயிறு - பல். கார் - கரியமேகம். இடித்த வாய் - இடித்த இடத்து. வாய் - இடம். தடித்து - மின்னல். வடித்தல் - அணிபெறச் செய்தல். தோள்வலயம் - வாகுவலயம். வயங்குதல் - விளங்குதல். காசு - மணி. அரோ அசை. (20)

4058. ஞாலமு நாற்றிசைப் புனலு நாகரு
மூலமு முற்றிட முடிவிற் றீக்குமக்
காலமு மொத்தனன் கடலிற் றான்கடை
யாலமு மொத்தன னெவரு மஞ்சவே.

ஞாலமும் நாற்றிசைப் புனலும் நாகரும்
மூலமும் முற்றிட, முடிவில் தீக்கும் அக்
காலமும் ஒத்தனன், கடலில் தான் கடை
ஆலமும் ஒத்தனன், எவரும் அஞ்சவே.

பொ :—நிலவுலகமும் (அதன்) நான்கு திசைகளிலும் சுற்றியுள்ள கடல் நீரும், நாகர்களும், எல்லாவற்றிற்கும் மூலமாகிய மூலப் பகுதியும் அழியும்படி (ஊழி) முடிவில் எரித்தழிக்கும் (ஊழிக்) காலத் தீயையும் தன்னாற் கடையப்பட்ட பாற்கடலிடத்தே தோன்றிய ஆலகால நஞ்சையும் ஒத்து (வெம்மையுடையனாக)த் தோன்றினான் (வாலி).

கு :—' (வாலி) எவரும் அஞ்சக் காலமும் ஒத்தனன்; ஆலமும் ஒத்தனன் என இயையும். இங்கே காலம் என்றது, யுகமுடிவில் உலகங்க ளனைத்தையும் சுட்டெரிக்கும் ஊழிக்காலத் தீயினை. நாகர் என்னும் சொல் இரட்டுற மொழிதலால் பாதலத்து வாழ்வாராகிய நாகர்களையும் விண்ணுலகில் வாழ்வாராகிய தேவர்களையும் குறித்து நின்றது. அமுதம்பெற வேண்டித் தேவர்களும் அவுணர்களுங்கூடி மந்தரமலையை மத்தாகவும் வாசுகியைக் கடைகயிருகவுங் கொண்டு பாற்கடலைக் கடைந்து அமுதம் பெருது தளர்ச்சியுற்றபோது வாலி தன் இரு கைகளாலும் மந்தர மலையாகிய மத்தினை வலித்துத் தான் ஒருவனுகவே பாற்கடலைக் கடைந்தான் என்பார், 'தான் கடை கடலில்' என்ருர். பாற்கடலிற்ருேன்றிய ஆலகாலம் என்னும் நஞ்சு கண்டார் யாவரும் அஞ்சியோடும்படி வெம்மையுடையதாய் வெளிப் பட்டது போன்று, வாலியும் தன்னைக் கண்டார் யாவரும் அஞ்சி யோடும்படி வெகுண்டு வெளிப்பட்டான் என்பதாம். (21)

## போர்க்குச் செல்லுதல் வேண்டாம் என வாலியைத் தாரை விலக்குதல்

4059. ஆயிடைத் தாரையென் றமிழ்திற் ருேன்றிய
வேயிடைத் தோளினு ளிடைவி லக்கினுள்
வாயிடைப் புகைவர வாலி கண்வருந்
தீயிடைத் தன்னெடுங் கூந்த றீகின்ருள்.

ஆயிடைத் தாரை என்று அமிழ்தின் தோன்றிய
வேயிடைத் தோளினுள், இடை விலக்கினுள்;
வாயிடைப் புகை வர, வாலி கண்வரும்
தீயிடைத் தன் நெடுங் கூந்தல் தீகின்ருள்.

பொ :—அப்பொழுது தாரை என்று பெயர் கூறப்பட்டு அமிழ் திலே உருக்கொண்டு தோன்றிய பசிய மூங்கிலின் தன்மையைத் தம்மிடத்தே கொண்ட தோள்களையுடையாளாகிய அவள், (தன் கணவனுகிய) வாலியின் வாயிடத்தே புகையெழ அவன் கண்களி லிருந்து வெளிப்படும் தீயிற்பட்டுத் தனது நீண்ட கூந்தல் தீய்ந்து கெடும் நிலையில் இடை நின்று (அவனைத் தடுத்து) விலக்கினுள்.

கு :—அ+இடை=ஆயிடை என அகரச் சுட்டு நீண்டது. ஆயிடை - அப்பொழுது; வாலி தன் தம்பியாகிய சுக்கிரீவனேடு போர் புரிய வெகுண்டெழுந்த அந்நேரத்தில். தாரை - வாலியின் மனைவி. தாரை எனத் தனக்கொரு பெயருடையளாய்ப் பேசப்

பெறும் அப்பெயரளவல்லது அமிழ்தொடும் இவளிடை சிறிதும் வேற்றுமை யில்லை யென்பார், 'தாரை என்று அமிழ்திற்றேன்றிய வேயிடைத் தோளினள்' என்றார். 'இவளுடைய தோள்கள், உறுந் தோறும் கணவனுயிரைத் தளிர்ப்பச் செய்வனவாய் அமிழ்தின் இயன்றனவாயினும், அமிழ்திற்குத் தோள் முதலிய வடிவ மின்மையின் அத்தகைய வடிவழகினை வேயினிடத்தே பெற்று விளங்குவன என்பார் 'வேயிடைத் தோளினள்' என்றார். அமிழ்திற் றேன்றிய தோளினள், வேயிடைத் தோளினள் என இயையும்.

"உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்
கமிழ்தின் இயன்றன தோள்" (1106)

எனவரும் திருக்குறட் பொருளை 'அமிழ்திற்றேன்றிய வேயிடைத் தோளினள்' என்ற தொடரிற் கம்பர் எடுத்தாண்ட நயம் நினைந்து இன்புறத்தக்கதாகும். வேய் - மூங்கில். வாய்வழியே புகையும் கண்களில் தீயும் வெளிப்படச் சினந்தெழுந்த வாலியை இடை நின்று விலக்கும் பெற்றியுடையார் அவன் வாழ்க்கைத் துணைவியாய் உறுதோ றுயிர்தளிர்க்கும் அமிழ்தின் இயன்ற தோளினளாகிய தாரையையன்றிப் பிறர் இலர் என்றும், அத்தகைய தாரையும் வாலியை இடை நின்று விலக்கும் நிலையில் அவனுடைய கண்களி லிருந்து வெளிப்படும் தீயினுல் தன் கூந்தல் சிறிது தீயும் அளவு அவனது வெகுளியின் வெம்மையால் வருந்தினள் என்றும் புலப் படுத்துவார் 'வாயிடைப் புகைவர வாலி கண்வரும் தீயிடைத் தன் னெடுங் கூந்தல் தீகின்றாள்' என்றார். எனவே பெரு வீரனுகிய வாலி 'மகளிர் சாயல் மைந்தர்க்கு மைந்து' (புறம்-221) என்றவாறு காதல் மகளிராகிய மெல்லியலார்க்கு மிகவும் மெல்லியனுகவும் தறுகண் வீரர்க்கு நெருங்க வொண்ணுத வன்மையுடையனுகவும் விளங்கிய திறம் உணர்த்தினுராயிற்று. தீகின்றாள் விலக்கினுள் என இயையும். இதன்கண் 'கூந்தல் தீகின்றாள்' என்றது, தாரைக்குப் பின் விளைய விருக்கும் அமங்கல நிலையைக் குறிப்பாற் புலப்படுத்துதல் அறியத் தக்கதாகும். (22)

வாலி, அவள் தடையை மீறுதல்

4060. விலக்கலை விடுவிடு விளித்து ளானுரங்
கலக்கியக் கடல்கடைந் தமுது கண்டென
வுலக்கவின் னுயிர்குடித் தொல்லை மீள்குவன்
மலைக்குல மயிலென மடந்தை கூறுவாள.

'விலக்கலை, விடு விடு; விளித்துளான் உரம்
கலக்கி, அக்கடல் கடைந்து அமுது கண்டென,
உலக்க இன்னுயிர் குடித்து, ஒல்லை மீள்குவன்,
மலைக்குலமயில்' என, மடந்தை கூறுவாள்.

பொ:—'மலையிடத்தே வாழும் நல்ல மயில் போன்றவளே, (பகைவனை அடர்த்தழிக்கப் புறப்பட்ட என்னைத்) தடுத்து நிறுத்தாதே. (என் விருப்பப்படி என்னை) விரைவில் விட்டுவிடு. வலியப் போருக்கு அழைத்தவனது நெஞ்சத்தைக் கலங்கச் செய்து, (முன்) அப்பாற்கடலைக் கடைந்து அமிழ்தத்தைக் கவர்ந்து கொண்டாற்போன்று (அவனது) இனிய உயிரைக் குடித்துப் போக்கி விரைவில் மீண்டு வருவேன்' என்று (வாலி) சொல்லத் தாரை (பின் வருமாறு) கூறுவாள்.

கு:—விலக்கலை - விலக்காதே. புல்லலை, போகலை என்புழிப் போல அல் எதிர்மறையுணர்த்தி ஐகாரம் பெற்று வந்தது. 'விடுவிடு' என்பது விரைவு பற்றி வந்த அடுக்கு. விளித்துளான் - (போருக்கு) அழைத்துள்ளவன்; சுக்கிரீவன். விளித்தல் - அழைத்தல். உரம் - நெஞ்சம். கலக்குதல் - நெஞ்சின் நிலைக்களமாகிய மார்பிற் பொருது உளங்கலங்கச் செய்தல். கடல் என்றது பாற்கடலை. அ - பண்டறி சுட்டு. உலத்தல் - இறத்தல். ஒல்லை - விரைவு. மலைக்குலமயில், அண்மை விளி. குலம் - நன்மை. சாயலாகிய மென்மைத் தன்மைக்கு மயில் உவமையாயிற்று. மடந்தை என்றது தாரையை. (23)

'சுக்கிரீவன் வலிய துணையினைப் பெற்றே
போருக்கழைக்கின்றான்' எனத் தாரை கூறுதல்

4061. கொற்றவ நின்பெருங்
குவவுத் தோள்வலிக்
கிற்றனன் முன்னை நா
ளீடுண் டேகினன்
பெற்றிலன் பெருந்திறல்
பெயர்த்தும் போர்செயற்
குற்றது நெடுந்துணை
யுடைமை யாலென்றாள்.

'கொற்றவ, நின்பெருங் குவவுத் தோள் வலிக்கு
இற்றனன், முன்னைநாள், ஈடு உண்டு ஏகினன்;

பெற்றிலன் பெருந்திறல் ; பெயர்த்தும் போர் செயற்கு
உற்றது, நெடுந்துணை உடைமையால்' என்றாள்.

பொ :—'வெற்றியையுடைய வேந்தே, (பகைவனாகிய சுக்கிரீவன்) நின்னுடைய பெரிய திரண்ட தோள்களின் வன்மைக்குத் தோற்று வலியழிந்தவனாகி வருத்தமுற்று முன்னை நாட்களில் ஓடியொளிந்தான். (அவ்வாறு தோற்றோடியவன் நின்னை எதிர்த்துப் போர் செய்தற்கேற்ற) பேராற்றலைப் (புதுவதாகப்) பெற்றானுமல்லன். (அவன்) மீண்டும் நின்னுடன் போர் புரிதற்கு வந்துற்றமை மிகப் பெரிய துணையினைத் தான் பெற்றுடையனாகிய வன்மை கருதியேயாகும்' என்று கூறினாள் (தாரை).

கு :—இந்நாட்டினை ஆளுதற்குரிய தகுதியும் ஆற்றலும் வாய்ந்த வேந்தன் நீயேயாகவும் நின்கீழ் அடங்கி வாழ்தற்குரிய நின் தம்பி நின்னை யெதிர்த்தல் முறையாகாது என்பாள், 'கொற்றவ' என அழைத்தாள். குவவு - திரட்சி. இற்றனன் - வலியழிந்தான்; தோற்றான். ஈடுண்டு - வருத்தமுற்று. ஈடு - வருத்தம். 'ஈடினாலிருந்தெண்ணி' (1762) என்பது சீவக சிந்தாமணி. நெடுந்துணை - அல்லற்காலத்தும் அகலாது நெடிது நின்றுதவும் பெருந்துணை; என்றது, ஈண்டு இராமனாகிய துணையை. (24)

வாலி, தன் பேராற்றலை எடுத்துக் கூறித் தேற்றுதல் 4062-4066

**4062.** மூன்றென முற்றிய முடிவில் பேருல
கேன்றுட னுற்றன வெனக்கு நேரெனத்
தோன்றினுந் தோற்றவை தொலையு மென்றலின்
சான்றுள வன்னவை தையல் கேட்டியால்.

'மூன்று என முற்றிய முடிவு இல் பேர் உலகு
ஏன்று உடன் உற்றன எனக்கு நேர் எனத்
தோன்றினும், தோற்று அவை தொலையும் என்றலின்
சான்று உள ; அன்னவை தையல் கேட்டியால்.'

பொ :—'தையலே, (மேல்கீழ் நடு என) மூன்று வகையாக இயற்றப்பெற்றுள்ள எல்லையற்ற பெரிய உலகங்கள் யாவும் தம்முள் இயைந்து ஒருங்கு சேர்ந்து எனக்குப் பகையாக எதிர்த்து வந்தனவாயினும் அவையனைத்தும் (எனது பெருவலிக்குத்) தோற்றழியும் என(த் துணிந்து) கூறுதற்குரிய சான்றுகள் உள்ளன. (அவற்றைக்) கேட்பாயாக.

கு :—முன்றெனமுற்றிய உலகு, முடிவு இல் பேர் உலகு எனத் தனித்தனி இயையும். முற்றுதல் - இயற்றி முடிக்கப் பெறுதல். 'வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி' (15) என்பது புறநானூறு. முடிவு - எல்லே. சான்று - சாட்சி; ஒன்றைத் துணியும் வகையில் உலகத்தில் தாம் கண்டு தெளிந்த பொருள்களைக் காணுதாரும் தெளிந்து உடன்படுதற்கு ஏற்ற ஆதாரம். 'போர் முனையில் யான் நிகழ்த்தும் பேராண்மையினை என் மனைக்கிழத்தியும் மெல்லியலாளும் ஆகிய நீ நேர் நின்று காணும் மனத் திண்மையுடையா யல்லை; அவற்றை என் வாயிலாகக் கேட்டுத் துணிவு கொள்வாயாக' என்பான் 'தையல் கேட்டியால்' என்றான். தையல் - லகர வீற்று உயர்திணைப் பெண்பாற் பெயர்; அண்மை விளியாய் நின்றது. கேட்டி - கேட்பாயாக. ஆல் - அசை. (25)

**4063.** மந்தர நெடுவரை மத்து வாசுகி
அந்தமில் கடைகயி றடைக லாழியான்
சந்திரன் றூணெதிர் தருக்கின் வாங்குந
ரிந்திரன் முதலிய வமர ரேனையோர்.

'மந்தர நெடுவரை மத்து, வாசுகி
அந்தம் இல் கடைகயிறு, அடைகல் ஆழியான்,
சந்திரன் தூண், எதிர் தருக்கின் வாங்குநர்
இந்திரன் முதலிய அமரர், ஏனையோர்.'

பொ :—மந்தரம் என்னும் பெயருடைய நீண்ட மலையே மத்தாகவும், வாசுகியென்னும் பாம்பு தேய்ந்து கெடாத கடை கயிருகவும், சக்கரப்படையினையுடைய திருமால் (ஆமை வடிவாய் மத்தினைத் தாங்கும்) அடைகல்லாகவும், சந்திரன் (மத்தினைச் சார்த்துதற் கமைந்த) தூணாகவும் அமைய, எதிரெதிரே நின்று (கடை கயிற்றின் இரு தலைப்பையும் பற்றி) வலிந்து வாங்கிக் கடைவோர் இந்திரன் முதலிய தேவர்களும் (அவர்க்கு மாறுபட்ட) ஏனைய அசுரர்களும் ஆயினர்.

கு :—இதுவும் அடுத்த செய்யுளும், தேவர்களும் அசுரர்களும் கூடிப் பாற்கடல் கடைந்த நிகழ்ச்சியை வாலி, தன் மனைவி தாரைக்குக் கூறும் நிலையில் ஒரு தொடராய் அமைந்தன. தேவரும் அசுரரும் அமுதம் பெற விரும்பி மந்தர மலையை மத்தாகவும் வாசுகி யென்னும் பாம்பினைக் கயிருகவும் கொண்டு பாற்கடலைக் கடைந்த நிலையில் மந்தரமலையாகிய மத்துக் கடலினுள்ளே யழுந்திவிட, அப் பொழுது திருமால் ஆமையுருக்கொண்டு அம்மலையின்கீழ் அடை

கல்லாக நின்று தாங்கினர் என்பது கதை. அந்தம் இல் - கெடுதல் இல்லாத. கடை கயிறு - மத்தினைப் பிணித்து இழுத்துக் கடைதற்கு அமைந்த கயிறு. அடைகல் - வலிய தொழிற் கருவியின் பாரத்தையும் தாக்கும் வேகத்தையும் தாங்கிக் கொள்ளுதற்கேற்ற வன்மையுடையதாய் அடியிற் பீடமாக அமைக்கும் கல். இது பட்டடை எனவும் வழங்கப்படும் (திருக்குறள் 821). ஆழியான் - திருமால். தருக்கு - வன்மை. வாங்குநர் - மத்திற் பிணித்த கயிற்றின் இரு தலைப்பினையும் பற்றியிழுத்துக் கடைவோர். (26)

இதன்பின் 12, 13, 17, 18, 23, 19, 40, 41, 43, 45, 49, 52, 56-ஆம் பிரதிகளிற் பின்வரும் பாடல் மிகையாகக் காணப்படுகிறது :—

4063. (a) பேர்வுற வலிக்கவு மிடுக்கில் பெற்றியர்
ஓய்வுற வுலந்தன ரதனை நோக்கியான்
ஆர்கலி தனைக்கடைந் தமுது கொண்டனன்
போர்வலி யழிந்து போய்ப் புறந்தந் தோடலேன்.

**4064.** பெயர்வுற வலிக்கவு மிடுக்கில் பெற்றியா
ரயர்வுற லுற்றதை நோக்கி யானது
தயிரெனக் கடைந்தவர்க் கமுதந் தந்தது
மயிலியற் குயின்மொழி மறக்க லாவதோ.

‘பெயர்வுற வலிக்கவும் மிடுக்கு இல் பெற்றியார்
அயர்வுறல் உற்றதை நோக்கி’ யான், அது
‘தயிர்’ எனக் கடைந்து அவர்க்கு அமுதம் தந்தது,
மயில் இயல் குயில்மொழி, மறக்கல் ஆவதோ ?’

பொ :—‘மயிலின் சாயலை யொத்த மென்மையினையும் குயிலின் குரலை யொத்த இனிய சொல்லையும் உடையவளே, (இவ்வாறு மந்தர மலையாகிய மத்து) நிலைபெயர்ந்து சுழலுமாறு வலித்து இழுக்கவும் வன்மையில்லாத எளிமை நிலையினராகிய தேவரும் அசுரரும் தளர்ந்து வருந்துதலைக் கண்டு, யானொருவனே அதனைத் தயிர் கடையுமாறு போன்று எளிதிற் கடைந்து அமரராகிய அவர்கட்கு அமிழ்தத்தை யுண்டாக்கித் தந்த பெருஞ் செயல் (உலகத்தாரால்) மறக்குந் தன்மையது ஆகுமோ ?’

கு :—பெயர்வுஉற - நிலைபெயர்தலை உறும்படி; சுழலும்படி. வலித்தல் - இழுத்தல். மிடுக்கு - வன்மை. மயிலியற் குயின்மொழி - மயிலின் இயலையும் குயிலின் மொழியையும் உடையவளே ; அன்

மொழித் தொகை விளியாய் நின்றது. மறக்கலாவதோ என்புழி ஓகாரம் எதிர்மறை; யாவராலும் மறக்க ஒண்ணுதது என்றவாறு. (27)

**4065.** ஆற்றலி னமரரு மவுணர் யாவருந்
தோற்றன ரேனையர் சொல்லற் பாலரோ
கூற்றுமென் பெயர்சொலக் குலேயும் யாரினி
மாற்றலற் காகிவந் தெதிரு மாண்பினுர்.

'ஆற்றலின் அமரரும் அவுணர் யாவரும்
தோற்றனர் ; ஏனையர் சொல்லற் பாலரோ ?
கூற்றும் என்பெயர் சொலக்குலேயும், யார், இனி
மாற்றலற்கு ஆகிவந்து, எதிரும் மாண்பினுர் ?'

பொ :—'பெருவன்மை படைத்த தேவர்களும் அசுரர்கள் அனே வரும் எனது பேராண்மைக்குத் தோற்ருர்கள். (இவ்வாருக, வானரர், மக்கள் முதலிய) ஏனேயோர் (என்னே எதிர்த்துப் பொரும் ஆற்ற லுடையார் எனச்) சொல்லுந் தன்மையர் ஆவாரோ? (ஆகார்). (யாவராலும் தடுத்து நிறுத்துதற்கு அரிய) கூற்றுவனும் ('வாலி' என) என் பெயரைப் பிறர் சொல்லக் கேட்ட அளவிலேயே நடுக்க முற்று வருந்துவான். (இங்ஙனமாகவே) இனி, பகைவனுக்குத் துணேயாகி வந்து என்னே எதிர்த்து நிற்கும் பேராண்மையுடையோர் யார் இருக்கிருர்கள் (ஒருவருமில்லே).'

கு :—'மாற்றருங் கூற்றம்' என்ப ஆகலின், கூற்றும் என்புழி உம்மை உயர்வு சிறப்பாகும். குலேதல் - உள்ளமும் உடம்பும் நடுக்க முறுதல். மாற்றலன் – பகைவன்; என்றது சுக்கிரீவனே. மாண்பு - பெருமை ; பேராண்மையாகிய வீரத்தைச் சுட்டி நின்றது. மாற்ற லற்கு ஆகி வந்து எதிரும் மாண்பினுர் இனி யார்? என இயையும். எதிர்தல் - 'நின்னெடு பொருவேன்' என்று கூறி நேரே வந்து நெருங்குதல். (28)

**4066.** பேதைய ரெதிர்குவ ரெனினும் பெற்றுடை
ஊதிய வரங்களு முரமு முள்ளதிற்
பாதியு மென்னதாற் பகைப்ப தெங்ஙன
நீதுய ரொழிகென நின்று கூறினுன்.

'பேதையர் எதிர்குவர் எனினும் பெற்றுடை
ஊதிய வரங்களும், உரமும், உள்ளதில்
பாதியும் என்னதால்; பகைப்பது எங்ஙனம்?
நீ துயர் ஒழிக' என, நின்று கூறினன்.

பொ:—'(எனது பேராண்மையினையுணரும்) அறிவிலாதார் தம் பேதைமை காரணமாக (என்னொடு பொருதற்கு) எதிரேற்று வருவாராயினும் (அன்னோர் முன்னைத் தவத்தாற்) பெற்றுடைய பெருஞ் செல்வமும் (தெய்வத்திறமாகிய) வரங்களும் உள்ளத்திண்மையும் ஆகிய வன்மையிற் சரிபாதியும் (அன்னோரை விட்டு நீங்கி) என்னுடையதாகவே வந்து சேர்ந்து விடும். ஆதலால் (அன்னோர் என்னுடன்) பகைமை கொண்டு பொருதல் எவ்வாறு? (எனக்குப் பகைவரால் தீங்கு நேரும் என்று அஞ்சி) நீ வருந்துதல் ஒழிக' என(த் தன் வேகத்தைத் தவிர்ந்து சிறிது பொழுது தாமதித்து) நின்று (தாரைக்கு) ஆறுதல் மொழி பகர்ந்தான்.

கு:—ஊதியம் - தன் தொழில் முயற்சியால் உளவாகும் நற்பேறுகள். வரம் - தெய்வத்தின் அருளால் அளிக்கப் பெறும் பெரு நலங்கள். உரம் - தனக்கு இயல்பாக அமைந்த உடல் உரமும் உள்ளத்து உரமும். 'யான் பெற்றுடைய ஊதியம், வரம், உரம் என்பவற்றுடன் என்னை எதிர்த்தார்க்குரிய ஊதியம் வரம் உரம் என்பவற்றிற் பாதியும் சேர்ந்து எனக்கே யுரியவாய் விடும் ஆதலால், என்னை எதிர்த்து நிற்றலால் தம்முடைய ஊதியம் வரம் உரம் என்பவற்றிற் பாதியை யிழக்கத் துணிவார் ஒருவரும் உளராகார்' என வாலி தன் மனைவிக்குத் தேறுதல் மொழி பகர்ந்தான். பகைவன்மேல் விரைந்து செல்லும் வாலி, தாரையினைத் தெளிவித்தற் பொருட்டுச் சிறிது பொழுது தாமதித்து நின்று இவ்வாறு ஆறுதல் மொழி பகர்ந்தான் என்பார், 'நீ துயரொழிகென நின்று கூறினன்' என்றார். (29)

'சுக்கிரீவனுக்குத் துணையாக இராமன் என்பவன் நின்னைக் கொல்லுதற் பொருட்டு வந்துளான்' எனத் தாரை கூறுதல்

4067. அன்னது கேட்டவ ளரச வாயவற்
கின்னுயிர் நட்பமைந் திராம னென்பவன்
உன்னுயிர் கோடலுக் குடன்வந் தானெனத்
துன்னிய வன்பினர் சொல்லி னரென்றாள்.

அன்னது கேட்டவள், 'அரச, "ஆயவற்கு
இன் உயிர் நட்பு அமைந்து இராமன் என்பவன்

உன் உயிர் கோடலுக்கு உடன் வந்தான்" எனத்
துன்னிய அன்பினர் சொல்லினுர்' என்ருள்.

பொ :—அம்மொழியைக் கேட்டவளாகிய தாரை 'அரசே, இராமன் என்பான் அச்சுக்கிரீவனுக்கு இனிய உயிர் நண்பன் எனப் பொருந்தி உனது உயிரைக் கொள்ளுதற்கு அவனுடன் வந்துள்ளான் என்று (நம்பால்) நெருங்கிய அன்புடையார் சிலர் சொன்ஞர்கள்' எனக் கூறினுள்.

கு :—அன்னது - 'நீ துயரொழிக' என வாலி கூறிய வார்த்தை. கேட்டவள், தாரை. அரச ஆயவற்கு எனப் பிரித்துரைக்க. ஆயவன் - அச்சுக்கிரீவன். இனி அரசு அவாயவன் எனப் பிரித்து, 'நினது அரச பதவியை விரும்பிய சுக்கிரீவன்' எனப் பொருள் கூறற்கும் இடமுண்டு. தன்னை எதிர்த்துப் போர்புரிய வல்லார் ஒருவருமிலர் என்று கூறிச் சுக்கிரீவன்மேற் செல்லும் வாலியை நோக்கி, 'நின்னைப் போருக்கு அழைத்த மாற்ருன் வலியிலனுயினும் அவனுக்குத் துணையாய் வந்த துணைவனது வலியை எண்ணித் துணிந்தபின் போருக்குப் புறப்படுதல் நன்று' எனக் குறிப்பாற் புலப்படுத்தும் முறையில் தாரை இவ்வாறு கூறினுள். துன்னிய அன்பினர் - செல்வக் காலத்தினும் அல்லற் காலத்து அகலாது நெருங்கி நின்றுதவும் பேரன்புடையார். இத்தகைய அன்பினரை 'விருப்பருச் சுற்றம்' (திருக்குறள் - 522) 'நல்லுற்ருர்' (திவ்ய - 3095) எனவும் கூறுவர் பெரியோர். கேட்டவள் என்ருள் என முடியும். (30)

### வாலி, இராமனுடைய நற்பண்புகளை யெடுத்துரைத்துத் தாரையின் கூற்றினை மறுத்தல் 4068-4073

4068. உழைத்தவல் லிருவினைக் கூறு காண்கிலா
தழைத்தய ருலகினுக் கறத்தி ஞறெலா
மிழைத்தவற் கியல்பல வியம்பி யென்செய்தாய்
பிழைத்தனை பாவியுன் பெண்மை யாலென்ருன்!

'உழைத்த வல் இருவினைக்கு ஊறு காண்கிலாது
அழைத்து அயர் உலகினுக்கு அறத்தின் ஆறு எலாம்
இழைத்தவற்கு, இயல்பு அல இயம்பி என் செய்தாய்?
பிழைத்தனை, பாவி! உன் பெண்மையால்' என்ருன்.

பொ :—'(தாமே) வருந்திச் செய்த வலிய இருவினைகளுக்கு அழிவினைச் செய்யும் உபாயத்தினைக் காணும் ஆற்றல் பெருது கதறித்

தளர்ந்து வருந்தும் உலகவுயிர்கள் (உய்தற்) பொருட்டு அறத்தின் நெறி முறைகளை யெல்லாம் (தனது ஒழுகலாற்றினுல்) வகுத்துக் கொடுத்தவனுகிய இராமனுக்குத் தகுதியல்லாதனவாகிய மொழி களைக் கூறி எத்தகைய பெருந் தீங்கினைச் செய்து விட்டாய். தீவினை யாட்டியே, நின் பெண்தன்மைக்கேற்ற பேதைமையால் பெரும் பிழையைச் செய்து விட்டாய்காண் என (வாலி தாரையை நோக்கி)க் கூறினுன்.

கு :—உழைத்தல் - வருந்தி முயலுதல். வல் இருவினை - அநு பவித்தாலன்றிப் போக்க வொண்ணுத வன்மையையுடைய நல்வினை தீவினைகள். ஊறு - அழிவு; என்றது அழிவினைச் செய்யும் உபாயங் களை. காண்கிலாது – காணும் ஆற்றல் பெருது. கில், ஆற்றலுணர்த் தும் இடைநிலை. அழைத்தல் - கூவிக் கதறுதல். ‘பிறைசேர் சடை யாய் முறையோ வென்று, அழைத்தால் அருளாதொழிவதே’ (குழைத்த பத்து - 1) என்பது திருவாசகம். அயர்தல் - தளர்தல். உலகு என்றது, உலகில் வாழும் உயிர்த் தொகுதியை. இழைத்தல் - இயற்றுதல்; பிறரும் கடைப் பிடித்தொழுகுமாறு ஒழுகிக் காட்டுதல். அறத்தின் ஆறெலாம் இழைத்தவன் என்றது, அறந்தலை நிறுத்த வந்த இராமனை. இயல்பு அல – அப்பெரியோனது தகுதிக்கு ஏலாத சொற்கள்; என்றது, ‘இராமன் என்பவன் சுக்கிரீவனுக்கு இன்னு யிர் நட்பமைந்து உன்னுயிர் கோடலுக்கு உடன் வந்தான்’ எனத் தன்கண் தாரை கூறிய சொற்களை. ‘நூலொடு பழகிய நுண்ணறி வுடையையாயிருந்தும் இங்ஙனம் இராமனைக் குறித்துத் தகாத சொற்களைச் சொல்லியதற்கு நீ செய்துள்ள முன்னைத் தீவினையும் பெண்ணறிவாகிய நின் பேதைமையுமே காரணமாயின என்பான், ‘பிழைத்தனை பாவி உன்பெண்மையால்’ என்ருன். (31)

4069. இருமையு நோக்குறு மியல்பி னுற்கிது
பெருமையோ விங்கிதிற் பெறுவ தென்கொலோ
வருமையி னின்றுயி ரளிக்கு மாறுடைத்
தருமமே தவிர்க்குமோ தன்னைத் தானரோ.

‘இருமையும் நோக்குறும் இயல்பினுற்கு இது
பெருமையோ? இங்கு இதிற் பெறுவது என்கொலோ?
அருமையின் நின்று உயிர் அளிக்கும் ஆறுடைத்
தருமமே தவிர்க்குமோ தன்னைத் தான் அரோ?’

பொ :—‘(இராமன் சுக்கிரீவனுக்குத் துணையாய் என்னுயிரைக் கவர வந்துள்ளான் என்னும்) இத்தன்மை, இம்மை மறுமை என்னும்

இருநிலையிலும் (உயிர்கள் எய்தும் துன்ப இன்பக் கூறுபாடுகளாகிய) இருதிறப் பயன்களையும் கருதி நோக்கும் இயல்புடைய அறவோனாகிய இராமனுக்குப் பெருமையைத் தரவல்லதாகுமோ? இப்பழியுடைய செயலால் அவன் இங்குப் பெறுதற்குரிய ஊதியந்தான் யாதோ? (தன் உள்ளக் கருத்தினைத் தீயோர் அறியவொண்ணாத) அருமை நிலையில் நின்று உயிர்களெல்லாவற்றையும் ஒப்பக் காக்கும் நெறியுடைய அறக் கடவுள் (இவ்வாறு) தன்னைத்தானே அழித்துக் கொள்ளும் இயல்புடையதாகுமோ?'

கு :—இருமை - இம்மை மறுமையென்னும் இரண்டின் தன்மை. இம்மை - இப்பிறப்பு. மறுமை - (இப்பிறப்பிற் செய்த நலந் தீங்குகட்கேற்ப) இனி வரும் பிறப்பு. இவற்றின் தன்மையாவன, இப்பிறப்புக்களில் நுகரும் இன்ப துன்பங்களுக்கு ஏதுவாக உயிர்கள் செய்யும் நலந் தீங்குகள். நோக்குதல் - மனத்தாற் கருதியுணர்தல். இருமையும் நோக்குறும் இயல்பாவது, உயிர்கள் தாம் செய்யும் நலந் தீங்குகளால் உளவாம் வினைப்பயனாகிய ஊழின் திறமுணர்ந்து அவாவென்னுந் துன்பத்துள் துன்பத்தினை நீங்கி இடையறாத பேரின்பத்தினை எய்துதற்கு ஏற்ற நல்லறங்களில் வழுவாது ஒழுகுதல். இது - இராமன் சுக்கிரீவனுக்குத் துணையாய் வாலியின் உயிர் கொள்ள வருதலாகிய இப்பழியுடைய செயல். பெருமையோ - பெருமையைத் தருவதாகுமோ? பழியையே தரும் என்பது குறிப்பு. 'இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார் பெருமை' (திருக்குறள் - 23) என வரும் தொடர் இங்கு ஒப்புநோக்கத்தக்கதாகும். இதிற் பெறுவது என்கொலோ - பழியுடையதாகிய இச்செயலால் (இராமன்) பெற விரும்பிய ஊதியம் யாதோ? (ஒன்றுமில்லை என்பதாம்). இதிற் பெறுவது என்புழி இன்னுருபு ஏதுப் பொருளில் வந்தது. அருமை - (உள்ளக் கருத்தறிதற்கு) அரிதாந் தன்மை. தன் உள்ளக் கருத்தினைத் தீயோர் முன்னரே அறிந்து தப்பி விலகாதபடி அரிய சூழ்ச்சியுடையதாய் நின்று நல்லோரைக் காக்கும் மாண்பு அறக்கடவுட்கு உண்டென்பதனை 'மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின், அறஞ் சூழும் சூழ்ந்தவன் கேடு' (204) என வரும் திருக்குறளால் உணரலாம். தருமம் - அறக்கடவுள். தருமமே என்புழி ஏகாரம் சிறப்புணர்த்தி நின்றது. 'தருமமே தன்னைத்தான் தவிர்க்குமோ' என இயையும். ஓகாரங்கள் எதிர்மறைப் பொருளில் வந்தன. அரோ - அசை. 'இருமை' என்பதற்குப் புண்ணிய பாவம் என்னும் இரண்டின் தன்மை எனப் பொருள் கொள்ளுதலும் உண்டு. (32)

**4070.** ஏற்றபே ருலகெலா மெய்தி யீன்றவள்
மாற்றவ ளேவமற் றவடன் மைந்தனுக்

காற்றரு முவகையா லளித்த வையனைப்
போற்றலை யின்னன புகறற் பாலையோ.

'ஏற்ற பேர் உலகு எலாம் எய்தி, ஈன்றவள்
மாற்றவள் ஏவ, மற்று, அவள்தன் மைந்தனுக்கு
ஆற்றஅரும் உவகையால் அளித்த ஐயனைப்
போற்றலை; இன்னன புகல்தற் பாலையோ ?'

பொ :—'(திருமால்) இரந்து பெற்ற பெரிய உலகம் முழுவதையும் (தன் தந்தையாகிய தசரதன் உவந்து கொடுக்க) எளிதிற் பெற்றுத் தன்னை ஈன்ற தாய்க்கு மாறான மாற்றாந்தாய் ஏவினமையால் அவளுடைய புதல்வனுக்குத் தாங்குதற்கரிய பெருமகிழ்ச்சியுடனே கொடுத்தருளிய பெரியோனாகிய இராமனைப் புகழ்ந்து போற்றாத வளாய் (அவனுக்குப் பழி விளைக்கும்) இத்தகைய மொழிகளைக் கூறும் தன்மையினை உடையை ஆவாயோ ?'

கு :—காத்தற் கடவுளாகிய திருமால் வாமனனாகி மாவலி என்னும் மன்னன்பாற் சென்று இரந்து பெற்ற அருமையுடைய தாகிய இவ்வுலக முழுவதையும், மடியிலா மன்னவனாகிய தசரதனே மனமுவந்து கொடுக்க இராமன் எளிதிற் பெற்றான் என்னும் பொருள் தோன்ற, 'ஏற்ற பேருலகெலாம் எய்தி' என்றான். ஏற்றல் - இரத்தல். எய்துதல் - எத்தகைய முயற்சியுமின்றித் தானே எளிதின் அடையப் பெறுதல். ஏற்ற பேருலகெலாம் என்றது 'அடியளந்தான் தாஅயதெல்லாம்' என்னும் குறிப்புணர நின்றது.

'மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
தாஅய தெல்லாம் ஒருங்கு'. (610)

என வரும் திருக்குறள் இங்கு நினைக்கத் தக்கதாகும். ஈன்றவள் - கோசலை. மாற்றவள் - கைகேயி. அவள்தன் மைந்தன் - பரதன். மாற்றவள் ஏவினமை,

'ஆழி சூழுலக மெல்லாம் பரதனே ஆள, நீ போய்த்
தாழிருஞ் சடைகள் தாங்கித் தாங்கருந் தவமேற்கொண்டு
பூழிவெங் கானம் நண்ணிப் புண்ணியத்துறைகளாடி
ஏழிரண்டாண்டின்வா'

எனப் பணித்தமை. தனக்கே யுரியதாகத் தன் தந்தை மிகிழ்ந்தளித்த பேருலக முழுவதையும் தனக்கென்று ஒன்றும் வைத்துக்கொள்ளாது கைகேயி சொற்படி அவளுடைய மகன் பரதனுக்கே மகிழ்ந்தளித்த நிறைவுடைய திருமனத்தான் என்பான், 'மாற்றவள் ஏவ மற்றவள் தன் மைந்தனுக்கு ஆற்றரும் உவகையால் அளித்த ஐயன்' என்றான்.

'குவலய துங்கக் கரியும் பரியும் இராச்சியமும் எங்கும் பரதற்கருளி' (பாசுரப்படி ராமாயணம்) என்பதும் இங்கு நோக்கத்தக்கது. ஆற்ற அரும் உவகை - உள்ளத்தால் தாங்குதற்கரிய பெருமகிழ்ச்சி. ஐயன் - வியக்கத்தக்க பெரியோன். ஐ - வியப்பு. இங்ஙனம் அருமையுடைய பேருலக ஆட்சி முழுவதும் எளிதிற் கிடைக்கப்பெற்றும் தாய் சொற் போற்றுதல் என்னும் கடமையினைத் தலைமேற்கொண்டு தான் பெற்ற பேரரசில் தனக்கென்று எதனையும் வைத்துக் கொள்ளாமல் தன் தம்பி பரதனுக்கே உவந்தளித்துவிட்டுத் தவமேற் கொண்டு வனம் புக்க பெரியோனாகிய இராமனைப் புகழ்ந்து போற்றுதல் முறையாகவும் அதனைச் செய்யாது அதற்கு மாறாக அவனுக்கு இகழ்ச்சி தருவனவாகிய இத்தகைய பழிமொழிகளையும் கூறத் துணிந்தனையே எனத் தன் மனைவியின் செயலுக்கு இரங்கி வருந்துவான், 'ஆற்றரும் உவகையால் அளித்த ஐயனைப், போற்றலை இன்னன புகறற்பாலையோ' என்றான்.

'ஏற்ற பேருலகெலாம் எய்தி' என்புழி ஏற்றல், எய்துதல் என்பன, தொழில் வேற்றுமை என்னும் அணிநலம் பொருந்த நிற்றல் உணர்ந்து மகிழத்தக்கதாகும்.

> 'புனனாடர் கோமானும் பூந்துழாய் மாலும்
> வினைவகையான் வேறு படுவர்—புனனாடன்
> ஏற்றெறிந்து மாற்றலர்பால் எய்தியபார் மாயவன்
> ஏற்றிரந்து கொண்டமையி னால்'

எனவரும் தண்டியலங்கார மேற்கோள் வெண்பா இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

இனி, 'ஏற்ற பேருலகெலாம்' என்ற தொடர்க்கு, 'தன் தந்தை மேற்கொண்டு அரசு புரிந்த பெரிய உலகம் முழுவதையும்' எனப் பொருளுரைத்தலும் உண்டு. (33)

**4071.** நின்றபே ருலகெலா நெருக்கி நேரினும்
வென்றிவெஞ் சிலையலாற் பிறிது வேண்டுமோ
தன்றுணை யொருவருந் தன்னில் வேறிலான்
புன்றொழிற் குரங்கொடு புணரு நட்பனே.

> ' நின்ற பேர் உலகு எலாம் நெருக்கி நேரினும்,
> வென்றி வெஞ்சிலையலால், பிறிது வேண்டுமோ ?
> தன்துணை ஒருவரும் தன்னில் வேறு இலான்
> புன்தொழில் குரங்கொடு புணரும் நட்பனே ?'

பொ :—'தனக்கு ஒப்பாகத் தன்னையன்றி வேருெருவரையும் பெருத இராமன், நிலைபெற்றுள்ள பெரிய உலகங்கள் யாவும் ஒன்று கூடி முற்பட்டு எதிர்த்தாலும் (தன் கையிலுள்ள) வெற்றியை விளைக்கும் வில்லையன்றிப் பிறிதொன்றை (த் துணையாக) வேண்டுவானே? (தன்னெப்பாரில்லாத அத்தலைவன்) புன்மையான செய்கையினையுடைய குரங்கினெடு பொருந்தும் நட்பினையுடையன் ஆவானே?'

கு :—தன் துணை (ஆகத்) தன்னில் வேறு ஒருவரும் இலான் என இயைத்துரைக்க; தனக்குவமையில்லாதான் என்பதாம். வேண்டுதல் - ஒன்றை நாடிப் பெற விரும்புதல். இனி, 'தன் துணையொருவரும் தன்னில் வேறிலான்' என்பதற்குத் 'தனது வெற்றிக்குத் துணையாகத் தன்னையன்றி வேருெருவரையும் வேண்டாத பெருவீரன்' எனப் பொருளுரைத்தலும் பொருந்தும். 'கூட்டொருவரையும் வேண்டாக் கொற்றவ' (கம்பர்-கிட்கிந்தை-வாலிவதைப்-81) எனப் பின்னரும் கூறுதல் காணலாம். தன் துணை ஒருவரும் தன்னில் வேறிலான், வெஞ்சிலையலாற் பிறிது வேண்டுமோ? குரங்கொடு புணரும் நட்பனே? என இயையும். ஓகாரம் இரண்டும் எதிர்மறை. (34)

4072. தம்பிய ரல்லது தனக்கு வேறுயி
ரிம்பரி னிலதென வெண்ணி யேய்ந்தவ
னெம்பியும் யானுமுற் றெதிர்ந்த போரினி
லம்பிடை தொடுக்குமோ வருளி னுழியான்.

'தம்பியர் அல்லது தனக்கு வேறு உயிர்
இம்பரின் இலது' என எண்ணி ஏய்ந்தவன்
எம்பியும் யானும் உற்று எதிர்ந்த போரினில்
அம்பு இடைதொடுக்குமோ, அருளின் ஆழியான்?'

பொ :—'தன் தம்பியரையன்றி இவ்வுலகில் தனக்கென்று வேருேர் உயிரில்லையென்று நினைந்து (அவர்களோடு வேற்றுமையின்றி அன்பினுல்) ஒன்றி நடப்பவனும் (எல்லாவுயிர்கள் மேலும் செல்வதாகிய) கருணைக்கு நிலைக்களமாகிய கடல் போன்றவனும் ஆகிய இராமன், என் தம்பியாகிய சுக்கிரீவனும் யானும் (சினத்துடன்) எதிர் நின்று பொரும் போரின் கண்ணே தான் இடையே வந்து என்மேல் அம்பினைத் தொடுத்து எய்வானே? (எய்ய மாட்டான்).'

கு :—தம்பியரையன்றித் தனக்கென வேருேர் உயிரில்லை என்னும்படி அவர்களுடன் அன்பினுல் ஒன்றி வாழுமியல்புடையான் இராமன் என்பது, 'என் பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்றதன்ருே ?' (கம்பர் கைகேசி சூழ்வினை-110) எனப் பரதனைக் குறித்தும், 'தள்ளாவினையேன் தனி ஆருயிராய் உள்ளாய்' (அயோமுகி-68)என இலக்குவனைக் குறித்தும் இராமன் கூறிய மொழிகளால் இனிதுணரப்படும். இம்பர் - இவ்வுலகு. ஏய்தல் - அன்பினுல் ஒன்றி வாழ்தல். எம்பி - என் தம்பி; என்றது சுக்கிரீவனை. உடன் பிறந்தாரையே தன்னுயிரெனக் கருதும் பேரன்பினனுகிய இராமன் என் தம்பியும் யானும் பகைமை கொண்டு எதிர்க்கும் இப்போரில், உடன் பிறந்தாராகிய எம்மிடையேயுண்டாகிய இகல் என்னும் நோய் நீங்க எம்மிருவர்க்கும் நடுநிலையில் நின்று செவியுறையாகிய நன் மருந்தினை வழங்கி எம் இருவரையும் அன்பினுல் ஒன்றுபடுத்தும் நற்பணியைச் செய்வானேயன்றித் தனக்குரிய இறைமைத் தன்மையாகிய நடுவு நிலையிற் றிறம்பி என் தம்பியின்பக்கஞ் சார்ந்து என் மேல் அம்பினை எய்யும் தொழிலில் ஈடுபடமாட்டான் என்பான்,

'எம்பியும் யானும் உற்றெதிர்ந்த போரினில்
அம்பிடை தொடுக்குமோ அருளின் ஆழியான்'

என்ருன். அருளின் ஆழி - அருட்கடல். (35)

4073. இருத்திநீ யிறையிவ ணிமைப்பில் காலையி
லுருத்தவ னுயிர்குடித் துடன்வந் தாரையுங்
கருத்தழித் தெய்துவென் கலங்க லென்றனன்
விரைக்குழல் பின்னுரை விளம்ப வஞ்சினுள்.

'இருத்தி, நீ, இறை, இவண்; இமைப்பு இல் காலையில்
உருத்தவன் உயிர்குடித்து, உடன் வந்தாரையும்
கருத்து அழித்து எய்துவென்; கலங்கல்' என்றனன்;
விரைக்குழல், பின், உரைவிளம்ப அஞ்சினுள்.

பொ :—'நீ சிறிது பொழுது இங்கே இருப்பாயாக. கண்ணிமை பொருந்துதல் இல்லாத சிறிது நேரத்திற்குள், வெகுண்டு போருக்கு வந்தவனுகிய சுக்கிரீவனது உயிரைப் பருகி, அவனுக்குத் துணையாய் உடன் வந்தவர்களையும் கருத்தழியச் செய்து மீண்டு வந்து விடுவேன். (போரில் எனக்கு என்ன தீங்கு விளையுமோ என்று) உள்ளம் கலங்காதே' எனத் தேறுதல் கூறினுன் (வாலி). (அதனைக் கேட்டு) மணமுடைய கூந்தலையுடையாளாகிய தாரை பின்னும் தான்

சொல்லக் கருதியவற்றைச் சொல்லுதற்கு அஞ்சி (எதுவும் கூருத வளாயி)னுள்.

கு:—இறை - சிறிது; சிறிது நேரம் என்ற பொருளில் வந்தது. இமைப்பு இல் காலேயில் - கண்ணிடத்தே இயல்பாய் நிகழும் இமைத் தற்ெழில் நிகழ்தல் இல்லாத அத்துணே குறுகிய நேரத்திற்குள். உருத்தவன் - சினந்தெழுந்தவன்; என்றது சுக்கிரீவனே. யாரும் எதிர் நின்று இடை மறித்து விலக்கவொண்ணுத நிலேயில் வாலி தன் கண்களிலும் உடலிலும் தீப்பொறி பறக்கப் பகைவன்மேற் சினந் தெழுந்தானுக அவனே இடைநின்று விலக்கும் தாரை 'வாயிடைப் புகை வர வாலி கண்வரும், தீயிடைத் தன்னெடுங் கூந்தல் தீகின்ருள்' என முன்னர்க் கூறினுராகலின், வாலி கண்வரும் தீயால் வெதும்பிய அவள், அவனது சின மிகுதியுணர்ந்து மேலும் தான் கூற எண்ணியவற்றைக் கூருது அஞ்சி விலகினுள் என்பார், 'விரைக்குழல் பின் உரை விளம்ப அஞ்சினுள்' என்ருர் ஆசிரியர். விரைக்குழல் - மணம் பொருந்திய கூந்தலேயுடையாள். (36)

## போர் வேட்டெழுந்த வாலி ஒரு குன்றின் புறத்தே வந்து தோன்றுதல்

**4074.** ஒல்லேச் செருவேட் டுயர்வெல்புய
★ வோங்க லும்ப
ரெல்லேக்கு மப்பா லிவர்கின்ற
விரண்டி னுேடு
மல்லற் கிரியின் றலேவந்தனன்
வாலி கீழ்பால்
தொல்லேக் கிரியின் றலேதோற்றிய
ஞாயி றென்ன.

ஒல்லேச் செரு வேட்டு உயர்வெல்புய ஓங்கல் உம்பர்
எல்லேக்கும் அப்பால் இவர்கின்ற இரண்டினுேடும்
மல்லல் கிரியின் தலே வந்தனன் வாலி, கீழ்பால்
தொல்லேக் கிரியின் தலே தோற்றிய ஞாயிறு என்ன.

பொ:—வாலியானவன் விரைந்து போர் செய்தலே விரும்பி வானுலக எல்லேக்கும் அப்பாற் கிளர்ந்து ஓங்கிய (பகைவரை) வெல்லும் தோளாகிய மலேகள் இரண்டினுேடும், கீழ்த்திசையிலுள்ள பழைமை வாய்ந்த உதய மலேயிலே தோன்றிய சூரியனே ஒத்து வளம் மிக்க மலேயின்மேல் வந்து தோன்றினுன்.

கு:—வாலி, ஒல்லைச் செருவேட்டு உயர்வெல்புய ஓங்கல் இரண்டினேடும் மல்லற்கிரியின்தலை வந்தனன் எனவும், கீழ்பால் தொல்லைக் கிரியின்தலை தோற்றிய ஞாயிறு என்ன மல்லற்கிரியின்தலை வந்தனன் எனவும் இயைத்துரைக்க. ஒல்லை – விரைவு. செரு - போர். வேட்டல் - விரும்புதல். வீரரிற் சிறந்தார்க்குப் போரென்ற அளவிலேயே தோள்கள் கிளர்ந்து பூரித்தல் இயல்பாதலின் ‘செரு வேட்டு உயர்வெல்புய ஓங்கல்’ என்ருர். உயர்தல் - போரைப் பெற்றேம் என்ற மகிழ்ச்சியாற் பூரித்துக் கிளர்தல். புய ஓங்கல் – தோளாகிய மலை; உருவகம். இவர்தல் - மேல் எழுதல். மல்லல் – வளம். கிரியின்தலை - மலையின்கண். தலை - ஏழாம் வேற்றுமையிடப் பொருளில் வந்தது. நாளும் வந்து பழகிய பழைமையுடைய மலையாதலின் ‘தொல்லைக்கிரி’ என்ருர். தொல்லை - பழைமை. (37)

வாலியின் வீரத் தோற்றம்

**4075.** நின்ரு னெதிர்யா வருநெஞ்சு
நடுங்கி யஞ்சத்
தன்ருேள் வலியாற் றனிமால்வரை
சாலும் வாலி
குன்றூ டுவந்துற் றனன்கோளவு
ணன்கு றித்த
வன்றூ ணிடைத்தோன் றியமாநர
சிங்க மென்ன.

நின்ருன், எதிர் யாவரும் நெஞ்சு நடுங்கி அஞ்சத்
தன் தோள்வலியால் தனிமால்வரை சாலும் வாலி,
குன்றூடு வந்து உற்றனன்; கோள் அவுணன் குறித்த
வன் தூணிடைத் தோன்றிய மா நரசிங்கம் என்ன.

பொ:—தனது தோள்வன்மையினுல் ஒப்பற்ற பெரிய மலையினையொத்த வாலியானவன், கொடுமையுடைய இரணியன் குறித்துக் காட்டிய வலிய தூணிடத்தே வெளிப்பட்டுத் தோன்றிய பெருமை வாய்ந்த நரசிங்கத்தையொத்து (கிட்கிந்தை) மலையின் வழியே வந்து தோன்றியவனய், (கண்டார்) யாவரும் அஞ்சி நடுங்கும்படி (சுக்கிரீவனுக்கு) எதிரே வந்து நின்ருன்.

கு:—தனிமால்வரை சாலும் வாலி, கோளவுணன் குறித்த வன் தூணிடைத் தோன்றிய மா நரசிங்கம் என்னக் குன்றூடு வந்து உற்றனன், யாவரும் நெஞ்சு நடுங்கி அஞ்ச எதிர் நின்ருன் என

இயையும். சாலுதல் - பொருந்துதல், ஒத்தல். அஞ்சி நெஞ்சு நடுங்க என மாற்றுக. குன்றாடு - மலை வழியாக. மலை முழையின் வாய்தலில் அறைகூவியழைத்த சுக்கிரீவனுக்கு எதிரே உருத்தெதிர் வந்து நின்ற வாலியின் தோற்றம், இரணியன் சுட்டிக்காட்டிய தூணிலிருந்து அவன் துணுக்குற்றஞ்சும்படி வெளிப்பட்ட நரசிங்கத்தின் தோற்றத்தை ஒத்திருந்தது என்பதாம். வன்தூண் - கருவி கொண்டு பிளத்தற்கரிய திண்ணிய தூண். மா - பெருமை. நரசிங்கம் - மனிதவுடலும் சிங்கத்தின் முகமும் விரல் நகங்களும் அமைந்த வடிவம்; இரணியன் என்னும் அசுரனைக் கொன்று அவன் மகன் பிரகலாதனுக்கு அருள் செய்தற் பொருட்டுத் திருமால் மேற்கொண்ட திருவுருவம். (38)

### வாலி, சுக்கிரீவனை எதிர்ப்பட்டு ஆரவாரித்தல்

4076. ஆர்க்கின்ற பின்னோன் றனைநோக்கினன்
றானு மார்த்தான்
வேர்க்கின்ற வானத் துருமேறு
வெறித்து வீழ்ந்த
போர்க்கின்ற தெல்லா வுலகும்பொதிர்
வுற்ற பூசல்
கார்க்குன்ற மன்ன னிலந்தாவிய
காலி தென்ன.

ஆர்க்கின்ற பின்னோன்தனை நோக்கினன்; தானும் ஆர்த்தான்;
வேர்க்கின்ற வானத்து உரும் ஏறு வெறித்து வீழ்ந்த;
போர்க்கின்றது எல்லா உலகும், பொதிர்வுற்ற பூசல்
கார்க்குன்றம் அன்னான் நிலம் தாவிய கால் இது என்ன.

பொ :—போர் முழக்கஞ் செய்கின்ற தம்பியாகிய சுக்கிரீவனைச் சினந்து நோக்கினான்; தானும் (அவனைப் போன்று) போராரவாரஞ் செய்தான்; (அவ்வார்ப்பொலியால்) வியர்த்து நடுங்கிய மேகத்தினின்றும் பேரிடிகள் வெறிப்புற்று வீழ்ந்தன. மேகந்தவழும் நெடிய மலையை யொத்தவனாகிய திருமால் உலகினைத் தாவி அளந்த பொழுது (அவனது) எடுத்த பாதம் இது என்று சொல்லும்படி புடை பரந்து நிமிர்ந்த போர்ப் பூசலானது, எல்லாவுலகங்களும் தனக்குள் அகப்படச் சூழ்ந்து போர்த்துக் கொண்டது.

கு :—பின்னோன் - தம்பி. என்றது சுக்கிரீவனை. தான் என்றது அவனுடைய தமையனாகிய வாலியை. பொதிர்வுற்ற பூசல், கார்க்

குன்றம் அன்னான் நிலம் தாவிய கால் இது என்ன எல்லாவுலகும் போர்க்கின்றது என முடிக்க. வேர்த்தல் - வியர்த்தல்; அச்சம்பற்றிய மெய்ப்பாடு. வானம் - மேகம். உரும் - இடி. உரும் ஏறு - பேரிடி. வெறித்து வீழ்தல் - திகைத்து விழுதல். பொதிர்வுறுதல் - வீங்குதல்; புடை பரந்து நிமிர்தல். 'புனைதார் பொர நொந்து பொதிர்ந்த' (சீவக - 1380) என்ற தொடர்க்கு 'வகுத்த தூசிப் படை பொருதலின் நொந்து புடைக் கொண்டன' என நச்சினார்க்கினியர் கூறிய விளக்கம் இங்கு நோக்கத் தக்கது. சூல்கொண்ட மேகத்தை யொத்துக் கரிய நிறமும் மலையினை யொத்துயர்ந்த நெடிய வடிவமும் உடைமைபற்றித் திருமாலைக் 'கார்க்குன்றமன்னான்' எனக் குறித்தார். 'மாயோனன்ன மால்வரை' (நற்றிணை - 32) என்றார் கபிலரும். நிலந்தாவிய கால் - மாவலிபால் வாமனனாகி வந்து மூவடிமண் இரந்து வேண்டிய திருமால் தனக்கு வேண்டிய நிலத்தை யளத்தற் பொருட்டுப் பேருருக்கொண்டு உயரத் தூக்கிய திருவடி. திருமால் நிலமளந்த காலத்து அவரது தாவிய சேவடி எல்லாவுலகங்களிலும் பரவிச் சென்று அவற்றின் மேற்பட்டு விளங்கினாற் போன்று, வாலியின் போர்ப் பூசலும் எல்லாவுலகங்களிலும் பரவிச் சென்று அவற்றின் மேலும் நிமிர்ந்து ஒலித்தது என்றவாறு. 'ஆர்த்த ஓசை ஈசனுண்ட அண்டமுற்றும் உண்டதே' (வாலிவதை - 2) என்பது இங்கு ஒப்புநோக்கத் தக்கதாகும். (39)

## வாலி சுக்கிரீவரது போர்த் தோற்றத்தைக் கண்டு வியந்த இராமன், அதனை இலக்குவனுக்குக் காட்டிக் கூறுதல்

**4077.** அவ்வேலை யிராமனு மன்புடைத்
  தம்பிக் கைய
செவ்வேசெல நோக்குதி தானவர்
  தேவர் நிற்க
வெவ்வேலை யெம்மேக மெக்காலொடெக்
  கால வெந்தீ
வெவ்வே றுலகத் திவன்மேனியை
  மானு மென்றான்.

அவ்வேலை, இராமனும், அன்புடைத் தம்பிக்கு 'ஐய,
செவ்வே செலநோக்குதி; தானவர் தேவர் நிற்க,
எவ்வேலை, எம்மேகம், எக்காலொடு எக்கால வெந்தீ
வெவ்வேறு உலகத்து இவன் மேனியை மானும்?' என்றான்.

பொ :—(வாலியும் சுக்கிரீவனும் ஆர்த்துப் பொருதற்கு முற்படும்) அப்பொழுது (அதனை அயல் நின்று கண்ட) இராமன், அன்புடைய தம்பியாகிய இலக்குவனை நோக்கி, 'ஐயனே, (இவ்விருவரையும்) நன்ருகக் கூர்ந்து நோக்குவாயாக. அசுரர்களும் தேவர்களும் ஆகிய அன்னோர் ஒருபுறம் இருக்கட்டும். எந்தக் கடல், எந்த மேகம், எந்தக் காற்று, வெம்மை மிக்க எந்த ஊழிக்காலத்தீ இவ்வுலகத்து இவ்வாலி யின் மேனியைத் தனித்தனியே ஒத்துத் தோன்றவல்லன? என வியந்து கூறினன்.

கு :—வெண்ணிறம் வாய்ந்த வாலியின் உடம்பின் தோற்றப் பொலிவுக்கு வெள்ளிய அலைகளையுடைய பெருங்கடலும், அவன் போர் முழக்கத்திற்கு மேகமும், விரைந்து தாக்குதலாகிய போர்த் தொழிலுக்குப் பெருங் காற்றும், பகைவரைக் கனன்று அட்டழித்த லாகிய வெம்மைக்கு ஊழித் தீயும் என இவை ஒன்று கூடிய நிலையில் இவ்வாலியின் மேனிக்கு ஒவ்வொரு திறத்தால் உவமை கூறத் தக்கனவாயினும், கடலும் மேகமும் காற்றும் தீயும் ஆகிய இவை வெவ்வேருய்த் தனித்து நின்ற நிலையில் இவனது மேனிக்கு உவமை யாகா என்பான், 'எவ்வேலை எம்மேகம் எக்காலொடு எக்கால வெந்தீ உலகத்து இவன் மேனியை வெவ்வேறு மானும்?' என்ருன் என்க. அவ்வேலை - அப்பொழுது. காலொடு என்புழி ஒடு எண் ணுப் பொருளில் வந்தது. ஒடு என்பதை ஏனையவற்ரேடும் கூட்டுக. வேலை - கடல். காலவெந்தீ - வெம்மை மிக்க ஊழிக்காலத்து நெருப்பு. செவ்வே - நன்ருக. செல நோக்குதல் - கண்பார்வை பார்க்கப்படும் பொருள்களில் ஊடுருவிப் பதியுமாறு கூர்ந்து பார்த் தல். வெகுண்டு போர் புரியும் பேராற்றல் மிக்க வாலிக்கு உவமை யாகக் கூறுதற்கு வன்மை மிக்க அசுரர்களிலோ அன்றித் தேவர் களிலோ ஒருவரையும் எடுத்துரைத்தல் இயலாதாகலின் 'தானவர் தேவர் நிற்க' என அவ்விருதிறத்தாரையும் விலக்கிக் கூறினன். (40)

## 'சுக்கிரீவனது ஒவ்வாச்செயல் நினைந்து உணர்விழந்தேன்' என இலக்குவன் கூறுதல்

4078. வள்ளற் கிளையான் பகர்வானிவன்
றம்முன் வாளுள்
கொள்ளக் கொடுங்கூற் றுவனைக்கொணர்ந்
தான்கு ரங்கி

னெள்ளற் குறுபோர் செயவெண்ணின
 னென்னு மின்ன
லுள்ளத்தி னூன்ற வுணர்வுற்றில
 ஞென்று மென்ருன்.

வள்ளற்கு இளையான் பகர்வான்: ‘இவன் தம்முன் வாழ்நாள்
கொள்ளக் கொடுங் கூற்றுவனைக் கொணர்ந்தான்; குரங்கின்
எள்ளற்கு உறு போர் செய எண்ணினன், என்னும் இன்னல்
உள்ளத்தின் ஊன்ற, உணர்வுற்றிலன் ஒன்றும்’ என்ருன்.

பொ:—வள்ளல் ஆகிய இராமனுக்கு இளையவனுகிய இலக்குவன் கூறுவான்: ‘(சுக்கிரீவனுகிய) இவன், தன் தமையனது வாழ்நாளைக் கவர்ந்து கொள்ளுதற்கென்று கொடுமை மிக்க கூற்றுவனைத் தன்னுடன் அழைத்து வந்துள்ளான்; (ஒரு நெறி நில்லாமையால்) பலரும் இகழும்படியான குரங்கினது போர்த் தொழிலைச் செய்தற்கு எண்ணிஞன் என்பதனுலுளதாகிய பெருந் துன்பம் எனது உள்ளத்தில் தைத்தமையால் ஒன்றையும் உணரும் உணர்வின்றிக் கலக்கமுற்றுள்ளேன்’ என்ருன்.

கு:—தனக்கே முறைமையின் உரிமையுடையதாய்த் தந்தையால் அளிக்கப் பெற்ற பேரரசினைச் சிற்றன்னையின் ஏவலால் தன் தம்பியாகிய பரதனுக்கு ஈந்து மகிழும் பெருவண்மையுடையான் என்பார் இராமனை வள்ளல் எனக் குறித்தார். தமையனுகிய இராமன் உடன் பிறப்பாளராகிய துணைவர்பாற் கொண்ட பேரன்பிற்கு ஏற்ற அன்புரிமையுடையோனுகி இராமனுக்குக் குற்றேவல் செய்தலையே தனக்குரிய இன்பப் பேருகக் கொண்டு இராமனைப் பிரியாது தொடர்ந்து வந்த தம்பி இலக்குவன் என்பார், வள்ளற்கு இளையான் என்ருர். சுக்கிரீவனும் வாலியும் வெகுண்டு போருடற்ற நிற்கும் நிலையினை இராமன் காட்டக் கண்ட இலக்குவன், வாலியைக் கொல்லுதற்கென்றே இராமனைத் துணைக்கு அழைத்து வந்து மறைவில் இருக்கச் செய்து தமையனெடு எதிர்த்து நிற்கும் சுக்கிரீவனது சூழ்ச்சி மிக்க போர்ச் செயலைக் கண்டு மனங் கலங்கித் தன் கலக்கத்தை இராமனுக்குப் புலப்படுத்திஞன் என்க.

இவன் என்றது சுக்கிரீவனை. தம்முன் - தமையன்; என்றது வாலியை. வாழ் + நாள் = வாஞள் எனப் புணர்ந்தது. கொடுங் கூற்றுவன் - யாவராலும் தடுத்து நிறுத்துதற்கு அரியனுகி உயிரை உடம்பினின்றும் கூறுபடுத்தவல்ல கொடுமையுடைய இயமன். ‘மாற்றருங் கூற்றம்’ என்பது தொல்காப்பியம். ‘வாலியின் தோற்றம் எத்தன்மையது’ என இராமன் வினவக் கேட்ட இலக்குவன், சுக்கிரீ

வன் வாலியை வெல்லுதற்கு நின்னைத் துணையாக அழைத்து வந்த இச்செயல், அவன் தன் தமையனாகிய வாலியின் உயிரைக் கவர்தற்கு இயமனையே உடனழைத்து வந்த செயலாய் முடிந்தது என இரங்கிக் கூறுவான், 'இவன் தம்முன் வாணாள் கொள்ளக் கொடுங் கூற்று வனைக் கொணர்ந்தான்' என்றான். சுக்கிரீவன் மேற்கொண்டுள்ள இப்போர்முறை பேராண்மையிற் குறையாத தறுகண் வீரர் மேற் கொள்ளும் அறத்தொடு பொருந்திய போராக அமையாமல், ஒரு நெறியில் மனம் ஒன்றி நில்லாத குரங்குப் போர் என்று யாவராலும் இகழப்படும் இழிவுடைய செயலாய் முடிந்தது என்பான், 'குரங்கின் எள்ளற்கு உறுபோர் செய எண்ணினன்' என்றான். எள்ளற்குறு குரங்கின் போர் என இயையும். அறநெறியினை நிலைநிறுத்த வந்த பெரியோனாகிய நினது துணையினைச் சார்பாகக் கொண்டு சுக்கிரீவன் இத் தீச்செயலைச் செய்யத் தொடங்கியுள்ளானே என்னும் இத்துன்ப மானது என் மனத்திற் கூரிய வேற்படையினைப் போன்று தைத்து வருத்துதலால் கலக்கமுற்றுச் சிறிதும் தெளிவுபெறாத நிலையில் உணர்விழந்துள்ளேன் என்பான், 'என்னும் இன்னல் உள்ளத்தின் ஊன்ற உணர்வுற்றிலன் ஒன்றும்' என்றான். ஊன்றுதல் - தைத்து வருத்துதல். ஒன்றும் - சிறிதும். இனி, 'குரங்கின் எள்ளற் கரும் போரது செய்கலன்' எனப் பாடங்கொண்டு, (வெளிப்படையாகக்) குரங்குகள் செய்தற்குரிய இகழ்ச்சிக்கிடமில்லாத போரைச் செய்வா னல்லன்' எனப் பொருளுரைத்தலும் உண்டு. (41)

4079. ஆற்றாது பின்னும் பகர்வானறத்
தாற ழுங்கத்
தேற்றாது செய்வார் களைத்தேறுதல்
செவ்வி தன்றால்
மாற்றா னெனத்தம் முனைக்கொல்லிய
வந்து நின்றான்
வேற்றார் கடிறத் திவன்றஞ்சமென்
வீர வென்றான்.

ஆற்றாது பின்னும் பகர்வான், 'அறத்தாறு அழுங்கத்
தேற்றாது செய்வார்களைத் தேறுதல் செவ்விது அன்றால்;
மாற்றான் எனத் தம்முனைக் கொல்லிய வந்து நின்றான்,
வேற்றார்கள் திறத்து இவன் தஞ்சம் என்? வீர!' என்றான்.

பொ:—மனம் பொறாது மேலும் சில கூறத் தொடங்கிய இலக்கு வன் (தன் தமையனாகிய இராமனை நோக்கி,) 'பெரு வீரனே! (இங்

னம்) அறநெறி சிதையுமாறு தெளியத் தகாத (தீச்) செயலைச் செய்பவர்களைத் (துணையாக) நம்புதல் நன்மை தருவதாகாது. பகைவன் என்று தன் தமையனையே கொல்லுதற்கு வந்து நின்ற இவன், (உறவினரல்லாத) அயலார்திறத்தே உற்றதுணையாதல் எவ்வாறு?' என வினவினன்.

கு:—வழிபடத்தக்க ஐம்பெருங் குரவர்களுள் தமையனும் ஒருவன் என்னும் மதிப்புடன் வாலியை வழிபடுங் கடமையுடையனாகிய இச்சுக்கிரீவன், தமையனுடன் தனக்குள்ள உறவினை விட்டுப் பகைவனாகித் தன் தமையனையே கொல்லுதற்கு முற்பட்ட கொடுமையுடையான் என்பான், 'மாற்றானெனத் தம்முனைக் கொல்லிய வந்து நின்றான்' என்றான். இவ்வாறு உடன்பிறந்தானுக்கே பகைவனாகிக் கொலை சூழ்ந்த இவன் அயலாராகிய நம்திறத்து நம்பிக்கையுடைய நண்பனாகித் துணைபுரிவான் எனச் சிறிதும் நம்புதற்கு இடமில்லை என்பான், 'வேற்றார்கள் திறத்து இவன் தஞ்சம் என்?' என வினவினான். மாற்றான் - பகைவன். கொல்லிய - கொல்லுதற்கு; செய்யிய என்னும் வினையெச்சம். வேற்றார்கள் - எத்திறத்தும் தொடர்பில்லாத அயலார். தஞ்சம் - பற்றுக்கோடு; துணையாய் நிற்றல். தேற்றாது - தெளியத் தகாத செயல்; நம்பத்தகாத செய்கை. தேறுதல் - தெளிதல்; நம்புதல். செவ்விது அன்று - நேர்மையுடையதாகாது; நலம் பயப்பதாகாது. ஆல் - அசை. உடன்பிறந்தார் முதலிய நெருங்கிய சுற்றத்தார்பால் அன்புடையரல்லாதார்க்கு, உலகத்தார் பழிப்பன ஒழிதற்கும் புகழ்வன செய்தற்கும் ஏதுவாகிய உலகநடையியல்பு இன்மையின், தன் தமையனையே பகைவனாகக் கருதிய சுக்கிரீவன் நம்மால் நம்பத் தகாதவன் என இலக்குவன் தன் கருத்தினைப் புலப்படுத்தினான் என்பதாம். (42)

### இலக்குவனுக்கு இராமன் ஏற்ற மறுமொழி பகர்தல்
### 4080—4081

4080. அத்தாவிது கேளென வாரியன்
கூறு வானிப்
பித்தாய விலங்கி னொழுக்கினைப்
பேச லாமோ
வெத்தாயர் வயிற்றினும் பின்பிறந்
தார்க ளெல்லா
மொத்தாற்பர தன்பெரி துத்தம
னாவ துண்டோ.

‘அத்தா! இது கேள்’ என ஆரியன் கூறுவான்: ‘இப்
பித்து ஆய விலங்கின் ஒழுக்கினைப் பேசல் ஆமோ?
எத்தாயர் வயிற்றினும் பின்பிறந்தார்கள் எல்லாம்
ஒத்தால், பரதன் பெரிது உத்தமன் ஆவது உண்டோ?’

பொ:—மேலோனாகிய இராமன் (இலக்குவனை நோக்கி) ஐயனே இம்மொழியைக் 'கேட்பாயாக' எனப் பின்வருமாறு கூறுவான்: ‘மருளுடைய விலங்காகிய இக்குரங்கின் நடைமுறையினைப் (பொருளுடையதாக மதித்துப்) பேசுதல் ஏற்புடையதாகுமோ? (இனி, மனவுணர்வு படைத்த மக்களது நடைமுறையை நோக்குமிடத்தும்) எத்தகைய தாயார் வயிற்றிற் பிறந்தவராயினும் பின்னே பிறந்த தம்பியரெல்லாரும் (தம் தமையன்மாரிடத்து அன்பும் பணிவும் உடையராய்) இணங்கி நடப்பராயின், பரதன் நற்குணங்களால் மிகவும் உயர்ந்தோன் என (உலக மக்களால்) சிறந்தெடுத்துப் போற்றப் பெறுதல் உளதாகுமோ?’

கு:—இராமன் தன் தம்பியாகிய இலக்குவனை அன்பின் மிகுதியால் அத்தா என அழைத்தான். ஆரியன் - வழிபடத்தக்க மேலோன். நன்மையும் தீமையும் நாடி நலம்புரியும் தன்மையாகிய நல்லறிவின்றி ஐம்பொறிகளின் வழியே மயங்கித் திரியும் இயல்புடையதாய் மனவுணர்வில்லாத விலங்கு என்னும் இழி பிறப்பினதாகிய குரங்கின் நடைமுறைகளை மனவுணர்வுடைய மக்களது நெறிமுறையுடன் இயைத்து நோக்கி நன்று தீதெனப் பேச முற்படுதல் பொருந்தாது என்னுங் கருத்தால் ‘இப்பித்தாய விலங்கின் ஒழுக்கினைப் பேசலாமோ’ என்றான். இனி, மனவுணர்வு வாய்ந்த மக்கட் குலத்திலும் தம்பியரெல்லாம் தமையனது சொல்வழியடங்கி யொழுகும் இயல்பிற் சிறிதும் வழுவாதவராயின், அவ்வியல்புடைமை பற்றிப் பரதனே யாவரினும் மேம்பட்டவன் என உலகத்தாரால் உயர்த்துப் புகழப்பெறும் சிறப்பினை அடைந்திருத்தல் இயலாது என்பான், பின் பிறந்தார்களெல்லாம் ஒத்தாற் பரதன் பெரிதுத்தமன் ஆவதுண்டோ’ என்றான். பகுத்துணர்வுடைய மக்கட் குலத்தாரினும் பரதனைப் போன்று தமையனுக்குப் பணிந்து உத்தமராய் ஒழுகும் தம்பியர் மிகவும் அரியராதலின், விலங்கின் வகையைச் சார்ந்த குரக்கினத் தலைவனாகிய சுக்கிரீவன்பால் அத்தகைய உடன் பிறப்பொழுகலாற்றை நாம் எதிர்பார்ப்பது முறையாகாது என இராமன் இலக்குவனுக்கு அறிவுறுத்தினான் என்பதாம். (43)

4081. விற்ருங்கு வெற்பன்ன விலங்கெழிற்
றோள மெய்ம்மை
உற்ருர்சில ரல்லவ ரேபல
ரென்ப துண்மை
பெற்ருருழைப் பெற்ற பயன்பெறும்
பெற்றி யல்லா
லற்ருர்நவை யென்றலுக் காகுந
ரார்கொ லென்ருன்.

'வில் தாங்கு வெற்பு அன்ன, இலங்கு எழில்
தோள! "மெய்ம்மை
உற்ருர் சிலர், அல்லவரே பலர்"
என்பது உண்மை;
பெற்ருர் உழைப் பெற்ற பயன் பெறும்
பெற்றி அல்லால்,
"அற்ருர் நவை" என்றலுக்கு ஆகுநர்
ஆர் கொல்?' என்ருன்.

பொ :—'விற்படையைத் தாங்கி நிற்கும் மலையினையொத்த வனப்புடன் விளங்கும் தோள்களையுடையவனே! "வாய்மைப் பண்பாகிய நல்லொழுக்கத்தினைக் கடைப் பிடித்தொழுகுவோர் மிகச் சிலரே; (இவ்வாறன்றி) வாய்மைக்கு மாருக நடப்பவர்களே பலராக உள்ளார்கள்" என அறிஞர் கூறுவது (எங்கும் காணப்பெறும்) உண்மை நிகழ்ச்சியாகும். (ஒருவாற்ருனும் துணையாதலரிய சிறப்பினையுடைய இவ்வுலகத்து) நண்பராகக் கிடைக்கப் பெற்ருர்பால் பெறுதற்கேற்ற அளவிற் காணப்பெறும் (நற்குணங்களாகிய) பயனைப் பெற்றுக்கொள்ளும் அத்தன்மையன்றி, (நம்மால் நண்பு கொள்ளப்பெற்ற இவர்) ஒரு குற்றமும் இல்லாதவர் (எல்லா வகையாலும் நல்லவரே) என முழுவதும் தழுவிக் கொள்ளுதற்குரிய தகுதியுடையார் யார் இருக்கிருர்கள்? (ஒருவருமிலர்) என (இராமன் இலக்குவனை நோக்கி)க் கூறினன்.

கு :—வில்தாங்கு வெற்பு அன்ன...தோள என்றது, இல்பொருளுவமை. இலங்குதல் - விளங்குதல். மெய்ம்மை - வாய்மை முதலிய நற்பண்புகள்; என்றது அப்பண்புடன் இயைந்த மாருத ஒழுகலாற்றினை. அல்லவர் - மெய்ம்மையுருதார். 'அல்லவரே பலர்' என்புழி ஏகாரம் பிரிநிலை. உண்மை - யாண்டும் உள்ளதாய்க் காணப்படும் நிகழ்ச்சி. பெற்ருர் உழை – நண்பு செய்யப் பெற்ருர் பால். பெற்ற பயன் - காணப்பெற்ற நற்பண்புகளால் விளையும்

நலங்கள். நவையற்ருர் என மாற்றுக. நவை - குற்றம். ஒரு குற்றமுமின்றிக் குணமே யுடையார் உலகத்தொருவருமிலராதலின், நண்பராயினுர்பாற் காணப்படும் குற்றங்களைக் கண்டு அவர்களை வெறுத்தொதுக்கு முகத்தால் அவர்கள்பாற் காணப்படும் சிறந்த நற்குணங்களின் பயனை நாம் இழந்து விடுதல் கூடாது எனத் தம்பிக்கு அறிவுறுத்துவான், 'அற்ருர் நவை என்றலுக்கு ஆகுநர் ஆர்கொல்' என்ருன் என்பதாம்.

'குண நாடிக் குற்றமு நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்' (திருக்குறள்-504)

என்ருர் தெய்வப் புலவரும். (44)

## வாலி சுக்கிரீவர் இருவரும் நெருங்கிப் பொருதல்

**4082.** வீரத் திறலோ ரிவையின்ன விளம்பும் வேலை
தேரிற் றிரிவான் மகனிந்திரன் செம்ம லென்றிப்
பாரிற் றிரியும் பனிமால்வரை யன்ன பண்பார்
மூரித் திசையா னையிரண்டென முட்டி ஞரே.

வீரத் திறலோர், இவை இன்ன விளம்பும் வேலை,
தேரில் திரிவான் மகன், இந்திரன் செம்மல், என்று இப்
பாரில் திரியும் பனிமால்வரை அன்ன பண்பார்,
மூரித் திசையானை இரண்டு என, முட்டினுரே.

பொ :—வீரத்துடன் போர்த்திறமையும் ஒருங்குடையராகிய இராம இலக்குவர் இருவரும் (மேற்குறித்த) இவைபோலும் மொழிகளைத் தமக்குள் பேசிக்கொண்டிருக்கும் பொழுதில் (ஓராழித்) தேரில் (உலக முழுவதும்) திரிவானுகிய ஞாயிற்றின் மைந்தன் சுக்கிரீவனும் இந்திரன் புதல்வன் வாலியும் எனக் கூறப்பெற்று இவ்வுலகில் திரியும் பனி படர்ந்த (வெள்ளி) மலையினை யொத்த தன்மையினராகிய அவ்விருவரும் பெருவன்மை படைத்த திசை யானைகளுள் இரண்டு (தம்முள் முரண்கொண்டு பொருதன) என்னும்படி (ஒருவரோடொருவர்) மோதிப் பொருதனர்.

கு :—வீரத்திறலோர் - வீரத்தொடு போர்த் திறமையும் படைத்தவர்கள்; என்றது இராம இலக்குவரை. வீரம் – தறுகண்மை; உள்ளத்து உரன். திறல் - போராற்றல்; உடலுரத்தின் பயனுகிய போர்த்தொழில் வன்மை. தேரிற்றிரிவான் என்றது சூரியனை. சூரியன் மகன் சுக்கிரீவன். இந்திரன் செம்மல் - இந்திரன் மகன்; என்றது வாலியை. இருவரும் வெண்ணிற மேனியராதலின் 'பனி

மால் வரையன்ன பண்பார்' என்ருர். பனிமலே அசையாது ஓரிடத்திலே நிலேபெற்றிருப்பது; நிலவுலகில் திரியும் இயல்புடைய பனிமலேயிருக்குமாயின் அதனே வாலி சுக்கிரீவர்க்கு உவமையாகக் கூறலாம் என்பார், 'பாரில் திரியும் பனிமால் வரை அன்ன பண்பார்' என்ருர்; இஃது இல்பொருளுவமம். மூரி - வன்மை. (45)

## இருவரும் சாரிதிரிதல்

4083. குன்ருேடு குன்ருெத் தனர்கோளரிக்
கொற்ற வல்லே
ருென்ருேடு சென்ருென் றெதிருற்றன
வேயு மொத்தார்
நின்ருர் திரிந்தார் நெடுஞ்சாரி
நிலந்தி ரிந்த
வன்ருேட் குயவன் றிரிமட்கலத்
தாழி யென்ன.

குன்ருேடு குன்று ஒத்தனர்; கோள் அரிக் கொற்ற வல் ஏறு
ஒன்ருேடு சென்று ஒன்று எதிர் உற்றனவேயும் ஒத்தார்;
நின்ருர், திரிந்தார் நெடுஞ்சாரி; நிலம் திரிந்த,
வன்தோள் குயவன் திரி மட்கலத்து ஆழி என்ன.

பொ :—(வாலி சுக்கிரீவராகிய அவ்விருவரும்) மலேயொடு மலே (தம்மிற் பொருதாற்) போன்று ஒத்துப் பொருதனர்; உயிர்கொள்ள வல்ல திண்மையும் வெற்றியும் வாய்ந்த வலிய ஆண் சிங்கம் ஒன்ருேடொன்று எதிர்த்துப் பொருதனவற்றையும் ஒத்தார்கள்; ஓரிடத்திலே நிலேயாக நின்று பொருத அவர்கள், நெடுநேரம் (வலமுறை இடமுறையாக) எங்கும் சுற்றித் திரிந்தார்கள். (அந்நிலேயில்) இந்நிலப் பகுதிகள், வலிய தோளேயுடைய வேட்கோவனுல் மட்கலங்களே வனேதற் பொருட்டுச் சுழற்றப்படும் சக்கரத்தைப் போன்று சுழன்றன.

கு :—மலேயொடு மலேயும் சிங்க ஏற்றுடன் சிங்க ஏறும் தம்முட் பொருவது போன்று வாலியும் சுக்கிரீவனும் தம்மில் ஒத்த மிடுக்குடையராய்க் கடும் போர் செய்தனர் என்பதாம். அழகிய தொழிற்றிறனும் பெருமையும் வாய்ந்த பாண்டங்களே வனேதற் கேற்றவாறு சக்கரத்தைச் சுழற்றவல்ல வலிமையும் தொழிற்றிறமையும் வாய்ந்த தோள்களேயுடையான் என்பார், 'வன்ருேட்குயவன்' என்ருர். ஆழி - சக்கரம்; என்றது, மண் பாண்டங்கள் வனேதற்குத் துணேக்

கருவியாகிய சக்கரத்தை. குயவன் திரி ஆழி என்ன நிலம் திரிந்த என இயையும். (46)

இருவரும் தாக்கிப் பொருதலால் தீ எழும் தோற்றம்

4084. தோளோடு தோடேய்த் தலிற்றொன்னிலந்
தாங்க லாற்றாத்
தாளோடு தாடேய்த் தலிற்றந்த
தழற்பி றங்கல்
வாளோடு மின்னோ டுவபோனெடு
வானி னோடும்
கோளோடு கோளுற் றெனவொத்தடர்ந்
தார்கொ தித்தார்.

தோளோடு தோள் தேய்த்தலின், தொல் நிலம்
தாங்கல் ஆற்றாத்
தாளோடு தாள் தேய்த்தலின், தந்த
தழற் பிறங்கல்,
வாளோடு மின் ஓடுவபோல் நெடு
வானின் ஓடும்;
கோளோடு கோள் உற்றென ஒத்து,
அடர்ந்தார், கொதித்தார்.

பொ :—(அவ்விருவரும்) தம் தோளினால் (எதிரியின்) தோளை (மோதிப் பொருது) தேய்த்தலானும், தொன்மையதாகிய நிலவுலகம் தாங்குதற்கு ஆற்றாதனவாகிய (வன்மையுடைய) காலினால் (எதிரியின்) காலைத் (தாக்கித்) தேய்த்தலானும் உண்டாக்கிய தீத்திரள், ஒளியுடன் மின்னல் ஓடுவன போன்று நீண்ட விசும்பிடத்தே ஓடிப் பரவின. (அவ்விருவரும்) கோள்கள் இரண்டு தம்மின் மோதினாற் போன்று தமது ஆற்றலால் ஒத்து நின்று நெருங்கிப் பொருதார்கள்; (மேலும் உள்ளம்) கொதிப்புற்றார்கள்.

கு :—தோளோடு தோள் தேய்த்தலின், தாளோடு தாள் தேய்த்தலின் தந்த தழற் பிறங்கல் வாளோடு மின் ஓடுவபோல் நெடு வானின் ஓடும் எனவும், தொன்னிலம் தாங்கலாற்றாத்தாள் எனவும் இயைத்துப் பொருள் கொள்க. தேய்த்தலின் என்புழி 'இன்' ஏதுப் பொருளில் வந்தது. தருதல் - உண்டாக்குதல். தழற் பிறங்கல் - தீத்திரள். கோள் - கிரகம். வானத்தில் வெள்ளி வியாழன் முதலிய

20

கோள்கள் ஒன்ருேடொன்று மோதுதல் கோட்போர் எனவும் கிரக யுத்தம் எனவும் கூறப்படும். "ஏலா வெண்பொன் போருறு காலை" (389) என்பது புறநானூறு. "ஆதிசான்ற மேதகு வேட்கையின், நாளுங் கோளு மயங்கிய ஞாட்பின், மதியமும் ஞாயிறும் பொருவன போல" (தொல்-புறத்-17) என வரும் நச்சினர்க்கினியர் உரைமேற் கோளில் கோள்களின் போர் குறிக்கப்பெற்றிருத்தல் அறியத்தக்க தாகும். வாலியும் சுக்கிரீவனும் கொதிப்புற்ற மனத்தினராய் விசும் பின்மேல் நின்று தம்முட் கடும்போர் புரிந்து திரிந்த தோற்றம், வானத்தில் இரண்டு கோள்கள் ஒன்ருேடொன்று மோதிப் பொருத லாகிய கிரக யுத்தம் போன்று காண்போர்க்கு அச்சத்தை விளைவித்த தென்பதாம். அடர்தல் - நெருங்கிப் பொருதல். (47)

அவ்விருவரும் சுந்தோப சுந்தரை யொத்துத் தோன்றுதல்

**4085.** தந்தோள்வலி மிக்கவர் தம்மொரு
தாய்வ யிற்றின்
வந்தோர்மட மங்கை பொருட்டு
மலைக்க லுற்ருர்
சிந்தோடரி யொண்கட் டிலோத்தமை
காதல் செற்ற
சுந்தோப சுந்தப் பெயர்த்தொல்லையி
னேரு மொத்தார்.

தம் தோள்வலி மிக்கவர், தம் ஒருதாய் வயிற்றின்
வந்தோர், மடமங்கை பொருட்டு மலைக்கலுற்ருர்;
சிந்து ஓடு அரி ஒண்கண் திலோத்தமை காதல் செற்ற
சுந்தோப சுந்தப் பெயர்த் தொல்லையினேரும் ஒத்தார்.

பொ:—தம்முடைய தோள் வன்மையால் மேம்பட்டவர்களும் தம் ஒரே தாய் வயிற்றிற் பிறந்தவர்களும் மடப்பம் பொருந்திய மங்கை யின் பொருட்டுப் போர் புரிதலுற்றவர்களும் ஆகிய (வாலி, சுக்கிரீவன் என்னும்) இருவரும், சிதறிய வரிபரந்த ஒளிதங்கிய கண்களையுடைய திலோத்தமை யென்னும் தேவமகள்பாற் (கொண்ட) காதல் காரண மாக(த் தம்மிற்) செற்றங் கொண்டு பொருத சுந்தன், உபசுந்தன் என்னும் பெயரையுடைய பழைய அசுரர் இருவரையும் ஒத்தார்கள்.

கு:—தம் தோள்வலி மிக்கவர், தம் ஒருதாய் வயிற்றின் வந்தோர் என்றது, ஒத்த தோள்வலி படைத்தவர்களும் உடன் பிறப்பாளரும் ஆகிய வாலி சுக்கிரீவர்களை. உடன் பிறந்தாராகிய அவ்விருவரும்

தம்முள் மாறுகொண்டு பொருதற்குக் காரணமாயவள், சுக்கிரீவனுக்கு மனைவியாய் வாலியால் வலிதிற் கொள்ளப்பட்டு அவனது காவலில் வைகும் உருமை என்னும் மங்கையே என்பார், 'மடமங்கை பொருட்டு மலைக்கலுற்றார்' என்றார். 'தம் தோள் வலி மிக்கவர், தம் ஒரு தாய் வயிற்றின் வந்தோர், மடமங்கை பொருட்டு மலைக்கலுற்றார்' என உவமேயப் பொருட்கு வந்த அடைமொழிகளை உவமானத்தின் கண்ணும் கூட்டிப் பொருள் கொள்க. சுந்தன், உபசுந்தன் என்பார் அசுரகுலத்தினர்; ஒரு தாய் வயிற்றிற் பிறந்தோர். சுந்தன் தமையன். உபசுந்தன் தம்பி. சுந்த + உபசுந்தர் = சுந்தோப சுந்தர் என்றாயது வடசொற் சந்தி. கபிலன் + பரணன் = கபிலபரணர் என்றாற்போன்று உயர்திணை மருங்கின் உம்மைத் தொகையாகலின் சுந்தன் + உபசுந்தன் = சுந்தோப சுந்தர் எனப் பலர் பாலீறாய் நின்றது.

தோள் வலியாலும் தவ வன்மையாலும் வரத்தாலும் தம்முள் ஒத்த வலி படைத்தவர்களாகிய சுந்தன் உபசுந்தன் என்னும் இருவரும் பெருந் தவம் புரிந்து அயன் அரி அரன் ஆகிய மும்மூர்த்திகளையும் பணிந்து 'நாங்கள் யாவராலும் கொல்லப்படாதவர்கள் ஆதல் வேண்டும்' என வேண்டினர். அவ்விருவரது வேண்டுகோட்கிரங்கிய மும்மூர்த்திகளும் 'நும் இருவர்க்கும் பிறவுயிர்கள் எவற்றாலும் சாதல் நேராது' என வரமளித்தனர். வரத்தினால் வலியராகிய சுந்தோப சுந்தர் இருவரும் தேவர் முதலிய யாவரையும் நலிந்து திரிந்தனர். நலிவுற்ற தேவர்களது துன்பத்தினை நீக்கத் திருவுளங் கொண்ட பிரமதேவர், விசுவகர்மாவைக் கொண்டு மூவுலகத்திலுள்ள உயிருடம்புகளின் அழகெல்லாவற்றிலும் எள்ளளவு பங்கு திரட்டித் திலோத்தமை யென்னும் பேரழகுடைய நங்கையைப் படைத்துச் சுந்தோப சுந்தர் முன் அனுப்பினார். அவளைக் கண்டு அவளது பேரழகில் தம் மனத்தைப் பறிகொடுத்த சுந்தனும் உபசுந்தனும் அவள் மேல் வைத்த காதலால் தமது உடன் பிறப்பாகிய அன்புத் தொடர்பினை மறந்து தம்முட் செற்றங் கொண்டு பொருது ஒருவரையொருவர் கொன்று இருவரும் ஒரு சேர இறந்தனர் என்பது பழங்கதை. (48)

### இருவரும் செய்த பெரும் போர்

**4086.** கடலொன்றினொ டொன்று மலைக்கவுங்
காவன் மேருத்
திடலொன்றினொ டொன்றமர் செய்யவுஞ்
சீற்ற மென்ப

துடல்கொண்டிரண் டாகி யுடற்றவுங்
கண்டி லாதே
மிடலிங்கிவர் வெந்தொழிற் கொப்புரை
வேறு காணேம்.

கடல் ஒன்றினொடு ஒன்று மலைக்கவும், காவல் மேருத்
திடல் ஒன்றினொடு ஒன்று அமர்செய்யவும், சீற்றம் என்பது
உடல்கொண்டு இரண்டாகி உடற்றவும், கண்டிலாதேம்;
மிடல் இங்கு இவர் வெந்தொழிற்கு ஒப்புரை வேறு காணேம்.

பொ :—கடல்கள் ஒன்றோடொன்று (எதிர்த்து நின்று) போர் செய்யவும் (நிலத்தினை அசைவின்றித் தாங்கிக்) காத்தலையுடைய மேருமலை (தான் இரண்டுருப் பெற்று) ஒன்றோடொன்று அமர்புரியவும், சினமென்னும் வெம்மைக் குணம் (தான் ஒரு குணிப் பொருள் போன்று) உடம்பு பெற்று இரண்டாய் நின்று உடன்பொருது நிற்கவும் கண்டிலோம்; (அங்ஙனம் காணாத யாம்) பெருவன்மை படைத்த (வாலி சுக்கிரீவர்) இருவரும் இங்கு மேற்கொண்டுள்ள வெம்மை மிக்க போர்த்தொழிற்கு(க் கடலொடு கடலும் மலையொடு மலையும், சீற்றத்தொடு சீற்றமும் தம்முட் பொருது நிற்கும் நிலையையன்றி) ஒப்புரைக்கத் தக்க உவமையாக வேறொன்றையும் காணேமாயினோம்.

கு :—கடலொடு கடலும் மலையொடு மலையும் தம்முள் எதிர்நின்று பொருதலும், சீற்றமென்னும் வெம்மைக் குணம் தானோர் குணிப் பொருளாய் ஈருருக்கொண்டு நின்று எதிர்த்துப் பொருதலும் உளவாயின், அப்போர் நிகழ்ச்சிகளை வாலி சுக்கிரீவரது போர் நிகழ்ச்சிக்கு உவமையாகக் கூறுதல் பொருந்தும் என்பதாம். இஃது இல்பொருளுவமை யென்னும் அணிநலம் தழுவியது. மேருமலை, நிலவுலகு அசையாதவண்ணம் நடுவே நுழைக்கப் பெற்ற இருப்புச் சலாகை போன்று ஊடுருவி நின்று வடக்குந் தெற்கும் வளர்ந்தோங்கி இவ்வுலகினைத் தாங்கி நிற்குந் தன்மையினது என்பவாகலின், 'காவல் மேருத்திடல்' என்றார். திடல் - மேடு; மலை. (49)

இருவரது கடும் போரைக் காண அஞ்சித் தேவர்கள் ஓடி மறைதல்

4087. ஊகங்களி னுயகர் வெங்க
ணுமிழ்ந்த தீயான்
மேகங்க ளெரிந்தன வெற்பு
மெரிந்த திக்கின்

நாகங்க ணடுங்கின நானில
முங்கு லைந்த
மாகங்களை நண்ணிய விண்ணவர்
போய்ம றைந்தார்.

ஊகங்களின் நாயகர் வெங்கண் உமிழ்ந்த தீயால்,
மேகங்கள் எரிந்தன ; வெற்பும் எரிந்த ; திக்கின்
நாகங்கள் நடுங்கின ; நானிலமும் குலைந்த ;
மாகங்களை நண்ணிய விண்ணவர் போய் மறைந்தார்.

பொ :—குரக்கினத் தலைவராய வாலி சுக்கிரீவர்களின் வெம்மை மிக்க கண்கள் சொரிந்த தீயினால், கருமுகில்கள் (நீர்வற்றித்) தீய்ந் தொழிந்தன ; மலைகளும் எரிந்து பொடியாயின ; திசை யானைகள் அஞ்சி நடுங்கின ; நானிலப் பகுதிகளும் (வளம் கெட்டு) நிலைகுலைந் தன ; (இவ்விருவரது போர்த் தொழிலைக் காணுதற் பொருட்டு) விசும் பினையடைந்த தேவர்கள் (தமக்குப் பாதுகாவலான இடத்தை நாடி) ஓடி மறைந்தார்கள்.

கு :—ஊகம் - குரங்கு. திக்கின் நாகங்கள் - திசை யானைகள். நானிலம் - குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் என நால்வகைப்பட்ட நிலப்பகுதிகள். குலைதல் - தத்தம் நிலையினின்றும் பிறழ்ந்து சிதைதல். மாகம் - விண். (50)

### இருவரும் வானிலும் மண்ணிலும் தொடர்ந்து ஓடிப் பொருதல்

**4088.** விண்மே லினரோ நெடுவெற்பின்
முகட்டி னரோ
மண்மே லினரோ புறமாதிர
வீதி யாரோ
கண்மே லினரோ வெனயாவருங்
காண நின்றார்
புண்மே லிரத்தம் பொடிப்பக்
கடிப்பார் புடைப்பார்.

'விண் மேலினரோ ? நெடுவெற்பின் முகட்டினரோ ?
மண் மேலினரோ ? புற மாதிர வீதியாரோ ?
கண் மேலினரோ ?' என யாவரும் காண நின்றார்,
புண்மேல் இரத்தம் பொடிப்பக் கடிப்பார், புடைப்பார்.

பொ :—('பொருது நிற்பாராகிய இவ்விருவரும்) விசும்பின்மேல் உள்ளாரோ, நெடியமலையின் உச்சியில் உள்ளாரோ, புறத்தேயுள்ள திசைகளின் எல்லையில் உள்ளாரோ (அன்றி நமது) கண்களில் உள்ளாரோ' என(த் தேவர் முதலிய) யாவரும் கண்டு வியக்கும்படி நின்ற (வாலி சுக்கிரீவராய) அவ்விருவரும் உடலிற் புண்பட்டு அதன் மேற் குருதி சிந்தும்படி (ஒருவரை யொருவர்) கடிப்பாரும் குத்துவாரும் ஆனார்கள்.

கு :—வாலி சுக்கிரீவர் ஆகிய இருவரும் விசும்பின்மேல் உயர்ந்தும் நெடிய மலைச் சிகரங்களில் தாவியும், மண்மேல் நின்றும் எண் திசை யெல்லைகளிற் சுற்றித் திரிந்தும், காண்பார் கண்களுக்கு மிக அணியராய் நெருங்கியும் இங்ஙனம் ஓரிடத்தினும் தாமதித்து நில்லாது விரைந்தோடித் தொடர்ந்து ஒருவரையொருவர் வாயினாற் கடித்தும் கைகளாற் புடைத்தும் போர் செய்தனர் என்பதாம். முகடு - உச்சி. மாதிரம் - திசை. பொடித்தல் - அரும்புதல் : பொங்கிப் பீறிடுதல். புடைத்தல் - கையினால் தாக்குதல். (51)

அவ்விருவரது போர் முழக்கமும் குத்துதலின் ஓசையும்

4089. ஏழொத்துட னாந்திசை யெட்டொ
டிரண்டு முட்டும்
ஆழிக்கிள ரார்கலிக் கைம்மடங்
கார்ப்பி னோசை
பாழித்தடந் தோளினு மார்பினுங்
கைகள் பாய
ஊழிக்கிளர் காருரு மொத்தது
குத்து மோதை.

ஏழ் ஒத்து உடன் ஆம், திசை எட்டொடு இரண்டும் முட்டும்
ஆழிக் கிளர் ஆர்கலிக்கு ஐம்மடங்கு, ஆர்ப்பின் ஓசை ;
பாழித்தடந் தோளினும் மார்பினும் கைகள் பாய,
ஊழிக் கிளர் கார் உரும் ஒத்தது, குத்தும் ஓதை.

பொ :—(இருவரும்) ஆரவாரித்தெழுப்பும் போர் முழக்கமாகிய ஓசை, ஏழு கடல்களும் ஒத்து ஒன்றாகியதும் எட்டும் இரண்டும் ஆகிய பத்துத் திசைகளிலும் நெருங்கிப் பரவியதும் ஆகிய பெருங்கடலிற் கிளர்ந்தொலிக்கும் ஆரவாரத்தினும் ஐந்து மடங்கு மிக்கொலிப்பதாயிற்று. வன்மை வாய்ந்த பெரிய தோள்களிலும் மார்பிலும் கைகள் உள்ளே அழுந்துமாறு (ஒருவரையொருவர்) குத்துதலாலுள

தாகிய ஓசை யுகமுடிவில் கருமுகில்கள் இடிக்கும் இடிமுழக்கத்தை யொத்துத் தோன்றியது.

கு :—நிலப்பரப்பில் அமைந்த எட்டுத் திசைகளுடன் நிலத்தின் மேலும் கீழும் ஆகிய இரு திசையும் கூட்டத் திசைகள் பத்தாயின. 'எட்டாந் திசைக்கும் இரு திசைக்கும்' (4-84-1) என்பது தேவாரம். 'ஏழ்' என்றது ஏழு கடல்களை. ஏழ் ஒத்து உடனும் ஆழி, திசை எட்டொடு இரண்டும் முட்டும் ஆழி எனத் தனித்தனி இயையும். ஆழி என்றது, ஈண்டு ஏழு கடல்களும் ஒன்றாகிய ஊழிக்காலத்துப் பெருங் கடலை. பாழி - வலிமை. ஆழிக்கிளர் ஆர்கலி - பெருங்கடலின் கண்ணே கிளர்ந்து தோன்றும் பேராரவாரம். ஆர்கலிக்கு - ஆர்கலியினும்; உருபு மயக்கம். ஆர்ப்பின் ஓசை ஆழிக்கிளர் ஆர்கலிக்கு ஐம்மடங்கு எனவும், குத்தும் ஓதை ஊழிக்கிளர் கார் உரும் ஒத்தது எனவும் முடிக்க. (52)

ஒருவரையொருவர் கடித்தலாற் பொடித்த இரத்தம்
விண்மீன்களிலும் மேகத்திலும் படிந்த தோற்றம்

4090. வெவ்வா யெயிற்ருன் மிடல்வீரர்
கடிப்ப மீச்சென்
றவ்வாயெழு சோரிய தாசைக
டோறும் வீச
வெவ்வாயு மெழுந்த கொழுஞ்சுடர்
மீன்கள் யாவும்
செவ்வாயை நிகர்த்தன செக்கரை
யொத்த மேகம்.

வெவ்வாய் எயிற்ருல் மிடல் வீரர் கடிப்ப மீச்சென்று
அவ்வாய் எழு சோரி அது, ஆசைகள் தோறும் வீச,
எவ்வாயும் எழுந்த கொழுஞ்சுடர் மீன்கள் யாவும்,
செவ்வாயை நிகர்த்தன; செக்கரை ஒத்த, மேகம்.

பொ :—வன்மையுடைய பெருவீரர் இருவரும் மேலே பாய்ந்து சென்று தம் வாயிலுள்ள வெம்மையுடைய பற்களால் (ஒருவரையொருவர்) கடித்தலால் (அக்கடிவாயினின்றும்) பொங்கி மீதெழுந்த இரத்தம் திசைகள்தோறும் தெறித்தலால் (விசும்பில்) எல்லாப் பக்கங்களிலும் தோன்றிய செழித்த ஒளியுடைய விண்மீன்கள் யாவும் (தம் இயல்பாகிய நிறம் வேறுபட்டுச்) செவ்வாய் என்னும் கோளினை யொத்துத் தோன்றின; மேகங்கள் யாவும் செவ்வானத்தை ஒத்தன.

கு :—மிடல் - வன்மை. சோரி - இரத்தம். அது-பகுதிப் பொருள் விகுதி. ஆசைகள் - திசைகள். செவ்வாய் - ஒன்பது கிரகங்களுள் ஒன்று ; செந்நிற ஒளியுடையதாதலின் செவ்வாய் என்னும் பெயர்த் தாயிற்று. செக்கர் - செவ்வானம். (53)

வாலியின் தோள்களும் சுக்கிரீவன் மார்பும் தகர்தல்

4091. வெந்த வல்லிரும் பிடைநெடுங்
கூடங்கள் வீழ்ப்பச்
சிந்தி யெங்கணுஞ் சிதறுவ
போற்பொறி தெறிப்ப
இந்தி ரன்மகன் புயங்களு
மிரவிசே யுரனுஞ்
சந்த வன்னெடுந் தடக்கைக
டாக்கலிற் றகர்வ.

வெந்த வல் இரும்பிடை நெடுங் கூடங்கள் வீழ்ப்பச்
சிந்தி எங்கணும் சிதறுவபோல், பொறி தெறிப்ப,
இந்திரன்மகன் புயங்களும், இரவிசேய் உரனும்,
சந்த வல் நெடுந் தடக்கைகள் தாக்கலின் தகர்வ.

பொ :—(உலைக்களத்திற் பழுக்கக்) காய்ந்த வலிய இரும்பின் மேற் சம்மட்டிகளால் அடிக்க அதனினின்றும் தீப்பொறிகள் சிந்திச் சிதறுவன போன்று தீப்பொறிகள் பறக்க, இந்திரன் புதல்வனாகிய வாலியின் தோள்களும் சூரியன் புதல்வனாகிய சுக்கிரீவனது மார்பும் அழகிய வலிய நீண்ட கைகள் தாக்குதலால் சிதைவுறுவன வாயின.

கு :—கூடம் - சம்மட்டி. இந்திரன் மகன் - வாலி. இரவிசேய் - சூரியன் மகன்; சுக்கிரீவன். சுக்கிரீவன் தன் வலிய கைகளால் வாலியின் தோள்களில் தாக்கினானாக, வாலி தன் வலிய கைகளால் சுக்கிரீவனது மார்பில் தாக்கினான் என்பார், 'இந்திரன் மகன் புயங் களும் இரவி சேய் உரனும் சந்த வல் நெடுந்தடக்கைகள் தாக்கலின் தகர்வ' என்றார். இருவர் கைகளுக்கும் சம்மட்டியும், தாக்கப்பெற்ற அவ்விருவர் தோள்களுக்கும் மார்புக்கும் உலைக்களத்திற் காய்ச்சப் பட்டுச் சம்மட்டியால் தாக்கப்படும் இரும்பும் உவமை. (54)

## இருவரும் செய்த போர்ச் செயல்கள் 4092-4096

**4092.** உரத்தி ஞன்மடுத் துந்துவர்
பாதமிட் டுதைப்பர்
கரத்தி ஞல்விசைத் தெற்றுவர்
கடிப்பர்நின் றிடிப்பர்
மரத்தி ஞலடித் துரப்புவர்
பொருப்பினம் வாங்கிச்
சிரத்தின் மேலெறிந் துறுக்குவர்
தெழிப்பர்தீ விழிப்பர்.

உரத்திஞல் மடுத்து உந்துவர், பாதம் இட்டு உதைப்பர்;
கரத்திஞல் விசைத்து எற்றுவர்; கடிப்பர்; நின்று இடிப்பர்;
மரத்திஞல் அடித்து உரப்புவர்; பொருப்பு இனம் வாங்கிச்
சிரத்தின்மேல் எறிந்து உறுக்குவர்; தெழிப்பர்; தீ விழிப்பர்.

பொ :—(இருவரும் ஒருவரையொருவர்) மார்பிஞல் தாங்கியெடுத்தெறிவர்; கால்களால் உதைத்துத் தள்ளுவர்; கைகளால் விசையுடன் வீசி யெறிவர்; (வாயிஞற்) கடிப்பர்; நேர் நின்று மோதுவர்; அதட்டி மரங்களால் அடிப்பர்; மலேகளேப் பெயர்த்தெடுத்துத் தலேயின்மேல் வீசி ஒறுத்து வைது அதட்டுவர். தீப்பொறி பறக்கச் சினந்து நோக்குவர்.

கு :—உரம் - மார்பு. உந்துதல் - மேலெழும்படி தள்ளுதல். விசைத்து எற்றுதல் - விசையுடன் வீசியெறிதல். உறுக்குதல் — ஒறுத்தல். உரப்புதல், தெழித்தல் என்பன வாயிஞல் அதட்டி அச்சுறுத்தல் என்னும் பொருளில் வழங்கின. (55)

**4093.** எடுப்பர் பற்றியுற் றொருவரை
யொருவர்விட் டெறிவர்
கொடுப்பர் வந்துரங் குத்துவர்
கைத்தலங் குளிப்பக்
கடுப்பி னிற்பெருங் கறங்கெனச்
சாரிகை பிறங்கத்
தடுப்பர் பின்றுவ ரொன்றுவர்
தழுவுவர் விழுவர்.

எடுப்பர் பற்றி உற்று ஒருவரை ஒருவர் விட்டு எறிவர் ;
கொடுப்பர் வந்து உரம் ; குத்துவர் கைத்தலம் குளிப்ப ;
கடுப்பினில் பெருங் கறங்கு எனச் சாரிகை பிறங்கத்
தடுப்பர் ; பின்றுவர், ஒன்றுவர், தழுவுவர், விழுவர்.

பொ :—ஒருவரை யொருவர் இறுகப் பிடித்து உயரத் தூக்கியவராய் (நெடுந்தொலைவிற் சென்று விழும்படி) வீசியெறிவர். (எறியப்பட்டவர்) எழுந்து வந்து தம் மார்பைக் கொடுத்து எதிர்ப்பர். (எதிர்த்தவர் மார்பிற்) கைகள் உள்ளே பதியும்படி குத்துவர். (அந்நிலையில்) விரைவுடன் பெரிய காற்றுடியினைப் போன்று சுழன்று திரிபவராய் (அக்குத்துக்களை)த் தடுப்பர். (மேலும் எதிர்த்துத் தாக்குதற்கென) இருவரும் பின் பெயர்வர்; (நெருக்கி) ஒன்றுவர்; இறுகத்தழுவுவர்; (ஒரு சேரக்) கீழே விழுவர்.

கு :—எடுத்தல் - உயரத் தூக்குதல். ஒருவரை ஒருவர் உற்றுப் பற்றி எடுப்பர், எறிவர், உரம் கொடுப்பர், குத்துவர், தடுப்பர் என இயையும். கடுப்பு - விரைவு. கறங்கு - காற்றுடி. சாரிகை - வட்டமாக வளைந்தோடுதல். பின்றுதல் - தாக்கற்குப் பின் வாங்குதல். 'பொருதகர் தாக்கற்குப் பேருந் தகைத்து' (486) என்பது திருக்குறள். பின்றுதல் பின்னுதல் எனக்கொண்டு கால்களாற் பின்னிப் பொருதல் எனப் பொருள் கொள்ளுதலும் பொருந்தும். (56)

4094. வாலி னுரம் வரிந்தனர்
நெரிந்துக வலிப்பர்
காலி னெடுங் கால்பிணித்
துடற்றுவர் கழல்வர்
வேலி னுலற வெறிந்தென்
விறல்வலி யுகிரால்
தோலி னுருட னெடுவரை
முழையெனத் தொளைப்பர்.

வாலினால் உரம் வரிந்தனர், நெரிந்து உக வலிப்பர் ;
காலினால் நெடும் கால்பிணித்து உடற்றுவர் ; கழல்வர் ;
வேலினால் அற எறிந்தென, விறல் வலி உகிரால்,
தோலின் ஆர் உடல், நெடுவரை முழை எனத் தொளைப்பர்.

பொ :—(வாலி, சுக்கிரீவர் இருவரும் ஒருவரை யொருவர்) வாலினால் மார்பினை இறுகப் பிணித்தவராய் (மார்பு) நெரிந்து சிதை

யும்படி வலித்து இழுப்பர்; காலினுல் நீண்ட காலினைப் பிணைத்து வருத்துவர். (எதிரியின்) பிடியினின்றும் கழன்று வெளிப்படுவர். வேற்படையினுல் அற்றுச் சிதைய வெட்டினுற் போன்று மிக்க வன்மை வாய்ந்த (கூரிய) நகங்களால் வலிய தோலாற் பொதிந்த உடம்பினை நீண்ட மலையிலுள்ள குகை யென்னும்படி கிழித்துத் துளைப்பர்.

கு :—வரிதல் - இறுகக் கட்டுதல். கழலுதல் - பிணிப்பினின்றும் நெகிழ்ந்து வெளிப்படுதல். உகிர் - நகம். முழை - மலைக்குகை. (57)

4095. மண்ண கத்தன மலைகளு
மரங்களு மற்றும்
கண்ண கத்தினிற் ரோன்றிய
யாவையுங் கையால்
எண்ண கப்பறித் தெறிதலி
னெற்றலி னிற்ற
விண்ண கத்தினை மறைத்தன
மறிகடல் வீழ்ந்த.

மண்ணகத்தன மலைகளும், மரங்களும், மற்றும்
கண்ணகத்தினில் தோன்றிய யாவையும், கையால்,
எண் நகப் பறித்து எறிதலின், எற்றலின், இற்ற ;
விண்ணகத்தினை மறைத்தன ; மறிகடல் வீழ்ந்த.

பொ :—மண்ணிடத்தனவாகித் தோன்றிய மலைகளும் மரங்களும் மற்றும் கண்ணெதிர்ப்பட்டனவாகிய எல்லாப் பொருள்களும் (வாலி சுக்கிரீவர் இருவரும்) தம் உள்ளத் திண்மை விளங்கக் கைகளாற் பெயர்த்தெடுத்து வீசுதலாலும் புடைத்துத் தாக்குதலாலும் சிதர்ந்து அழிந்தனவாய் விசும்பிடத்தினை மறைத்தன; (அலைகள்) மறியும் கடலின் கண்ணே வீழ்ந்தன.

கு :—மலைகளும் மரங்களும் மற்றும் யாவையும், எறிதலின் எற்றலின் இற்ற; விண்ணகத்தினை மறைத்தன; மறிகடல் வீழ்ந்த என இயையும். இற்ற மறைத்தன என்பவை முற்றெச்சம். எண் என்பது ஈண்டு உள்ளத்தின் திண்மையைக் குறித்து நின்றது. நகுதல் – விளங்குதல். பறித்தல் - வேருடன் பெயர்த்தெடுத்தல். எறிதல் - வீசுதல். எற்றல் - புடைத்தல். (58)

4096 வெருவிச் சாய்ந்தனர் விண்ணவர்
வேறென்னை விளம்ப
லொருவர்க் காண்டம ரொருவருந்
தோற்றில ருடன்று
செருவிற் றேய்த்தலிற் செங்கனல்
வெண்மயிர் செல்ல
முரிபுற் கானிடை யெரிபரந்
தனவென முனைவார்.

வெருவிச் சாய்ந்தனர், விண்ணவர்; வேறு என்னை விளம்பல்?
ஒருவர்க்கு ஆண்டு அமர் ஒருவரும் தோற்றிலர்; உடன்று
செருவில் தேய்த்தலின், செங்கனல் வெண்மயிர் செல்ல,
முரிபுல் கானிடை எரிபரந்தன என முனைவார்.

பொ:—அங்கு (வாலி சுக்கிரீவர் இருவருள்) யாரும் ஒருவர்க்கொருவர் போரில் தோற்றுப் பின்னிட்டிலர். உருத்தெழுந்து போரில் (ஒருவரை யொருவர்) தேய்த்து வருத்துதலால் (அவர் தம் உடம்பில்) செந்தீத்திரள் வெண்மை நிறம் வாய்ந்த மயிர்க்கால் தோறும் வெளிப்பட, உலர்ந்த புற்கள் நிரம்பிய காட்டிடத்தே தீப்பற்றி யெரிந்தாற்போன்று தோன்ற (இருவரும்) முனைந்து போர் செய்வாராயினர். (அது கண்டு) வானகத்தாராய தேவர்களும் (அங்கு நிற்கலாற்ருது) அஞ்சி நிலைகுலைந்தோடினர்கள். (இங்ஙனமாயின் இவ்விருவரது போரின் கடுமை குறித்துக்) கூறத்தக்கது வேறு யாதுளது?

கு:—ஆண்டு ஒருவரும் ஒருவர்க்கு அமர் தோற்றிலர் முனைவார் (அது கண்டு) விண்ணவர் வெருவிச் சாய்ந்தனர், வேறு விளம்பல் என்னை? என இயைத்துப் பொருள் கொள்க. வெருவுதல் – அஞ்சுதல். சாய்தல் – நிலைகுலைந்து தளர்தல். முரிபுல் – உலர்ந்த புல். (59)

### வாலி, சுக்கிரீவனைத் தாக்கி வருத்துதல்

4097. அன்ன தன்மைய ராற்றலி
னமர்புரி பொழுதின்
வன்னெ டுந்தடந் திரள்புயத்
தடுதிறல் வாலி

சொன்ன தம்பியைத் தும்பியை
யரிதொலைத் தென்னக்
கொன்ன கங்களிற் கரங்களிற்
குலைந்துக மலைந்தான்.

அன்ன தன்மையர் ஆற்றலின் அமர்புரி பொழுதின்,
வல்நெடுந் தடம் திரள் புயத்து அடுதிறல் வாலி,
சொன்ன தம்பியைத் தும்பியை அரி தொலைத்தென்னக்
கொன் நகங்களின், கரங்களின் குலைந்து உக மலைந்தான்.

பொ :—(போரிற் பின்னிடாத) அத்தன்மையராகிய (வாலி, சுக்கிரீவர்) இருவரும் பெருவன்மையுடன் போர் செய்யும் பொழுது வலிய நீண்ட பெரிய திரண்ட தோள்களையும் (எதிர்த்தாரைக்) கொல்லும் வலிமையினையும் உடைய வாலி என்பான், முற்சொன்ன தம்பியாகிய சுக்கிரீவனை யானையைச் சிங்கம் அழிக்குமாறு போன்று வலிய நகங்களாலும் கைகளாலும் நிலைகுலைந்து விழும்படி பொருது வருத்தினன்.

கு :—தும்பி - யானை. அரி - சிங்கம். தம்பிக்குத் தும்பியும் வாலிக்கு அரியும் உவமை. கொன் - வலி. நகங்களின் கரங்களின் என்புழி இன் ஏதுப் பொருளில் வந்தது. மலைதல் - போர் செய்தல். (60)

வாலியால் தாக்கப்பட்டு வருந்திய சுக்கிரீவன், இராமனை யடைந்து அவன் பணித்தவாறு அடையாளமாலை மிலைந்து சென்று பொருதல்

4098. மலைந்த போதினைந் திரவிசே
யையன்மாட் டணுகி
யுலைந்த சிந்தையோ டுணங்கினன்
வணங்கிட வுள்ளம்
குலைந்தி டேலுமை வேற்றுமை
தெரிந்திலங் கொடிப்பூ
மிலைந்து செல்கென விடுத்தன
னெதிர்த்தனன் மீட்டும்.

மலைந்தபோது இனைந்து, இரவிசேய், ஐயன்மாட்டு அணுகி, உலைந்த சிந்தையோடு உணங்கினன், வணங்கிட, ‘உள்ளம்

குலேந்திடேல் ; உமை வேற்றுமை தெரிந்திலம் ; கொடிப்பூ
மிலேந்து செல்க ' என விடுத்தனன்; எதிர்த்தனன் மீட்டும்.

பொ :—(இங்ஙனம் வாலி) பொருது தாக்கியபொழுது சூரிய குமாரனுகிய சுக்கிரீவன் மிகவும் வருந்தி, இராமன் இருக்கும் இடத்தை அடைந்து, நடுங்கிய மனத்தோடு வாட்டமுற்றவனுகி (இராமனே)ப் பணிந்து நிற்க, (அவனது துயர்நிலேக்கு இரங்கிய இராமன் அவனே நோக்கி) 'நீ மனம் நடுக்கமுற்று வருந்துதலேத் தவிர்க. (தம்பியும் தமையனுமாகிய) நும்மிருவரையும் (பிரித்தறிதற்குரிய) வேறுபாட்டினேத் தெரிந்துகொள்ள இயலாத நிலேயில் உள்ளோம். (நின்னெடு போர் புரியும் வாலியை வேறு பிரித்துணர்ந்து அவன் மேல் அம்பினே எய்தற்கு வாய்ப்பாகக்) கொடிப்பூவினே (நினது தலேயிற்) சூடிக்கொண்டு செல்வாயாக எனக் கூறி அனுப்பினுன். (அவ்வாறே சுக்கிரீவனும் கொடிப் பூவினேத் தலேயிற் சூடிக்கொண்டு) மீளவும் (வாலியை) எதிர்த்துப் போர் செய்வானுயினுன்.

கு :—உடன் பிறப்பாளராகிய வாலியும் சுக்கிரீவனும் நிறத்தாலும் வடிவாலும் ஒருவரே எனச் சொல்லத்தக்க ஒத்த உடலமைப்புடையராதலின், ஒத்துப் பொருது நிற்கும் அவ்விருவருள் இன்னவன் வாலி என அடையாளந் தெரிந்து அவன்மேல் அம்பினே எய்ய இயலாத நிலேயினனுகிய இராமன். வாலியால் தாக்கப்பட்டு வருந்தித் தன்பால் வந்து நின்ற சுக்கிரீவனே நோக்கி, 'நும் இருவரையும் வேறு பிரித்து உணரும் வண்ணம் நீ கொடிப்பூவை மிலேந்து செல்க' எனக் கூறினுன் என்பதாம். 'கஜபுஷ்பி' என்ற கொடிப்பூ சுக்கிரீவன் கழுத்தில் அடையாளமாக அணியப்பெற்றது என வான்மீகம் கூறும். (61)

இச் செய்யுளின் பின் 53-ஆம் எண்ணுள்ள சுவடியில் பின்வருமாறு மூன்று செய்யுட்கள் வரையப்பெற்றுள்ளன :—

4098 (a) ஆற்றலன் வாலிக் காகி
யருங்கதிர்ப் புதல்வன் மீண்டும்
ஏற்றிய சிலேயி ராம
னிணேயடி யிறைஞ்சி வீழ்ந்து
தோற்றுமுன் னுவி கொண்டித்
தொல்லுறை யிருந்தே னுந்தன்
மாற்றமே வலியாய்ச் சென்றே
னுடன்வலி மாய்ந்த தென்ருன்.

(b) என்றலு மிராமன் நீங்க
ளிருவரு மெதிர்ந்த போரில்
ஒன்றிடு முடலி னுலே
வுருத்தெரி வரிய தாகிக்

கொன்றிடு பாண மேவக்
குறித்திலேன் குறியாற் செய்த
மன்றலர் மாலை சூட்டி
யேவுது மறித்து மென்றான்.

(c) இராமனஃ துரைப்பக் கேட்டே
யிரவிசேய் ஏழ தாகும்
தராதலத் ததிர வார்த்துத்
தம்முனோன் முன்னர்ச் செல்லப்
பராபர மாய மேருப்
பருப்பதம் தோற்றிற் றென்னக்
கராதல மடித்து வாலி
கனற்றுகள் சிவந்து காட்ட.

சுக்கிரீவன் வாலியைத் தாக்குதல்

4099. தயங்கு தாரகை நிரைதொடுத்
தணிந்தன போல
வயங்கு சென்னியன் வயப்புலி
வானவல் லேற்றோ
டுயங்கு மார்ப்பின னெல்லைவந்
தடுதிறல் வாலி
பயங்கொ ளப்புடைத் தெற்றினன்
குத்தினன் பலகால்.

தயங்கு தாரகை நிரை தொடுத்து அணிந்தன போல,
வயங்கு சென்னியன், வயப்புலி வானவல் ஏற்றோடு
உயங்கும் ஆர்ப்பினன், ஒல்லை வந்து, அடுதிறல் வாலி
பயம் கொளப் புடைத்து, எற்றினன் ; குத்தினன், பலகால்.

பொ :—விளங்குகின்ற விண்மீன்கள் மாலையாகத் தொடுத்து அணியப் பெற்றன போல(க் கொடிப் பூ) விளங்கும் தலையினையுடைய வணகிய சுக்கிரீவன், வன்மை மிக்க புலியும் மேகத்திலுள்ள வலிய இடியேறும் அஞ்சி வருந்தும்படியான ஆர்ப்பொலியைச் செய்தவனாய் விரைந்து வந்து, (எத்தகைய பகையினையும்) அழிக்கவல்ல ஆற்றல் படைத்த வாலி அச்சங்கொள்ளும்படி (அவனை) அறைந்து தாக்கினான்; பலமுறை குத்தினான்.

கு :—தயங்குதல் - விளங்குதல். தாரகை - நட்சத்திரம். நிரை - வரிசை ; மாலை. அடையாளந் தெரிந்து கொள்ளுதற் பொருட்டுச் சுக்கிரீவனது தலையிற் சூட்டப்பெற்றுள்ள கொடிப் பூக்கள், வானத்தி லுள்ள நட்சத்திரங்களை ஒரு மாலையாகத் தொடுத்து அணிந்தாற் போன்று விளங்கின என்பார், 'தயங்கு தாரகை நிரைதொடுத்து அணிந்தனபோல வயங்கு சென்னியன்' என்றார். வயங்குதல் - விளங்குதல். விளங்குதல் என்னும் வினைக்கு எழுவாயாக முன்பாட்டி லுள்ள கொடிப் பூ வருவித்துரைக்கப்பட்டது. சுக்கிரீவன் வயப்புலி யும் இடியேறும் அஞ்சும்படிப் பெரியதோர் ஆரவாரத்தைச் செய்து வாலியை மீண்டும் எதிர்த்துத் தாக்கினன் என்பதாம். 'வய' என்பது வலி என்னும் பொருளுடைய உரிச்சொல். (62)

இச் செய்யுளின் பின் 27-ஆம் எண்ணுள்ள சுவடியிற் பின்வரும் பாடலொன்று காணப்படுகின்றது.

4099 (a) சிவந்த கண்ணுடை வாலியுஞ் செங்கதிர்ச் சேயும்
வெவுந்த போதவ ரிருவரும் நொக்கின்ற வெல்லை
கவந்த தம்பியைக் கையினு லெடுத்தவ னுயிரை
அவந்து மற்றவ னுருயி ரந்தகற் களிப்பான்.

### வாலி சுக்கிரீவனை உயிர்த்தலத்தில் புடைத்து உதைத்தல்

**4100.** அயிர்த்த சிந்தைய னந்தகன்
குலைகுலைந் தஞ்சச்
செயிர்த்து நோக்கினன் சினத்தொடு
சிறுநகை செய்யா
வயிர்த்த கையினுங் காலினுங்
கதிர்மகன் மயங்க
வுயிர்த்த லந்தொறும் புடைத்தன
னடித்தன னுதைத்தான்.

அயிர்த்த சிந்தையன், அந்தகன்
குலைகுலைந்து அஞ்சச்
செயிர்த்து நோக்கினன்; சினத்தொடு
சிறுநகை செய்யா,
வயிர்த்த கையினும், காலினும்,
கதிர்மகன் மயங்க,
உயிர்த் தலந்தொறும் புடைத்தனன்;
அடித்தனன்; உதைத்தான்.

பொ :—ஐயுற்ற மனத்தினனாகிய வாலி, கூற்றுவனும் நெஞ்சம் அஞ்சி நடுநடுங்கும்படி (சுக்கிரீவனை) வெகுண்டு நோக்கியவனாய் மனத்துள்ளே கறுவுகொண்டு (இகழ்ந்து) முறுவலித்துச் சிரித்துச் சூரியனுக்கு மகனாகிய சுக்கிரீவன் உணர்விழந்து சோரும்படி அவனது உயிர்நிலையாகிய அங்கங்கள் தோறும் திண்மை மிக்க தன் கைகளாலும் கால்களாலும் குத்தினான்; அடித்தான்; உதைத்தான்.

கு :—அயிர்த்த சிந்தையன் என்றது, 'சிறிது நேரத்திற்கு முன் என்னுடன் பொருது நிற்கலாற்றாது ஓடிய இச் சுக்கிரீவன், இப்பொழுது மீண்டும் கடும்போர் புரிய விரைந்து வந்ததற்குரிய காரணம், என்னை வெல்லுதற்குரிய பெரியதொரு துணைவலியைத் தான் பெற்றமைதானோ' என வாலி ஐயுற்ற மனத்தினனானதலை. அயிர்த்தல்-ஐயுறுதல். அந்தகன் - இயமன். குலைகுலைந்து அஞ்ச என்பதனை அஞ்சிக் குலைகுலைய என விகுதி பிரித்துக் கூட்டுக. குலைகுலைதல் - நடு நடுங்குதல்; பதறுதல். செயிர்த்தல் - வெளிப்பட வெகுளுதல். சினத்தல் - மனத்துட் கறுவு கொள்ளுதல். 'செற்றன்றாயினும் செயிர்த்தன்றாயினும்' (புறம் - 226) எனவரும் தொடர்க்குத் 'தன் மனத்துள்ளே கறுவுகொண்டதாயினும் வெளிப்பட நின்று வெகுண்டதாயினும்' எனப் பழைய உரையாசிரியர் கூறிய உரை இங்கு நோக்கத் தக்கதாகும். சிறுநகை - முறுவல் நகை. நகை செய்யா - நகைத்து; செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். வயிர்த்த - வயிரத்தின் தன்மை வாய்ந்த; திண்மை கொண்ட; வயிரம் என்ற பெயரடியாகப் பிறந்த வினைச்சொல். கையிற் புடைத்தனன் அடித்தனன் எனவும் காலின் உதைத்தனன் எனவும் நிரலே இயைத்துரைக்க. உயிர்த் தலம் - உயிர் நிலையாய இடம். (63)

### வாலியினால் நெருக்கப்பட்டுக் கலங்கிய சுக்கிரீவன் இராமனிருக்கின்ற திசைநோக்கி விழித்தல்

4101. கக்கி னானுயி ருயிர்ப்பொடுஞ்
செவிகளிற் கண்ணி
னுக்க தாங்கெரிப் படலையோ
டுதிரத்தி னோதந்
திக்கு நோக்கினன் செங்கதி
ரோன்மகன் செருக்கிப்
புக்கு மீக்கொடு நெருக்கின
னிந்திரன் புதல்வன்.

கக்கினன் உயிர், உயிர்ப்பொடும்; செவிகளின், கண்ணின்
உக்கது, ஆங்கு எரிப்படலையோடு உதிரத்தின் ஓதம்;
திக்கு நோக்கினன், செங்கதிரோன் மகன்; செருக்கிப்
புக்கு, மீக்கொடு நெருக்கினன், இந்திரன் புதல்வன்.

பொ :—அப்பொழுது, சிவந்த கதிர்களையுடைய சூரியன் புதல்வனாகிய சுக்கிரீவன் பெருமூச்சுடன் உயிரைக் கக்குவானாயினான். அவனுடைய காதுகளிலிருந்தும் கண்களிலிருந்தும் தீப்படலத்துடன் இரத்த வெள்ளமும் சிந்தியது. (வாலியின் முன் எதிர்த்து நிற்கும் வலியில்லாதவனாய், இராமன் மறைந்துள்ள) திசையை நோக்கினான். (அந்நிலையில்) இந்திர குமாரனாகிய வாலி செருக்குற்றுச் சுக்கிரீவன் மேற் பாய்ந்து அவனைப் பற்றித் தூக்கி(த் தன் கைகளால்) நெருக்கி வருத்தினான்.

கு :—செங்கதிரோன் மகன் – சுக்கிரீவன். உயிர்ப்பொடும் உயிர் கக்கினன் என்றது, உயிர் போய் விட்டது என்னும்படி பெருமூச்சு விட்டான் என்றவாறு. கக்குதல் - உமிழ்தல்; வெளிப்படுத்தல். எரிப்படலை – தீக்கொழுந்து. உகுதல் - சிந்துதல். சுக்கிரீவன் வாலியை எதிர்த்து நிற்கும் ஆற்றலில்லாதவனாய் இராமனது பெருந் துணையை நாடி அவன் மறைந்துள்ள திசையை நோக்கித் தனது ஆற்றாமையைப் புலப்படுத்தினான் என்பார், 'திக்கு நோக்கினன் செங்கதிரோன் மகன்' என்றார். மீக்கொடு - மேலே தூக்கிக் கொண்டு. (64)

## வாலி சுக்கிரீவனை நிலத்தில் மோதுதற்குப்பற்றி மேலே தூக்கியபொழுது இராமன் வாலியின்மேல் அம்பு செலுத்தல்

4102. எடுத்துப் பாரிடை யெற்றுவன்
பற்றியென் றிளவல்
கடித்த லத்தினுங் கழுத்தினுந்
தன்னிரு கரங்கள்
மடுத்து மீக்கொண்ட வாலிமேற்
கோலொன்று வாங்கித்
தொடுத்து நாணொடு தோளுறுத்
திராகவன் றுரந்தான்.

'எடுத்துப் பாரிடை எற்றுவன், பற்றி' என்று இளவல்
கடித்தலத்தினும், கழுத்தினும், தன் இருகரங்கள்

மடுத்து, மீக்கொண்ட வாலிமேல், கோல் ஒன்று வாங்கித்
தொடுத்து, நாணொடு தோள் உறுத்து, இராகவன் துரந்தான்.

பொ :—(' இவனைப்) பற்றி யெடுத்துத் தரையில் மோதுவேன்' என்று எண்ணித் தம்பியாகிய சுக்கிரீவனது இடையிலும் கழுத்திலும் தன் இரண்டு கைகளையும் செலுத்தி (அவனை) உயரத் தூக்கிய வாலியின் மேல், ரகுகுலத் தோன்றலாகிய இராமன், ஓர் அம்பினை யெடுத்து வில்லின் நாணுடன் தன் தோள் பொருந்துமாறு செய்து (வில்லை வளைத்து நாண் ஏற்றி) அம்பினைத் தொடுத்து விரைவிற் செலுத்தினான்.

கு :—' பற்றி யெடுத்துப் பார்மிசை எற்றுவன் ' என்றது வாலியின் உட்கோள். எற்றுவன் – மோதுவேன் ; அன்விகுதி தன்மை யொருமையில் வந்தது. இளவல் – தம்பி ; என்றது சுக்கிரீவனை. கடித்தலம் – இடுப்பினிடம் ; பாதுகாக்கத்தக்க (உயிர்நிலையாகிய) இடம் எனப் பொருளுரைத்தலும் பொருந்தும். மடுத்தல் - (இடையிற்) செலுத்துதல். மீக்கொண்ட – மேலே தூக்கியெடுத்த. கோல் – அம்பு. இராகவன், கோல் ஒன்று வாங்கி நாணொடு தோள் உறுத்துத் தொடுத்து வாலிமேல் துரந்தான் என இயையும். துரத்தல் - செலுத்துதல். (65)

## இராமபாணம் வாலியின் மார்பை எளிதில் துளைத்தல்

4103. காரும் வார்சுவைக் கதலியின்
கனியினைக் கழியச்
சேரு மூசியிற் சென்றது
நின்றதென் செப்ப
நீரு நீர்தரு நெருப்பும்வன்
காற்றுங்கீழ் நிமிர்ந்த
பாருஞ் சார்வலி படைத்தவ
னுரத்தைப் பகழி.

காரும் வார் சுவைக் கதலியின் கனியினைக் கழியச்
சேரும் ஊசியிற் சென்றது-நின்றது என் செப்ப ?-
நீரும், நீர்தரு நெருப்பும், வன்காற்றும், கீழ் நிமிர்ந்த
பாரும் சார் வலி படைத்தவன் உரத்தை அப் பகழி.

பொ :—(இராமன் எய்த) அவ் அம்பானது, நீரும், நீரைத் தோற்றுவித்த நெருப்பும், வலிய தன்மையினையுடைய காற்றும், (இவற்றிற்

கெல்லாம் நிலைக்களமாய்) கீழே பரவியுள்ள நிலமும் ஆகிய நாற் பெரும் பூதங்களைச் சார்ந்த பேராற்றல்களை ஒருசேரப் படைத் துள்ளவனாகிய வாலியின் மார்பினை, வாழையினது மிக்க சுவையினை யுடைய முதிர்ந்த பழத்தினை மிகவும் ஊன்றிச் சேரும் ஊசியினைப் போன்று சென்று தைத்தது. (அதன் வன்மையும் விரைவும் பற்றி இனி நாம்) கூற நின்றது யாதுளது ?

கு :—அப்பகழி, வலிபடைத்தவன் உரத்தைக் கதலியின் கனியினைக் கழியச் சேரும் ஊசியிற் (கழியச்) சென்றது என இயை யும். காரும் - முதிர்ந்த செவ்வியினையுடைய. கதலியின்கனி - வாழைப்பழம். ' இவள் முகத்த கார்க்குவளை ' (பு. வெ. 316) என் னும் தொடர்க்கு ' இவளுடைய முகத்திற் செவ்விக் குவளையாகிய கண்கள்' என்னும் உரைப் பகுதி இங்கு நோக்கத்தக்கது. கழியச் சேர்தல் – மிகவும் விரைந்து சேர்தல். யாவராலும் இடைநின்று விலக்குதற்கு அரிய வாலியின் பெருவன்மைக்கு, யாவராலும் மாற்று தற்கு அரிய பேராற்றல் வாய்ந்த ஐம்பெரும் பூதங்களுள் அருவ நிலை யினதாகிய விசும்பு நீங்கலாக உருவுடைய ஏனைய நாற்பெரும் பூதங் களையும் உவமையாகக் கூறினர் ஆசிரியர். இந் நாற்பெரும் பூதங் களின் பேராற்றல்களாவன : தணித்தற்கியலாத வெம்மையும், சிறை செய்து தடுத்தற்கியலாத நீர்மையும், எதிர் நின்று தடுக்க ஒண்ணாத பெருவன்மையும், எல்லாவற்றையும் பொறுத்து நிற்கவல்ல திண்மை யும் ஆகும். வாலி நாற்பெரும் பூதங்களின் ஆற்றல் முழுவதும் ஒரு சேரப் பெற்ற பெருவீரன் என்பதனை ' நிலனும் நீருமாய் நெருப்புங் காற்றுமென், றுலைவில் பூதநான்குடைய ஆற்றலான் ' (நட்புக் கோட் – 39) என ஆசிரியர் முன்னருங் குறித்துள்ளமை இங்கு நினைக் கத்தக்கதாகும். இவ்வாறே சங்கத்துச் சான்றோரும்,

' நீர்மிகிற் சிறையுமில்லை, தீமிகின்
மன்னுயிர் நிழற்றும் நிழலுமில்லை,
வளிமிகின் வலியுமில்லை, ஒளிமிக்கு
அவற்றோரன்ன சினப்போர் வழுதி ' (புறம் – 51)

என ஐம்பெரும் பூதங்களில் இடையிலுள்ள நீர், தீ, வளி என்னும் மூன்றையும் ஆற்றல் மிக்க வேந்தனொருவனுக்கு உவமையாகக் கூறி யுள்ளமை ஈண்டு ஒப்புநோக்கி யுணரத்தக்கதாகும். வானிலிருந்து வளியும், வளியிலிருந்து தீயும், தீயிலிருந்து நீரும், நீரிலிருந்து நில மும் தோன்றின என ஐம்பெரும் பூதங்களின் தோற்றம் வேதத்துட் கூறப்படுதலால், அம்முறைப்படி நெருப்பாகிய பூதத்திலிருந்து நீர் தோன்றியது என்பார், ' நீர்தரு நெருப்பு ' என்றார். ' நீரைத் தந்தது நெருப்பு ' என்பது இதனாற் புலனாம். இங்ஙனமே காற்றி லிருந்து தீத் தோன்றிய தென்பது, ' வளியிடைத் தீயெழுந்தன்ன

திறலினர்' எனவரும் திருமுருகாற்றுப் படைத் தொடரிற் குறிக்கப் பெற்றிருத்தல் அறியத்தக்கதாகும். உருவுடைய பூதங்கள் நான்கிலும் பிறவற்றைக் கீழ்ப்படுத்து மேற் செல்லும் பெருவலி படைத்தது காற்றென்றேயாதலின் 'வன்காற்று' எனச் சிறப்பித்தார். ஏனைப் பூதங்களுக்கெல்லாம் கீழதாய் அடியிற் பரவியது நிலமாதலின் 'கீழ் நிமிர்ந்த பார்' என்றார். நிமிர்தல் - பரத்தல். 'உரைகுறுக நிமிர் கீர்த்தி' (கம்பர் - பால - குலமுறை – 4) என்றார் முன்னரும். (66)

## வாலி கலங்கி விழுதல்

4104. அலங்கு தோள்வலி யழிந்ததன்
 றம்பியை யருளான்
வலங்கொள் பாரிடை யெற்றுவா
 னுற்றபோர் வாலி
கலங்கி வல்விசைக் கால்கிளர்ந்
 தெறிவுறக் கடைக்கால்
விலங்கன் மேருவும் வேர்பறிந்
 தாலென வீழ்ந்தான்.

அலங்கு தோள் வலி அழிந்த தன் தம்பியை அருளான்,
வலம்கொள் பாரிடை எற்றுவான் உற்ற போர் வாலி,
கலங்கி, வல்விசைக் கால் கிளர்ந்து எறிவுறக் கடைக்கால்
விலங்கல் மேருவும் வேர் பறிந்தாலென, வீழ்ந்தான்.

பொ:—விளங்குகின்ற தோளின் வலி குன்றிச் சோர்வுற்ற தன் தம்பியாகிய சுக்கிரீவனை அருளாற் பேணாதவனாகி (அவனை) வலிய பூமியின்மேல் மோதுதற்கு விரைந்த போர்த்திறம் வாய்ந்த வாலியானவன், (இராமனது அம்பு தன் மார்பில் தைத்துப் பதிந்த நிலையில்) மனங் கலங்கி, ஊழிக்காலத்தில் வலிய வேகத்துடன் கூடிய பெருங்காற்றுக் கிளர்ந்து வீசுதலால் (நிலத்தினைத் தாங்கும்) திண்மை மிக்க மேருமலையும் வேர்பறிந்து விழுந்தாற் போன்று (நிலமிசை) விழுந்தான்.

கு:—அலங்குதல் - விளங்குதல். தன் என்றது வாலியை. தம்பி என்றது அவன் தம்பியாகிய சுக்கிரீவனை. வாலியொடு பொருது நிற்கும் சுக்கிரீவன் தன் தமையனை யெதிர்த்துத் தாக்கும் ஆற்றல் குன்றிக் கை தளர்ந்து திக்கு நோக்கினனாகவும் அவன் தமையனாகிய வாலி தன் பேராண்மைக்கும் தம்பியின்பாற் செலுத்தத் தக்க அன்பு அருள் ஆகிய பண்புடைமைக்கும் மாறாகத் தம்பியை

வலிய நிலத்தின் மீது மோதலுற்ருன் என்பார், அலங்குதோள் வலியழிந்த தன் தம்பியை அருளான், வலங்கொள் பாரிடை எற்றுவான் உற்ற போர் வாலி' என்ருர். அருளான் என்பது முற்றெச்சம். வல் விசைக்கால் – வன்மையும் விரைவும் வாய்ந்த பெருங்காற்று. கடைக்கால் - யுக முடிவாகிய ஊழிக்காலம். விலங்கல்- மலே. மேருவிலங்கலும் என உம்மையை மாறிக் கூட்டுக. வாலி, கலங்கி, மேரு விலங்கலும் வேர் பறிந்தால் என வீழ்ந்தான் என முடியும். வாலிக்கு மேரு உவமையாதல் முன்னும் (வாலி வதை-40) கூறப்பட்டது. (67)

## வாலி, சுக்கிரீவனைப் பற்றிய பிடியில் நெகிழ்ந்து, தன் மார்பில் தைத்த அம்பினைக் கையினுல் இறுகப் பற்றுதல் 4105-4106

**4105.** சையம் வேரொடு முருமுறச்
சாய்ந்தெனச் சாய்ந்தான்
வைய மீதிடைக் கிடந்தபோ
ரடுதிறல் வாலி
வெய்ய வன்றரு மதலேயை
மிடல்கொடு கவரும்
கைநெ கிழ்ந்தன னெகிழ்ந்திலன்
கடுங்கணே கவர்தல்.

சையம் வேரொடும் உரும் உறச் சாய்ந்தெனச் சாய்ந்தான்,
வையம் மீதிடைக் கிடந்த, போர் அடுதிறல் வாலி,
வெய்யவன் தரு மதலேயை மிடல்கொடு கவரும்
கை நெகிழ்ந்தனன்; நெகிழ்ந்திலன், கடுங்கணே கவர்தல்.

பொ :—பேரிடி விழுதலால் மலே வேரொடும் சாய்ந்தாற் போன்று நிலத்தின்மேல் வீழ்ந்து கிடந்த, போரிற் கொல்லுந் தொழிலில் வல்ல வாலியானவன், வெஞ்சுடரோன் ஆகிய சூரியன் பெற்ற புதல்வனுகிய சுக்கிரீவனே வன்மையுடன் இறுகப் பற்றிய கையின் பிடி நெகிழ்ந்தானுயினும் (தன் மார்பில் தைத்து உருவும்) கொடுமை மிக்க அம்பினைப் பற்றுதலிற் கை நெகிழாதவனுயினுன்.

கு :—உரும் உறச் சையம் வேரொடும் சாய்ந்தெனச் சாய்ந்தான் வையமீதிடைக் கிடந்த வாலி என இயையும். உரும் – இடி. உற – உறுதலால்; செயவென் எச்சம் காரணப்பொருளில் வந்தது. சையம் - மலே. சாய்ந்தான் - சாய்ந்து; முற்றெச்சம். சாய்ந்து

கிடந்த என இயையும். வையமீதிடைக் கிடந்த வாலி, போரடுதிறல் வாலி எனத் தனித்தனி கூட்டிப் பொருள் கொள்க. வையமீதிடை- நிலத்தின்மேல். மீது இடை என்பன உருபின் மேல் உருபு. வாலி, வெய்யவன் தருமதலையை மிடல்கொடு கவரும் கை நெகிழ்ந்தனன், கடுங்கணை கவர்தல் நெகிழ்ந்திலன் என்க. வெய்யவன் – வெஞ்சுடரோனாகிய சூரியன். மதலை – மகன்; என்றது சுக்கிரீவனை. வாலியைக் கொல்லுதல் வேண்டி இராமன் எய்த அம்பு மார்பில் தைத்த அளவில் தளர்வுற்ற வாலியின் கைகள் சுக்கிரீவனை இறுகப் பற்றிய பிடிப்பினின்றும் தாமாகவே நெகிழ்ந்தன என்பதும், தான் தளர்வுற்ற நிலையிலும் தன் மார்பில் தைத்து ஊடுருவிய இராம பாணத்தைப் புறத்தே போகவிடாது தன் கையினால் வலிந்து பற்றும் பேராண்மையுடையவனாகி வாலி விளங்கினான் என்பதும் கூறிய வாறு. (68)

4106. வெற்றி வீரன தடுகணை
யவன்மிட லுரத்தூ
டுற்ற தப்புறத் துருதமு
னுறுவலிக் கரத்தாற்
பற்றி வாலினுங் காலினும்
பறித்தகப் படுத்தான்
கொற்ற வெங்கொடு மறலியுஞ்
சிரதலங் குலைந்தான்.

வெற்றி வீரனது அடுகணை, அவன்மிடல் உரத்தூடு
உற்றது; அப்புறத்து உருதமுன், உறுவலிக் கரத்தால்
பற்றி, வாலினும் காலினும் பறித்து அகப்படுத்தான்;
கொற்ற வெங் கொடு மறலியும் சிரதலம் குலைந்தான்.

பொ:—(தன்னைத் துணை நாடினார்க்கு) வெற்றியைத் தரும் வீரனாகிய இராமனது கொல்லுந்தன்மை வாய்ந்த அம்பு, அவ்வாலியின் வன்மை மிக்க மார்பில் (தைத்து) ஊன்றியது. (அது மார்பினை யூடுருவி) அப்புறத்தே விரைந்து செல்வதன் முன்னரே (வாலி) மிக்க வலிமையினையுடைய தன் கையினால் அதனைப் பற்றித் தன் வாலினாலும் கால்களாலும் இறுகப் பிணித்துத் தடுத்தான். (யாவரையும்) வெற்றிகொள்ளவல்ல மிக்க கொடுமை வாய்ந்த கூற்றுவனும் (தறுகண்மை வாய்ந்த வாலியின் செயலைக் கண்டு அஞ்சித்) தலை நடுங்கினான்.

கு :—அடுகணை - கொல்லும் அம்பு. மறலி - இயமன். குலைதல் - நடுங்குதல். குலைதல் என்பதற்கு வளைதல் எனப் பொருள்கொண்டு மறலியும் தலை வளைத்து நாணினன் என்றும், அசைதல் எனப் பொருள்கொண்டு மறலியும் வாலியின் வீரத்தை வியந்து தலை யசைத்தான் என்றும் விளக்கங் கூறுதலும் உண்டு. (69)

### வாலியின் சீற்றமும் ஐயமும்

4107. எழுந்து வான்முக டிடித்துகப்
படுப்பலென் றிவரும்
உழுந்து பேருமுன் றிசைதிரிந்
திறுப்பலென் றுறுக்கும்
விழுந்து பாரினை வேரொடும்
பறிப்பலென் றோரும்
அழுந்து மிச்சர மெய்தவ
ஞர்கொலென் றயிர்க்கும்.

எழுந்து, 'வான் முகடு இடித்து
உகப் படுப்பல்' என்று, இவரும்;
'உழுந்து பேரு முன், திசை திரிந்து
இறுப்பல்' என்று உறுக்கும்,
விழுந்து 'பாரினை வேரொடும்
பறிப்பல்' என்று ஓரும்;
'அழுந்தும் இச்சரம் எய்தவன்
ஆர்கொல்?' என்று அயிர்க்கும்.

பொ :—(கீழே விழுந்த வாலி) எழுந்திருந்து 'வானத்தின் மேல் முகட்டினை இடித்துச் சிதர்ந்து விழும்படி அழிப்பேன்' என்று (விசும்பின்மீது) ஏற முயல்வான்; 'உழுந்து நிலை பெயர்ந்து உருளும் நேரத்திற்குள் எல்லாத் திசைகளிலும் சுற்றித் திரிந்து (பகைவராயினரை) அழித்தொழிப்பேன்' என்று வெகுள்வான்; (இருத்தலாற்ருது கீழே) விழுந்து, 'நிலவுலகத்தை வேருடன் பறித்தெறிவேன்' என்று எண்ணுவான்; 'அழுந்தவூன்றிய இப்படைக் கலத்தை என்மேல் எய்தவன் யாவனோ? என்று ஐயுறுவான்.

கு :—வாலி, தன் மார்பில் தைத்த அம்பு வானகத்திலிருந்து எய்யப்பட்டதோ? அன்றி மண்ணுலகில் மற்றைத் திசைகளிலிருந்து எய்யப்பட்டதோ? அன்றி நிலத்தின் கீழ்ப் பாதலத்திலிருந்து எய்யப்

பட்டதோ என அந்த அம்பு வந்த திசையறியாது மறுக்கமுற்ற மனத்தனாய் மூவுலகத்தாரையும் வருத்தும் நோக்கத்துடன் பெரிதும் வெகுண்டான் என்பார், 'வான் முகடு இடித்து உகப் படுப்பல் என்று இவரும்' எனவும், திசை 'திரிந்து இறுப்பல் என்று உறுக்கும்' எனவும், 'பாரினை வேரொடும் பறிப்பல் என்று ஓரும்' எனவும் கூறினார். இவர்தல் - ஏறுதல். உழுந்து உருளும் பொழுதினை மிகச் சிறிய கால அளவுக்கு எல்லையாகக் குறித்தல் மரபு. உறுத்தல் - வெகுளுதல். ஓர்தல் - சிந்தித்தல். என் மார்பினைத் துளைத்து ஊடுருவும் வன்மை வாய்ந்த இப்படைக்கலத்தினை எய்த ஆற்றல் மிக்க பெருவீரன் யாவனோ என வாலி தனக்குள் ஐயுற்று வினவினான் என்பார், 'அழுந்தும் இச்சரம் எய்தவன் ஆர்கொல் என்று அயிர்க்கும்' என்றார். அழுந்துதல் - ஆழப் பதிதல். அயிர்த்தல் - ஐயுறுதல். தன் மார்பில் தைத்ததனைத் தன் கையினாற் பற்றித் தடுத்து இங்ஙனம் எண்ணுகின்றானாதலின் 'இச்சரம்' எனச் சுட்டினான். (70)

வாலி தன் மார்பில் தைத்த அம்பினைப் பற்றிப் பறிக்க முயன்று பறிக்க வாராமையின் வருந்துதல்

4108. எற்றுங் கையினை நிலத்தொடு
மெரிப்பொறி பறப்பச்
சுற்று நோக்குறுஞ் சுடுசரத்
தினைத்துணைக் கரத்தாற்
பற்றி வாலினுங் காலினும்
வலியுறப் பறிப்பா
னுற்று ருமையி னுலைவுறு
மலையென வுருளும்.

எற்றும், கையினை நிலத்தொடும்; எரிப் பொறி பறப்பச்
சுற்றும் நோக்குறும்; சுடு சரத்தினைத் துணைக் கரத்தால்
பற்றி, வாலினும் காலினும் வலிஉறப் பறிப்பான்
உற்று, உறாமையின் உலைவுறும்; மலை என உருளும்.

பொ:—(அம்பினால் மார்பு துளைக்கப்பட்டு வெகுளும் வாலி சின மிகுதியால்) தன் கையினைத் தரையுடன் அறைந்து தாக்குவான்; (கண்களிலிருந்து) தீப்பொறி பறக்கும்படி சுற்றியுள்ள எல்லாப் பக்கங்களிலும் வெகுண்டு நோக்குவான்; சுட்டு வருத்தும் அம்பினைத் தன் இரு கைகளாலும் பற்றிக்கொண்டு வாலினாலும் கால்களாலும் வலிதிற் பறிக்க முயன்று (பறித்தெடுக்க) வாராமையால் பெரிதும்

வருத்தமுறுவான்; மலை (நிலத்திற் கிடந்து புரள்வது) போன்று புரள்வான்.

கு :—கையினை நிலத்தொடும் எற்றும் என இயையும். எற்றுதல் - எறிதல்; அறைதல். 'நிலத்தறைந்தான் கை பிழையா தற்று' (திருக்குறள்-307) என்பது இங்கு நோக்கத்தக்கது. கையை நிலத்தில் அறைதல் வெகுளி பற்றித் தோன்றும் மெய்ப்பாடு. பறிப்பான் - பறிக்க; பான் என்பது வினையெச்ச விகுதி. எற்றும், நோக்குறும், உலைவுறும், உருளும் என்பன செய்யுமென்னும் வாய் பாட்டு வினைமுற்றுக்கள். (71)

## வாலி, தன்மேற் படைக்கலம் எய்தோர் யாவரோ என ஐயுறுதல்

4109. தேவ ரோவென வயிர்க்குமத்
தேவரிச் செயலுக்
காவ ரோவவர்க் காற்றலுண்
டோவெனு மயலோர்
யாவ ரோவென நகைசெயு
மொருவனே யிறைவர்
மூவ ரோடுமொப் பான்செய
லாமென மொழியும்.

'தேவரோ ?' என அயிர்க்கும் ; 'அத்தேவர் இச்செயலுக்கு ஆவரோ ? அவர்க்கு ஆற்றல் உண்டோ?' எனும்; 'அயலோர் யாவரோ ?' என நகைசெயும்; 'ஒருவனே இறைவர் மூவரோடும் ஒப்பான் செயலாம்' என மொழியும்.

பொ :—(இப்படைக்கலத்தை எய்தவர்கள்) தேவர்கள் தாமோ என ஐயுறுவான்; (எனது உதவியைப் பெற்ற) தேவர்கள் இக்கொடுஞ் செயலில் ஈடுபட்டவர் ஆவரோ ? (ஒரு கால் ஈடுபட நேர்ந்தாலும்) அவர்கட்கு (இவ்வாறு இப்படையினைச் செலுத்தற்குரிய) ஆற்றல் உளதாகுமோ ?' என்று கூறுவான்; (இதனைச் செய்தோர்) தேவரல்லாத ஏனையோருள் வேறு யாரோ ?' எனக் கூறி இகழ்ந்து சிரிப்பான்; 'தான் ஒருவனாகவே நின்று (முத்தொழிலைச் செய்யும்) இறைவர் மூவரையும் ஒத்தமைந்த பேராற்றல் படைத்தவனது செயலே இதுவாகும்' எனத் துணிந்து பின்வருமாறு கூறுவானாயினன் (வாலி).

கு :—அரக்கரிலும் மனிதரிலும் தன்னைப் பகைத்து எதிர் நின்று படை கொண்டு போர்செய்ய வல்லோர் ஒருவரும் இல்லையென வாலி உறுதியாக நம்பியிருந்தானாதலின், இதனை எய்தவர் தேவரோ என முதற்கண் ஐயுற்றான். பாற்கடலைக் கடைந்த காலத்து எனது பேருதவியால் அமிழ்தம் பெற்று மகிழும் நற்பேறுடையவர்கள் தேவர்கள் ஆதலால், நல்வினைப் பயனை நுகரும் இயல்பினராகிய அன்னோர் யான் செய்த நன்றியினை மறந்து கொல்வினையாகிய இக்கொடுந்தொழிலைச் செய்ய ஒருப்படமாட்டார்கள் என்பான், 'தேவர் இச்செயலுக்கு ஆவரோ' என்றான். ஓகாரம் எதிர்மறை. எல்லா வகையாலும் தெளிந்து நண்பு செய்யப்பெற்றோரும் ஒரோ வழி வினை வகையால் வேறுபடுதலும் இயல்பு. அவ்வியல்பின்படி தேவர்கள் என்பால் நன்றி மறந்து இகல் கொண்டு இக்கொடுஞ் செயலை நிகழ்த்த முற்பட்டனரெனக் கொண்டாலும், மலையினை யொத்த எனது மார்பினைத் துளைத்து ஊடுருவத்தக்க வன்மை வாய்ந்த இப்படைக்கலத்தைச் செலுத்தும் ஆற்றல் அத்தேவர் களுக்கு இல்லை எனத் தெளிந்து கூறுவான், 'அவர்க்கு ஆற்றல் உண்டோ' என்றான். என்னைப் பகைத்து எதிர் நின்று எனது ஆற்றலை யிகழ்ந்தோர் வேறு யாவரோ என வெகுண்டு நகைத் தனன் என்பார், 'அயலோர் யாவரோ என நகை செயும்' என்றார். இது வெகுளி பற்றிய நகை. இங்ஙனம் என் மேல் அம்பினை எய்தவன் யாவனாயினும் அவனால் எய்யப்பட்ட அம்பின் ஆற்றலை எண்ணும்பொழுது இதனை ஏவிய அவன் ஒருவனே படைத்தளித் தழிக்கும் மூன்று கடவுளரது பேராற்றல்களும் ஒருங்கு வாய்க்கப் பெற்ற பெரியோன் என்பதிற் சிறிதும் ஐயமில்லை எனத் தனக்குள் சொல்லிக் கொண்டான் என்பார், 'ஒருவனே இறைவர் மூவரோடும் ஒப்பான் செயலாம் என மொழியும்' என்றார். (72)

## வாலி, தன்னுயிரை வாங்கிய படைக்கலம் எத்தகையதோ என ஐயுறுதல்

**4110.** நேமி தான்கொலோ நீலகண்
டன்னெடுஞ் சூலம்
ஆமி தாங்கொலோ வன்றெனிற்
குன்றுரு வயிலும்
நாம விந்திரன் வச்சிரப்
படையுமென் னடுவட்
போமெ னுந்துணை போதுமோ
யாதெனப் புழுங்கும்.

'நேமி தான் கொலோ? நீலகண்டன்
நெடுஞ் சூலம்
ஆம் இது, ஆம் கொலோ? அன்று எனின்,
குன்று உருவு அயிலும்,
நாம இந்திரன் வச்சிரப்
படையும், என் நடுவண்
போம் எனும் துணை போதுமோ?
யாது?' எனப் புழுங்கும்.

பொ:—'(என் மார்பிற்பட்ட) இப்படைக்கலம் (திருமால் கையிலுள்ள) சக்கரப்படைதானோ? அல்லது நீல மணிமிடற்றொருவனாகிய சிவனது சூலப்படையோ? அஃதன்றெனின் (குருகு பெயர்க்) குன்றத்தை ஊடுருவிப் பிளந்த (முருகனது) வேற்படையும் (பகைவர்க்கு) அச்சத்தைத் தரும் இந்திரனது வச்சிரப்படையும் என் மார்பில் ஊடுருவிச் செல்லும் அளவு வன்மையுடையனவாகுமோ? இப்படை யாருடையது?' என ஐயுற்று மனம் வெதும்புவானாயினான் (வாலி).

கு:—தன்மேற் படைக்கலத்தைச் செலுத்தியவர் யாவரோ என வாலி ஐயுற்ற திறத்தை முற்பாடலிற் குறித்த ஆசிரியர், 'எய்தவர் யாவராயினும் ஆகுக; என் மார்பில் தைத்த இப்படைக்கலம் எத்தகையதோ' என வாலி ஐயுற்று மனம் வெதும்பியதனை இச்செய்யுளிற் கூறுகின்றார். நேமி - சக்கரம். 'சக்கரப்படையாயின் வட்ட வடிவினதாய்த் தன்னெதிர்ப் பட்ட பொருளை முழுவதும் அறுத்துச் செல்வதல்லது இங்ஙனம் அம்பினை யொத்து உட்புகுந்து ஊடுருவித் துளைத்துச் செல்லும் இயல்பினதன்றாம். சூலப்படையாயின் மூவிலையும் கையிற் பற்றத்தக்க நீண்ட காம்பும் உடையதாய் வெளிப்பட அமைந்திருக்கும். இதன் உருவ அமைப்பினை எண்ணுங்கால் இது சக்கரத்தையும் சூலத்தையும் ஒத்து அமைந்ததாகத் தெரியவில்லை. இவ்விரண்டு மன்றெனின் கிரவுஞ்ச மலையை இரு கூறுக்கிய முருகனது வேற்படையென்றோ மலைச்சிறகரிந்த இந்திரனது வச்சிரப்படையென்றோ கருதின் அவை மலையினுந் திண்ணிய எனது மார்பினை ஊடுருவித் துளைக்கப் போதுமான வன்மை படைத்தன அல்ல. எனவே என் மார்பில் தைத்து வருத்தும் இப்படைக்கலத்தினை யாதென்று துணிவது' என வாலி ஐயுற்று மனம் வெதும்பினான் என்பதாம். நடு - நெஞ்சம்; மார்பு.

(73)

வாலி, தன்னுயிரைக் கவர்ந்த படைக்கலத்தின் ஆற்றலை
வியந்து அப்படைக்கலம் அம்பு என்பதனைக் கண்டறிதல்

4111. வில்லி னாற்றுரப் பரிதிவ்வெஞ்
சரமென வியக்குஞ்
சொல்லி னானெடு முனிவரோ
தூண்டினா ரென்னும்
பல்லி னாற்கடிப் புறும்பல
காலுந்தன் னுரத்தைக்
கல்லி யார்ப்பொடும் பறிக்குமப்
பகழியைக் கண்டான்.

'வில்லினால் துரப்ப அரிது, இவ்
வெஞ்சரம்!' என வியக்கும்;
'சொல்லினால் நெடு முனிவரோ
தூண்டினார்?' என்னும்;
பல்லினால் கடிப்புறும் பல
காலும்; தன் உரத்தைக்
கல்லி, ஆர்ப்பொடும் பறிக்கும் அப்
பகழியைக் கண்டான்.

பொ :—(அம்பாகிய அதனைப்) பல முறையும் பல்லினாற் கடித்து இழுப்பான். தன் மார்பினுள்ளே புக்குத்தோண்டி ஆரவாரத்துடன் (குடரைப்) பறித்து ஈர்க்கும் அந்த அம்பைக் கண்ணுற்றான். (தன் மார்பில் தைத்தது அம்பு என்று அறிந்த வாலி) வெம்மை வாய்ந்த இந்த அம்பு வில்லின்கண் தொடுத்து எய்தற்கு இயலாத அருமை யுடையது என்று வியப்படைவான்; இதனைப் பெருமைமிக்க மறை முனிவர் (மந்திரச்) சொல்லின் துணையினால் (என்மேற்) செலுத்தி னாரோ என்பான்.

கு :—மார்பில் தைத்து வருத்திய அம்பினைக்கண்ட வாலி, அது வில்லில் தொடுத்து நெடுந் தூரத்திலிருந்து எய்யத்தக்க அம்பு என்னும் அளவில் சிறியதாக அமையாமல் எதிர் நின்று எறிதற்குரிய பெரியதொரு படைக்கலம் போன்று அமைந்திருத்தலைக் கண்டு 'வில்லினால் துரப்பரிது இவ் வெஞ்சரம்' என அதனை வியந்து பாராட்டினான். இத்தகைய பெருமை வாய்ந்த படைக்கலம் வில்லேருழவ ராகிய வீரர்களால் வில்லில் தொடுத்து எய்யப்படும் எளிமையுடைய தன்றாதலின், இதனை என்மேற் செலுத்தியவர் சொல்லேருழவ ராகிய முனிவர் பெருமக்களோ என ஐயுற்றான் என்பார், 'சொல்

லினல் நெடு முனிவரோ தூண்டினர் என்னும்' என்ருர். நெடு முனிவர் - வேண்டிய வேண்டியாங்கு எய்தற் பயத்ததாகிய தவத்தை நெடுங்காலஞ் செய்து அதன் பயனுக ஆற்றல் நிறைந்த தம் சொல் லால் அடைந்தாரை வாழ்விக்கவும் பகைத்தாரை யழிக்கவும் வல்ல பெருமையுடைய முனிவர்கள். சொல் – நிறைமொழி மாந்தராகிய அவர்கள் ஆணையாகச் சொல்லிய மந்திரம். இதனுல் வில்லே ருழவரது விற்படையினும் சொல்லேருழவராகிய முனிவரது சொற் படை மிக்க வலியுடைத்தென்பது உணர்த்தியவாரும். கல்லுதல் – தோண்டுதல். பறித்தல் - வலிதிற் பிடுங்குதல். 'பறித்துப் புரட்டி யறுத்தீர்த்திட' (4-1-7) என்பது அப்பர் தேவாரம். (74)

அம்பினை எய்தவன் பெயர் யாதென அறிய எண்ணி வாலி தன் வன்மையால் அதனைப் பறித்தெடுத்தல் 4112-4113

**4112.** சரமெ னும்படி தெரிந்தது
பலபடச் சலித்தென்
உரமெ னும்பத முயிரொடு
முருவிய வொன்றைக்
கரமி ரண்டினுங் காலினும்
வாலினுங் கழற்றிப்
பரம னன்னவன் பெயரறி
வேனெனப் பறிப்பான்.

'சரம் எனும்படி தெரிந்தது; பலபடச் சலித்து என் ?
உரம் எனும் பதம் உயிரொடும் உருவிய ஒன்றைக்
கரம் இரண்டினும் காலினும் வாலினும் கழற்றிப்
பரமன் அன்னவன் பெயர் அறிவேன்' எனப் பறிப்பான்.

பொ :—(அம்பினைக் கண்ணுற்ற வாலி) 'இஃது அம்பென்பது நன்கு புலனுயிற்று. (இஃது எவ்வாறு எய்யப்பட்டது என்பது பற்றிப்) பலவாருக ஐயுற்று வருந்துவதால் என்ன பயன்? மார்பு எனப்படும் (நெஞ்சின் உள்) இடத்தை (அதன்கண் தங்கிய) உயி ரொடும் ஊடுருவித் துளைத்த ஒப்பற்ற படைக்கலமாகிய இதனை இரு கைகளாலும் கால்களாலும் வாலினுலும் (பற்றிப்) பெயர்த்தெடுத்து (இதனைச் செலுத்திய) பெரியோனது பெயர் இது வென அறிவேன்' எனக் கருதி (அதனை)ப் பறித்து எடுப்பானுயினுன்.

கு :—சரம் - அம்பு. எய்தவன் இருக்க அம்பைக் கண்டு நோவ தாற் சிறிதும் பயனில்லை யென்பான், 'சரம் எனும்படி தெரிந்தது,

பலபடச் சலித்து என்' என்ருன். சலித்தல் - மனங்கலங்குதல். 'சலித்தால் ஒருவர் துணை யாருமில்லை' என்பது தேவாரம். (4-1-8) இனி, பலபடச் சலித்தல் என்பதற்குப் பலபடியாக ஆராய்தல் எனப் பொருள்கொண்டு அதற்கேற்ப உரைத்தலும் உண்டு. உடம்பின் உரத்தினைத் துளைத்தலோடமையாது கட்புலப்படாத உயிரையும் துளைத்து ஊடுருவவல்ல கூர்மை வாய்ந்தது இப்பகழி என்பான், 'உரமெனும் பதம் உயிரொடும் உருவிய ஒன்று' என்ருன். இத்தகைய பேரம்பினை ஒரு கையாற் பற்றி வாங்க இயலாமையால் கரம் இரண்டினும் காலினும் வாலினும் கழற்ற முற்பட்டான். பெரு வீரர் எய்யும் அம்புகளில் அவருடைய பெயர் பொறிக்கப்பெறும் வழக்க முண்மையால் இந்த அம்பிலும் எய்தவன் பெயர் பொறிக்கப் பெற்றிருக்கும் என்றெண்ணிப் 'பரமன் அன்னவன் பெயர் அறிவேன்' எனப் பறிக்க முயன்ருன் என்க. பரமன் - மேலோன். (75)

**4113.** ஓங்க ரும்பெருந் திறலுடை
 மனத்தனுள் ளத்தன்
வாங்கி ஞன்மற்றவ் வாளியை
 யாளிபோல் வாலி
ஆங்கு நோக்கின ரமரரு
 மவுணரும் பிறரும்
வீங்கி ஞர்கடோள் வீரரை
 யார்விய வாதார்.

ஓங்கு அரும் பெருந் திறலுடை மனத்தன், உள்ளத்தன்,
வாங்கினுன் மற்று அவ் வாளியை, ஆளிபோல் வாலி;
ஆங்கு நோக்கினர் அமரரும் அவுணரும் பிறரும்,
வீங்கினுர்கள் தோள்; வீரரை யார் வியவாதார்?

பொ :—சிங்க ஏற்றினை ஒத்த வாலி (வான்தோய் வன்ன) உயர்ச்சியும் அருமையும் பெருமையும் வாய்ந்த ஆற்றல் மிக்க மனத்தனுய் அம்மனத்திற்கேற்ற உள்ளக்கிளர்ச்சியாகிய ஊக்கமுடையனுய்(த் தன் மார்பில் அழுந்திய) அந்த அம்பினை (க் கையினுற் பற்றி) வாங்கினுன். அங்கு அதனை நேரிற் கண்டவர்களாகிய தேவர்களும் அசுரர்களும் ஏனையோரும் தோள்கள் பூரிக்கப் பெற்ருர்கள். (தறுகண்மை மிக்க) வீரர்களை வியந்து பாராட்டாதவர் யாருளர்?

கு :—ஆளிபோல் வாலி, ஓங்கு அரும் பெரும் திறலுடை மனத்தன், உள்ளத்தன் அவ்வாளியை வாங்கினுன் எனவும், ஆங்கு

நோக்கினராகிய அமரரும் அவுணரும் பிறரும் தோள் வீங்கினர்கள் எனவும், வீரரை வியவாதரர் யார் எனவும் இயைத்துரைக்க. உயர்ந்தவற்றையே உள்ளுதலாகிய உயர்ச்சியும், அரியவற்றை நுணுகி யாழ்ந்துணரும் அருமையும், செயற்கரியவற்றையும் எளிதிற் செய்து முடிக்கும் பெருமையும் ஒருங்கு வாய்ந்த பேராற்றல் மிக்க மனமும் அம்மனத்திற்கேற்ற ஊக்கமும் ஒருசேர வாய்க்கப் பெற்றவன் வாலியாதலின் அவனை 'ஓங்கு அரும் பெருந்திறலுடை மனத்தன் உள்ளத்தன்' எனச் சிறப்பித்தார். ஈண்டு உள்ளம் என்றது உள்ளத்துப் பண்பாகிய ஊக்கத்தினை. நண்பர் பகைவர் அயலார் என்னும் வேறுபாடின்றி வீரரை யாவரும் வியந்து பாராட்டுவர் என்பார் 'வீரரை யார் வியவாதார்' என வினவினர் ஆசிரியர். இது கவிக்கூற்று; வேற்றுப் பொருள் வைப்பு என்னும் அணியின்பாற் படும். (76)

### வாலி அம்பினைப் பறித்த அளவில் அவனது மார்பினின்றும் உதிரம் வெள்ளமெனப் பெருகுதல்

4114. மூடு தெண்டிரை முரிதரு
கடலென முழங்கி
ஈடு பேருல கிறந்துள
தாமெனற் கெளிதோ
காடு மாநெடு விலங்கலுங்
கடந்ததக் கடலி
னூடு போதலுற் றதனையொத்
துயர்ந்துள துதிரம்.

மூடு தெண் திரை முரிதரு கடல் என முழங்கி
ஈடு பேர் உலகு இறந்துளது ஆம் எனற்கு எளிதோ?
காடும் மா நெடு விலங்கலும் கடந்தது; அக் கடலின்
ஊடு போதல் உற்று அதனை ஒத்து உயர்ந்துளது உதிரம்.

பொ :—(வாலி அம்பினைப் பறித்தெடுத்த அளவில் அவன் மார்பினின்றும் பீரிட்டெழுந்த) இரத்த வெள்ளமானது (மேன்மேற் பொங்கியெழுந்து நிலத்தினை) மறைக்கும் தெளிந்த அலைகள் சிதறிப் பரவும் கடலைப்போன்று ஆரவாரித்து வன்மையும் பெருமையும் வாய்ந்த இவ்வுலகத்தின் எல்லையைக் கடந்து சென்றது என்ற அளவில் அளவிட்டுக் கூறுதற்குரிய எளிமையுடையதாகுமோ? (அவ் உதிர வெள்ளம்) காடுகளையும் கரிய பெரிய மலைத்தொடர்

களையும் கடந்தது; (உலகினைச் சூழ்ந்துள்ள) அக்கடலின் கண்ணும் ஊடுருவிச் செல்லலுற்று அக்கடலை யொத்து (எதிர்த்து நின்று) அலைகளால் உயர்ந்து விளங்குவதாயிற்று.

கு:—மூடுதல் - மறைத்தல். திரை - அலை. முரிதல் – சிதறுதல். ஈடு - வன்மை. இறத்தல் – கடத்தல். உதிரம் – இரத்தம். உதிரம், கடலெனமுழங்கி, பேருலகு இறந்துளதாம் எனற்கு எளிதோ? காடும் விலங்கலும் கடந்தது; அக்கடலின் ஊடுபோதலுற்று, அதனை (அக்கடலை) யொத்து உயர்ந்துளது என இயையும். உலகினைச் சூழ்ந்து புறத்தே சேய்மைக்கண் உளதாதல் பற்றி அக்கடல் என்றார். அதனை - அக்கடலை. (77)

வாலியின் மார்பிற் பெருகிய குருதிப் பெருக்கைக் கண்ட
சுக்கிரீவன் உடன்பிறப்பென்னும் பாசத்தால்
கண்ணீர் மல்கி நிலத்தில் வீழ்தல்

4115. வாசத் தாரவன் மார்பெனு
மலைவழங் கருவி
ஓசைச் சோரியை நோக்கின
னுடன்பிறப் பென்னும்
பாசத் தாற்பிணிப் புண்டவத்
தம்பியும் பசுங்க
ணேசத் தாரைகள் சொரிதர
நெடுநிலஞ் சேர்ந்தான்.

வாசத் தாரவன் மார்பு எனும் மலை வழங்கு அருவி
ஓசைச் சோரியை நோக்கினன்; உடன் பிறப்பு என்னும்
பாசத்தால் பிணிப்புண்ட அத் தம்பியும், பசுங்கண்
நேசத் தாரைகள் சொரிதர, நெடுநிலம் சேர்ந்தான்.

பொ —மணம் பொருந்திய மாலையை யணிந்தவனாகிய வாலியின் மார்பாகிய மலை சொரியும் அருவியாகிய ஆரவாரத்துடன் கூடிய இரத்தப் பெருக்கினை உற்று நோக்கினவனாகி உடன்பிறப் பென்னும் அன்புறவினால் பிணிக்கப்பட்ட அந்தத் தம்பியாகிய சுக்கிரீவனும் பசுமையான (தன்) கண்களினின்றும் அன்பினால் (துன்ப) நீர் சொரிய நீண்ட நிலத்தின்மீது வீழ்ந்தான்.

கு:—எந்நாளும் துன்பமென்பதின்றி இன்பமே நுகரும் இயல்பினனாகி மன்றல் நாறும் மாலையினை யணிந்த மகிழ்ச்சி மிக்கவன்

என்பார், வாலியை 'வாசத்தாரவன்' என்றார். அவன் மார்பினை மலையென உருவகஞ் செய்ததற்கேற்ப, அதிலிருந்து சொரியப்பெறும் இரத்தப் பெருக்கினை அருவி என உருவகஞ் செய்தார். ஓசை - ஆரவாரம். சோரி - இரத்தம். பாசம் - அன்பு; கயிறு என்ற பொருளையுடைய பாசம் என்னுஞ் சொல் ஈண்டு யாவரையும் உறவினாற் பிணிக்கும் இயல்பினதாகிய அன்பினைக் குறித்து நின்றது. 'அன்பெனும் பாசம் வைத்தார்' (தேவாரம் -4 ) என்பது அப்பர் அருள் மொழி. பிணிப்புண்ணுதல் - கட்டுப்படுதல். அத்தம்பியும் என்பது, செற்றங்கொண்டு பொருத பகைமை யுள்ளத்தனாகிய அத்தம்பியாகிய சுக்கிரீவனும் என அவனது பகைமைநிலையைச் சுட்டிநின்றது. தமையனது மார்பிற் குருதிநீர் வழியக் கண்ட சுக்கிரீவனது உள்ளம் உடன்பிறப்பாகிய பாசத்தாற் பிணிக்கப்பட்டமையால் முன்னைப் பகைமை நீங்கி அன்புமீதூர அவன் கண்கள் வெகுளியாலாகிய சிவப்பு மாறிப் பசுமை நிறமுற்று நேசத்தாரைகள் சொரிந்தன என்பதாம். நேசத்தாரை - தம்மால் அன்பு செய்யப்பட்டாரது துன்பங் கண்டபொழுது அன்புடையார்கண் சொரியும் கண்ணீர். அன்பினாற் சொரியுங் கண்ணீராதலின் நேசத்தாரை எனப்பட்டது. தம்மால் அன்பு செய்யப்பட்டாரது துன்பங்கண்டு அன்புடையார் சொரியும் இக் கண்ணீரைப் 'புன்கணீர்' (திருக்குறள் - 71) என்பர் திருவள்ளுவர். அன்பு செய்யப்பட்டாரது புன்மை, அத்துன்பத்தினையெண்ணி அன்புடையார் சொரியும் கண்ணீர்மேல் ஏற்றப்பட்டது. (78)

### தன் மார்பில் தைத்து வருத்திய அம்பினைப் பறித்தெடுத்த வாலி அதன்கண் இராமனது பெயர் பொறிக்கப் பெற்றிருத்தலைக் காணுதல் 4116-4117

4116. பறித்த வாளியைப் பருவலித்
தடக்கையாற் பற்றி
இறுப்பெ னென்றுகொண் டெழுந்தனன்
மேருவை யிறுப்போன்
முறிப்பெ னென்னினு முறிவதன்
றாமென மொழியாப்
பொறித்த நாமத்தை யறிகுவா
னோக்கினன் புகழோன்.

பறித்த வாளியைப் பரு வலித்
தடக்கையால் பற்றி,
‘இறுப்பென்’ என்று கொண்டு எழுந்தனன்,
மேருவை இறுப்போன்;
‘முறிப்பென் என்னினும் முறிவது
அன்ரும்’ என மொழியாப்,
பொறித்த நாமத்தை அறிகுவான்
நோக்கினன், புகழோன்.

பொ:—மேரு மலையையும் முறிக்கவல்லவனுகிய (பேராற்றல் படைத்த) வாலி, பறித்தெடுக்கப்பட்ட அம்பினைப் பருமையும் வலிமையும் வாய்ந்த பெரிய கையினல் இறுகப் பற்றிக்கொண்டு ‘(இதனை) முறித்தெறிவேன்’ எனத் துணிந்தெழுந்தான். (அங்ஙனம் எழுந்த) புகழுடையானுகிய வாலி, ‘இதனை யான் முறிப்பேன் என்று வலிதின் முயன்ருலும் (இது) முறியக்கூடிய எளிமையுடையதன்று’ எனக் கூறி (அந்த அம்பிலே) வரையப் பெற்றுள்ள பெயரை அறிந்துகொள்ளுதற் பொருட்டு (அதனைக் கூர்ந்து) நோக்கினன்.

கு:—பறித்த - பெயர்த்து எடுக்கப்பட்ட. வாளி - அம்பு. இறுப் பென் - ஒடிப்பேன், என் என்பது தன்மையொருமை விகுதி. மொழியா- மொழிந்து. அறிகுவான் - அறியும் பொருட்டு; வான் வினையெச்ச விகுதி. இராமபாணத்தால் தன் பூத உடம்பு அழியவும், என்றும் அழியாத புகழுடம்பைப் பெற்ருனுதலின், வாலியைப் புகழோன் எனச் சிறப்பித்தார். (79)

4117. மும்மைசா லுலகுக் கெல்லா
மூலமந் திரத்தை முற்றுந்
தம்மையே தமர்க்கு நல்குந்
தனிப்பெரும் பதத்தைத் தானே
இம்மையே யெழுமை நோய்க்கு
மருந்தினை யிராம னென்னுஞ்
செம்மைசேர் நாமந் தன்னைக்
கண்களிற் றெரியக் கண்டான்.

மும்மை சால் உலகுக்கு எல்லாம்
மூல மந்திரத்தை, முற்றும்
தம்மையே தமர்க்கு நல்கும்
தனிப் பெரும் பதத்தை, தானே
இம்மையே எழுமை நோய்க்கும்
மருந்தினை, 'இராமன்' என்னும்
செம்மை சேர் நாமம் தன்னைக்
கண்களின் தெரியக் கண்டான்.

பொ :—மூன்றாக நிறைந்த உலகங்கள் எல்லாவற்றிற்கும் ஆதாரமாகப் பொருந்திய மந்திரமாவதும், (தன்னை இடைவிடாது எண்ணும்) சுற்றத்தாராகிய அடியார்களுக்குத் தம்மை முழுவதுப் தரவல்ல ஒப்பற்ற மொழியாகவுள்ளதும், தான் ஒன்றே இவ்வொரு பிறப்பிலேயே ஏழு பிறப்பாகிய பிணிகளையும் அகற்றுதற்குரிய அரு மருந்தாக வாய்த்ததும், வீடுபேறாகிய செம்பொருளைச் சேர்க்க வல்லதும் ஆகிய இராமன் என்னுந் திருப்பெயரினை (அந்த அம்பின் கண்ணே) தன் கண்களால் (வாலி) தெளிவாகக் கண்டான்.

கு :—மும்மை சால் உலகு - கீழ் நடு மேல் என மூன்று அடுக்காக அமைந்த உலகங்கள். 'தெரிமாண் தமிழ் மும்மைத் தென்னம் பொருப்பன்' என்புழிப்போல 'மும்மை' என்றது மூன்று என்னும் எண்ணுப் பொருளில் வந்தது. மூலமந்திரம் - இறைவனைக் குறித்து அமைந்த எல்லா மந்திரங்களின் பொருள் களும் தன் பொருளேயாகத் திரண்டு ஏனைய மந்திரங்கட்கெல்லாம் தான் நிலைக்களமாகத் திகழும் சிறப்புடைய மறை மொழி. தன்னை நினைந்தாரை வெம்மை நீக்கிக் காக்கவல்லது மந்திரம் என்பர். மூவுலகத்து வாழ்வாரும் பிறவிப்பிணிப்பினின்றும் உய்தல் வேண்டி இராமன் என்னும் இத்திருப்பெயரினையே மூலமந்திரமாகக் கொண்டு இடைவிடாது எண்ணியும் சொல்லியும் இடர் நீங்கி இன்புறுகின் றனர் என்பார், 'மும்மை சால் உலகுக்கெல்லாம் மூல மந்திரத்தை' என்றார். ஈண்டு உலகு என்றது அதன் கண் வாழும் உயிர்களை. இம்மந்திரப் பொருளாவான் பேரருளாம் தாயுடன் கூடிய இறைவனே என்பார் 'தம்மை' எனப் பன்மையாற் குறித்தார். தம்மையே என்புழி ஏகாரம் உயர்வு சிறப்பின்கண் வந்தது. தமர் - இறை வனுக்குச் சுற்றத்தாராகிய அடியார்கள். தமர்க்குத் தம்மையே நல்குதலாவது, தன் வயத்தனாகிய இறைவன் தன் இறைமை நிலைக்குத்தக எத்துணையும் அரியனாய் நில்லாது, தனக்கு அன்பராயி னார் விரும்பியவண்ணம் அவர்கள் இட்ட பணியை விரைந்தேற்று, அவர்கட்கு மிகவும் எளியனாகி வந்து அருள்புரிதல். அண்டத்தம ரர்கள் சூழ அத்தாணியுள் அங்கிருந்த அருமையுடையனாகிய இறை

வனை இங்ஙனம் அன்புடைத் தொண்டர்கள்பால் மிகவும் எளியனாகி உறையத் தரும் ஒப்பற்ற வாய்மொழியாகத் திகழ்வது 'ராம' என்னுந் திருப்பெயராதலின் 'முற்றும் தம்மையே தமர்க்கு நல்குந் தனிப் பெரும் பதம்' என அதனைச் சிறப்பித்தார். முற்றும் நல்குதலாவது, ஒற்றி வைத்தல் விற்றல் முதலாக அனைத்துரிமையுடன் முழுவதும் கொடுத்தல். 'தன்னைத் தந்த 'என் ஆரமுதை' (438) என்பது திருவாசகம். எடுத்த இவ்வொரு பிறப்பிலேயே வினைவயத் தால் தொடரும் எழுபிறப்பாகிய பிணியையும் அறவே போக்கவல்ல அருமருந்தாக விளங்கும் தனிச் சிறப்புடையது இத்திருப்பெயரென் பார், 'தானே இம்மையே எழுமை நோய்க்கும் மருந்து' என்றார். 'அம்மை நோய் இம்மையே ஆசறுத்தானை' (தேவாரம்-7-75-8.) என்றார் நம்பியாரூரரும், 'ராம:' என்னும் இம்மந்திரம் இறைவனுக் குரிய ஆயிரந் திருநாமங்களை யொத்து வீட்டிற்கு நிமித்த காரண மாகிய செம்பொருளையளிக்கவல்ல சிறப்புடைய தென்பார், 'இராம னென்னும் செம்மை சேர் நாமம்' என்றும், மனத்தினால் எண்ணி வாயினாற் சொல்லுதற்குரிய அத் திருப்பெயரை வாலி தன் கண்க ளால் பெயர் என்ற அளவிற் கண்டு கொண்டான் என்பார், 'கண்க ளால் தெரியக் கண்டான்' என்றும் கூறினார். தெரியக் காணுதலா வது, ஐயந்திரிபின்றி உள்ளவாறு விளங்கக் காணுதல். மூலமந்தி ரத்தை, தனிப்பெரும் பதத்தை, மருந்தினை, நாமந்தன்னை என அடுக்கிவந்த ஐயுருபுகள், கண்டான் என்னும் வினைகொண்டு முடிந்தன. (80)

## இராமனது செயல் நினைந்து, வாலி நாணி வருந்துதல்
## 4118-4119

**4118.** இல்லறந் துறந்த நம்பி
யெம்மனோர்க் காகத் தங்கள்
வில்லறந் துறந்த வீரன்
றோன்றலால் வேத நூலிற்
சொல்லறந் துறந்தி லாத
சூரியன் மரபுந் தொல்லை
நல்லறந் துறந்த தென்னா
நகைவர நாணுட் கொண்டான்.

'இல்லறம் துறந்த நம்பி,
எம்மனோர்க்கு ஆகத் தங்கள்
வில் அறம் துறந்த வீரன்,
தோன்றலால், வேத நூலில்

சொல் அறம் துறந்திலாத
சூரியன் மரபும், தொல்லை
நல்லறம் துறந்தது' என்னு,
நகை வர, நாண் உட்கொண்டான்.

பொ:—இல்லின்கண் மனையாளுடன் இருந்து செய்தற்குரிய மனையறக் கடமைகளைத் துறந்து வனத்தின்கட்புக்க புருடோத்தமனும், (குரக்கினத்தாராகிய) எம்பொருட்டுத் தங்கள் (முன்னோர்கள் வழுவாது கடைப்பிடித்தொழுகிய) விற்போர் முறையாகிய அறநெறியினை விட்டொழித்த வீரனும் ஆகிய இராமன் பிறந்தமையால், வேதங்களாகிய நூல்களில் அறிவுறுத்தப்பெறும் அறங்களை நெகிழாது போற்றுமியல்புடைய சூரியனது குலமும், தொன்று தொட்டுத் தனக்கு உரியதாய் வரும் நல்ல அறநெறியை விட்டு நீங்குவதாயிற்று என(ப் புறத்தே) சிரிப்புத் தோன்ற அகத்தே நாணமுற்று வருந்தினன்.

கு:—இல்லறம் - இல்லின்கண் மனையாளுடன் இருந்து செய்யும் அறம். அவையாவன விருந்தோம்புதலும் துறந்தார்ப்பேணலும் முதலிய மனைவாழ்க்கைக் கடமைகள். ஆடவரிற் சிறந்தானாகிய இராமன், தனக்குரிய நாட்டைத் துறந்து மனைவியொடும் வனத்தின் கட்புக்கு வானப்பிரத்த நிலையினை மேற்கொண்டு, பின் வாழ்க்கைத் துணைவியையும் பிரிய நேர்ந்தமையால் இல்லறக் கடமைகளை யிழந்து பேதுறும் நிலையினனாயினன் என்பான், 'இல்லறம் துறந்த நம்பி' என்றும், உயர்வறவுயர்ந்த பெரியோனாகிய அவன் தனது பெருமைக்குச் சிறிதும் ஒவ்வாத குரக்கினத்தாராகிய எம்மை ஒரு பொருளாக மதித்துப் படைப்புக் காலந் தொட்டுப் படைப்பழிதாரா மைந்தினராகி வரும் தங்கள் முன்னோரது விற்போர் முறையாகிய அறத்தினை ஒரு நொடிப் பொழுதில் நெகிழவிட்டுத் தனது பேராண்மையினை மாசுபடுத்தினன் என்பான், 'எம்மனோர்க்காகத் தங்கள் வில்லறம் துறந்த வீரன்' என்றும் வாலி இரங்கிக் கூறினன். வில்லறமாவது, ஆற்றலால் ஒத்த வில் வீரர் இருவர் வில்லேந்தித் தம்முள் நேர் நின்று பொருதலாகிய போரறம். சுக்கிரீவனும் வாலியும் ஒருவரோடொருவர் பொருது நிற்கும் நிலையில், வாலி அறியாதவண்ணம் இராமன் மறைந்து நின்று அம்பெய்தானதலின் அவனது விற்போர் அறநெறிக்கு மாறுபட்டதாய்ப் பழியுடைய செயலாயிற்று. 'வில்லறந் துறந்த வீரன்' என்றது படைப்பழியுற்ற மைந்தினனாகிய இழிநிலையைக் குறிப்பால் உணர்த்தியவாறு. வேதங்கள் கூறும் நல்லறநெறியிற் சிறிதும் வழுவாத சூரிய குலமானது, அறந்திறம்பிய இவன் பிறந்தமையால், தொன்று தொட்டுத் தனக்குரியதாய் நீங்காது வரும் பண்பாகிய நல்லறத்தில் வழுவி அயலார் இகழ்ந்து சிரிக்கும்

இழிநிலையினை அடைவதாயிற்றே என்பான், 'வேத நூலிற் சொல் லறம் துறந்திலாத சூரியன் மரபும் தொல்லை நல்லறம் துறந்தது' எனத் தன்பால் நகை தோன்றக் கூறினன். நகை - எள்ளல்பற்றிய சிரிப்பு. தொன்மை வாய்ந்த சூரியகுலத்திற்கு இத்தகைய இழிநிலை ஏற்பட்டமைக்கு உள்ளம் வருந்தாது அதனை இகழ்ந்து நகுதல் எம்மையொத்த வீரர்க்குத் தகுதியன்று என எண்ணிய வாலி, பிற ருற்ற கையறவுக்குத் தான் பெரிதும் நாணி வருந்தினன் என்பார், 'சூரியன் மரபுந் தொல்லை நல்லறம் துறந்தது என்ன, நகைவர, 'நாண் உட்கொண்டான்' என்றார். 'பிறர் கையறவு தான் நாணுத லும்' (புறநானூறு - 157) தலைவர்க்குரிய பண்புகளுள் ஒன்றெனப் பாராட்டப் பெற்றிருத்தல் இங்கு நினைத்தற்குரியதாகும். (81)

**4119.** வெள்கிடும் மகுடஞ் சாய்க்கும்
வெடிபடச் சிரிக்கு மீட்டு
முள்கிடு மிதுவுந் தானே
ரோங்கற மோவென் றுன்னு
முள்கிடுங் குழியிற் புக்க
மூரிவெங் களிநல் யானை
தொள்கொடுங் கிடந்த தென்னத்
துயருழந் தழிந்து சோர்வான்.

வெள்கிடும்; மகுடம் சாய்க்கும்;
வெடிபடச் சிரிக்கும்; மீட்டும்
உள்கிடும்; 'இதுவும் தான் ஓர்
ஓங்கு அறமோ?' என்று உன்னும்;
முள்கிடும் குழியில் புக்க
மூரிவெம் களி நல் யானை.
தொள் கொடும் கிடந்தது என்னத்,
துயர் உழந்து அழிந்து சோர்வான்.

பொ:—(தனது நிலையினை எண்ணி) வெட்கமுறுவான்; (வெட்கித்) தன் முடித்தலையைத் தாழ்த்துவான்; (இராமன் தனக்குச் செய்த தீமையினை) மீளவும் நினைப்பான்; இச்செயலும் உயர்ந்ததோர் அறமாகுமோ என்று எண்ணுவான்; உட்புக்கு அழுந்தும் குழியிலே அகப்பட்ட வலிமையும் கொடுமையும் மதக்களிப்பும் உடைய யானை யானது சேற்றிலே அழுந்திக் கிடந்தாற்போன்று (குருதிச் சேற்றிற் கிடந்து) துன்புற்று மனமழிந்து தளர்வானாயினன் (வாலி).

கு :—வெள்குதல் - வெட்கமுறுதல். மகுடஞ் சாய்த்தல் - வெட்கித் தலைகுனிதல். வெடிபடச் சிரித்தல் - பேரொலியுண்டாகும்படி பெருகச் சிரித்தல். முள்குதல் - உட்புக்கு அழுந்துதல். மூரி - வன்மை. தொள்கு - புலி முதலிய விலங்குகளைப் பிடித்தற்கு விரித்த வலை; ஈண்டு யானையைப் பிணித்தற்கமைந்த காலின் தளையை யுணர்த்தியது. இங்கு வந்த 'தொள்கு' என்னும் சொல்லுக்குக் காலிற் பிணிக்கப்பட்ட விலங்கு எனப் பொருள் கொள்வதும் உண்டு. (82)

## 'இராமன் முறை திறம்பினன்' என்று கூறி வருந்தும் வாலியின் முன்னே இராமன் வந்து தோன்றுதல்

4120. இறைதிறம் பினனு லென்னே
யிழிந்துளோ ரியற்கை யென்னின்
முறைதிறம் பினனு லென்று
மொழிகின்ற முகத்தான் முன்னர்
மறைதிறம் பாத வாய்மை
மன்னர்க்கு முன்னஞ் சொன்ன
துறைதிறம் பாமற் காக்கத்
தோன்றினன் வந்து தோன்ற.

'இறை திறம்பினனால்; என்னே
இழிந்துளோர் இயற்கை? என்னில்
முறை திறம்பினனால்' என்று
மொழிகின்ற முகத்தான் முன்னர்,
மறை திறம்பாத வாய்மை
மன்னர்க்கு முன்னம் சொன்ன
துறை திறம்பாமல் காக்கத்
தோன்றினன், வந்து தோன்ற.

பொ :—'தலைவனாகிய இராமன் தனது இறைமைக் குணத்தினின்றும் பிறழ்ந்தனன். (பெரியோனாகிய இவனது இயல்பு இதுவானால்) இழிந்தோராகிய சிறியோரது இயல்பு என்னாகும்? (அவன்) என் திறத்தில் தனக்குரிய நீதி முறையில் தவறிவிட்டான்' என்று கூறி வருந்துகின்ற முகத்தினனாகிய வாலியின் முன்னே, வேத நெறியில் வழுவாத வாய்மை யொழுக்கத்தினராகிய அரசர்கட்கென முன் மனு முதலிய நூல்களிற் கூறப்பெற்ற அறத்துறைகளை வழுவாது ஓம்புதற்பொருட்டு அவதரித்தவனாகிய இராமன் வந்து தோன்றினனாக.

கு :—இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர். இதன்கண் உள்ள 'தோன்ற' என்னும் செயவெனெச்சம் 'கண்ணுற்ருன் வாலி' என அடுத்த செய்யுளில் வந்துள்ள பிற கருத்தாவின் தொழிலேக்கொண்டு முடிந்தது. இறை - முறை செய்து காப்பாற்றுந் தலேவன். திறம்புதல் - தனக்குரிய கடமையில் மாறுபடுதல். முறை - நீதி. மறைநெறி வழுவா மன்னவர்க்குரிய அரசியல் நெறிமுறைகளைப் பிறழாது பாதுகாத்தற்காகவே திருமால் இராமனுக அவதரித்தான் என்பார், 'மறை திறம்பாத வாய்மை மன்னர்க்கு முன்னஞ் சொன்ன துறைதிறம்பாமற் காக்கத் தோன்றினன்' என்ருர். தன் செயலே இகழ்ந்துரைக்கும் வாலியின் கண்முன்னே இராமன் வெளிப்பட வந்து நின்றது, தான் வாலியைத் தண்டித்தது மன்னர்க்குரிய அறநெறிக்கு ஒத்த செயலே என்பதனே வாலியின் மனங்கொள்ளும் வண்ணம் தெளிவித்தற் பொருட்டே என்பார், 'மன்னர்க்கு முன்னஞ் சொன்ன துறைதிறம்பாமற் காக்கத் தோன்றினன் வந்து தோன்ற' என்ருர். (83)

## இராமனேக் கண்ணுற்ற வாலி, 'நின்செயல் முறையற்றது' எனக் கூறி இகழ்தல் 4121-4136

4121. கண்ணுற்ருன் வாலி நீலக்
கார்முகில் கமலம் பூத்து
மண்ணுற்று வரிவி லேந்தி
வருவதே போலு மாலேப்
புண்ணுற்ற தனேய சோரி
பொறியொடும் பொடிப்ப நோக்கி
எண்ணுற்ரு யென்செய் தாயென்
றேசுவா னியம்ப லுற்ருன்.

கண்ணுற்ருன் வாலி, நீலக்
கார்முகில், கமலம் பூத்து,
மண் உற்று வரிவில் ஏந்தி,
வருவதே போலும் மாலே;
புண் உற்றது அனேய சோரி
பொறியொடும் பொடிப்ப, நோக்கி,
'எண்ணுற்ருய் என் செய்தாய்?' என்று,
ஏசுவான் இயம்பலுற்ருன்.

பொ :—நீலநிறம் வாய்ந்த மழைமேகம், தன்பால் செந்தாமரை மலர்கள் மலரப்பெற்று, வரிந்து கட்டப்பெற்ற வில்லொன்றைக் கையில் ஏந்திக்கொண்டு (தனக்குரியதாய வானிடத்தை விட்டுக் கீழேயிறங்கி) மண்ணிடத்தே பொருந்தி (நடைகற்று) நடந்து வருவதனையே ஒத்து விளங்கும் (தோற்றத்தையுடைய) திருமாலாகிய இராமனை, வாலி தன் கண்களாற் பொருந்தக் கண்டான்; புண்ணிலிருந்து வெளிப்படுவதுபோன்ற குருதிநீர் தீப்பொறிகளுடன் (தன் கண்களிலிருந்து) வெளிப்பட்டுச் சிதறும்படி (இராமனை) வெகுண்டு நோக்கி, 'நீ என்ன நினைந்து என்ன செய்தாய் ?' என்று சொல்லி (இராமனை) இகழ்ந்துரைப்பவனாகிப் பின்வருமாறு கூறத் தொடங்கினான்.

கு :—கார்முகில் - கார்காலத்து மழைமேகம். இராமனது திருமேனி நிறத்திற்குக் கருமுகிலும் அவனுடைய முகம், கண், கை, கால் முதலிய அங்கங்களுக்குச் செந்தாமரை மலர்களும் உவமை. விண்ணிடத்தே திரியும் மழைமேகம் தன்பால் செந்தாமரை மலர்கள் பூத்து விளங்கப்பெற்றுத் தன் கையில் வில்லொன்றையும் ஏந்திக்கொண்டு மண்ணிடத்தே யிறங்கி நடந்து வந்தால் எவ்வாறிருக்குமோ அவ்வாறு அமைந்தது, வாலியின்முன் வந்து நின்ற இராமனது தோற்றப்பொலிவு என்பார், 'நீலக்கார்முகில், கமலம் பூத்து, வரிவில் ஏந்தி, மண் உற்று வருவதேபோலும் மால்' என்றார். இஃது இல்பொருளுவமை.

'கருமுகில் தாமரைக் காடு பூத்துநீ
டிருசுடர் இருபுறத் தேந்தி யேடவிழ்
திருவொடும் பொலியவோர் செம்பொற் குன்றின்மேல்
வருவபோற் கலுழன்மேல் வந்து தோன்றினான்' (பால-192)

என முன்னர்த் திருமாலின் தோற்றப் பொலிவு பற்றிக் கூறிய பகுதி, அப்பெருமானது அவதாரமாகிய இராமனது திருமேனியின் பொலிவினை விளக்கும் இச் செய்யுட்பகுதியுடன் ஒப்புநோக்கி யுணரத்தக்கதாகும். வாலி, மாலைக் கண்ணுற்றான், நோக்கி, 'என் எண்ணுற்றாய்? என் செய்தாய் ?' என்று ஏசுவான் இயம்பலுற்றான் என இயையும். (84)

4122. வாய்மையு மரபுங் காத்து
மன்னுயிர் துறந்த வள்ளற்
றூயவன் மைந்த னேநீ
பரதன்முன் றோன்றினாயே

தீமைதான் பிறரைக் காத்துத்
தான்செய்தாற் றீங்கன் ருமோ
தாய்மையு மன்றி நட்புந்
தருமமுந் தழுவி நின்ருய்.

'வாய்மையும் மரபும் காத்து
மன் உயிர் துறந்த வள்ளல்
தூயவன் மைந்தனே! நீ
பரதன் முன் தோன்றினுயே;
தீமைதான் பிறரைக் காத்துத்
தான் செய்தால் தீங்கு அன்ருமோ?
தாய்மையும் அன்றி நட்பும்
தருமமும் தழுவி நின்ருய்.

பொ :—பொய்யாமையாகிய அறத்தையும் தன் குடிவரவாகிய நெறிமுறையினையும் வழுவாது போற்றி, நிலைபெற்ற உயிரைத் துறந்த வள்ளலாகிய தூயோனுக்கு மகனுகத் தோன்றியவனே! நீ பரதனுக்கு முன்னே அவனுடைய தமையனுகத் தோன்றினு யல்லையோ. தாய்போல் நின்று உதவும் தலையளியையும், நண்பாகிய பண்பினையும், அறத்தினையும் பற்றி நின்றவனே! தீமையென்பது, பிறரைச் செய்யாமல் (தடுத்துக்) காத்து, (அங்ஙனம் காப்பவனுகிய) தான் செய்யும்பொழுது தீங்கற்ற நன்மையாய் மாறும் இயல் பினதோ?

கு :—வாய்மை - பொய்யாமை; சொன்ன சொல் தவருமை என்ற பொருளில் இங்கு ஆளப்பெற்றது. மரபு - தன் குலத்தார் கொண் டொழுகிய நெறிமுறை; அஃதாவது, மனுமரபிற் பிறந்த வேந்தன் தன் புதல்வர் பலருள்ளும் மூத்தவனுக்கே தன் அரசுரிமையை யளித்தலாகிய நெறிமுறைமை. இதனை 'மயில்முறைக் குலத்துரி மையை மனுமுதன் மரபை' (மந்தரை சூழ்ச்சி - 64) என வரும் தொடரில் கைகேயி கூற்றில் வைத்துக் கம்பர் விளக்கியுள்ளார். தசரதன் தன் வாய்மையை வண்மையாலும், மரபு முறையினைத் தன் இன்னுயிர் துறத்தலாலும் காத்தோம்பினுன், என்பான், 'வாய்மையும் மரபுங்காத்து மன்னுயிர் துறந்த வள்ளல்' என்ருன். தசரதன் கைகேயிக்கு வரமளித்தது நெடுநாட்களுக்கு முற்பட்ட செயலா யினும், கைகேயி அவ்வரத்தினைக் கருவியாகக்கொண்டு பரதனுக்கு அரசுரிமையை வேண்டிப் பெற்றது, தசரதன் தன் அவையில் அமைச்சர் முதலியோர் முன்னிலையில் இராமனுக்கு முடிசூட்டுவதாக உறுதி செய்த பின்னரேயாதலின், தசரதன் முன் இராமனுக்கு உரிய

தாகக் கூறிய அரசினைக் கைகேயியின் சொற்கேட்டுப் பரதனுக்கு உரியதாகக் கொடுத்ததும் சொன்ன சொல் தவறுதலாகி வாய்மையின் வழுவி மரபொடு மாறுபட்ட செயலாகவே முடியும். இந் நுட்பத்தினை,

'என்னே நிருப னியற்கை யிருந்தவா
தன்னே ரிலாத தலைமகற்குத் தாரணியை
முன்னே கொடுத்து முறைதிறம்பத் தம்பிக்குப்
பின்னே கொடுத்தாற் பிழையாதோ மெய்யென்பார்'
(நகர் நீங்கு - 109)

என அயோத்தி நகர மாந்தர்கூற்றில் வைத்து ஆசிரியர் புலப்படுத்தியுள்ளார். தசரதன் கைகேயி வேண்டிய வண்ணம் பரதனுக்கு அரசுரிமை தந்து இராமன் வனம் புக இசையானுயின் கைகேயிக்குக் கொடுத்த வாக்கில் தவறியவனுவன். இனி, கைகேயியின் சொல்லுக்கு இசைந்து இராமன் அரசு துறந்து வனம் புகத் தான் உயிர் தாங்கி யிருப்பானுயின், அவையோர் முன்னிலையில் இராமனுக்கு முடிசூட்டுவதாகத் தான் முன் சொல்லிய உறுதியுரையில் வழுவியதுடன் 'மூத்தவர்க்கு அரசு உரியது' என்னும் தன் குலமுறையிலும் வழுவியவனுவன். எனவே இவ் விருவகையாலும் தன் வாய்மைக்கு இழுக்கு நேராதபடியும் மரபின் நெறிமுறையில் தான் வழுவாதபடியும் தன் இன்னுயிரைத் துறந்து வாய்மை, மரபு என்னும் இரண்டினையும் காத்தோம்பினுன் என்பதாம். மனமாசு அகற்றித் தூய்மை நல்குவது வாய்மையாகிய நல்லறமேயாதலின் வாய்மையைக் காத்த தசரத மன்னனைத் 'தூயவன்' எனப் போற்றினுன் வாலி. வாய்மையே மனத் தூய்மையைத் தரும் என்பது,

'புறந்தூய்மை நீரான் அமையும், அகந்தூய்மை
வாய்மையாற் காணப்படும்' (திருக்குறள் - 298)

என்பதனுல் அறியப்படும். 'நினது குடியில் உனக்கு முன் தோன்றிய தந்தையாகிய தசரதனே, வாய்மையாகிய அறத்தினையும் தன் குடிப் பண்பினையும் நிலைநிறுத்தற்பொருட்டுத் தனது உயிரையே வழங்கிய பெருவள்ளல். உனக்குப்பின் தம்பியாகத் தோன்றிய பரதனே, தாயின் வரத்தால் தனக்குக் கிடைத்த அரச பதவியினைத் தீவினையெனக் கருதி நீங்கி, அச்செல்வமனைத்தையும் தன் தமையனுக்கே அளித்து அவன் ஆணைவழி யொழுகும் தூய பண்புடையவன். இவ்வாறு நின்குடியில் நினக்குமுன் தோன்றிய தந்தையும் பின் தோன்றிய பரதனும் தொன்றுதொட்டு வரும் தமது குடிப்பண்பில் ஒரு சிறிதும் தவருதவராக அமைய, இங்ஙனம் இடையருது தொடர்ந்து வரும் நுமது பழங்குடிப் பண்பு இடையறவு படும்படி இவ் விருவர்க்கும் இடையே நீ தோன்றினமையால் நின்குடிப் பெரு

மைக்குப் பெரும்பழி யுண்டாயிற்றே என்று இரங்குவான், 'தூயவன் மைந்தனே நீ பரதன்முன் தோன்றினையே' என்றான். தீமை செய்யாதபடி பிறரைத் தடுத்துக் காக்கும் கடமை மேற்கொண்ட தலைவர்கள், தாமே அத் தீமையைச் செய்தனராயின், அத் தீச்செயல், தகுதி மிக்க அத் தலைவராற் செய்யப்பட்டமை பற்றித் தீங்கில்லாத நன்மையாய் மாறிவிடுமோ? என வினவுவான், 'தீமைதான் பிறரைக் காத்துத் தான் செய்தால் தீங்கன்றாமோ?' என்றான். 'கைக்குமாம்-தேவரே தின்னினும் வேம்பு' (நாலடி - 112) என்றவாறு, யாவர் செய்தாலும் தீமை தீமையே யாவதல்லது ஒருபோதும் தீமை நன்றாகிவிடாது என்பது கருத்து. தாய்மை - மகவெனப் பல்லுயிரனைத்தையும் ஒக்கப்பார்த்து எவ்வுயிர்க்கும் நலஞ் செய்தலாகிய பரிவுடைமை. நண்பு - மேலோர் கீழோர் என்னும் வேற்றுமை கருதாது தன்பால் அன்புடையார் யாவரையும் தோழரெனக் கொண்டு, உடுக்கை யிழந்தவன் கைபோல அன்னோர் இடுக்கண் களைதற்கு முந்தும் தோழமைத் திறம். அறம் - அழுக்காறு அவா வெகுளி முதலிய மனமாசினைக் களைந்து நடுவுநிலையில் நின்று தீயோரை யொறுத்து நல்லோர்க்கு நலஞ் செய்தலிற் பின்னிடாத அரசியல் நெறிமுறை. (85)

4123. குலமிது கல்வி யீது
கொற்றமீ துற்று நின்ற
நலமிது புவன மூன்றும்
நாயக முன்ன தன்றோ
வலமிதிவ் வுலகந் தாங்கும்
வண்மையீ தென்றாற் றிண்மை
அலமரச் செய்ய லாமோ
வறிந்திருந் தயர்ந்து ளார்போல்

குலம் இது; கல்வி ஈது;
கொற்றம் ஈது; உற்று நின்ற
நலம் இது; புவனம் மூன்றும்
நாயகம் உன்னது அன்றோ?
வலம் இது; இவ் உலகம் தாங்கும்
வண்மை ஈது; என்றால் திண்மை
அலமரச் செய்யலாமோ,
அறிந்திருந்து அயர்ந்துளார் போல்.

பொ :—நீ பிறந்தகுலமோ (வாய்மையின் வழாது மன்னுயிர் ஓம்பிய பேரரசர்கள் பிறந்த) இத்தகைய பெருமை வாய்ந்தது. நீ கற்ற கல்வியோ (அறியாதோரையும் அறியத்தேற்றி யாவரையும் இன்புறுத்தும்) இத்தகுதி யுடையது. நினது வெற்றித்திறமோ (கரன் தூடணன் முதலிய கொடிய அரக்கர்களை வென்ற) இத்தகைய தனிச் சிறப்புடையது. நின்பால் அமைந்த (அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை முதலிய) நற்பண்புகளின் இயல்போ (எல்லோர்க்கும் துன்பகற்றி இன்பஞ் செய்தலாகிய) இவ்வியல்பினது. (இவை இவ்வாறுதலின்) மூவுலகத்தும் ஆட்சி செலுத்தற்குரிய இறைமைக் குணம் நின் ஒருவன் கண்ணேயே தங்கியுள்ள தனிச் சிறப்பாயிற்றன்றோ? நினது பேராற்றல் இதுவாகவும், இவ்வுலகத்தைப் பாதுகாக்கும் நினது வண்மை யிதுவாகவும் அமைந்துள்ளன என்றால், (தனக்குரிய கடமைகள் எல்லாவற்றையும்) அறிந்திருந்தும் (அவற்றுள் ஒன்றையும்) அறியாதாரைப் போன்று (நின்பால் யாங்கள் கொண்டுள்ள மனவுறுதியாகிய நம்பிக்கை) நிலைகுலைந்து சிதையும்படி நீ தகுதியல்லாதனவற்றைச் செய்தல் முறையாகுமோ?

கு :—மறைந்து நின்று தன்மேல் அம்பெய்த இராமனைக் கண்ட வாலி, 'வாய்மையில் வழுவாத தசரதன் மைந்தனாகிய நீ, என்பாற் செய்த இச்செயல், நின் குலத்திற்கும் கல்விக்கும் கொற்றத்திற்கும் நலத்திற்கும் மூவுலகத்திற்கும் தலைவனாகிய நினது தலைமைக்கும் நீ இதுகாறும் பெற்றுள்ள வெற்றிக்கும் இவ்வுலகவுயிர்களை யெல்லாம் பாதுகாக்கவல்ல நினது அருள் வண்மைக்கும், யாங்கள் நின்பால் உறுதியாகக் கொண்டுள்ள நம்பிக்கைக்கும் சிதைவுண்டாக்கியது. எல்லாம் அறிந்தவனாகிய நீ ஒன்றும் அறியாதாரைப் போன்று இவ்வாறு எனக்குத் தீங்கு செய்தல் அறமாகுமோ?' என இரங்கி முறையிட்டான் என்பதாம். குலம் - நற்குடிப் பிறப்பு. கொற்றம் - வெற்றித் திறம். புவனம் - உலகம். நாயகம் - தலைமை. வலம் - வன்மை. திண்மை - உறுதி; நம்பிக்கை. அலமரல் - மனச்சுழற்சி. அயர்த்தல்- மறத்தல். (86)

4124. கோவியற் றரும முங்கள்
குலத்துதித் தோர்கட் கெல்லா
மோவியத் தெழுத வொண்ணா
வுருவத்தா யுடைமை யன்றோ

ஆவியைச் சனகன் பெற்ற
வன்னத்தை யமிழ்தின் வந்த
தேவியைப் பிரிந்த பின்னைத்
திகைத்தனை போலுஞ் செய்கை.

'கோ இயல் தருமம் உங்கள்
குலத்து உதித்தோர்கட்கு எல்லாம்—
ஓவியத்து எழுத ஒண்ணு
உருவத்தாய் ;—உடைமை அன்றோ ?
ஆவியை, சனகன் பெற்ற
அன்னத்தை, அமிழ்தின் வந்த
தேவியைப் பிரிந்த பின்னை,
திகைத்தனை போலும், செய்கை.'

பொ :—(எழுத்துருவாகிய) ஓவியத்தில் எழுதிக் காட்டுதற்கு அரிய அழகிய திருவுடம்புடையவனே, அரசியல் நீதியாகிய அறம் உங்கள் குடியிற் பிறந்தோர் அனைவர்க்கும் (சிறப்புரிமையாகிய) உடைமைப் பொருளா யமைந்ததல்லவா? (நினக்கு) இனிய உயிராகியவளும், சனகன் பெற்ற மகளாகி (நடையால்) அன்னம் எனத் தக்கவளும், (பாற்கடலில்) அமிழ்தொடு பிறந்தவளும் ஆகிய நின் மனைவியைப் பிரிந்த பின்னர் (நீ சிந்தை கலங்கினமையால்) நினக்குரிய அறச் செயல்களில் வழுவித் திகைப்புற்றனை போலும் ?

கு :—கோ இயல் தருமம் - அரசனுக்குரிய இயல்பாகிய அறம்; என்றது அரச நீதியை. ஓவியத்து எழுத ஒண்ணு உருவத்தாய், கோ இயல் தருமம் உங்கள் குலத்து உதித்தோர்கட் கெல்லாம் உடைமையன்றோ என இயைத்துரைக்க. ஓவியம் - சித்திரம். இராமனது திருமேனி எழுத்துருவாகிய சித்திரத்தில் எழுதிக் காட்ட இயலாத அருமைப்பாடுடைய தெனவே, அவனது வடிவினைச் சிற்ப முதலியவற்றில் வடித்துக் காட்டுதல் இயலாதென்பதும் உடன் கூறியவாறு. உடைமை - தொன்றுதொட்டு உரிமையாய் வரும் கிழமைப் பொருள். இராமனுற் காதலிக்கப்பெறும் பொருள்களெல்லா வற்றிலும் சீதை அவனுக்கு உயிர்போற் சிறந்தமையின் 'ஆவி' எனவும், அன்னத்தையொத்த நடையுடைமை பற்றி 'அன்னம்' எனவும், கழிபெருஞ் சுவையோடு உறுதிபயத்தற் சிறப்புடைய அமிழ்தொடு பிறந்த உடன்பிறப்புடைய திருமகளின் அவதாரம் ஆதல் பற்றி 'அமிழ்தின் வந்த தேவி' எனவும் கூறினுன். அமிழ்தின் வந்த - அமிழ்தொடு வந்த; உருபு மயக்கம். வருதல் - பிறத்தல். அமிழ்தினையொத்துத் தோன்றிய எனப் பொருளுரைத்தலும் உண்டு.

திகைத்தல் - மனமயங்குதல். ஆவியை, அன்னத்தை, தேவியை என ஒரு பொருள்மேல் தொடர்ந்து வந்த இரண்டாம் வேற்றுமை உருபுகள் 'பிரிந்த பின்னை' என்புழிப் பிரிதலாகிய வினைகொண்டு முடிந்தன. தன்னுயிர்க்கு இறுதி விளைத்தவன் இராமன் என்பதனை வாலி தெளிவாக அறிந்த பின்னரும் தான் அவன்பால் முன்னமே வைத்திருந்த அன்பும் மதிப்பும் கெடாத நிலையில் இராமன் செயலைக் கண்டித்துரைக்கும் முறை, 'பகையுளும் பண்புள பாடறிவார் மாட்டு' (திருக்குறள் - 998) என வரும் தமிழ்மறைக்கு இலக்கியமாய் அமைந் திருத்தல் அறிந்து மகிழத்தக்கதாகும். (87)

4125. அரக்கரோ ரழிவு செய்து
கழிவரே லதற்கு வேறோர்
குரக்கினத் தரசைக் கொல்ல
மனுநெறி கூறிற் றுண்டோ
விரக்கமெங் குகுத்தா யென்பா
லெப்பிழை கண்டா யப்பா
பரக்கழி யிதுநீ பூண்டாற்
புகழையார் பரிக்கற் பாலார்.

'அரக்கர் ஓர் அழிவு செய்து
கழிவரேல், அதற்கு வேறு ஓர்
குரக்கு இனத்து அரசைக் கொல்ல
மனுநெறி கூறிற்று உண்டோ?
இரக்கம் எங்கு உகுத்தாய்? என்பால்
எப் பிழை கண்டாய்? அப்பா!
பரக்கழி இது நீ பூண்டால்,
புகழை யார் பரிக்கற் பாலார்?'

பொ :—அரக்கரினத்தார் ஒரு தீங்கினைச் செய்து தப்பிச் சென்று விட்டாரென்றால், அதற்குரிய தண்டனையாக (அவ்வரக்கரினும்) வேறுபட்ட குரங்கினத் தரசனைக் கொல்லும்படி மனுநூல் விதித் துள்ளதோ? ஐயனே, (நினக்குரிய தலைமைக் குணமாகிய) இரக் கத்தினை எவ்விடத்தே கொட்டிக் கவிழ்த்தாய்? (என்னை ஒறுத்தற் குரிய காரணமாக) என்பால் எந்தக் குற்றத்தைக் கண்டாய்? பெரும் பழியாகிய இதனை (நினக்குரிய அணிகலமாக விரும்பி)ப் பூண்பா யாயின், புகழாகிய அணியைப் பொறுத்தற்குரிய ஆற்றலுடையார் யாருளர்?

கு:—அரக்கர் - இரக்கமில்லாத நெஞ்சத்தினையுடைய ஓரினத்தார்; என்றது, இராவணன் முதலிய இராக்கதரை. அழிவு - தீங்கு. கழிதல் - தப்பிச் செல்லுதல். அரக்கர்குல வேந்தனாகிய இராவணன் நினக்குப் பெருந் தீங்கு விளைத்துத் தப்பிச்சென்ற நிலையில் அவனைத் தொடர்ந்து பற்றி அழிப்பதுவே நினக்குரிய அரசியல் நெறிமுறையாகவும், அதனைச் செய்யாது விட்டு, அரக்கரொடு சிறிதும் தொடர்பில்லாத குரக்கரசாகிய என்னைக் கொல்லுதல் உங்கள் மனு முதலிய அறநூல்களின் விதிகளுக்குச் சிறிதும் ஒவ்வாதென்பான், 'அரக்கர் ஓர் அழிவு செய்து கழிவரேல் அதற்கு வேறு ஓர் குரக்கினத்து அரசைக் கொல்ல மனுநெறி கூறிற்றுண்டோ' என வினவினான். அரக்கர் செய்த அழிவாவது, அரக்கர் தலைவனாகிய இராவணன், இராமனது மனைவியாகிய சீதையை வஞ்சனையாற் கவர்ந்த பெருந் தீங்கு. அரக்கர் செய்த தீங்கிற்கும் குரக்கினத்தாராகிய தங்களுக்கும் சிறிதும் தொடர்பில்லை என்பான், 'வேறோர் குரக்கினத்தரசு' எனத் தன்னைக் குறித்தான். அருளாளனாகிய நீ நினக்கு ஒரு தீங்கும் எண்ணாத என்மேல் இங்ஙனம் மறைந்து நின்று அம்பெய்து கொல்லுதலாகிய இக் கொடுஞ்செயலை நிகழ்த்தல் வேண்டி நினக்கு இயல்பாகிய இரக்கத்தினை எவ்விடத்தே பயனின்றி உகுத்துப் போக்கினாய் என வினவுவான், 'இரக்கம் எங்கு உகுத்தாய்' என்றான். உகுத்தல்- யாவருக்கும் பயன்படாதபடி கீழே கொட்டிக் கவிழ்த்தல். 'அங்கணத்துள் உக்க அமிழ்தற்றால்' (720) என வரும் திருக்குறளில் உகுத்தல் இப்பொருளில் ஆளப்பெற்றமை காணலாம். 'தீமை செய்தோரை இரக்கமின்றிக் கொல்லுதலே அரசியல் நெறிமுறை என்பாயாயின், நின்னால் இரக்கமின்றிக் கொன்று ஒறுக்குமாறு யான் செய்த தீங்காக நீ என்பாற் கண்ட குற்றம் யாது?' என வினவுவான், 'என்பால் எப்பிழை கண்டாய்' என்றான். புகழத்தக்க பெரியோனாகிய நீ, சிறியோர்களால் எளிதிற் சுமக்கப்படும் பெரும் பழியையே நினக்குரிய அணிகலமாக விரும்பிப் பூணுவாயாயின், இவ்வுலகில் அரிதிற் பூணுதற்குரிய புகழாகிய பேரணிகலனைப் பொறையுடன் பூணவல்லார் வேறு யாருளர் என்பான், 'பரக்கழி இது நீ பூண்டாற் புகழையார் பரிக்கற் பாலார்' என்றான். பரக்கழி-பெரும் பழி. பரித்தல் - பாரமுடையதாயினும் பொறுத்துச் சுமத்தல். (88)

**4126.** ஒலிகட லுலகந் தன்னி
லூர்தரு குரங்கின் மாடே
கலியது காலம் வந்து
பரந்ததோ கருணை வள்ளால்

மெலியவர் பால தேயோ
வொழுக்கமும் விழுப்பந் தானும்
வலியவர் மெலிவு செய்தாற்
புகழன்றி வசையின் ருமோ.

‘ஒலி கடல் உலகம் தன்னில்
ஊர்தரு குரங்கின் மாடே
கலியது காலம் வந்து
பரந்ததோ ? கருணை வள்ளால் !
மெலியவர் பாலதேயோ,
ஒழுக்கமும், விழுப்பம் தானும் ?
வலியவர் மெலிவு செய்தால்
புகழ் அன்றி வசை இன்று ஆமோ ?’

பொ:—‘அருள் நிரம்பிய வள்ளலே, ஆரவாரிக்கும் கடலாற் சூழப்பட்ட இந்நிலவுலகத்திலே (மரங்களில்) ஏறித்திரியும் இயல்புடைய குரங்கினிடத்தே (துன்பத்திற்குக் காரணமாகிய) கலிபுருடனது காலம் வந்து பரவியதோ ? (உயிரினும் சிறந்ததாகப் பேணத்தகும்) ஒழுக்கமும் (அதனாற் பெறத்தக்க) சிறப்பும் (வலிமையில்லாத) மெலியவரிடத்தே மட்டும் அமைதற்குரியதாகுமோ ? வலிமையிற் சிறந்தோர் தம்மின் மெலியாரைத் துன்புறுத்துவராயின் (அத்தீச்செயலால்) அவ் வலியோர்க்குப் புகழேயுளதாவதன்றிப் பழி என்பது இல்லையாய் விடுமோ?’

கு:—ஊர்தல் - ஏறுதல்; மக்களைப் போன்று நிலத்தில் நிலைத்துத் தங்காமல் மரக்கிளைகளில் ஏறிவாழும் இயல்புடைய குரங்கென்பான், ‘ஊர்தரு குரங்கு’ என்றான். ‘கோடுவாழ் குரங்கு’ (மரபு-13) என்பது தொல்காப்பியம். குரங்கின் மாடு - குரங்கினிடத்தே. மாடு என்பது ஏழாம் வேற்றுமை உருபின் பொருளில் வந்தது. கலியது காலம் - கலிபுருடனுக்கு உரிய காலம், கலியுகம்; அஃதாவது அறம் குறையத் தீமையே பெருகித் தோன்றும் துன்பக்காலம். கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் என்ற நால்வகை யுகங்களுள் அறமானது, கிருதயுகத்தில் நான்கு பாதமும், திரேதாயுகத்தில் மூன்று பாதமும், துவாபரயுகத்தில் இரண்டு பாதமும், கலியுகத்தில் ஒரு பாதமும் ஆக நிகழ்ந்து அதன் முடிவில் வரவரக் குறைந்திடும் என்பராதலின், கலியது காலம் அறமல்லாத தீய செயல்கள் நிகழ்தற்கு இடமான துன்பக் காலமாகக் கருதப்படுவதாயிற்று. இராம சரிதம் நிகழ்ந்தது திரேதாயுகத்தில் என்பர். அறமே நிலைபெற்றுப் பெரிதும் நலந்தரும் இரண்டாம் யுகமாகிய இத் திரேதாயுகத்திலே,

ஒரு பாவமும் அறியாது வாழும் குரக்கினத்தாராகிய எம்மைத் தீமையே நிறைந்த நான்காம் யுகமாகிய கலிகாலத்தின் கொடுமை முற்பட்டு வந்து சூழ்ந்து கொண்டதோ என்பான், 'ஒலிகடலுலகந் தன்னில் ஊர்தரு குரங்கின் மாடே, கலியது காலம் வந்து பரந்ததோ' எனக் கலக்கமுற்று வருந்திஞன். ஒழுக்கத்தின் உயர்வினை யுணர்ந்து அதனை உயிரினுஞ் சிறந்ததாகக் கடைப்பிடித்தொழுகும் உரனுடை யுள்ளத்தராகிய வலியோர், ஒழுக்கமும் விழுப்பமும் வலியற்ற மெலி யவர் மட்டுமே கடைப்பிடித்தற்குரியன என எண்ணி, அவற்றைத் தாம் கைநெகிழ விடுதல் அறமாகாது என்பான், 'மெலியவர் பால தேயோ ஒழுக்கமும் விழுப்பந்தானும்' என்ருன். ஏகாரம் - பிரிநிலை. ஒழுக்கமும் விழுப்பமும் மெலியவர் வலியவர் என்னும் வேறுபாடின்றி யாவராலும் நெகிழாதபடி போற்றத்தக்கன என்பது கருத்து. வன்மையுடையோர் தம்மாற் பேணத்தகும் அறத்தினை மதியாது மெலியவர்க்கு இடுக்கண் விளைப்பாராயின் அச்செயல் அன்னேரது ஆற்றலைப் புலப்படுத்தும் புகழாகக் கருதப்படாமல் தீராப் பழியையே தரும் என்பான், 'வலியவர் மெலிவு செய்தால் புகழன்றி வசையின் ருமோ' என்ருன். வலியவர் - அறிவு, ஆண்மை, பொருள், படை என்னும் இவற்ருல் வன்மையுடையார். மெலிய்வர் - மேற்கூறிய வற்றிற் குறைபாடுடையராய் ஆற்றல்குன்றி மெலிந்தோர். ஒழுக்கம் - நல்லொழுக்கம். விழுப்பம் - ஒழுக்கத்தால் உண்டாகும் சிறப்பு. மெலியவர்பாலதேயோ ஒழுக்கமும், மெலியவர்பாலதேயோ விழுப்பமும் எனத் தனித்தனி கூட்டுக. (89)

4127. கூட்டொரு வரையும் வேண்டாக்
கொற்றவ பெற்ற தாதை
பூட்டிய செல்வ மாங்கே
தம்பிக்குக் கொடுத்துப் போந்து
நாட்டொரு கருமஞ் செய்தா
யெம்பிக்கிவ் வரசை நல்கிக்
காட்டொரு கருமஞ் செய்தாய்
கருமந்தா னிதன்மே லுண்டோ.

'கூட்டு ஒருவரையும் வேண்டாக்
கொற்றவ! பெற்ற தாதை
பூட்டிய செல்வம் ஆங்கே
தம்பிக்குக் கொடுத்துப் போந்து,

நாட்டு ஒரு கருமம் செய்தாய்;
எம்பிக்கு இவ் அரசை நல்கி,
காட்டு ஒரு கருமம் செய்தாய்;
கருமம்தான் இதன்மேல் உண்டோ ?'

பொ :—'(போரிற் பகைவரை வென்றழித்தற்குத்) துணையாக ஒருவரையும் வேண்டாத வென்றி வேந்தனே, நின்னைப் பெற்ற தந்தை (தசரதன்) வற்புறுத்தி (நின்னை) மேற்கொள்ளச் செய்த அரசுச் செல்வத்தை அவ்வாறே உன் தம்பி (பரதனு)க்குக் கொடுத்து விட்டு (வனத்திற்) போந்தமையால், நினது நாட்டின்கண்ணே ஒப்பற்றதொரு செயலைச் செய்தாய். என் தம்பி (சுக்கிரீவனு)க்கு (எனக்குரிய) இவ்வரசுச் செல்வத்தைக் கொடுத்து இக்காட்டின் கண்ணும் ஒரு (புதுமையான) காரியத்தைச் செய்தாய். (நீ செய்த) இச் செயலினும் மிக்கதாகக் கூறத்தக்க வேறொரு செயல் உளதோ ?'

கு :—கூட்டு - துணை. வேண்டுதல் - தனக்கு இன்றியமையாத தாக விரும்பி எதிர்பார்த்தல். கொற்றவன் - வென்றி வேந்தன், பெரும் படைகளோடு வந்து தன்னை எதிர்த்த கரன், தூடணன் முதலிய அரக்கர்களை இராமன், யாருடைய துணையுமின்றித் தானே தனித்து நின்று பொருதழித்த வெற்றித் திறத்தை நினைந்து, 'கூட் டொருவரையும் வேண்டாக் கொற்றவ' என அழைத்தான் வாலி. பிறருடைய துணை வேண்டாது தான் ஒருவனாகவே நின்று பகைவரை வெல்லுந் திறத்தினைத் 'துணைவேண்டாச் செருவென்றி' என்பர் (தொல் – புறத்திணை. 9. நச்சினார்க்கினியர் உரைநோக்குக). அசகாயசூரன் என்னும் வடசொற்றொடரும் இப்பொருளில் வழங்கு வதேயாகும்.

'துணை வேண்டாச் செருவென்றிப்
புலவுவாட் புலர் சாந்தின்
முருகற் சீற்றத் துருகெழு குருசில்' (புறம்-16)

என வரும் தொடர் இங்கு நினைத்தற்குரியதாகும். நின் தந்தை யாகிய தசரதன் பெருந் தவஞ் செய்து நின்னை மகனாகப் பெற்றான் என்பான், 'பெற்ற தாதை' எனக் குறித்தான். இராமனாகிய நீ 'மூத்தவர்க்கு உரித்து அரசு' என்னும் நெறிமுறைப்படி உனக்கே யுரியதாகிய அரச பதவியினைப் பூணும் விருப்பின்றி, நின் தந்தையே வற்புறுத்திப் பூட்டப் பூண்டனை என்பான், 'பெற்ற தாதை பூட்டிய செல்வம்' எனக் குறித்தான். பூணுதல் - தானே விரும்பியணிந்து கொள்ளுதல். பூட்டுதல் - பிறரை வற்புறுத்தி அணிவித்தல். தந்தை தனக்கே உரியவாகத்தந்த அரசுச் செல்வங்கள் அத்தனையும் சிறிதும்

எஞ்சாமல் தன் தம்பிக்குக் கொடுத்தான் என்பான், 'பெற்ற தாதை பூட்டிய செல்வம் ஆங்கே தம்பிக்குக் கொடுத்து' என்ருன். ஆங்கே - அவ்வாறே. இனி, 'ஆங்கே கொடுத்து' என்பதற்கு, அப்பொழுதே கொடுத்து எனப் பொருளுரைத்தலும் உண்டு. தந்தை உவந்து கொடுத்த அரசுச் செல்வத்தைச் சிறிது பொழுதேனும் தான் நுகர்ந்து மகிழும் விருப்பின்றித் தன் சிற்றன்னையாகிய கைகேயியின் சொற் கேட்ட அப்பொழுதே அவையனைத்தையும் தம்பிக்குக் கொடுத்து நாட்டைத் துறந்து வனம்புக்கான் என்பது கருத்து. போந்து - போந்தமையால்; செய்து என்னும் வாய்பாட்டு எச்சம் காரணப் பொருளில் வந்தது. கருமம் - (செய்யத்தக்க) செயல். இராமன் நாட்டிற் செய்த கருமமாவது, மூத்தோனுகிய தனக்குரிய அரச பதவியைத் தம்பியாகிய பரதனுக்கு அளித்தமை. காட்டிற் செய்த கருமமாவது, இராவணனைக் கொன்று சீதையை மீட்டுக் கோடற் பொருட்டுச் சுக்கிரீவனது துணையை நாடி அவனுடைய தமையனுகிய வாலியைக் கொன்று அவனது அரசினை அவன் தம்பி யாகிய சுக்கிரீவனுக்கு அளிக்க முன்வந்தமை. இவ்விரு செயல்களின் ஏற்றத் தாழ்வினை எண்ணிய வாலி, இராமனை நோக்கி, 'நீ நாட்டிற் புரிந்த செயல் தன்னலமற்ற பெரு வள்ளலாகிய நினது உயர்வற வுயர்ந்த பெருமாண்பினையும், காட்டிற் செய்த செயல் அம்மாண் பிற்கு முற்றிலும் மாறுபட்ட இழிவினையும் புலப்படுத்தும் நிலையில் உயர்வறவுயர்ந்த பெருமாண்புக்கும் இறப்பவிழிந்த தாழ்வுக்கும் முறையே எடுத்துக் காட்டாக அமைந்தமையால் நீ செய்த இச்செய லுக்கு மேலாக உயர்வுக்கும் தாழ்வுக்கும் உவமையாக எடுத்துக் காட் டத்தக்க வேருெரு செயல் உலகில் நிகழ்தற்கில்லை' என்பான், 'பெற்ற தாதை பூட்டிய செல்வம் ஆங்கே தம்பிக்குக் கொடுத்துப் போந்து நாட்டொரு கருமஞ் செய்தாய், எம்பிக்கு இவ் அரசை நல்கிக் காட்டொரு கருமஞ் செய்தாய், இதன்மேல் கருமந்தான் உண்டோ' என வினவினுன். "நாட்டிலேயன்றிக் காட்டிலேயும் வரன்முறைக்கு மாருகத் தமையன் அரசைத் தம்பிக்குக் கொடுக்கும் புதுமையான செயல்கள் புரிந்தாய்! அச்செயல்களால், நாட்டிலே, வேண்டுமென்றன்றி, ஓர் அரசனையும், காட்டிலே வேண்டுமென்றே ஓர் அரசனையும் உயிரொழியச் செய்தாய்! இப்படிப்பட்ட அபூர்வமும் அநியாயமுமான செயல்களினும் அதிகமான செயல் யாதிருக்கின் றது!' என்று இராமனை நோக்கி வாலி பரிகாசமும் பரிதாபமும் ஒருங்கு புலப்பட உரைத்தானென்பது கருத்து" என இப்பாடற்குக் கருத்துரைப்பர் கம்பராமாயண சாரமுடையார். (90)

4128. அறைகழ லலங்கல் வீர
ராயவர் புரிவ தாண்மைத்
துறையென லாயிற் றன்றே
தொன்மையி னன்னூற் கெல்லா
மிறைவனீ யென்னைச் செய்த
தீதெனி லிலங்கை வேந்தன்
முறையல செய்தா னென்று
முனிதியோ முனிவி லாதாய்.

'அறை கழல் அலங்கல் வீரர்
ஆயவர் புரிவது, ஆண்மைத்
துறை' எனல் ஆயிற்று அன்றே?
தொன்மையின் நன்னூற்கு எல்லாம்
இறைவன் நீ, என்னைச் செய்தது,
ஈது எனில், 'இலங்கை வேந்தன்
முறை அ(ல்)ல செய்தான்' என்று
முனிதியோ? முனிவு இலாதாய்'

பொ :—'தொன்மையுடையனவாய்ப் பயிலப் பெற்றுவரும் நல்ல அறநூல்களுக்கெல்லாம் ஆசானாக விளங்கும் நீ, (குரங்கு இனத்தவனாகிய) என்னைப் பொருதழித்த செயல், ஒலிக்கின்ற வீரக்கழலையும் (வெற்றி) மாலையினையும் அணிந்த வீரரானோர் செய்யும் செயல் (அஃது அறத்தொடு மாறுபடினும்) அவரது பேராண்மையினைப் புலப்படுத்தும் போர்த்துறை எனச் சிறப்பித்துக் கூறுதலாகிய நிலையினை உடையதாயிற்றல்லவா? (யாவரையும்) வெகுளாத இயல்புடையவனே, (நின்செயல்) இத்தன்மையதாயின், இலங்கையர் மன்னனாகிய இராவணன் நீதியற்ற செயல்களைச் செய்து விட்டான் என்று (அவனை) வெகுளக் கடவாயோ?'

கு :—தொன்மையின் நன்னூற்கு எல்லாம் இறைவன் நீ என்னைச் செய்தது, 'அறைகழல் அலங்கல் வீரராயவர் புரிவது ஆண்மைத்துறை' எனல் ஆயிற்றன்றே? முனிவு இலாதாய்! (நின் செயல்) ஈது எனின், 'இலங்கை வேந்தன் முறையல செய்தான்' என்று முனிதியோ? என இயைத்துரைக்க. அறைதல் - ஒலித்தல். கழல் என்பது வெற்றிக்கு அடையாளமாக வீரர்கள் காலில் அணியப் பெறும் அணி. அலங்கல் - மாலை. தொன்று தொட்டுச் சான்றோர்களாற் போற்றப் பெற்று வரும் பழைய அறநூல்களின் அரும்

பொருள்களை உள்ளவாறு உணர்தற்கும் அவற்றின் நெறிமுறைகளை வழுவாது கடைப்பிடித்தற்கும் ஏற்றவண்ணம் தன் வாழ்க்கை முறையால் அவற்றை நன்கு பயிற்றவல்ல ஆசானாக விளங்குபவன் இராமனாகிய நீ ஒருவனே என்பான், 'தொன்மையின் நன்னூற்கெல்லாம் இறைவன் நீ' என்றான். ஆண்மையிற் சிறந்த வீரராவார், அறநூல்கள் அறிவுறுத்திய நல்லறங்களில் வழுவாதொழுகி, அறமல்லாத தீச்செயல்கள் தம்பால் நிகழாமற் கடிந்து காக்கும் வீரத்தின் வழுவாத பெருமையுடையராக இருத்தல் வேண்டுமென்பது அறநூல் விதியாகவும், 'நின் செய்கை கண்டு நினைந்தனவோ நீண் மறைகள், உன் செய்கை அன்னவைதான் சொன்ன ஒழுக்கினவோ' (ஆரணிய-கவந்தப்-49) எனப் போற்றுமாறு அறநூல் விதிகளுக்கெல்லாம் இலக்கியமாகத் திகழும் பேராண்மையாளனாகிய நீ, என்திறத்து அறநூன் முறையில் வழுவி நின் வீரத்திற்கு மாசுண்டாகச் செய்த இச்செயல், பெரு வீரனாகிய நின்னாற் செய்யப்பட்டமைபற்றி வீரர்க்குரிய போர்த்துறைகளுள் இதுவும் ஒன்றே என உலகத்தாராற் பிழைபடக் கருதப்பெறும் நிலையினை யுடையதாயிற்றே என்பான், 'அறைகழ லலங்கல் வீரராயவர் புரிவது ஆண்மைத், துறையெனலாயிற்றன்றே' என இரங்கிக் கூறினான். அறநூல்கள் விதித்த போர்த் துறைகளில் வழுவாது ஒழுகுபவரே வீரராவார் என்னும் உண்மையியல்பு மறக்கப்பட்டு, வீரர் எனப்படுவோர் செய்வது எதுவும் ஆண்மைத் துறையேயாம் என்னும் தவறானதொரு கருத்து நின் செயலால் உலகில் ஏற்படுவதாயிற்று என வாலி இராமனை நோக்கிக் கூறினான் என்பதாம். அறநூல்களின் நெறிமுறைகளை நினது வாழ்க்கை முறையில் வைத்து உலகத்தார்க்கு அறிவுறுத்தும் கடமையுடைய இறைவனாகிய நீயே நினது கடமையில் வழுவி என்திறத்துப் பெருந் தீங்கு செய்தனையாகவும் நீ செய்த குற்றத்தினை மறந்து, 'இராவணன் என்பால் நீதியற்ற செயல்களைச் செய்து விட்டானே' என்று தீமையே புரிந்தொழுகுமியல்புடைய அரக்கர்குலத் தலைவனாகிய அவனை வெகுளுதற்கு இடமுண்டோ? என்பான், 'நன்னூற்கெல்லாம் இறைவன் நீ, என்னைச் செய்தது ஈது எனின், இலங்கைவேந்தன் முறையல செய்தான்' என்று முனிதியோ' என இராமனை நோக்கி வாலி வினவினான். யாவரையும் வெகுளாத இயல்பினனாகிய நீ, 'தன் குற்றம் கடிந்தவனே முறை செய்தற்குரியவன்' என்னும் தகுதியினை மறந்து நீ என் திறத்துச் செய்த தீங்கினை எண்ணாது நின்திறத்து இராவணன் செய்த தீங்கினையே யெண்ணி அவனைச் சினத்தல் நினக்குத் தகுதியாகாது என்பான், 'முனிதியோ முனிவிலாதாய்' என்றான். முறையல - நீதியற்ற செயல்கள். (91)

4129. இருவர்போ ரெதிருங் காலை
யிருவரு நல்லுற் ருரே
ஒருவர்மேற் கருணை தூண்டி
யொருவர்மே லொளித்து நின்று
வரிசிலை குழைய வாங்கி
வாயம்பு மருமத் தெய்தல்
தருமமோ பிறிதொன் ருமோ
தக்கில தென்னும் பக்கம்.

'இருவர் போர் எதிரும் காலை,
இருவரும் நல் உற்ருரே;
ஒருவர்மேல் கருணை தூண்டி,
ஒருவர்மேல் ஒளித்து நின்று,
வரி சிலை குழைய வாங்கி,
வாய் அம்பு மருமத்து எய்தல்
தருமமோ? பிறிது ஒன்று ஆமோ?
தக்கிலது என்னும் பக்கம்.'

பொ:—'வீரர் இருவர் தம்முள் எதிர்த்துப் போர் செய்து கொண்டிருக்கும் நேரத்தில் அவ்விருவரும் (பொது நிலையிலுள்ள தம்பால் அன்பு ஒத்த) நல்ல உறவினராக அமைய, (அவ்விருவருள்) ஒருவரிடத்து அருளைச் செலுத்தி மற்ருெருவர்மேல் மறைந்து நின்று, வரிந்து கட்டப்பெற்ற வில்லினை நன்கு வளையுமாறு வளைத்து(க் கூரிய) வாயினையுடைய அம்பினை அவரது மார்பிற் செலுத்துதல் அறமாகுமோ? அன்றி அறத்தொடு மாறுபட்டதாகுமோ? (எங்ஙனமாயினும்) தகுதி (நடுவு நிலைமை) யில்லாதது என்னும் செயற்பகுதியின்பாற் பட்டதேயாகும்.'

கு:—இருவர் முரண்பட்டுப் போர்புரியும் நிலையில் அவ்விருவருக்கும் பொதுமை நிலையிலுள்ளார் ஒருவர், அவ்விருவருள் ஒருவரிடத்து மட்டும் அருளுடையராய் மற்ருெருவர்மேற் பகைமை கொண்டு மறைந்து நின்று அம்பெய்து கொல்லுதல் நடுவு நிலையில்லாத செயல் என்பதிற் சிறிதும் ஐயமில்லை என்பதாம். இருவர் போர் எதிருங்காலை ஒருவர்மேற் கருணை தூண்டி, ஒருவர்மேல் ஒளித்து நின்று வரிசிலை வாங்கி அம்பு மருமத்து எய்தல் தருமமோ (அன்றிப்) பிறிதொன்ருமோ? தக்கிலது என்னும் பக்கம் ஆம் என இயைத்துரைக்க. நல்லுற்ருர் - சிறந்த உறவினர். தூண்டுதல்–செலுத்தல். வரிசிலை - வரிந்து கட்டப்பெற்ற வில். குழைதல் - வளைதல். வாங்கி - வளைத்து. தக்கிலது – தகுதியில்லாதது. தகவிருந்நீர் என

வரற்பாலது 'தக்கிருந்தீர்' (சம்பந்தர் 3-125-8) என வந்தாற் போன்று, தகவிலது என வரற்பாலது 'தக்கிலது' என வந்தது. தகுதி - நடுவுநிலைமை. பக்கம் - பகுதி. பக்கம் ஆம் என ஆக்கச் சொல் வருவித்து முடிக்க. (92)

இதன்பின் 19, 27, 29, 41, 52-ஆம் பிரதிகளில் பின்வரும் பாடல் மிகையாகக் காணப்படுகிறது :—

4129 (a) ஒன்றாக நின்னோ டுறுஞ் செற்றமில்லை
யுலகுக்கு நான்செய்த தோர்குற்றமில்லை
வென்றுளவ தேயென்னில் வேறொன்றுமில்லை
வீணே பிடித்தென்றன் மேலம்பு விட்டாய்
தன்றாதை மாதாவுடன்கூடி யுன்னைத்
தண்ணீர் சுமக்குந் தவத்தோனை யெய்தான்
நின்றாதை யன்றேயு நீயும் பிடித்தாய்
நெறிபட்ட வாறின்று நேர்பட்டதாமே.

4130. வீர மன்று விதியன்று மெய்ம்மையின்
☆ வார மன்றுநின் மண்ணினுக் கென்னுடல்
பார மன்று பகையன்று பண்பொழிந்
தீர மன்றிது வென்செய்த வாறுநீ.

'வீரம் அன்று ; விதி அன்று ; மெய்ம்மையின்
வாரம் அன்று ; நின் மண்ணினுக்கு என் உடல்
பாரம் அன்று ; பகை அன்று ; பண்பு ஒழிந்து,
ஈரம் அன்று இது ; என் செய்தவாறு நீ ?'

பொ :—'(நீ செய்த) இச்செயல் அன்பொடு பொருந்தியதன்று ; வீரத்தொடு பொருந்தியதும் அன்று; (அற நூல்களில் விதிக்கப் பட்ட) விதிமுறைக்கு ஒத்ததும் அன்று : வாய்மைத் திறத்தொடு பொருந்திய செயலும் அன்று; என் ஒருவனுடைய உடம்பு நின்னால் ஆளப்பெறும் இப்பூமிக்குப் பொறுக்க ஒண்ணாத பெருஞ்சுமையாவதும் அன்று; (உனக்கு நான்) பகையும் அன்று; (இவ்வாறாகவும்) நீ (நின் பெருந்தன்மையாகிய) பண்பினை நீங்கி நின்று இச்செயலைச் செய்தது எது கருதி ?'

கு:—கருணை வள்ளலாகிய நீ என்பால் இரக்கமின்றிச் செய்த இச்செயல், எவ்வுயிர்க்கும் அன்புடையனாய நின் இயல்புக்கு அடாது என்பான், 'ஈரம் அன்று இது' என்றான். ஈரம் - அன்பு. தன்னிக ரற்ற வில்வீரனாகிய நீ என்முன் நேர்நின்று போர் செய்யாமல்

மறைந்து நின்று அம்பு எய்த இச்செயல், நின் வீரத்திற்கும் நின் முன்னோர் கொண்டொழுகிய அற நூல்களின் விதிமுறைக்கும் வாய்மையொடு பொருந்திய ஒழுகலாற்றுக்கும் ஒவ்வாத செயலா யிற்று என்பான், 'இது வீரம் அன்று, விதி அன்று, மெய்ம்மையின் வாரம் அன்று' என்றான். வீரம் - மனவுறுதி. மெய்ம்மையின் வாரம் - வாய்மையொடு பொருந்திய செயற்பகுதி. வாரம் - கூறு பாடு. நல்லோர் தீயோர் என்னாது எல்லோரையும் ஒப்பத்தாங்கும் இயல்புடைய நின்னால் ஆளப்பெறும் இந்நிலவுலகத்தில் யானொரு வன் உடம்போடு உயிர்தரித்து வாழ்வதால் இப்பூமி பெருஞ்சுமை யுடையதாய் அழிந்துபோய் விடாது என்பான், 'நின் மண்ணினுக்கு என்னுடல் பாரம் அன்று' என்றான். பாரம் – பொறுக்கலாற்றாத பெருஞ்சுமை. நான் உனக்கு எத்திறத்தாலும் பகைமையுடையே னல்லேன் என்பான், 'பகையன்று' என்றான். பெருமை சான் றாண்மையாகிய பண்புகளில் வழுவாது இவ்வுலகினைக் காக்குங் கடமையுடையனாகிய நீயே நினக்குரிய பண்பினை யொழிந்து இவ்வாறு இடர் செய்தல் முறையோ என்பான், 'நீ பண்பு ஒழிந்து செய்தவாறு என் ?' என இரங்கிக் கூறினான்! (93)

4131. இருமை நோக்கிநின் றியாவர்க்கு மொக்கின்ற
அருமை யாற்றலன் றோவறங் காப்பது
பெருமை யென்பதி தென்பிழை பேணல்விட்
டொருமை நோக்கி யொருவற் குதவலோ.

'இருமை நோக்கி நின்று, யாவர்க்கும் ஒக்கின்ற
அருமை ஆற்றல் அன்றோ அறம் காப்பது?
பெருமை என்பது, இது என்? பிழை பேணல் விட்டு
ஒருமை நோக்கி ஒருவற்கு உதவலோ ?'

பொ :—'(வேந்தன்) அறநெறியில் நின்று காத்தலாவது, (தன் கண் முறை வேண்டி வந்த இருபக்கத்தார் செய்த) நன்றும் தீதும் ஆகிய இரண்டன் இயல்பினையும் சீர்தூக்கிப் பார்த்து (நடுநிலையிற் பிறழாது) நின்று (பகைவர், நண்பர், அயலார் ஆகிய) யாவர்க்கும் ஒக்கும் வண்ணம் அருமையுடைய செயலைச் செய்து முடிப்பதல்லவா? (இனி,) பெருமை என்பது, (அறியாமையாற் பிறர் செய்த) குற்றங் களைப் பொறுத்து (அவர்களை அன்பினாற்) பேணுதலாமன்றி (அதனை) விடுத்து (நடுநிலையின்றி) ஒரு பக்கமே நோக்கி(த் தான் விரும்பிய) ஒருவனுக்கு உதவி செய்வதாகுமோ ? (நின்னாற் செய்யப்பட்ட) இச் செயல் யாதாய் முடியும் ?'

கு:—இருமை - (மாறுபட்டார் இருவர் செய்த) நன்றும் தீதும் ஆகிய இரண்டன் இயல்பு. நோக்குதல் - அவற்றின் நலந் தீங்கு களைச் சீர்தூக்கிப் பார்த்து உள்ளவாறு அளந்தறிதல். 'நின்று' என்றது, ஒருவர் பக்கமும் சாராது நடுநிலையின் நிலைத்து நிற்றலை. அருமை ஆற்றல் – செய்தற்கு அரிய அருஞ் செயலைச் செய்து முடித்தல். விருப்பு வெறுப்புக் காரணமாக ஒருபாற் சாராது நடுநிலையில் நின்று யாவரும் மனம் ஒப்பி ஏற்றுக்கொள்ளும் வண்ணம் முறை செய்தல் என்பது எளிதிற் செய்ய ஒண்ணாத அருமையுடைய செயலாதலின், 'அருமை' எனப்பட்டது. ஆற்றல் - ஆற்றுதல்; செய்து நிறைவேற்றுதல். 'அறம்காப்பது, இருமை நோக்கி நின்று, யாவர்க்கும் ஒக்கின்ற அருமை ஆற்றல் அன்றோ?' எனவும், 'பெருமை என்பது, பிழைபேணல் விட்டு ஒருமை நோக்கி ஒருவற்கு உதவலோ' எனவும் 'இது என்' எனவும் இயையும். ஓகாரம் இரண்டனுள் முன்னையது சிறப்பு; பின்னையது எதிர்மறை. பெருமை - பெரியோரியல்பு; அஃதாவது சிறியோர்கள் அறியாமையாற் செய்த பிழைகளைப் பொறுத்து அவர்களைத் திருத்திப் பணிகொள்ளுதல். 'அற்றம் மறைக்கும் பெருமை' (திருக்குறள் - 986) எனவும், 'பிழைத்தவை பொறுக்கையெல்லாம் பெரியவர் கடமை' (திருவாசகம்-70) எனவும், 'பெருமையுடையவர் ஆற்றுவார் ஆற்றின், அருமையுடைய செயல்' (திருக்குறள் - 975) எனவும் வரும் பகுதிகள் இங்கு ஒப்புநோக்கியுணரத்தக்கன. அறங்காத்தலாகிய நினது கடமைக்கும் நினது பெருமைக்கும் சிறிதும் ஒவ்வாத நிலையில் இத்தீங்கினை என்பாற் செய்தல் நினக்குத் தகுதியாமோ என்பான், 'இது என் ?' என வினவினான். (94)

**4132.** செயலைச் செற்ற பகைதெறு வான்றெரிந்
தயலைப் பற்றித் துணையமைந் தாயெனிற்
புயலைப் பற்றுமப் பொங்கரி போக்கியோர்
முயலைப் பற்றுவ தென்ன முயற்சியோ.

'செயலைச் செற்ற பகை தெறுவான் தெரிந்து,
அயலைப் பற்றித் துணை அமைந்தாய் எனின்,
புயலைப் பற்றும் அப் பொங்கு அரி போக்கி, ஓர்
முயலைப் பற்றுவது, என்ன முயற்சியோ ?'

பொ:—'(உன்னுடைய) காத்தற் றொழிலாகிய ஆற்றலை யிகழ்ந்து தீமை புரிந்த பகைவனான இராவணனை அழித்தல் வேண்டி (அதற்குரிய உபாயத்தை) ஆராய்ந்து அயலான் (ஆகிய சுக்கிரீவன்) ஒருவனை உனக்குத் துணையாகக்கொண்டு அமைந்தாயாயின், மேகத்

தையும் (தாவிப்) பற்றவல்ல அத்தகைய சினமிக்க ஆண் சிங்கத்தினை (இகழ்ந்து) விலக்கி ஒரு முயலைப் பற்றிப் பிடித்தல் போலும் நின்செயல் எத்தகைய முயற்சியாகக் கொள்ளத்தக்கதோ?'

கு :—செயல் - காத்தற் றொழிலாகிய ஆற்றல். செறுதல் - அழித்தல்; ஈண்டு இகழ்ந்து ஒதுக்குதல் என்ற பொருளில் ஆளப் பெற்றது. இராவணன் இராமனது காவலை யிகழ்ந்து அவன் மனைவியாகிய சீதையை வலிதிற் கவர்ந்து சென்றமையால் அவனுக்குப் பகையாயினனாதலின் அவனைச் 'செயலைச் செற்றபகை' எனக் குறித்தான் வாலி. பகை - பகைவன்; என்றது இராவணனை. தெறுவான், வானீற்று வினையெச்சம். தெறுதல்-அழித்தல். தெரிந்து-ஆராய்ந்து' 'அயலைத் துணைப்பற்றி அமைந்தாய் எனின்' என இயையும். அயல்-அயலான்; என்றது சுக்கிரீவனை. அமைதல் - தன் விருப்பம் நிறைவேறி விட்டதாக மனவமைதி யடைதல். வெகுண்டு வேகத்தாற் கிளர்ந்தெழுங்கால் விசும்பினளவும் தாவி யுயர்ந்து அங்குள்ள மேகத்தினையும் (யானையெனப்) பற்றவல்ல ஆற்றல் மிக்க ஆண் சிங்கம் என்பான், 'புயலைப் பற்றும் அப் பொங்கு அரி' என்றான். புயல் - மேகம். பொங்குதல் - சினத்தல். அரி - சிங்கம். நினக்குப் பெருந் தீங்கு புரிந்த இராவணனாகிய பகைவனை அழித்தற்குரிய வலிய துணையினை நாடினையாயின், யாவரையும் எதிர்த்துத் தாக்கவல்ல ஆண் சிங்கத்தினை யொத்த பேராண்மையுடையானொருவனை உனக்குத் துணையாகக் கொள்ளாமல் அஞ்சியோடும் இயல்புடைய முயலை யொத்த ஆற்றலில்லாதானொருவனைத் துணையாகக் கொண்ட நின் செயல் பயனில் முயற்சியாய் யாவராலும் இகழ்தற்குரியதாயிற்று என்பான், 'புயலைப் பற்றும் அப்பொங்கு அரி போக்கி, ஓர் முயலைப் பற்றுதல் என்ன முயற்சியோ?' என்றான். 'இராவணனை எதிர்த்தழிக்கும் ஆற்றல் மிக்க வாலியாகிய என்னைத் துணையாகக் கொள்ளாமல் வன்மையிற் குறைந்த சுக்கிரீவனைத் துணையாகக் கொண்டு அமைந்த நின் செயல், சிங்கத்தின் துணையை யிகழ்ந்து விலக்கி முயலைத் துணையாகக் கொண்டது போலும் பயனில் முயற்சியாம்' என்பது குறிப்பு. (95)

4133. காரி யன்ற நிறத்த களங்கமொன்
றூரியன்ற மதிக்குள தாமெனச்
சூரியன்மர புக்குமொர் தொன்மறு
ஆரியன்பிறந் தாக்கினை யாமரோ.

'கார் இயன்ற நிறத்த களங்கம் ஒன்று
ஊர் இயன்ற மதிக்கு உளதாம் என,

சூரியன் மரபுக்கும் ஓர் தொல் மறு,
ஆரியன்! பிறந்து ஆக்கினையாம் அரோ!'

பொ:—'(வானின்கண்) ஊர்ந்து செல்லுதலைப் பொருந்திய திங்களுக்குக் கருமை பொருந்திய நிறத்தையுடைய களங்கம் ஒன்று உளதாம் என்று எண்ணிச் சூரியனுடைய குலத்திற்கும் தொன்மையுடையதாய்த் தொடரும் ஒரு பெரிய களங்கத்தினை மேலோனாகிய நீ பிறந்து உண்டாக்கி விட்டாய் போலும்.'

கு:—கார் - கருமை. இயலுதல் - பொருந்துதல், களங்கம் - நிறைமதியின் நடுவிற் காணப்படும் கறை. ஊர் இயன்ற மதி - வானத்தின்கண் ஊர்ந்து செல்லுதலைப் பொருந்திய திங்கள். 'வானூர் மதியம்' என்றார் இளங்கோவடிகளும். ஆரியன் - மேலோன்; என்றது இராமனை. மறு - களங்கம்; குற்றம். 'உலகத்தாரால் தொழப்படும் தகுதி வாய்ந்த ஞாயிறு, திங்கள் என்னும் இரு சுடர்களுள் ஒன்றாகிய மதி மறுவுடையதாகத் திகழ்தலை யெண்ணி, நீ பிறந்த குலத்திற்கு முதல்வனான சூரியனுக்கும் அவன் வழியிலுள்ளார்க்கும் ஒரு மறுவினை உண்டாக்கி விட்டாய் போலும்' என்பான், 'ஊர் இயன்ற மதிக்குக் கார் இயன்ற களங்கம் ஒன்று உளதாம் எனச் சூரியன் மரபுக்கும் ஓர் தொல்மறு, ஆரியன் பிறந்து ஆக்கினையாம்' என்றான். ஆம் என்பது போலும் என்னும் உரையசைப் பொருளில் வந்தது. அரோ என்பதும் அசை. மறுவில்லாததாகிய் சூரிய குலம் நீ பிறந்து செய்த இச்செயலால், நின் பின்னோரையன்றி உன் முன்னோரையும் பற்றித் தொடரும் அழியாத பெரியதொரு களங்கத்தைப் பெற்றது என்பது கருத்து. மறுவில்லாததாகிய சூரியன் மரபுக்கும் என்பது பொருளாதலின் 'சூரியன் மரபுக்கும்' என்புழி உம்மை உயர்வு சிறப்பு. தொல் மறு - தான் ஏற்பட்ட பின்னர்த் தோன்றும் வழிமுறையினரையேயன்றித் தான் தோன்றுதற்கு முன் பிறந்திறந்து மறைந்த முன்னோரையும் பற்றித் தொடரும் வன்மையினதாய்ப் பதிந்த மாற்றுதற்கரிய பெருங்களங்கம். (96)

4134. மற்றொ ருத்தன் வலிந்தறை கூவவந்
துற்ற வென்னை யொளித்துயி ருண்டநீ
இற்றை யிற்பிறர்க் கும்மிக லேறென
நிற்றி போலுங் கிடந்த நிலத்தரோ.

'மற்று ஒருத்தன் வலிந்து அறைகூவ, வந்து
உற்ற என்னை, ஒளித்து, உயிர் உண்ட நீ,

இற்றையில், பிறர்க்கும் 'இகல் ஏறு' என
நிற்றி போலும்? கிடந்த நிலத்து அரோ.'

பொ :—'(நினக்கு உறவினன் அல்லாத) அயலான் ஒருவன் வலிய வந்து போர்க்கு அறைகூவி அழைத்தமையால், அவனுடன் (எதிரேற்று) வந்து பொருத என்னை (வஞ்சனையால்) மறைந்து நின்று (அம்பினை எய்து) உயிரைக் கவர்ந்த (கள்வனாகிய) நீ, (யான் உயிர்துறக்கும் நிலையினை யெய்திய) இந்நாளிலே (எனது உடல் வலிகுன்றிக்) கிடந்த இந்நிலத்திலே, பிற வீரர்கள் எல்லார்க்கும் வலிமை மிக்க சிங்க ஏறு போன்று (தலைநிமிர்ந்து) நிற்கின்றாய் போலும்?'

கு :—மற்றொருத்தன் என்றது சுக்கிரீவனை. துணைவேண்டாச் செருவென்றியினையுடைய நின்னால் துணையெனக் கொள்ளத்தகாத அயலான் அவன் என்பான் 'மற்றொருத்தன்' எனச் சுட்டினான். யான் அவனொடு போர்தொடுக்க விரும்பாத நிலையில் அவனே வலிய வந்து என்னைப் போர்க்கு அறைகூவி அழைத்தமையால் அவனொடு போர் செய்ய வேண்டிய இன்றியமையாமை எனக்கு உண்டாயிற்று என்பான், 'மற்றொருத்தன் வலிந்து அறைகூவ, வந்து உற்ற என்னை' என்றான். அறைகூவல் - போர் செய்தற்கு வலிய அழைத்தல். யான் அறியாதவாறு நீ மறைந்து நின்று என்மேல் அம்பினைச் செலுத்தி என் உயிரைக் கவர்ந்தனை என்பான், 'ஒளித்து உயிருண்ட நீ' என்றான். என் மார்பில் அம்பு தைக்கப்பட்டு எனது உயிர் பிரியும் நிலையினதாகிய இவ்வேளையிலே, எனது உடம்பு வலிகுன்றிச் சோர்ந்து கிடக்கும் இந்நிலத்திலேயே, வீரர் பலர்க்கும் மேலாக இகலுடைய ஆண் சிங்கத்தை யொத்த பெருவீரன் என நீ நிற்கின்றனை போலும் என்பான், 'இற்றையில், கிடந்த நிலத்து, பிறர்க்கும் இகல் ஏறு என நிற்றிபோலும்?' என்றான். இகல் ஏறு - வலிமை மிக்க ஆண் சிங்கம். போலும் - ஒப்பில்போலி. அரோ - அசை. 'என்னை வஞ்சித்துக் கொல்லுந் தொழிலைச் செய்த நீ, என் கண்ணிற் படாதபடி இவ்விடத்தை விட்டு ஓடிவிடுதலே முறையாகவும், அவ்வாறு ஓடுதலைச் செய்யாது, யான் அடிபட்டுக் கிடக்கும் இவ்விடத்திலேயே என் கண் முன்பே நாணமின்றி நிற்கின்றனையே' என வாலி இராமனை நோக்கிக் கடிந்துரைத்தான் என்பதாம். (97)

**4135.** நூலி யற்கையு நுங்குலத் துந்தையர்
போலி யற்கையுஞ் சீலமும் போற்றலை
வாலி யைப்படுத் தாயலை மன்னற
வேலி யைப்படுத் தாய்விறல் வீரனே.

'நூல் இயற்கையும், நும் குலத்து உந்தையர்
போல் இயற்கையும், சீலமும், போற்றலை;
வாலியைப் படுத்தாய் அ(ல்)லை ; மன் அற
வேலியைப் படுத்தாய் விறல் வீரனே !'

பொ :—'வெற்றியையுடைய வீரனே, அறநூல்களின் விதிமுறையினையும் நும் குலத்து மூதாதையர் மேற்கொண்டொழுகிய நெறிமுறையாகிய ஒழுகலாறுகளையும் (நினக்கு உயிரினுஞ் சிறந்ததாகிய) ஒழுக்கத்தினையும் (குறிக்கொண்டு) போற்றாது விட்டாய். (ஆகவே நின் செயலால்) வாலியைக் கொன்றாய் அல்லை; அரசர்க்குரிய அற நெறியாகிய வேலியையே அடியோடு அழித்தவன் ஆயினாய்.'

கு :—'விறல் வீரனே' என்றது இகழ்ச்சிக் குறிப்பு. நூல் இயற்கை – (மனு முதலிய) அறநூல்களில் அமைந்த விதி விலக்குகளாகிய முறைமை. நுங்குலத்து உந்தையர் - உங்கள் குலத்திற் பிறந்த மூதாதையராகிய முன்னோர். உந்தையர்போல் இயற்கை - நும் மூதாதையர் கொண்டொழுகியவற்றை யொத்த நெறிமுறைகள். சீலம் - உயிரினும் சிறந்ததாகப் போற்றத்தகும் நல்லொழுக்கம். போற்றலை - போற்றாதொழிந்தாய். படுத்தல் - கொல்லுதல்; அடியோடு அழித்தல். 'நீ செய்த தீச்செயலால் வாலி என்னும் யானொருவன் இறந்துபட்டமை ஒருபுறமிருக்க, நீசெய்த செயல், அரசராயினார் குடிகளைப் பாதுகாத்தற் பொருட்டு அமைத்துக் கொண்ட சிறந்த வேலியாகிய நல்லறத்தையே அடியோடு அழித்து விட்டது' என்பான், 'வாலியைப் படுத்தாய் அல்லை; மன் அறவேலியைப் படுத்தாய்' என, வாலி இராமனை நோக்கி இரங்கிக் கூறினான். 'உன் செயல், மேற்போக்காக நோக்குமிடத்து வாலியென்ற பெயருடையதொரு குரங்கினைக் கொன்றதாய்த் தோற்றினும், அதன் விளைவினை ஆழ்ந்து நோக்குங்கால், மன்னர்க்குரிய அறத்தையே அழித்ததாய் முடிந்தது' என்பது குறிப்பு. வேலி எனப்படுவது, பயிர்களைப் பட்டி மாடு முதலியன மேய்ந்து சிதைக்காதவாறு இயற்றப்பெறும் காவல் அமைப்பாகும். வையகமாகிய நன்செயில் வளரும் உயிர்களாகிய பயிர்களை அறமாகிய வேலியமைத்துக் காக்குங் கடமையினையுடைய காவலனாகிய நீ, நின் செயலால், நின்னாற் காக்கப் பெறும் உயிர்ப் பயிர்கள் அழியுமாறு அறமாகிய அவ்வேலியை அழித்தமை நின் இயல்புக்கு ஒரு சிறிதும் அடாது' என வாலி இராமனை நோக்கிக் கூறினான் என்பதாம். (98)

4136. தார மற்றொரு வன்கொளத் தன்கையிற்
பார வெஞ்சிலை வீரம் பழிப்பதே

நேரு மன்று மறைந்து நிராயுதன்
மார்பி னெய்யவோ வில்லிகல் வல்லதே.

'தாரம் மற்றொருவன் கொள, தன்கையில்
பார வெஞ்சிலை வீரம் பழிப்பதே!
நேரும் அன்று, மறைந்து, நிராயுதன்
மார்பின் எய்யவோ வில் இகல் வல்லதே?'

பொ:—'(நின்) மனைவியை வேறொருவன் கவர்ந்து கொண்டானாகவும் (அவனைத் தொடர்ந்து அம்பினை எய்து கொல்லாமல்) நின் கையிற் சுமையாய்த் தங்கிய கொடிய வில்லானது, நினது வீரத்தைப் பழிப்பதாக அமைதல் தகுதியாமோ? நீ விற்போரில் வல்லவனானது, கையிற் படையெடாதவனது மார்பில் (வெளிப்படையாக) நேரிலும் அன்றி ஒளித்து நின்று அம்பு எய்வதற்குத்தானோ?'

கு:—நின் மனைவியை வஞ்சனையாற் கவர்ந்து சென்ற கொடியோனான இராவணனைத் தொடர்ந்து பற்றி அவனைக் கொன்றொழிப்பதே வில் வீரனாகிய நினது கடமையாதலின் நின்னாற் செய்யத்தக்க அதனைச் செய்யாமையே நினக்குப் பழிதரும் செயலாகவும், நிராயுதனாகிய என்மேல் ஒளித்து நின்று அம்பெய்து கொன்றமையாகிய செய்யத்தகாத இச் செயல் அப்பழியின் மேலும் பெரும்பழி விளைப்பதாயிற்று என வாலி இராமனை நோக்கிக் கூறினான் என்பதாம். தாரம் - மனைவி. சீதையைக் கவர்ந்த தீச்செயலைப் புரிந்த இராவணனுக்கும் தனக்கும் எத்தகைய தொடர்புமில்லை என்பான் அவனை 'மற்றொருவன்' எனக் குறித்தான். தன் என்பது நின் என்னும் பொருளிற் பயின்றது. பாரம் - பெருமை; சுமை. வெம்சிலை-கொடிய வில். செய்வாரது கொடுமை வில்லாகிய கருவியின்மேல் ஏற்றப் பட்டது. பகைவனைக் கொல்லுதற்குப் பயன்படாது நின்கையில் தங்கிய வில், கைக்குச் சுமையாகவே அமைந்து, உனது வீரத்தினைப் பிறர் இழித்துரைத்தற்கேற்ற கருவியாகவும் ஆயிற்றே என்பான், 'பார வெஞ்சிலை வீரம் பழிப்பதே' என்றான். நேரும் அன்று - நேரிலும் அன்றி; அன்றி என்னும் வினையெச்சம் அன்று எனத் திரிந்து நின்றது. நிராயுதன் - கையிற் படையில்லாதவன். 'வில் இகல் வல்லது, நிராயுதன் மார்பின் நேரும் அன்று, மறைந்து எய்யவோ?' என இயையும். (99)

## வாலியின் மொழிகளுக்கு இராமன் மறுமொழி கூறுதல் 4137-4148

**4137.** என்று தானு மெயிறு பொடிபடத்
தின்று காந்தி விழிவழித் தீயுக
அன்ற வாலி யனையன கூறினன்
நின்ற வீர னினைய நிகழ்த்தினன்.

என்று, தானும் எயிறு பொடி படத்
தின்று, காந்தி, விழி வழித் தீ உக
அன்று அ(வ்)வாலி அனையன கூறினன்;
நின்ற வீரன் இனைய நிகழ்த்தினன்.

பொ :—என்று இவ்வாறு பற்கள் பொடிபடும்படி (நறநறவெனக்) கடித்துச் சினந்து கண்களின் வழியே தீப்பொறிகள் சிதற, அப் பொழுது வாலியாகிய அவன் (மேலே குறித்த) அத்தன்மையான சொற்களைச் சொன்னன். (அவற்றைப் பொறுமையுடன் செவி மடுத்து) நின்ற பெருவீரனன இராமனும் (பின்வருமாறு) இத்தகைய சொற்களைச் சொல்லுவானுயினன்.

கு :—வாலியின்பால் தோன்றிய வெகுளி பற்றிய மெய்ப்பாடுகள் இச் செய்யுளின் முன்னிரண்டடிகளில் விரித்துரைக்கப்பட்டன. தன் முன் தனக்குப் பகைவராயினர் கூறும் பழிப்புரைகளை வெறுப்பின்றிப் பொறுமையுடன் கேட்டு அவர் மனம் கொள்ளும்படி தன் செயலின் தூய்மையை எடுத்துரைக்கும் உள்ளத்துரனேடு பகைவர்முன் நிற்றல் என்பது, பெருமை மிக்க வீரர்க்கே இயல்வதாகலின், வாலி யின் பழிப்புரைகளைப் பொறுமையுடன் கேட்டு அவனைத் தெருட்டுதற் பொருட்டுத் தன்னிலையிற் சிறிதும் சலியாது நிற்கும் இராமனை 'நின்ற வீரன்' எனச் சிறப்பித்தார் ஆசிரியர். இதனை அடுத்து வரும் பதினொரு செய்யுட்களும் இராமன் வாலியை நோக்கிக் கூறிய மறுமொழிகளாக அமைந்தன. (100)

**4138.** பிலம்புக் காய்நெடு நாள்பெய ராயெனப்
புலம்புற் றுன்வழிப் போதலுற் ருன்றனைக்
குலம்புக் கான்ற முதியர் குறிக்கொணீ
யலம்பொற் ருரவ னேயர சென்றலும்.

"பிலம் புக்காய் நெடு நாள் பெயராய்" எனப்
புலம்பு உற்று, உன் வழிப் போதலுற்ருன் தனை,

குலம் புக்கு ஆன்ற முதியர், "குறிக்கொள் நீ
அலம் பொன் தாரவனே! அரசு" என்றலும்.

பொ :—(முன்னாளில் மாயாவி என்னும் அரக்கனைத் தொடர்ந்து) பாதாளத்தினுட் சென்றவனாகிய நீ, நெடுங்காலம் மீண்டு வாராமலே தங்கி விட்டாய் என்று புலம்புதலுற்று, நீ சென்ற பிலத்தின் வழியே செல்லத் தலைப்பட்ட (உன் தம்பியாகிய) சுக்கிரீவனை நோக்கி, நின் குலத்திற் பிறந்து அறிவால் நிறைந்த முதியோர்கள், "அசைகின்ற பொன்மாலையை அணிந்தவனே! நீ (கிட்கிந்தையின்) அரசாட்சியினைக் குறிக்கொண்டு போற்றுவாயாக" என்று கூறிய அளவில்.

கு :—இராமன் தன்னால் அம்பு எய்யப்பட்டுத் தரையிற் கிடந்து தன் செயலைக் கடிந்துரைத்த வாலியை நோக்கி, தன் செயல் அறத்தொடு பொருந்தியதே என்பதனை அறிவுறுத்தும் முறையில் அமைந்தன இது முதல் பதினொரு செய்யுட்கள். 'பிலம்புக்காய், நெடுநாள் பெயராய்' எனப் புலம்புற்று, உன்வழிப் போதலுற்றான் தனை, குலம்புக்கு ஆன்ற முதியர், 'அலம்(பு) பொன்தாரவனே! நீ அரசு குறிக்கொள்' என்றலும் என இயையும். 'உன்வழிப் போதலுற்றான்' என்புழி 'உன்' என்றது வாலியை. 'போதலுற்றான்' என்றது சுக்கிரீவனை. "முன்னாளில் உன்னை எதிர்த்துப் போருக்கு அழைத்த மாயாவி என்னும் அரக்கனைத் துரத்திக்கொண்டு பிலத்தினுள்ளே சென்ற நீ, நெடுங்காலம் (இருபத்தெட்டு மாதம்) திரும்பி வாராது தங்கிவிட்டாய். அந்நிலையில், நினது ஏவலால் பிலத்தின் வாயிலைக் காத்து நின்ற நின் தம்பியாகிய சுக்கிரீவன், நின்னைக் காணாது பெரிதும் வருந்திப் புலம்பி, நீ சென்ற பிலத்தினுள்ளே உன்னைத் தேடிப் பின்தொடர்ந்து செல்லுதற்கு முற்பட்டபொழுது, உங்கள் குலத்திற் பிறந்த முதியோர்கள் அவனைத் தடுத்து, 'நீயும் வாலியைத் தொடர்ந்து சென்றனையாயின், இந்நாட்டுக் குடிகளாகிய யாங்கள் என்னாவது? நீ இக் கிட்கிந்தையின் அரசினை ஏற்று (எங்களைக் குறிக்கொண்டு காப்பாயாக" என வேண்டிக் கொண்டார்கள் என்பது இச் செய்யுளிற் கூறப்பட்ட செய்தியாகும். பிலம் - பாதாளம். புலம்புதல் - வாய்விட்டு அரற்றி வருந்துதல். ஆன்ற - நிறைந்த. குறிக்கொண்டு காத்தலாவது எத்தகைய துயரமும் உறாமற் போற்றிக் காத்தல். "எடுத்த நறவின் குலையலங்காந்தள்" (கலித்தொகை - 40) என்ற தொடரில் 'குலையலங்குகாந்தள்' எனற்பாலது, 'குலையலங்காந்தள்' என வந்தாற் போன்று, இச் செய்யுளின் ஈற்றடியில் 'அலம்பு பொற்றாரவனே' என வரற்பாலது அலம் பொற்றாரவனே' எனக் குறைந்து வந்தது. அலம்புதல் - அசைதல். தார் - மாலை. தாரவன் - தார் என்பதன் அடியாகப் பிறந்த வினைக்குறிப்புப் பெயர். (101)

4139. வான மாளவென் றம்முனை வைத்தவன்
தானு மாளக் கிளையினி றத்தடிந்
தியானு மாள்வெ னிருந்தர சாள்கிலென்
ஊன மான வுரைபகர்ந் தீரென.

"வானம் ஆள என் தம்முனை வைத்தவன்
தானும் மாளக், கிளையின் இறத் தடிந்து,
யானும் மாள்வென்; இருந்து அரசு ஆள்கிலென்;
ஊனம் ஆன உரை பகர்ந்தீர்" என,

பொ :—(முதியோர்கள் அங்ஙனம் சொல்லக்கேட்ட சுக்கிரீவன்) என் தமையனாகிய வாலியை(க் கொன்று) வானுலகத்தினை ஆளுமாறு வைத்தவனாகிய மாயாவி தானும் இறந்தொழியும்படி சுற்றத்துடன் அழியக்கொன்று (பின்பு) யானும் இறந்தொழிவேன்; (தமையனைப் பிரிந்து) இருந்து இவ்வரசினை ஏற்று ஆளமாட்டேன்; (அறிவிற் சிறந்த பெரியோராகிய நீவிர்) எனக்குப் பழிவிளைக்கும் மொழியினையே பகர்ந்தீர்கள்' என்று கூற.

கு :—'என் தம்முனை வானம் ஆள வைத்தவன், தானும் மாள, கிளையின் இறத் தடிந்து யானும் மாள்வென்; இருந்து அரசு ஆள்கிலென்; ஊனம் ஆன உரை பகர்ந்தீர்' என இயையும். என - என்று சுக்கிரீவன் கூற. தம்முன் - தமையன். கிளை - சுற்றம். கிளையின் இற - சுற்றத்தொடும் அழியும்படி; கிளையினொடு என ஒடுவுருபு விரித்துரைக்க. தடிந்து - கொன்று. மாள்வென் - இறந்தொழிவேன். என் தமையனைக் கொன்ற பகைவனைக் கொல்லும் திறமின்றிப் பழிக்கு இடமாகிய இவ்வுடம்பினைத் தாங்கியிருந்து இவ்வரசாட்சியினை ஒருபோதும் ஏற்றுக்கொள்ள மாட்டேன் என்பான் 'இருந்து அரசாள்கிலென்' என்றான். ஊனம் ஆன உரை - பழிவிளைதற்கு ஏதுவாகிய சொல்; என்றது 'நீ அரசு குறிக்கொள்' என முதியோர் கூறிய சொல்லினை. வாலி மாயாவியால் இறந்திருத்தல் வேண்டுமென் றெண்ணிய சுக்கிரீவன், தமையனைக் கொன்ற மாயாவியைச் சுற்றத்துடன் கொன்று தானும் இறந்தொழியத் துணிந்ததல்லது தன் குலத்து முதியோர் சொற்படி தமையனைப் பிரிந்து உயிர் தாங்கி அரசாட்சி புரிய ஒருப்பட்டிலன் என்பதாம். (102)

4140. பற்றி யான்ற படைத்தலை வீரரும்
முற்று ணர்ந்த முதியரு முன்பரும்

இற்ற தும்மர செய்தலே யேலெனக்
கொற்ற நன்முடி கொண்டதிக் கோதிலான்.

'பற்றி, ஆன்ற படைத் தலே வீரரும்
முற்று உணர்ந்த முதியரும் முன்பரும்
'இற்றது, உம் அரசு, எய்தலேயேல்' என,
கொற்ற நன் முடி கொண்டது, இக் கோதிலான்.'

பொ :—'ஆற்றல் நிரம்பிய சேனைத் தலைவர்களாகிய வீரர்களும், (அரசியல் நெறிமுறைகளை) முழுதும் உணர்ந்த (அமைச்சர் முதலிய) முதியோர்களும், பிலத்தினுட் செல்ல முற்பட்ட சுக்கிரீவனைப்) பிடித்து நிறுத்தி, 'நீ இவ் அரசாட்சியை ஏற்றுக்கொள்ளா தொழிவா யானல், உம் குலத்தார்க்கு உரிய கிட்கிந்தை யென்னும் இராச்சியம் அடியோடு கெட்டொழிந்ததாய்விடும்' என்று வற்புறுத்திக் கூறின மையால், குற்றம் இல்லாத தூயோனுகிய இச் சுக்கிரீவன் வெற்றி யைத்தரும் நல்ல முடியினை ஏற்றுக்கொள்ள நேர்ந்தது.'

கு :—ஆன்ற படைத்தலே வீரரும், முற்றுணர்ந்த முதியரும், முன்பரும், பற்றி, 'நும் அரசு, எய்தலேயேல் இற்றது' என, இக் கோதில்லான் கொற்ற நன்முடி கொண்டது என இயையும். நும் அரசு - வானர குலத்தினராய நும்மவர்க்கு உரிய இராச்சியம். காரணப் பொருளில் வந்த 'என' என்னும் செயவெனெச்சம், பிற கருத்தாவின் வினையாகிய 'கொண்டது' என்னுந் தொழிற்பெயரைக் கொண்டு முடிந்தது. கோதிலான் என்றது சுக்கிரீவனை. கோது - குற்றம். 'உடன்பிறப்பென்னும் பாசத்தாற் பிணிப்புண்ட அத்தம்பியும் பசுங்கண், நேசத்தாரைகள் சொரிதர நெடுநிலஞ் சேர்ந்தான்' என முன்னர்க் கூறினராதலின், வாலிக்கு அண்மையில் உள்ள சுக்கிரீவனை 'இக் கோதிலான்' என அண்மைச் சுட்டினுற் குறித்தார் ஆசிரியர். (103)

4141. வந்த வுன்னை வணங்கி மகிழ்ந்தனன்
எந்தை யென்க ணினத்தவ ராற்றலாற்
றந்த துன்னர சென்று தரிக்கலான்
முந்தை யுற்றது சொல்ல முனிந்துநீ.

'வந்த உன்னை வணங்கி மகிழ்ந்தனன்;
"எந்தை! என் கண், இனத்தவர் ஆற்றலால்
தந்தது 'உன் அரசு" என்று, தரிக்கலான்
முந்தை உற்றது சொல்ல, முனிந்து நீ.'

பொ :—'(மாயாவியைக் கொன்று வெற்றியுடன்) மீண்டு வந்த தமையனாகிய உன்னைக் கண்டு வணங்கிப் பெரிதும் மகிழ்ந்தானாகி, (எந்தையே, என்பால் நம் சுற்றத்தார்கள் தம் ஆற்றலால் வற்புறுத்தித் தந்த இவ் அரசு உனக்குரியதேயாகும்' என்று சொல்லி(த்தான் கணநேரமும் அவ்வரசினைத்) தாங்கியிருக்கப் பொறாதவனாய், (தான் அரசினை ஏற்றுக்கொள்ளுமாறு) முன்பு நிகழ்ந்த நிகழ்ச்சியை (உனக்கு) எடுத்துக் கூறவும், நீ (அதனை ஏற்றுக் கொள்ளாது) வெகுண்டு.'

கு :—இச்செய்யுளின் இறுதியிலுள்ள முனிந்து என்னும் வினையெச்சம் அடுத்த செய்யுளின் முதற்கணுள்ள 'கொல்லலுற்றனை' என்னும் வினையைக் கொண்டு முடியும். தன்னால் வழிபடத்தக்க ஐம்பெருங்குரவருள் தமையனும் ஒருவனாதலின், தன் தமையனாகிய வாலியை 'எந்தை' என அழைத்தான் சுக்கிரீவன். 'உனக்கு உரியதாகிய அரசினை யானே விரும்பி மேற்கொண்டேனல்லேன். நம் இனத்தவராகிய சுற்றத்தார்களே வற்புறுத்தி இதனை என்மேற் சுமத்தினர். இவ்வரசு உன்னுடையதே' என்று கூறித் தான் அரச பதவியை ஏற்றுக்கொண்டமைக்குரிய இடர்நிலையினைத் தன் தமையனாகிய உனக்குச் சுக்கிரீவன் எடுத்துரைக்கவும், நீ அவன் கூறியவற்றைக் கேளாது வெகுண்டு அவனைக் கொல்லுதற்கு முற்பட்டமை நீ செய்த பெருந்தீங்காகும் என இராமன் வாலிக்கு எடுத்துரைத்தான் என்பதாம். ஆற்றலால் தருதல் - தமக்குரிய ஆற்றலையே துணையாகக் கொண்டு மறுக்கவொண்ணாத நிலையில் வற்புறுத்திக் கொடுத்தல். தரித்தல் - பொறுத்திருத்தல்; முந்தை - முன். (104)

4142. கொல்ல லுற்றனை யும்பியைக் கோதவற்
கில்லை யென்ப துணர்ந்து மிரங்கலை
அல்லல் செய்யே லுனக்கப யம்பிழை
புல்ல லென்னவும் புல்லலை பொங்கினாய்.

'கொல்லல் உற்றனை, உம்பியை; கோது அவற்கு
இல்லை என்பது உணர்ந்தும் இரங்கலை;
"அல்லல் செய்யேல்; உனக்கு அபயம்; பிழை
புல்லல்" என்னவும், புல்லலை, பொங்கினாய்.'

பொ :—'உன் தம்பியாகிய சுக்கிரீவனைக் கொல்லத் தொடங்கினாய். அவன்பாற் சிறிதும் குற்றம் இல்லை என்பதனை யுணர்ந்த பின்னரும் அவனிடத்து நீ இரக்கங்கொண்டாயல்லை. '(என்னைத்) துன்புறுத்தாதே. (நான்) உனக்கு அடைக்கலப் பொருளாவேன். (எனது)

குற்றத்தைப் பொருட்படுத்தாதே' என்று (தம்பியாகிய சுக்கிரீவன்) உன்னை இரந்து வேண்டவும் (அவனை) ஏற்றுக்கொள்ளாது மிகவும் வெகுண்டாய்.'

கு :—நின் தம்பி அறியாமையாற் பிழை புரிந்தானாயினும் அதனைப் பொறுத்து அன்பினால் அவனை ஆதரிக்குங் கடப்பாடுடைய தமையனாகிய நீ, அக்கடமையினை விடுத்து நின் தம்பியைக் கொல்ல முற்பட்டாய் என்பான், 'கொல்லலுற்றனை உம்பியை' என்றான். உம்பி - உன் தம்பி. நினக்குரிய அரசாட்சியை அவனாக விரும்பிக் கொள்ளாமல் நின் சுற்றத்தாரது வற்புறுத்தலாலேயே மேற்கொண்டானாதலின், அவன் ஒரு குற்றமுமில்லாதவன் என்ற உண்மையை நீ உணர்ந்த பின்னரும் அவனிடத்து இரக்கம் கொள்ளாது அவனைத் துன்புறுத்துதலில் ஈடுபட்டனை என்பான், 'அவற்குக் கோது இல்லை என்பது உணர்ந்தும் இரங்கலை' என்றான். நின்னால் தாக்கப்பட்டு அல்லலுறும் நின் தம்பி, 'என்னைத் துன்புறுத்தாதே, யான் உனக்கு அடைக்கலப் பொருளாவேன், எனது குற்றத்தைப் பொறுத்தருள்க' என இரங்கி வேண்டினானாகவும் அவனை யேற்றுக் கொள்ளாது வெகுண்டு சீறினாய்' என்பான், ''அல்லல் செய்யேல், உனக்கு அபயம், பிழை புல்லல்" என்னவும் புல்லலை, பொங்கினாய்' என்றான். 'நீ நின்னுடைய தம்பியாகிய சுக்கிரீவனைக் கொல்லலுற்ற இச்செயல், உடன்பிறந்தார், ஒரு குற்றமும் செய்யாதார், அஞ்சித் தன்பால் அடைக்கலம் புகுந்தோர் ஆகியவரை அன்பும் இரக்கமுமின்றித் துன்புறுத்திய மிகப் பெரிய கொடுஞ் செயலாயிற்று' என இராமன் வாலிக்குக் கூறினான் என்பதாம். (105)

4143. ஊற்ற முற்றுடை யானுனக் காரமர்
தோற்று மென்று தொழுதுயர் கையனைக்
கூற்ற முண்ணக் கொடுப்பனென் றெண்ணினாய்
நாற்றி சைக்கும் புறத்தையு நண்ணினான்.

'ஊற்றம் முற்று உடையான், "உனக்கு ஆர் அமர்
தோற்றும்" என்று தொழுது உயர் கையனைக்
"கூற்றம் உண்ணக் கொடுப்பன்" என்று எண்ணினாய்;
நால் திசைக்கும் புறத்தையும் நண்ணினான்.'

பொ :—'(இயல்பாகவே நின்னோடு எதிர்த்து நிற்கத்தக்க) வலிமை முழுதும் நிரம்பப் பெற்றுடையான் ஆயினும் (எதிர்த்தாரது வலியிற் பாதியைக் கொள்ளவல்ல தமையனாகிய உன்னொடு பொருதல் தகுதியன்றென எண்ணி) 'எதிர்த்தற்கு அரிய போரிலே

தோற்றேம்' என்று கூறி நின்னைத் தொழுது தலைக்கு மேல் உயர்த்திய கைகளையுடைய சுக்கிரீவனை, 'இவனுயிரைக் கூற்றுவன் உண்ணும்படி கொடுப்பேன்' என்று கருதி எழுந்தாய். (நீ செய்யும் கொடுமையினின்றும் தப்பிப் பிழைக்கக் கருதிய அவன்) இந்நிலவுலகின் நான்கு திசைகளின் அப்புறத்து எல்லையினையும் விரைந்து அடைபவனானான்.'

கு :—ஊற்றம் - வலிமை. முற்றும் உடையான் என்புழி உம்மை தொக்கது. ஆர் அமர் - எதிர்த்து நிற்றற்கு அரிய போர். தோற்றும்- தோற்றேம். தன்னைச் சார்ந்தாரையும் உளப்படுத்திப் பன்மையாற் கூறினான். போரில் எதிர்த்துத் தாக்கும் வலிமை பெறுதோர் தம்மை எதிர்ப்போர்க்குத் தாம் தோற்ற தன்மையினையுணர்த்தும் அடையாளமாகத் தம்முடைய இரு கைகளையும் தலைக்குமேல் உயர்த்தித் தொழுதல் மரபாதலின் 'உனக்கு ஆரமர் தோற்றும் என்று தொழுது உயர்கையன்' என்றான். நின்னைக் கைகூப்பித் தொழுத நின் தம்பியின் உயிரைக் கூற்றுவனுக்குக் கொடுக்க முற்பட்ட நினது செயல், 'போரிற் படை தொடாது கைகூப்பி வணங்கியவனைக் கொல்லலாகாது' என்னும் போர்முறையிற் பிறழ்ந்து பெரும்பழி விளைக்கும் இழிசெயலாம் என இராமன் வாலிக்கு எடுத்துரைத்தான் என்பதாம். (106)

**4144.** அன்ன தன்மை யறிந்து மருளலை
பின்ன வன்னிவ னென்பதும் பேணலை
வன்னி தானிடு சாப வரம்புடைப்
பொன்ம லைக்கிவ னண்ணலிற் போகலை.

'அன்ன தன்மை அறிந்தும், அருளலை;
பின்னவன் இவன் என்பதும் பேணலை;
வன்னிதான் இடு சாப வரம்புடைப்
பொன் மலைக்கு இவன் நண்ணலின், போகலை;'

பொ :—'(நினக்கு அஞ்சி நாற்றிசை யெல்லைகளிலும் ஓடியலைந்த சுக்கிரீவனது) அவ் எளிமை நிலையினை நீ நேரில் அறிந்து வைத்தும் அவனை அருளால் நோக்காதவனாயினை. (நின்னால் வெகுளப்பட்ட வனாகிய) இவன் நின் பின் தோன்றிய தம்பி என்பதனையும் எண்ணிப் பேணாது விட்டாய், (நீ அங்குச் செல்ல முடியாதபடி) மதங்க முனிவன் இட்ட சாபமாகிய தடையினையுடைய அழகிய இரலைக்குன்றத்தில் சுக்கிரீவனாகிய இவன் சென்று தங்கினமையால் நீ அவனைத் தொடர்ந்து செல்லா தொழிந்தாய்.'

கு :—பின்னவன் - தம்பி. 'இவன்' என்றது சுக்கிரீவனை. வன்னி - பிரமசாரி; இச்சொல், என்றும் பிரமசரிய ஒழுக்கத்தில் நிலை பெற்றொழுகும் மதங்க முனிவனைக் குறித்து வழங்கப்பெற்றது. மதங்க முனிவன் இட்ட சாபமாவது 'இம்மலைக்கு வாலி வந்தால் தலை வெடித்து இறந்தொழிவானாக' என்பது. ஈண்டுப் பொன்மலை யென்றது, 'ருசியமூகபர்வதம்' என்ற பெயருடைய அழகிய மலையினை. (107)

**4145.** ஈர மாவது மிற்பிறப் பாவதும்
வீர மாவதுங் கல்வியின் மெய்ந்நெறி
வார மாவது மற்றொரு வன்புணர்
தார மாவது தாங்குந் தருக்கரோ.

'ஈரம் ஆவதும், இற் பிறப்பு ஆவதும்,
வீரம் ஆவதும், கல்வியின் மெய்ந் நெறி
வாரம் ஆவதும், மற்று ஒருவன் புணர்
தாரம் ஆவது தாங்கும் தருக்கு அரோ.'

பொ :—'அன்பின் வழிப்பட்டதும், நற்குடிப் பிறப்புக்கு இயைந்ததும், வீரத்தொடு பொருந்தியதும், அறிவு நூல்களைக் கற்றவாறு ஒழுகும் மெய்ம்மையான ஒழுக்க நெறியின் பகுதியாவதும் வேறு ஒருவன் மணந்த மனைவியை (அவளது கற்பு நிலைக்கு இழுக்கு நேராதபடி) மதித்துக் காக்கும் பேராண்மையேயாகும்.'

கு :—மறைந்து நின்று தன்மேல் அம்பு செலுத்திய இராமனை நோக்கி, 'வீரமன்று விதியன்று' (வாலி வதை - 93) என முன் வாலி கூறிய குற்றச் சாட்டிற்கு இராமன் கூறும் மறுமொழியாக அமைந்தது இச்செய்யுள். மற்றொருவன் புணர்தாரம் - பிறன்மனையாள். தாங்குதல் - கற்பு நிலைக்கு இழுக்கு நேராதபடி மதித்துக் காத்தல். தருக்கு - பேராண்மை. 'பிறன்மனை நோக்காத பேராண்மை' (திருக்குறள் - 148) என்றார் தெய்வப் புலவரும். அரோ - அசை. பிறன்மனை நோக்காத பேராண்மையாகிய இதுவே, அன்பு, நற்குடிப் பிறப்பு, வீரம், கல்வி, நல்லொழுக்கம் ஆகிய எல்லா நலங்களுக்கும் நிலைக்களமாவது என இராமன் வாலிக்கு அறிவுறுத்தினான் என்பதாம். (108)

**4146.** மறந்தி றம்பல் வலிய மெனுமனம்
புறந்தி றம்ப வெளியவர்ப் பொங்குதல்

அறந்தி றம்ப லருங்கடி மங்கையர்
திறந்தி றம்ப றெளிவுடை யோர்க்கெலாம்.

'மறம் திறம்பல், "வலியம்" என, மனம்
புறம் திறம்ப, எளியவர்ப் பொங்குதல்;
அறம் திறம்பல், அருங் கடி மங்கையர்
திறம் திறம்பல்;—தெளிவு உடையோர்க்கு எலாம்.'

பொ :—'தெளிந்த நல்லறிவுடைய பெரியோர்க்கெல்லாம் வீரத்தின் வழுவுதலாவது, 'யாம் வன்மையுடையோம்' என்று எண்ணி, மனம் அறத்திற்குப் புறம்பான தீய வழியிலே சென்று (தன்னின் மெலியாராகிய) எளியோரை வெகுண்டு துன்புறுத்தல். அறநெறியினின்றும் வழுவுதலாவது, நிறையென்னும் அரிய காவலையுடைய கற்புடைய மகளிர் திறத்து முறை கேடாக நடத்தலாம்.'

கு :—மறம் - வீரம். தன்னின் மெலியாராகிய எளியோரை வெகுண்டு துன்புறுத்தல் வீரத்தின் வழுவிய செயல் என்பதும், பிறன் மனைவியரை நயத்தல் அறத்தின் வழுவிய செயலாம் என்பதும், வீரத்தின் உண்மையியல்பினையும் அறத்தின் தன்மையினையும் உள்ளவாறுணர்ந்து தெளிந்த நல்லறிவினர்க்கே இனிது விளங்கும் என்பான், 'தெளிவுடையோர்க்கெலாம், மறம் திறம்பல், எளியவர்ப் பொங்குதல்; அறம் திறம்பல், அருங்கடி மங்கையர் திறம் திறம்பல்' என்றான். அருங்கடி மங்கையர் - (சிறைக்காவலையே நம்பியிராமல்) நிறையென்னும் அரிய காவலையுடைய கற்புடை மகளிர். கடி - காவல். (109)

4147. தரும மின்ன தெனுந்தகைத் தன்மையும்
இருமை யுந்தெரிந் தெண்ணலை யெண்ணினல்
அருமை யும்பித னுருயிர்த் தேவியைப்
பெருமை நீங்கினை யெய்தப் பெறுதியோ.

'தருமம் இன்னது எனும் தகைத் தன்மையும்
இருமையும் தெரிந்து எண்ணலை; எண்ணினல்,
அருமை உம்பிதன் ஆருயிர்த் தேவியைப்
பெருமை நீங்கினை, எய்தப் பெறுதியோ?'

பொ :—'அறமாவது இத்தன்மையுடையது என்னும் தகுதியையும் இம்மை மறுமையென்னும் இரண்டின் பயன்களையும் தெளிவாக ஆராய்ந்து எண்ணினயல்லை. அவ்வாறு எண்ணியிருப்பாயாயின்

பெறற்கரிய உன் தம்பியாகிய சுக்கிரீவனது அரிய உயிர்போலும் மனைவியை நினக்குரிய பெருந்தன்மையின் நீங்கினுயாய் அடையப் பெறுவாயோ ?'

கு:—அறத்தின் இயல்பாவது பிறனொருவனுக்கு உரிமை பூண் டொழுகுவாளாகிய பிறன் மனையாளின் பெண்மையை விரும்பா மையே யென்றும், அத்தகைய அறமே இப்பிறப்பிற் புகழும் வரும் பிறப்பிற் போகம் முதலிய நலங்களும் அளிப்பதென்றும், அதற்கு மாருகப் பிறன் மனையாளை விரும்புதலாகிய தீச்செயலால் இப்பிறப்பிற் பகையும் பழியும் அச்சமும் வரும்பிறப்பில் நரகத் துன்பமும் எய்தும் என்றும், நீ இவ்வாறு அறத்தால் வரும் நலங்களையும் அறத்தின் வழுவுதலாலுளவாம் தீங்குகளையும் நின்னுள்ளத்திற் பகுத்துணர்ந்து எண்ணியிருப்பாயாயின், நினக்குரிய பெருமையனைத்தும் நின்னை விட்டு நீங்குமாறு நின் தம்பியின் மனைவியை இங்ஙனம் வலிதிற் கவர்ந்து கொண்டிருக்கமாட்டாய் என்பதாம். தமையன் தம்பி என வரும் இவ்வுடன்பிறப்புரிமை ஒருவரது வாழ்நாளில் அவரது முயற்சி யால் ஆக்கிக்கொள்ள ஒண்ணுத அருமையுடையது என்பான் 'அருமையும்பி' எனச் சிறப்பித்தான். உம்பி - உன் தம்பி ; என்றது, சுக்கிரீவனை. நின்னை அன்புடைத் தமையனுகத் தெளிந்து வழிபடும் இயல்பினனுகிய நின் தம்பியின் ஆருயிரையொத்த பெருங் கேண்மை யினளாகிய மனைவியை வலிதிற்கொண்ட இத் தீச்செயல், நினக் குரிய பெருமையனைத்தையும் நின்னை விட்டு நீங்குமாறு செய்து விட்டதே என இரங்குவான் 'அருமை உம்பிதன் ஆருயிர்த் தேவி யைப் பெருமை நீங்கினை எய்தப் பெறுதியோ ?' என வினவினுன். (110)

4148. ஆத லானு மவனெனக் காருயிர்க்
காத லானென லானுநிற் கட்டனென்
ஏதி லாரு மெளியரென் ருலவர்
தீது தீர்ப்பதென் சிந்தைக் கருத்தரோ.

'ஆதலானும், அவன் எனக்கு ஆருயிர்க்
காதலான் எனலானும், நிற் கட்டனென்;
ஏதிலாரும், எளியர் என்ருல், அவர்
தீது தீர்ப்பது என் சிந்தைக் கருத்து அரோ.'

பொ:—'(நீ இவ்வாறெல்லாம் அறம் சிதைய நின் தம்பிக்குப் பெருந் தீங்கு புரிந்தனை) ஆதலானும், (நின்னுல் துன்புறுத்தப்பட்டு

என்னைத் தஞ்சம் அடைந்த) அச் சுக்கிரீவன் எனக்கு அரிய உயிர் போன்ற நட்பினன் என்னும்படி என்பாற் பெருங் கேண்மையுடையான் ஆதலானும் (அவனுயிர்க்குக் கொலை சூழ்ந்த கொடியோனுகிய) நின்னுயிரைத் களைந்தேன். (சிறிதும் தொடர்பில்லாத) அயலாராயினும் (அவர், தம்மின் வலியுடைய தீயோரால் துன்புறுத்தப்படும்) எளிய (அல்லல்) நிலையினராயின், அவர்க்குளதாய தீங்கினை அறவே நீக்குவதே என் மனத்திற்கொண்ட குறிக்கோளாகும்.'

கு:—வாலியாகிய நீ, அறநெறி திறம்பி நின் தம்பியின் மனைவியை வலிதிற் கொண்டதோடமையாது, நின் தம்பியைக் கொன்ருெழிக்கும் தீச்செயலிலும் முனைந்த கொடுமை யுடையாயாதலாலும், நின்னுல் துன்புறுத்தப்பட்ட நின் தம்பியாகிய சுக்கிரீவன் என்னை யடைந்து என் ஆருயிர்த் தோழன் என்னும்படி என்பாற் பேரன்புடையான் ஆயினமையாலும், குற்றமில்லாதவனும் உயிர்த் தோழனும் ஆகிய அவனைக் காத்தற்பொருட்டு அறம் திறம்பியவனும் கொடியோனும் ஆகிய நின்னுயிரைக் களைந்தேன் என்பான், 'ஆதலானும் அவன் எனக்கு ஆருயிர்க் காதலான் எனலானும் நிற் கட்டனென்' என்ருன். ஆருயிர்க் காதலான் - உயிரோரன்ன செயிர்தீர் நட்பினன். நிற் கட்டனென் - நின்னைக் களைந்தேன். கட்டல் - களைதல். 'கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ், களைகட் டதனொடு நேர்' (550) எனவரும் திருக்குறளும், "கொடியவரென்றது, தீக்கொளுவுவார், சூறைகொள்வார், நஞ்சிடுவார், கருவியிற்கொல்வார், கள்வர், ஆறலைப்பார், சூறைகொள்வார், பிறனில் விழைவா ரென்றிவர் முதலாயினுரை" எனப் பரிமேலழகர் கூறும் விளக்கமும் இங்கு நோக்கத்தக்கன. எத்தகைய தொடர்பும் இல்லாத அயலாராயினும், அவர், தம்மின் வலியாரால் துன்புறுத்தப் பட்டு எளியராய் அல்லலுழப்பராயின் அத்தகைய எளியவர்களின் துன்பத்தைத் துடைத்துப் போக்குவதே யான்என்மனத்திற்கொண்ட தலையாய குறிக்கோள் என்பான், 'ஏதிலாரும் எளியர் என்ருல் அவர் தீது தீர்ப்பது என் சிந்தைக் கருத்து' என்ருன். ஏதிலாரும் என்புழி ஏதிலார் ஆயினும் என ஒரு சொல் வருவித்துரைக்கப்பட்டது. ஈண்டு 'எளியர்' என்றது, தம்மின் வலியோரால் துன்புறுத்தப்பட்டு வருந்தும் இடர் நிலையினராதலை. தீது - துன்பம். அரோ - அசை. 'பிலம்புக்காய்' என்பது முதல் 'ஆதலானும்' என்னும் இச்செய்யுள் வரையுள்ள பதினுெரு பாடல்களும், இராமன் தான் வாலியைக் கொன்றமை அறத்தொடு பொருந்திய செயலே என்பதனை வாலிக்கு அறிவுறுத்தும் முறையில் அமைந்தனவாகும். (111)

## இராமன் கூறிய மாற்றங்களுக்கு வாலி எதிர்மொழி பகர்தல் 4149-4152

4149. பிழைத்த தன்மை யிதுவெனப் பேரெழில்
தழைத்த வீர னுரைசெயத் தக்கிலா
திழைத்த வாலி யியல்பல வித்துணை
விழைத்தி றந்தொழி லென்று விளம்புவான்.

'பிழைத்த தன்மை இது' எனப் பேர் எழில்
தழைத்த வீரன் உரை செய, தக்கிலாது
இழைத்த வாலி, 'இயல்பு அல, இத்துணை;
விழைத் திறம், தொழில்' என்று விளம்புவான்.'

பொ :—'நீ குற்றம் புரிந்த தன்மை இதுவாகும்' என்று பேரழகு தளிர்த்து விளங்கும் பெருவீரனாகிய இராமன்கூற, தகுதியில்லாத தீய செயலைப் புரிந்த வாலியானவன் (இராமனை நோக்கி, நீ அற நெறியாகக் குறித்த) இத்துணை நியதிகளும் (குரக்கினத்தாராகிய எம்மவர்க்குப்) பொருந்துவன அல்ல; விரும்பியவாறு ஒழுகுந்திறமே (எமது) தொழிலாகும் என்று சொல்லி, (மேலும் சில) கூறுவானாயினான்.

கு :—பிழைத்தல் - பிழை செய்தல்; குற்றம் புரிதல். பேரெழில் தழைத்த வீரன் என்றது, இராமன் என்னும் பெயர்ப் பொருளை விளக்கி நின்றது. தழைத்தல் - தளிர்த்தல். தக்கிலாது - தகுதியில்லாத செயல்; என்றது பிறன்மனையாளை வலிதிற்கொண்ட கொடுஞ்செயலை. இழைத்தல் - இயற்றுதல். 'இத்துணையும் (எமக்கு) இயல்பு அல; விழைத்திறம் (எமது) தொழில்' என வேண்டுஞ் சொற்களை வருவித்து முடிக்க. இயல்பு - பிறப்புடன் இயைந்து என்றும் உளதாய்ப் பொருந்திய தன்மை. விழைத்திறம் - விழையும் திறம்; விரும்பும் செயல் வகை. விழைதிறம் எனற்பாலது, எதுகை நோக்கி விழைத்திறம் என ஒற்றுமிக்கது. இனி, விழைவினை யுடைய திறம் விழைத்திறம் என இரண்டாம் வேற்றுமையாய் ஒற்று மிக்கு வந்ததெனினும் அமையும். (112)

4150. ஐய நுங்க ளருங்குலக் கற்பினப்
பொய்யின் மங்கையர்க் கேய்ந்த புணர்ச்சிபோற்
செய்தி லன்னெமைத் தேமலர் மேலவன்
எய்தி னெய்திய தாக வியற்றினன்.

'ஐய! நுங்கள் அருங்குலக் கற்பின் அப்
பொய் இல் மங்கையர்க்கு ஏய்ந்த புணர்ச்சி போல்
செய்திலன், எமைத் தேமலர் மேலவன்;
எய்தின் எய்தியது ஆக இயற்றினன்.'

பொ :—'ஐயனே, தெய்வத் தன்மை வாய்ந்த (திருமாலின் உந்தித்) தாமரை மலரில் தோன்றிய நான்முகன் நுமது அரிய குலத்திற் கற்பென்னும் மனத்திண்மையிற் பொய்த்தல் இல்லாத மகளிரது இயல்புக்குப் பொருந்திய அன்பு ஒத்த அப்புணர்ச்சி முறையினைப் போன்று (அன்பினால் ஒத்த மனைவாழ்க்கையினையுடையராகக்) குரக்கினத்தாராகிய எம்மை(த் திருத்தமுற)ப் படைத்தான் அல்லன்; (அவரவர் வேட்கைக்கும் வலிமைக்கும் முயற்சிக்கும் ஏற்ப) நுகர்ச்சிப் பொருள் எய்துமானால் எய்திய அந்நுகர்ச்சியினை (நன்று தீதென்னும் பகுத்துணர்வின்றி) நுகரும் நிலையினராக எங்களைப் படைத்து விட்டான்.'

கு :—மெல்லியலாராகிய மகளிரது மனத்திண்மையாகிய கற்பினை மதித்துப் பேணிக் கணவனும் மனைவியுமாகக் கருத்தொருமித்து வாழும் மனைவாழ்க்கை முறை, ஒழுக்கத்தால் மேன்மேலுயரும் மனவுணர்வுடைய மக்கட்குலத்தாராகிய நும்மவர்களால் மட்டுமே நெகிழாது கடைப்பிடித்தற்குரிய அருமையுடைய தென்பான், 'நுங்கள் அருங்குலக் கற்பின் அப்பொய்யில் மங்கையர்க்கேய்ந்த புணர்ச்சி' என்றான். இலங்கு நூல் கற்று விலங்கின் தன்மையை விலக்கிய நல்லறிவினராகிய மக்களினத்தார் கைக்கொண்டொழுகுதற்குரிய மனைவாழ்க்கை நெறியினை மாறாது கடைப்பிடித்தற்கேற்ற பொறியின் யாக்கையும் மனவலியும் ஒழுக்கவுணர்வும் விலங்கினப் பகுதியிற்பட்ட வானரர்களாகிய எங்களுக்குப் படைப்புக் கடவுளால் அளிக்கப் பெறவில்லை என்பான், 'நுங்கள் அருங்குலக் கற்பின் அப் பொய்யில் மங்கையர்க்கு ஏய்ந்த புணர்ச்சிபோல் எமைத் தேமலர் மேலவன் செய்திலன்' என்றான். பொய் இல் மங்கையர் - கற்பில் வழுவுதல் இல்லாத நிறையுடைய மகளிர். பொய்த்தல் - வழுவுதல். தேமலர் - தெய்வத்தன்மை வாய்ந்த மலர்; என்றது திருமாலின் உந்திக் கமலத்தை. மலர்மேலவன் - பிரமன். பொய்யின் மங்கையர்க்கு ஏய்ந்த புணர்ச்சி என்றது, தன்னை வாழ்க்கைத் துணையாக மணந்து கொண்ட கணவனையே தெய்வமெனக் கொண்டு அவனொடும் அன்பினாற் பிரிவின்றி இயைந்த மகளிரது கற்பினைப் போற்றி வாழும் மனைவாழ்க்கை முறையினை. ஒருவனும் ஒருத்தியும் கணவனும் மனைவியும் என இவ்வாறு மணஞ் செய்துகொண்டு நிறையினும் கற்பினும் நீங்காது வாழ்தலாகிய மனைவாழ்க்கை முறையென்பது, ஒழுக்கத்தால் மேன்மேல் உயரும் உயர்திணைப் பகுப்பினராகிய

நும்மவர்க்கேயுரியதன்றி மனவுணர்வு நிரம்பப்பெருத அஃறிணைப் பகுப்பினுளடங்கிய குரக்கினத்தாராகிய எம்மனேர்க்கு ஒரு சிறிதும் பொருந்தாது என வாலி இராமனை நோக்கிக் கூறினன் என்க. (113)

4151. மணமு மில்லை மறைநெறி வந்தன
குணமு மில்லை குலமுதற் கொத்தன
வுணர்வு சென்றுழிச் செல்லு மொழுக்கலால்
நிணமு நெய்யு மிணங்கிய நேமியாய்.

'மணமும் இல்லை, மறை நெறி வந்தன;
குணமும் இல்லை, குல முதற்கு ஒத்தன;
உணர்வு சென்றுழிச் செல்லும் ஒழுக்கு அலால்—
நிணமும் நெய்யும் இணங்கிய நேமியாய்!'

பொ :—'(பகைவரது உடலின்) தசையும் நெய்யும் பொருந்தித் தோய்ந்த ஆழிப்படையையுடையவனே! (குரக்கினத்தாராகிய எங்களுக்கு) உணர்வுக்கு நிலைக்களமாகிய மனம் சென்ற வழியே செல்லுதலாகிய நடக்கையேயன்றி, வேத நெறி முறைப்படி விதிக்கப்பட்டு வரும் திருமணம் என்னும் வரையறைகளும் இல்லை. (அந்நியதியின்படி வழிமுறையாகத் தொடர்ந்து வரும்) நற்குடி மரபுக்கு இயைந்தனவாகிய (அன்பு, நாண் முதலிய) நற்பண்புகளும் இல்லையாயின.'

கு :—உணர்வு சென்றுழிச் செல்லும் ஒழுக்கலால், மறைநெறி வந்தன மணமும் இல்லை; குலமுதற்கு ஒத்தன குணமும் இல்லை என இயையும். நெய் பூசப்பெற்றுப் பகைவருடலிற்றேய்ந்து அதன் நிணத்தொடு பொருந்திய ஆற்றல் மிக்க சக்கரப்படை என்பான், 'நிணமும் நெய்யும் இணங்கிய நேமி' எனச் சிறப்பித்தான். இணங்குதல் - பொருந்திக் கலத்தல். அறநூலும் நீதி நூலும் சொல்லும் நெறியில் நின்று உலக மக்களைப் பிறர் நலியாமற் காப்பாற்றும் திருவுடைய மன்னனாகிய நீ, காத்தற் கடவுளாகிய திருமாலே எனப் போற்றத்தக்க சிறப்புடையாய் என்பான் 'நேமியாய்' என அழைத்தான். நேமியான் - சக்கரப்படையினையுடைய திருமால். 'திருவுடை மன்னரைக்காணின் திருமாலைக்கண்டேனே யென்னும்' என்பது திருவாய் மொழி. (114)

4152. பெற்றி மற்றிது பெற்றதொர் பெற்றியிற்
குற்ற முற்றிலெ னீயது கோடியால்

வெற்றி யுற்றதொர் வெற்றியி ஞயெனச்
சொற்ற சொற்றகைக் குற்றது சொல்லுவான்.

'பெற்றி மற்று இது; பெற்றது ஓர் பெற்றியின்
குற்றம் உற்றிலென்; நீ அது கோடியால்—
வெற்றி உற்றது ஒர் வெற்றியினுய்!' எனச்
சொற்ற சொல் தகைக்கு உற்றது சொல்லுவான்:

பொ :—'(பகைவரைப் போரில் வென்று பெறுதற்குரிய) வெற்றியானது தன்னியல்பிலே வந்து பொருந்துதற்குக் காரணமாகிய ஒப்பற்ற பெருவெற்றியை யுடையவனே! (குரக்கினத்தாராகிய எமது) இயல்பு (மேலே கூறிய) இத்தன்மையதாகும். யான் பெற்றுடைய தொன்ருகிய எனது பிறப்பியல்பின்படி யான் எத்தகைய குற்றமும் செய்திலேன். (என்பாற் சிறிதும் குற்றமில்லை யென்பதாகிய) அத்தன்மையினை நீ மனத்திற் கொள்வாயாக' என்று கூறிய சொல்லின் தகுதியுடையானுகிய வாலிக்கு, (அவன் குற்றத்தொடு) பொருந்திய திறத்தினை (இராமன்) விளங்கச் சொல்வானுயினன்.

கு :—பகைவரொடு நேர் நின்று போர் செய்வதற்கு முன், நினது வருகையைக் கேட்ட அளவிலேயே பகைவர் அஞ்சி நடுங்கித் தம் தோல்வியை உடன்பட்டுப் பணிதற்குக் காரணமாக அமைந்தது நினது வெற்றித்திறன் என்பான், 'வெற்றியுற்றதொர் வெற்றியினுய்' என வாலி இராமனையழைத்தான். பதிற்றுப்பத்து 17-ஆம் பாடலில் 'வலம்படுவியன்பணை' எனவரும் தொடர்க்கு, "போர் செய்து வருந்தாமற் பகைவர் வெருவியோட முழங்கி அரசனுக்கு வென்றிதன்பாலேபட நின்றமுரசம் என்றவாறு. இச்சிறப்பானே இதற்கு வலம்படுவியன்பணை யென்று பெயராயிற்று" எனப் பழைய உரையாசிரியர் கூறிய விளக்கம் இங்கு ஒப்புநோக்கி யுணரத்தக்கதாகும். தன்னின் உயர்ந்தார், ஒத்தார், இழிந்தார் ஆகிய எத்திறத்தாரோடும் பெருமை குன்ருது உரை நிகழ்த்தவல்ல சொல்லின் செல்வன் என்பார் வாலியைச் 'சொற்றகை' எனக் குறித்தார் ஆசிரியர். சொற்றகை என்பது நெடுந்தகை, பெருந்தகை என்ருற் போன்று உயர்திணைப் பெயராய் நின்றது. இவ்வாறு சொல்லின் தொகையறிந்து ஆராய்ந்து சொல்லும் மனவுணர்வுடையான் வாலியெனவே, இலங்கு நூல் கற்ருனுகிய அவன், தன்னை விலங்கொடு சார்த்தித் தனது தீச்செயலுக்கு அமைதி கூறுதல் பொருந்தாதென ஆசிரியர் குறிப்பான் உணர்த்தினமை கூர்ந்து நோக்கத்தக்கதாகும். (115)

## 'குற்றமுற்றிலேன்' என வாலி கூறிய மொழிகளை இராமன் மறுத்து, அவன் செய்த செயல் குற்றமுடையதே என்பதனை வலியுறுத்தல் 4153-4166

4153. நலங்கொ டேவரிற் றோன்றி நவையறக்
கலங்க லாதற நன்னெறி காண்டலின்
விலங்க லாமை விளங்கிய தாதலான்
அலங்க லார்க்கி தடுப்பதன் றுமரோ.

நலம் கொள் தேவரின் தோன்றி, நவை அற,
கலங்கலாது, அற நல் நெறி காண்டலின்,
விலங்கு அலாமை விளங்கியது; ஆதலான்
அலங்கலார்க்கு இது அடுப்பது அன்றும் அரோ.

பொ:—'நல்லன இவையெனத் தேர்ந்து கொள்ளும் (நல்வினை யுடையராகிய) தேவர் குழுவிற் பிறந்து, (அல்லலுற்ற பொழுதும்) மனங்கலங்காமல் அறமாகிய நல்ல நெறியின் தன்மையைக் குற்ற மறக் கண்டுணர்தலால் (வாலியாகிய தாம்) விலங்கினத்தரல்லாமை தெளிவாக விளங்கியது; ஆதலால் (வெற்றி) மாலையையணிந்த வீரராகிய தமக்கு இவ்வாறு (விலங்கு என அமைதி) கூறுதல் பொருத்தமுடையதன்றும்.'

கு:—நன்று தீதென்னும் இருவினைப் பயனையும் ஒருங்கு நுகரு மியல்பினராகிய மக்கட்குலத்தாரின் மேம்பட்டு, இன்பமே நுகரும் தேவர் குழுவில் இந்திரன் புதல்வனுகத் தோன்றினை என்பான், 'நலம்கொள் தேவரிற்றோன்றி' என்றும், உடம்பினை விட்டு உயிர் பிரியக்கூடிய இவ்வல்லல் நிலையிலும் சிறிதும் மனங்கலங்காமல் நல்லற நெறியின் தன்மை யிதுவென்று குற்றமற ஆராயும் மன வுணர்விற் சிறிதும் சலியாது திகழ்கின்றனை என்பான், 'கலங்கலாது அற நன்னெறி நவையறக் காண்டலின்' என்றும், இவ்விரு காரணத் தாலும் வாலியாகிய தாம் ஏனைய குரங்குகளோடொப்ப விலங்கு அல்லாமை இனிது விளங்கியது என்பான், 'தேவரிற்றோன்றி அற நன்னெறி காண்டலின் விலங்கு அல்லாமை விளங்கியது' என்றும், ஆகவே, 'மறைநெறி வந்த மணமும் குலமுதற்கு ஒத்த குணமும் இன்றி எய்தின் எய்தியதாக வாழும் குரக்கினத்தாராகிய எம்பாற் குற்றங்காணுதல் பொருந்தாது' எனத் தாம் கூறிய இச் சமாதானம் வெற்றி மாலையை யணிந்த வீரராகிய தம்முடைய தகுதிக்குச் சிறிதும் பொருந்தாது என்பான், 'ஆதலான் அலங்கலார்க்கு இது அடுப்பது அன்றும்' என்றும் இராமன் வாலிக்கு அறிவுறுத்தினன். நலம்-நல் வினைப்பயனாகிய இன்பம். நவை - குற்றம். அற நன்னெறி நவை

யறக் காண்டலின் என இயையும். விலங்கு அ(ல்)லாமை - ஒழுக்க வுணர்வில்லாத விலங்கினத்திற் படாமை; மனவுணர்வொடு பொருந்திய ஒழுக்கத்தால் உயரவல்ல உயர்திணையாகப் பிறந்துள்ளமை. அகம் புறமென்னும் ஒழுகலாறுபற்றி அடையாள மாலையினையணிந்து கொள்ளும் மாண்பு உயர்திணைக்கே யுரியதென்பது புலப்பட 'அலங்கலார்க்கு' என உயர்த்தற்கண்வரும் ஆரீற்றுச் சுட்டினான். அலங்கலார்க்கு - (வெற்றி) மாலையை யணிந்த வீரராகிய தமக்கு; படர்க்கைப் பெயர் முன்னிலைக்கண் வந்தது. இது –('என் தம்பி மனைவியை வலிதிற்கொண்ட இச் செயல் எனது பிறப்பியல்பின்படி குற்றமாவதன்று' என வாலி கூறிய) இச் சமாதானம். அரோ - அசை. (116)

4154. பொறியின் யாக்கைய தோபுல னோக்கிய
அறிவின் மேலதன் றோவறத் தாறுதான்
நெறியி னோன்மையை நேர்நின் றுணர்ந்தநீ
பெறுதி யோபிழை யுற்றுறு பெற்றிதான்.

'பொறியின் யாக்கையதோ? புலன் நோக்கிய
அறிவின் மேலது அன்றோ, அறத்தாறு தான்?
நெறியின் நோன்மையை நேர் நின்று உணர்ந்த நீ
பெறுதியோ பிழை உற்று உறு பெற்றிதான்?

பொ:—அறநெறியென்பது ஐம்பொறிகளோடு பொருந்திய உடம்பின் எல்லையுட்பட்டு அடங்கியதோ? (பொறி வாயிலாக நிகழும்) புலனுணர்வுகளை ஒருவழிப்படுத்தும் அறிவை நிலைக்களனாகக் கொண்டு நிகழும் இயல்பினதல்லவா? அறநெறியின் வலிமையைச் செம்மை நிலையில் நின்று உள்ளவாறுணர்ந்த நல்லறிவுடைய நீ, குற்றமுடைய செயல்களைச் செய்து அத்தீமையிலேயே அழுந்தும் தன்மையைப் பெறக் கடவாயோ?

கு:—அறத்து ஆறு பொறியின் யாக்கையதோ? புலன் நோக்கிய அறிவின் மேலது அன்றோ? எனவும், நீ பிழையுற்று உறுபெற்றி தான் பெறுதியோ எனவும் இயையும். பொறியாவன மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன. இப்பொறிகளை வாயிலாகக் கொண்டு நிகழும் புலன்களாவன ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை என்பனவாம். அறிவென்பது, மனத்தை அது செல்லும் புலன்கள்தோறும் செல்லவிடாது தீயவற்றினின்றும் நீக்கி நல்லனவற்றிற் செலுத்தும் இயல்பினது என்பான், 'புலன் நோக்கிய அறிவு' என்றான். நோக்குதல் - நன்றும் தீதும் கண்டறிதல். பிழையுற்று-பிழையினைச் செய்து. உறுதல் - (அதன் கண்ணேயே) அழுந்துதல். பெற்றி -

தன்மை. பெறுதியோ என்புழி ஓகாரம் பெறக் கடவாயல்லை என எதிர்மறைப் பொருளுணர்த்தி நின்றது. உயிர்கள் மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளும் மனமும் ஆகிய அறுவகை வாயில்களையும் படிப்படியாகப் பெற்று ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் வரை அறிவினாற் சிறந்து விளங்கும் முறையினை ஆசிரியர் தொல்காப்பியனார் மரபியலில் விளக்கியுள்ளார். 'மக்கள் தாமே ஆறறிவுயிரே' எனக் கூறிய அவ்வாசிரியர், 'பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே' என அதனைச் சார்த்திக் கூறுதலால், மக்களேயன்றி மக்களின் வேருய்த் தாழ்ந்த பிறப்பினவாகிய 'குரங்கு முதலாகிய விலங்கினுள்ளும் அறிவுடையன எனப்படும் மனவுணர்வுடையன வுளவாயின் அவையும் ஈண்டு ஆறறிவுயிராய் அறவுணர் வுடையனவாம்' என்பது புலனாதலானும், இனி, மக்கள் யாக்கையிற் பிறந்தாராயினும் மனவுணர்ச்சியில்லாதார் மாக்கள் எனப்பட்டு ஐயறிவுயிராகிய விலங்கினத்துள் அடக்கப்படுவரென்பது, 'மாவும் மாக்களும் ஐயறிவினவே' (தொல் - மரபு - 32) என்பதனாற் புலனாதலானும், மன அறிவின் துணைகொண்டு இயல்வதாகிய அறநெறியென்பது பொறிகளாற் குறைவு நிறைவுடைய உடம்பின் எல்லையுட்பட்டு அடங்குவதன்றென்பது இனிது விளங்கும். (117)

4155. மாடு பற்றி யிடங்கர் வலித்திடக்
கோடு பற்றிய கொற்றவற் கூயதோர்
பாடு பெற்ற வுணர்வின் பயத்தினால்
வீடு பெற்ற விலங்கும் விலங்கதோ

'மாடு பற்றி இடங்கர் வலித்திட,
கோடு பற்றிய கொற்றவற் கூயது ஓர்
பாடு பெற்ற உணர்வின் பயத்தினால்,
வீடு பெற்ற விலங்கும் விலங்கதோ?'

பொ :—முதலையானது (தன்னைப்) பற்றி ஒரு பக்கத்தில் வலிந்து இழுத்தலால் (வெற்றி தரும்) சங்கினையேந்திய கொற்றவனாகிய திருமாலை (ஆதிமூலமே என)க் கூவி யழைத்ததாகிய ஒப்பற்ற பெருமை வாய்ந்த நல்லறிவின் பயனாக வீட்டுலகத்தைப் பெற்ற (கசேந்திரன் என்னும்) யானையும் விலங்கினத்துள் வைத்து எண்ணத்தக்க எளிமையுடையதோ?

கு :—மாடு - பக்கம். இடங்கர் - முதலை. வலித்தல் - வலிந்து இழுத்தல். 'கோடு பற்றிய கொற்றவன்' என்றது, பாஞ்சசன்னியம் என்னும் வெற்றிச் சங்கினையேந்திய திருமாலை. கோடு - சங்கு.

கூயதோர் உணர்வு - கூவியழைத்தமைக்குக் காரணமாகிய நன் ஞானம். கூயதோர் உணர்வு, பாடு பெற்ற உணர்வு என இயையும். பாடு - பெருமை. ஈண்டு உணர்வு என்றது, முன்னைப் பிறப்பில் இந்திரத்யும்நன் என்னும் அரசனாக இருந்து திருமாலை வழிபட்ட திருத்தொண்டின் பெருமையினாற் பெற்ற மெய்யுணர்வினை. திருமால் பத்தியிற் சிறந்த இந்திரத்யும்நன் என்னும் அரசன் திருமாலை வழி பாடு செய்து கொண்டிருக்கும் நிலையில் அகத்திய முனிவர் அம் மன்னனைக் காண வந்தாராக, மன்னன் ஐம்புலன்களும் ஒன்றி இறைவனை வழிபட்டிருந்தமையால் முனிவரது வருகையை உணரா தவனாகி இறை வழி பாட்டிலேயே ஒன்றியிருந்தான். வந்த முனிவர் மன்னன் தம்மை மதியானாயினான் எனப் பிறழ எண்ணி வெகுண்டு மன்னனை நோக்கி, 'நீ எனது வரவுணர்ந்தும் போற்றாது மதயானை போன்று செருக்குற்றிருந்தனையாதலின் யானையாகத் திரிக' எனச் சபித்தனர். அச்சாபத்தால் அவன் காட்டிடத்தே யானையாகப் பிறந் தான். யானையாகப் பிறந்த நிலையிலும் தான் முன் செய்த திருமால் பூசையின் பயனாக அப் பெருமான்பால் நிறைந்த பத்தியுடையனாகி நாள்தோறும் ஆயிரந் தாமரை மலர்களைக்கொண்டு திருமாலை வழி படும் நியமமுடையவனானான். அவ் யானை என்றும்போல் ஒருநாள் மலர் கொய்தற்கெனத் தாமரைத் தடாகத்தில் இறங்கியபொழுது, அந் நீர்நிலையில் தவஞ்செய்து கொண்டிருந்த தேவலன் என்னும் முனிவனது காலைப் பற்றிய குற்றத்திற்காக அம் முனிவனாற் சபிக்கப் பட்டு முதலையாய்க் கிடந்த ஊகூ என்னும் கந்தருவன், அவ் யானையின் காலைக் கௌவிக்கொள்ள அவ் யானை 'ஆதிமூலமே' என இறைவனைக் கூவியழைத்தது. யானையின் அரற்றொலியைக் கேட்ட திருமால், விரைந்து கருடன்மேல் எழுந்தருளிவந்து தன் கையி லுள்ள சக்கரப்படையினால் முதலையைத் துணித்துக் கசேந்திரனாகிய யானையை முதலை வாயினின்றும் விடுவித்து யானைக்கு வீடுபேறளித் தார் என்பது வரலாறு. உணர்வின் பயத்தினால் - ஞானத்தின் பயனாக. பயம் - பயன்; பிரயோசனம். வீடுபெற்ற - (முதலையின் வாயினின்றும் விடுபட்டு) வீட்டுலகத்தை யடைந்த. 'விலங்கும் விலங்கதோ' என்புழி முன்னுள்ள விலங்கென்னும் பொதுப்பெயர் விலங்கினத்துள் ஒன்றாகிய யானை என்னும் பெயரளவாய் நின்றது. விலங்கது - விலங்கினத்தின் கண்ணது; குறிப்புவினை. விலங்கதோ- விலங்கினத்தின் கண்ணதோ? ஓகாரம் எதிர்மறை. தானடைந்த துன்பத்தினின்றும் நீங்குதற்குரிய நன்ஞானத்தினால் எவ்வுயிர்க்குந் தலைவனாகிய இறைவனைக் கூவியழைத்து வீடுபெற்றுய்ந்த கசேந் திரன் என்னும் யானை, பொறியின் யாக்கையாகிய பிறப்பு வகையால் விலங்கெனக் கூறத்தக்கதாயினும், உயிர்களின் துன்பத்தைத் துடைத்தற்குரியவன் இறைவன் ஒருவனே என்றுணர்ந்து அழைத்த அறிவின் திறத்தால், உயர்ந்த நன்மக்களோடு இயைத்துக்

கசேந்திர ஆழ்வான் எனப் போற்றப்பெறும் தனிச் சிறப்புடையதா யிற்று என்பதாம். கசேந்திரனாகிய யானையினைப் போன்று ஒழுக்கத் தால் மேன்மேல் உயர்ந்து வீடுபெறுதற்குக் காரணமாகிய நல் லுணர்வுடைய வாலியாகிய நீ இங்ஙனம் ஒழுக்கத்தின் இழுக்கித் தவறு செய்தல் அடாது என இராமன் வாலிக்கு அறிவுறுத்தவாறு. (118)

4156. சிந்தை நல்லறத் தின்வழிச் சேர்தலால்
பைந்தொ டித்திரு வின்பரி வாற்றுவான்
வெந்தொ ழிற்றுறை வீடுபெ ற்றெய்திய
எந்தை யும்மெரு வைக்கர சல்லனே.

'சிந்தை நல் அறத்தின் வழிச் சேர்தலால்,
பைந் தொடித் திருவின் பரிவு ஆற்றுவான்,
வெந் தொழில் துறை வீடு பெற்று எய்திய
எந்தையும், எருவைக்கு அரசு அல்லனோ?'

பொ :—நல்லறத்தின் வழியிலேயே தன் மனம் ஈடுபட்டுச் சேரும் இயல்பினால், பசிய வளையலையணிந்த திருமகள் போன்ற சீதையின் துன்பத்தைத் துடைத்தற்பொருட்டு (இராவணனோடு) கொடிய போர்த்தொழிற் றுறையை மேற்கொண்டு (உயிர் துறந்து) வீடு பேற்றினையடைந்த கழுகரசனாகிய சடாயுவும் (மக்களிற் சிறந் தோனாகி) என் தந்தையெனப் போற்றத் தகும் தனிச் சிறப்பினைப் பெற்றான் அல்லனோ?

கு :—நல்லறத்தின் வழிச் சிந்தை சேர்தலால் திருவின் பரிவு ஆற்றுவான் வெந்தொழிற்றுறை பெற்று வீடு எய்திய எருவைக்கு அரசும் எந்தை அல்லனோ என இயைத்துப் பொருள் கொள்க. பைந்தொடித் திரு என்றது சீதையை. பரிவு - துன்பம். ஆற்றுதல்- நீக்குதல். ஆற்றுவான் - நீக்கும்பொருட்டு; வானீற்று வினையெச்சம். எருவை - கழுகு. எருவைக்கு அரசு என்றது சடாயுவை. கழுகரச னாகிய சடாயு, சீதையின் துன்பத்தை நீக்குதற் பொருட்டு இராவண னொடு கடும் போர் புரிந்து உயிர் துறந்து வீடுபெற்ற செய்தி முன் சடாயு வுயிர்நீத்த படலத்தில் விரித்துரைக்கப் பெற்றது. அஃறிணை யுயிர்களுட் சிறந்த விலங்கும் பறவையும் ஆகிய ஐயறிவுயிர் வகையுள் விலங்கினத்ததாகிய கசேந்திரன் என்னும் யானையும் பறவையினத்த தாகிய சடாயு வென்னும் கழுகும் மனவுணர்வினாற் சிறந்து அற நெறியில் நின்று உயர்திணை மக்களையொத்து உயர்ந்த திறம் முன்னைச் செய்யுளிலும் இச் செய்யுளிலும் முறையே விளக்கப் பெற் றமை அறியத்தக்கதாகும். (119)

4157. நன்று தீதென் றியறெரி நல்லறி
வின்றி வாழ்வதன் ரேவிலங் கின்னியல்
நின்ற நன்னெறி நீயறி யாநெறி
யொன்று மின்மையுன் வாய்மை யுணர்த்துமால்.

'நன்று, தீது, என்று இயல் தெரி நல் அறிவு
இன்றி வாழ்வது அன்ரே, விலங்கின் இயல்?
நின்ற நல் நெறி, நீ அறியா நெறி
ஒன்றும் இன்மை, உன் வாய்மை உணர்த்துமால்.'

பொ :—விலங்குகளின் தன்மையாவது, நல்லது இது, தீயது இது என்று அதனதன் நலந் தீங்குகளாகிய இயல்பினை உள்ளவாறு தெரிந்துணரும் நல்லறிவில்லாமல் (மனம் போனவாறு) வாழ்வ தல்லவோ? (மிருகங்களின் தன்மையாகிய அவ்வியல்புக்கு மாருக) நிலைபெற்ற நல்ல அறநெறிகளில் நீ ஆராய்ந்துணராத அறவழி ஒன்றும் இல்லை என்பதனை உன் வாய்ச் சொற்களே நன்கு அறி வுறுத்தும்.

கு :—மனத்தை அது சென்ற வழியே செல்லவிடாது பொருள் களின் நலந் தீங்குகளை ஆராய்ந்து தீயதனின் நீக்கி நல்லதன்கட் செலுத்துவதே அறிவெனப்படும் என அதற்கு இலக்கணங் கூறு வார், 'நன்று தீது என்று இயல்தெரி நல் அறிவு' என்ருர். இத் தொடரில், "சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ - நன்றின்பா லுய்ப்ப தறிவு" (422) என வரும் திருக்குறட் பொருள் எடுத்தாளப் பெற்றமை அறியத்தக்கதாகும். விலங்கின் இயல், நல்லறிவின்றி வாழ்வதன்ரே என இயையும். விலங்கின் இயல் - மிருகங்களின் இயல்பு. நின்ற - நிலைபெற்ற. நிலைபெற்ற நல்லற நெறிகளெல்லா வற்றையும் நீ ஒருங்கே அறிந்துள்ளாய் என்ற உண்மையினை அவ் வறநெறியின் இன்றியமையாமையினை வற்புறுத்திக் கூறும் உன் வாய்ச் சொற்களே இனிது புலப்படுத்தும் என்பான், 'நின்ற நன் னெறி, நீ அறியாநெறி ஒன்றும் இன்மை உன் வாய்மை யுணர்த்தும்' என்ருன். வாய்மை - வாய்ச்சொல். ஆல் - அசை.

(120)

4158. தக்க வின்ன தகாதன வின்னவென்
றொக்க வுன்னல ராயி னுயர்ந்துள
மக்க ளும்விலங் கேமனு வின்னெறி
புக்க வேலவ் விலங்கும்புத் தேளிரே.

'தக்க இன்ன, தகாதன இன்ன, என்று
ஒக்க உன்னலர் ஆயின், உயர்ந்துள
மக்களும், விலங்கே; மனுவின் நெறி
புக்கவேல், அவ் விலங்கும் புத்தேளிரே.'

பொ:—(எவ்வகைப் பிறப்புக்களினும் அறிவினால்மிக்கு) உயர் நிலையடைந்துள்ள மாந்தர்களும் (தம்மாற்) செய்யத்தக்கன இவை, செய்யத்தகாதன இவை என்று (நன்றும் தீதும்) ஒருங்கு வைத்து எண்ணியுணராராயின் (இழிந்த பிறப்பினதாகிய) விலங்கெனவே கருதப்படுவர். அவ்விலங்கும் (மனவுணர்வினால்) மனு நெறியாகிய ஒழுக்க நெறியில் நின்று ஒழுகினவாயின் (மக்களினும் மேலாக வுயர்ந்த) தேவர்களே என மதித்துப் போற்றப் பெறும் சிறப் புடையனவாகும்.

கு:—உயர்ந்துள மக்களும், தக்க இன்ன, தகாதன இன்ன, என்று ஒக்க உன்னலராயின் விலங்கே; அவ்விலங்கும் மனுவின் நெறி புக்கவேல் புத்தேளிரே என இயைத்துரைக்க. தக்க - நல்லறி வுடையார் செய்யத்தக்க நற்செயல்கள். தகாதன - அறிவுடையா ரால் செய்யத் தகாத (விலக்கத்தக்க) தீயசெயல்கள். ஒக்க உன்னு தல் - நல்லதன் நலனும் தீயதன் தீமையும் ஆகிய இரண்டின் விளைவு களையும் ஒரு சேர எண்ணுதல். மக்களும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. விலங்கும் என்புழி உம்மை இழிவு சிறப்பு. மனுவின் நெறி- மனு என்னும் வேந்தனால் மக்கட் குலத்தார்க்கு அறிவுறுத்தப்பட்ட நீதி நெறி; ஈண்டு மனவுணர்வின் மேம்பட்ட உயிர்கள் மேற் கொள்ளுதற்குரிய ஒழுக்க நெறி என்னும் பொருளில் ஆளப்பெற்றது. புத்தேளிர் - தேவர். ஏகாரம் இரண்டும் தேற்றப் பொருளில் வந் தன. பிறப்பு வகையால் உயர்வுடைய மக்களே எனினும் அன்னோர் நல்லொழுக்கமிலராயின் செயல் வகையால் இழிந்த விலங்கினத்துள் வைத்து எண்ணப்படுவர் என்பதும், பிறப்பு வகையால் இழிந்த விலங் காயினும் அவை நன்றுந் தீதும் பகுத்துணர்ந்தொழுகும் நல்லொ ழுக்கமுடையனவாயின் செயல் வகையால் மக்களினும் உயர்ந்து வானுறையும் தேவர்களுள் வைத்துப் போற்றப் பெறும் சிறப்புடை யனவாம் என்பதும் இதனால் அறிவுறுத்தியவாறும். (121)

4159. காலனாற்றல் கடிந்த கணிச்சியான்
பாலினாற்றிய பத்தி பயத்தலான்
மாலினாற்றரு வன்பெரும் பூதங்கள்
நாலினாற்றலு மாற்றுழி நண்ணினாய்.

'காலன் ஆற்றல் கடிந்த கணிச்சியான்—
பாலின் ஆற்றிய பத்தி பயத்தலால்,
மாலினல் தரு வன் பெரும் பூதங்கள்
நாலின் ஆற்றலும் ஆற்றுழி நண்ணினய்.'

பொ :—(கால எல்லையினை யுணர்ந்து உயிர்கொள்ளவல்ல) கூற்றுவனது பெருவலியை விலக்கிப் போக்கிய மழுப்படையானுகிய சிவபெருமான்பால் செலுத்திய பத்தியாகிய பேரன்பு நற்பயன் விளைத்தலால் திருமாலால் (தத்தம் நிலையில் நிறுத்திக்) காக்கப் பெறும் வன்மை மிக்க பெரும் பூதங்களுள் (வளி, தீ, நீர், நிலம் என்னும்) பூதங்கள் நான்கின் பெருவலியையும் (ஒரு சேரப்) பொறுத்துத் தாங்கும் நிலையிற் பெருவன்மை அடையப் பெற்ருய்.

கு :—உயிர்களுக்கு விதிக்கப்பட்ட வாழ்நாளெல்லையாகிய காலத்தினையறிந்து உடம்பினின்றும் உயிரைப் பிரித்தல் கூற்றுவனது தொழிலாதலின் அவனுக்குக் காலன் என்பது காரணப் பெயராயிற்று. "காலனும் காலம் பார்க்கும்" (புறம் - 41) எனவரும் தொடர் இப் பெயர்க் காரணத்தையினிது புலப்படுத்தல் அறியத்தக்கதாகும், காலனது ஆற்றலாவது யாவராலும் தடுத்து விலக்கவொண்ணுத பெருவலி. 'மாற்றரும் கூற்றம்' (தொல்-புறத். 24) என்ருர் தொல்காப்பியனுரும். கடிதல் - விலக்குதல்; அழித்துப் போக்குதல். கணிச்சியான் - மழுப்படையினையேந்திய சிவபெருமான். கணிச்சி - மழு. வாலி சிவபெருமான்பால் எல்லையற்ற பேரன்புடையவனுய் அம் முதல்வனை வழிபட்டுப் போற்றிய திறத்தினை,

'கோலமா மலரொடு தூபமுஞ் சாந்தமுங் கொண்டு போற்றி
வாலியார் வழிபடப் பொருந்தினர் திருந்துமாங் கனிக ளுந்தி
ஆலுமா காவிரி வடகரை யடைகுரங்காடு துறை
நீலமாமணிமிடற்றடிகளை நினையவல்வினைகள் வீடே. (3-91-7)

'நீலமாமணிநிறத் தரக்கனை இருபது கரத்தொடொல்க
வாலினற்கட்டிய வாலியார் வழிபட மன்னுகோயில்
ஏலமோ டிலையில வங்கமே யிஞ்சியே மஞ்சளுந்தி
ஆலியா வருபுனல் வடகரையடை குரங்காடு துறையே'
(3-91-8)

எனவரும் திருப்பாடல்களில் ஆளுடைய பிள்ளையார் பரவிப் போற்றியுள்ளார். மால் - காத்தற் கடவுளாகிய திருமால். தருதல் - புறந்தருதல்; ஐம்பெரும் பூதங்களும் தத்தம் நிலையிற் பிறழாவண்ணம் நிலைநிறுத்திக் காத்தல். இங்ஙனம் காத்தற் கடவுளின் காவலிற் பட்டு அடங்கிய ஐம்பெரும் பூதங்களுள் உருவறியவொண்ணுத ஆகா

யம் நீங்கலாக வளி முதலிய ஏனை நாற்பெரும் பூதங்களின் ஆற்றல் முழுவதனையும் நீ ஒருவனாகவே நின்று தடுத்துத் தாங்கவல்ல பேராற்றல் பெற்றுள்ளாய் என்பான், 'மாலினால்தரு வன்பெரும் பூதங்கள் நாலின் ஆற்றலும் ஆற்றுழி நண்ணினாய்' என்றான். ஆற்றுதல் - பொறுத்துத் தாங்குதல். நண்ணுதல் - அடைதல். (122)

**4160.** மேவ ருந்தரு மத்துறை மேவினர்
ஏவ ரும்பவத் தாலிழிந் தோர்களுந்
தாவ ருந்தவ ரும்பல தன்மைசால்
தேவ ரும்முளர் தீமை திருத்தினர்.

மே வரும் தருமத்துறை மேவினர்,
ஏவரும், பவத்தால் இழிந் தோர்களும் ;
தா வரும் தவரும், பல தன்மை சால்
தேவரும், உளர், தீமை திருத்தினர்.

பொ :—குற்றமே செய்யும் இயல்புடையாரிலும் பிறப்பினால் இழிந்த கீழோரிலும் பெருமை வளர்தற்குக் காரணமாகிய நல்லறச் செயல்களிற் பொருந்தினோர் உளர். ஆற்றல் மிகுதற்குக் காரண மாகிய தவத்தினையுடைய முனிவர்களிலும் பலவகை நற்குணங்கள் நிரம்பிய தேவர்களிலும் தீய செயல்களைச் செய்தோர் உளர்.

கு :—ஏவரும், பவத்தால் இழிந்தோர்களும், மே வரும் தருமத் துறை மேவினர் (உளர்); தா வரும் தவரும், பல தன்மை சால் தேவ ரும் தீமை திருத்தினர் உளர் என இயைத்துரைக்க. மே-பெருமை. 'மே தக்க விழைவின' (சீவக - 179) என வருந்தொடர்க்கு 'பெருமை தக்க விழைவின வென்க' என நச்சினார்க்கினியர் கூறிய உரை இங்கு நினைக்கத்தக்கதாகும். தருமத்துறை - அறச்செயல் வகைகள். ஏவர் - குற்றமே செய்வோர். ஏவம் - குற்றம். 'பவத்தால் இழிந் தோர் - இழிந்த பிறப்பினோர். பவம் - பிறப்பு. தா - வலி ; ஆற்றல். தவர் - தவஞ்செய்வோர் ; முனிவர்கள். 'உளர்' என்பதனைத் தரு மத்துறை மேவினர் உளர், தீமை திருத்தினர் உளர் என ஈரிடத்தும் கூட்டுக. திருத்துதல் - செய்தல். 'என்னை வாட்டம் திருத்துவதே' (திருக்கோவை; 12 ) எனவும்' மூவரும் திருத்திய திருத்துமத்திற லோன்' (1435) எனவும் வரும் தொடர்களில் திருத்துதல் என்பது செய்தல் என்னும் பொருளிற் பயின்றுள்ளமை இங்கு நோக்கத்தக்க தாகும். இனி, 'தீமை திருந்தினர்' என்ற பாடத்திற்குத் 'தீத்தொழி லில் முற்றினோர்' எனப் பொருளுரைக்க. திருந்துதல் - முற்றுதல் ; முதிர்தல். உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்னும் பாகுபாட்டிற்கு

உயிர்களின் பிறப்பு குலம் என்பன மட்டும் காரணங்கள் அல்ல எனவும், அவ்வவ்வுயிர்கள் மேற்கொண்டு புரியும் நன்றுந் தீதுமாகிய செயல் வகைகளே ஏற்புடைய காரணமாம் எனவும் இனிது விளக்கிய வாறு. (123)

4161. இனைய தாதலி னெக்குலத் தியாவர்க்கும்
வினையி னுல்வரு மேன்மையுங் கீழ்மையும்
அனைய தன்மை யறிந்து மழித்தனை
மனையின் மாட்சியென் ருன்மனு நீதியான்.

'இனையது ஆதலின், எக் குலத்து யாவர்க்கும்,
வினையினுல் வரும், மேன்மையும் கீழ்மையும்;
அனைய தன்மை அறிந்தும், அழித்தனை,
மனையின் மாட்சி' என்ருன் மனு நீதியான்.

பொ:—உண்மை இத்தன்மையதாதலின், எக்குலத்திற் பிறப்பினும் யாவரேயாயினும் (அவரவர் செய்யும் நலந் தீங்குகளாகிய) வினை காரணமாகவே உயர்வும் இழிவும் உளவாய்வரும். அத்தன்மையினை நீ தெளிவாக அறிந்திருந்தும் பிறன்மனையாளின் கற்பு மாண்பினைச் சிதைத்தனை என(த்தான் ஒறுத்தற்குக் காரணமாக வாலி செய்த பெருந் தீங்கினை) எடுத்துக் கூறினுன் மனு நீதியில் தவருத வனுகிய இராமன்.

கு:—'எக்குலத்து யாவர்க்கும் மேன்மையும் கீழ்மையும் வினையினுல் வரும்; அனையதன்மை அறிந்தும் மனையின் மாட்சி அழித்தனை' என்ருன், மனு நீதியான்' என இயையும். இராமன் இங்ஙனம் வாலியைத் தண்டித்தமையால் உலகம் உய்யத் தான் கடைப்பிடித்து ஒழுகும் மனுநீதியினின்றும் சிறிதும் வழுவினுனல்லன் என்று அறிவுறுத்துவார், அவனை 'மனுநீதியான்' எனக் குறித்தார் ஆசிரியர். எக்குலத்து யாவர்க்கும் மேன்மையும் கீழ்மையும் வினையினுல் வரும் எனவே, எல்லாவுயிர்களும் வினைவயத்தாற் பஞ்சபூத பரிணுமமாகிய உடம்பினைப் பொருந்தி நின்று வினைப்பயன்களை நுகரும் பிறப்பியல் பினுல் ஒரு தன்மையனவே என்பதும், அவ்வுயிர்கள் இவ்வுலகிற் பெறும் பெருமை சிறுமையாகிய உயர்வு தாழ்வுகட்கு, அவை செய்யும் நன்றும் தீதும் ஆகிய செயல் வகைகளே சிறப்புடைய காரணம் என்பதும் உணர்த்தியவாறு.

"பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும், சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்" (972)

எனவும்,

"பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்குந் தத்தங்
கருமமே கட்டளைக் கல்" (505)

எனவும் வரும் திருவள்ளுவர் வாய்மொழிகள் இங்கு ஒப்புநோக்கி யுணரத்தக்கன. (124)

## 'நேர் நின்று அம்பு எய்யாமல் மறைந்து நின்று அம்பு எய்தது எது கருதி' என வாலி இராமனை வினுதல்

4162. அவ்வுரை யமையக் கேட்ட
★ வரிகுலத் தரசு மாண்ட
செவ்வியோ யனைய தாக
செருக்களத் துருத்தெய் யாதே
வெவ்விய புளிஞ ரென்ன
விலங்கியே மறைந்து வில்லால்
எவ்விய தென்னை யென்ரு
னிலக்குவ னியம்ப லுற்ருன்.

அவ் உரை அமையக் கேட்ட
அரி குலத்து அரசு, 'மாண்ட
செவ்வியோய்! அனையது ஆக;
செருக்களத்து உருத்து எய்யாதே
வெவ்விய புளிஞர் என்ன,
விலங்கியே மறைந்து, வில்லால்
எவ்வியது என்னை?' என்ருன்;
இலக்குவன் இயம்ப லுற்ருன்.

பொ :—(இராமன் கூறிய) அம்மொழிகளை மனம் பொருந்தக் கேட்ட குரக்கினத்தரசனுகிய வாலி, 'மாண்புமிக்க நேர்மையுடைய வனே! (நின் செய்கை, குற்றம் புரிந்த என்னைத் தண்டித்தலாகிய) அத்தன்மையதாகுக. போர்க்களத்தில் (என் முன் நின்று) சினந்து அம்பினைத் தொடுக்காமல், கொடுமையுடைய வேடர் (மறைந்து நின்று விலங்கு பறவைகளின்மேல் அம்பெய்து கொல்வது) போன்று விலகி மறைந்து நின்று வில்லைக் கொண்டு (என்மேல்) அம்பினை எய்தது எது கருதி? என வினவினன்; (வாலி கேட்ட அவ்வினு விற்கு) இலக்குவன் மறுமொழி கூறத் தொடங்கினன்.

கு :—அவ்வுரை – 'குற்றம் உற்றிலேன்' எனக் கூறிய வாலிக்கு 'நீ செய்த குற்றம் இதுவாம்' என இராமன் கூறிய மறுமொழி-

அமையக் கேட்டல் - தன் மனத்திற்பதியும்படி கூர்ந்து கேட்டல். அரிகுலத்தரசு என்றது, வானர குலத்திற்கு வேந்தனாகிய வாலியை. அரி - குரங்கு. மாண்ட - மாட்சி பொருந்திய. செவ்வியோய் - நடுவு நிலைமையுடையவனே. செவ்வி - நேர்மை; நடுவுநிலைமை. உருத்தல்- வெகுளுதல். வெவ்விய - வெம்மையுடைய ; கொடிய. புளினர் - வேடர். எவ்வுதல் - ஏவுதல். மறைந்து நின்று எய்தல் வேடரது தொழில் என்பது, 'புதல் மறைந்து வேட்டுவன் புட்சிமிழ்த்தற்று' (திருக்குறள் - 274) என்பதனாற் புலனாம். இராமன், வாலியை நேர் நின்று அம்பெய்து கொல்லாமைக்கு அவன் யாவரிடத்தும் கொண்டுள்ள இயல்பாகிய கண்ணோட்டமே காரணம் எனவுணர்ந்த இலக்குவன், தன் தமையனது இயல்பாகிய புகழ்க் குணத்தை அவனே சொல்லும்படி வைத்தல் நாகரிகம் அன்றெனக் கருதி, வாலியின் வினாவுக்குத் தானே முன்வந்து மறுமொழி கூறத் தொடங்கினான் என்பதாம். (125)

### வாலியின் வினாவுக்கு இலக்குவன் விடை பகர்தல்

**4163.** முன்புநின் றம்பி வந்து
சரண்புக முறையி லோயைத்
தென்புலத் துய்ப்ப னென்று
செப்பினன் செருவி னீயும்
அன்பினை யுயிருக் காகி
யடைக்கல மியானு மென்றி
என்பது கருதி யண்ணன்
மறைந்துநின் றெய்த தென்றான்.

'முன்பு, நின் தம்பி வந்து
சரண்புக, முறை இல்லோயைத்
"தென் புலத்து உய்ப்பன்" என்று
செப்பினன்; செருவில் நீயும்
அன்பினை உயிருக்கு ஆகி,
"அடைக்கலம் யானும்" என்றி
என்பது கருதி, அண்ணல்
மறைந்து நின்று எய்தது' என்றான்.

பொ :—உன் தம்பியாகிய சுக்கிரீவன் (உன்னால் துன்புறுத்தப்பட்டு) முன்னமே வந்து (தன்னைச்) சரணடைந்தமையால் (தலைவனாகிய இராமன்) நீதியில்லாதவனாகிய நின்னைத் தென்திசையிலுள்ள

கூற்றுவனுலகிற் செலுத்துவேன் என (உன் தம்பிக்கு) உறுதிமொழி கூறினன். (தான் நின்னெடு நேர் நின்று போர்செய்யின்) போரில் நீ நின்னுயிரிற் பேரன்புடையையாகி (த் தன்னையடைந்து) 'யானும் உனக்கு அடைக்கலப் பொருளாவேன்' என்று கூறுவாய் என்பதை எண்ணியே பெரியோனுகிய இராமன் மறைந்து நின்று நின்மேல் அம்பு எய்தது என்று கூறினன் (இலக்குவன்).

கு:—நின் தம்பியாகிய சுக்கிரீவன் இராமனைச் சரணடைதற்குக் காரணமா யமைந்தது நீ செய்த முறையற்ற செயலேயாதலின் நீதி யொடுபடாத கொடியோனுகிய நின்னைக் கூற்றுவனுலகிற்கு அனுப்பு தலே தன்னைச் சரண்புக்க சுக்கிரீவனை உய்வித்ததாகும் எனத் தெளிந்தமையால் நின்னைக் கொன்றெழிப்பதாக இராமன் சுக்கிரீவ னுக்கு உறுதி கூறவேண்டிய இன்றியமையாமை நேர்ந்தது என் பான், 'நின் தம்பி முன்பு வந்து சரண்புக, முறை இல்லோயைத் தென்புலத்து உய்ப்பன் என்று செப்பினன்' என்ருன். பெரியோ னுகிய இராமன் நின்னைப் போரில் எதிர் நின்று கொன்றெழிக்க முன் வரின், அவனெடு எதிர்த்து நிற்கலாற்ருத நீ நின்னுயிர்மேல் வைத்த அன்பினல் உனது உயிரைக் காத்துக்கொள்ள எண்ணி, 'யான் உனக்கு அடைக்கலம்' என்று கூறி இராமனைத் தஞ்சமடை வாய். அந்நிலையில் தஞ்சமடைந்த உன்னைக் கொல்லுதலும் அற மாகாது. பெருந் தீங்கு புரிந்த உன்னைக் கொல்லாது விடுதலும் முறையாகாது. அது நின் தம்பிக்குக் கூறிய உறுதிமொழியில் தவறிய தாகவும் முடியும். ஆகவே மறைந்து நின்று நின்மேல் அம்பு செலுத்த வேண்டிய நிலைமை இராமனுக்கு உளதாயிற்று என விளக்குவான், 'செருவில் நீயும் உயிருக்கு அன்பினையாகி, 'யானும் அடைக்கலம்' என்றி என்பது கருதி அண்ணல் மறைந்து நின்று எய்தது' என இலக்குவன் வாலிக்கு மறுமொழி கூறினன் என்பதாம். தென்புலம்- தென்திசைக் கண்ணதாகிய இயமனுலகம். என்றி - என்று கூறு வாய்; முன்னிலையொருமை விகுதியாகிய இகரவீறு எதிர்காலம் உணர்த்தியது. (126)

### தன் குற்றம் உணர்ந்த வாலி இராமனைப் பணிந்து தான் செய்த குற்றங்களையெல்லாம் பொறுத்தருளுமாறு வேண்டுதல் 4164-4165

4164. கவிகுலத் தரசு மன்ன
கட்டுரை கருத்திற் கொண்டான்
அவியுறு மனத்த னுகி
யறத்திற னழியச் செய்யான்

புவியுடை யண்ண லென்ப
தெண்ணினன் பொருந்தி முன்னே
செவியுறு கேள்விச் செல்வன்
சென்னியி னிறைஞ்சிச் சொன்ஞன்.

கவி குலத்து அரசும் அன்ன
கட்டுரை கருத்தில் கொண்டான்;
அவியுறு மனத்தன் ஆகி,
'அறத்திறன் அழியச் செய்யான்
புவி யுடை அண்ணல்' என்பது
எண்ணினன்; பொருந்தி முன்னே
செவி யுறு கேள்விச் செல்வன்
சென்னியின் இறைஞ்சிச் சொன்ஞன்.

பொ :—(இளமைப் பருவமாகிய) முற்பருவத்திலேயே (பெரியோர் பலர் பக்கலிலும்) நற்பொருள்களைச் செவிமடுத்துணர்ந்த நூற் கேள்வியாகிய செல்வத்தினை யுடையவனும் குரக்கினத் தரசனும் ஆகிய வாலியும் (இலக்குவன் கூறிய) அத்தகைய பொருள் செறிந்த மொழியினைத் தன்னுள்ளத்திற் பதியும்படி ஏற்றுக்கொண்டான். (அதனல் கல்வியறி வொழுக்கங்களிற் சிறந்த பெரியோர்பால்) அடங்கியொழுகும் உள்ளத்தனுகி, 'உலகம் முழுதுமுடைய தலைவனுகிய இராமன் அறநெறியாகிய முறைமை கெட எதனையுஞ் செய்ய மாட்டான்' என்னும் உண்மையை எண்ணியவனுய் மனம் பொருந்தித் தலையினல் (இராமனை) வணங்கிப் பின்வருமாறு கூறினன்.

கு :—'முன்னே செவியுறு கேள்விச் செல்வன் (ஆகிய) கவிகுலத்தரசும்' என இயைத்துரைக்க. கவிகுலத்தரசும் அன்ன கட்டுரை கருத்திற் கொண்டான்; அவியுறுமனத்தன் ஆகி, எண்ணினன், சொன்ஞன் என இயையும். அவன் எண்ணியது, 'புவியுடை அண்ணல் அறத்திறன் அழியச் செய்யான்' என்பது. கவிகுலத்து அரசு என்றது வாலியை. அன்ன கட்டுரை - (இலக்குவன் கூறிய) அத்தகைய பொருள் செறிந்தமொழி. கருத்துட் கொள்ளுதல் - நன்றென மனத்துள் ஏற்றுக்கொள்ளுதல். 'இராமன் தன்னைச் சரண் புக்க சுக்கிரீவனுக்கு வாலியாகிய என்னைக் கொன்ருெழிப்பதாக முன்னமே உறுதி கூறியவன், என் முன்னின்று அம்பெய்து கொல்ல முற்படின் யானும் அவனைச் சரண் புகுதல் நிகழக்கூடியதேயாகும். அந்நிலையில் என்னை அடைக்கலமாக ஏற்றுக்கொள்ளுதல் நேரின் தான் முன் சுக்கிரீவனுக்குத் தந்த வாக்குறுதியில் தவறியதாகும் என்பது பற்றியே அவன் என் முன்னர் நில்லாது மறைந்து நின்று

அம்பெய்து கொல்லும் நிலையினன் ஆயினன்' என வாலி தன் மனத்தில் தெளிவாக உணர்ந்தமையால், உயர்வற வுயர்ந்த பெரியோனாகிய இராமனுக்கு முன்னே தான் பெருக்கமின்றி அடங்கியொழுகும் உள்ளத்தன் ஆயினன் என்பார், 'அவியுறுமனத்தனாகி' என்றார். அவிதல் - அடங்குதல். 'செவியுறு கேள்விச் செல்வன், அவியுறுமனத்தனாகி' என்ற தொடர்,

"செவியுறை தானே
பொங்குதல் இன்றிப் புரையோர் நாப்பண்
அவிதல் கடனெனச் செவியுறுத்தற்றே" (தொல்-செய். 114)

என வரும் செவியுறை யிலக்கணத்தினை அடியொற்றி யமைந்திருத்தல் அறியத்தக்கதாகும். (127)

4165. தாயென வுயிர்க்கு நல்கித்
தருமமுந் தகவுஞ் சால்பும்
நீயென நின்ற நம்பி
நெறியினி னோக்கு நேர்மை
நாயென நின்ற வெம்பா
னவையற வுணர லாமே
தீயன பொறுத்தி யென்றான்
சிறியன சிந்தி யாதான்.

'தாய் என உயர்க்கு நல்கி,
தருமமும், தகவும், சால்பும்,
நீ என, நின்ற நம்பி!
நெறியினின் நோக்கும் நேர்மை,
நாய் என நின்ற எம்பால்,
நவை அற உணரலாமே?
தீயன பொறுத்தி' என்றான்—
சிறியன சிந்தி யாதான்.

பொ :—எல்லாவுயிர்களுக்கும் தாய்போன்று வேண்டும் நலங்களை அருளி (அவ்வுயிர்கள் பற்றி யொழுகத்தக்க) அறமும் தகுதியும் நற்பண்புகளின் நிறைவும் (ஆகிய இவையாவும்) நீயேயென்று சொல்லுமாறு (பற்றுக்கோடாக) நின்ற ஆடவரிற் சிறந்த அழகனே! (அற நூல்கள் சொன்ன) நன்னெறியினையே குறிக்கொண்டு நோக்கியொழுகும் நேர்மையாகிய உயர்ந்த பண்பினை, நாய்போன்று இழிந்த நிலையினராகிய எம்மிடத்துக் குற்றமறக் காணுதல் கூடுமோ? (யான்

அறியாமையாற் செய்த) தீமைகள் எல்லாவற்றையும் பொறுத்தருள்வாயாக என (இராமனை) இரந்து வேண்டினான்; சிறுமைகளை என்றும் தன்னுள்ளத்துக் கருதாதவனாகிய வாலி.

கு:—உயிர்க்குத் தாயென நல்கி என இயைத்துரைக்க. தாயென - தாய்போன்று; என, உவமவுருபு. தகவு - தகுதி; நடுவு நிலைமை. அறம் நடுவு நிலைமை சால்பு இவையாவும் இராமனாகிய நின்னையே சார்பாகக் கொண்டு நிலைத்து நிகழ்தலால் நற்குணங்களாகிய அவற்றொடு நின்னிடையே சிறிதும் வேற்றுமையில்லை என்பான் 'தருமமும் தகவும் சால்பும் நீ என நின்ற நம்பி' என்றான். நம்பி, அண்மை விளி. நாயினைப்போன்று முன் நுகர்ந்தவற்றையே மீட்டும் நுகரும் இழிநிலையினேமாகிய எம்பால், அறநூல்களில் விதிக்கப்பெறும் நன்னெறியில் நின்றொழுகும் நேர்மைப் பண்பினை நும்மனோரிடத்துப் போன்று நீ குற்றமறக் காணுதல் பொருந்துமோ? என்பான், 'நெறியினின் நோக்கும் நேர்மை நாயென நின்ற எம்பால் நவையற உணரல் ஆமே?' என வினவினான். நவை அற - குற்றம் நீங்க. உணரல் - அறிதல்; ஈண்டுக் காணுதல் என்னும் பொருளில் வந்தது. பிறர் தனக்குச் செய்த நன்றல்லவற்றைச் சிறிதும் எண்ணாத தெளிந்த சிந்தையுடையான் வாலி என்பார், 'சிறியன சிந்தியாதான்' என்றார். சிறியன - துன்பந்தருவனவாகிய தீங்குகள். சிறுமை - துன்பம். இராமனால் தண்டிக்கப் பெற்ற வாலி பிறர் குற்றம் நோக்காது தன் குற்றத்தினைக் கண்டு நீக்கவல்ல தகவுடைய தூய சிந்தையன் ஆயினான் என்பார், 'சிறியன சிந்தியாதான் தீயன பொறுத்தியென்றான்' என்றார். தீயன என்றது, பிறன்மனையாளை வலிதிற் கொண்டமையும் தஞ்சமடைந்த தம்பியைத் துன்புறுத்தினமையும் ஆகத் தான் செய்த தீமைகளை. (128)

## வாலி, தனக்கு மெய்யுணர்வருளிய இராமனைப் போற்றி வரம் வேண்டுதல் 4166-4172

**4166.** இரந்தனன் பின்னு மெந்தை
யாவது மெண்ண றேற்றாக்
குரங்கெனக் கருதி நாயேன்
கூறிய மனத்துக் கொள்ளேல்
அரந்தைவெம் பிறவி யென்னோய்க்
கருமருந் தனைய வையா
வரந்தரு வள்ளா லொன்று
கேளென மறித்துஞ் சொல்வான்.

இரந்தனன் பின்னும்; 'எந்தை!
யாவதும் எண்ணல் தேற்ருக்
குரங்கு எனக் கருதி, நாயேன்
கூறிய மனத்துக் கொள்ளேல்;
அரந்தை வெம் பிறவி என் நோய்க்கு
அரு மருந்து அனைய ஐயா!
வரம் தரும் வள்ளால்! ஒன்று
கேள்' என மறித்தும் சொல்வான்:

பொ:—(வாலி) பின்னும் (இராமனை) இரந்து வேண்டுபவனாய், 'எந்தையே! (நன்றிது தீதிது என) எதனையும் எண்ணுதற்கு அறியாத (இழிந்த பிறப்பினதாகிய) குரங்கு என்று (எனது இயல்பினை நின் திருவுளத்திற்) கருதி, நாய்போற் கடைப்பட்டவனாகிய எளியேன் (நின்னைக் குறித்துச்) சொல்லிய கடுஞ் சொற்களை நின் மனத்திற் கொள்ளாது (மறந்து) விடுவாயாக. துன்பத்தைச் செய்யும் கொடிய பிறவியெனப்படும் (தீராத) நோய்க்கு அரிய நன்மருந்தென வந்து வாய்த்த தலைவனே! (அன்பராயினர் வேண்டும்) வரங்களை (அவர் வேண்டியவாறு) அருளவல்ல வள்ளலே! (யான் நின்பால் வேண்டுவதாகிய விண்ணப்பம்) ஒன்றினையும் கேட்டருள்வாயாக' என்று கூறி மீட்டும் கூறுவானாயினன்.

கு:—இரந்தனன் - இரந்து; முற்றெச்சம், எண்ணல் தேற்ரு - எண்ணுதலை அறியாத. தேற்றல் - தெளிதல்: அறிதல். ஒரு நிலையில் மனம் பற்றி நின்று நல்லது இது, தீயது இது என எதனையும் பகுத்துணர்ந்து கொள்ளும் அறிவில்லாத இழிந்த பிறப்பினதாகிய குரங்கு என எனது இயல்பாகிய விலங்கியல்பினை எண்ணி; யான் நின்னைக் குறித்துக் கூறிய பழி யுரைகளை நின் மனத்திற் கொள்ளற்க என வேண்டுவான், 'யாவதும் எண்ணல் தேற்ருக்குரங்கு எனக் கருதி, நாயேன் கூறிய மனத்துக் கொள்ளேல்' என்ருன். கூறிய - கூறியனவாகிய சொற்கள். அரந்தை - துன்பம். பிறவியென்னோய் - பிறவியெனப்படும் தீராத நோய். மருந்தினால் தீரும் ஏனைய நோய்களோடு இதற்குள்ள வேற்றுமை பெரிதென்பான் பிறவியென்னோய் என்ருன். நோய்க்கு மருந்து, அருமருந்து எனத் தனித் தனி இயையும். நோய்க்கு மருத்து - நோய் தீர்க்கும் மருந்து; நான்காம் வேற்றுமையுருபு பகைப்பொருளில் வந்தது. அருமருந்து - யாவராலும் எளிதில் முயன்று பெறுதற்கு அரியமருந்து. (129)

4167. ஏவுகூர் வாளியா லெய்துநா யடியனேன்
★ ஆவிபோம் வேலைவா யறிவுதந் தருளினாய்

மூவர்நீ முதல்வனீ முற்றுநீ மற்றுநீ
பாவநீ தருமநீ பகையுநீ யுறவுநீ.

'ஏவு கூர் வாளியால் எய்து, நாய் அடியனேன்
ஆவி போம் வேலை வாய், அறிவு தந்து அருளினை;
மூவர் நீ! முதல்வன் நீ! முற்றும் நீ! மற்றும் நீ!
பாவம் நீ! தருமம் நீ! பகையும் நீ! உறவும் நீ!'

பொ:—'(வில்லில் தொடுத்துச்) செலுத்தப்படும் கூரியஅம்பினால் (என்னை) எய்து, நாய்போற் கடைப்பட்டேனாகிய அடியேனது உயிர் (உடம்பை) விட்டு நீங்கும் பொழுதின்கண் மெய்யுணர்வாகிய ஞானத்தை (அடியேற்கு) வழங்கியருளினாய். (படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழில் இயற்றும்) மும்மூர்த்திகளும் நீயே. (அம்மூவர்க்கும் மேலோனாகிய) முழுமுதற் கடவுளும் நீயே. (உலகிற் காணப்படும் இயங்குவன நிற்பனவாகிய) பொருள்கள் முழுவதும் நீயே. (அறியப்படாத) ஏனைப் பொருள்களும் நீயே. தீவினைப் பயனாகிய பாவமும் நீயே. நல்லறப் பயனாகிய புண்ணியமும் நீயே. பகைவனும் நீயே. உறவினனும் நீயே.'

கு:—ஏவுதல் - செலுத்துதல். வாளி - அம்பு. என்பாற் குற்றம் கண்டு அம்பினால் ஒறுத்தனையாயினும், எனது உயிர் உடலை விட்டுப் பிரிதற்கு முன்னரே நின் பேரருளால் அடியேற்கு மெய்யுணர்வை வழங்கியருளினாய் என்பான், 'ஏவு கூர் வாளியால் எய்து, நாயடியனேன் ஆவிபோம் வேலைவாய் அறிவு தந்தருளினாய்' என்றான். நாயானது தன்னையுடையான் ஒறுத்த காலத்தும் வேறு சார்பு நாடாது அவனையே அன்பினால் தொடர்வது போன்று, அடியேனும் உடையானாகிய நீ என்னை வெகுண்டு ஒறுத்த இந்நிலையிலும் பிறிதோர் சார்பு வேண்டாது உன்னையே பற்றி நிற்கும் இயல்புடையேனாயினேன் என்பான், 'நாயடியனேன்,' என்றான். 'எறிந்த வேல் மெய்யதா வால்குழைக்கும் நாய்' (நாலடி - 213.) என்பது இங்கு நினைக்கத்தக்கது. இவ்வாறு அழித்தலையும் அருளலையும் ஒருங்கு புரிந்த இராமனாகிய நீ, இவ்வுலகினைப் படைத்தளித்தழிக்கும் மும்மூர்த்திகளாகத் திகழும் இயல்பினையுடையாய் என்பான், 'மூவர் நீ' என்றும், அம்மூவரும் தமக்கென ஒவ்வொரு தொழிலே பெற்றுடையராதலின் முத்தொழில்களையும் ஒருங்குடைய நீ அம்மூவர்க்கும் முதல்வனாகிய முழுமுதற் கடவுளே எனத் தெளிந்தேன் என்பான், 'முதல்வன் நீ' என்றும், உயிர்கள் செய்யும் குற்றங்களை உள்ளிருந்தும் உடனிருந்தும் போக்கி நலஞ் செய்யும் அருளாளனாகிய நீ, காணப்படும் உலகப் பொருள்களும் காணப்படாத ஏனைப் பொருள்களும் ஆகிய எல்லாவற்றோடும் பிரிவின்றிக் கலந்துள்ளாய் என்பான்,

'முற்றும் நீ மற்றும் நீ' என்றும் கூறினன். உயிர்கள் செய்த தீவினைப் பயனைச் செய்த உயிரே நுகரச்செய்யும் நிலையிற் பாவமாக வும், நல்லறப் பயனை நுகரச் செய்யும் நிலையிற் புண்ணியமாகவும் உருக்கொண்டு வந்து நுகர்விப்பவன் இறைவனாகிய நீயே என்பான், 'பாவம் நீ, தருமம் நீ' எனப் பகர்ந்தான். பாவம் - தீவினைப்பயன். தருமம் என்றது நல்வினைப் பயனாகிய புண்ணியத்தை. குற்றமாகிய தீவினையாளரிடத்து வெகுளியும் கோட்டமும் கொண்டு பகைவன் எனவும், குணமாகிய நல்லறமுடையாரிடத்து அருளும் செம்மையும் கொண்டு உறவினன் எனவும் நின்று, முறையே அவர்களை ஒறுத்துத் திருத்தியும் விரும்பித் தலையளித்தும் உய்வித்தல் இறைவனது அரு ளின் நீர்மையாதலின், அவ்விரு நிலைமையும் ஒருங்குடைய இராம னைப் 'பகையும் நீ உறவும் நீ' எனப் பரவிப் போற்றினன் வாலி. இறைவன் பகையாய் வருதலும் உயிர்களை ஒறுத்து உறவுகொண்டு அருள் செய்தற் பொருட்டே என்பது, 'பகையும் நீ உறவும் நீ' என் புழி முதலிற் பகையையும் முடிந்த பயனாக உறவினையும் குறித்தலாற் புலனாம். (130)

4168. புரமெலா மெரிசெய்தோன்
முதலினோர் பொருவிலா
வரமெலா முருவியென்
வசையிலா வலிமைசால்
உரமெலா முருவியென்
னுயிரெலா நுகருநின்
சரமலாற் பிறிதுவே
றுளதரோ தருமமே.

'புரம் எலாம் எரி செய்தோன் முதலினோர் பொருவு இலா
வரம் எலாம் உருவி, என் வசை இலா வலிமை சால்
உரம் எலாம் உருவி, என் உயிர் எலாம் நுகரும் நின்
சரம் அலால், பிறிது வேறு உளது அரோ தருமமே?'

பொ :—'முப்புரங்கள் முழுவதனையும் எரித்து நீருக்கிய சிவபெரு மான் முதலிய கடவுளர்கள் (எனக்கு) அளித்த ஒப்பற்ற வ்ரங்கள் எல்லாவற்றையும் (சிதைத்து) ஊடுருவி, எனது பழிப்பில்லாத வன்மை நிறைந்த மார்பு முழுவதையும் துளைத்துச் சென்று எனது உயிராற்றல் அனைத்தையும் (எஞ்சாது) உண்ட நின்னுடைய அம் பினையன்றி அறம் என்பது வேருகத் தனித்துள்ளதோ ?'

கு :—நீ எய்த அம்பு, சிவபெருமான் முதலிய கடவுளரிடம் யான் பெற்றுள்ள சிறந்த வரங்களையும் எனது பெருவன்மை வாய்ந்த மார் பினையும் துளைத்து என்னுயிரைக் கவர்ந்தமையால் வெறும் அம்பு என்ற அளவிலமைந்த எளிய படையன்றென்றும், நீதி நெறியிற் பிழைத்தோரைக் கொல்லுமியல்புடைய அறக் கடவுளின் வடிவமே அஃதென்றும் தெளிந்து கொண்டேன் என்பான், 'வரமெலாம் உருவி, உரமெலாம் உருவி என் உயிரெலாம் நுகரும் நின் சரமலால் தருமம் வேறு பிறிது உளதரோ' என்றான். உருவுதல் - துளைத்துச் செல்லுதல். சரம் - அம்பு. அரோ - அசை.

இச்செய்யுளின் பின் 41, 46 முதலிய அச்சுப் பிரதிகள் சிலவற்றி லும் சில ஏட்டுச் சுவடிகளிலும்

4168. (a) மாவலச் சூலியார் வாழ்த்துநர்க் குயர்வரம்
ஓவலற் றுதவனின் ஞெருதனிப் பெயரியம்
பாவலிப் புடைமையா லாகுமப் பொருளையாம்
தேவநிற் கண்டவெற் கரிதெனோ தேரினே.

என்ற பாடல் காணப்படுகின்றது. இப்பாடல் 1, 2, 4, 12, 13, 16-19, 22, 23, 26-29, 31, 39, 40, 43, 44, 45, 56, 58, 59 ஆகிய சுவடிகளில் இல்லை. வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியார் அவர்களும் 'இச் செய்யுள் பல ஏட்டுப் பிரதிகளில் இல்லை' எனக் குறித்துள்ளார்கள். அண்மையில் வெளிவந்த 45, 52-ஆம் எண்ணுள்ள பதிப்புக்களில் இச்செய்யுள் மிகைப் பாடலாகக் குறிக்கப்பட்டுளது. இச்செய்யுள் இதன் முன்னும் பின்னும் உள்ள செய்யுட்களோடு பொருள் தொடர் புடையதாகவும் அமையவில்லை. ஆகவே இச்செய்யுள் பிற்காலத்தா ராற் பாடி நுழைக்கப்பட்ட இடைச் செருகல் என்பது நன்கு துணியப் படும். (131)

**4169.** யாவரும் மெவையுமா
யிருதுவும் பயனுமாய்ப்
பூவுநல் வெறியுமொத்
தொருவரும் பொதுமையாய்
யாவனீ யாவதென்
றறிவிஞ ரருளினர்
தாவரும் பதமெனக்
கருமையோ தனிமையோய்.

"யாவரும் எவையும் ஆய், இருதுவும் பயனும் ஆய்,
பூவும் நல் வெறியும் ஒத்து ஒருவ அரும் பொதுமையாய்!
'யாவன் நீ யாவது' என்று அறிவினர் அருளினர்;
தாவு அரும் பதம் எனக்கு அருமையோ? தனிமையோய்!"

பொ:—'ஒப்பற்ற தனி முதல்வனே! உயர்திணை யுயிர்களாகியும் அஃறிணைத் தொகுதியாகியும் பருவங்களாகியும் (வினைபொருள்களாகிய) நற்பயன்களாகியும் பூவும் (அதன் உள்ளிருந்தெழும்) நறுமணமும் போன்று பிரித்தறிய வொண்ணாத பொதுமை நிலையில் யாண்டும் கலந்து விளங்கும் இயல்புடையவனே! நீ யாவன் என்றும் (நின்னியல்பு) எத்தகைய தென்றும் (நின்னருளால் என்னுள்ளே தோன்றிய) நல்லறிவு எனக்கு விளங்க அறிவுறுத்தியருளியது. (இங்ஙனம் நின்னறிவினாற் கண்டறிந்த பின்னரும்) கெடுதலில்லாத வீடு பேற்றின்பம் எனக்குக் கிடைத்தற்கு அரியதாகுமோ?'

கு:—யாவரும் என்றது, மனவுணர்வுடைய மக்கள் தேவர் முதலிய உயர்திணையுயிர்களை. எவையும் என்றது, ஓரறிவுயிர்முதல் ஐயறிவுயிர் வரையுள்ள மனவுணர்வில்லாத உயிர்களும் உயிரில் பொருள்களும் ஆகிய அஃறிணைத் தொகுதியை. இருது என்றது, கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்னும் அறுவகைப் பெரும்பொழுதாகிய காலப் பகுதியினை. பயன் என்றது அவ்வப் பருவங்களில் விளையும் நுகர்பொருள்களை. இறைவனாகிய நீ உயிருடையன உயிரில்லன ஆகிய எல்லாப் பொருள்களோடும் நீக்கமறக் கலந்து விளங்குகின்றாய் என்பான், 'யாவரும் எவையுமாய் இருதுவும் பயனுமாய்' என்றான். "யாவரும் எவையுந்தானாய்" (திவ்யப் - 2939) எனவரும் திருவாய்மொழிப் பொருள் இங்கு நினைக்கத்தக்கதாகும். மலரகத்தே உள்ளிருந்தெழும் நறுமணம், அம்மலருமாகாது மலரின் வேறுமாகாது அதனோடு ஒற்றித்து நிற்றல்போன்று, இறைவனாகிய நீ உயிர்களும் ஆகாமல் உயிர்களின் வேறும் ஆகாமல் எங்களோடு உயிர்க்குயிராய் உடன் நின்று எவ்வுயிர்க்கும் நல்லுணர்வளித்து உதவிபுரியும் நடுவுநிலையாகிய செம்மை நிலையில் திகழ்கின்றனை என்பான், 'பூவும் நல்வெறியும் ஒத்து ஒருவரும் பொதுமையாய்' எனப் போற்றினான். வெறி - மணம். ஒருவ அரும் - நீக்குதற்கு அரிய. பொதுமை - எவ்வுயிர்க்கும் நடுவாய் நின்று உதவும் தன்மை. 'உற்ற ஆக்கையின் உறுபொருள், நறுமலர் எழுதரு நாற்றம் போற் பற்றலாவதோர் நிலையிலாப் பரம்பொருள்' (திருவாசகம் - அதிசயப்பத்து. 9) என மெய்ப்பொருளை யுணர்ந்தோர்கூறும் அநுபவவுரை இங்கு ஒப்புநோக்கி யுணரத்தக்கதாகும். என்னுடன் பகைமை நிலையில் வந்த இராமனாகிய நீ யாவன் என்றும், நினக்கு எக்காலத்தும் மாறுதுளதாகிய உண்மையியல்பு எத்தகையதென்றும்

நினது அருள் நோக்கால் என்னுள்ளே தோன்றிய மெய்யுணர்வு எனக்கு விளங்க அறிவுறுத்தியது என்பான், 'யாவன் நீ யாவது என்று அறிவினர் அருளினர்' என்றான். இறைவனருளால் தன் கண் தோன்றிய நன்ஞானமாகிய அறிவினை 'அறிவினர்' என உயர்திணையாக்கி உயர்த்துக் கூறினன். தாவுஅரும்பதம் - கெடுதல் இல்லாத பதவி; என்றது, பரமபதமாகிய வீடு பேற்றினை. எப்பொருளுமாகி அவற்றின் வேறுமாகி விளங்கும் நின் இறைமைத் தன்மையை நின்னருளால் என்கண் தோன்றிய மெய்யுணர்வு எனக்கு அறிவுறுத்த உணர்ந்து கொண்டேன் ஆதலால் இனி எனக்கு ஈறிலாப் பேரின்ப வாழ்வாகிய வீடுபேறு எளிதிற் கிடைத்தல் உறுதி என வாலி இராமனை நோக்கி உவந்து கூறினன் என்பதாம். (132)

4170. உண்டெனுந் தருமமே
யுருவமா யுடையநிற்
கண்டுகொண் டேனினிக்
காணவென் கடவெனோ
பண்டொடின் றளவுமே
யென்பெரும் பழவினைத்
தண்டமே யடியனேற்
குறுபதந் தருவதே.

'உண்டு எனும் தருமமே உருவமாய் உடைய நிற்
கண்டு கொண்டேன்; இனிக் காண என் கடவெனோ?
பண்டொடு இன்று அளவுமே என் பெரும் பழவினைத்
தண்டமே, அடியனேற்கு உறு பதம் தருவதே.'

பொ:—'(என்றும் அழியாததாய்) உள்ளது என மெய்ந்நூல்கள் கூறும் அறத்தினையே திருமேனியாகக் கொண்டு தோன்றிய (பரம் பொருளாகிய) நின்னை (என் கண்களார)க் கண்டு கொண்டேன். (அறத்தின் மூர்த்தியாகிய நின்னைக் கண்ட பின்பு) இனிப் பிறிதொன்றைக் காணுதற்கு என்ன தொடர்புடையேன்? (யான் பிறவியுட்பட்ட) பண்டு முதல் இன்றுவரை என்னாற் செய்யப்பட்டு முதிர்ந்த பெரிய பழைய தீவினையின் பொருட்டு நீ செய்த இத்தண்டனையே அடியேனுக்கு (எல்லாவின்பங்களினும்) மிக்கதாகிய (வீடுபேறென்னும்) பெரும்பதத்தைத் தருவதாகும்.'

கு:—'அறம் என்பதோர் பெரும் பொருள் உண்டு' என மெய்ந்நூல்களில் உணர்த்தப்பட்டு எம்போலியர்களால் உருவறியப்படாத

பிழம்பில் பொருளாகிய அறமானது, இராமனாகிய நின்னையே தனக்குரிய வடிவமாகக்கொண்டு இவ்வுலகில் நிலைபெற்றது என்பதனையும், அறத்தின் மூர்த்தியாகிய தனிமுதல்வன் நீயே என்பதனையும், நின்னருளால் அடியேன் தெளிவாகக் கண்டு என்னுள்ளத்திற் பதிவித்துக்கொண்டேன் என்பான், 'உண்டு எனும் தருமமே உருவமாய் உடைய நிற்கண்டு கொண்டேன்' என்றான். யாதொரு பொருளையறிந்தால் எல்லாப் பொருள்களையும் அறிந்ததாகுமோ அத்தகைய உயர்வறவுயர்ந்த தனிமுதற் பொருளாகிய நின்னைக் காணப்பெற்ற யான், இனி நின்னைநோக்க எத்துணையும் தாழ்ந்த உலகப் பொருள்களைச் சுட்டிக்காணும் சிறுமையுடையேன் அல்லேன் என்பான், 'நிற்கண்டு கொண்டேன், இனிக் காண என்கடவேனோ?' என்றான்.

'அண்டர்கோன் அணியரங்கன் என்னமுதினைக்
கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே' (திவ்யப்-936)

என வரும் திருப்பாணாழ்வார் அருளிச் செயல் இங்கு நினைக்கத்தக்கதாகும். நீ எனக்குச் செய்த இத்தண்டனையே, பல பிறவிகளிலும் என்னால் ஈட்டப்பட்டு முதிர்ந்த பழைய வினைத் தொகுதியனைத்தையும் ஒரு நொடியிற் போக்கி மேலாகிய வீடுபேற்றின்பத்தை அடியேற்கு வழங்கியது என்பான், 'பண்டொடு இன்றளவுமே என் பெரும்பழவினைத் தண்டமே அடியனேற்கு உறுபதம் தருவதே' என்றான். தண்டமே என்புழி ஏகாரம் தேற்றம். உறுபதம் - மிக்க பதம்; வீடுபேறு. இறைவன் உயிர்கட்குச் செய்யும் தண்டனையும் அம் முதல்வன் உயிர்கள்மேல் வைத்த பரிவினால் நிகழும் அருளின் செயலே என்பதனைத் தெளியவுணர்ந்தோர் இறைவன் தரும் அத்தண்டனையையே தாம் பெறுதற்குரிய பேரின்பமாக விரும்பி ஏற்றுக்கொள்ளும் கருத்தினராவர் என்பது, "உடையாய் கூவிப் பணிகொள்ளாது ஒறுத்தால் ஒன்றும் போதுமே" (திருவாசகம்-குழைத்தபத்து-3) என வரும் திருவருட் செல்வர் அநுபவ வாய்மொழியால் இனிதுணரப்படும். (133)

4171. மற்றினி யுதவி யுண்டோ
★ வானினு முயர்ந்த மானக்
கொற்றவ நின்னை யென்னைக்
கொல்லிய கொணர்ந்து தொல்லைச்

சிற்றினக் குரங்கி ஞேடுந்
தெரிவுறச் செய்த செய்கை
வெற்றர செய்தி யெம்பி
வீட்டர செனக்கு விட்டான்.

'மற்று இனி உதவி உண்டோ?
வானினும் உயர்ந்த மானக்
கொற்றவ! நின்னை, என்னைக்
கொல்லிய கொணர்ந்து, தொல்லைச்
சிற்றினக் குரங்கிஞேடும்
தெரிவு உறச் செய்த செய்கை,
வெற்று அரசு எய்தி, எம்பி,
வீட்டு அரசு எனக்கு விட்டான்.'

பொ:—'விசும்பின் எல்லையினையும் கடந்து உயர்ந்த பெருமையினையுடைய வெற்றி வேந்தனே! என் தம்பி (சுக்கிரீவன்) என்னைக் கொல்லுதற்பொருட்டு உன்னை அழைத்துக்கொண்டு வந்து, தொன்று தொட்டுச் சிறுமையுடையதாய் வரும் இனத்திற் பிறந்த குரங்கிஞேடு தன்னையும் ஒப்பவைத்து எண்ணும்படி செய்த தன் செயலால், பெறுபயனில்லாத (வானர குலத்தின்) அரசாட்சியை(த் தான்) பெற்று, (வானோர்க்கும் உயர்ந்த உலகாகிய) வீட்டுலக அரசாட்சியை எனக்கு வழங்கினன்; (உடன் பிறந்தானுகிய அவன்) இதன் மேலும் எனக்குச் செய்யக்கடவதாகிய பேருதவி பிறிதொன்றுளதோ? (இல்லை).'

கு:—'வானினும் உயர்ந்த மானக் கொற்றவ! எம்பி, என்னைக் கொல்லிய நின்னைக் கொணர்ந்து, தொல்லைச் சிற்றினக் குரங்கிஞேடும் தெரிவுறச் செய்த செய்கை(யால்) வெற்றரசு (தான்) எய்தி, எனக்கு வீட்டரசு விட்டான்; இனி மற்று உதவி உண்டோ?' என இயையும். வெற்றிவேந்தனுகிய நினது பெருமை, எல்லாப் பொருள்களுக்கும் விரிந்து இடங்கொடுக்கும் இயல்பினதாகிய விசும்பின் எல்லையையுங் கடந்து மேற்பட்டு உயர்ந்தது என்பான், 'வானினும் உயர்ந்த மானக் கொற்றவ' என அழைத்தான். மானம் - பெருமை. மேல் விளைவதறியும் நல்லறிவும் மனவொருமையும் இன்றித் திரியும் சிறுமையினைத் தொன்று தொட்டு மாருது பெற்றுடையது குரங்கின் இனம் என்பான், 'தொல்லைச் சிற்றினக் குரங்கு' என்ருன். அமரர் நாடாளும் அரசுரிமையை வழங்கவல்ல அருள் வேந்தனுகிய நின்னைக் காணப்பெற்ற நிலையிலும், நின்னுற் பெறத்தக்க பெருஞ்செல்வப் பேற்றினைச் சிறிதும் எண்ணுது வானர

குலத்தின் தலைமைப் பதவி யொன்றையே விரும்பி வேண்டிய சுக்கிரீவனது செயல், தொன்று தொட்டுப் பழமையுடையதாய்த் தொடர்ந்துவரும் குரங்கின் செய்கையுடன் ஒப்பவைத்து எண்ணத் தக்கதாயிற்று என்பான், 'தொல்லைச் சிற்றினக் குரங்கினோடுந் தெரிவுறச் செய்த செய்கை' எனக் குறித்தான். இம்மை மறுமை அம்மையென்னும் மும்மை நலங்களையும் ஒருங்கே அளித்தருளவல்ல பெரியோனாகிய உன்னை, என்னைக் கொல்லுதலாகிய இச்சிறிய தொழிலின் பொருட்டு அழைத்துக்கொண்டு வந்த என் தம்பி இச் செயலாற் பெரும்பயனில்லாத குரங்கினத்தின் ஆட்சியுரிமையாகிய அரச பதவியைத் தான் அடைந்து, உயர்வறவுயர்ந்த தனி முதல் வனாகிய நின்பாற் பெறத்தக்க அந்தமில் இன்பத் தரசபதவியாகிய வீடு பேற்றினைத் தன் தமையனாகிய எனக்கு எளிதிற் கிடைக்கும்படி செய்துதவினான்; தம்பியொருவன் தன் தமையனுக்குச் செய்யும் பேருதவியாக இதனைக் காட்டிலும் மிக்கது வேறொன்றில்லை என்பான், 'எம்பி நின்னைக்கொணர்ந்து வெற்றரசு (தான்) எய்தி, எனக்கு வீட்டரசு விட்டான்; இனி மற்று உதவியுண்டோ?' என்றான். கொல்லிய - கொல்ல; செய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். எம்பி - என் தம்பி; என்றது சுக்கிரீவனை. விடுதல் - முற்றுரிமையாக வழங்குதல். உண்டோ என்புழி ஓகாரம் எதிர்மறை. சிறியன சிந்தியாதானாகிய வாலி, தன் தம்பி சுக்கிரீவன்பால் வைத்த பேரன் பினால் குற்றத்தையும் குணமெனக் கொண்டு பாராட்டிய திறம் கற்போர் உள்ளத்தை உருக்குவதாகும். (134)

4172. ஓவிய வுருவ நாயே
னுளதொன்று பெறுவ துன்பால்
பூவிய னறவ மாந்திப்
புந்திவே றுற்ற போழ்திற்
றீவினை யியற்று மேனு
மெம்பிமேற் சீறி யென்மே
லேவிய பகழி யென்னுங்
கூற்றினை யேவ லென்றான்.

'ஓவிய உருவ! நாயேன்
உளது ஒன்று பெறுவது உன்பால்;
பூ இயல் நறவம் மாந்தி,
புந்தி வேறு உற்ற போழ்தில்,

தீவினை இயற்று மேனும்,
எம்பிமேல் சீறி, என் மேல்
ஏவிய பகழி என்னும்
கூற்றினை ஏவல்' என்றான்.

பொ :—(அழகுற வரையப்பெற்றதோர்) சித்திரம் (வடிவுபெற்று வந்தாற்) போலும் அழகிய திருமேனியுடையவனே! நாய்போலும் சிறுமையுடையேனாகிய அடியேன் (தலைவனாகிய) நின்னிடத்து வேண்டிப் பெறுவதொரு வரம் உளது. என்னுடைய தம்பி (சுக்கிரீவன்) பூக்களில் விளைந்த தேறலைப் பருகி அறிவு திரிந்த நிலைமைக்கண் தீமையுடைய செயலினை (நின்கண்) செய்வானா யினும், என்மேற் சினந்து ஏவிய அம்பு என்னும் கூற்றினை அவன் மேல் வெகுண்டு எய்யாது தவிர்வாயாக என வேண்டினான் (வாலி).

கு :—'ஓவிய உருவ! நாயேன் உன்பால் பெறுவது ஒன்றுளது; எம்பி, நறவம் மாந்திப் புந்தி வேறுற்ற போழ்தில் தீவினை இயற்று மேனும், என்மேல் சீறி ஏவிய பகழியென்னும் கூற்றினை எம்பிமேற் சீறி ஏவல்' என்றான் என இயையும். ஓவியம் - எழுத்துருவில் அமைந்த சித்திரம். வரிவடிவாகிய சித்திரமே தனக்கென ஓர் உருவமும் செயலும் பெற்று வந்தாற்போலும் பேரழகு வாய்ந்தது இராமனது திருமேனி என்பான், அவனை 'ஓவிய உருவ' என அழைத்தான். நறவம் - தேறல்; கள். மாந்துதல் - நிறையப் பருகுதல். புந்தி - அறிவு. வேறுறல் - திரிதல். ஈண்டுத் தீவினை யென்றது, நன்றி மறத்தலாகிய தீய செயலை. இயற்றுமேனும் - செய்வானாயினும்; உம்மை எதிர்மறை; தீவினை செய்யான் என்பது பட நின்றது. சீறி - சினந்து; என்மேற் சீறி, எம்பிமேற் சீறி என ஈரிடத்தும் இயைந்து நின்றமையால் இடைநிலை விளக்கு என்னும் அணியாகும். பகழி - அம்பு. நின் கையிலுள்ள அம்பு வடிவினால் அம்பெனத் தோன்றினும் அது செயலாற் கூற்றுவனே என்பதனைத் தெளியவுணர்ந்தேன் என்பான், 'பகழியென்னும் கூற்று' என்றான். ஏவல் - செலுத்தாதொழிக. அல்விகுதி வியங்கோள் எதிர்மறைக் கண் வந்தது. அறத்தின் மூர்த்தியாகிய இராமனால் ஒறுக்கப்பட்டுத் தன் உயிர் பிரியும் நிலையிலும், அப்பெருமான்பால் தனக்கென ஒன்றும் வேண்டாது, தன்னைக் கொல்வித்த தம்பியைக் குற்றம் நீக்கிப் பாதுகாத்தல் வேண்டும் என இரந்து வேண்டிய வாலியின் செயல், இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யும் அவனது சால்பினை இனிது புலப்படுத்தல் காணலாம். (135)

## வாலி மற்றும் ஒருவரம் வேண்டுதல்

4173. இன்னுமொன் றிரப்ப துண்டா
லெம்பியை யும்பி மார்கள்
தன்முனைக் கொல்வித் தானென்
றிகழ்வரேற் றடுத்தி தக்கோய்
முன்முனே மொழிந்தா யன்றே
யிவன்குறை முடிப்ப தையா
பின்னிவன் வினையின் செய்கை
யதனையும் பிழைக்க லாமோ.

‘இன்னும் ஒன்று இரப்பது உண்டால்;
எம்பியை உம்பிமார்கள்
“ தன்முனைக் கொல்வித்தான் ” என்று
இகழ்வரேல், தடுத்தி, தக்கோய்!
முன் முனே மொழிந்தாய் அன்றே,
இவன் குறை முடிப்பது ? ஐயா !
பின் இவன் வினையின் செய்கை
அதனையும் பிழைக்கல் ஆமோ ?’

பொ :—மேலும் யான் நின்பால் வேண்டிப் பெறத்தக்கதொரு வரம் உளது. (அஃதாவது) உன்னுடைய தம்பிமார்கள், என் தம்பியைக் குறித்து ‘இவன் தன் தமையனைக் கொல்வித்த கொடியோன்’ என்று இகழுங் கருத்தினராயின் (அங்ஙனம் இகழாதவாறு அவர்களைத்) தடுத்தருள்வாயாக. ஐயனே, (என் தம்பியாகிய) இவனது குறையை முடித்து வைப்பதாக முன்னமே இவனுக்கு உறுதி கூறியுள்ளாய் அல்லையோ ? (அவ்வுறுதிமொழியை நீ நிறைவேற்றிய) பின்பு இச் சுக்கிரீவன் (நினக்குச்) செய்தற்குரிய ஆற்றல்மிக்க அச் செயலையும் தவறவிடலாமோ ?

கு :—என் தம்பி சுக்கிரீவனது செயல் எத்தகையதாயினும் அதற்கு அவன் மட்டும் பொறுப்பாளியல்லன்; அச் செயலைச் செய்வித்துக்கொண்ட யானும் அதற்குக் காரணமாவேன் ஆதலால், என்னைக் கொல்வித்தான் என்னும் பழி என் தம்பியைச் சார்தல் பொருந்தாதாகவும், சிறந்த பேரன்பினராகிய உன் தம்பிமார்கள் உடன்பிறப் புணர்விற்கொண்ட பெரும் பற்றுக் காரணமாக என் தம்பி சுக்கிரீவனைத் தவறுடையன் என இகழ்ந்துரைத்தலும் கூடும்; அந்நிலையில் நின்பால் அன்புடைய என் தம்பியின் உள்ளம் பெரிதும் வருந்தும்; தகுதி மிக்க பெரியோனாகிய நீ நின் தம்பிமார்கள் என்

தம்பியைக் குறித்துப் பழித்துரையாதவண்ணம் தடுத்து என் தம்பியை நின்பணிக்கு உரியனுகச் செய்து உய்வித்தல் வேண்டும் என்பான், 'எம்பியை, உம்பிமார்கள், "தன்முனைக் கொல்வித்தான்" என்று இகழ்வரேல் தடுத்தி' என இராமனை வேண்டினுன் வாலி. இவன் என்றது சுக்கிரீவனை. அவனது குறையாவது, தன் தமையன் வாலியைக் கொன்று தனக்கு அரசளித்தல் வேண்டும் என்பது. பின்பு - அக்குறையை நிறைவேற்றிய பின்பு. 'இவன் வினையின் செய்கை' என்றது, ஆற்றல் மிக்க வினைத் திறத்தால் இராவணன் இருக்குமிடத்தை நாடிச் சென்று கண்டு இராமனுக்குக் காட்டி அவன் சீதையை மீட்டுக்கொள்ளுதற்கு உதவுதலாகிய சுக்கிரீவனது செயலினை. பிழைக்கல் ஆமோ-தவறவிடலாமோ? (விடலாகாது). பிழைத்தல் - தவறவிடுதல். 'பிழைத்த பிடியைக் காணுதோடிப் பெருங்கை மதவேழம், அழைத்துத் திரிந்தங் குறங்குஞ்சாரல் அண்ணுமலையாரே' (1-69-4) எனவரும் ஆளுடைய பிள்ளையார் தேவாரத்தில் பிழைத்தல் இப்பொருளில் வழங்கப்பெற்றிருத்தல் அறியத்தக்கதாகும். சுக்கிரீவனுக்கு உறுதி கூறிய வண்ணம் நீ செய்யவேண்டிய காரியத்தை நிறைவேற்றிய பின்னரும் இவனுல் நீ நிறைவேற்றிக் கொள்ளத்தக்க காரியத்தை இவனைக்கொண்டு முடித்துக்கொள்ளாது இவனை இகழ்ச்சியால் தவறவிடுதல் கூடாது என வாலி இராமனுக்குக் கூறினுன் என்பதாம். (136)

வாலி, இராமனுக்கு உதவ முடியாத தன்னிலைமையை நினைந்து இரங்கி, இராமனுக்கு அநுமனைப் பற்றித் தகவுரை பகர்தல் 4174-4175

**4174.** மற்றிலெ னெனினு மாய
வரக்கனை வாலிற் பற்றிக்
கொற்றவ நின்கட் டந்து
குரக்கியற் றொழிலுங் காட்டப்
பெற்றிலென் கடந்த சொல்லிற்
பயனிலைப் பிறிதொன் றேனு
முற்றது செய்கென் றுலு
முரியனிவ் வனும னென்றுன்.

'மற்று இலென் எனினும், மாய
அரக்கனை வாலின் பற்றி,
கொற்றவ! நின்கண் தந்து,
குரக்கு இயல் தொழிலும் காட்டப்

பெற்றிலென்; கடந்த சொல்லின்,
பயன் இலை; பிறிது ஒன்றேனும்,
'உற்றது செய்க' என்றாலும்,
உரியன் இவ் அனுமன்' என்றான்.

பொ :—'வெற்றிவேந்தனே! நினக்கு மிக்கதொரு பேருதவியைச் செய்யும் பேறு பெற்றிலேன் ஆயினும், வஞ்சனையில் வல்ல அரக்கனாகிய இராவணனை எனது வாலினால் இறுகப் பிடித்துக் கொண்டு வந்து (அடியுறைப் பொருளாக) நின்பால் ஒப்புவித்து, குரங்கினமாகிய எமது இயல்புக்கேற்ற சிறு தொழிலைத் தானும் (தலைவனாகிய) உனக்குக் காட்டி மகிழும் செவ்வியைப் பெற்றேன் அல்லேன். (செய்யாது) கழிந்தவற்றைப் பேசும் பேச்சினால் யாதொரு பயனும் இல்லை. (யான் செய்தற்குரிய) இதனையொத்த பெருந்தொழில் வேறு எதுவாயினும் நினக்குப் பொருந்துவதாகிய அத்தொழிலைச் செய்க என்று நீ பணித்தருளினாலும் அதனைச் செய்து முடித்தற்கு இங்குள்ள அநுமான் என்பவன் உரிய தகுதியினையுடையான்' எனக் கூறினான் (வாலி).

கு :—மாயம் - வஞ்சனை. குரங்கு+இயல்=குரக்கியல் என மென்றொடர்க் குற்றியலுகரம் புணர்ச்சியில் வன்றொடராய்த் திரிந்தது. அரக்கர் வேந்தனாகிய ஆற்றல் மிக்க இராவணனைத் தன் வாலினாற் பிணித்துக் கொணர்தலாகிய தனது அருஞ்செயலை வாலி 'குரக்கியற்றொழில்' என மிகவும் தாழ்ந்த செயலாகக் கூறியது, தன்னிகரற்ற தலைவனாகிய இராமனது பேராற்றலை யெண்ணுங்கால் தன் செயல் எத்துணையுந் தாழ்வுடையது என்பதனைப் புலப்படுத்துங் குறிப்பினதாகும். இராவணனை வாலினாற் பிணித்துக் கொணர்தலாகிய இச் செயலை அநுமனிடத்து எதிர்பார்த்தல் இயலாதாயினும் இதனையொத்த அருமையுடைய செயல் வேறு எதுவாயினும் நின் திருவுள்ளத்திற்குப் பொருந்திய அச்செயலைச் செய்து முடித்தற்குரிய ஆற்றல் இங்குள்ள அனுமனுக்கு உண்டு என்பான், 'பிறிதொன்றேனும் உற்றது செய்கென்றாலும் உரியன் இவ் அனுமன்' என்றான். உற்றது - பொருந்தியது. பிறரைக்கொண்டு ஒரு காரியத்தை முடித்துக்கொள்ள வேண்டிய குறைபாடு உனக்கு இல்லையாதலின் 'உற்றது செய்க' என்று ஏவும் இன்றியமையாமை உனக்கில்லை என்பான், 'உற்றது செய்க என்றாலும்' என்றான். (137)

4175. அனுமனென் பவனை யாழி
யையநின் செய்ய செங்கைத்
தனுவென நினைதி மற்றென்
றம்பிநின் றம்பி யாக
நினைதியோர் துணைவ ரின்னோ
ரனையவ ரிலைநீ யீண்டவ்
வனிதையை நாடிக் கோடி
வானினு முயர்ந்த தோளாய்.

'அனுமன் என்பவனை—ஆழி
ஐய!—நின் செய்ய செங்கைத்
தனு என நினைதி; மற்று, என்
தம்பி நின் தம்பி ஆக
நினைதி; ஓர் துணைவர் இன்னோர்
அனையவர் இலை; நீ, ஈண்டு, அவ்
வனிதையை நாடிக் கோடி—
வானினும் உயர்ந்த தோளாய்!

பொ :—'ஆகாயத்தின் உயர்ச்சியைக் காட்டிலும் உயர்ந்து ஓங்கிய தோள்களையுடையவனே! ஆணைச் சக்கரத்தையுடைய தலைவனே! அனுமன் என்னும் பெயருடையனாகிய இவ்வீரனை நினது செப்பம் பொருந்திய சிவந்த கையிலுள்ள (கோதண்டம் என்னும்) விற்படை யென்றே கருதுவாயாக. என்னுடைய தம்பியாகிய சுக்கிரீவனை (இனி) நின்னுடைய தம்பியென்றே எண்ணுவாயாக. இவர்களைப் போலும் ஒப்பற்ற துணைவர்கள் வேறுபிறர் இல்லை. இங்கு (இவர்களைத் துணையாகக்கொண்டு) சீதை யென்னும் அந்நங்கையைத் தேடிப் பெற்றுக்கொள்வாயாக.'

கு :—ஆழி - ஆணைச்சக்கரம். நடுவு நிலைமைக்கு ஒத்த செம்மை நலம் வாய்ந்த செயல்களையே செய்யும் இயல்பினதாய் நிறத்தாலும் செம்மை வாய்ந்த கை என்பான், 'நின் செய்ய செங்கை' என்றான். நின் கையிலுள்ள விற்படையானது, நின்னை விட்டுக் கணமும் நீங்காததாய் நல்லோரைப் பாதுகாத்தற்கும் தீயோரை அழித்தற்கும் உரிய வன்மையுடையதாய் அமைந்து விரைந்து துணை செய்யுமாறு போன்று, இவ் அனுமனும் நின் மனக்குறிப்பினின்றும் சிறிதும் நீங்காதவனாய் நல்லோரைக் காத்தற்கும் தீயோரை அழித்தற்கும் உற்ற துணையாய் நின்று விரைந்து நின் குறிப்பின்வழி யொழுகும் இயல்புடையான் என்பான், 'அனுமன் என்பவனை நின் செய்ய செங்கைத் தனு என நினைதி' என்றான். தனு - வில். அறத்

தின் மூர்த்தியாகிய நின்னைக்கொண்டு எனது தீவினையைப் போக்கிய அன்புடைத் தம்பியாகிய சுக்கிரீவன் தன் தமையனாகிய என்னைப் பிரிந்து வருந்தும் இந்நிலையில் அவனது கலக்கத்தை மாற்றி அவனை உன்னுடைய தம்பியாகவே ஏற்றுப் பாதுகாத்தருள்க என வேண்டு வான், 'என் தம்பி நின் தம்பியாக நினைதி' என்றான். இவ்விண்ணப் பத்தினை இவர்கள்பாற் கொண்ட அன்பின் காரணத்தால் மட்டும் கூறுகின்றேனல்லேன்; இவ்விருவரும் நினக்குத் துணை நின்று உதவி புரியத்தக்க பேரன்பும் பேராற்றலும் வாய்க்கப்பெற்றவர்கள்; இவர்களைப் போன்று அன்பும் ஆற்றலும் வாய்ந்த துணைவர் பிறரைப் பெறுதல் அரிது என்பான், 'ஓர் துணைவர் இன்னோர் அனையவர் இலை' என்றான். தோள்வலி படைத்த பெரு வீரனாகிய நீ இவ்விருவரையும் துணையாகக்கொண்டு, சீதையாகிய அந்நங்கை யைத் தேடிப் பெறுதல் எளிது என்பான், 'வானினும் உயர்ந்த தோளாய்! அவ் வனிதையை நாடிக் கோடி' என்றான். அவ் வனிதை என்றது சீதையை. வனிதை - பெண். கொள் + தி = கோடி எனத் திரிந்தது. (138)

### வாலி, தன் தம்பி சுக்கிரீவனை அன்பினால் அணைத்து அவனுக்கு உறுதியுரை பகர்தல் 4176-4182

**4176.** என்றவற் கியம்பிப் பின்ன
ரிருந்தன னிளவ றன்னை
வன்றுணைத் தடக்கை நீட்டி
வாங்கினன் றழுவி மைந்த
ஒன்றுனக் குரைப்ப துண்டா
லுறுதியஃ துணர்ந்து கோடி
குன்றினு முயர்ந்த தோளாய்
வருந்தலை யென்று கூறும்.

என்று அவற்கு இயம்பி, பின்னர்,
இருந்தனன் இளவல் தன்னை
வன் துணைத் தடக்கை நீட்டி
வாங்கினன் தழுவி, 'மைந்த!
ஒன்று உனக்கு உரைப்பது உண்டால்
உறுதி; அஃது உணர்ந்து கோடி;
குன்றினும் உயர்ந்த தோளாய்!
வருந்தலை' என்று கூறும்:

பொ :—என்று (இவ்வாறு வாலி) இராமனை நோக்கிக் கூறிப் பின்னர் (அங்குத் திகைப்புற்று) இருந்தவனாகிய தம்பி சுக்கிரீவனை வன்மையும் பெருமையும் வாய்ந்த தன் இரு கைகளையும் நீட்டி வாங்கித் தழுவிக்கொண்டவனாய், 'மகனே! மலைகளைக் காட்டிலும் உயர்ந்து விளங்கும் தோள்களையுடையவனே! (எனது இறப்பினை யெண்ணி) மனம் வருந்தாதே. யான் உனக்கு உறுதிப் பொருளாகச் சொல்லத்தக்கது ஒன்றுளது. அதனை (மனத்தால்) உணர்ந்து (உனது வாழ்க்கையில்) மேற்கொள்வாயாக என்று (அதனைக்) கூறுவானாயினன்.

கு :—இருந்தனன் ஆகிய இளவல் என்றது, தமையனாகிய வாலியின் மார்பிற் சொரியும் குருதிநீரைக் கண்டு உடன்பிறப் பென்னும் பாசத்தாற் பிணிப்புண்டு பசுங்கண் நேசத்தாரைகள் சொரிதர நெடுநிலஞ் சார்ந்து திகைப்புற்று இருந்தவனாகிய சுக்கி ரீவனை. தந்தையாம் தகுதியில் இருந்து தலையளித்துப் போற்றும் இயல்பினராகிய ஐம்பெருங் குரவருள் தமையனும் ஒருவனாதலின், தமையனாகிய வாலி, தன் தம்பி சுக்கிரீவனை அவன்பால் தனக்குள்ள அன்பின் மிகுதியால் 'மைந்த' என அழைத்தான். 'மைந்த! உனக்கு உரைப்பதாகிய உறுதியொன்று உண்டு; அஃது உணர்ந்து கோடி' என இயையும். வருந்தலை - வருந்தாதே. (139)

**4177.** மறைகளு முனிவர் யாரு
மலர்மிசை யயனு மற்றைத்
துறைகளின் முடிவுஞ் சொல்லுந்
துணிபொரு டனிவிற் றாங்கி
அறைகழ லிராம னாகி
யறநெறி நிறுத்த வந்த
திறையொரு சங்கை யின்றி
யெண்ணுதி யெண்ண மிக்கோய்.

'மறைகளும், முனிவர் யாரும்,
மலர் மிசை அயனும், மற்றைத்
துறைகளின் முடிவும், சொல்லும்
துணிபொருள், தனிவில் தாங்கி,
அறை கழல் இராமன் ஆகி,
அற நெறி நிறுத்த வந்தது;
இறை ஒரு சங்கை இன்றி
எண்ணுதி; எண்ணம் மிக்கோய்!'

பொ :—'எதனையும் ஆராய்ந்துணரும் ஆற்றல் மிக்கவனே! வேதங்களும், (அவற்றை ஓதியுணர்ந்த) முனிவர் பெருமக்கள் யாவரும், (மறையோதுவார்க்கு அதிதெய்வமாகிய) தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமதேவனும், அறிவுநூற் றுறைகளின் முடிவாகிய ஏனைய மெய்ந்நூல்களும் தெளிந்து கூறும் மெய்ப்பொருளாகிய முழுமுதற் பொருள்தானே அறநெறியினை (உலகில்) நிலைநிறுத்தற் பொருட்டு, ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த இராமனாகத் தோன்றி, ஒப்பற்றதொரு வில்லையும் தாங்கிக் கொண்டு (இங்கு) எழுந்தருளி வந்தது. இவ்வுண்மையை ஒரு சிறிதும் சந்தேகமின்றி நின்மனத்திற் கொள்வாயாக.'

கு :—மறைகள் - அனாதியாகிய வேதங்கள். மற்றைத் துறைகளின் முடிவு - ஏனைய அறிவு நூற்றுறைகளின் முடிபொருளையுணர்த்துவனவாகிய மெய்ந்நூல்கள். ஆகம அளவையால் அறிந்துரைக்கப்படுவதன்றி நம்மனோர் கட்புலனுக்கு எட்டாது அப்பாற்பட்ட பரம்பொருள் என்பான், 'மறைகளும்......துறைகளின் முடிவும் சொல்லும் துணிபொருள்' என்றான். 'துணிபொருள், அறநெறி நிறுத்த, இராமன் ஆகி; தனிவில் தாங்கி, வந்தது' எனவும், '(இவ்வுண்மையை) ஓர் இறையும் சங்கை இன்றி எண்ணுதி' எனவும் இயைத்துப் பொருள் கொள்க. இறை - சிறிது. சங்கை – சந்தேகம். இது முதல் ஆறு செய்யுட்கள் வாலி, தன் தம்பி சுக்கிரீவனை நோக்கிக் கூறும் அறிவுரைகளாக அமைந்தன. (140)

4178. நிற்கின்ற செல்வம் வேண்டி
நெறிநின்ற பொருள்க ளெல்லாங்
கற்கின்ற திவன்ற னாமங்
கருதுவ திவனைக் கண்டாய்
பொற்குன்ற மனைய தோளாய்
பொதுநின்ற தலைமை நோக்கின்
எற்கொன்ற வலியே சாலு
மிதற்கொன்று மேது வேண்டா.

'நிற்கின்ற செல்வம் வேண்டி
நெறி நின்ற பொருள்கள் எல்லாம்
கற்கின்றது, இவன்தன் நாமம்;
கருதுவது, இவனைக் கண்டாய்;

பொற் குன்றம் அனைய தோளாய் !
பொது நின்ற தலைமை நோக்கின்,
எற் கொன்ற வலியே சாலும் ;
இதற்கு ஒன்றும் ஏது வேண்டா.'

பொ :—'பொன் மலையை யொத்த தோள்களையுடையவனே ! நல்லொழுக்க நெறியில் நின்றொழுகும் (நல்லுணர்வுடைய) உயிர்ப் பொருள்கள் யாவும் என்றும் அழியாது நிற்கும் இயல்பினதாகிய பெருஞ் செல்வத்தினை விரும்பி (அதனைப் பெறுதற்குரிய சாதன மாகத் தம் நாவினால்) பயில்வது, இவனுடைய திருப்பெயரினையே ; (தம் நெஞ்சத்தால்) தியானிப்பது இம்முதல்வனையே என அறிவா யாக. (எவ்வுயிர்க்கும்) நடுவாய் முறைசெய்து நின்ற இவனது இறைமைத் தன்மையைக் கூர்ந்து நோக்கின், (பிறர் யாவராலும் வெல்ல ஒண்ணாத ஆற்றல் வாய்ந்த வாலியாகிய) என்னைக் கொன்று அடக்கிய பெருவன்மையொன்றே (சான்றாதல்) அமையும். இதனை வலியுறுத்தற்குப் பிறிதொரு காரணமும் வேண்டுவதில்லை.'

கு :—நிற்கின்ற செல்வம் - என்றும் அழியாது நிலைநிற்பதாகிய வீடுபேறென்னும் பெருஞ் செல்வம். நெறிநின்ற பொருள்கள் - நன்னெறியில் நின்றொழுகும் நல்லுயிர்கள் ; என்றது, மெய்யுணர் வுடைய பெரியோர்களை. நெறியென்றது, ஞானம், யோகம், பத்தி, பிரபத்தி எனவும், சரியை, கிரியை, யோகம், ஞானம் எனவும் இவ் வாறு பகுத்துரைக்கப்படும் நல்லொழுக்க நெறியினை. நெறிநின்ற பொருள்கள் யாவும் நிற்கின்ற செல்வம் வேண்டிக் கற்கின்றது, இவன் தன் நாமம் ; கருதுவது, இவனை என இயையும். "கற்பார் இராமபிரானையல்லால் மற்றும் கற்பரோ" (திவ்ய-3381) எனவரும் திருவாய் மொழித் தொடர் இங்கு நினைக்கத்தக்கதாகும். பொது நின்ற தலைமையாவது எத்திறத்தார்க்கும் நடுவாய் நின்று முறை செய்தலாகிய இறைமைத்தன்மை. 'பூவுநல்வெறியுமொத்து ஒருவ ரும் பொதுமையாய்' என முன்னரும் பொதுமை என்ற சொல்லை இப்பொருளில் ஆளுதல் அறியத்தக்கதாகும். நல்லோரைக் காத் துத் தீயோரையழித்து அறத்தினை நிலைநிறுத்தற்பொருட்டு இறை வனே இராமனாக அவதரித்தான் என்ற உண்மையை நின்னைத் துன்புறுத்திய கொடியோனாகிய என்னைக் கொன்ற இவ்வொரு செய லாலேயே ஐயமின்றி நன்குணரலாம் என்பான், 'எற்கொன்ற வலியே சாலும் இதற்கு ஒன்றும் ஏதுவேண்டா' என்றான். ஏது - காரணம். (141)

4179. கைதவ மியற்றி யாண்டுங்
கழிப்பருங் கணக்கி றீமை
வைகலும் புரிந்து ளாரும்
வானுயர் நிலையை வள்ள
லெய்தவர் பெறுவ ரென்ரு
லிணையடி யிறைஞ்சி யேவல்
செய்தவர் பெறுவ தையா
செப்பலாந் தன்மைத் தாமோ.

'கைதவம் இயற்றி, யாண்டும்
கழிப்ப அரும் கணக்கு இல் தீமை
வைகலும் புரிந்துளாரும்,
வான் உயர் நிலையை, வள்ளல்
எய்தவர் பெறுவர் என்ருல்,
இணையடி இறைஞ்சி, ஏவல்
செய்தவர் பெறுவது, ஐயா!
செப்பலாம் தன்மைத்து ஆமோ?'

பொ :—வஞ்சனையைச் செய்து, எவ்விடத்தும் போக்கிக் கொள்ளு தற்கரிய எண்ணற்ற பாவச் செயல்களை நாள்தோறும் செய்துள்ளார்கள் எனினும் வள்ளன்மையுடைய இராமனல் அம்பெய்து தண்டிக்கப்பட்டவர் வானுலகினும் மேற்பட்டு உயர்ந்த பெருநிலையாகிய வீட்டுலகத்தைப் பெறுவார்கள் என்ருல், (அம்முதல்வனுடைய) திருவடிகள் இரண்டினையும் வணங்கி (அவன் இட்ட) பணிகளைச் செய்தவர்கள் பெறும் பேற்றின் சிறப்பு (இத்தகையது எனச்) சொல்லால் வெளியிட்டுரைக்கும் எளிமையுடையதாகுமோ?

கு :—கைதவம் - வஞ்சனை. யாண்டும் கழிப்பரும் தீமை - எவ்விடத்தும் எத்தகைய பிராயச்சித்தங்களாலும் தீர்த்தற்கியலாத பாவச் செயல். கணக்கு இல்தீமை - எண்ணில்லாத பாவச் செயல். வைகலும் - நாள்தோறும். வான் உயர் நிலை - வானுலகினும் மேற்பட்டுயர்ந்த பெருநிலையாகிய வீட்டுலகம் தன்னையடைந்தாரது தகுதி, தகுதியின்மை என்பவற்றை நோக்காது யாவர்க்கும் மாருது வழங்கும் வண்மைக் குணமுடைமை பற்றி வள்ளல் என்ருன். 'வள்ளல் எய்தவர்' என்புழி 'வள்ளலால் (அம்பு) எய்யப்பட்டவர்' என மூன்ரும் வேற்றுமை யுருபும் படுவிகுதியும் விரித்துரைக்க. 'இறைவனுகிய அவன் திறத்தும் அவன்பால் அன்புடையார் திறத்தும் வஞ்சனையினையே மேற்கொண்டு நாள்தோறும் தீவினைகளையே செய்யும் என்னைப் போலும் கொடியவர்களும் அம்முதல்வனல் அம்பெய்து தண்டிக்

கப்பெற்றமையால் வானினும் உயர்ந்த நிலையாகிய வீடுபேற்றின்பத்தைப் பெறுவார்கள் என்றால், வாய்மையால் மனந்தூயோனாகிய உன்னைப் போன்று அவன் திருவடிகளை வணங்கி ஏவல்புரிந்தொழுகும் மெய்யன்பராயினார் பெறவிருக்கும் பெருஞ் சிறப்பு என் சொல்லினால் அளவிட்டுரைக்குந் தரத்ததன்று' என வாலி, தன் தம்பியாகிய சுக்கிரீவனை நோக்கிக் கூறினான் என்பதாம். 'தீமை வைகலும் புரிந்துளோர்' என்புழித் தன்னையும், 'இணையடியிறைஞ்சியேவல் செய்தவர்' என்புழித் தன் தம்பி சுக்கிரீவனையும் வாலி உளப்படுத்துக் கூறிய நலம் கூர்ந்துணரத்தக்கதாகும். (142)

**4180.** அருமையென் விதியி னாரே
யுதவுவா னமைந்த காலை
இருமையு மெய்தி னாய்மற்
றினிச்செயற் பால தெண்ணின்
திருமறு மார்ப னேவல்
சென்னியிற் சேர்த்திச் சிந்தை
ஒருமையி னிறுவி மும்மை
யுலகினு முயர்தி யன்றே.

'அருமை என்? விதியினாரே
உதவுவான் அமைந்த காலை;
இருமையும் எய்தினாய்; மற்று
இனிச் செயற்பாலது எண்ணின்,
திருமறு மார்பன் ஏவல்
சென்னியில் சேர்த்தி, சிந்தை
ஒருமையின் நிறுவி, மும்மை
உலகினும் உயர்தி அன்றே.'

பொ:—'ஊழ்வினையாகிய தெய்வமே துணை செய்தற்கு அமைந்த பொழுது எய்துதற்கு அரியது யாதுளது? (நல்லூழின் பயனாக) நீ (இம்மை மறுமை யென்னும்) இருமையின்பங்களையும் ஒரு சேரப் பெற்றாய். இனி நீ செய்யத்தக்கது யாதென்று எண்ணினையாயின், அழகிய (ஸ்ரீவத்சம் என்னும்) மறுவினை மார்பிற்கொண்ட திருமாலாகிய இராமபிரானது கட்டளையைத் தலைமேற்கொண்டு மனத்தை (அவனுக்குப் பணிபுரிதலாகிய) ஒருமை நிலையில் நிறுத்தி மூன்றுலகங்களிலும் சிறப்புற்று உயர்வாயாக'.

கு :—விதியினரே உதவுவான் அமைந்தகாலை அருமை என்? இருமையும் எய்தினய்; இனிச் செயற்பாலது எண்ணின், திருமறு மார்பன் ஏவல் சென்னியிற் சேர்த்தி, நிறுவி, உயர்தி என இயைத் துரைக்க. விதி - ஊழ்வினை; வினையென்பது சொல்லால் அஃறிணை யாயினும் பொருளால் உயர்திணையோடு ஒப்பவைத்து உரைக்கப் படும் ஆதலால் 'விதியினர்' என உயர்த்திக் கூறப்பட்டது. 'விதியே நல்கின் மேவலாகாததென்' எனச் சுக்கிரீவன் கூற்ருக அமைந்த தொடர் இங்கு ஒப்புநோக்குதற்குரியதாகும். இனி, 'விதியினர்' என்பதற்கு ஊழ்வினை என்று பொருள் கொள்ளாது விதியின் வழி நின்று வினைப்பயனை நுகர்விக்கும் இறைவன் என்னும் பொருளில் இராமன் எனப் பொருளுரைத்தலும் உண்டு. 'முன்னவனே முன் னின்ருல் முடியாத பொருளுளதோ' (பெரிய - மனுநீதி 47) என வரும் சேக்கிழார் வாய்மொழி இப்பொருளில் இங்கு ஒப்புநோக்குதற் குரியதாகும். ஏவல் சென்னியிற் சேர்த்தல் - கட்டளையினைத் தலை மேற்கொண்டு பணிவுடன் செய்து முடித்தல். 'இப்பணி தலைமேற் கொண்டேன்' (அயோத்தியா – கைகேயி - 114) எனவரும் தொடர் இங்கு நினைத்தற்குரியதாகும். (143)

4181. மதவியல் குரக்குச் செய்கை
மயர்வொடு மாற்றி வள்ள
லுதவியை யுன்னி யாவி
யுற்றிடத் துதவு கிற்றி
பதவியை யெவர்க்கு நல்கும்
பண்ணவன் பணித்த யாவுஞ்
சிதைவில செய்து நொய்திற்
றீர்வரும் பிறவி தீர்தி.

'மத இயல் குரக்குச் செய்கை
மயர்வொடு மாற்றி, வள்ளல்
உதவியை உன்னி, ஆவி
உற்றிடத்து உதவுகிற்றி;
பதவியை எவர்க்கும் நல்கும்
பண்ணவன் பணித்த யாவும்
சிதைவு இல செய்து, நொய்தின்,
தீர்வு அரும் பிறவி தீர்தி.'

பொ :—'அறியாமையாற் செருக்குறும் இயல்பாகிய குரங்கின் செயலையும் மயக்கத்தையும் அறவே நீக்கி, வள்ளலாகிய இராமன்

செய்த உதவியை (மறவாது) நினைந்து, ஓர் இடையூறு உற்ற நிலைமைக்கண் நின் உயிரைக் கொடுத்து உதவிபுரிவாயாக. (அன்பராயினார்) யாவர்க்கும் உயர்ந்த பதவியாகிய வீடு பேற்றினை வழங்கும் கடவுளாகிய இராமன் ஏவிய பணிகள் எல்லாவற்றையும் குறையில்லாதனவாக(த் திருத்தமுற)ச் செய்து, எளிதில் நீங்குதற்கரிய பிறவிப் பிணியினை விரைவில் நீங்கி உய்வாயாக.'

கு:—'மத' என்னும் உரிச்சொல், மடமையின் காரியமாகிய செருக்கு என்னும் பொருளில் இங்கு ஆளப்பட்டது. குரங்கு+செய்கை=குரக்குச் செய்கை எனக் குற்றியலுகரப் புணர்ச்சியில் மெல்லெழுத்து வல்லெழுத்தாய்த் திரிந்தது. குரக்குச் செய்கை – குரங்கினத்தின் தொழில்; அஃதாவது, மனம் ஒருவழி நில்லாது ஒன்றைவிட்டொன்று பற்றிப் பலவற்றிலும் தாவியலைதலாகிய பயனில் செயல். மயர்வு - மயக்கம். வள்ளல் - இராமன். செய்த உதவியாவது, வாழ்க்கைத் துணைவியாகிய மனைவியை வலிதிற் கவர்ந்து தாங்கொணாத் துன்பம் விளைத்த பகைவனைக் கொன்று, மனைவியொடு கூட்டி அமைதியான வாழ்வளித்தமை. மாற்றுதல் - அறவே நீக்குதல். உற்றிடத்து – இடையூறு உற்ற இடத்து; ஆபத்துக் காலத்து. உற்ற இடத்து எனற்பாலது உற்றிடத்து எனப் பெயரெச்சத்து அகரம் தொக்கது. 'உற்றிடத்து ஆவி உதவுகிற்றி' என இயையும். ஆவி – உயிர். 'உற்ற இடத்து உயிர் வழங்குந் தன்மையோர்' (வாக்குண்டாம்) எனவரும் தொடர் இங்கு நினைக்கத் தக்கது. எவர்க்கும்–(அன்பராயினார்) யாவர்க்கும்; குணங்களால் உயர்ந்தோர் தாழ்ந்தோர், ஆற்றலால் வலியோர் மெலியோர் என்னும் வேற்றுமையின்றி எத்திறத்தோர்க்கும். எவர்க்கும் பதவியை நல்கும் பண்ணவன் என்க. பதவி - வீடு பேருகிய உயர்நிலை. பண்ணவன் - கடவுள். சிதைவில செய்து - குறையில்லாதனவாகச் செய்து முடித்து. தீர்வு அரும் பிறவி நொய்தின் தீர்தி என இயையும். நொய்தின் - விரைவில். (144)

**4182.** அரசியற் பாரம் பூரித்
தயர்ந்தனை யிகழா தையன்
மரைமலர்ப் பாத நீங்கா
வாழுதி மன்ன ரென்பா
ரெரியெனற் குரிய ரென்றே
யெண்ணுதி யெண்ணம் யாவும்
புரிதிசிற் றடிமை குற்றம்
பொறுப்பரென் றெண்ண வேண்டா.

'அரசியல் பாரம் பூரித்து,
அயர்ந்தனை இகழாது, ஐயன்
மரை மலர்ப் பாதம் நீங்கா
வாழுதி ; மன்னர் என்பார்
எரி எனற்கு உரியர் என்றே
எண்ணுதி ; எண்ணம் யாவும்
புரிதி ; சிற்றடிமை குற்றம்
பொறுப்பர் என்று எண்ண வேண்டா'.

பொ :—'அரசாட்சியாகிய பதவியின் பெருமையினால் மனம் மிகக் களித்து (நின் முன்னை நிலையை) மறந்தனையாகி, (நினக்கு நலம் புரிந்த இராமனைப்) போற்றுதலிற் சோர்வடையாமல் தலைவனாகிய இராமனுடைய தாமரை மலர் போலும் திருவடிகளை நீங்காமல் (ஒட்டி) வாழ்வாயாக. அரசர் எனப்படுவோர் (பற்றியெரியும்) நெருப்பு என்று கூறுதற்கேற்ற (அஞ்சத்தக்க) இயல்புடையவர்கள் என்றே (உறுதியாக) எண்ணுவாயாக. அவர்கள், தமக்கு அடித்தொண்டு புரியும் குற்றேவல் மக்கள் (அறியாமையாற்) செய்யும் குற்றங்களைப் பொறுத்தருள்வார்கள் என்று நினைத்து விடுதலாகாது'.

கு :—அரசியற் பாரம் - அரசாட்சியாகிய பெருஞ் செல்வப் பெருமை. பாரம் - பெருமை. பூரித்தல் - மிகவும் மகிழ்தல். 'அரசியற் பாரத்தாற் பூரித்து' என மூன்றாமுருபு விரித்துரைக்க. "மிக்க உவகை, பெருஞ்செல்வம் பேரின்பம் பெருமிதம் என்று இவற்றான் வருவது" (திருக்குறள்-531) என்பர் பரிமேலழகர். அயர்தல் - மறத்தல். இகழ்தல் - குறிக்கொண்டு போற்றத்தகுவதனைப் போற்றாது நெகிழ்ந்து சோர்தல். ஐயன் - தலைவன்; இராமன். மரை மலர்ப்பாதம் - தாமரை மலர் போலும் செம்மையும் அழகும் வாய்ந்த திருவடி. மரை, தாமரை என்பதன் முதற்குறை. நீங்காது என்பது நீங்கா எனக் கடைக் குறைந்து நின்றது. (திருக்குறள் 422. பரிமேலழகர் உரை நோக்குக). பற்றியெரியும் நெருப்பானது, தன்னைவிட்டு நெடுந்தூரம் விலகிச் சென்றார்க்குக் குளிர் நீக்குதல் முதலிய பயனைச் செய்யாது; தன்னை மிகவும் அணுகினாரைச் சுடும். அத்தீயினைப் போன்றே மன்னர்களும் தம்மை விட்டு விலகிச் சென்றார்க்குச் சிறிதும் பயன்தரமாட்டார்கள்; மிகவும் அணுகினால் தம்மை அவமதித்ததாக எண்ணிப் பெரிதும் வெகுள்வர். இங்ஙனம் தீயோடு ஒத்த இயல்புடைமை பற்றி 'மன்னர் என்பார் எரி எனற்கு உரியர் என்றே எண்ணுக' என வாலி தன் தம்பிக்கு அறிவுறுத்தினான். "அகலா தணுகாது தீக்காய்வார் போல்க, இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்" (திருக்குறள் 691) எனவரும் திருவள்ளுவர் வாய்மொழியும், "மிக அகலிற் பயன்கொடாது; மிக அணுகின்

அவமதி பற்றித் தெறும் வேந்தர்க்கு, மிக அகலிற் குளிர் நீக்காது, மிக அணுகிற் சுடுவதாய தீயோடு உளதாய தொழிலுவமம் பெறப் பட்டது" என இதற்குப் பரிமேலழகர் கூறிய விளக்கமும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கனவாகும். சிற்றடிமை - குற்றேவல் புரியும் அடியோர். (145)

## வாலி, சுக்கிரீவனை இராமனிடம் அடைக்கலமாக ஒப்புவித்தல்

**4183.** என்னவித் தகைய வாய்
வுறுதிகள் யாவு மேங்கும்
பின்னவற் கியம்பி நின்ற
பேரெழி லானை நோக்கி
மன்னவர்க் கரசன் மைந்த
மற்றிவன் சுற்றத் தோடும்
உன்னடைக் கலமென் றுய்த்தே
யுயர்கர முச்சி வைத்தான்.

என்ன, இத் தகைய ஆய
உறுதிகள் யாவும், ஏங்கும்
பின்னவற்கு இயம்பி, நின்ற
பேர் எழிலானை நோக்கி,
'மன்னவர்க்கு அரசன் மைந்த!
மற்று இவன், சுற்றத்தோடும்
உன் அடைக்கலம்' என்று உய்த்தே,
உயர்கரம் உச்சி வைத்தான்.

பொ :—என்று இத்தன்மையவாகிய உறுதி பயக்கும் அறிவுரைகள் எல்லாவற்றையும் (தமையனாகிய தனது இறப்பினை யெண்ணி) வருந்தும் தம்பியாகிய சுக்கிரீவனுக்குச் சொல்லி, (எல்லாவற்றிற்கும் சான்றாகத்) தன் முன் நின்ற பேரழகனாகிய இராமனை நோக்கி, 'வேந்தர் வேந்தனாகிய தசரதன் புதல்வனே! சுக்கிரீவனாகிய இவன் தன் சுற்றத்தாருடனே உனக்கு அடைக்கலப்பொருளாவான்' என்று கூறி (அவனை இராமன்பால்) செலுத்தி, உயர்த்திய கைகளைத் தலைமேல் வைத்து வணங்கினான்.

கு :—பின்னவன் - தம்பி; என்றது சுக்கிரீவனை. பேரெழிலான் என்றது, அந்தமில் அழகனாகிய இராமனை. தசரதன் அரசர்க்கரசனாகிய சக்கரவர்த்தியாதலின் அவனை 'மன்னவர்க்கரசன்' எனக்

குறித்தான். மற்று - அசை. 'என் தம்பியாகிய இச் சுக்கிரீவனையும் இவனைச் சேர்ந்த என் சுற்றத்தார்களையும் உன்பால் அடைக்கலப் பொருளாக ஒப்புவித்தேன்' என்பான், "இவன், சுற்றத்தோடும் உன் அடைக்கலம்' என இராமனை நோக்கிக் கூறினன் வாலி. உய்த்தல் - செலுத்துதல். உயர்கரம் உச்சி வைத்தல் - கைகளைத் தலைக்கு மேலாகக் கூப்பி வணங்குதல். அடைக்கலம் - பாதுகாக்கத் தக்க பொருள். (146)

## வாலி, சுக்கிரீவனைக் கொண்டு அங்கதனை அழைத்து வரச் செய்தல்

**4184.** வைத்தபி னுரிமைத் தம்பி
மாமுக நோக்கி வல்லை
உய்த்தனை கொணர்தி யுன்ற
னோங்கரு மகனை யென்ன
அத்தலை யவனை யேவி
யழைத்தலி னணைந்தா னென்ப
கைத்தலத் துவரி நீரைக்
கலக்கினன் பயந்த காளை.

வைத்தபின், உரிமைத் தம்பி மா முகம் நோக்கி, 'வல்லை உய்த்தனை கொணர்தி, உன் தன் ஓங்கு அரு மகனை' என்ன, அத்தலை அவனை ஏவி அழைத்தலின், அணைந்தான் என்ப; கைத்தலத்து உவரி நீரைக் கலக்கினன் பயந்த காளை.

பொ :—(சுக்கிரீவனைச் சுற்றத்தொடும் அடைக்கலமாக ஏற்றுக் கொள்ளும்படி) கையினைத் தலைமேல் வைத்து வாலி (இராமனை) வணங்கிய பின்பு, அன்புரிமையிற் சிறந்த தன் தம்பியாகிய சுக்கிரீவனது பெருமை மிக்க முகத்தினை நோக்கி, "உன்னுடைய சிறப்பினால் உயர்ந்த அரும்புதல்வனாகிய அங்கதனை இங்கே விரைவாக அழைத்து வந்து சேர்ப்பாயாக" என்று கூறி, (அங்கதன் இருந்த) அவ்விடத்திற்குச் சுக்கிரீவனை அனுப்பி அழைத்தமையால், தன் கைகளாற் கடலைக் கடைந்த வாலி பெற்ற புதல்வனாகிய அங்கதன் அங்கு வந்து சேர்ந்தான்.

கு :—வாலியோடு உடன் பிறப்புரிமையுடையான் சுக்கிரீவன் ஒருவனேயாதலின் 'உரிமைத் தம்பி' எனக் குறிக்கப்பெற்றான். சுக்கிரீவன் தன் தமையனாகிய வாலியொடு கொண்டிருந்த பகைமையினை நீங்கித் தமையனது பேரன்பின் பயனாகத் தனது இயல்பாகிய

பெருமைக் குணம் வெளிப்பட்டுத் தோன்றும் முகத்தினனாய் விளங்கினமையால் அவனது முகம் 'மாமுகம்' எனக் குறிக்கப்பட்டது. மா - பெருமை. 'உன்றன் ஓங்கு அரும் மகனை வல்லை கொணர்ந்தனை உய்த்தி' என மாற்றிப் பொருள்கொள்ளப்பட்டது. வாலி, தன் மகனாகிய அங்கதனை அழைத்து வருமாறு தன் தம்பி சுக்கிரீவனுக்குக் கட்டளையிடுபவன், 'உன்றன் ஓங்கு அரும் மகனை' என்றது, தனக்கும் தன் தம்பிக்கும் எத்தகைய வேறுபாடும் கருதாத பேரன்புடையனாதலைப் புலப்படுத்தும். அத்தலை - அவ்விடம். 'கைத்தலத்து உவரி நீரைக் கலக்கினான்' என்றது, பாற்கடலைக் கடைந்த பேராற்றல் படைத்தவனாகிய வாலியை. உவரி - கடல். கலக்குதல் - கடைதல். பயந்த - பெற்ற. காளை - காளை போல்வான்; என்றது அங்கதனை. என்ப, அசை. (147)

## அங்கதன் வாலியைக் காணுதல்

4185. சுடருடை மதிய மென்னத்
தோன்றிய தோன்றல் யாண்டு
மிடருடை யுள்ளத் தோரை
யெண்ணினு முணர்ந்தி லாதான்
மடலுடை நறுமென் சேக்கை
மலையன்றி யுதிர வாரிக்
கடலிடைக் கிடந்த காதற்
றாதையைக் கண்ணிற் கண்டான்.

சுடருடை மதியம் என்னத்
தோன்றிய தோன்றல், யாண்டும்
இடருடை உள்ளத்தோரை
எண்ணினும் உணர்ந்திலாதான்,
மடலுடை நறுமென் சேக்கை
மலை அன்றி, உதிர வாரிக்
கடலிடைக் கிடந்த காதல்
தாதையைக் கண்ணின் கண்டான்.

பொ:—ஒளி நிறைந்த முழுமதியை ஒத்த பொலிவுடன் (அவ்விடத்தில் வந்து) தோன்றிய அங்கதன் என்னும் தோன்றல், எக்காலத்தும் துன்பமுற்ற மனத்தினரை (அவர் இன்னவாறிருப்பர் என) மனத்தாலும் எண்ணியறியப் பெறாத (துன்பம் இன்னதென்

றுணர்ந்து கொள்ளமுடியாத இன்ப நிலையில் வளர்ந்த) அவன், மலரிதழ்களால் ஆகிய மணம் நிறைந்த மெல்லிய பூவணையாகிய மலையின்மீதன்றி, குருதி வெள்ளமாகிய கடலிடத்தே (துயருற்றுக்) கிடந்த தன் அன்புடைத் தந்தையாகிய வாலியைத் தன் கண்களாற் பார்த்தான்.

கு :—சுடருடை மதியம் - ஒளிக்கற்றையாகிய கலைகள் நிறைந்த முழு மதி. 'சுடருடை மதியம் என்னத் தோன்றிய தோன்றல்' என்றது அங்கதனை. கவலையென்பது இன்னதென்றறியாது வளர்ந்த அங்கதனது தூய வடிவொளிக்குக் கலைகள் நிறைந்த முழு மதியை உவமை கூறினர். துன்பமுற்ற உள்ளத்தினர் இவ் வாறிருப்பர் எனத் தன் மனத்தாலும் கற்பனை செய்து எண்ணிப் பார்க்க முடியாத இன்பச் சூழலிலேயே வளர்ந்தவன் அங்கதன் என்பார், 'யாண்டும் இடருடை யுள்ளத்தோரை எண்ணினும் உணர்ந்திலாதான்' என்றார். இடர் - துன்பம். எண் - மனம். துன்புற்றோர் நிலை இத்தகையது என்று மனத்தால் எண்ணியறியும் வாய்ப்பினைப் பெருதவன் எனவே துன்புற்றோர் இவ்வாறு கலங்குவர் எனப் பிறர் சொல்லக் கேட்டுணரும் கேள்வி நிலையும், துன்பமுற் றோரைத் தானே நேரிற் காணும் காட்சி நிலையும் அங்கதனுக்கு இதுவரை ஏற்பட்டதில்லை என்றாராயிற்று. தன் அன்புடைத் தந்தையாகிய வாலியின் ஆட்சியில் வாழ்வார் அனைவரும் 'இன்பமே எந்நாளுந் துன்பமில்லை' என்னும் அமைதி நிலையிலேயே வாழ்தலைக் கண்டு பழகிய அங்கதன், தன்பாற் பேரன்புடைய தந்தையும் கிட்கிந்தை நாட்டின் வேந்தனும் ஆகிய வாலியை என்றும் போல் நறுமென் மலர்களால் அமைக்கப்பெற்ற உயர்ந்த பூவணையில் துயில் கொள்ளும் இன்பநிலையிற் காணப்பெருது, இன்று பகைவனது அப்புக்கு இலக்காகிக் குருதி வெள்ளத்தில் வீழ்ந்து கிடக்கும் துன்பச் சூழலிற் காணவேண்டிய அவல நிலைக்கு உள்ளாயினன் என்பார், 'யாண்டும் இடருடை யுள்ளத்தோரை எண்ணினும் உணர்ந்தி லாதான், மடலுடை நறுமென் சேக்கை மலையன்றி உதிரவாரிக், கடலிடைக் கிடந்த காதற்றாதையைக் கண்ணிற் கண்டான்' என்றார். மடல் - இதழ். சேக்கை - படுக்கை. உதிரம் - இரத்தம். வாரி - வெள்ளம். தன்னொடு தொடர்பில்லாத அயலாரது துன்பத்தினையும் மனத்தால் எண்ணப்பொருத இளகிய சிந்தையனாகிய அங்கதன் தன் அன்புடைத் தந்தையாகிய வாலியின் சாதல் நிலையாகிய பெருந்துன் பத்தினைத் தன் கண்களாற் காணும் பெரியதோர் அவலநிலையினன் ஆயினன் என்பதாம். நறுமலர்ப் படுக்கையாகிய மலை என்றதும் குருதி வெள்ளமாகிய கடல் என்றதும் உருவக அணியின் பாற்படும். தன் தாதையை இன்பமலையிற்காணது துன்பக் கடலிடைக் கண்டான் என்பது ஒரு நயம். (148)

அங்கதன், வாலியின்மீது வீழ்ந்து புலம்புதல் 4186-4190

**4186.** கண்டகண் கனலு நீருங்
குருதியுங் கால மாலைக்
குண்டல மலம்பு கின்ற
குவவுத்தோட் குரிசி றிங்கண்
மண்டல முலகின் வந்து
கிடந்ததம் மதியின் மீதா
விண்டல மதனி னின்றோர்
மீன்விழுந் தென்ன வீழ்ந்தான்.

கண்ட கண், கனலும் நீரும்
குருதியும் கால, மாலைக்
குண்டலம் அலம்பு கின்ற
குவவுத் தோள் குரிசில், திங்கள்
மண்டலம், உலகின் வந்து
கிடந்தது; அம் மதியின் மீதா
விண்டலம் அதனின் நின்று ஓர்
மீன் விழுந்தென்ன, வீழ்ந்தான்.

பொ:—(காதிலணிந்த) குண்டலங்கள் தாழ்ந்து அசையப்பெற்ற மாலையை யணிந்த திரண்ட தோள்களையுடைய நம்பியாகிய அங்கதன் (குருதி வெள்ளத்திலே வீழ்ந்து கிடக்கும் தந்தையின் துயர் நிலையைக்) கண்ட தன் கண்கள், (வெகுளித்) தீயையும் (துன்பக்) கண்ணீரையும் இரத்தத்தையும் சொரிய, சந்திரமண்டலம் வானகத்தினின்றும் மண்ணகத்தில் வந்து விழுந்து கிடந்ததாக, அந்தச் சந்திரன்மீது விண்ணினின்றும் ஒரு நட்சத்திரம் விழுந்தாற்போன்று (தந்தையாகிய வாலியின் மீது சோர்ந்து) விழுந்தான்.

கு:—குரிசில், கண்டகண் கனலும் நீரும் குருதியும் கால, மதியின் மீதா(க) மீன் விழுந்(த)து என்ன வீழ்ந்தான் என முடியும். வாலியின் துயர்நிலையைக் கண்ட அங்கதன் கண்கள், தன் தாதையை அம்பெய்து வீழ்த்திய பகைவன் யாவன் எனத் தன் மனத்தெழுந்த வெகுளியின் மிகுதியால் தீயையும், பெருவலி படைத்த தன் தந்தைக்கு இத்தகைய பெருந்துயர் விளைந்துவிட்டதே என்னும் அவலத்தின் மிகுதியாற் புன்கண்ணீரையும் இரத்தத்தையும் ஒக்கச் சொரிந்தன என்பார், 'கண்ட கண் கனலும் நீரும் குருதியும் கால' என்றார். கால - சொரிய. காலுதல் - சொரிதல். தூவெள்ளை நிறத்தவனாகிய வாலி மண்ணின் மீது விழுந்து கிடந்த தோற்றம்,

வானின்கண் உலவுமியல்புடைய சந்திரமண்டலம் மண்ணின்மீது விழுந்து கிடத்தலையொத்துத் தோன்றியதென்றும், வாலியின்மீது அவன் புதல்வன் அங்கதன் சோர்ந்து விழும் தோற்றம், வானின்று மண்ணின்கண் வீழ்ந்து கிடந்த மதியின்மீது விண்மீன் ஒன்று விழுவதை யொத்துக் காணப்பட்டதென்றும் கூறியது இல்பொருளுவமை என்னும் அணியின்பாற்படும். மாலைத்தோள், குண்டலம் அலம்புகின்றதோள், குவவுத்தோள் எனத் தனித்தனி இயையும். குவவு - திரட்சி. தோட்குரிசில் என்பது தோளையுடைய குரிசில் என இரண்டாம் வேற்றுமைப் பொருளில் வந்ததாகலின் தோள்+ குரிசில்=தோட்குரிசில் என ளகரம் டகரமாகத் திரிந்தது. (149)

4187. எந்தையே எந்தை யேயிவ்
வெழுதிரை வளாகத் தியார்க்குஞ்
சிந்தையாற் செய்கை யாலோர்
தீவினை செய்தி லாதாய்
நொந்தனை யதுதா னிற்க
நின்முக நோக்கிக் கூற்றும்
வந்ததே யன்றோ வஞ்சா
தாரதன் வலியைத் தீர்ப்பார்.

'எந்தையே! எந்தையே! இவ்
எழு திரை வளாகத்து, யார்க்கும்
சிந்தையால், செய்கையால், ஓர்
தீவினை செய்திலாதாய்!
நொந்தனை; அதுதான் நிற்க,
நின்முகம் நோக்கிக் கூற்றும்
வந்ததே அன்றோ அஞ்சாது?
ஆர் அதன் வலியைத் தீர்ப்பார்?'

பொ:—'என் தந்தையே! என் தந்தையே! (மேன்மேல்) எழும் அலைகளையுடைய கடலாற் சூழப்பட்ட இவ்வுலகின் கண்ணே, யாவர்க்கும் மனத்தாலும், (மொழியாலும்), செயலாலும் ஒரு சிறு தீமையும் செய்யாத தூயோனாகிய நீ (இப்பொழுது பெரிதும்) துன்புற்று வருந்தினாய். அஃது ஒருபுறம் இருக்க, (நின் பெயரைப் பிறர் சொல்லக் கேட்ட அளவிலேயே மனங்குலைந்து நடுங்குமியல் புடைய) கூற்றமும் (இப்பொழுது நின் உயிரைக் கொள்ளுதற் பொருட்டுச்) சிறிதும் அச்சமின்றி நின்முகத்தினை நோக்கி எதிரே வந்து நின்றதல்லவா? (இவ்வாறு பெருவலி படைத்த நின்னையே

உயிர்கொள்ள வந்ததானல், மாற்றருங் கூற்றமாகிய) அதனது வன்மையை ஒழிக்க வல்லார் வேறு யாருளர்? (ஒருவரும் இலர்'.)

கு :—எந்தையே என்னும் அடுக்கு அவலம் பற்றியது. எழுதிரை என்பது, மேன்மேலும் கிளர்ந்து எழும் அலைகளையுடைய கடலை யுணர்த்திற்று. எழுதிரை வளாகம் என்பது கடலாற் சூழப்பட்ட இந்நிலவுலகத்தினை. வளாகம் - பரப்பு. யார்க்கும் - வலியோர், மெலியோர் ஆகிய எத்திறத்தார்க்கும். மனம், மொழி, மெய் என்னும் முக்கரணங்களுள் சிந்தையும் செய்கையும் கூறவே இடை நின்ற மொழியும் இனம் பற்றிக்கொள்ளப்பட்டது. எனவே மனம் மொழி மெய் என்னும் முக்கரணங்களாலும் யார்க்கும் தீவினை செய்யாதவன் வாலி என்றவாறு. ஈண்டுத் தீவினை என்றது, பிறர்க்குத் துன்பம் விளைக்கும் தீய நினைவும் சொல்லும் செயலும் ஆகியவற்றை. 'நோயெல்லாம் நோய் செய்தார் மேலவாம்' (திருக்குறள்-320) என்றபடி இன்னாதனவெல்லாம் பிறிதோருயிர்க்கு இன்னா செய்தாரையே சாரும் என்பது அறநூல் விதியாகலின், அதன்படி இதற்குமுன் யாவர்க்கும் தீங்கு செய்யாத தூயோனாகிய நீ இங்ஙனம் நொந்து துன்புறுதல் முறையோ என அழுது அரற்றுபவன், 'யார்க்கும் தீவினை செய்திலாதாய் நொந்தனை' என இரங்கிக் கூறினான். இதுகாறும் நின்பெயரைக் கேட்ட பொழுதே அஞ்சி நெஞ்சங் குலைந்தோடும் கூற்றமும் இன்று சிறிதும் அச்சமின்றி நின்முகம் நோக்கி நின் எதிரில் வந்துவிட்டதே என்று தன் தந்தைக்கு நேர்ந்த எளிமை நிலையை நினைந்து இரங்குபவன், 'கூற்றும் நின்முகம் நோக்கி அஞ்சாது வந்ததேயன்றோ' என வருந்திக் கூறினான். 'கூற்றும் என் பெயர் சொலக்குலையும்' (வாலி வதை-19) என்றபடி நின் பெயர் கேட்டுக் குலைந்து நடுங்கும் கூற்றும் அஞ்சாது நின்முக நோக்கி வந்ததேயன்றோ' என்றானாகலின், கூற்றும் என்புழி உம்மை இழிவு சிறப்பு. கூற்று - உடம்பினின்றும் உயிரைப் பிரிக்கும் இயமன். அது சொல்லால் அஃறிணையாதலின் வந்தது, அது என அஃறிணைச் சொல்லாற் கூறப்பட்டது. 'அதன் வலியைத் தீர்ப்பார் ஆர்' என இயையும். (150)

4188. தறையடித் ததுபோற் றீராத்
தகையவித் திசைக டாங்கும்
கறையடிக் கழிவு செய்த
கண்டக னெஞ்ச முன்றன்

நிறையடிக் கோல வாலி
　　னிலைமையை நினையுந் தோறும்
பறையடிக் கின்ற தந்தப்
　　பயமறப் பறந்த தன்றே.

'தறை அடித்தது போல் தீராத்
　　தகைய, இத் திசைகள் தாங்கும்
கறையடிக்கு, அழிவு செய்த
　　கண்டகன் நெஞ்சம், உன்தன்
நிறை அடிக் கோல வாலின்
　　நிலைமையை நினையுந் தோறும்
பறை அடிக்கின்றது ; அந்தப்
　　பயம் அறப் பறந்தது அன்றே?'

பொ :—(நிலத்துடனே சேர்த்து) ஆணியறையப்பட்டாற் போன்று இடம் பெயராத் தன்மையனவாய் எட்டுத் திசைகளிலும் இப்பூமியைத் தாங்கி நிற்கும் திசை யானைகளுக்குத் தோல்வியை யுண்டாக்கிய கொடியோனாகிய இராவணனது நெஞ்சமானது (அவனைக் கட்டிச் சுருட்டிக் கொணர்ந்த) உன்னுடைய ஆற்றல் நிறைந்த பருத்த அழகிய வாலினது வன்மையை எண்ணும்பொழு தெல்லாம் (குறுந்தடியால் அடிக்கப்பட்டு அதிரும்) தோற்பறை யினைப் போன்று (படபடவென்று) துணுக்குற்று அடித்துக்கொள் கின்றது. அத்தகைய அச்சம் (நீ இப்பொழுது இறந்தமையால்) அறவே நீங்கியொழிந்ததன்றோ ?

கு :—தறையடித்தல் - ஆணியறைதல். 'கறையடி' என்பது, உரல்போலும் கால்களையுடையது என அன்மொழித் தொகையாய் யானைக்குப் பெயராயிற்று. கறை - உரல். அழிவு – தோல்வி. கண்டகன் - முள் போன்று இடர் விளைக்கும் கொடியோன்; என்றது இராவணனை. கண்டகம் - முள். இராவணன், எண் திசையிலுள் ளாரையும் வெற்றி கொள்ளச் சென்றபொழுது அவனை எதிர்த்துத் தாக்கிய திசை யானைகளின் தந்தங்கள் தனது மார்பிற் பட்டு ஒடியும்படி அவ்யானைகளை வென்று அடக்கினான் ஆதலின் அவனைக் 'கறையடிக்கு அழிவு செய்த கண்டகன்'.எனக் குறித்தான் அங்கதன். இங்ஙனம் எண் திசை யானைகளையும் வருத்திய பெருவலி படைத்த இராவணனை வாலி தன் வாலினால் இருபது கைகளோடும் சேர்த்துப் பிணித்து வருத்திய செய்தி இராமாயணம் உத்தரகாண்டம் வாலி வாலாற் கட்டுண்ட படலத்தில் விரித்துரைக்கப்பட்டது. சிவ பத்த னாகிய வாலியின் இப்பேராற்றலை 'நீலமா மணிநிறத் தரக்கனை

யிருபது கரத்தொடொல்க, வாலினுற் கட்டிய வாலியார்' (3-91-8) என வரும் தொடரில் ஆளுடைய பிள்ளையார் குறித்துப் பாராட்டி யுள்ளமை இங்கு நோக்கத்தக்கதாகும். தன் தந்தையாகிய வாலியின் வால் வலிமையை நினைந்து அங்கதன் இரங்கியவாறு.

(151)

4189. குலவரை நேமிக் குன்ற
மென்றவா னுயர்ந்த கோட்டின்
றலைகளு நின்பொற் ருளிற்
றழும்பினித் தவிர்ந்த வன்றே
மலைகொளு மரவு மற்று
மதியமும் பலவுந் தாங்கி
அலைகடல் கடைய வேண்டி
ஞரினிக் கடைவ ரையா.

'குலவரை, நேமிக் குன்றம்
என்ற வான் உயர்ந்த கோட்டின்
தலைகளும், நின் பொன் தாளின்
தழும்பு, இனி, தவிர்ந்த அன்றே?
மலைகொளும் அரவும் மற்றும்
மதியமும் பலவும் தாங்கி,
அலைகடல் கடைய வேண்டின்,
ஆர் இனிக் கடைவர்? ஐயா!'

பொ:—(இவ்வுலகின் எட்டுத் திசைகளிலும் அமைந்துள்ள) அஷ்டகுல பர்வதங்கள், (இவ்வுலகின் புறத்தே மதிலாக அமைந்துள்ள) சக்கரவாள மலை என்று சொல்லப்படும் வானேங்கிய மலைகளின் சிகரங்களும் நின்னுடைய அழகிய கால்களை ஊன்றி மிதித்தலாற் பதியும் (அடிச்சுவடாகிய) தழும்பினை (நீ இப்பொழுது உயிர் நீங்கினமையால்) நீங்கின அல்லவோ? மந்தர மலையென்னும் மத்தினைச் சுற்றி வளைத்துக்கொள்ள வல்ல (வாசுகி என்னும்) பெரும் பாம்பினையும் (அடை தூணுகிய) சந்திரனையும், (அடை கல்லாகிய ஆமை முதலிய) பிறவற்றையும் (ஆற்றலாற் பிறழாது) பொறுத்து, அலைகள் மறியும் பாற்கடலைக் கடைந்து அமுதம் தரும்படி (தேவர் முதலியோர்) வேண்டுவராயின் (அவ்வேண்டுகோளை யேற்றுக்) கடையும் ஆற்றலுடையார் இனி, யார் இருக்கிருர்கள்? (ஒருவரும் இலர்).

கு :—அட்டமூர்த்தியாகிய சிவபெருமானிடத்து எல்லையற்ற பேரன்புடையனாகிய வாலி, தான் நாள்தோறும் செய்தற்குரிய சிவ பூசையினை எட்டுத் திசைகளின் எல்லையினும் சென்று தங்கிச் செய்யும் நியமம் உடையவன் என்பது, 'எட்டு மாதிரத்திறுதி, நாளும் உற்று, அட்ட மூர்த்தி தாள் பணியும் ஆற்றலான்' (கிட்கிந்தை- நட்புக்-40) என்புழிக் கூறப்பட்டது. சிவ பத்தியிற் சிறந்த வாலி யானவன் இவ்வாறு நாள்தோறும் சிவபெருமானை வழிபடுதற் பொருட்டு இவ்வுலகின் எண் திசைகளிலும் விரைந்து தாவிச் செல்லுங்கால் அவனுடைய கால்களின் பதிவினால் அஷ்டகுல பர்வதங்களின் சிகரங்களிலும் சக்கரவாள மலையின் சிகரங்களிலும் பல இடங்களில் தழும்புகள் ஏற்பட்டன. இப்பொழுது வாலி இறந்த நிலையில் அம்மலைகளின் சிகரங்கள் வாலியின் கால்களால் தழும்பு படும் நிலையினின்றும் நீங்கின என்பதாம். பாற்கடலைக் கடைதற்கு வேண்டிய மந்தரமலை, வாசுகி முதலிய சாதனங்கள் எல்லாம் இருந்தும் அவற்றைப் பயன்படுத்திக் கடையும் ஆற்றல் படைத்த நீ ஒருவன் இறந்தமையால் அவையெல்லாம் பயன்படாவாயின என அங்கதன் தன் தந்தையின் பெரும் பிரிவினை நினைந்து செயலற்று வருந்தினான். இங்ஙனம் தன் தந்தையாகிய வாலியின் தாள்களின் ஆற்றலையும் வாலின் வன்மையினையும் கூறுமுகமாக அவனது சிவபத்தி மாண்பினையும் தனக்கென வாழாப் பிறர்க்குரியாளனும் பெருவண்மையினையும் அங்கதன் ஒருங்கு புலப்படுத்திய திறம் உய்த்துணரத்தக்கதாகும். (152)

4190. பஞ்சின்மெல் லடியாள் பங்கன்
பாதுக மலாதி யாதும்
அஞ்சலித் தறியாச் செங்கை
யாணையா யமரர் யாரும்
எஞ்சல ரிருந்தா ருன்ன
லின்னமு தீந்த நீயோ
துஞ்சினை வள்ளி யோர்க
ணின்னின்யார் சொல்லற் பாலார்.

'பஞ்சின் மெல் அடியாள் பங்கன்
பாதுகம் அலாது யாதும்
அஞ்சலித்து அறியாச் செங்கை
ஆணையாய்! அமரர் யாரும்

எஞ்சலர் இருந்தார் உன்னால்;
இன் அமுது ஈந்த நீயோ
துஞ்சினை; வள்ளி யோர்கள்
நின்னின் யார் சொல்லற் பாலார்?'

பொ :—பஞ்சினும் மெல்லிய திருவடியினையுடையாளாகிய உமையம்மையை ஒருபாகத்திற் கொண்ட சிவபெருமானது திருவடி நிலையினையன்றிப் பிறிதொன்றையும் (மறந்தும்) வணங்கியறியாத செம்மை வாய்ந்த கைகளையும் ஆணைச் சக்கரத்தையும் உடைய அரசே! தேவர்கள் எல்லோரும் (பாற்கடலைக் கடைந்து அமுதம் வழங்கியவனாகிய) உனது பேருதவியால் தம் தொகுதியிற் குறையாதவராய் (இறவாது) நிலைத்து வாழ்கின்றார்கள். இனிய அமுதத்தை (நினக்கென வைத்துக்கொள்ளாது அவர்களுக்கு) வழங்கிய நீயோ (இங்ஙனம் பகைவரால் அம்பு எய்யப்பட்டு) உயிர் துறந்தனை. (இவ்வாறு தனக்கென வாழாது பிறர்க்கென வழங்கிய) நின்னைப்போன்று வள்ளன்மையுடையராக எடுத்துரைக்கத்தக்கார் (இவ்வுலகில்) வேறு யார் இருக்கிறார்கள்? (ஒருவரும் இலர்).

கு :—பஞ்சின் மெல்லடியாள் பங்கன் என்றது, மாதொருபாகனாகிய சிவபெருமானை. 'பஞ்சின் மெல்லடியாள் பங்கநீ யல்லால் பற்று நான் மற்றிலேன் கண்டாய்' (453) என்பது திருவாசகம். பாதுகம் - திருவடிநிலை. கடவுளை வழிபடுவோர் அவ்விறைவனது திருவடி நிலையினை வழிபட்டுச் சென்னியில் வைத்துப் போற்றும் மரபு உண்டென்பது, "நிலவுக்கதி ரளைந்த நீளிருஞ் சென்னி, உலகு பொதியுருவத் துயர்ந்தோன் சேவடி, மறஞ்சேர் வஞ்சி மாலையொடு புனைந்து, இறைஞ்சாச் சென்னி யிறைஞ்சி வலங் கொண்டு" (கால்கோட் - 54-58) என வரும் சிலப்பதிகாரத் தொடரால் இனிது விளங்கும். இனி, பதயுகம் எனப் பாடங்கொண்டு 'திருவடியிணை' எனப் பொருளுரைத்தலும் பொருந்தும். அஞ்சலித்தல் - கைகூப்பி வணங்குதல். வாலியின் செம்மை பொருந்திய கைகள் சிவபெருமானது திருவடியையன்றிப் பிறிதொன்றையும் மறந்தும் வணங்கியறியாதன என்றதனால் வாலியாகிய அவன், சிவபெருமானது திருவடியையன்றிப் பிறிதெதனையும் கும்பிட்டறியாத உறுதிப்பாடுடைய சிறந்த சிவபத்தனாக விளங்கினான் என்பதனை இனிது விளக்கியவாறு. 'வம்பறுவரி வண்டு மணநாற மலரும் மது மலர் நற்கொன்றையான் அடியலாற் பேணா எம்பிரான் சம்பந்தன்' (திருத்தொண்டத்தொகை-5) என வரும் நம்பியாரூரர் வாய்மொழியும் இத்தகைய உறுதிப்பாட்டினை இனிது விளக்குதல் இங்கு நினைக்கத் தக்கதாகும். அமரர் - மரணமில்லாதவர்; தேவர். எஞ்சுதல் - குறைதல். எஞ்சலர், முற்றெச்சம். நீயோ என்புழி ஓகாரம் தெரி

நிலை. நீ நினக்குரிய பூத உடம்பினைவிட்டு இறந்தனையாயினும், நினது வண்மைத்திறம் அமரரை என்றும் இறவாதவராய் வாழவைத்தலால், நீ என்றும் அழியாத புகழுடம்புடன் இவ்வுலகில் நிலைபெற்றுள்ளாய் என்பான், 'அமரர் யாரும் உன்னால் எஞ்சலர் இருந்தார்; இன்னமுது ஈந்த நீயோ துஞ்சினை; வள்ளியோர்கள் நின்னின் யார் சொல்லற்பாலார்?' எனத் தன் தந்தையைப் பரவிப் போற்றினன் அங்கதன். (153)

## வருந்திய அங்கதனை வாலி தழுவித் தேற்றுதல்

4191. ஆயன பலவும் பன்னி
யழுங்கினன் புழுங்கி நோக்கித்
தீயுறு மெழுகிற் சிந்தை
யுருகினன் செங்கண் வாலி
நீயினி யயர்வா யல்லை
யென்றுதன் னெஞ்சிற் புல்லி
நாயக னிராமன் செய்த
நல்வினைப் பயனி தென்றான்.

ஆயன பலவும் பன்னி,
அழுங்கினன் புழுங்கி, நோக்கித்
தீ உறு மெழுகின் சிந்தை
உருகினன்; செங்கண் வாலி,
'நீ இனி அயர்வாய் அல்லை'
என்று, தன் நெஞ்சில் புல்லி,
'நாயகன் இராமன் செய்த,—
நல்வினைப் பயன், இது' என்றான்.

பொ :—(அங்கதன்) மேற்குறித்தனவாகிய பலவற்றையும் மீட்டும் மீட்டும் கூறிப் புலம்பி வருந்தியவனாய் மனம் வெதும்பி (த் தன் தந்தையை) நோக்கி அழலிற்பட்ட மெழுகினைப்போன்று நெஞ்சம் நெக்குருகினான்; சிவந்த கண்களையுடைய வாலி, (தன் மகனை நோக்கி) 'மைந்தனே! இனி நீ தளர்ந்து வருந்தக் கடவாயல்லை' என்று சொல்லித் தன் மனம் பொருந்த அணைத்துக்கொண்டு, (எல்லாவுயிர்கட்கும்) தலைவனாகிய இராமன் செய்த இது, (யான் செய்த) புண்ணியத்தின் பயனாகும் என்று கூறினான்.

கு :—கைத்தலத்து உவரிநீரைக் கலக்கினன் பயந்தகாளை, சுடருடை மதியமென்னத் தோன்றினன், தாதையைக் கண்ணிற் கண்டான், மதியின் மீதா மீன் விழுந்தென்ன வீழ்ந்தான், 'எந்தையே எந்தையே' என்பது முதலாக ஆயன பலவும் பன்னி அழுங்கினன் புழுங்கி, சிந்தை உருகினன் எனவும், செங்கண் வாலி (தன் மகனை நோக்கி) 'நீ இனி அயர்வாய் அல்லை' என்று தன் நெஞ்சிற் புல்லி, 'நாயகன் இராமன் செய்த இது நல்வினைப்பயன்' என்ருன் எனவும் சொல் முடிபு கொள்க. பன்னுதல் - பலமுறை கூறுதல். அழுங்குதல் - வருந்துதல். புழுங்குதல் - மனம் வெதும்புதல். வாலி தன் காதல் மகனுகிய அங்கதனை இரு கைகளாலும் தன் மார்போடு அணைத்துத் தழுவிக்கொள்ளும் பேரார்வமுடையனுய்த் தான் மார்பில் அம்புபட்டுக் கிடந்த நிலையில் அவ்வாறு இறுக அணைத்துக் கொள்ளுதற்கியலாதவனுய், அவனை நெஞ்சத்தால் இறுகத் தழுவிக்கொண்டான் என்பார், 'நெஞ்சிற் புல்லி' என்ருர். புல்லுதல் - தழுவிக் கொள்ளுதல். இது என்றது, தான் அம்பினுல் எய்யப்பட்டு உயிர் பிரியும் நிலையில் வீழ்ந்து கிடக்கும் நிலையினை. என்னை இவ்வாறு அம்பினுல் ஒறுத்தவன் நமக்குப் பகையாயினுன் அல்லன்; இதனைச் செய்தவனுகிய இராமன் எவ்வுயிர்க்கும் தலைவனுகிய இறைவனே எனத் தெளிவாயாக எனவும், இவ்வாறு யான் அம்பினுற் கொல்லப் பட்டு வீழ்ந்து கிடக்கும் இந்நிலைதானும் எனது தீவினையால் விளைந்த தன்று; பல பிறவிகளிலும் யான் செய்து போந்த நல்வினைகளாகிய புண்ணியத்தின் பயனென்றே கொள்வாயாக எனவும் வாலி தன் புதல்வனுக்கு அறிவுறுத்தும் நிலையில் 'நாயகன் இராமன் செய்த நல்வினைப் பயன் இது' எனக் கூறினுன். 'ஆருயிர் நாயகனுகிய இராமன் என்னை அம்பினுல் தண்டித்த இச்செயல், யான் முன்னைப் பிறவிகளிற் செய்து போந்த புண்ணியத்தின் பயனும்' என வாலி அங்கதனுக்கு அறிவுறுத்தினுன் என்பதாம். (154)

## வாலி அங்கதனுக்கு அறிவுரை கூறுதல் 4192-4194

**4192.** தோன்றலு மிறத்த ருனுந்
துகளறத் துணிந்து நோக்கின்
மூன்றுல கத்தி னோர்க்கு
மூலத்தே முடிந்த வன்றே
யான்றவ முடைமை யாலிவ்
விறுதிவந் திசைந்த தியார்க்குஞ்
சான்றென நின்ற வீரன்
ருன்வந்து வீடு தந்தான்.

'தோன்றலும், இறத்தல் தானும்,
துகள் அறத் துணிந்து நோக்கின்,
மூன்று உலகத்தினோர்க்கும்
மூலத்தே முடிந்த அன்றே?
யான் தவம் உடைமையால் இவ்
இறுதி வந்து இசைந்தது; யார்க்கும்
சான்று என நின்ற வீரன்,
தான் வந்து வீடு தந்தான்.'

பொ :—'குற்றம் நீங்க ஆராய்ந்து பார்க்குங்கால் பிறத்தலும் இறத்தலும் ஆகிய இவை (மேல் கீழ் நடு என்னும்) மூவகைப்பட்ட உலகங்களில் வாழ்வார்க்கும் (தாய் வயிற்றிற் கருவாய்ப் பதியும்) முன்னரே (வரையறுக்கப்பட்டு) முடிந்து கிடந்தனவாகும். யான் முன் செய்த பெருந்தவம் உடைமையால் இத்தகைய நல்லதோர் சாக்காடு எனக்குத் தானே வந்து பொருந்தியது. (எவ்வுயிர்க்கும்) சாட்சியாய் நிற்கின்ற வீரனாகிய இராமபிரான் தானே (விரும்பி என் பால் எழுந்தருளி) வந்து வீடு பேற்றினைத் தந்தருளினான்.

கு :—பிறத்தலும் இறத்தலும் மூவகை யுலகங்களில் வாழும் எல்லா உயிர்களுக்கும் தொன்றுதொட்டு மாறாது தொடர்ந்து வரும் இயல்பாதலின் அவ்வியல்பின்படி எனக்கு இப்பொழுது நேர்ந்த சாக்காட்டினைக் குறித்து நீ சிறிதும் கவலையுறாதே என்பான், 'தோன்றலும் இறத்தல்தானும் மூன்றுலகத்தினோர்க்கும் மூலத்தே முடிந்த' என்றான். துகள் அறத் துணிதல் - குற்றம் அற ஆராய்தல். தோன்றல் - பிறத்தல். மூலத்தே - உயிர் கருவிற் பதியும் முன்னை நிலையிலேயே. முடிந்த - முடிந்தன; நியமிக்கப்பட்டு அமைந்தன. 'மூன்றுலகத்தினோர்க்கும்' எனச் சிறப்புப் பற்றி உயர்திணை மேல் வைத்துக் கூறினும் இனம் பற்றி ஏனை அஃறிணையுயிர்களும் கொள் ளப்படும். "சாதலும் பிறத்தல் தானும் தம்வினைப் பயத்தினாகும், ஆதலும் அழிவும் எல்லாம் அவை பொருட்கு இயல்பு கண்டாய், நோதலும் பரிவும் எல்லாம் நுண்ணுணர் வின்மையன்றே' (சீவக - 269) எனச் சச்சந்தன் தன் மனைவி விசையைக்குக் கூறிய ஆறுதல் மொழி இங்கு ஒப்புநோக்கத் தக்கதாகும். 'பிறத்தலும் இறத்தலும் என இவ்வாறு மாறி மாறி வரும் நிலையில் எனக்கு இப்பொழுது நேர்ந்த இறப்பானது, யான் பெற்றுடைய முன்னைத் தவப்பயன் காரணமாக மீளவும் பிறவா நிலைமைத்தாகிய சிறப்புடனே கூடி வந்தது' என்பான், 'யான் தவம் உடைமையின் இவ் இறுதி வந்து இசைந்தது' என்றான். உயிர்கள் உள்ளத்தால் எண்ணிச் செய்யும் நலந் தீங்குகள் எல்லாவற்றிற்கும் மறைக்கவொண்ணாத சாட்சியாய் உயிர்க்குயிராய் நடு நிற்பவன் இறைவன் ஆதல் பற்றி அம் முதல்

வனை 'யார்க்கும் சான்றென நின்ற வீரன்' எனக் குறித்தான். 'எவ்வுயிர்க்கும் சான்ரும் ஒருவனை' (பெரிய - திருநாவுக் - 134) எனக் குறித்தார் அருண்மொழித் தேவரும். ஈண்டுச் 'சான்றென நின்ற வீரன்' என்றது இறைவனுகிய திருமாலின் அமிசமாம் இராமபிரானை. மெய்யுணர்வுடையோர் பலவகை உபாயங்களையும் கடைப்பிடித்து வீட்டுலகினையடைந்து கண்டு இன்புறத்தக்க அரும்பொருளாகிய முதல்வனே, தன்னைப் பற்றிச் சிறிதும் எண்ணுத கொடுவினையேனுகிய என் திறத்தும் தனக்கு இயல்பாக வமைந்த பெருங் கருணையால்தானே எளி வந்து, தன் சொரூப நிலையை முன்னர்க் காட்டிப் பின் பேராவியற்கையாகிய வீடுபேற்றினை எனக்கு வழங்கியருளினுன் என்பான், 'யார்க்கும் சான்றென நின்ற வீரன் தான் வந்து வீடு தந்தான்' என்ருன். (155)

4193. பாலமை தவிர்நீ யென்சொற்
பற்றுதி யாயிற் றன்னின்
மேலொரு பொருளு மில்லா
மெய்ப்பொருள் வில்லுந் தாங்கிக்
கால்தரை தோய நின்று
கட்புலக் குற்ற தம்மா
மால்தரும் பிறவி நோய்க்கு
மருந்தென வணங்கு மைந்த.

'பாலமை தவிர் நீ; என் சொல்
பற்றுதி ஆயின், தன்னின்
மேல் ஒரு பொருளும் இல்லா
மெய்ப்பொருள், வில்லும் தாங்கி,
கால் தரை தோய நின்று,
கட்புலக்கு உற்றது அம்மா!
மால்தரும் பிறவி நோய்க்கு
மருந்து என வணங்கு மைந்த!'

பொ :—'மகனே! சிறு பிள்ளைத் தன்மையை விட்டு விடுவாயாக. நீ எனது வார்த்தையை உறுதியெனக் கொள்வாயானல், தன்னின் மேம்பட்டதொரு பொருளும் இல்லாத (உயர்வறவுயர்ந்த முழுமுதற் பொருளாகிய) மெய்ப்பொருள்தானே (மாற்ற மனம் கழிய நின்ற) தனது திருவடி மண்ணிற் பொருந்தும்படி (இராமனுகி) நின்று விற்படையினையும் ஏந்திக் கொண்டு நமது கண்ணினது அறிவாகிய

காட்சியுணர்வுக்குப் பொருளாய் வந்து எதிர்ப்பட்டது. இஃது என்ன வியப்பு. மயக்கத்தை விளைக்கும் பிறப்பென்னும் பிணியினை அறவே நீக்குதற்குரிய அருமருந்தெனக் கருதி (இம் முழுமுதற் பொருளை) விரைந்து வணங்கி உய்தி பெறுவாயாக.

கு:—இராமனது ஒறுத்தற் செயலின் பயனாக மெய்யுணர்வு கைவரப்பெற்ற வாலி, தான் அடைந்த ஞானச் செல்வத்தைத் தன் புதல்வனும் அடைந்து உய்யுமாறு அறிவுறுத்துபவன், தான் சொல்லும் அறிவுரையைத் தன் மகன் விளையாட்டுத் தன்மையை விடுத்து மிகவும் கருத்துடன் கேட்டு நடத்தல் வேண்டும் என்னும் பேரார்வத்தால், 'மைந்த பாலமை தவிர் நீ' என்றான். பாலமை - பாலனும் தன்மை; பிள்ளைமைத்தன்மை; என்றது, இன்றியமையாது விரைந்து செய்தற்குரிய கடமைகளிற் கருத்தின்றி வெறும் பொழுது போக்கில் ஈடுபட்டிருத்தலாகிய விளையாட்டுத் தன்மை. யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான் இறைவன் ஒருவனே எனவும், அவனுக்கு மேலாக உயர்ந்த பொருள் எதுவும் இல்லை யெனவும், சிந்தைக்கும் மொழிக்கும் எட்டாத அம்மெய்ப்பொருள் தானே இப்பொழுது நம் கட்புலனாற் காணுமாறு இராமனாக எழுந்தருளிய தெனவும் தன் புதல்வனுக்கு அறிவுறுத்த எண்ணிய வாலி, 'தன்னின் மேலொரு பொருளும் இல்லா மெய்ப்பொருள்......வில்லும் தாங்கிக் கால் தரைதோய நின்று கட்புலக்கு உற்றது' என எடுத்துரைத்தான். கட்புலத்துக்கு என வரற் பாலது, 'கட்புலக்கு' என அத்துச் சாரியை யின்றி வந்தது. கட்புலம் - கண்ணினது புலம். என்றது காட்சியுணர்வினை. புலம் - அறிவு. அம்மா என்பது வியப் பிடைச் சொல். கருத்துக்கும் மொழிக்கும் எட்டாத அம்மெய்ப் பொருள் நம் கண்களுக்குப் புலனாக வெளிப்பட்டருளிய இப்பொழுதே பிறவிப்பிணி தீர்க்கும் நன் மருந்தாகிய அதனை விரைந்து வணங்கி உய்தி பெறுவாயாக என்பான், 'மால்தரும் பிறவி நோய்க்கு மருந்து என வணங்கு' எனத் தன் மைந்தனுக்கு அறிவுறுத்தினான். யாவராலும் காணுதற்கரிய அருவநிலையினதாகிய பரம்பொருள், தேவர்களை யொத்த கூரிய கண்ணொளியுடையார் சிலரே காணுமாறு கால் நிலந்தோயாக் கடவுளாய் வரும் நிலையில் அமைந்துவிடாது தேவர் மட்டுமன்றி மக்கள் முதலிய யாவரும் கண்டு உய்தி பெறுமாறு இராமனாக அவதரித்துக் கால் நிலந்தோயும்படி கல்லும் முள்ளும் நிறைந்த காடுகளைக் கடந்து நமக்கு மிகவும் எளிமை நிலையில் இங்கு எழுந்தருளி வந்தது என்பான், 'மேல் ஒரு பொருளும் இல்லா மெய்ப்பொருள்......கால் தரை தோய நின்று கட்புலக்கு உற்றது' என்றான். மந்திரம் தந்திரம் முதலிய எத்தகைய உபாயங்களாலும் தீர்க்கவொண்ணாத பிறவிப் பிணியை அறவே போக்கி ஆருயிர்கட்கு நலஞ் செய்யவல்ல ஆற்றல் வாய்ந்த

அருமருந்து (இராமனுகிய) இதுவே எனத் தெளிந்து விரைந்து வணங்கி உய்தி பெறுவாயாக' என உணர்த்துவான், 'மால்தரும் பிறவி நோய்க்கு மருந்து என வணங்கு' என்ருன். மால் - மயக்கம். 'என் சொற் பற்றுதியாயின், வணங்கு' என இயையும். (156)

4194. என்னுயிர்க் கிறுதி செய்தா
னென்பதை யிறையு மெண்ணு
துன்னுயிர்க் குறுதி செய்தி
யிவற்கம ருற்ற துண்டேல்
பொன்னுயிர்த் தொளிரும் பூணுய்
பொன்றுதி தருமம் போற்றி
மன்னுயிர்க் குறுதி செய்வான்
மலரடி சுமந்து வாழ்தி.

'என் உயிர்க்கு இறுதி செய்தான்
என்பதை இறையும் எண்ணுது,
உன் உயிர்க்கு உறுதி செய்தி;
இவற்கு அமர் உற்றது உண்டேல்,
பொன் உயிர்த்து ஒளிரும் பூணுய்
பொன்றுதி; தருமம் போற்றி
மன்னுயிர்க்கு உறுதி செய்வான்
மலர் அடி சுமந்து வாழ்தி.'

பொ :—('உயிரில் பொருளாகிய) பொன் உயிரும்:பெற்று ஒளிர்ந் தாற் போன்று ஒளி செய்யும் அழகிய அணிகலன்களையுடையவனே! (இவ் இராமன், உன் தந்தையாகிய) எனது உயிர்க்கு இறுதியை யுண்டாக்கினுன் என்பதனைச் சிறிதும் நின் மனத்திற் கொள்ளாமல் (இவனை அன்பினுல் வழிபட்டொழுகுந் திறத்தால்) உன்னுடைய உயிர்க்கு உறுதி பயக்கும் நிலையுடைய ஆக்கங்களைத் தேடிக்கொள் வாயாக. (உண்ணும் நீரினும் உயிரினும் சிறந்தானுகிய) இவனுக்குப் பகைவரொடு போர் செய்யும் நிலைமை ஏற்படுமானுல், அறத்தினை (அழியாது நிலைபெற)க் காத்து நீ (இவன் பொருட்டு அப்போரில் நின்னுயிரைக் கொடுத்து) இறப்பாயாக. நிலைத்த உயிர்த்தொகுதி கள் எல்லாவற்றிற்கும் (அழிவில் பேரின்பமாகிய) உறுதிப் பொருளை அளித்தருளும் இத்தலைவனுடைய செந்தாமரை மலர்போலுந் திருவடிகளைச் சிரமேற்கொண்டு (இவன் இட்ட பணிகளைச் செய்து) வாழ்வாயாக.'

கு:—இறுதி - முடிவு; மரணம். பொன் உயிர்த்தல் - உயிரில் பொருளாகிய பொன் உயிருடையது போன்று பொலிவுற்றுத் தோன்றுதல். இனி, உயிர்த்தல் என்பதற்கு இயற்றப்படுதல் எனப் பொருள் கொள்ளுதலும் உண்டு. பூண்-அணிகலம். உயிர்க்கு என்றும் அழிவில்லையாதலின் மன்னுயிர் என்றான். 'இராமனாகிய இவன் என் தந்தையைக் கொன்றவன்' என்னும் எண்ணத்தை விட்டுவிட்டு, 'உண்மையான தந்தையும் தெய்வமும் ஆவான் இவ் இராமனே' எனத் தெளிந்து இவனை வழிபட்டு உய்வாயாக' என வாலி தன் புதல்வன் அங்கதனுக்கு அறிவுறுத்தினான் என்பதாம். 'இவற்கு அமர் உற்றதுண்டேல்...பொன்றுதி' என வாலி தன் மகனுக்குக் கூறிய இவ்வறிவுரை, 'மகனே, இவன்பின் செல்......அடியாரின் ஏவல் செய்தி...முன்னம் முடி' என இலக்குவனை நோக்கி அவன் தாய் கூறிய அறிவுரையினை யொத்து நெஞ்சத்தை நெகிழ்விக்கும் நிலையில் அமைந்திருத்தல் நோக்கத்தக்கதாகும். (157)

அங்கதனுக்கு உறுதியுரை கூறிய வாலி, இராமனை நோக்கி இவ் அங்கதன் உன் கையடைப் பொருளாவான் எனக் காட்டுதல் 4195-4196

**4195.** என்றன னினைய வாய
வுறுதிகள் யாவுஞ் சொல்லித்
தன்றுணைத் தடக்கை யாரத்
தனயனைத் தழுவிச் சாலக்
குன்றினு முயர்ந்த திண்டோட்
குரக்கினத் தரசன் கொற்றப்
பொன்றிணி வயிரப் பைம்பூட்
புரவலன் றன்னை நோக்கி.

என்றனன் இனைய ஆய
உறுதிகள் யாவும் சொல்லி,
தன் துணைத் தடக்கை ஆரத்
தனயனைத் தழுவி, சாலக்
குன்றினும் உயர்ந்த திண்தோள்
குரக்கு இனத்து அரசன், கொற்றப்
பொன்திணி வயிரப் பைம்பூண்
புரவலன் தன்னை நோக்கி.

பொ :—மலையைக் காட்டிலும் மிக உயர்ந்த தோள்களையுடைய வானர குல மன்னனாகிய வாலி, மேற்குறித்தவற்றைக் கூறியவனாய் இத்தன்மையவாய உறுதி பயக்கும் அறிவுரைகளை (அங்கதனுக்கு)ச் சொல்லி (அவனைத்) தன்னுடைய நீண்ட பெரிய இரண்டு கைகளாலும் பொருந்தத் தழுவிக்கொண்டு, திணிந்த பசும் பொன்னால் இயற்றப்பட்டு வயிரம் முதலிய நன் மணிகள் பதிக்கப் பெற்ற அணிகலன்களையுடைய வெற்றி வேந்தனாகிய இராமனை நோக்கி.

கு :—இது முதல் மூன்று செய்யுட்கள் ஒரு தொடர். தனயன் - புதல்வன்; என்றது அங்கதனை. துணை - இரண்டு. தடக்கை - நீண்ட பெரிய கை. ஆர - பொருந்த. குன்றினும் சால உயர்ந்த திண்தோள் என இயையும். சால - மிகவும். குரக்கினத்து அரசன் என்றது, வானரகுல வேந்தனாகிய வாலியை. குரக்கினத்து அரசன், என்றனன், இனையவாய உறுதிகள் யாவும் சொல்லித் தனயனைத் தழுவி, புரவலன் தன்னை நோக்கி என இயையும். புரவலன் என்றது, மாநிலங் காவலனாகிய இராமனை. நோக்கி என்னும் எச்சம் அடுத்த பாடலில் உள்ள 'என்று' என்னும் எச்சத்தைக் கொண்டு முடியும். (158)

**4196.** நெய்யடை நெடுவேற் றானை
நீனிற நிருத ரென்னுந்
துய்யடை கனலி யன்ன
தோளினன் றொழிலுந் தூயன்
பொய்யடை யுள்ளத் தார்க்குப்
புலப்படாப் புலவ மற்றுன்
கையடை யாகு மென்றவ்
விராமற்குக் காட்டுங் காலை.

'நெய் அடை நெடுவேல் தானை
நீல் நிற நிருதர் என்னும்
துய் அடை கனலி அன்ன
தோளினன், தொழிலும் தூயன்;
பொய் அடை உள்ளத்தார்க்குப்
புலப்படாப் புலவ! மற்று உன்
கையடை ஆகும்' என்று, அவ்
இராமற்குக் காட்டும் காலை.

பொ :—'பொய்ம்மை நிறைந்த நெஞ்சினராகிய வஞ்சகர்க்குப் புலனாகாத தூய திருமேனியுடையவனே! (அங்கதனாகிய இவன்) நெய் பூசப்பெற்ற நீண்ட வேற்படையையுடைய அரக்கர் சேனை யாகிய கருநிறப் பஞ்சினைப் பற்றி யெரிக்கும் நெருப்பினை யொத்து விளங்கும் தோளினையுடையவன்; (மனத்தாலும் வாக்காலும் தூய னாதலோடு) செயலாலும் தூய்மையுடையவன். இவன் உன்னாற் பாதுகாக்கத்தக்க அடைக்கலப் பொருளாவான்' என்று கூறி (வாலி தன் மகனை) இராமனுக்குக் காட்டியபொழுது.

கு :—நிருதர் - அரக்கர். தானை - சேனை. 'நெய் அடை நெடு வேல் நிருதர் தானை என்னும் நீல் நிறத்துய்' என இயையும். துய் - பஞ்சு. வெண்ணிறப் பஞ்சினின்றும் இது வேறுபட்டதென்பது தோன்ற 'நீல் நிறத் துய்' எனப்பட்டது. நிருதர் தானையைப் பஞ்சு என உருவகஞ் செய்தமைக்கு ஏற்ப, அவ்வரக்கர் குழுவை அடியோடு ஒழிக்கவல்ல ஆற்றல் மிக்க தோளினனாகிய அங்கதனைக் 'கனலியன்ன தோளினன்' எனச் சுட்டினான். கனலி - நெருப்பு. 'துய்யடைக் கனலியன்ன தோளினன்' எனப் பாடங்கொண்டு, துய் அடைக்கு அனலி அன்ன தோளினன்' எனப் பிரித்துப் பொருளுரைத்தலும் உண்டு. இங்ஙனம் கூறுங்கால் 'துய் அடை' என்பதற்குப் பஞ்சுப் பொதியெனப் பொருள் கொள்வர். உள்ளத் தாலும் மொழியாலும் தூயனாதலோடு செயலாலும் தூய்மை யுடையான் என்பான் 'தொழிலுந் தூயன்' என்றான். தொழிலும் என்புழி உம்மை எச்சவும்மை. பொய்ம்மை நிறைந்த மனத்தார்க்குப் புலப்படாதவனாகி மறைந்தும், மெய்ம்மையுடையாருள்ளத்தில் விழுமிய ஞானப்பொருளாய் வெளிப்பட்டும் அருள்புரியவல்ல இறைவன் இராமனாகிய நீயே என்பதனை நின்னருளால் தெளிய வுணர்ந்தேன் என்பான், 'பொய்யடையுள்ளத்தார்க்குப் புலப்படாப் புலவ' என அழைத்துப் போற்றினான் வாலி. 'பொய்யர்தம் பொய்யினை மெய்யர் மெய்யை' (திருவாசகம்–206) எனவும், 'மெய் யர்க்கே மெய்யனாகும் விதியிலா வென்னைப் போலப் பொய்யர்க்கே பொய்யனாகும் புட்கொடியுடைய கோமான்' (திவ்யப்-886) எனவும் வரும் ஆன்றோர் அருளிச் செயல்கள் இங்கு நினைக்கத்தக்கனவாகும். அடைதல் - நிறைதல். கையடை - அடைக்கலப் பொருள். இதன் பின் 27, 45ஆம் பிரதிகளில் பின்வரும் மிகைப் பாடல் காணப்படு படுகிறது. (159)

4196 (a) " இடைக்க லாமிவ னேவிய தோர்பணி
கிடைத்துப் போந்தது செய்யுமிக் கேண்மையால்
படைக்க லத்த பழம்பொரு ளேயுன
தடைக்க லமடி யேன்பெற்ற வையனே "

அங்கதனை இராமன் ஏற்றுக் கொள்ள,
வாலி பரமபதம் அடைதல்

4197. தன்னடி தாழ்த லோடுந்
தாமரைத் தடங்க ணனும்
பொன்னுடை வாளை நீட்டி
நீயிது பொறுத்தி யென்றான்
என்னலு முலக மேழு
மேத்தின விறந்து வாலி
அந்நிலை துறந்து வானுக்
கப்புறத் துலக னானான்.

தன் அடி தாழ்தலோடும்
தாமரைத் தடங்கணனும்,
பொன் உடை வாளை நீட்டி,
'நீ இது பொறுத்தி' என்றான்;
என்னலும், உலகம் ஏழும்
ஏத்தின; இறந்து, வாலி,
அந் நிலை துறந்து, வானுக்கு
அப்புறத்து உலகன் ஆனான்.

பொ :—(அங்கதன்) தன்னுடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கிய அளவில், செந்தாமரை மலர்போலும் அழகிய பெரிய கண்களையுடையனாகிய இராமனும் (அவனை அடைக்கலமாக ஏற்றுக் கொண்டமைக்கு அறிகுறியாகத்) தனது அழகிய உடைவாளைக் கையில் எடுத்து நீட்டி ('அங்கதனே) நீ இதனை நின் கையிற் கொள்வாயாக' எனப் பணித்தருளினான். அவ்வாறு கூறியபோது ஏழுலகங்களில் வாழும் உயிர்கள் யாவும் (அடைந்தாரைப் புரந்தருளும் இராமனது இறைமைக்குணத்தை வியந்து) துதித்தன. வாலியானவன் உடம்பை விட்டு உயிர் நீங்கப்பெற்று (உலகத் தொடர்பாகிய) அந்நிலையை அறவே விட்டொழித்து (வானோர்க்கும் எய்துதற்கு அரியதாய்) வானுலகுக்கும் அப்பாற்பட்டதாய் உயர்ந்த வீட்டுலகினை அடைந்தவனாயினான்.

கு :—'தன்' என்றது, தாமரைத் தடங்கணன் ஆகிய இராமனை. அடிதாழ்தல் - பாதங்களில் வீழ்ந்து வணங்குதல். அடிதாழ்ந்தோன் அங்கதனாதலின், இச்செய்யுளில் தாழ்தற்கு எழுவாயாக அங்கதன் என்னும் வினைமுதல் வருவித்துரைக்கப்பட்டது. இராமனது அம்பினால் எய்யப்பெற்று, அம்முதல்வனது அருளுரையால் மெய்யுணர்வு

பெற்ற வாலி, தம்பி சுக்கிரீவன்பால் தான் செய்த பெரும் பிழையினை யுணர்ந்து தன் பிழைக்கு ஏசற்று வருந்தியதுடன் தான் கொண்டுள்ள காமம் வெகுளியாகிய் குற்றங்களை விட்டொழித்து, தானல்லாத உடம்பை 'யான்' என்றும் தன்னோடு இயைபில்லாத பொருளை 'எனது' என்றும் பற்றுச் செய்தற்குக் காரணமாயிருந்த அறியாமையாகிய மயக்கத்தினையும் அறவே நீக்கினான் ஆதலின் வானோர்க்கும்' எய்துதற்கரிய வீட்டுலகத்தை விரைவில் எய்தப் பெற்றான் என்பார், 'வாலி அந்நிலை துறந்து வானுக்கு அப்புறத்து உலகன் ஆனான் என்றார் ஆசிரியர். அந்நிலை துறத்தலாவது, காமம் வெகுளி மயக்கம் காரணமாக இறந்தும் பிறந்தும் அல்லலுற்றுழலுதலாகிய உலகத் தொடர்பாகிய பாசப் பிணிப்பினை அறவே விட்டொழித்து உயிர் தூய்மை எய்துதல். இராமனருளால் மெய்யுணர்வு கைவரப் பெற்ற வாலி, 'காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன், நாமங்கெடக் கெடும் நோய்' (360) எனவும், 'யான் எனது என்னும் செருக்கு அறுப்பான் வானோர்க்கு உயர்ந்த உலகம் புகும்' (346) எனவும் தெய்வப் புலவர் திருவள்ளுவர் அருளிய பொருளுரைக்கு இலக்கியமாகி வீடு பெற்ற செய்தியினைக் கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பர் விளங்க அறிவுறுத்திய திறம் உணர்ந்து மகிழத்தக்கதாகும். 'வானோர்க் குயர்ந்த வுலகம் புகும்' என்னும் வள்ளுவர் வாய்மொழியை அடியொற்றி 'வானுக்கு அப்புறத்து உலகன் ஆனான்' என்ற தொடர் அமைந்திருத்தல் கூர்ந்து நோக்கத்தக்கதாம். அடைந்தாரைப் புரக்கும் ஆற்றல்மிக்க பெருவீரர்கள் தம்மைப் பணிந்து வந்தாரை அடைக்கலமாக ஏற்றுக்கொண்டமைக்கு அறிகுறியாகத் தற்காப்புக் குரியதாகத் தம்பாலுள்ள உடைவாளை அவரது கையிற் கொடுத்தல் பண்டை நாளில் நிலவிய மரபென்பது, இராமன் வாலியின் வேண்டுகோளின்படி அவன்மகன் அங்கதனை அடைக்கலமாக ஏற்றுக் கொள்ளும்போது தன்பாலுள்ள உடைவாளை அங்கதனது கையிற் கொடுத்த இச்செயலால் உய்த்துணரப்படும். இத்தகைய அடைக் கலச் சிறப்பால் இராமனது உடைவாளினைக் கையில் ஏந்துதற்குரிய சிறப்புரிமை பெற்றோன் அங்கதன் ஒருவனே யென்ற உண்மையை 'அரியணை யனுமன்தாங்க அங்கதன் உடைவாளேந்த' என வரும் பாடலில் ஆசிரியர் புலப்படுத்தியுள்ளமை இங்கு நினைத்தற்குரிய தாகும். பொறுத்தல் - கையில் ஏந்துதல். குரக்கினத்தரசன், தனயனைத் தடக்கை ஆரத் தழுவி, புரவலன் தன்னை நோக்கி, 'புலவ! தோளினன், தொழிலுந் தூயன் (இவன்) உன் கையடை ஆகும்' என்று, அவ் இராமற்குக் காட்டுங்காலை, (அங்கதன்) தன் அடிதாழ்தலோடும், தாமரைச் செங்கணானும் (அங்கதனை நோக்கி) உடைவாளை நீட்டி 'நீ இது பொறுத்தி' என்றான்; என்னலும் உலகம் ஏழும் ஏத்தின; வாலி இறந்து, அந்நிலை துறந்து, வானுக்கு அப் புறத்து உலகன் ஆனான்' என வினைமுடிவு செய்க. (160)

வாலி உயிரைக் கவர்ந்த இராம பாணம், தூயநீர்க்கடலில் நீராடி, இராமனது அம்பருத் தூணியில் வந்தடைதல்

4198. கையவ ணெகிழ்த லோடுங்
கடுங்கணை கால வாலி
வெய்யமார் பகத்துட் டங்கா
துருவிமேக் குயர மீப்போய்
துய்யநீர்க் கடலுட் டோய்ந்து
தூய்மல ரமரர் சூட்ட
ஐயன்வெந் விடாத கொற்றத்
தாவம்வந் தடைந்த தன்றே.

கை அவண் நெகிழ்தலோடும்,
கடுங்கணை, கால வாலி
வெய்ய மார்பு அகத்துள் தங்காது
உருவி, மேக்கு உயர மீப்போய்,
துய்ய நீர்க் கடலுள் தோய்ந்து,
தூய்மலர் அமரர் சூட்ட,
ஐயன் வெந் விடாத கொற்றத்து
ஆவம் வந்து அடைந்தது அன்றே.

பொ :—(வாலியின் உயிர் உடம்பை விட்டு நீங்கிய) அந்நிலைமைக்கண் தன் மார்பில் தைத்த (இராம பாணத்தை இறுகப் பற்றியிருந்த வாலியின்) கை நெகிழ்ந்ததாக, விரைவுமிக்க அம்பானது, கூற்றுவனையொத்த ஆற்றல் மிக்கோனாகிய வாலியின் வெம்மையுடைய மார்பினுள்ளே தங்காமல் (அதனைத்) துளைத்து ஊடுருவிக்கொண்டு மேற்பட்டு உயர்தலால் மேலே சென்று தூய நீர்க்கடலிற் படிந்து நீராடித் தூய்மையுடைய நறுமலர்களைத் தேவர்கள் சூட்டி வழிபடத் தலைவனாகிய இராமபிரானது முதுகினை விட்டு நீங்காதுள்ள வெற்றி வாய்ந்த அம்பறுத்தூணியில் மீட்டும் வந்து சேர்ந்தது.

கு :—அவண் - அப்பொழுது; வாலியின் உயிர் அவனுடைய உடம்பினைவிட்டுப் பிரிந்த அந்நேரத்தில். கடுங்கணை - விரைவுடைய அம்பு ; என்றது இராமபாணத்தை. காலவாலி - காலனையொத்த வாலி; என்றது, யாவராலும் தடுத்து நிறுத்தவொண்ணாத கூற்றுவனையொத்துத் தன் எதிர்ப்பட்டார் உயிரைக் கவரும் பேராற்றல் படைத்தவன் வாலி எனப் புலப்படுத்தியவாறு. வெய்யமார்பு - எத்தகைய கூரிய படைக்கலங்களையும் தடுத்து நிறுத்தவல்ல வெம்மையுடைய மார்பு. துய்ய என்பது, தூய என்பதன் திரிபு. துய்ய நீர்க்

கடல் - புறத்தே இவ்வுலகினைச் சூழ்ந்துள்ள சக்கரவாள மலையின் புறத்ததாய்ச் சுத்தோதக சமுத்திரம் எனப்படும் தூயநீர்க்கடல்; இது பெரும் புறக்கடல் எனவும் வழங்கப்படும். அவண் கை நெகிழ்த லோடும் கடுங்கணை, வாலி மார்பகத்துள் தங்காது உருவி, உயர, மீப்போய், தோய்ந்து, ஆவம் வந்தடைந்தது எனவும், அமரர் தூய் மலர் சூட்ட வந்தடைந்தது எனவும் இயையும். ஐயன் - இராமன். வெந் - வெரிந்; முதுகு. ஆவம் - அம்பருத்தூணி. (161)

## தன் கணவன் வாலி இறந்து வானுலகடைந்தமை கேட்ட தாரை, அங்கு வந்து அவன்மேல் வீழ்ந்து புரண்டு வருந்துதல் 4199-4201

4199. வாலியு மேகி னனவ்
வரம்பிலா வுலகி லின்பம்
பாலியா முன்னர் நின்ற
பரிதிசேய் செங்கை பற்றி
ஆலிலைப் பள்ளி யானு
மங்கத னேடு போனன்
வேல்விழித் தாரை கேட்டாள்
வந்தவன் மேனி வீழ்ந்தாள்.

வாலியும் ஏகினன் அவ் வரம்பு இலா உலகில்; இன்பம்
பாலியா, முன்னர் நின்ற பரிதி சேய் செங்கை பற்றி,
ஆல் இலைப் பள்ளியானும், அங்கதனேடு போனன்;
வேல் விழித் தாரை கேட்டாள், வந்து அவன் மேனி வீழ்ந்தாள்.

பொ :—எல்லையற்றதாகிய அவ்வீட்டுலகில் வாலியும் சென்று சேர்ந்தான். ஆலின் இலையினைப் படுக்கையாகக் கொண்ட (திருமாலின் அமிசமாகிய) இராமனும் (வாலிக்குப்) பேரின்பத்தை வழங்கி, தன் முன் நின்ற கதிரவன் புதல்வனகிய சுக்கிரீவனது சிவந்த கையினைப் பற்றிக்கொண்டு (வாலியின் புதல்வன்) அங்கதனுடன் அவ்விடத்தை விட்டு அகன்று போயினன்; வேற்படையினை யொத்த கூரிய கண்களையுடைய தாரை என்பாள் (தன் கணவன் துயர்நிலையைக்) கேட்டாள்; (அந்தப்புரத்தை விட்டு) ஓடி வந்து வாலியின் மேனிமேல் (செயலற்று) வீழ்ந்தாள்.

கு :—காலம் இடம் என்னும் வரம்பின்றி என்றும் ஓரியல்பினதாய்ப் பொன்ருது நிற்பது அவ்வுலகம் எனப்படும் வீட்டுலகமாதலின் அதனை 'அவ் வரம்பு இலா உலகு' எனக் குறித்தார். இன்பம்

பாலியா - பேரின்பமாகிய வீடுபேற்றினை இனிதின் வழங்கி. பாலித்தல் - இனிதின் வழங்குதல். 'அன்னம் பாலியா' என்பதும் பாடம். 'அன்னம் பாலிக்கும் தில்லைச் சிற்றம்பலம்' (திருக்குறுந் தொகை - 5-1-1) என்பது அப்பர் அருள்மொழி. இத்தொடரில் 'அன்னம்' என்றது வீடுபேருகிய அமுதத்தை. பரிதிசேய் - சுக்கி ரீவன். உலகமெலாம் அழியும் பேரூழிக் காலத்தும் தான் அழிவின்றி அவ்வுலகங்க ளெல்லாவற்றையும் உண்டு தன் வயிற்றிலடக்கிக் கொண்டு ஒரு சிறிய ஆலிலையிற் கண்வளரும் திருமாலின் அமிசமாதல் பற்றி இராமனை 'ஆலிலைப் பள்ளியான்' எனக் குறித்தார். ஆலிலைப் பள்ளியானும் (வாலிக்கு) இன்பம் பாலியா, முன்னர் நின்ற பரிதி சேய் செங்கைபற்றி, அங்கதனோடு போனான் என இயையும். (162)

**4200.** குங்குமங் கொட்டி யன்ன
குவிமுலைக் குவட்டிற் கொக்கப்
பொங்குவெங் குருதி போர்ப்பப்
புரிகுழல் சிவப்பப் பொற்றோ
ளங்கவ னலங்கன் மார்பிற்
புரண்டன ளகன்ற செக்கர்
வெங்கதிர் விசும்பிற் றோன்று
மின்னெனத் திகழு மெய்யாள்.

குங்குமம் கொட்டி அன்ன,
குவிமுலைக் குவட்டிற்கு ஒக்கப்
பொங்கு, வெங் குருதி போர்ப்ப,
புரிகுழல் சிவப்ப, பொன் தோள்
அங்கு அவன் அலங்கல் மார்பில்
புரண்டனள்—அகன்ற செக்கர்
வெங்கதிர் விசும்பில் தோன்றும்
மின் எனத் திகழும் மெய்யாள்.

பொ :—குங்குமக் குழம்பினைச் சொரிந்தாற் போன்ற குவிந்த கொங்கையென்னும் மலைச் சிகரத்திற்குப் பொருந்த (வாலியின் மார்பி னின்றும் ஊற்றெடுத்துப்) பொங்கிய வெம்மை மிக்க இரத்தப் பெருக்கு (தன் கொங்கைக் குவடுகளில்) முழுவதும் பரவிப் போர்க்க வும், நெறிப்புடைய கூந்தல் செந்நிறம் அடையவும் வெம்மை வாய்ந்த கதிர்களையுடைய ஞாயிறு மறைய அமைந்த செவ்வானத் திலே தோன்றிய மின்னலையொத்து விளங்கும் மேனியையுடைய ளாய் அவ்விடத்தே வாலியென்னும் அவனுடைய பொன்னிறம்

வாய்ந்த தோள்களிலும் மாலையணிந்த மார்பிலும் வீழ்ந்து புரண்டு வருந்தினள் (தாரை).

கு :—குங்குமம் கொட்டி அன்ன வெங்குருதி, குவிமுலைக் குவட்டிற்கு ஒக்கப்பொங்கு வெங்குருதி என இயையும். குவட்டிற் குருதி போர்ப்ப, புரிகுழல் சிவப்ப, செக்கர் விசும்பில் மின் எனத் திகழும் மெய்யாள் (ஆகி) அங்கு அவன் பொன்தோள் மார்பில் புரண்டனள் என இயைத்துப் பொருளுரைக்கப்பட்டது. குங்குமம் - செந்நிறக்கலவை. கொட்டுதல்-சொரிதல். குவடு-மலைச் சிகரம். புரிகுழல்—சுருண்டு நெளிந்த கூந்தல். வெங்கதிர் அகன்ற செக்கர் விசும்பின் மின் என இயைத்துரைக்க. வெங்கதிர் - வெம்மை மிக்க ஒளியுடையனாகிய சூரியன். அகலுதல் - நீங்குதல்; மறைதல். செக்கர் விசும்பு- செவ்வானம். வாலியின் மனைவியாகிய தாரை உயிர் நீங்கிய கணவனது மார்பில் இராமபாணம் தைத்துருவிய வழியே பீரிட்டுப் பொங்கிய இரத்தப் பெருக்கு தன் கொங்கைக் குவட்டிற்குப் பொருந்தச் சொரிந்த குங்குமக் குழம்பினைப்போன்று தன் மெய்யிற் பரவிப் போர்க்கவும் தன் கருங் கூந்தல் அக் குருதியிற் படிந்து செந்நிறம் அடையவும் செவ்வானத்தில் தோன்றிய மின்னலை ஒத்த தோற்றமுடையளாய்த் தன் கணவனுடைய தோள்களிலும் மார்பிலும் வீழ்ந்து புரண்டு வருந்தினள் என்பதாம். வாலியின் குருதி பொங்கும் மார்புக்குச் செவ்வானமும், அவன் மார்பில் வீழ்ந்து புரளும் தாரைக்குச் செவ்வானத்தில் தோன்றிய மின்னலும் உவமை. (163)

4201. வேய்ங்குழல் விளரி நல்யாழ்
வீணையென் றிவையும் நாண
ஏங்கின ளிரங்கி விம்மி
யுருகின ளிருகை கூப்பித்
தாங்கிய கலைகள் சோர்ந்து
சரிதரக் குழலுந் தாழ
ஓங்கிய துயராள் பன்னி
யினையன யுரைக்க லுற்றாள்.

வேய்ங் குழல், விளரி நல் யாழ், வீணை என்று இவையும் நாண,
ஏங்கினள் இரங்கி; விம்மி உருகினள்; இரு கை கூப்பி,
தாங்கிய கலைகள் சோர்ந்து சரிதர, குழலும் தாழ,
ஓங்கிய துயராள், பன்னி, இனையன உரைக்கலுற்றாள்.

பொ:—புல்லாங்குழலும் நல்ல விளரியாழும் வீணையும் என்று கூறப்படும் இத்தன்மையவாகிய இசைக் கருவிகளின் இனிய இசைகளும் (தனது புலம்புதலொலிக்குத் தோற்று) நாணும்படி (தாரை) வருந்திப் புலம்பினுள்; பெருமூச்சுயிர்த்து நெஞ்சம் கரைந்தாள்; இரு கைகளையும் (தலைமேற்) குவித்து(த் தன் கணவனை) வணங்கி, (உடம்பும் உயிரும் வாடிய நிலையில்) தான் அரிதின் தாங்கியிருந்த கலைகள் தளர்ந்து சரியவும் கூந்தல் (குலைந்து) தரையில் தாழ்ந்து புரளவும் அளவிறந்து பெருகிய துயரத்தினையுடையளாய் இத்தன்மையவாகிய புலம்புதல் மொழிகளை அடுத்தடுத்துக் கூறத் தொடங்கினுள்.

கு :—வேய்ங்குழல் - மூங்கிற் குழலாகிய துளைக்கருவி. யாழ் வீணை என்பன நரம்புக்கருவி. விளரியாழ் என்றது இரங்கற்பண்ணுக்குரிய யாழினது ஓசையினை. விளரி - இரங்கற்பண். நாண ஏங்கினள், உருகினள், இரு கைகூப்பி, கலைகள் சரிதர, குழலும் தாழ, ஓங்கியதுயராள், இனையன பன்னி உரைக்கலுற்ருள் என இயைத்துரைக்க. தன் இன்னுயிரனைய கணவனை யிழந்தமையால் உயிரும் உடம்பும் மெலிந்த நிலையிலும் நாணத்தினைக் காத்தற் பொருட்டு வருந்தித் தாங்கிய கலைகள் என்பார், 'தாங்கிய கலைகள்' என்ருர். சரிதர, தாழ என்னும் செயவென்னெச்சங்கள் 'ஓங்கிய' என்னும் பிற கருத்தாவின் வினைகொண்டு முடிந்தன. (164)

## தாரை புலம்புதல் 4202-4214

4202. வரைசேர் தோளிடை நாளும் வைகுவேன்
☆ கரைசே ராவிடர் வேலை காண்கலேன்
உரைசே ராருயி ரேயெ னுள்ளமே
அரைசே யானிது காண வஞ்சினேன்.

'வரை சேர் தோளிடை நாளும் வைகுவேன்,
கரை சேரா இடர் வேலை காண்கலேன்;
உரை சேர் ஆர் உயிரே! என் உள்ளமே!
அரைசே! யான் இது காண அஞ்சினேன்.'

பொ :—'(என்னுடைய) புகழ் பொருந்திய அரிய உயிரே, என் நெஞ்சமே, (என்) அரசனே, மலையினை யொத்து விளங்கும் நின் தோள்களைச் சார்ந்து என்றும் இனிது வாழும் இயல்பினளாகிய யான், கரையின்றிப் பெருகிய துன்பக் கடலைக் காணும் வலியுடையேன் அல்லேன். (நினக்கு உளதாகிய) இத்துன்ப நிலையைக் கண்ணிஞற் காணுதற்கும் அஞ்சுகின்றேன்.'

கு :—வரை சேர் தோள் - மலையின் தன்மை வாய்ந்த திண்ணிய பெரிய தோள். கரை சேரா இடர் வேலை - (கடந்து) கரை காண வொண்ணாத துன்பப் பெருங்கடல். நின்னுடைய தோளாகிய உயர்ந்த இன்ப மலையினைச் சார்ந்து அச்சமின்றி வாழும் தன்மையினளாகிய யான், கரையில்லாத துன்பப் பெருங்கடலை நீந்திக் காணும் வன்மையுடையேனல்லேன் ஆதலின் இத்துயர் நிலையை என் கண்ணாற் காணுதற்கும் மிகவும் அஞ்சுகின்றேன் என்பாள் 'யான் இது காண அஞ்சினேன்' என்றாள். இது - இராம பாணத்தால் எய்யப்பட்டு இறந்து கிடக்கும் இத்துயர்நிலை. வாயினாற் சொல்லுதற்கும் ஒண்ணாத பெருந்துன்பமாதலின் 'இது' எனச் சுட்டினாள். தன் கணவனாகிய வாலி, தன்னாற் காதலிக்கப் படும் பொருள்கள் எல்லாவற்றினும் சிறந்தானாய்த் தன்னுடன் பிரிவின்றி இயைந்த பெருங்கேண்மையுடையானாதலின் 'உரைசேர் ஆருயிரே' எனவும், தன் உள்ளம் போன்று உற்றுழியுதவும் ஆருயிர்த் துணைவனாகி உதவி புரிந்தமை பற்றி 'என் உள்ளமே' எனவும், நாடாள் வேந்தனாகவும் தன்னை எத்துணையும் வருந்தாது போற்றிக் காத்த காவலனாகவும் திகழ்ந்தமை பற்றி 'அரைசே' எனவும் தாரை வாலியை அழைத்து அரற்றினாள். உரை - புகழ். இது முதல் பதின்மூன்று செய்யுட்கள் தாரையின் புலம்புதலாக அமைந்தன. (165)

4203. துயரா லேதொலை யாத வென்னையும்
பயிரா யோபகை யாத பண்பினாய்
செயிர்தீ ராவினை யான தெய்வமே
உயிர்போ னாலுட லாரு முய்வரோ.

'துயராலே தொலையாத என்னையும்,
பயிராயோ? பகையாத பண்பினாய்!
செயிர் தீரா வினை ஆன தெய்வமே!
உயிர் போனால், உடலாரும் உய்வரோ?'

பொ :—யாவரிடத்தும் பகைமை கருதாத பண்புடைய தலைவனே, (நின்னையிழந்த) பிரிவுத் துன்பத்தால் (உடனே) இறந்துபடாத (வன்னெஞ்சத்தளாகிய) என்னையும் (உன்பால் அன்பினால்) அழைத்துக்கொள்ளமாட்டாயா? (எம்மிடத்துச்) செற்றம் நீங்காத தீயூழாகிய தெய்வமே, உயிர் (உடலை விட்டுப்) பிரிந்து போனால் உடம்பு மட்டும் அழியாது பிழைத்திருக்கவல்லதோ?

கு :—'பகையுள்ளும் பண்புள பாடறிவார் மாட்டு' (திருக்குறள்-995) என்றவாறு பகைவர் மாட்டும் இனியனவே செய்யும் பண்புடையனாகிய நீ, நின்பால் மாறாத பேரன்புடைய மனைவியாகிய என்னை வெறுத்துப் பிரியும் எண்ணமுடையாயல்லை. நின்னியல்பு இது வாதலின் நின்னைப் பிரிந்தும் உயிர் துறவாமல் இடர்ப்படும் நிலையினளாகிய என்னையும் உன்பால் அன்பினால் அழைத்துக்கொள்ள மாட்டாயா? என வினவுவாள், 'பகையாத பண்பினாய்! துயராலே தொலையாத என்னையும் பயிராயோ' என்றாள். தொலைதல்-இறத்தல். பயிர்தல் - அழைத்தல். செயிர் - கோபம். வினை, தெய்வம் என்பன ஊழ் என்னும் ஒரு பொருள் குறித்த இரு சொல்லாய்ப் பிரிவின்றி வந்தன. தன் ஆருயிர்க் கணவனது உயிரைப் போக்கித் தன்னைத் தீராத் துயரில் ஆழ்த்திய விதியின் கொடுமையை நினைந்து 'செயிர் தீரா வினையான தெய்வமே' என விளித்தாள். 'என் இன்னுயிராகிய வாலியார் இறந்த பின்னும் அவ்வுயிரையின்றி வாழ முடியாத உடம்பாகிய யானும் அழிந்தொழிதல் முறையாகவும் யான் இன்னும் தொலையாது பிழைத்திருத்தல் எவ்வாறு' என இரங்குவாள், 'உயிர் போனால் உடலாரும் உய்வரோ' என்றாள். உடலார் என அஃறிணைக் கண் வந்த ஆர்விகுதி இங்கு இழித்தற் பொருளைத் தந்து நின்றது. (166)

4204. நறிதா நல்லமிழ் துண்ண நல்கலிற்
பிறியா வின்னுயிர் பெற்ற பெற்றிதாம்
அறியா ரோநம னாரை தன்றெனிற்
சிறியா ரோவுப காரஞ் சிந்தியார்.

'நறிது ஆம் நல் அமிழ்து உண்ண நல்கலின்,
பிறியா இன் உயிர் பெற்ற பெற்றி, தாம்
அறியாரோ நமனார்? அது அன்று எனின்,
சிறியாரோ, உபகாரம் சிந்தியார்?'

பொ :—(நினது உயிரைக் கவர்ந்து சென்ற) கூற்றுவனார், நறுமணமுடையதாகிய நல்ல அமிழ்தத்தை உண்ணும்படி (நீ பாற் கடலைக் கடைந்து) தந்தமையால் (உடம்பை விட்டு) நீங்காத இனிய உயிரைத் தாம் பெற்ற (நிலை பேறாகிய) தன்மையினைத் தாம் இதுகாறும் அறிந்திலரோ? அதுவன்றி அறிந்திருந்தே நினது உயிரைக் கவர்ந்தாரெனின், (நீ காலத்தினாற் செய்த) பேருதவியை நினையாதவராகி (நன்றியறிதலாகிய தகுதியை யிழந்து) மிகவும் சிறுமையுடையவராயினரோ?

கு:—நறிது - நறுமணமுள்ளது. பிறியா இன்னுயிர் - உடம்பொடு நீங்காது நிலைத்து நிற்கும் இனிய உயிர்; என்றது, என்றும் இறவா உடம்பினைப் பெற்ற உயிர் என்றவாறு. அது அன்று எனின் - அறியாமற் செய்தார் என்பது அன்றி அறிந்திருந்தே இதனைச் செய்தார் என்றால். உபகாரம் சிந்தியார் சிறியாரோ - (பிறர் செய்த) பேருதவியை எண்ணாதவராய் அற்பராய்விட்டாரோ ?. சிந்தியார் என்னும் முற்று எச்சமாகிச் 'சிறியாரோ' என்னும் வினைக்குறிப்பினைக் கொண்டு முடிந்தது. ஆக்க வினைக்குறிப்பாதலின் 'சிறியார் ஆயினாரோ' என ஆக்கச் சொல் வருவித்து உரைக்கப்பட்டது. சாவாமைக்குக் காரணமாகிய அமுதத்தைப் பெறுதல் வேண்டித் தேவரும் அசுரரும் கூடிப் பாற்கடலைக் கடையப் புகுந்து மந்தர மலையாகிய மத்தினைத் தாங்கிக் கடையமாட்டாது அயர்வுற்ற நிலையில், அங்கு வந்த வாலி, தான் ஒருவனாகவே நின்று பாற்கடலைக் கடைந்து தேவர்களுக்கு அமுதம் வழங்கினான் என்ற செய்தி முன்னர்க் கூறப்பட்டது. 'நினது நன் முயற்சியால் அமுதுண்டு சாவாவுடம்பெய்திய தேவர்களுள் இன்று நின்னுயிர் கொண்ட கூற்றுவனாரும் ஒருவராதலின், அவர் உடம்பை விட்டு இறவாத இன்னுயிரைத் தாம் பெறுதற்குக் காரணமாகத் தமக்கு அமுதத்தினை வழங்கிய அருளாளன் நீ என்பதனை அறியாதிருத்தல் இயலாது. இங்ஙனம் நீ செய்த இப்பேருதவியை யறிந்திருந்தும் இவ்வாறு நின்னுயிரைக் கவர்ந்து சென்றார் எனின், யாவராலும் போற்றப்பெறும் தேவராகிய கூற்றுவனார், தமக்குப் பிறர் செய்த நன்மையை எண்ணிப் பாராதவராய்ச் செய்ந்நன்றி மறத்தலாகிய உய்தியில்லாத பெருங்குற்றத்தைச் செய்து மிகவும் அற்பராய் விட்டாரோ' எனத் தாரை தன் கணவனது பெருவண்மையினையும் அவனது இன்னுயிரைக் கண்ணோட்டமின்றிக் கவர்ந்த கூற்றுவனின் கொடுமையினையும் எண்ணிப் புலம்பினாள் என்பதாம். (167)

4205. அணங்கார் பாகனை யாசை தோறுமுற்
றுணங்கா வொண்மலர் கொண்டு ளன்பொடும்
இணங்காக் காலமி ரண்டொ டொன்றினும்
வணங்கா தித்துணை வைக வல்லையோ.

'அணங்கு ஆர் பாகனை ஆசை தோறும் உற்று,
உணங்கா ஒண் மலர் கொண்டு, உள் அன்பொடும்
இணங்கா, காலம் இரண்டொடு ஒன்றினும்
வணங்காது, இத்துணை வைக வல்லையோ ?'

பொ :—மாதொருபாகனாகிய சிவபெருமானைத் திசைகள்தோறும் சென்று வாடாத ஒளியுடைய நறுமலர்களைக்கொண்டு மனம் நிறைந்த உண்மையான பேரன்பினால் காலை, நண்பகல், மாலை என்னும் மூன்று காலத்தும் வழிபாடு செய்யும் நின் இயல்பினைவிட்டு, இவ்வளவு நேரமும் இங்கே (பொழுதுபோக்கிப் புறக்கணித்துத்) தங்கியிருக்க வல்லாயோ ?

கு :—அணங்கு ஆர் பாகன் - உமாதேவியாகிய பெண் அமர்ந்த ஒரு பாகத்தினையுடையான்; என்றது, மாதொருபாகனாகிய சிவபெருமானை. ஆசை - திசை. உற்று - அடைந்து. உணங்காமலர், ஒண் மலர் எனத் தனித்தனி கூட்டுக. உணங்குதல் - வாடுதல். ஒண் மலர் - ஒளியுடைய மலர். உள் அன்பு - உள்ளம் நிறைந்த உண்மையான நேயம். உள்ளன்பில்லாதார் செய்யும் பொய்யான பூசனையைக் கண்டு இறைவன் நாணி நகுவனாதலின் உள்ளன்பொடு வணங்குதலே உண்மையான சிவபூசை யென்பது 'உள்ளன்பொடும்' என்பதனாற் புலனாம். இணங்கா - (மனம்) இசைந்து; ஒன்றுபட்டு. காலம் இரண்டொடு ஒன்றினும் - காலை நண்பகல் மாலை என்னும் மூன்று காலங்களிலும். 'முப்போதும் திருமேனி தீண்டுவார்க்கு அடியேன்' என்றார் நம்பியாரூரரும். சிவபத்தியிற் சிறந்தவனாகிய வாலி, நாள்தோறும் எட்டுத் திசைகளிலும் சென்று முப்போதும் சிவபெருமானை வழிபாடு செய்யும் நியமமுடையவன் என்பதனை 'எட்டு மாதிரத்திறுதி நாளும் உற்று, அட்டமூர்த்தி தாள் பணியும் ஆற்றலான்' (நட்புக் கோட்-40) என ஆசிரியர் முன்னரும் குறித்துள்ளமை இங்குநினைக்கத் தக்கதாகும். தாரை, தன் கணவனாகிய வாலி உயிருடன் உளனாகிய காலத்து நாள்தோறும் நறுமலர்களைக் கொண்டு எட்டுத் திசைகளிலும் சென்று அம்மையப்பராகிய சிவபெருமானை முப்போதும் வழிபட்டுப் போற்றும் சிவபூசையிலேயே பெரும் பொழுதினைச் செலவிட்ட சிவபத்தி மாண்பினை நேரில் உணர்ந்தவள் ஆதலின், உயிர் நீங்கிச் செயலற்றுக் கிடக்கும் தன் கணவனது உடம்பினைக் கண்டு இவ்வாறு உளங்கலங்கி அரற்றினாள் என்க. (168)

4206. வரையார் தோள்பொடி யாடி வைகுவாய்
தரைமே லாயுறு தன்மை யீதெனக்
கரையா தேனிடு பூசல் கண்டுமொன்
றுரையா யென்வயி னூனம் யாவதோ.

'வரை ஆர் தோள் பொடி ஆடி வைகுவாய்!
தரை மேலாய்; "உறு தன்மை ஈது" எனக்

கரையாதேன் இடு பூசல் கண்டும், ஒன்று
உரையாய், என் வயின் ஊனம் யாவதோ ?'

பொ :—மலையினையொத்த தோள்களில் வெண்பொடியாகிய திருநீற்றினைப் பூசி (மலையின்மேல் சிவபூசையில்) அமர்ந்திருக்கும் இயல்புடைய நீ (இப்பொழுது புழுதிபடிய) நிலத்தின்மேல் வீழ்ந்து கிடக்கின்றாய்; நீ உற்ற துயரின் தன்மை இத்தகையதோ என்று (ஊனும் உள்ளமும்) கரைந்துருகப் பெறாத தீவினையாட்டியாகிய எளியேன் நின் எதிரில் நின்று கதறும் இப்புலம்பல் ஓசையினை நேரிற் கேட்டறிந்தும் (என் துயர் தீரும் வண்ணம்) மாற்றம் ஒன்றும் கூறினாயல்லை. (இவ்வாறு நீ என்னை வெறுத்தொதுக்குமாறு) என்பாலுள்ள குற்றந்தான் யாதோ ?

கு :—வரை ஆர் தோள் - மலையினை ஒத்த திண்மையும் உயர்ச்சியும் வாய்ந்த தோள். பொடி - வெண்பொடி ; திருநீறு. 'பொடி நுகரும் சிறுத்தொண்டர்' (சம்பந்தர்-1-61-10) எனவும் 'பொடியார்க்கும் திருமேனிப் புனிதர்' (பெரிய - நாவுக் - 105) எனவும் வரும் திருமுறைத் தொடர்களில் 'பொடி' என்பது திருநீறு என்னும் பொருளிற் பயில வழங்குதல் இங்கு நோக்கத் தக்கதாகும். ஆடுதல் - நிறையப் பூசுதல். 'பொடியாடிக்கு அடிமை செய்த புள்ளிருக்கு வேளூரை' (சம்பந்தர் -2-43-11) என வரும் தொடரில் ஆடுதல் இப்பொருட்டாதல் அறியலாம். 'புலரியெழுந்து புனல் மூழ்கி புனித வெண்ணீற்றினும் மூழ்கி' (பெரிய-கழறிற் - 8.) என்றார் சேக்கிழாரடிகளும். திருவெண்ணீற்றினைத் தோளிற் சிறப்பாக அணிதல் மரபென்பது 'சினபவளத் திண்டோள்மேற் சேர்ந்திலங்கு வெண்ணீற்றன்' (அப்பர்-4-6.1) 'திரள்தோள்மேல் நீறு நின்றது கண்டனை' (திருவாசகம்-37) என வரும் திருவாக்குகளால் அறியப்படும். இனி, "பொடியாட வைகுவாய்" எனப் பாடங்கொண்டு 'மலையினையொத்த தோள்களில் புழுதிபடியக் கிடப்பவனே' எனப் பொருளுரைத்தலும் உண்டு. பொடி - புழுதி. 'என்னுறு துயர்கண்டும் இடருறு மிவனென்னீர், பொன்னுறு நறுமேனி பொடியாடிக் கிடப்பதோ' (சிலப் - ஊர்சூழ் - 39,40) எனக் கொலைக்களப்பட்ட கோவலனை நோக்கிக் கண்ணகியார் புலம்புவதாக அமைந்த பகுதி இங்கு ஒப்புநோக்கத்தக்கதாகும். 'வரையார் தோள் பொடியாடி வைகுவாய்' என்றது, வாலிக்கு என்றும் அமைந்திருந்த தூய நிலையினையும், 'தரைமேலாய்' என்றது, அவன் உயிர் பிரிந்து பூமியிற் கிடக்கும் இத்துயர நிலையினையும் குறித்து நிற்றல் அறியத்தக்கதாகும். (169)

4207. நையா நின்றன ஞனிருந் திங்ஙன்
மெய்வா ஞேர்திரு நாடு மேவிஞய்
ஐயா நீயென தாவி யென்றதும்
பொய்யோ பொய்யுரை யாத புண்ணியா.

'நையா நின்றனன், நான் இருந்து இங்ஙன்;
மெய் வாஞேர் திருநாடு மேவிஞய்;
ஐயா! 'நீ எனது ஆவி' என்றதும்,
பொய்யோ? பொய் உரையாத புண்ணியா!'

பொ:—'பொய்ம்மொழி புகலாத நல்வினைப் பேறுடையவனே! (நின் மனைக்கிழத்தியாகிய) யான் (நின்னைப் பிரிந்து) இங்கிருந்து துயருற்று நைகின்றேன். (நீயோ) வாய்மையில் வழுவாத தேவர்கள் வாழும் திருநாட்டினையடைந்து இன்புறுகின்ருய். (என் ஆருயிர்த்) தலைவனே, நீ என்னை நோக்கி 'நீயே எனது உயிர்' எனக் கூறிய அம்மெய்ம்மொழியும் (இன்று) பொய்யாய் விட்டதோ?

கு:—உடம்பு உயிரையின்றி அமையாதவாறுபோல யானும் நின்னையின்றி அமையாத காதற்கேண்மையேன் என்பான், 'நீ எனது ஆவி' என்ருன். உடம்போடு உயிர்க்குள்ள நட்பாவன 'இரண்டுந் தொன்றுதொட்டு வேற்றுமையின்றிக் கலந்து வருதல், இன்பத் துன்பங்கள் ஒக்க அநுபவித்தல், இன்றியமையாமை என்று இவை' என்பர் பரிமேலழகர். உடம்பும் உயிரும் ஒருவழிச் செல்லும் என்னும் உலகியல்புக்கு மாருக, என் ஆருயிராகிய நீ என்னை விட்டுப் பிரிந்து சென்று வாஞேருலகில் இன்புறுகின்ருய். நின்னையின்றி அமையாத யாஞே நின் பிரிவுத்துயரால் இங்ஙனம் வருந்தி நைகின்றேன். பொய்ம்மை மொழி புகன்றறியா மெய்ம்மொழி நாவினையுடைய நீ என்னை நோக்கி 'நீயே எனது உயிர்' எனக் கூறிய அம்மெய்யுரையும் இன்று பொய்க்கும்படி வாய்மையில் வழுவாத தேவருலகினை அடைதல் நினக்குப் புகழாகுமோ எனத் தாரை வாலியை நினைந்து புலம்பினள் என்பதாம். (170)

4208. செருவார் தோளநின் சிந்தை யேனெனின்
மருவார் வெஞ்சர மெனையும் வௌவுமால்
ஒருவே னுள்ளுளே யாகி லுய்தியால்
இருவே முள்ளிரு வேமி ருந்திலேம்.

'செரு ஆர் தோள! நின் சிந்தையேன் எனின்,
மருவார் வெஞ் சரம் எனையும் வௌவுமால்;

ஒரு வேனுள் உளை ஆகில் உய்தியால்;
இருவேம்உள் இருவேம் இருந்திலேம்.'

பொ :—'போர்வலி படைத்த தோள்களையுடையவனே! (நின் மனைக்கிழத்தியாகிய யான்) நின்னெஞ்சிற் பொருந்தியிருந்தேன் என்பது மெய்யாயின், நின்மேற் பகைவர் எய்த கொடிய அம்பு (நின்னைக் கொன்றது போலவே) என்னுயிரையும் கவர்ந்திருக்கும். தனியளாகிய எனது நெஞ்சத்தில் நீ அகலாது அமர்ந்திருந்தனை யாயின் (பகைவரது அம்புக்கு இலக்காகாமல் யான் பிழைத்திருப்பது போன்று) நீயும் பிழைத்திருப்பாய். (இவற்றுள் ஒன்றும் நிகழாமை யால்) மனைவியும் கணவனுமாகிய நாம் இருவரும் ஒருவருள்ளத்தில் மற்றவர் அகலாது இருந்திலேம் என்பது உறுதியாயிற்று.'

கு :—செரு - போர்; ஆகுபெயராய்ப் 'போர்வலி' எனப் பொருள் தந்தது. மருவார்-பொருந்தாதார்; பகைவர். வெஞ்சரம்-கொடுமை வாய்ந்த அம்பு. 'கணவன் மனைவியாகிய நாமிருவரும் ஒருவரை யொருவர் உயிர் எனக் கொண்டு வாழும் காதற்பெருங் கேண்மை யினராய் 'இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தினர்' என்றவாறு ஒருவருள்ளத்தில் மற்றவர் நீங்காதிருந்தேம் என்பது உண்மை யானல், நின்னுயிரைக் கவர்ந்த இராமபாணம் நின்னுள்ளத்திருக்கும் என்னுயிரையும் உண்டிருக்கும். அன்றி, அந்த அம்பு என்னுள் ளத்திற் பாயாமை காரணமாக யான் உயிர் தாங்கியிருத்தல் போன்று என்னுள்ளத்துள் அகலாதிருக்கும் நீயும் இறவாது பிழைத்திருப்பாய். இவ்விரண்டினுள் எதுவும் நிகழாமையை எண்ணும்பொழுது நாம் இருவரும் ஒருவர் சிந்தையில் மற்றொருவர் நீங்காதிருந்தேம் என்பது உண்மையாகாது வெறும் புனைந்துரையாகவே சிதைந் தொழிந்ததே' எனத் தாரை வாலியை நோக்கிப் புலம்பி வருந்தினள் என்பதாம். தாரையின் அரற்றுரையாக அமைந்த இச் செய்யுள்,

'உடம்பொ டுயிரிடை என்னமற் றன்ன
மடந்தையொ டெம்மிடை நட்பு' (திருக்குறள் - 1122)

எனத் தலைமகன் கூற்றாகவும்,

'நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்டல்
அஞ்சுதும் வேபாக் கறிந்து' (திருக்குறள் - 1128)

எனத் தலைமகள் கூற்றாகவும் தெய்வப் புலவர் அறிவுறுத்திய காதற் சிறப்பினை அடியொற்றி யமைந்திருத்தல் அறியத்தக்கதாகும். (171)

4209. எந்தாய் நீயமிழ் தீய யாமெலாம்
உய்ந்தா மென்றுப கார முன்னுவார்
நந்தா நாண்மலர் சிந்தி நண்பொடும்
வந்தா ரோவெதிர் வானு ளோரெலாம்.

'"எந்தாய்! நீ அமிழ்து ஈய, யாம் எலாம்
உய்ந்தாம்" என்று உபகாரம் உன்னுவார்,
நந்தா நாள் மலர் சிந்தி, நண்பொடும்
வந்தாரோ எதிர்? வான் உளோர் எலாம்.'

பொ :—வானுலகில் வாழும் தேவர்கள் யாவரும் (முன்பு நீ அவர்களுக்கு அமுதளித்துக் காத்த) பேருதவியை மறவாது நினைந்தவர்களாய், 'எம் தலைவனே நீ (பாற்கடலைக் கடைந்து) இனிய அமுதத்தை வழங்கினமையால் யாங்கள் எல்லோரும் (அதனையுண்டு) இறவா நிலை பெற்று உய்ந்தோம்' என்று நன்றி பாராட்டி, வாடாத (கற்பகப்) புது மலர்களைத் தூவி நண்பினால் (நின்னை) எதிர்கொண்டு அழைக்க வந்தார்களோ?

கு :—வானுளோர் எலாம், உபகாரம் உன்னுவார், 'எந்தாய் நீ அமிழ்து ஈய, யாமெலாம் உய்ந்தாம்' என்று மலர் சிந்தி நண்பொடும் எதிர் வந்தாரோ? என இயையும். எந்தை என்னும் முறைப்பெயரீற்று ஐகாரம் விளிவேற்றுமைக்கண் ஆய் எனத் திரிந்து நின்றது. ஈய - ஈதலால்; செயவென்னெச்சம் காரணப் பொருளில் வந்தது. யாமெலாம் என்புழி எல்லாம் என்ற சொல் தேவரெல்லாரையும் எஞ்சாமல் தழுவி நின்றது. உய்ந்தாம் - இறப்பின்றிப் பிழைத்தோம்; ஆம் விகுதி தன்மைப்பன்மை. உபகாரம் - உதவி. உன்னுதல் - நினைத்தல். நந்தா நாள் மலர் - வாடாத அன்றலர்ந்த (கற்பகப்) புதுமலர். மலர் சிந்துதல் - மலர் தூவி அருச்சித்தல். நண்பொடும் - நண்பினால். (172)

4210. ஓயா வாளி யொளித்துநின் றெய்வான்
ஏயா வந்த விராமன் னென்றுளான்
வாயா லேயின னென்னின் வாழ்வெலாம்
ஈயா யோவமிழ் தேயு மீகுவாய்.

'ஓயா வாளி ஒளித்து நின்று எய்வான்
ஏயா வந்த இராமன் என்று உளான்,
வாயால் ஏயினன் என்னின், வாழ்வு எலாம்
ஈயாயோ? அமிழ் தேயும் ஈகுவாய்!'

பொ :—'(சாவாமைக்குக் காரணமாகிய) அமுதத்தையும் (தனக்கென வைத்துக்கொள்ளாது) தேவர்கட்கு வழங்கிய வள்ளலே! (பகைவரது இன்னுயிரைக் கவர்தலில்) ஒழியாத ஆற்றல் வாய்ந்த அம்பினை மறைந்து நின்று (நின்மேல்) எய்தற்கு மனம் இசைந்து வந்த இராமன் என்போன் நின்னை நோக்கி, "நீ இன்னதைச் செய்ய வேண்டும்" எனத் தன் வாய்மொழியாற் பணித்தானாயின், நினக்குரிய அரசபதவி முதலிய வாழ்க்கைச் செல்வங்கள் எல்லாவற்றையும் (அவன் விரும்பிய வண்ணம் நின் தம்பி சுக்கிரீவனுக்கே) கொடுத்துவிட மாட்டாயா?

கு :—'இராமன் என்று எல்லோராலும் உயர்த்துக் கூறப்படும் அப்பெரியோன், நின்பால் இயல்பாக அமைந்த வண்மைக் குணத்தினை யுணர்ந்து தன் வாய்ச் சொல்லினாலேயே மிக எளிதில் முடிக்க வேண்டிய இச் சிறு செயலைத் தன் தகுதிக்கு மாசுண்டாக மறைந்து நின்று நின்மேல் அம்பினை எய்து நின்னுயிரைப் போக்கி இவ்வாறு அரிதின் முடிக்க இசைந்தமை அவனது பெருந்தன்மைக்கு ஏற்புடையதாகுமோ?' என, வாலியின் வரையா ஈகைத் திறத்தையும் அத்தகைய வள்ளியோன் பகைவரால் மறைந்து நின்று அம்பெய்யப் பட்டு இறந்த பெருந் துன்பத்தையும் நினைந்து தாரை புலம்பி வருந்தினாள் என்பதாம். ஓய்தல் - தன் செயலிற் குன்றுதல். வாளி - அம்பு. ஏயா - ஏய்ந்து; இசைந்து; உடன்பட்டு. (173)

4211. சொற்றேன் முந்துற வன்ன சொற்கொளாய்
அற்றா னன்னது செய்க லானெனா
வுற்றா யும்பியை யூழி காணுநீ
யிற்றா யானுனை யென்று காண்பெனே.

'சொற்றேன், முந்துற; அன்ன சொல் கொளாய்,
"அற்றான், அன்னது செய்கலான்" எனா,
உற்றாய், உம்பியை; ஊழி காணும் நீ,
இற்றாய்; யான் உனை என்று காண்பெனோ?'

பொ :—'(நீ நின்தம்பியொடு போர் செய்யப் புறப்படும்) முன்னமே (இராமன் என்பவன் நின் தம்பிக்கு இன்னுயிர் நட்பமைந்து உன்னுயிர் கொள்ளுதற்கு உடன் வந்தான் என்று) சொன்னேன். அம்மொழியை நீ ஏற்றுக்கொள்ளாமல், ('விருப்பு வெறுப்பு) அற்றவனாகிய இராமன் அவ்வாறு முறையற்ற செயலைச் செய்யமாட்டான்' என்று சொல்லி, நின் தம்பியை (எதிர்த்துப் போர் செய்ய)ப் பொருந்தினாய்; (அதனால்) யுக முடிவையும் கண்டு இறவாது வாழவல்ல

பேராற்றல் படைத்த நீ (விரைவில்) இறந்தொழிந்தாய். (உயிர்க்குயி ராகிய) நின்னை யான் இனி எப்பொழுது காண்பேனோ?'

கு :—முந்துறச் சொற்றேன், அன்ன சொற்கொளாய் 'அற்றான் அன்னது செய்கலான்' என, உம்பியை உற்றாய், ஊழி காணும் நீ இற்றாய், உன்னை யான் என்று காண்பென் என இயையும். அன்ன சொல் என்றது, 'அரச, ஆயவற்கு இன்னுயிர் நட்பமைந்து இராமன் என்பவன், உன்னுயிர் கோடலுக்கு உடன் வந்தான் எனத், துன்னிய அன்பினர் சொல்லினர்' (வாலிவதைப் - 30) என்ற சொல் லினை. அற்றான் - விருப்பு வெறுப்பு அற்றவன்; வேண்டுதல் வேண் டாமை யிலான் என்றவாறு. அற்றான் என்பதற்கு ஒப்பற்றவன் எனவும் அத்தன்மையான் எனவும் பொருளுரைத்தலும் உண்டு. இறுதல் - அழிதல்; இறத்தல். (174)

4212. நீறு மேருவு நீநெ ருக்கினால்
மாறோர் வாளியுன் மார்பை யீர்வதோ
தேறேன் யானிது தேவர் மாயமோ
வேறோர் வாலிகொ லாம்வி ளிந்துளான்.

'நீறு ஆம், மேருவும், நீ நெருக்கினால்;
மாறு ஓர் வாளி, உன் மார்பை ஈர்வதோ?
தேறேன் யான் இது, தேவர் மாயமோ?
வேறு ஓர் வாலிகொலாம், விளிந்துளான்?'

பொ :—'நீ (நின் மார்பொடு பொருந்த) நெருக்கித் தாக்குவாயா யின் (மிகப் பெரிய திண்ணிய) மேரு மலையும் சிதர்ந்து பொடியாய் விடும். (அத்தகைய பெரு வன்மை வாய்ந்த) நின் மார்பினை ஓர் அம்பு ஊடுருவி நின்று இவ்வாறு பிளந்து விடுவதோ? யான் இந் நிகழ்ச்சியை (உண்மை எனத்) தெளிகின்றிலேன். இது தேவர்கள் செய்த மாயச் செயலோ? அல்லது இங்கு இறந்து கிடப்பவன் (என் ஆருயிர் நாயகனாகிய நின்னின் வேறாகிய)மற்றொரு வாலியோ?'

கு :—நீ நெருக்கினால் மேருவும் நீறும் (அவ்வாறாகவும்) உன் மார்பை மாறு ஓர் வாளி ஈர்வதோ? யான் இது தேறேன் (இது) தேவர் மாயமோ? விளிந்துளான் வேறு ஓர் வாலி கொலாம் என இயையும். மேருவும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. மாறு - எதிர். ஈர்தல் - பிளத்தல். தேறுதல் - தெளிதல்; நம்புதல். மாயம் - மாய வித்தை. விளிதல் - இறத்தல். மேரு மலையினையும் நெருக்கிப் பொடியாக்கவல்ல வாலியின் மார்பின் வன்மையினை நன்குணர்ந்த

தாரை, வன்மை மிக்க தன் கணவனது மார்பு பகைவர் எய்த ஒரம் பினுற் பிளக்கப்பட் டழிந்தமையினை நேரிற் கண்டும், தான் கண்ட காட்சியை உண்மை நிகழ்ச்சியென நம்புதற்கியலாதவளாய், 'இது தேவர்கள் செய்த மாய வித்தையோ? அது வன்றேல் இங்ஙனம் அம்புபட்டு இறந்து கிடப்பவன் என் கணவனல்லாத மற்றொரு வாலி யாக இருத்தல் கூடுமோ?' என ஐயுற்றுக் கலங்கினுள் என்பதாம். (175)

4213. தகைநேர் வண்புகழ் நின்று தம்பியார்
பகைநேர் வாருள ரான பண்பினுல்
உகநேர் சிந்தி யுலந்த ழிந்தவால்
மகனே கண்டிலை யோநம் வாழ்வெலாம்.

'தகை நேர் வண்புகழ் நின்று, தம்பியார்,
பகை நேர்வார் உளர் ஆன பண்பினுல்,
உக, நேர் சிந்தி உலந்து அழிந்தவால்;
மகனே! கண்டிலையோ, நம் வாழ்வு எலாம்?

பொ:—மைந்தனே! (அங்கதனே!) நின் தந்தைக்குத் தம்பியா ராகிய சுக்கிரீவர், தகுதி வாய்ந்த (நின் தந்தையின்) வண்மை யமைந்த புகழுக்குப் பொருந்த நின்றொழுகி(ப் பின் அவ்வுறவு நிலையி னின்றும் வேறுபட்டு) நின் தந்தையொடு பகைமையினை மேற் கொண்டவராக அமைந்த (தீயூழின்) தன்மையினுல் (நின் தந்தை) இறந்துபட, நம்முடைய வாழ்வனைத்தும் சிதறிக் கெட்டழிந்தன; (இதனை நீ) பார்த்திலையோ?

கு:—தகை நேர்புகழ், வண்புகழ் என இயையும். தகை - தகுதி. 'தம்பியார்' என்றது, வாலியின் தம்பியாகிய சுக்கிரீவனை. தம்பியார், தகைநேர் வண்புகழ் நின்று, பகை நேர்வார் உளர் ஆன பண்பினுல் (நின் தந்தை) உக, நம் வாழ்வு எலாம் நேர் சிந்தி உலந்து அழிந்த' என இயைத்துப் பொருள்கொள்க. அழிந்த - அழிந்தன. ஆல், அசை. தகைநேர் வண்புகழ் என்றது, தகுதியினுலும் வண்மையி னுலும் வாலிக்கு உளதாகிய புகழினை. நின்று - அப்புகழொடு பொருந்தத் தன் தமையனைப் பணிந்தொழுகி; அப்புகழின் ஒளியிலே நிலைத்து வளர்ந்து எனப் பொருளுரைத்தலும் பொருந்தும். நிற்றல்- சுக்கிரீவன் செயல். பகை நேர்வார் உளர் ஆன பண்பு - பகைமை யினை மேற்கொண்டவராக உளராதற்குக் காரணமாகிய பண்பு. ஈண்டுப் பண்பு என்றது, குறிப்பு மொழியாய்ப் பகையென்னும் பண் பின்மையை உணர்த்தி நின்றது. 'நின் தந்தையின் வண் புகழில்

நின்று வளர்ந்த அவருடைய தம்பி சுக்கிரீவர், தம்மை வளர்த்த தமையனுருடன் இகல்கொண்டு நிகழ்த்திய இப் போர்ச் செயலால், நம் வாழ்வனைத்தும் அடியோடு சிதர்ந்து கெட்டழிந்த இவ்விழி நிலையை என் மகனே நீ பார்க்கவில்லையா?' என வாலியின் பிரிவினுற் கலக்கமுற்ற தாரை, தன் மைந்தன் அங்கதனை முன்னிலையாக்கிப் புலம்பினுள் என்பதாம். (176)

**4214.** அருமைந் தற்ற மகற்றும் வில்லியார்
ஒருமைந் தற்கு மடாத துன்னினுர்
தருமம் பற்றிய தக்க வர்க்கெலாம்
கருமங் கட்டளை யென்றல் கட்டதோ.

'அரு மைந்து அற்றம் அகற்றும் வில்லியார்,
ஒரு மைந்தற்கும் அடாதது உன்னினுர்;
தருமம் பற்றிய தக்கவர்க்கு எலாம்,
கருமம் கட்டளை என்றல் கட்டதோ?'

பொ:—(பிறர் யாவராலும் பெறுதற்கு) அரிய பெரு வன்மையினுல் (தன்னை அடைந்தாரது) துன்பத்தினைப் போக்கவல்ல வில் வீரராகிய இராமர், எந்த வீரனுக்கும் ஒவ்வாத முறையற்ற செயலை நினைந்து செய்து விட்டார். அற நெறியினைக் கடைப்பிடித்தொழுகும் தகுதியுடைய பெரியோர்களுக்கெல்லாம் (அவர்கள் செய்யும் நன்றும் தீதுமாகிய) செயல்களே (அவரது பண்பினை யறிதற்குரிய) உரைகல்லாகும் என்னும் (ஆன்ருேர்) மொழி (உண்மையொடு படாத) புனைந்துரையின் பாற்பட்டதோ?

கு:—மைந்து - வலிமை. அற்றம் - இறுதி; சாதலையொத்த பெருந் துன்பம்; ஆபத்து. வில்லியார் - வில் வீரர். மைந்தன் - வீரன். அடாதது - பொருந்தாதது. ஒரு மைந்தற்கும் அடாதது - வீரன் எவனுக்கும் ஒவ்வாத செயல்; வீரத்தின் வழுவிய செயல்; என்றது, பகைவர்மேல் மறைந்து நின்று அம்பு எய்தலை. 'தக்கவர்க் கெலாம் கருமம் கட்டளை' என்றது, "பெருமைக்கும் ஏனைச் சிறுமைக் குந் தத்தங், கருமமே கட்டளைக் கல்" (திருக்குறள் - 505) என வரும் அறநூல் விதியினை. கருமம் - செயல். கட்டளை - உரைகல்; பொன்னின் தன்மையினை அறிதற்கு உரைத்துப் பார்த்தற்கு அமைந்த கல். கட்டு - (கட்டிச் சொல்லும்) புனைந்துரை. கட்டது - புனைந்துரையின் பாலது; வினைக்குறிப்பு. வினுப் பொருளில் வந்த ஓகாரம் எதிர் மறைப் பொருளுணர்த்தியது. 'அருமந்தற்ற மகற்றும் வில்லியார்' எனப் பாடங்கொண்டு, 'அருமருந்தினைப் போன்று (பிறரது) ஆபத்

தினை நீக்குகின்ற வில் வீரராகிய இராமர்' எனப் பொருளுரைத்தலும் பொருந்தும். இப்பொருட்கு, 'அருமருந்து ஒத்து' என்னுந் தொடர் 'அருமந்து' என மரூஉவாய் வந்ததாகக் கொள்ளுதல் வேண்டும். **(177)**

அனுமன், வானர மகளிரைக் கொண்டு தாரையை அந்தப்புரத்திற்கு அனுப்பிவிட்டு, வாலிக்கு இறுதிக்கடன் செய்வித்து இராமனையடைந்து நிகழ்ந்தன கூறல் 4215-4216

**4215.** என்ரு ளின்னன பன்னி யின்னலோ
டொன்ரு ளுணர் வேது முற்றிலாள்
நின்ரு ளந்நிலை நோக்கி நீதிசால்
வன்ருண் மால்வரை யன்ன மாருதி.

என்ருள், இன்னன பன்னி, இன்னலோடு
ஒன்ருனுள்; உணர்வு ஏதும் உற்றிலாள்;
நின்ருள்; அந்நிலை நோக்கி, நீதிசால்,
வன் தாள் மால்வரை அன்ன மாருதி,

பொ :—என்று (வாலியை எண்ணிப்) புலம்பினவளாகிய தாரை, இத்தன்மையனவாகிய புலம்புதல் மொழிகளைப் பலமுறையும் அடுக்கிச் சொல்லி, நீங்காத பெருந் துன்பத்தோடு ஒன்ருகித் தன்னை மறந்தாள்; தன்னுணர்வு சிறிதும் வரப்பெற்றிலள்; உயிர்ப்பற்று நின்ருள். (அவளுக்கு உளதாகிய) அத் துன்ப நிலையினை நோக்கி, நீதி நிறைந்த வலிய முயற்சியினையுடைய பெரிய மலையினையொத்த தோற்றமுடையவனுகிய அனுமன்.

கு :—இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர். நீதிசால் மாருதி, வன்தாள் மாருதி, மால்வரை அன்ன மாருதி எனத் தனித்தனி இயையும். வன்தாள் - (எடுத்த செயலை இனிது முடித்தற்கு வேண்டிய) வலிய முயற்சி. மாருதி - மருத்தின் புதல்வன். மருத் - காற்று; வாயு தேவன். அனுமன் மருத்தின் புதல்வனுதலின், மாருதி என அழைக்கப்பெற்ருன். **(178)**

**4216.** மடவா ராலம் மடந்தை முன்னர்வாழ்
இடமே வும்படி யேவி வாலிபால்
கடன்யா வுங்கடை கண்டு கண்ணனே
டுடனு யுற்றதெ லாமு ணர்த்தினன்.

மடவாரால் அம் மடந்தை முன்னர் வாழ்
இடம் மேவும்படி ஏவி, வாலிபால்
கடன் யாவும் கடைகண்டு, கண்ணனோடு
உடனாய் உற்றது எலாம் உணர்த்தினான்.

பொ :—(வானர) மகளிரைக்கொண்டு தாரை என்னும் அம் மடந்தையை அவள் முன்னர்த் தங்கியிருந்த அந்தப்புரத்திற் சென்று சேரும்படி அனுப்பிவிட்டு, வாலிக்குச் செய்யவேண்டிய இறுதிக் கடன்கள் அனைத்தையும் (அவன் புதல்வனாகிய அங்கதனைக் கொண்டு) செய்து முடித்துத் திருமாலின் அமிசமாகிய இராமனுடனே வந்து சேர்ந்து, நடந்த செய்தியனைத்தையும் அறிவித்தான்.

கு :—மேற் செய்யுளில் வந்த 'மாருதி' என்னும் எழுவாய், இச் செய்யுளில் வந்த 'உணர்த்தினான்' என்னும் பயனிலையைக் கொண்டு முடிந்தது. மாருதி, ஏவி, கடன் யாவும் கடைகண்டு, கண்ணனோடு உடனாய், உற்றதெலாம் உணர்த்தினான் என முடியும். வாலியின் பிரிவாற்றாது பெருந்துயருழந்து புலம்பிய தாரையை அவளுடைய தோழிமார்களைக் கொண்டு தேற்றி அந்தப்புரத்திற் செல்லும்படி பணித்து வாலிக்குச் செய்யவேண்டிய ஈமக்கடன்களை அங்கதனைக் கொண்டு நிறைவேற்றி இராமனை அடைந்து நடந்த செய்தி யனைத்தையும் அவனுக்கு அனுமன் அறிவித்தான் என்பதாம். கரியோன் என்னும் பொருளினதாகிய கண்ணன் என்ற பெயர் கிருஷ்ணாவதாரத்தைக் குறியாமல் திருமாலின் அமிசமாகிய இராமன் என்ற பொருளில் இங்கு ஆளப்பெற்றது. 'கருணையங் கோயிலுளிருந்த கண்ணனை' (வீடணனடைக்கலப் - 50) என்பர் பின்னரும். கடை காணல் - முற்றச் செய்து முடித்தல். (179)

## சூரியன் மறைதலும் இராமன் இரவுப் பொழுதை அரிதிற் கழித்தலும் 4217-4218

**4217.** அகமே ரற்றுக மீத ருக்கனார்
புகமே லைக்கிரி புக்க போதினின்
நகமே யொத்த குரக்கு நாயகன்
முகமே யொத்தது மூரி மண்டிலம்.

அகம் ஏர் அற்று உக, மீது அருக்கனார்
புக மேலைக்கிரி, புக்க போதினில்,
நகமே ஒத்த குரக்கு நாயகன்
முகமே ஒத்தது, மூரி மண்டிலம்.

பொ :—விசும்பின்மீது இயங்கும் சூரியன், அகலிடமாகிய இப்பூமி எழுச்சி குன்றி ஒளியிழக்கும்படி மேற்றிசை மலையிற் புக்கு மறைய, மறைந்த அப்பொழுது, பெருமை வாய்ந்த சூரிய மண்டிலமானது, மலையினையொத்த தோற்றமுடைய வானர வேந்தனாகிய வாலியின் முகத்தை யொத்து(ச் செந்நிற முடையதாய்) விளங்கியது.

கு :—மீது அருக்கனார், அகம் ஏர் அற்று உக மேலைக்கிரிபுக, புக்க போதினில், மூரி மண்டிலம், நகமே ஒத்த குரக்கு நாயகன் முகமே ஒத்தது என இயையும். அகம் - அகலிடம்; பூமி. ஏர் - எழுச்சி; பொலிவு. அற்று உக - நீங்கிச் சிதற. அருக்கன் - சூரியன். அருக்கனார் என்புழி ஆர் விகுதி உயர்த்தற் பொருளது. குரக்கு நாயகன் என்றது, வானர குல மன்னனாகிய வாலியை. குரங்கு நாயகன் = குரக்குநாயகன் என மெல்லெழுத்து வல்லெழுத்தாயிற்று. குரங்கினத் தரசனாகிய வாலியின் மேனி உயர்ச்சிக்கு ஒப்புக்கூற வேண்டுமென்றால், வானுறவோங்கிய மலையினையே உவமையாகக் கூற வேண்டுமென்பார், 'நகமே ஒத்த குரக்கு நாயகன்' என்றார். நகம் - மலை. மூரி மண்டிலம் என்றது பெருமை வாய்த சூரிய மண்டிலத்தை. மூரி - பெருமை. காலையிலே தோன்றிப் பகல் முழுதும் பேரொளி பரப்பி மாலையிலே மலையிடத்தே மறையும் சூரியனது செந்நிற வொளிக்கு, தன் வாழ்நாள் முழுதும் ஞாலமெலாம் போற்றப் புகழொளி பரப்பி இராமபாணத்தால் உயிர் துறந்து வானுலகடைந்த வாலியின் செந்நிற முகவொளியை உவமை கூறிய திறம் கூர்ந்து நோக்கத்தக்கதாகும். இறந்து கிடக்கும் வாலியின் முகவொளியை நோக்கிய தாரை, 'பெருமையிற் சிறந்தவரே, மறையும் நிலையிலுள்ள சூரியனது ஒளி மேருமலையில் எவ்வண்ணம் திகழுமோ, அவ்வண்ணமே நீர் உயிர்துறந்த நிலையிலும் அரசத் திருவாகிய புகழொளி நும்மை விட்டு அகலவில்லை' என்று கூறிப் புலம்பியதாக வான்மீகத்திற் கூறப்பட்டிருக்கும் உவமை இச் செய்யுட் பொருளோடு ஒப்புநோக்கி யுணர்தற்குரியதாகும். (180)

4218. மறைந்தான் மாலை யருக்கன் வள்ளியோன்
உறைந்தான் மங்கை திறத்தை யுன்னுவான்
குறைந்தா னெஞ்சு குழைந்த ழுங்குவான்
நிறைந்தார் கங்குலின் வேலை நீந்தினான்.

மறைந்தான் மாலை அருக்கன்; வள்ளியோன்
உறைந்தான், மங்கை திறத்தை உன்னுவான்;
குறைந்தான், நெஞ்சு குழைந்து அழுங்குவான்;
நிறைந்து ஆர் கங்குலின் வேலை நீந்தினான்.

பொ :—கதிரவன் மாலைப்பொழுதில் மறைந்தான்; வண்மைக் குணமுடையனாகிய இராமன், சீதையின் துயர் நிலையை எண்ணியவனாய் (அங்குத்) தங்கியவன், (உடல்) மெலிந்து உள்ளம் நைந்து வருந்துபவனாகி, (இருள்) நிறைந்து பரவிய இராப்பொழுதாகிய பெரிய கடலினை (அரிதின்) நீந்திக் கடந்தான்.

கு :—அருக்கன் மாலை மறைந்தான்; வள்ளியோன், மங்கை திறத்தை உன்னுவான் உறைந்தான்; குறைந்தான், நெஞ்சு குழைந்து அழுங்குவான், கங்குலின் வேலை நீந்தினான் என முடியும். வள்ளியோன் என்றது இராமனை. மங்கை - சீதை. உறைந்தான் - தங்கியவன்; வினையாலணையும் பெயர். உன்னுவான், குறைந்தான், அழுங்குவான் என்னும் வினைமுற்றுக்கள் எச்சப்பொருளில் வந்தன. நிறைதல் - (நிலைக்கவொண்ணாத ஆழமுடையதாய்) நிரம்புதல். ஆர்தல்-(கடக்கவொண்ணாத அகலமுடையதாய்ப்) பரவுதல். கங்குல்- இரவு. வேலை - கடல். கங்குலின் வேலை - இரவாகிய கடல்; பண்புத் தொகை. இன், அல்வழிக்கண் வந்த சாரியை. நீந்துதல் - அரிதின் முயன்று கடத்தல். (181)

## வாலிவதைப் படலம் முற்றிற்று.

# 8. அரசியற் படலம்

அரசு இயல் படலம் என்பது, சுக்கிரீவனது அரசாட்சியின் இயல்பைக் கூறும் பகுதி எனப் பொருள்படும். இராமன் சுக்கிரீவனுக்கு அரசியலைப் பற்றிய அறிவுரைகளை எடுத்துக் கூறிய பகுதியாதலின் இது அரசியற் படலம் எனப்பட்டதாகவும் கொள்ளலாம். பாலகாண்டத்தில் தசரதனின் அரசாட்சியைப் பற்றிக் கூறும் பகுதியும் அரசியற் படலம் என்று வகுக்கப்பட்டமையும் முன்னரே கண்டோம். சில சுவடிகளில் இப்படலம், 'சுக்கிரீவன் முடிசூடு படலம் என்றும், சுக்கிரீவனை முடிசூட்டு படலம் என்றும் குறிக்கப்பட்டுள்ளது. சில சுவடிகளில் வாலி இறந்த பின் தாரை புலம்புறு பாடல்களும் இப்படலத்தோடு இணைக்கப்பட்டுள்ளன. மற்றும் சில சுவடிகளில் அப்பாடல்களைக் கொண்டு தாரை புலம்புறு படலம் என்றே தனிப்படலம் ஆக ஆக்கப்பட்டு உள்ளது. இப்பதிப்பில், பெரும்பாலான சுவடிகளில் உள்ளபடி, அப்பாடல்கள் வாலி வதைப் படலத்தில் அடக்கப்பட்டுள்ளன.

இப்படலத்தில், இராமன் இலக்குவனைக் கொண்டு சுக்கிரீவனுக்கு முடிசூட்டுவிப்பதும், அனுமன் அதற்கு வேண்டும் பொருள்களை அமைத்துக் கொடுப்பதும், முடிசூட்டப் பெற்ற சுக்கிரீவன் இராமனை வந்து வணங்குவதும், இராமன் சுக்கிரீவனுக்கு அரசியல் முறைகளையும், ஓர் அரசன் பிறரிடம் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்பதையும் தக்க ஏதுக்களால் விளக்கிக் கூறுவதும், சுக்கிரீவன் இராமனைக் கிட்கிந்தைக்கு அழைப்பதும், அதை இராமன் தன் விரதத்திற்கு அடாது என்று மறுப்பதும், மாரிக் காலம் கழித்துப் படையுடன் வரும்படி அனுப்புவதும், அங்கதனையும் அனுமனையும் சுக்கிரீவனுடன் இராமன் அனுப்புவதும், அங்கதனுக்கு இளவரசுப் பட்டம் சூட்டிப் பேரரசனுன சுக்கிரீவன் இன்ப வாழ்வு வாழ்வதும், இராமனும் இலக்குவனும் ரிசியமூக மலையின் ஒரு பகுதியில் தனித்து வாழ்வதும் ஆகிய செய்திகள் கூறப்படுவனவாம்.

வான்மீகத்தில் இவ்வாறு இராமன் சுக்கிரீவனுக்கு அரசியலைப் பற்றிய அறிவுரைகளை எடுத்துக் கூறியதாக யாதொரு குறிப்பும் காணப்படவில்லை. அங்கு இராமன் கட்டளைப்படி சுக்கிரீவன் கிட்கிந்தை சென்று முடிசூட்டிக் கொண்டதாகவுள்ளதேயன்றி, இலக்குவன் முடிசூட்டியதாகக் கூறப்படவில்லை. சுக்கிரீவனை இராவணனைக் கொல்லும் காரியத்தில் முயல்வதற்குக் கார்த்திகை மாதத்தில் வரும்படி இராமன் கட்டளையிட்டதாக வான்மீகம் கூறுகிறது. சுக்கிரீவன் சென்ற பின் இராமனும் இலக்குவனும் சென்று ப்ரஸ்ரவண குகையில் தங்கியதாக வான்மீகம் கூறுகிறது.

## 8. அரசியற் படலம்

### சூரியோதய வருணனை

4219. புதல்வன் பொன்மகு டம்பொ றுத்தலான்
முதல்வன் பேருவ கைக்கு முந்துவா
னுதவும் பூமகள் சேர வொண்மலர்க்
கதவஞ் செய்ய கரத்தி னீக்கினன்.

புதல்வன் பொன் மகுடம் பொறுத்தலால்,
முதல்வன், பேர் உவகைக்கு முந்துவான்,
உதவும் பூமகள் சேர, ஒள் மலர்க்
கதவம் செய்ய கரத்தின் நீக்கினன்.

பொ :—(அன்று) தன் மகனை சுக்கிரீவன் தங்கமுடி தரிக்கப் போவதால் தந்தையான சூரியன் (அதனைக் கண்டு) மிக்க மகிழ்ச்சியடைதற்கு முற்பட்டவனாய் (அந்த முடிசூட்டு விழாவிற்கு) உதவக் கூடிய திருமகள் வந்து (அவனை) அடையும்படி (அவள் உறையுளான) சிறந்த தாமரை மலர்களின் இதழ்களாகிய கதவுகளைத் தனது சிவந்த கதிர்களாகிய கைகளினால் திறந்துவிட்டான்.

கு :—இரவில் தாமரை மலர் கூம்பவும் இதழ்களாகிய கதவுகள் அடைபட்டுக் கிடத்தலால் பூவின் அகத்துள்ளே அடைப்பட்டிருந்த மலர்மகளைக் காலையில் நிகழப் போகும் சுக்கிரீவனின் முடிசூட்டு விழாவிற்கு வந்து சேரும்படி விடுவிப்பதற்காகச் சூரியன் தனது சிவந்த கிரணங்களாகிய கைகளால் இதழ்க் கதவைத் திறந்து விட்டான் என்றவாறு. இது தற்குறிப்பேற்றம். சூரியன் உதயமாகத் தாமரை மலர்ந்தது என்பது கருத்து. (1)

### சுக்கிரீவனுக்கு முடிசூட்டும்படி இராமன் இலக்குவனுக்குக் கட்டளையிடுதல்

4220. அதுகா லத்தி லருட்கு நாயகன்
மதிசா றம்பியை வல்லை யேவினன்
கதிரோன் மைந்தனை யைய கைகளால்
விதியான் மௌலி மிலைச்சு வாயென.

அது காலத்தில், அருட்கு நாயகன்,
மதி சால் தம்பியை வல்லே ஏவினன்,
'கதிரோன் மைந்தனே, ஐய! கைகளால்
விதியால் மௌலி மிலேச்சுவாய்' என.

பொ :—அப்பொழுது, அருளுக்குத் தலைவனான இராமன் அறிவு நிறைந்த தன் தம்பியாகிய இலக்குவனை நோக்கி, 'அப்பா! சூரியனுடைய மகனாகிய சுக்கிரீவனுக்கு முறைப்படி உன் கைகளால் முடி சூட்டுவாய்' என்று விரைவில் கட்டளையிட்டான்.

கு :—கைகேயியின் கட்டளைப்படி காடுறையும் இராமன், தானே கிட்கிந்தை நகர் சென்று முடிசூட்ட இயலாமை பற்றி, இலக்குவனை ஏவினன் என்க. வான்மீகத்தில் இலக்குவனை ஏவினதாக இல்லை. மாருதி முதலிய வானரங்களையே அனுப்பி முடிசூட்டச் செய்தான் என்று அந்நூல் கூறுகிறது. (2)

## முடிசூட்டு விழாவிற்கு வேண்டுவன கொணர்க என இலக்குவன் அனுமனுக்குக் கூறுதல்

4221. அப்போ தேயரு ணின்ற வண்ணலும்
மெய்ப்போர் மாருதி தன்னை வீரநீ
இப்போ தேகொண ரின்ன செய்வினைக்
கொப்பாம் யாவையு மென்று ணர்த்தலும்.

அப்போதே, அருள் நின்ற அண்ணலும்,
மெய்ப்போர் மாருதி தன்னை, 'வீர! நீ,
இப்போதே கொணர், இன்ன செய்வினைக்கு
ஒப்பு ஆம் யாவையும்' என்று உணர்த்தலும்.

பொ :—(இராமனது) ஆணையின் வண்ணம் நடப்பவனான பெருமையிற் சிறந்த இலக்குவனும் உடனே உண்மைப் போரைச் செய்தலில்வல்ல அனுமானைப் பார்த்து 'வீரனே! இந்த (முடிசூட்டு விழாவாகிய) செய்யுந் தொழிலுக்கு வேண்டிய எல்லாப் பொருள்களையும் இப்பொழுதே கொண்டு வருக' என்று கூறுதலும்.

கு :—அருள் என்றது இங்கே அருள்மொழியாகிய ஆணையை. அருள் நின்ற என்றது அவ்வாணையை நிறைவேற்றி வைக்கும் நெறியிலே ஒருப்பட்டு நின்ற என்றவாறு. இங்கு அனுமனை 'மெய்ப்போர் மாருதி' என்று கம்பர் கூறியது சிந்திக்கற்பாலது. (3)

### அவ்வாறே அனுமன் கொணர்தல்

4222. மண்ணுந் நீர்முதன் மங்க லங்களு
மெண்ணும் பொன்முடி யாதி யாவையு
நண்ணும் வேலையி னம்பி தம்பியும்
திண்ணஞ் செய்வன செய்து செம்மலே.

மண்ணும் நீர் முதல் மங்கலங்களும்
எண்ணும் பொன்முடி ஆதி யாவையும்
நண்ணும் வேலையில், நம்பி தம்பியும்,
திண்ணம் செய்வன செய்து, செம்மலே.

பொ :—நீராட்டுதற்கு உரிய நீர் முதலிய மங்கலப் பொருள்களும், மேலாக எண்ணப்படுகின்ற தங்கமுடி முதலிய எல்லாப் பொருள் களும் வந்து சேர்ந்தவளவில், சிறந்தவனை இராமனின் தம்பியாகிய இலக்குவனும் பெருமையுடைய சுக்கிரீவனுக்குத் தவருது செய்ய வேண்டியவற்றைச் செய்து.

கு :—'மௌலி சூட்டினன்' என அடுத்துவருஞ் செய்யுளோடு முடியும். யாவையும் அனுமன் முயற்சியால் நண்ணும் வேலையில் என்க. (4)

### இலக்குவன் சுக்கிரீவனுக்கு முடிசூட்டுதல்

4223. மறையோ ராசி வழங்க வானுளோர்
நறைதோய் நாண்மலர் தூவ நன்னெறிக்
கிறையோன் றன்னிளை யோனவ் வேந்தலைத்
துறையோர் நூன்முறை மௌலி சூட்டினன்.

மறையோர் ஆசி வழங்க, வானுளோர்
நறை தோய் நாள் மலர் தூவ, நல்நெறிக்கு
இறையோன்தன் இளையோன், அவ் ஏந்தலைத்
துறையோர் நூல்முறை மௌலி சூட்டினன்.

பொ :—வேதம் ஓதும் அந்தணர்கள் வாழ்த்துக் கூறவும், தேவர்கள் தேன் ததும்பும் அன்றலர்ந்த மலர்களைச் சொரியவும், நல்ல வழியாகிய ஒழுக்கத்திற்குத் தலைவனுகிய இராமனின் தம்பி யாகிய இலக்குவன், நல்ல நெறிமுறைகளில் வல்லவர்கள் கூறிய சாத்திர முறைப்படி தலைமைக் குணங்களையுடையவனை சுக்கிரீவ னுக்கு முடிசூட்டினன்.

கு :—பொய்தீர் ஒழுக்க நெறியில் நடப்பவன் இராமன் ஆதலால் அவன் நன்னெறிக்கிறையோன் என்னப்பட்டான். (5)

முடிசூடிய சுக்கிரீவன் இராமனை வணங்கிய நிலையில் இராமன், அவனுக்கு உறுதிபயக்கும் அறிவுரைகளைப் பகர்தல் 4224-4235

4224. பொன்மா மெளலி புனைந்து பொய்யிலான்
றன்மா னக்கழ ருழும் வேலையி
னன்மார் பிற்றழு வுற்று நாயகன்
சொன்னான் முற்றிய சொல்லி னெல்லையான்.

பொன்மா மெளலி புனைந்து, பொய் இலான்,
தன் மானக் கழல் தாழும் வேலையில்,
நல் மார்பில் தழுவுற்று, நாயகன்
சொன்னான், முற்றிய சொல்லின் எல்லையான்.

பொ :—பெரிய தங்கமுடியைத் தரித்துக் கொண்டு பொய் இல்லாதவனாகிய சுக்கிரீவன் தன்னுடைய பெருமை பொருந்திய அடிகளில் விழுந்து வணங்கிய பொழுது, முதிர்ந்த நூல்களின் எல்லையைக் கண்டவனும் தலைவனுமாகிய இராமன் (அவனை எடுத்து) நல்ல தனது மார்போடு அணைத்துக் கொண்டு (பின்வருமாறு) சொல்லலுற்றான்.

கு :—முடிதரித்துக் கொண்டதும் ஆணவம் கொள்ளாதும், நன்றி மறவாதும், அடங்கி வந்து இராமன் திருவடிகளில் வணங்கும் எளியனாய்ச் சுக்கிரீவன் விளங்கியதால், அவன் பொய்இலான் என்னப்பட்டான். பின்வரும் 11 பாடல்களில் இராமன் சுக்கிரீவனுக்குக் கூறிய அறவுரை காணப்படும். இவ்வாறு முடிசூடிக் கொள்ளும் மன்னனுக்கு ஆன்றோர் அறவுரை பகர்தல் மரபு என்பதை முன்னரும் அயோத்தியா காண்டத்தில் வசிட்டன் இராமனுக்குக் கூறியவற்றால் அறியலாம். இராமனை முன்னரும் “ செல்லுஞ்சொல் வல்லான் ” (1830) என்றும், “ தென்சொற் கடந்தான் வடசொற்கடற் கெல்லை தேர்ந்தான் ” (1831) என்றும் கம்பர் கூறியுள்ளார். (6)

4225. ஈண்டுநின் றேகி நீநின்
☆ னியல்பமை யிருக்கை யெய்தி
வேண்டுவ மரபி னெண்ணி
விதிமுறை யியற்றி வீர
பூண்டபே ரரசுக் கேற்ற
யாவையும் புரிந்து போரில்
மாண்டவன் மைந்த னோடும்
வாழ்திநற் றிருவின் வைகி.

'ஈண்டு நின்று ஏகி, நீ நின் இயல்பு அமை இருக்கை எய்தி,
வேண்டுவ மரபின் எண்ணி, விதிமுறை இயற்றி, வீர!
பூண்ட பேர் அரசுக்கு ஏற்ற யாவையும் புரிந்து, போரில்
மாண்டவன் மைந்தனோடும் வாழ்தி! நல்திருவின் வைகி.'

பொ :—'வீரனே! நீ இங்கிருந்து போகி, உன் தன்மைக்குப் பொருந்தியதான இருப்பிடத்தை அடைந்து, செய்ய வேண்டியவற்றை முறைப்படி ஆராய்ந்து தக்க முறையில் செய்து, நீ ஏற்றுக் கொண்டதான பெரிய அரசாட்சிக்கு உரியதான எல்லாவற்றையும் நடத்தி, சண்டையில் இறந்தவனான வாலியின் மகனாகிய அங்கதனோடும் நல்ல செல்வ வாழ்க்கையில் தங்கி வாழ்வாயாக.

கு :—'போரில் மாண்டவன் மைந்தனோடும் வாழ்தி' என்றதால் அங்கதனுக்கு இளவரசுப் பட்டம் சூட்ட வேண்டும் என்பதை இராமன் குறிப்பாக உணர்த்தினான் என்க. (7)

4226. வாய்மைசா லறிவின் வாய்த்த
மந்திர மாந்த ரோடுந்
தீமைதீ ரொழுக்கின் வந்த
திறத்தொழின் மறவ ரோடுந்
தூய்மைசால் புணர்ச்சி பேணித்
துகளறு தொழிலை யாகிச்
சேய்மையோ டணிமை யின்றித்
தேவரிற் றெரிய நிற்றி:

'வாய்மை சால் அறிவின் வாய்த்த மந்திர மாந்தரோடும்,
தீமை தீர் ஒழுக்கின் வந்த திறத்தொழில் மறவரோடும்,

தூய்மை சால் புணர்ச்சி பேணித் துகள் அறு தொழிலை ஆகிச்
சேய்மையோடு அணிமை இன்றித் தேவரின் தெரிய நிற்றி.'

பொ :—' உண்மையோடும் கூடிய அறிவு நிரம்பப்பெற்ற அமைச்சர்களோடும், குற்றமற்ற நல்லொழுக்கத்தோடு ஒழுகும் வலிமைக்கேற்ற செயல்களையுடைய வீரர்களான படைத் தலைவர்களோடும் மாசற்ற கூட்டுறவை வளர்த்துக் குற்றமில்லாத செயல்களையுடையவனாகி(ப் பிறரோடு) மிகவும் விலகி விடாமலும் (மிகவும்) நெருங்கி விடாமலும் (உன்னைப் பிறர்) தேவர்களைப் போலக் கருதும்படி நிற்பாயாக.'

கு :—அகம்புறமாகிய இரண்டாலும் செய்யும் நட்பைத் தூய்மை சால் புணர்ச்சி என்றார். சேய்மையோடு அணிமையின்றி: திருவள்ளுவர் மன்னரைச் சேர்ந்தொழுகல் என்ற அதிகாரத்தில் " அகலாதணுகாது தீக்காய்வார் போல்க, இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகுவார் " (691) என்றதும் நோக்கத்தகும். (8)

4227. புகையுடைத் தென்னி னுண்டு
பொங்கன லங்கென் றுன்னும்
மிகையுடைத் துலக நூலோர்
வினையமும் வேண்டற் பாற்றே
பகையுடைச் சிந்தை யார்க்கும்
பயனுறு பண்பிற் றீரா
நகையுடை முகத்தை யாகி
யின்னுரை நல்கு நாவால்.

' புகை உடைத்து என்னின், உண்டு
பொங்கு அனல் அங்கு என்று உன்னும்
மிகை உடைத்து உலகம் ; நூலோர்
வினையமும் வேண்டற் பாற்றே ;
பகையுடைச் சிந்தை யார்க்கும்,
பயன் உறு பண்பின் தீரா
நகையுடை முகத்தை ஆகி,
இன் உரை நல்கு, நாவால்.'

பொ :—'(ஓரிடத்தில்) புகை உண்டாயிற்று என்றால், அவ்விடத்தில் கிளர்கின்ற நெருப்பும் இருக்க வேண்டும் என்று உய்த்துணரும் சிறப்பறிவைக் கொண்டுள்ளது இந்த உலகம்; (ஆயினும்) நூல் வல்லோராற் கூறப்படும் சூழ்ச்சியும் (அரசர்க்கு) விரும்பத்

தக்கதேயாம்; (ஆதலால் தம்மிடத்துப்) பகைமை கொண்டொழுகும் உள்ளத்தவர் மாட்டும் நற்பயனைத் தரும் பாடறிந்து ஒழுகலாகிய பண்பை விட்டுவிடாமல் சிரிப்புப் பொருந்திய முகத்தையுடையவனுகி வாயால் இனிய சொற்களையே பேசுவாயாக.'

கு :—மூவகைப் பிரமாணங்களுள் காட்சியை விடுத்து ஏனை அநுமானப் பிரமாணமும் ஆகமப் பிரமாணமும் ஈண்டுக் கூறப்பட்டன. "பகையுள்ளும் பண்புள் பாடறிவார் மாட்டு" (995) என்றும் "நகலாணும் நன்னயமென்னுஞ் செருக்கு" (860)என்றும் திருவள்ளுவரும் கூறியுள்ளார். (9)

4228. தேவரு மருடற் கொத்த
செயிரறு செல்வ மஃதுன்
காவலுக் குரிய தென்ரு
லன்னது கருதிக் காண்டி
யேவரு மினிய நண்ப
ரயலவர் விரவா ரென்று
மூவகை யியலோ ராவர்
முனைவர்க்கு முலக மூன்றின்.

'தேவரும் மருள்தற்கு ஒத்த செயிர் அறு செல்வம், அஃதுஉன்
காவலுக்கு உரியது என்ருல், அன்னது கருதிக் காண்டி ;
ஏவரும், இனிய நண்பர், அயலவர், விரவார் என்று
மூவகை இயலோர் ஆவர், முனைவர்க்கும், உலகம் மூன்றின்.'

பொ :—'தேவர்களும் மயங்கத்தக்க குற்றமில்லாத செல்வமாகிய அது உன்னுடைய பாதுகாக்கும் பொறுப்பில் அமைந்திருக்கிறது என்ருல், அதனை (இயற்றலும் ஈட்டலும் காத்தலும் வகுத்தலும் ஆகிய முறைகளை)ச் சிந்தித்துச் செயற்படுத்திக் காத்தல் வேண்டும்; தவக் கூற்றினுல் மிக்க இருடிகளுக்கும் மூன்று உலகங்களிலும் உள்ள யாவரும் இனிய நண்பரும் நொதுமலரும் பகைவரும் என மூன்று வகைப்பட்ட தன்மையையுடையவர் ஆவர்.' (10)

4229. செய்வன செய்தல் யாண்டுந்
தீயன சிந்தி யாமல்
வைவன வந்த போதும்
வசையில வினிய கூறன்

மெய்சொலல் வழங்கல் யாவு
மேவின வெஃக லின்மை
யுய்வன வாக்கித் தம்மோ
டுயர்வன வுவந்து செய்வாய்.

‘செய்வன செய்தல், யாண்டும்,
தீயன சிந்தியாமல்;
வைவன வந்த போதும்
வசை இல இனிய கூறல்,
மெய் சொலல், வழங்கல் யாவும்,
மேவின வெஃகல் இன்மை,
உய்வன ஆக்கித் தம்மோடு
உயர்வன உவந்து செய்வாய்.’

பொ:—‘(மேற்கூறிய நண்பர் அயலவர் விரவார் என்னும் மூவகையோருள்) யாவரிடத்திலும் தீமையான செயல்களைக் கருதாமல் செய்ய வேண்டிய நல்லனவற்றையே செய்தலும், பிறர் இகழ்ந்து கூறிய பழிச்சொற்கள் வந்து செவிகளிற்பட்டாலும் தீங்கில்லாத இனியனவற்றையே பேசுதலும், உண்மையையே உரைத்தலும், இயையும் எல்லாப் பொருள்களையும் (இரப்போர்க்கு) ஈதலும், (பிறரிடத்திற்) பொருந்தின பொருள்களை விரும்பாமையும் (ஆகிய இவை) ஒருவரை நற்கதியடையச் செய்து தாமும் மேம்படுவனவாம்; (ஆதலால் இவற்றை நீ) விரும்பிச் செய்வாயாக.’ (11)

4230. சிறியரென் றிகழ்ந்து நோவு
செய்வன செய்யன் மற்றிந்
நெறியிகந் தியானோர் தீமை
யிழைத்தலா லுணர்ச்சி நீண்டு
குறியதா மேனி யாய
கூனியாற் குவவுத் தோளாய்
வெறியன வெய்தி நொய்தின்
வெந்துயர்க் கடலின் வீழ்ந்தேன்.

‘சிறியர் என்று இகழ்ந்து நோவு
செய்வன செய்யல்; மற்று, இந்
நெறி இகந்து, யான் ஓர் தீமை
இழைத்தலால், உணர்ச்சி நீண்டு,

குறியது ஆம் மேனி ஆய
கூனியால், குவவுத் தோளாய்!
வெறியன எய்தி, நொய்தின்,
வெந்துயர்க் கடலின் வீழ்ந்தேன்.'

பொ :—'திரண்ட தோள்களையுடையவனே! (உருவத்தாலோ, வலிமையாலோ, பதவியாலோ, அறிவாலோ) சிறியர் என்பதுபற்றி இகழ்ச்சி செய்து (எவரிடத்தும்) வருத்தம் விளைவிப்பனவாகிய செயல்களைச் செய்யாதே; நான் இந்த நல்வழியின் வரம்பைக் கடந்து ஒரு தீங்கு செய்ததனாலே, அறிவு மிகுந்து குறுகிய வடிவமுடையவளான கூனியினால் எளிதில் வறுமைகளை யடைந்து, கொடிய துன்பமாகிய கடலில் விழுந்தேன்.'

கு :—கூனி மந்தரையின் முதுகில் இராமன் இளமைப் பருவத்தில் உண்டைவில் தெறித்த செயல் அயோத்தியா காண்டத்தில் கூறப்பட்டுள்ளது (1536). உணர்ச்சி என்பது இங்கே அறிவு என்ற பொருளில் வந்துள்ளது. சூழ்ச்சித் திறன் என்றும் கொள்ளலாம். செல்வங்கள் அரசு, சுற்றம், பொன், மணி, நெல் முதலாகப் பலவாதலின் அவற்றின் இன்மையை வெறியன எனப்பன்மையிற் கூறினார். (12)

4231. மங்கையர் பொருட்டா லெய்து
மாந்தர்க்கு மரண மென்றல்
சங்கையின் றுணர்தி வாலி
செய்கையாற் சாலு மின்னு
மங்கவர் திறத்தி னானே
யல்லலும் பழியு மாத
லெங்களிற் காண்டி யன்றே
யிதற்குவே றுவமை யுண்டோ.

'மங்கையர் பொருட்டால் எய்தும்
மாந்தர்க்கு மரணம், என்றல்,
சங்கை இன்று உணர்தி; வாலி
செய்கையால் சாலும்; இன்னும்,
அங்கு அவர் திறத்தினானே,
அல்லலும் பழியும் ஆதல்
எங்களில் காண்டி அன்றே;
இதற்கு வேறு உவமை உண்டோ?'

பொ :—'பெண்களின் நிமித்தமாக ஆடவர்க்குச் சாவும் ஏற்படும் என்கிற பொருளை ஐயமின்றி அறிந்து கொள்வாயாக; (இவ்வுண்மை) வாலியின் செய்தியால் உறுதிப்படும்; மற்றும், அப்பெண்களின் காரணமாகவே துன்பமும் பழிப்பும் நேர்தலை எங்களிடத்திலேயே பார்க்கிறாய் அல்லவா? இதற்கு வேறு எடுத்துக்காட்டு உள்ளதோ? (வேண்டுமோ.)'

கு :—பிறன் மனைவியை விரும்புதல் பெருங்கேடு விளைத்தலால் அது கூடாதென்றும், அவ்வாறே தன் மனைவியின் சொற் கேட்டலும் கேடு பயத்தலால் அதுவும் கூடாதென்றும், மகளிர் பிறர்மேற் பழி கூற அஞ்சாராதலால் அவரிடத்து எச்சரிக்கையாகப் பழக வேண்டும் என்றும் இச் செய்யுளிற் கூறப்பட்டது. சுக்கிரீவன் மனைவியான உருமையைக் காதலித்து வாலி மரணம் எய்தினன். சீதையின் சொற் கேட்டு இராமன் பொன்மானின் பின் சென்று அல்லலும் பழியும் அடைந்தான் என்று ஏதுக்களும் சுட்டிக் கூறப்பட்டுள்ளன. சீதை இலக்குவன்மேல் பழிச் சொல்லைக் கூறி அவனை விரட்டினமையும் இங்கு நினையத்தகும். (13)

**4232.** நாயக னல்ல னம்மை
நனிபயந் தெடுத்து நல்குந்
தாயென வினிது பேணத்
தாங்குதி தாங்கு வாரை
யாயது தன்மை யேனு
மறவரம் பிகவா வண்ணந்
தீயன வந்த போது
சுடுதியாற் றீமை யோரை.

'"நாயகன் அல்லன், நம்மை
நனி பயந்து எடுத்து நல்கும்
தாய்" என, இனிது பேணத்
தாங்குதி தாங்குவாரை;
ஆயது தன்மையேனும்,
அற வரம்பு இகவா வண்ணம்,
தீயன வந்த போது,
சுடுதியால் தீமையோரை.'

பொ :—'"(இவன் நமக்கு) அரசன் (மட்டும்) அல்லன்; நம்மைப் பெற்றெடுத்து மிகவும் அன்பு செய்யும் தாய்" என்று உன்னை நன்கு

போற்றும்படியாக, நீ ஆட்சி செய்யும் குடிமக்களைக் காத்து வருவாயாக; அதுவே பொது இயல்பு ஆயினும், (அவர்களில் எவரேனும்) தீமைகளைச் செய்தபோது, அறத்தின் எல்லையைக் கடவாத முறையில் (அத்) தீமைபுரிந்தோரைத் தண்டிப்பாயாக.'

கு :—"குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல், வடுவன்று வேந்தன் தொழில்" (549) என்றும், "கொலையிற் கொடியாரை வேந் தொறுத்தல் பைங்கூழ், களைகட் டதனொடு நேர்" (550) என்றும் வந்துள்ள திருக்குறள்களை ஈண்டு நினைவுகூர்தல் தகும். (14)

4233. இறத்தலும் பிறத்த ருனு
மென்பன விரண்டும் யாண்டுந்
திறத்துளி நோக்கிற் செய்த
வினைதரத் தெரிந்த வன்றே
புறத்தினி யுரைப்ப தென்னே
பூவின்மேற் புனிதற் கேனு
மறத்தின திறுதி வாழ்நாட்
கிறுதியஃ துறுதி யென்ப.

'இறத்தலும் பிறத்தல் தானும்
என்பன இரண்டும், யாண்டும்,
திறத்துளி நோக்கின், செய்த
வினைதரத் தெரிந்த அன்றே?
புறத்து இனி உரைப்பது என்னே?
"பூவின்மேல் புனிதற் கேனும்,
அறத்தினது இறுதி வாழ் நாட்கு
இறுதி; அஃது உறுதி" என்ப.'

பொ :—'உண்மையான வழியாற் பார்க்கும்பொழுது, சாதலும் பிறத்தலும் என்று சொல்லப்படும் இரண்டும், எப்பொழுதும், (அந்தந்த உயிர்) ஆற்றிய வினையால் விளையும் என்று தெரிவதாகும் அல்லவா? இதைவிட வேறு சொல்வதற்கு என்ன இருக்கிறது? "தாமரை மலரில் உறைகின்ற பிரமனுக்கே யானாலும், அறநெறியினின்றும் பிழைப்பது ஆயுளுக்கே அழிவைத் தரும்; அந்த அறநெறி தவருமை ஆயுளுக்கு உறுதியைத் தரும்" என்று (பெரியோர்) சொல்லுவர்.'

கு :—'அஃது உறுதி' என்பதற்கு, அது நிச்சயம் என்றும் பொருள் கூறலாம். (15)

4234. ஆக்கமுங் கேடுந் தாஞ்செ
யறத்தொடு பாவ மாய
போக்கிவே றுண்மை தேருர்
பொருவரும் புலமை நூலோர்
தாக்கின வொன்ருே டொன்று
தருக்குறுஞ் செருவிற் றக்கோய்
பாக்கிய மன்றி யென்றும்
பாவத்தைப் பற்ற லாமோ.

‘ஆக்கமும், கேடும், தாம் செய்
அறத்தொடு பாவம் ஆய
போக்கி, வேறு உண்மை தேருர்,
பொரு அரும் புலமை நூலோர்;
தாக்கின ஒன்ருேடு ஒன்று
தருக்கு உறும் செருவில், தக்கோய்!
பாக்கியம் அன்றி, என்றும்,
பாவத்தைப் பற்றலாமோ?’

பொ :—‘ஆக்கத்திற்கும் கேட்டிற்கும் காரணம் தம்மாற் செய்யப் படும் அறமும் பாவமுமாகிய அவையன்றி வேறு உண்டென ஒப்பற்ற அறிவையுடைய நூலோர் தெளியார்; தகுதியை யுடை யோனே! (அவ் அறமும் பாவமும்) ஒன்ருேடொன்று மோதிச் செருக் குடன் செய்யும் போரில், எப்பொழுதேனும், அறத்துடன் அல்லா மல் பாவத்துடன் சேரலாமோ?’

கு :—வாலிக்கும் சுக்கிரீவனுக்கும் நடந்த போரில் இராமன் வாலியுடன் சேராமல் சுக்கிரீவனேடு சேர்ந்ததை இதனேடு ஒன்ற வைத்து நோக்குக. (16)

4235. இன்னது தகைமை யென்ப
வியல்புளி மரபி னெண்ணி
மன்னர சியற்றி யென்கண்
வருவுழி மாரிக் காலம்
பின்னுற முறையி னுன்றன்
பெருங்கடற் சேனை யோடுந்
துன்னுதி போதி யென்ருன்
சுந்தர னவனுஞ் சொல்வான்.

‘இன்னது தகைமை என்ப;
இயல்புளி மரபின் எண்ணி,
மன் அரசு இயற்றி, என்கண்
வருவுழி, மாரிக் காலம்
பின்னுற, முறையின், உன்தன்
பெருங்கடற் சேனை யோடும்
துன்னுதி, போதி’ என்றான்
சுந்தரன்; அவனும் சொல்வான்.

பொ :—‘கீழ்க்கூறிய இது (அரசர்க்குத்) தகுதியுடையது என்று (அறிந்தோர்) கூறுவர்; (ஆதலால் நூல்களிற் கூறிய) இயல்பினால் முறைப்படி சிந்தித்துச் சிறப்பாக அரசாட்சியை நடத்தி, மழைக் காலம் கழிந்த பின்பு, நீ என்னிடம் வரும்பொழுது முறைப்படி உனது பெரிய கடல்போற் பரந்த படைகளுடனே என்னிடம் வரக் கடவாய்; (இப்பொழுது) செல்வாயாக’ என்று பேரழகனான இராமன் கூறினான்; (அது கேட்டுச்) சுக்கிரீவனாகிய அவனும் கூறுவான்.

கு :—மாரிக்காலம் பின்னுற, என்கண் வருவுழி என மாறிக் கூட்டுக. ‘இன்னது தகைமை என்ப’ என்பதற்கு இது இது தகுதி யுடையது என்று அமைச்சர் கூறுவர்; அவற்றை இயல்புளி மரபி னெண்ணி மன்னரசியற்றுக என்றும் கொள்ளலாம். (17)

### கிட்கிந்தை நகரத்தில் தம்முடன் வந்து சிலநாள் தங்கும்படி சுக்கிரீவன் இராமனை இறைஞ்சி வேண்டுதல் 4236-4237

4236. குரங்குறை யிருக்கை யென்னுங்
குற்றமே குற்ற மல்லா
லரங்குறு துறக்க நாட்டுக்
கரசென லாய தன்றே
மரங்கிள ரருவிக் குன்றம்
வள்ளனீ மனத்தி னெம்மை
யிரங்கிய பணியாஞ் செய்ய
விருத்தியாற் சின்னா ளெம்பால்.

‘குரங்கு உறை இருக்கை என்னும்
குற்றமே குற்றம் அல்லால்,
அரங்கு உறு துறக்க நாட்டுக்கு
அரசு எனல் ஆயது அன்றே,

மரம் கிளர் அருவிக் குன்றம்?
வள்ளல்! நீ, மனத்தின் எம்மை
இரங்கிய பணி யாம் செய்ய,
இருத்தியால் சில்நாள், எம்பால்.'

பொ :—'வண்மைக் குணத்தையுடையவனே! மரங்கள் விளங்குகின்ற அருவிகள் பாயும் மலையாகிய கிட்கிந்தை, குரங்குகள் வாழ்கின்ற இடம் என்னும் ஒரு குறையையுடையதே யல்லாமல் (மற்றைப்படி) சபைகள் நிறைந்த தேவலோகத்தினும் மேலானது என்று சொல்லத்தக்க தாகியதன்றோ? உன் உள்ளத்தில் எங்கள்பால் இரக்கங்கொண்டு கட்டளையிடும் வேலைகளை நாங்கள் செய்யுமாறு சில நாட்கள் எங்கள் இடத்தில் வந்து இருப்பாயாக.

கு :—அரங்கு - சுதர்மை முதலிய சபைகள். செல்வ வளங்களிலும் இன்பம் நுகர்தலிலும் துறக்கத்தைவிட கிட்கிந்தை மேலானது என்றவாறு. துறக்க நாட்டுக்கு அரசு என்பதற்கு, சுவர்க்க லோகத்துக்குத் தலைநகரான அமராவதி நகரம் எனக்கொண்டு, கிட்கிந்தை அமராவதி போன்றது எனக் கூறலுமாம். (18)

**4237.** அரிந்தம நின்னை யண்மி
யருளுக்கு முரியே மாகிப்
பிரிந்துவே றெய்துஞ் செல்வம்
வெறுமையிற் பிறிதொன் ருமோ
கருந்தடங் கண்ணி ளைை
நாடலாங் காலங் காறு
மிருந்தரு டருதி யெம்மோ
டென்றடி யிணையின் வீழ்ந்தான்.

'அரிந்தம! நின்னை அண்மி,
அருளுக்கும் உரியேம் ஆகிப்
பிரிந்து வேறு எய்தும் செல்வம்
வெறுமையின் பிறிது ஒன்ருமோ?
கருந்தடங் கண்ணினை
நாடல் ஆம் காலம் காறும்
இருந்து, அருள் தருதி எம்மோடு'
என்று அடி இணையின் வீழ்ந்தான்.'

பொ :—'பகைவர்களை அழிப்பவனே! (நாங்கள்) உன்னைச் சரண மடைந்து (உனது) அருளுக்கும் உரியவர்களாகி விட்டு, (பின் உன்னை) விட்டுப் பிரிந்து தனியே அடைகின்ற செல்வமானது வறுமையினும் வேருன தொன்ருகுமோ? (வறுமையே யாகும். எனவே) கரிய பெரிய கண்களையுடையவளாகிய பிராட்டியைத் தேடு தற்கு ஏற்ற காலம் வரும் வரை எங்களோடு வந்திருந்து அருள் புரிவாயாக' என்று (இராமனது) இரண்டு பாதங்களிலும் (சுக்கிரீ வன்) விழுந்து வணங்கினுன்.

கு :—இராமனை அடைந்து பெறும் இன்பத்தை நோக்கப் பிரிந்து பெறும் இன்பம் துன்பமே யாகும் என்றவாறு. அரிந்தமன் - பகை வர்களை அழிப்பவன். அரி - பகைவர். (19)

### இராமன், தான் கிட்கிந்தை நகரில் தங்கியிருக்க ஒண்ணுமையைத் தெரிவித்தல் 4238-4242

**4238.** ஏந்தலு மிதனைக் கேளா
வின்னிள முறுவ ஞற
வேந்தமை யிருக்கை யெம்போல்
விரதியர் விழைதற் கொவ்வா
போந்தவ ணிருப்பி னெம்மைப்
போற்றவே பொழுது போமா
றேர்ந்தினி தியற்று முன்ற
னரசியற் றருமந் தீர்தி.

ஏந்தலும் இதனைக் கேளா,
இன் இள முறுவல் நாற,
வேந்து அமை இருக்கை, எம்போல்
விரதியர் விழைதற்கு ஒவ்வா;
போந்து அவண் இருப்பின், எம்மைப்
போற்றவே பொழுது போமால்;
தேர்ந்து இனிது இயற்றும், உன்தன்
அரசியல் தருமம் தீர்தி.

பொ :—தலைவனை இராமனும் (சுக்கிரீவன் கூறிய) இதனைக் கேட்டு, இனிமையான புன்சிரிப்பு உண்டாக, (அவனை நோக்கி) 'அரசர் தங்குதற்குரிய இருப்பிடங்கள் எம்மைப் போன்ற விரதக் கோலம் பூண்டோர் விரும்பி யிருத்தற்குத் தகாதனவாம்; அவ்விடத்

திற்கு யாம் வந்து இருப்பதானல் எம்மைக் கவனித்து ஆவன செய்வதிலேயே உனக்குப் பொழுது போய்விடும்; (நீ) ஆராய்ந்து இனிமையாய்ச் செய்ய வேண்டிய அரசாட்சிக்கு உரிய அறக்கடமையினின்றும் தவறியவனுவாய். (20)

4239. ஏழிரண் டாண்டி யான்போந்
தெரிவனத் திருக்க வேன்றேன்
வாழியா யரசர் வைகும்
வளநகர் வைக லொல்லேன்
பாழியந் தடந்தோள் வீர
பார்த்திலை போலு மன்றே
யாழிசை மொழியோ டன்றி
யானுறு மின்ப மென்னே.

'ஏழ் இரண்டு ஆண்டு, யான் போந்து
எரி வனத்து இருக்க ஏன்றேன்;
வாழியாய்! அரசர் வைகும்
வளநகர் வைகல் ஒல்லேன்;
பாழி அம் தடந்தோள் வீர!
பார்த்திலை போலும் அன்றே!
யாழ் இசை மொழியோடு அன்றி,
யான் உறும் இன்பம் என்னே?'

பொ :—'வாழ்வையுடையவனே! பதினன்கு ஆண்டுகள் கொதிக்கின்ற காட்டில் சென்று வாழ்வதாக நான் (என் தாயிடம்) ஒப்புக்கொண்டு வந்துள்ளேன்; மன்னர் வாழும்படியான செல்வம் கொழிக்கும் நகரத்திலே வந்து தங்க நான் இசைய மாட்டேன்; (மற்றும்) வலிமை பொருந்திய அழகிய பெரிய தோள்களையுடைய வீரனே! யாழிசை போலும் இனிய மொழியையுடைய சீதையோடல்லாமல் நான் அடையும் இன்பம் யாதோ? (நீ இதனை ஆராய்ந்து) பார்த்தாயில்லை போலும்!

கு :—இராமனுக்குச் சீதையோடன்றித் தனியே எய்தும் இன்பம் இன்பமாகாது என்றவாறு. அன்று, ஏ, அசைநிலை. (21)

4240. தேவிவே றரக்கன் வைத்த
சேமத்து ளிருப்பத் தான்ற
ஞவிபோற் றுணைவ ரோடு
மளவிடற் கரிய வின்ப
மேவின னிராம னென்ருல்
ஐயவிவ் வெய்ய மாற்ற
மூவகை யுலக முற்றுங்
காலத்து முற்ற வற்ரே.

"தேவி வேறு அரக்கன் வைத்த
சேமத்துள் இருப்பத் தான் தன்
ஆவி போல் துணைவரோடும்
அளவிடற்கு அரிய இன்பம்
மேவினன் இராமன்" என்ருல்,
ஐய! இவ் வெய்ய மாற்றம்
மூவகை உலகம் முற்றும்
காலத்தும் முற்ற வற்ரே?'

பொ :—'"தன் மனைவியான சீதை வேருய் அரக்கனுகிய இராவணன் வைத்த காவலில் இருக்கத் தான் தன்னுடைய உயிர்போன்ற நண்பர்களோடும் இராமன் கணக்கில்லாத இன்பத்தைப் பொருந்தி இருந்தான்" என்று (பிறர்) சொல்லும்படியானுல், அரசனே! இந்தக் கொடிய பழிச்சொல் (மேல் கீழ் நடு என) மூன்று வகைப்பட்ட உலகங்கள் அழியும் காலத்திலும் மறையவல்லதோ?

கு :—ஊழிக்காலத்தில் உலகங்கள் மறைந்தாலும் அந்தப் பழிச்சொல் நிலைத்து நிற்கும் என்பதாம். சேமம் - காவல். (22)

4241. இல்லறந் துறந்தி லாதோ
ரியற்கையை யிழந்தும் போரின்
வில்லறந் துறந்தும் வாழ்வேற்
கின்னன மேன்மை யில்லாச்
சில்லறம் புரிந்து நின்ற
தீமைக டரு மாறு
நல்லறந் தொடர்ந்த நோன்பி
னவையற நோற்ப னுளும்.

'இல் அறம் துறந்திலாதோர்
இயற்கையை இழந்தும், போரின்
வில் அறம் துறந்தும் வாழ்வேற்கு,
இன்னன மேன்மை இல்லாச்
சில் அறம்; புரிந்து நின்ற
தீமைகள் தீருமாறு,
நல் அறம் தொடர்ந்த நோன்பின்,
நவை அற நோற்பல் நாளும்.'

பொ :—'மனையறத்திற்கு உரிய நெறியைக் கைவிடாதவர்களுடைய இயல்பை விட்டு நீங்கியும், போரில் வில்வீரருக்கு உரிய அறமாகிய நெறியைக் கைவிட்டும் வாழ்கின்றவனாகிய எனக்கு இவை போன்றவை (நகரத்தில் நண்பர்களோடு செல்வத்தில் வைகுதல், அளவளாவுதல் போன்றவை) சிறப்பில்லாத அற்ப ஒழுக்கங்களாம்; (யான்) செய்துள்ள தீவினைகள் நீங்கும்படி, நல்ல அறநெறியாக (யான்) மேற்கொள்ள ஏன்றுவந்த தவ விரதத்தை ஒவ்வொரு நாளும் குற்றமில்லாதபடி செய்து வருவேன்.

கு :—இச்செய்யுளின் முதலடியில், தான் மனையாளை விட்டுப் பிரிந்தமை பற்றி அவ்வாறு கூறினான். போரின் வில்லறம் துறத்தலாவது, மனையாளை எடுத்துச் சென்றவனைப் பொருது தொலையாதிருத்தல்; விற்பிடியாதிருந்த வாலியை மறைந்து வில்லாற் கொன்றதும் போரின் வில்லறம் துறந்ததன்பாற்படும்; வாலியைக் கொன்றமை குறித்து இராமன் வருந்தினான் என்பது இதனால் தெரிய வரும். (23)

4242. அரசியற் குரிய யாவு
மாற்றுழி யாற்றி யான்ற
திரைசெயற் குரிய சேனைக்
கடலொடுந் திங்க ளன்கின்
விரசுக வென்பா னின்னை
வேண்டினென் வீர வென்று
னுரைசெயற் கெளிது மாகி
யரிதுமா மொழுக்கி னின்றான்.

‘ அரசியற்கு உரிய யாவும்
ஆற்றுழி ஆற்றி, ஆன்ற
திரைசெயற்கு உரிய சேனைக்
கடலொடும் திங்கள் நான்கின்
விரசுக, என்பால் ; நின்னை
வேண்டினென், வீர !’ என்றான்,
உரைசெயற்கு எளிதும் ஆகி,
அரிதும் ஆம் ஒழுக்கில் நின்றான்.

பொ :—‘ வீரனே! அரசாட்சிக்கு உரித்தான செயல்களை யெல்லாம் செய்ய வேண்டிய முறைப்படி செய்து முடித்து, நான்கு மாதங்களில் பெரிய அலைகள் வீசுதற்கிடமான கடல் போன்ற படைகளுடன் என்னிடம் விரைந்து வருவாயாக ; உன்னை வேண்டிக் கொள்கிறேன்’ என்று, சொல்லுதற்கு எளியதுமாய்ச் செய்தற்கு அரியதுமான நல்லொழுக்க நெறியில் நிலைநிற்பவனான இராமன் கூறினான்.

கு :—இராமன் மேற்கொண்ட விரதத்தை இழையும் பிசகாமல் செலுத்தி வெற்றி காண்பது மிகக் கடுமையும் அருமையுமாம் ஆதலானும், அதை இராமன் ஒருவனே சலிப்பின்றி முற்றுவிக்கும் உரம் பெற்றவனாதலாலும் ‘ உரை செயற் கெளிதுமாகி யரிதுமா மொழுக்கி னின்றான்’ என்றார். (24)

### சுக்கிரீவன் இராமனது சொல்லுக்கு உடன்பட்டுச் செல்லுதல்

**4243.** மறித்தொரு மாற்றங் கூறான்
வானுயர் தோற்றத் தன்னான்
குறிப்பறிந் தொழுகன் மாதோ
கோதில ராத லென்னா
நெறிப்படர் கண்கள் பொங்கி
நீர்வர நெடிது தாழ்ந்து
பொறிப்பருந் துன்ப முன்னாக்
கவிக்குலத் தரசன் போனான்.

மறித்து ஒரு மாற்றம் கூறான்,
‘வான் உயர் தோற்றத்து அன்னான்
குறிப்பு அறிந்து ஒழுகல் மாதோ
கோது இலர் ஆதல்’ என்னா,

நெறிப்படர் கண்கள் பொங்கி
நீர்வர, நெடிது தாழ்ந்து
பொறிப்ப அருந் துன்பம் உன்னுக்
கவிக்குலத்தரசன் போனுன்.

பொ :—(இராமன் இவ்வாறு கூறவும்) குரங்கினத்தின் மன்ன னுகிய சுக்கிரீவன், வான்போலுயர்ந்த தவ வேடத்தையுடைய அவ் விராமனின் உள்ளக்குறிப்பை அறிந்து அதன்படி நடத்தலே குற்ற மில்லாதவராகுதலாம் என்று எண்ணி, தடுத்து ஒரு சொல்லும் சொல்லமாட்டாதவனுய், பரந்த தன் கண்களினின்று நீர் பொங்கித் தொடர்ச்சியாய் ஒழுக, கீழே நெடுக விழுந்து வணங்கி, எழுத முடி யாத துன்பத்தை மனத்திற் கொண்டு (கிட்கிந்தை நோக்கிச்) சென்ருன்.

கு :—வானுயர் தோற்றம்: திருக்குறள் 272-ல் 'வானுயர் தோற்றம்' என வந்துள்ளமையும் அது 'வான்ரேய்குடி' என்ருற் போல இலக்கணை வழக்கு என்று பரிமேலழகர் விளக்கியமையும் ஈண்டு அறியத்தகும். (25)

வணங்கிய அங்கதனுக்கு இராமன் அறிவுரை பகர்தல்

4244. வாலிகா தலனு மாண்டு மலரடி வணங்கி ஞனை
நீலமா மேக மன்ன நெடியவ னருளி ஞேக்கிச்
சீலநீ யுடையை யாத லிவன்சிறு தாதை யென்னு
மூலமே தந்த நுந்தை யாமென முறையி னிற்றி.

வாலி காதலனும், ஆண்டு, மலர் அடி வணங்கினுனை,
நீல மா மேகம் அன்ன நெடியவன் அருளின் நோக்கி,
'சீலம் நீ உடையை ஆதல், இவன் சிறு தாதை என்னு,
மூலமே தந்த நுந்தை ஆம் என, முறையின் நிற்றி.'

பொ :—அப்பொழுது வாலியின் மகனுன அங்கதனும் (தனது) தாமரை மலர் போலும் திருவடிகளை வணங்கினுனுக அவனைக் கரிய நீலநிறமுடைய மேகத்தைப்போன்ற பெரியவனுன இராமனும்அருள் கூரப் பார்த்து, 'நீ நல்லொழுக்கமுடையவனுதலால், இச்சுக்கிரீவன் (உனக்குச்) சிற்றப்பன் என்று கருதாமல் உன் பிறப்புக்குக் காரண மான உன்னைப் பெற்ற தந்தையைப் போலவே கொண்டு (அவன்) கட்டளையில் நிற்பாயாக!"

கு :—நிறமும், கைம்மாறு கருதாது அருளைச் சொரிதலும், வேட் கையை ஒழிக்கும் குளிர்ந்த தோற்றமும் பற்றி, 'நீலமாமேகமன்ன

நெடியவன்' என்றார். மாமேகம்=கரியமேகம்; சிறந்த மேகம் என்றும் பொருள் கூறலாம். (26)

## அங்கதன் சென்றபின் அனுமனையும் சுக்கிரீவனுடன் செல்லும்படி இராமன் பணித்தல்

**4245.** என்னமற் றினைய கூறி
யேகவற் றொடர வென்றான்
பொன்னடி வணங்கி மற்றப்
புகழுடைக் குரிசில் போனான்
பின்னர்மா ருதியை நோக்கிப்
பேரெழில் வீர நீயு
மன்னவ னரசுக் கேற்ற
தாற்றுதி யறிவி னென்றான்.

என்ன, மற்று இனையகூறி, 'ஏகு அவற் றொடர' என்றான்; பொன் அடி வணங்கி, மற்று அப் புகழுடைக் குரிசில் போனான்; பின்னர், மாருதியை நோக்கிப் 'பேர் எழில் வீர! நீயும், அன்னவன் அரசுக்கு ஏற்றது ஆற்றுதி, அறிவின்' என்றான்.

பொ :—என்றும் மற்றும் இவை போல்வன சொல்லி, 'அவனை (சுக்கிரீவனை)த் தொடர்ந்து செல்வாயாக' என்று அனுப்பினன் புகழையுடைய இளவீரனான அங்கதனும் (இராமனுடைய) அழகிய திருவடிகளை வணங்கிப் போனான்; பிறகு, அனுமானைப் பார்த்து 'பேரழகு வாய்ந்த வீரனே! நீயும் (சென்று) அச்சுக்கிரீவனுடைய அரசாட்சிக்குத் தக்கதை உன் அறிவினாற் செய்வாயாக.' என்று (இராமன்) சொன்னான்.

கு :—அனுமானுக்குச் சுந்தரன் என்றும் ஒரு பெயர் உண்டு ஆதலால் 'பேரெழில் வீர' என்றான். (27)

## 'இங்கிருந்து நின்பணி செய்வேன்' என அனுமன் கூறுதல்

**4246.** பொய்த்தலி லுள்ளத் தன்பு
பொழிகின்ற புணர்ச்சி யானு
மித்தலை யிருந்து நாயே
னேயின வெனக்குத் தக்க

கைத்தொழில் செய்வெ னென்று
கழலிணை வணங்குங் காலை
மெய்த்தலை நின்ற வீர
னிவ்வுரை விளம்பி விட்டான்.

பொய்த்தல் இல் உள்ளத்து அன்பு
பொழிகின்ற புணர்ச்சியானும்
'இத்தலை இருந்து நாயேன்,
ஏயின, எனக்குத் தக்க
கைத்தொழில் செய்வென்' என்று,
கழல் இணை வணங்கும் காலை,
மெய்த்தலை நின்ற வீரன்
இவ் உரை விளம்பி விட்டான்.

பொ :—அன்பு பெருகுகின்ற பொய்யில்லாத மனத்தாலாய நட்பையுடையவனான அனுமனும் 'நாய் போன்றவனான அடியேன் இங்கேயே இருந்து (உன்னால்) ஏவப்பட்டனவும் எனது நிலைக்கு ஏற்றனவுமான கைத்தொண்டுகளை (உனக்குச்) செய்வேன்' என்று இரண்டு திருவடிகளையும் வணங்கியபோது, உண்மையின்கண்ணே உறுதியாய் நிலைத்த வீரனான இராமன் இந்த மொழியைக் கூறலானான். (அவற்றை அடுத்த இரண்டு செய்யுட்களிற் காண்க.)

கு :—கை - சிறுமை. தொழில் - தொண்டு. (28)

## இராமன் அதனை மறுத்துரைத்தல் 4247-4248

4247. நிரம்பினா னொருவன் காத்த
நிறையர சிறுதி நின்ற
வரம்பிலா ததனை மற்றோர்
தலைமகன் வலிதிற் கொண்டா
லரும்புவ நலனுந் தீங்கு
மாகலி னைய நின்போற்
பெரும்பொறை யறிவி னோரா
னிலையினைப் பெறுவ தம்மா.

'நிரம்பினான் ஒருவன் காத்த
நிறை அரசு இறுதி நின்ற
வரம்பு இலாது அதனை, மற்று ஓர்
தலைமகன் வலிதின் கொண்டால்,

அரும்புவ நலனும் தீங்கும் ;
ஆகலின், ஐய ! நின்போல்
பெரும்பொறை அறிவினோரால்
நிலையினைப் பெறுவது அம்மா !

பொ :—' (கல்வி செல்வம் வீரம் என்னும் இவற்றால்) நிறைந்தவனை ஓர் அரசன் (வாலி) ஆண்டுவந்த எல்லாச் செல்வங்களும் நிறைந்த இராச்சியம் கடையெல்லை இல்லாதது; அந்த நாட்டை வேறு ஓர் அரசன் (சுக்கிரீவன்) வலியக் கைப்பற்றிக் கொண்டால், நன்மைகளேயன்றித் தீமைகளும் தோன்றுவனவாம் ; ஆதலால், அப்பா ! நின்னையொத்த பொறுமையையும் அறிவையும் உடையவர்களாலேயே அது அசையாத நிலையினை அடைவதாகும். (அம்மா, அசை.)

கு :—வாலியைக் கொன்று சுக்கிரீவன் வலிதில் முடிதரித்துக் கொண்டதால் குழப்பங்கள் நாட்டில் ஏற்படக் கூடும் என்றும் அவற்றை அனுமனைப் போன்றவர்களே தவிர்த்தல் கூடும் என்றும் இராமன் கூறினான் என்க. (29)

4248. ஆன்றவற் குரிய தாய
வரசினை நிறுவி யப்பா
லேன்றெனக் குரிய தாய
கருமமு மியற்றற் கொத்த
சான்றவர் நின்னி னில்லை
யாகலாற் றருமந் தானே
போன்றநீ யானே வேண்ட
வத்தலை போதி யென்றான்.

' ஆன்றவற்கு உரியது ஆய அரசினை நிறுவி, அப்பால்,
ஏன்று எனக்கு உரியது ஆய கருமமும் இயற்றற்கு ஒத்த
சான்றவர் நின்னின் இல்லை ; ஆகலால், தருமம் தானே
போன்ற நீ, யானே வேண்ட, அத்தலை போதி ' என்றான்.

பொ :—' (முதலில் பல குணங்களால்) நிறைந்தவனான சுக்கிரீவனுக்கு உரியதாகிய அரசாட்சியை நிலைபெறச் செய்து, பின்பு, எனக்கு ஆகவேண்டியதான காரியத்தையும் ஏற்றுக்கொண்டு செய்யத்தக்க பெரியோர் உன்போல் (எவரும்) இல்லை ; ஆதலால், அறமே உருவெடுத்தாற் போன்றவனான நீ, நான் வேண்டுவதற்

காக அவ்விடம் செல்லக் கடவாய்' என்று (அனுமானிடம் இராமன்) கூறினன்.

கு :—ஆன்றவன் என்றது சுக்கிரீவனை. அத்தலை என்றது சுக்கிரீவன் இருப்பிடத்தை. (30)

## அனுமன் கிட்கிந்தைக்குச் செல்ல, இராம இலக்குவர் வேறொரு மலையை அடைதல்

4249. ஆழியா னனைய கூற
வானையீ தாகி னஃதே
வாழியான் புரிவே னென்று
வணங்கிமா ருதியும் போனன்
சூழிமால் யானை யன்ன
தம்பியுந் தானுந் தொல்லை
யூழிநா யகனும் வேறோ
ருயர்தடங் குன்ற முற்றான்.

ஆழியான் அனையகூற, 'ஆணை ஈது ஆகின், அஃதே,
வாழி! யான் புரிவேன்' என்று, வணங்கி மாருதியும் போனன்;
சூழிமால் யானை அன்ன தம்பியும் தானும், தொல்லை
ஊழி நாயகனும், வேறு ஓர் உயர்தடங் குன்றம் உற்றான்.

பொ :—கடல்போற் கருநிறமுடையவனுகிய இராமன் அச்சொற்களைக் கூறவும், அனுமனும், 'வாழ்வாயாக! இதுவே (உன்) கட்டளையானல், அதையே நான் செய்வேன்' என்று வணங்கியவனாய், (கிட்கிந்தை நகருக்குச்) சென்றான்; பழமையான பல ஊழிக் காலங்களுக்கும் தலைவனான இராமனும், முகபடாத்தையுடைய பெரிய யானையைப் போன்ற தன் தம்பியான இலக்குவனும் தானுமாக உயர்ந்த பெரிய வேறொரு மலையை அடைந்தான்.

கு :—ஆழியான் என்பதற்கு, சக்கரத்தையுடைய திருமாலின் அவதாரமாகிய இராமன் என்றும் பொருள் கூறுவர். பாற்கடலிற் பள்ளி கொள்பவன் எனலுமாம். சூழி - முகபடாம். தொல்லை ஊழி நாயகன் - மிகப் பழைய ஊழி பேரினும் நிலைத்து நிற்கும் தலைவனான இராமன். (31)

## இராமனது அருள் பெற்றுச் சுக்கிரீவன் கிட்கிந்தையில் இருந்து அரசு புரிதல் 4250-4251

4250. ஆரிய னருளிற் போயவ்
வகன்மலை யகத்த னாய
சூரியன் மகனு மானத்
துணைவருங் கிளையுஞ் சுற்றத்
தாரையை வணங்கி யன்னா
டாயெனத் தந்தை முந்தைச்
சீரியன் சொல்லே யென்னச்
செவ்விதி னரசு செய்தான்.

ஆரியன் அருளின் போய் அவ் அகல்மலை அகத்தன் ஆய சூரியன் மகனும், மானத் துணைவரும், கிளையும் சுற்ற, தாரையை வணங்கி, அன்னாள் தாய் என, தந்தை முந்தைச் சீரியன் சொல்லே என்ன, செவ்விதின் அரசு செய்தான்.

பொ :—சிறந்தவனாகிய இராமனின் அருளைப் பெற்றுச் சென்று அகன்ற அக் கிட்கிந்தை மலையின் உள்ளிடத்தைச் சேர்ந்தவனாகிய சூரியன் மகனான சுக்கிரீவனும், பெருமையுள்ள துணைவர்களான அமைச்சர் முதலியோரும் உறவினர்களும் தன்னைச் சூழ்ந்து நிற்க, (வாலியின் மனைவியான) தாரையை வணங்கி, அவளைத் தாய் என்று சொல்லும்படியாகவும், தனக்கு முன்பிறந்தவனும் சிறப்புள்ளவனுமான வாலியின் மொழியே தனக்குத் தந்தை என்று சொல்லும்படியாகவும் செம்மையாக அரசாட்சியை நடத்தலானான்.

கு :—மானத்துணைவர் என்றது, இங்கே ஐம்பெருங் குழுவும், எண்பேராயமும் மற்றும் மந்திரச் சுற்றமும் என்க. தாரை அரசியல் அறிவு பெற்றவள் என்பதை வாலி வதைப் படலத்தில் அவள் வாலிக்குக் கூறியவாற்றானும், கிட்கிந்தைப் படலத்தில் இலக்குவன் சீற்றத்தைப் போக்கிய முறையானும் அறியலாம். வான்மீகத்தில் தாரை சுக்கிரீவனோடு கூடி இன்பவாழ்வு வாழ்ந்தாள் என்று கூறியிருப்பதைக் கம்பர் அடியோடு மாற்றி, அவளைத் தாயாகக் கருதினான் சுக்கிரீவன் என்று கூறியிருப்பது போற்றத் தகும். ‘முந்தைச் சீரியன் சொல்’ என்பதற்கு, பழைமையானவனும் சிறப்புள்ளவனுமான இராமன் கூறிய உறுதிமொழிகள் என்று பொருள் கூறலும் ஆம். (32)

4251. வளவர செய்தி மற்றை
வானர வீரர் யாருங்
கிளைஞரி னுதவ வாணை
கிளர்திசை யளப்பக் கேளோ
டளவில வாற்ற லாண்மை
யங்கதன றங்கொள் செல்வத்
திளவர சியற்ற வேவி
யினிதினி னிருந்தா னிப்பால.

வள அரசு எய்தி, மற்றை
வானர வீரர் யாரும்
கிளைஞரின் உதவ, ஆணை
கிளர் திசை அளப்ப, கேளோடு,
அளவு இல ஆற்றல் ஆண்மை
அங்கதன், அறம் கொள் செல்வத்து
இளவரசு இயற்ற ஏவி,
இனிதினின் இருந்தான், இப்பால்.

பொ :—வளப்பம் பொருந்திய அரசாட்சியை அடைந்து, ஏனை வானர வீரர்கள் எல்லாரும் சுற்றத்தார்போல வேண்டுவன செய்யவும், அவனுடைய அதிகாரம் எல்லாத் திக்கிலும் சென்று அளாவவும், அளவு இல்லாத திறமையும் வலிமையும் கொண்ட அங்கதனை அறத்தோடு பொருந்தியதாகிய செல்வச் செழிப்போடு கூடிய இளவரசுப் பதவியை ஏற்றுக்கொள்ளும்படியாகக் கட்டளையிட்டுத் தன் உற்ரு ரோடும் (சுக்கிரீவன்) இன்பக் களிப்பில் இருப்பதானன்; (அஃது அங்ஙனமாகவும்) இப்புறத்தில்.

கு :—அங்கதனுக்கு இளவரசுப் பட்டத்தைச் சூட்டி அப்பதவிக் குரிய செல்வத்தில் அவனை அமர்த்தினன் என்க. (33)

## இராமன் இலக்குவன் அமைத்த தவச் சாலையில் தங்கியிருத்தல்

4252. வள்ளலு மவணின் றேகி
மதங்கன திருக்கை யாய
வெள்ளவான் குடுமிக் குன்றத்
தொருசிறை மேவி மெய்ம்மை

யள்ளூறு காதற் றம்பி
யன்பிஞ லமைக்கப் பட்ட
வெள்ளலில் சாலே யெய்தி
யினிதினி னிருந்த காலே.

வள்ளலும் அவண் நின்று ஏகி,
மதங்கனது இருக்கை ஆய
வெள்ள வான் குடுமிக் குன்றத்து
ஒரு சிறை மேவி, மெய்ம்மை
அள்ளூறு காதல் தம்பி
அன்பிஞல் அமைக்கப் பட்ட
எள்ளல் இல் சாலே எய்தி
இனிதினின் இருந்த காலே.

பொ :—வரையாது வழங்குபவனை இராமனும் அவ்விடத்தை விட்டு நீங்கி, மதங்க முனிவன் இருப்பிடமாயுள்ளதும் நீர்ப்பெருக்கையும் உயர்ந்த சிகரத்தையும் உடையதுமாகிய ருசியமூகமலேயின் ஒரு பக்கத்தை அடைந்து, அள்ளியெடுக்கும் அளவினதாகிய (மிகுந்த) உண்மையான அன்பையுடைய தன் தம்பியான இலக்குவனுல் கட்டப்பட்ட குடிலேச் சார்ந்து இனிதாய் இருந்த காலத்தில். (34)

அரசியற் படலம் முற்றிற்று.

# 9. கார் காலப் படலம்

சீதையைத் தேடுதற்கு இடையூருக வந்த மழைக்காலத்தைப் பற்றியும், அம்மழைக்காலத்தில் இராமன் அடைந்த துன்பத்தைப் பற்றியும் கூறும் பகுதியாகலின் இது கார் காலப் படலம் எனப் பெயர் பெறுவதாயிற்று. சில ஏடுகளில் இப் படலம் 'சரற் காலப் படலம்' என்ற பெயருடன் காணப்படுகின்றது. ஒரு பிரதியில், 'சொற்ற தம்பி' என்று தொடங்கும் எழுபதாவது செய்யுளுக்குப் பின் 'கார் காலப் படலம் முற்றும்' எனவும், 'நிறைந்தன நெடுங்குளம்' என்று தொடங்கும் செய்யுளுக்கு முன் 'சரற் காலப் படலம் தொடக்கம்' எனவும் இருப்பதாக 45 என்ற எண்ணுள்ள அச்சுப் புத்தகத்தில் காணப்படுகின்றது.

கார் காலம் என்ற பெயர்க்குரிய ஆவணியும் புரட்டாசியும், கூதிர் காலம் என்ற பெயர்க்குரிய ஐப்பசியும் கார்த்திகையும் ஆகிய நான்கு மாதங்களும் மழை பொழியும் காலமேயாதலின் கார்காலப் படலம் எனத் தொடக்கம் பற்றிப் பெயர் பெறுதலும், சரற்காலப் படலம் என முடிவு நிலை பற்றிப் பெயர் பெறுதலும் இயல்பேயாம். அங்ஙனமே கார் காலமும் கூதிர் காலமும் வேறுபாடு சிறிதுடைமைபற்றி இரண்டாகக் கூறுதலும் இயல்பாதல் அறியலாம். சரற் காலம் - கூதிர் காலம். கம்பரும், 'காலம் நீளிது காரும், மாரியும் வந்தது' என்புழி மழைக் காலத்தைக் கார் எனவும் மாரி எனவும் இரண்டாகப் பிரித்து எண்ணி யிருத்தலும், கார் கால வருணனையை முடித்துப் பின் 'வந்தெழுந்தது மாரியே' எனத் தொடங்கி 'நிறைந்தன நெடுங் குளம்' என்ற செய்யுள் முதலாகக் கூதிர் கால வருணனையைக் கூறிப் பின்னர், 'கூதிரும் இறுதி யுற்றதால்' என்றும், அதன்பின் 'பைந்தொடிக்கு இடர் களை பருவம் பையவே வந்துளது' என்றும், 'தேய்வு சென்று அறுதியை யடைந்தது அப்பருவ மாண்டுபோய்' என்றும் கூதிர் கால முடிவைக் கூறியிருத்தலும் காணலாம்.

கூதிர் காலத்தின் இறுதியில் - கார்த்திகை மாதத்தின் பிற்பகுதியில் முன்பனிக் காலத்தின் தன்மை தொடங்கிவிட்ட நிலையை உணர்த்துவனவாக 'வெளுத்த மேகமே' என்னும் 104-ஆவது செய்யுள் தொடங்கி இப்படலத்தின் இறுதி வரையில் உள்ள செய்யுட்கள் அமைந்துள்ளமை நுனித்துணர்வார்க்குப் புலப்படும். சீவக சிந்தாமணியில் 'ஐங்கணைக் கிழவன் வைகிப் பாசறைப் பரிவு தீர்க்கும் பங்குனிப் பருவஞ் செய்தான்' (சீவக - 851) என்று கூறியிருத்தலும், 'பின்பனி நீங்கும் பங்குனித் திங்களிலே காமன் தங்கும்படி இளவே

னிலைப் பிறப்பித்தான் என்க' என்று நச்சினார்க்கினியர் உரை வரைந் திருத்தலும் காணலாம். இதனால் ஒரு பருவத்தினிறுதியில் அடுத்து வரும் பருவத்தின் தன்மை தொடங்குதல் உண்டு என்பது தெளிய லாம். வான்மீகத்திலும் இராமனுக்கு ஆறுதல் கூறும் இலக்குவன் 'கோபத்தை அடக்கிக்கொண்டு கார்த்திகை மாதத்தை எதிர்நோக்கி யிருக்க வேண்டும்; நான்கு மாதங்கள் வரையில் பொறுத்துக் கொள் ளுங்கள்' என்று கூறியுள்ள பகுதி இங்கு நினைவு கூர்தல் தகும். மழைக்காலமாகிய நான்கு மாதங்களிலும் யாரும் புறம்போந்து சீதை யைத் தேடுதல் இயலாது ஆகலின், இராமன் முன் சுக்கிரீவனை நோக்கி "சேனைக் கடலொடுந் திங்கள் நான்கின் விரசுக என்பால்; நின்னை வேண்டினன் வீர!" (அரசியற் - 23) எனக் கூறி அனுப்பு தலும், மழைக்காலம் முடிவுற்று முன்பனிப் பருவம் தொடங்கிய பின்னும் சுக்கிரீவன் வாராமற் போகவே இராமன் வெகுண்டு, இலக் குவனை நோக்கி, மொய்ம்பினோய்! "சொன்ன எல்லையின் ஊங்கினும் தூங்கினன் மன்னன் வந்திலன் என் செய்த வாறரோ?" (கிட்கிந் தைப் - 1) எனக் குறிப்பிடுதலும் காணலாம். கார்த்திகை மாதத்தின் இறுதியில் முன்பனிப் பருவம் தொடங்கி விட்டமையால் 'சொன்ன எல்லையின் ஊங்கினும் தூங்கினன்' என இராமன் கூறினன் என அமைதி காணலாம்.

## படலப் பொருட் சுருக்கம்

இக் கார் காலப் படலத்தில் வருணனைப் பகுதியே மிக்குக் கதைப் பகுதி மிகச் சுருங்கியுளது. இராம இலக்குவர் கிட்கிந்தை மலைக்கு அருகிலுள்ள ஒரு குன்றில் தங்கி யிருக்கின்றார்கள். அப்பொழுது தெக்கணாயனம் தொடங்குகின்றது. சூரியன் தென்திசைப் பக்கமாக ஒதுங்கிச் செல்கின்றான். ஆடி மாதத்தின் பிற்பகுதியிலேயே கார் காலத்தின் தன்மை தொடங்குகின்றது. மேகங்கள் கறுத்து விண் ணில் பரவுகின்றன; மின்னி இடிக்கின்றன. வாடைக் காற்றும் வீசு கின்றது. சீதையைப் பிரிந்த இராமன்மேல் மன்மதன் மலர்க்கணை சொரிதல்போல மேகம் மலைகளின்மேல் மழைத்தாரைகளைச் சொரி கின்றன. உலர்ந்த மரங்கள் தழைக்கின்றன. சூரியன் வெப்பம் தணிகின்றது. பாதிரிமரம் பொலிவிழந்து வறுமையடைகின்றது; காந்தள் தழைத்துப் பெருமையுறுகின்றது. மயில்கள் ஆடுகின்றன. குயில்கள் கூவாமல் அடங்குகின்றன. இந்திர கோபப் பூச்சிகள் தரையில் எள்ளிடவும் இடமில்லாதபடி ஊர்ந்து பரவுகின்றன. மலையில் மலர்ந்த வேங்கையின் மலர்களையும் காட்டில் மலர்ந்த கொன்றையின் மலர்களையும் தாங்கிக்கொண்டு அருவிகள் ஓடு கின்றன. செங்காந்தள் மலர்களும் கருவிள மலர்களும் மலர்கின்றன. கூதாள மலர்கள் கூத்தர் தாளம்போல மலர்கின்றன. காடுகளி லுள்ள மரங்கள் யாவும் பூத்து வண்டுகள் மொய்க்கக் காமச் செவ்வி

யுடையவாய்க் காணப்படுகின்றன. குவளை மலர்கள் குவிகின்றன. முல்லை அரும்புகின்றன. தாமரை செழித்து மலர்கின்றன. தேனீக்கள் கார் காலத்து மலர்ந்த மலர்களிலுள்ள தேனைச் சிறிது சிறிதாகக் கூட்டில் கொண்டு சேர்க்கின்றன. மான்கள் மழைநீரை ஆரப் பருகிக் களித்துக் குதித்து விளையாடுகின்றன. நீர் நிறைந்த ஆறுகளிலும் குளங்களிலும் அன்னங்கள் படிந்து மகிழ்ந்து குடைந்து ஆடுகின்றன. காரரசாளன் மார்பில் தரித்த முத்தாரம் போலக் கரிய மேகத்தைச் சார்ந்து கொக்குகள் பறக்கின்றன. கரிய மேனியனாகிய திருமாலின் மார்பில் தரித்த உத்தரீயத்தைப் போல நாரைகள் மேகத்தையடுத்து வரிசையாகப் பறக்கின்றன. தரையிடம் எங்கும் பசும்புல் முளைத்துச் செழித்திருக்கின்றன. மயில்கள் தோகை விரித்துக் கொண்டு மகிழ்ந்து அகவுகின்றன. பூங்கொடிகள் மங்கையர் இடைபோலத் துவண்டு அசைந்தாடுகின்றன. கார் காலத்துத் தோன்றின காளான்கள் பசுக்களின் கால்களால் இடறப்பட்டுச் சிதைந்து கட்டித் தயிரின் கண்டங்கள் போலக் காணப்படுகின்றன. இடைச்சியர் குடத்தில் கறந்த பாலின் நுரை வழிவது போலப் பிடவத்தின் வெண்மலர்கள் பூத்திருக்கின்றன. கார் காலத்தில் நானிலத்தும் மலர்கள் பூத்துள்ளமையால் குறிஞ்சி நிலத்துக் குறத்தியர் கூந்தலில் வேங்கை மலர்களும், நெய்தல் நிலத்து நுளைச்சியர் கூந்தலில் புன்னை மலர்களும், முல்லை நிலத்து இடைச்சியர் கூந்தலில் முல்லை மலர்களும், மருத நிலத்து உழத்தியர் கூந்தலில் நீலோற்பல மலர்களும் சூடப்பட்டு மணம் வீசலாயின.

இவ்வாறு நிகழா நிற்க, சீதையின் திருமுகத்தைக் காணப்பெறாத இராமன், மன்மதனுக்கு ஆயிரக்கணக்கான மலர்க்கணைகளைப் படைத்துக் கொடுக்கும் கார் காலத்தைக் காண்கின்றான்; துன்பத்திற்கு ஒரு கரை காணாதவனாய் நல்லுணர்வழிந்து உயிர் பிரிந்தான்போல மூச்சற்றுக் கிடந்து பின் சிறிது தெளிந்து சீதையைப் பற்றி நினைக்கின்றான்; மேகத்தையும் மயிலையும் கொடியையும் மானையும் நோக்குகின்றான்; 'காரே! எனது ஆவி கலக்குகின்றாயோ? உயிர் கொண்டலது நீங்கமாட்டாயோ? மயிலே! எனை வலியாடுகின்றாயோ? கொடியே! குழைவாய் என் ஆவி குழைக்குதியோ? உழையே! அவர் எவ்வுழையார்? கொன்றைக் கொடியாய்! கொணர்கிற்றிலையோ? என அரற்றுகின்றான்; சீதையின் பற்களை நினைப்பிக்கும் முல்லை அரும்புகளையும் அவள் வாயிதழை நினைப்பிக்கும் இந்திரகோபத்தையும் கண்டு கலக்கம் அடைகின்றான்; கூற்றுவனே வாடைக் காற்றாக உருமாறித் தன்னை வருத்துவதாகச் சொல்லித் துன்புறுகின்றான்; மேகத்தில் தோன்றி மறையும் மின்னலைக் கண்டு, மேகம் சீதையைக் காட்டிக் காட்டி மறைப்பதாகக் கூறுகின்றான்; மன்மதனை எதிர்பெய்துகொண்டு, மார! சீதையின் பிரிவால் இளைத்

திருக்கின்ற என்மேல் அம்பு எய்தல் சீர்மையதன்று; போதி! என்று புலம்புகின்ருன்.

இங்ஙனம் தன் பெருமையை மறந்து இரங்குகின்ற இராமனை இலக்குவன் நோக்கி "நெடியோய்! நின்னை எத்தன்மையனுக நினைத்துக்கொண்டு இவ்வாறு வருந்துகின்ருய்? வேதம் பிறழ்ந்தாலும் உலகம் புரண்டாலும் நின் நிலைமை மாறுபடலாமோ? அரக்கரின் பெருமையெல்லாம் நீ நின் புருவத்தைச் சிறிது நெரித்த அளவில் நிற்கக்கூடியதோ? எழுபது வெள்ளச் சேனையிலுள்ளோர் அனுமனைப் போன்ற வலிமையரோ அல்லது அவனுக்கு மேம்பட்ட வலிமையரோ இன்னும் அறிந்திலோம். அச்சேனையின் துணையால் சீதை வந்துவிட்டாள்; இது உண்மை; நீ துயர் தணிவாயாக! தண்டகவனத்து முனிவர்களின் துயர் கண்டு 'உங்களை வருத்தும் வஞ்சகர் அடியோடு அழியுமாறு வென்று உங்கள் துன்பத்தைத் தீர்ப்பேன்' என்று சொல்லிய சொல் இன்னும் முடிக்கப்பெருமல் குறையாகவே உளது. அதுவும் இப்பொழுது முடிவுறும். நீ உணர்வு அழிந்திடல் முறையன்று. அரக்கரைக் கொன்று புகழ்பெற்றுத் தேவர்க்கு விண்ணுலகத்தை யுரிமையாக்கி அருள். வேதனைக்கு இடமாதல் வீரம் அன்று; பேதைமையாகும். அறவழி நடக்கும் நினக்கல்லது வெற்றி பிறர்க்கு எவ்வாறு கிடைக்கும்? காலம் நீடித்தல் இயல்பு. பகைவரை வெல்லும் நெறியை ஆராய்ந்தாயாயின் நினக்கு இயலாத செயல் யாதுளது? ஆதலால் வருத்தத்தை விடுத்து முயலுக" என்று கூறுகின்ருன்.

தம்பி சொன்ன சொல்லை ஏற்றுக் கொண்டு இராமன் சோர்வு நீங்குகிருன். பலநாள் கழித்துக் கார்காலம் முடிகின்றது. கூதிர் காலம் வருகின்றது. ஏரிகள் நிறைகின்றன; அவற்றில் அலைகள் நெருங்குகின்றன; உயர்ந்த, மலைகளும் குளிர்ச்சியுறுகின்றன; பிரிந்தவர் வருந்துகின்றனர்; அன்றிலும் மகன்றிலும் புறம்போக இயலாமல் தத்தம் துணையோடு தங்கியிருக்கின்றன. கூதிர்வாடை வீசுகின்றது. வெயிற் கதிர்கள் வெதுப்பும் தன்மையிழந்து மறைகின்றன. காலையும் மாலையும் நாழிகை வட்டிலால் கணக்கிட்டு அறிவதல்லது சூரியனைக் கொண்டு அறிதல் அரிதாகின்றது. கிளிகள் நெற்கதிர்களில் சென்று தங்குகின்றன. புன்னை மரங்கள் பொன்முடிப்பை அவிழ்ப்பதுபோல மலர்கின்றன. யானைகள் முனிவரைப் போல மலையருகில் மழைத்துளிபட உறங்காமல் நிற்கின்றன. அன்னப் பறவைகள், முனிவர்கள் அந்தியில் வளர்க்கும் ஓமத்தீயில் எழும் அகிற்புகையில் நுழைந்து குளிர் நீங்குகின்றன. மந்திகள் மலைக் குகையில் உறங்குகின்றன. ஆண் குரங்குகள் ஐம்பொறிகளை அடக்கிய யோகியரைப் போலச் சேட்டையடங்கி அமர்ந்திருக்கின்றன. கூதிர்கால மழையால் பெண்டிர் புறம் போந்து அருவியாடாமையால்

அவ்வருவிகள் அவர்களின் கூந்தல் மணம் வீசலிலவாயின. ஊசல்கள் அவர்களாடாமையால் வறிதே தூங்குகின்றன. தாழை மரத்தில் கொக்குகள் வாட்டத்துடன் தங்கியுள்ளன. குருவியோப்பும் மகளிரால் மணிகள் விண்ணில் வீசப்படவில்லை. மேக முழக்கத்திற்கு அஞ்சி மான்கள் மரங்களுக்குக் கீழ் ஒதுங்குகின்றன. மைந்தரும் மகளிரும் அகிற்புகை நிறைந்த அமளியில் ஏறித் தூங்குகின்றனர். வண்டுகள் தாமரை மலரில் உறங்குவதை விடுத்துச் சந்தனமரத்திலுள்ள துளை யில் நுழைந்து மகிழ்ந்து தூங்கலாயின. அன்னங்களும் அவ்வாறே தாமரை மலரை விடுத்து மாமரப் பொதும்பரில் தங்கலாயின. எயினர்கள் தரையில் படுத்தலை விடுத்துப் பரண்மேலுள்ள குடிசை யில் எயிற்றியரோடு துயிலலாயினர். கொடிபடர்ந்த சிறிய இலைகளை யுடைய மரங்களுக்கு அடியில் இடையர்கள் ஆட்டுக்குட்டிகளோடு தங்கலாயினர். பேயும் பசியோடு வெறும் வாயை மென்றுகொண்டு ஓரிடத்தில் ஒடுங்கியிருக்கின்றது. வலிய யானைகளும் மழைத் தாரை பட்டு வருந்தி இடம் பார்த்து ஒதுங்குகின்றன. தேனீக்களும் இது காறும் தங்கியிருந்த பாறையில் தங்காமல் குகைகளில் நுழைகின்றன.

இத்தன்மையான கூதிர் காலத்தில் இராமன் சீதையின்மேல் வைத்த உணர்வினனாய் இலக்குவனை நோக்கி, ‘ இலக்குவ! சீதையும் மேகத்திடையே தோன்றும் மின்னலைப் போன்ற கோரப் பற்களை யுடைய இராவணனால் வஞ்சிக்கப்பட்டுத் துன்புறுகின்றாள். யானும் மேகத்தாலும் மின்னலாலும் வருந்துகின்றேன். கடுமையான அம்புகள் தூணியில் தூங்கா நிற்க வளர்ந்த தோள்களோடும் இந்த இழிநிலையை அடைந்தும் இன்னும் உயிர்விடாமல் இருக்கின்றேன். சிறிய குருவிகளும் மின்மினியாகிய விளக்கினையுடைய கூட்டில் தத்தம் பெடையொடு தூங்குகின்றன. சீதையைப் பிரிந்த யானும் மன்மதன் மலர்க்கணையால் பிளக்கப் பெற்ற மார்போடும் பொறுத்தற்கரிய துயரோடும் விழித்த நிலையில் தங்கியுள்ளேன். யான் கானம் புகுந்து செய்த காரியத்தைக் கண்டால் விண்ணுலகமும் மண்ணுலகமும் சிரிக்கும். கூதிர் இத்தகைய கொடுமையுடையதாக இருக்குமானால் யான் இறப்பது உறுதி. அங்ஙனமானால் இப்பழியை மீண்டும் இங்குப் பிறந்து வந்து தீர்வேனோ? அல்லது மறந்துதான் போவேனோ? இராவணன் இருப்பிடத்தைக் காணப் பலநாள் கழிப்பதைவிடப் பிரிவு நோயால் இராமன் மாண்டான் எனப்படுவது சிறப்புடைய தாகும். சீதையின் குமுதவாய் அமுதமுண்ட யான் கூதிர்காலக் குளிர் என்னுயிரைச் சுட யான் அழிவது பொருந்துமோ? ஓமத்தீயின் முன் சீதையை நிறுத்தி, ‘ நினக்கு இவள் அடைக்கலம்’ எனச் சனகன் சொல்லிய சொல்லைப் பொய்யாக்கிச் சீதையைப் பாது காவாது விட்ட என்னிடத்தில் இனி மெய் தங்காது; ஆதலின் யான் இறத்தலே தக்கது. தேற்றுதற்கு நீ யிருக்கின்றாய்; தேறுதற்கு

யான் இருக்கின்றேன் ஆயினும் சீதை நம் எதிரில் தோன்றுபவளாக இல்லை. என்னுடைய அம்புகளால் இவ்வுலகங்களை அழித்தாலன்றிச் சீதையைக் காண்டல் இயலாது. பகைவராய அரக்கர் தேவரோடு வந்து எதிர்ந்தாராயினும் என்னம்புக்கு உய்ந்துபோக மாட்டார்கள். தருமம் என்ற ஒன்றுக்கு அஞ்சி இவ்வாறு வருந்துகின்றேன்.' என்று கூறுகின்ருன்.

அவ்வாறு கூறிய இராமனை நோக்கி இலக்குவன், "ஆணைச் சக்கரமுடையவனே! கூதிரும் முடிவுற்றது. சீதையைக் களவு செய்த இராவணன் ஊரைக் காணுதற்குரிய காலம் வந்துவிட்டது; இனித் துன்புறுவது ஏன்? எத்தகையோரும் துணையின்றிப் போர் தொடங்குவதில்லை. நமக்குத் துணையாகத்தக்கார் யாவரையும் துணையாகக் கொண்டு போர்க்கு வேண்டிய சூழ்ச்சிகளைப் பன்முறை ஆராய்ந்து தெளிந்து, செல்லவேண்டிய காலத்தில் சென்று போர் செய்தால், நாம் வாகை சூடுதல் தப்புமோ? மேலும், அரக்கர் அறத்திற்கு மாறுபட்டவர்கள். நாமோ அறநெறியில் செல்லும் தன்மையேம் ஆதலின் புகழும் வாகையும் நம்பால் அடைவதன்றி வேறு யார் மாட்டுச் சென்றடையும்? அரக்கரைக் கொன்று அந்தணர்க்கு உதவ வேண்டிய நாம் அது செய்யாமல் சோம்பியிருந்தால் அரக்கர்க்குத் துணைசெய்தவராவோம்; ஆதலால் வருத்தம் தணிவாயாக" என்கின்ருன்.

இலக்குவன் கூறியதே உறுதி என்று இராமன் உணர்ந்தானுயினும் 'இக்கூதிர் காலத்திற்கும் இறுதியுண்டோ?' என்று எண்ணி வருந்தி மெலிகின்ருன். அக்கூதிரும் முடிவுறுகின்றது. மேகம் வெளுக்கின்றது. கூதிர் இருள் மறைகின்றது. மேகங்களின் குமுறல் ஓய்கின்றது. மழைத்தாரைகள் நீங்கின. மின்னல்கள் மறைந்தன. மலை அருவிகள் குறைந்து சிறுகின. ஆறுகளில் நீர் குறைந்தன. மேகங்களின் மறைப்பு நீங்கவே சந்திரன் ஒளியுடன் விளங்கினுன். குளிர்காற்று நீங்கி மென்காற்று மணமுடன் வீசலாயிற்று. ஒடுங்கியிருந்த அன்னப் பறவைகள் விரும்பியாங்கு விண்ணில் பறந்து சென்றன. தெளிந்த நீரில் மீன்கள் பிறழ்ந்தன. தாமரை மலர்கள் பொலிவிழந்து வாடின. செங்கிடையின் அரும்புகள் மங்கையர் வாயிதழ் போலச் சிவந்து மலர்ந்தன. தவளைகள் குரலடங்கின. மயில்கள் ஆடாது ஒடுங்கின. ஆறுகள் எல்லாம் முதிர்ந்த முத்துகளையுடைய வாய்க் கடலாகிய கணவனை அடைந்து சிரிப்பன போன்று விளங்கின. கமுகின் பசுங்குலைகள் பொன்னிறம் பெற்றுப் பழுத்தன. முதலைகள் கரைகளில் வந்து வெயில் காய்ந்து கொண்டு வாய் மடித்து உறங்கின. வஞ்சிக் கொடிகள் தழைத்துப் பொலிந்தன. நத்தைகள் சேற்றில் மறைந்தன. நண்டுகள் வளையை யடைத்துக் கொண்டு ஒடுங்கின.

## கம்பர் வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

1. கார் காலத்துக் காட்சிகளையெல்லாம் இராமன் இலக்குவனுக்குக் காட்டிக் கூறியதாக வான்மீகத்தில் உள்ளது. கம்பர் தம் கூற்றாகவே அக் கார் கால வருணனைகளைக் கூறுகின்றார். இப் படலம் வான்மீகத்தைத் தழுவிக் கூறிய பகுதியேயாயினும் கார் கால வருணனைகளில் கம்பர் தம் கற்பனையால் புதுவதாகக் கூறியனவே மிகுதியாக உள்ளன.

2. கிட்கிந்தைக்கு மன்னனாகச் சுக்கிரீவன் சென்றபின் இராமன், பிரசிரவணம் என்னும் மலையில் தான் தங்குதற்குத் தேர்ந்தெடுத்துக் கொண்ட பெரிய குகையின் அமைப்பும் சிறப்பும் பற்றி இலக்குவனுக்கு விரித்துக் கூறிய கருத்துக்களை இருபத்தைந்து சுலோகங்களால் வான்மீகி விவரித்துள்ளார். கம்பர், அக்குகையைப் பற்றி ஒன்றும் சொல்லாமல் விடுத்திருக்கின்றார். சீதையைப் பிரிந்து வருந்துகின்ற இராமன், தான் தனித்துத் தங்குதற்கு இனியதொரு குகையைத் தேர்ந்து கொண்டான் என்பதும், அது தங்குதற்கு எத்துணை இனிமையானது என்பதை மகிழ்ச்சியோடு இலக்குவனுக்குக் கூறினான் என்பதும் பொருத்தமாக இல்லையெனக் கம்பர் அதைக் கூறாமல் விடுத்தார் போலும்.

3. 'சுக்கிரீவன் தன் பகைவனை வென்று மனைவியை யடைந்து மிகப் பெருமை வாய்ந்த கிட்கிந்தையில் அரசனாக இருந்துகொண்டு செழிப்புமிக்க இம் மழைக்காலத்தில் இன்புற்றுக் கொண்டிருக்கின்றான்; யானோ, மனைவி அபகரிக்கப் பெற்றுப் பெருமைமிக்க இராசதானியிலிருந்தும் வெளிப்பட்டு மழையால் நனைந்து கரையும் ஆற்றங்கரைபோலக் கரைகின்றேன்' என இராமன் இலக்குவனுக்குக் கூறியதாக வான்மீகத்தில் உள்ளது. கம்பர் இக்கருத்தைச் சிறிது மாற்றி,

> 'தெரிகணை மலர்களால் திறந்த நெஞ்சொடும்
> அரியவன் துயரொடும் யானும் வைகுவேன்;
> எரியுமின் மினிமணி விளக்கின் இன்துணைக்
> குரீஇயினம் பெடையொடும் துயில்வ கூட்டினுள்.'

என அமைத்துள்ளார். இராமன் தன் கண்ணுக்கு எட்டாத இடத்தில் இருக்கும் சுக்கிரீவனை நினைந்து அவன் இன்புறத் தான் துன்புறும் நிலையைக் கூறி வருந்தினான் என்பதினும், தன் கண்முன் மரத்தில் தொங்கும் கூடுகளில் குருவிகள் தத்தம் பெடையொடு இன்புற்றுத் தூங்குகின்ற நிலையைக் கண்டு, அக் குருவிகட்குக் கிடைக்கும் இன்ப நிலைதானும் சக்கரவர்த்திக்கு மகனாகப் பிறந்த தனக்குக் கிடைக்க வில்லையே என்றும், மன்மதன் கணையால் புண்பட்ட நெஞ்சத்

தோடும், மருந்து பிறிதறியாப் பிரிவென்னும் பெருந்துயரோடும் உறக்கமின்றி வருந்த நேர்ந்துளதே என்றும், இரங்குதல் நாகரிக மிக்கதாய்ச் சிறந்து காட்டுதல் காணலாம்.

## படலப் பொருட் சிறப்பு

இக் கார்காலப் படலத்தில் கம்பர், தொல்காப்பிய முதலிய தமிழ் இலக்கண நூல்களில் கூறப்பட்ட முறைப்படி கால முதற் பொருள், நில முதற் பொருள், கருப் பொருள் ஆகியவற்றைக் கூறியுள்ள தோடு, கார் நாற்பது, ஐந்திணை யெழுபது, திணை மாலை நூற்றைம் பது போன்ற நூற் கருத்துக்களையும், நெடுநல் வாடை போன்ற சங்கப் பாடல்களின் அமைப்பையும் தழுவிச் செல்கின்றார் என்பது ஆழ்ந்து நோக்கின் புலனும். இப்படலத்தில் கம்பர் கூறியுள்ள இயற்கை வருணனைகளை நோக்கின், கார் காலம் தொடங்கியவுடன் அவர் புறப்பட்டு அக்காலத்து நானிலத்தும் என்ன என்ன நிகழ் கின்றன—அந்நானிலத்து உயிர்கள் எவ்வெவ் இயல்பினவாக உள்ளன என்பனவற்றை ஆங்காங்குச் சென்று நேரில் கண்டுதான் கூறினரோ? என்று வியக்க நேரும்.

கம்பர், கார்காலப் படலம் என்ற தலைப்பில் மழைக்காலத்தின் தொடக்கமாகிய கார்கால இயல்பையும், அம்மழையின் முதிர்வு ஆகிய கூதிர்கால இயல்பையும், அம்மழை முடிவுறும் கூதிர்காலத்தின் பின் நிகழும் இயல்பையும் விளக்கிச் செல்ல வேண்டியவராகின்றார். மழையின் தொடக்கமும் முதிர்வும் முடிவுமாகிய மூன்று நிலையினும் நால்வகை நிலங்களும் அந்நிலத்து உயிர்களும் எவ்வெவ் வகையில் தன்மை திரிகின்றன என்பதைக் கூறியிருத்தலால் அவர் தம் நில நூலறிவும் உயிர் நூலறிவும் நமக்குப் புலனாகும்.

## மேகம்

கார் காலத்தில் மேகம் நீர்முகந்து கறுத்ததைக் கூற வந்த கம்பர், எழுவகை மேகம் உண்டு என்று சொல்லுதற்கேற்ப,

நஞ்சினின், நளிர்நெடுங் கடலின், நங்கையர்
அஞ்சன நயனத்தின், அவிழ்ந்த கூந்தலின்,
வஞ்சனை அரக்கர்தம் வடிவின், செய்கையின்,
நெஞ்சினின், இருண்டது நீல வானமே.

என ஏழு வகையான உவமைகளைக் கூறி விளக்கியிருத்தலும், கதை நிகழ்ச்சியோடு தொடர்பு படுத்திச் சீதையின் கண்களையும் அவிழ்ந்த கூந்தலையும் உவமை யாக்கியதோடு, அவளைக் கவர்ந்த அரக்கர்தம் வடிவு, செய்கை, மனம் என்பவற்றையும் அவர் இழிவு தோன்ற

உவமையாக்கி, அவலச்சுவையும் வெகுளிச்சுவையும் அடுத்தடுத்துத் தோன்றுமாறு செய்திருத்தலும் காணலாம்.

## மின்னல்

கரிய மேகத்தில் தோன்றிய மின்னல் கம்பருள்ளத்தில் எத்துணைக் கற்பனைகளை எழுப்பியுள்ளது என்பதை அம்மின்னலுக்கு அவர் கூறியுள்ள உவமைகளால் உணரலாம். வாட்போரில் யானைகள் வாளால் பட்ட புண்கள் வாய்திறப்பன போன்றன எனவும், மேக வாகனனாகிய இந்திரன் முதலிய தேவர்கள் விண்ணிலிருந்து தம் அணிகலன்களை விரித்துப் பார்ப்பதுபோல இருந்தன எனவும், மலைமீது தீப்பிடித்து எரிவது போலிருந்தன எனவும், திசைகள் வாய்திறந்து சிரிப்பன போன்றிருந்தன எனவும், திசையாகிய கொல்லனின் உலைக்களம் உமிழ்கின்ற கனல்போன்று இருந்தன எனவும், விண்ணில் வித்தியாதரர்களின் உறையினின்று வாங்கிய குருதி படிந்த வாட்படைகள் பிறழ்வன போன்றிருந்தன எனவும், திசையானைகள்தம் முகப் பட்டங்களின் ஒளி பிறழ்வன போன்றிருந்தன எனவும், இடியின் நாக்குப் போன்றிருந்தன எனவும் மின்னலுக்கு ஒன்பது வகையான உவமைகளைக் கூறி நம்மை வியப்பில் ஆழ்த்தியிருத்தல் காணலாம். இதனால் இயற்கைக் காட்சிகளில் கம்பருக்கு இருந்த ஈடுபாடு எத்துணையது என்பதையறியலாம்.

## அன்னம்

வேனிற்காலத்தில் நீரற்ற ஆறுகளையும் குளங்களையும் விடுத்துச் சென்ற அன்னங்கள், பழகிய அந்நீர் நிலைகளின்மேல் வைத்த நேயத்தால் அவற்றையே நினைந்து வாடியிருந்தன எனவும், கார்காலத்து மழையால் அவ்வாறுகளும் குளங்களும் நிரம்பியவுடன் மீண்டும் அவ்விடங்களுக்கு வந்து காதலால் மயங்கி அந்நீரில் படிந்து குடைந்து மகிழ்ந்து ஆடுகின்றன எனவும், அம்மழைக்காலம் முதிர்வுற்ற கூதிர்காலத்தில் குளிர் மிக்கமையால் தாமரை மலராகிய இருக்கையை வெறுத்து நீங்கி மாமரப் பொதும்பரில் ஒடுங்கிவைகின எனவும், சில அன்னங்கள் அந்தியில் ஓமத்தீயில் முனிவரிடும் அகிலின் புகையில் குளிர்தீர நுழைந்தன எனவும், அக் கூதிர்காலம் முடிவுற்றவுடன் சீதையைத் தேடுதற்குரிய பருவம் வந்தது என அவளை நாடுதற்குப் புறப்பட்டதுபோல அவ்வன்னங்கள் புறப்பட்டு விண்ணில் திசைதோறும் பறந்து சென்றன எனவும் கூறியுள்ளார். அன்னங்களின் வாழ்வில் வேனிலிலும் காரிலும் கூதிரிலும் முன்பனியிலும் ஏற்பட்ட மாறுபாடுகளையெல்லாம் கம்பர் குறிக்கொண்டு நோக்கி எவ்வளவு திறம்பட நமக்குப் புலப்படுத்தியுள்ளார் காண்மின்!

## பிறவுயிர்கள்

வேனிற்காலத்து வெயில் வெப்பத்தால் நீர்வேட்கை மிக்கு வெதும்பிய மான்கள், கார்காலம் வந்தவுடன் நீர்வேட்கை தீர்ந்து களித்துத் துள்ளிக் குதித்து விளையாடிய காட்சியைக் காட்டியவர், கூதிர்காலத்துக் குளிர்மழை தம்மை வருத்துவதால் வாசனை மிக்க மரங்களின்கீழ் ஒதுங்கி நடுங்கி நிற்கின்ற துன்பக் காட்சியையும் காட்டுகின்றார். விருந்து கண்டு உள்ளங்களிக்கும் மங்கையர் முகம் போலக் கார்காலத்தில் மருதத் தாமரைகள் செழித்து மலர்ந்திருந்த இன்பக் காட்சி, கூதிர்க்குப்பின் ஊடிய மடந்தையர் முகம் போலத் துன்பக் காட்சியாக மாறிய நிலையையும் காட்டுகின்றார்.

கார்காலத்தில் குறிஞ்சி நிலத்துக் காந்தளும் வேங்கையும் மலரும்; முல்லை நிலத்து முல்லைக் கொடியும் கொன்றையும் பிடவமும், கூதாளமும் மலரும்; மருதத்துத் தாமரை மலரும்; குவளை குவியும்; பாலை நிலத்துப் பாதிரி பூவாது பொலிவழியும்; மயில்கள் அகவி ஆடும்; குயில் கூவாது அடங்கும்; முல்லை நிலத்து இந்திர கோபப் பூச்சிகள் தோன்றியூரும்.

கூதிர்காலத்தில் குறிஞ்சி நிலக் கிளிகள் மருத நிலத்து நெற் கதிர்களை விரும்பி வந்தடையும். நெய்தல் நிலத்தில் புன்னையும் தாழையும் மலரும். கூதிர்காலத்திற்குப்பின் மயில்கள் ஆடாமல் வாடும். மருத நிலத்துக் கமுகின் குலைகள் பசுமை நீங்கி முதிர்ந்து பொன்னிறம் பெறும். நெய்தலில் இப்பிகளில் முத்துகள் முதிர்ந்து வெளிப்படும். நத்தைகள் சேற்றில் ஒளிக்கும். நண்டுகள் வளையில் புகுந்து வாயில் அடைத்துக்கொண்டு ஒடுங்கி வாழும். தவளைகள் ஒலியடங்கி ஒடுங்கும் என்ற இயல்பு நிகழ்ச்சிகளையெல்லாம் இக் கார்காலப் படலத்தில் புலப்படுத்தியுள்ளார் கம்பர்.

# 9. கார்காலப் படலம்

## சூரியன் தென் திசையில் ஒதுங்கியது

4253. மாவியல் வடதிசை நின்று மானவன்
ஓவிய மேயென வொளிக்க வின்குலாம்
தேவியை நாடிய முந்தித் தென்றிசைக்
கேவிய தூதென விரவி யேகினன்.

மா இயல் வடதிசை நின்று, மானவன்,
ஓவியமே என ஒளிக் கவின் குலாம்,
தேவியை நாடிய, முந்தித், தென்திசைக்கு
ஏவிய தூது என, இரவி ஏகினன்.

பொ:—மனுக்குலத்துத் தோன்றிய இராமன், சித்திரமே என்று கண்டோர் சொல்லுமாறு ஒளியொடு கூடிய அழகு விளங்கப்பெற்ற தன் மனைவி சீதையைத் தேடும் பொருட்டு (அனுமானுக்கும்) முன்னதாகத் தென்றிசை நோக்கி அனுப்பிய தூதுவன் என்னுமாறு சூரியன், பெருமை பொருந்திய வடதிசையில் நின்றும் தென்திசை நோக்கி ஒதுங்கிச் செல்லத் தொடங்கினன்.

கு:—மானவன் - மனுக் குலத்துத் தோன்றியவன்; இராமன். மா - பெருமை. வடதிசையைப் புண்ணியத் திசை என்று கூறும் புகழ் நினைந்து 'மா இயல் வடதிசை' என்றார். ஓவியம் - சித்திரம். இவ்வுலகில் காணப் பெறாத வனப்புடைய ஓவியத்தையும் வல்லோன் தீட்டலாம்; அவ் ஓவியம் போன்ற உருவம் அமைதலே அரிது ஆதலின் 'ஓவியமேயெனக் கவின்குலாம் தேவி' என்றார். 'ஒளிக் கவின் குலாம்தேவி' என்க. குலாம்—விளங்குதல். 'ஒளியுடன் கூடிய அழகு விளங்கும் தேவி' என்பது பொருள். தேவி என்பது மனைவி யென்னும் பொருளது. இராவணன் சீதையைத் தென் திசை நோக்கியே யெடுத்துச் சென்றான் ஆதலின் அச்சீதையைத் தேடத் தூதுவனைத் தென் திசைக்கு ஏவுதலே முறையாதல் காணலாம். நாடிய என்பது 'செய்யிய' என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம். நாடிய ஏவிய தூது என்க. கார்காலத்திற்குரிய தென் திசை அயனம் தொடங்கியது என்றவாறு. தெக்கணாயணத்தில் இயல்பாகவே வடதிசையிலிருந்து தென் திசையில் ஒதுங்கிச் செல்லும் சூரியனை இராமன், தன் மனைவியைத் தேடத் தென் திசைக்கு அனுப்பிய தூது என ஏகினன் என்றது, தற்குறிப்பேற்ற அணி.

ஆடி மாதம், தொடங்கி மார்கழி வரையில் சூரியன் தென் திசையாக ஒதுங்கிச் செல்வதும் தை மாதம் முதல் ஆனி வரையில் வடதிசையாக ஒதுங்கிச் செல்வதும் இயல்பு. தெக்கணாயணம் உத்தராயணம் என்று முறையே இவற்றிற்குப் பெயர் கூறுவர். இரவி வடதிசை நின்று (தென் திசை) ஏகினான் எனக் கொண்டு கூட்டுக. அனுமானைப் பின்பு தென் திசையில் சீதையைத் தேட அனுப்பப் போகின்றானாகலின் இரவி முந்தித் தென் திசைக்கேவிய தூது போன்றவனானான். காணாத பொருளையெல்லாம் தேடிக் காட்டுதற்கு உரியவன் சூரியன் ஆதலும் நினைக்க. "கதிர்பகா ஞாயிறே கல் சேர்தியாயின், அவரை நினைந்து நிறுத் தென்கை நீட்டித், தருகுவையாயின் தவிரும் என்னெஞ்சத், துயிர் திரியா மாட்டியதீ" (கலித்-142) எனத் தலைவி கூறுதலும் காணலாம். (1)

## கருமுகில் பரவிய தோற்றம்

4254. பையணைப் பஃறலைப் பாந்த ளேந்திய
மொய்ந்நிலத் தகளியின் முழங்கு நீர்நெயின்
வெய்யவன் விளக்கமா மேருப் பொற்றிரி
மையடுத் தொத்தது மழைத்த வானமே.

பை அணைப் பல்தலைப் பாந்தள் ஏந்திய
மொய்ந் நிலத் தகளியில் முழங்கு நீர்நெயின்
வெய்யவன் விளக்கமா மேருப் பொன்திரி
மை அடுத் தொத்தது—மழைத்த வானமே.

பொ :—கரிய மேகங்களைத் தன்பாற்கொண்ட ஆகாயம், படம் பொருந்திய பல தலைகளையுடைய ஆதிசேடன் என்னும் பாம்பினால் தாங்கப்பட்ட (அணுக்கள்) செறிந்த நிலமாகிய அகலில், ஒலிக்கின்ற கடல் நீராகிய நெய்யில் மேரு மலையாகிய அழகிய திரியில் சூரியன், எரியும் விளக்காக (அவ்விளக்கின் புகையால்) மை படிந்தாற் போன்றுளது.

கு :—ஆகாயத்தில் கரியமேகம் பரவியிருந்த தோற்றம், மை படிந்தது போல இருந்தது என அம்மேகத்தின் கருமை மிகுதியை யுணர்த்தியவாறு. மாதரார் கண்ணுக்கு வேண்டிய மைகூட்டுங்கால் அகலில் நெய்யூற்றித் திரியிட்டு விளக்கேற்றி அவ்விளக்கின் புகையையே ஒருதட்டில்படியுமாறு செய்யும் இயல்பு நினைந்து, அகலும் நெய்யும் திரியும் விளக்கும் ஆக நிலத்தையும் கடல் நீரையும், மேரு மலையையும் சூரியனையும் இயைபுருவகமாகக் கூறி, 'வானம் மையடுத்த தொத்தது' என்று கற்பனை செய்தவாறு. பூமியில் உள்ள

கடல் நீரே சூரியனின் வெயிலால் ஆவியாகச் சென்று விண்ணில் மேகமாகத் திரண்டு பின் மழை பொழிகின்றது என இக்கால அறிஞர் கூறும் கொள்கைக்கும் மூலமாய் இக்கற்பனை அமைந்திருத்தல் காணலாம். "வையந் தகளியா வார்கடலே நெய்யாக, வெய்ய கதிரோன் விளக்காக" (பொய்கை - முதற் றிருவந்தாதி - 1) என்ற பாசுரத்தை அடியொற்றி இச்செய்யுள் அமைந்திருத்தல் காணலாம். தகளி - அகல் விளக்கு. பை - படம். பூமியை ஆதிசேடன் தாங்குவ தாகக் கூறும் புராண மரபு பற்றிப் 'பாந்தளேந்திய மொய்ந் நிலம்' என்றார். ஆதிசேடன் தலைகள் ஆயிரமாதல் தோன்றப் 'பல்தலைப் பாந்தள்' என்றார். ஆதிசேடனை விளக்கேந்தும் தண்டாகக் கொள்ள லாம். முழங்குநீர் என்றது, கடல் நீரை. வெய்யவன் - சூரியன்; வெம்மையுடைமை பற்றி வந்த பெயர். மேருமலையைச் சூரியன் வலம் வருவதாகக் கூறும் புராண மரபு கருதி மேருவாகிய திரியில் பற்றி வலம் சுழித் தெரியும் விளக்காகச் சூரியனை உருவகஞ் செய்தார். மையடுத்தலாவது, மை படிதல். மழை என்னும் பெயரடியாக 'மழைத்த' என்ற பெயரெச்சம் தோன்றியது. மழை - மேகம். வானத்தை மை படிய வைக்கும் தட்டாகவும் மேகத்தை மையாகவும் கொள்க. தட்டில் மை சிறிது சிறிதாகப் படிதல் போல வானத்தில் மேகம் சிறிது சிறிதாகப் பரவியதை விளக்கியவாறு. (2)

## வானம் இருண்டு சூரிய ஒளி மறைதல்

4255. நண்ணுத லருங்கட னஞ்ச நுங்கிய
கண்ணுதல் கண்டத்தின் காட்சி யாமென
விண்ணக மிருண்டது வெயிலின் வெங்கதிர்
தண்ணிய மெலிந்தன தழைத்த மேகமே.

நண்ணுதல் அருங் கடல் நஞ்சம் நுங்கிய
கண்ணுதல் கண்டத்தின் காட்சி ஆம் என,
விண்ணகம் இருண்டது; வெயிலின் வெங்கதிர்
தண்ணிய மெலிந்தன; தழைத்த மேகமே.

பொ:—யாரும் நெருங்க வியலாதபடி கொடிதாய்ப் பாற்கடலில் தோன்றிய விடத்தையுண்ட சிவபிரானுடைய கண்டத்தின் கரிய தோற்றம் ஈதாம் எனும்படி ஆகாயம் இருண்டது; சூரியனுடைய வெம்மையான கதிர்கள் குளிர்ந்தனவாய்த் தம் வலிமை தேய்ந்தன; மேகங்கள் பெருகிப் பரவின,

கு:—பாற்கடலில் தோன்றிய ஆலகாலத்தின் கொடுமை புலப்பட 'நண்ணுதலருங்கடல் நஞ்சம்' என்றார். "நஞ்சட வெழுத

லும் நடுங்கி நாண்மதிச், செஞ்சடைக் கடவுளை யடையும் தேவர் போல்" (பால - வேள்விப் - 50) எனவும், "வெவ்விடத்தினை மறுகு தேவர் தானவர் வெருவல், தவ்விடத் தனியருளு தாழ்சடைக் கடவு ளென" (அனுமப்-3) எனவும் தேவரும் தானவரும் கடல் நஞ்சங் கண்டு அஞ்சியோடிய இயல்பை முன்னும் கூறியிருத்தல் காணலாம். கண்ணுதல் என்பது கண்ணைத் தாங்கிய நெற்றியையுடையவன் எனச் சிவபிரானுக்குக் காரணப் பெயராயிற்று; அன்மொழித் தொகை. 'கண்ணுதற் பெருங்கடவுளும்' (பரஞ்சோதி, திருவிளையாடல்) என வருதலும் காணலாம். நஞ்சம் கரியது ஆகலின், அதை உண்ட சிவன் கண்டமும் கரிய தோற்றமுடையதாயிற்று. 'நீலமணிமிடற்றொருவன்' (புறநா - 91) என்பர் ஔவையார். சிவபிரானின் நீலகண்டத்தின் தோற்றம் இதுவாம் என்று எண்ணுமாறு ஆகாயம் இருண்டது என்க. வெங்கதிர் தண்ணிய என்றதும் மெலிந்தன தழைத்த என்றதும் முரண்தொடை. மேகத்தின் தண்மையால் சூரியனுடைய வெங்கதிரும் குளிர்ந்து பின் மெலிந்தன என அம்மேகத்தின் தண்மை மிகுதி புலப்படுத்தியவாறு. 'மேகம் தழைத்த' என மாற்றுக. தழைத்த அகரவீற்று முற்று. தழைத்தல் இங்குப் பெருகிப் பரவுதலை யுணர்த்தியது. (3)

### வானமிருண்டமைக்கு உவமை

**4256.** நஞ்சினி னளிர்நெடுங் கடலி னங்கைய
ரஞ்சன நயனத்தி னவிழ்ந்த கூந்தலின்
வஞ்சனை யரக்கர்தம் வடிவிற் செய்கையின்
நெஞ்சினி னிருண்டது நீல வானமே.

நஞ்சினின், நளிர் நெடுங்கடலின், நங்கையர்
அஞ்சன நயனத்தின் அவிழ்ந்த கூந்தலின்,
வஞ்சனை அரக்கர்தம் வடிவின், செய்கையின்,
நெஞ்சினின் இருண்டது—நீல வானமே.

பொ :—நீலநிறமுள்ள ஆகாயம் விடத்தைப் போலவும், குளிர்ந்த பெரிய கடலைப் போலவும். மாதரின் மைதீட்டிய கண்களைப் போலவும், அம்மாதரின் அவிழ்ந்த கூந்தலைப் போலவும் வஞ்சனையிற் சிறந்த அரக்கர்களின் வடிவத்தைப் போலவும், அவர்தம் தீவினைச் செயலைப் போலவும், அவர்தம் மனத்தைப் போலவும் இருண்டது.

கு :—இன் உவமையுருபு; உறழ்ச்சிப் பொருளதாகவும் கொள்ளலாம். நஞ்சும் கடலும், நங்கையர் நயனமும் கூந்தலும், அரக்கர்

வடிவும் கரிய வாதலின் அவற்றை வானம் இருண்டமைக்கு உவமை யாக்கினர். செயலும் நெஞ்சமும் அருவப் பொருள்களேனும் பாவச் செயலையும் அதற்குக் காரணமாய நெஞ்சத்தையும் கருநிறத்தன வாகக் கூறும் கவிமரபு உண்மையால் அவ்விரண்டையும் சேர்த்து உவமையாக்கினர். 'பஞ்சின் மெல்லடிப் பாவைய ருள்ளமும், வஞ்ச மாக்கள் வல்வினையும் பரன், அஞ்செழுத்தும் உணரா அறிவிலோர் நெஞ்சும் என்ன இருண்டது நீண்டவான்' (பெரிய புராணம், தடுத் தாட் - 159) என்பது இங்கு ஒப்புநோக்கத் தகும். இதில் வல்வினை யும் நெஞ்சும் இருண்டவானுக்கு உவமையாக்கப் பட்டிருத்தல் காண லாம். "கூழின்மலி மனம்போன்று இருளாநின்ற கோகிலமே" (திருக்கோவையார் - 322) என்றதும் காண்க. கார்கால வரவால் இராமன் மனம் படும்பாட்டை யுணர்த்துவதே கவியின் நோக்கமாத லின், அதற்கேற்ப முதற்கண் நஞ்சினை உவமை கூறினர். இதனால் கார்காலம் இராமனுக்கு நஞ்சுபோல் துயர் விளைப்பது என்பது புலப் படுத்தியவாறு. நங்கையர் எனப் பொதுப்படக் கூறியிருப்பினும் சீதையின் நயனத்தை இக்கருமுகில் நினைவூட்டி வருத்துதற்குரிய தென்பதும், அவ்வாறே இராமனைப் பிரிந்துள்ளமையால் கூட்டி முடிக்கும் குறிப்புமின்றி அச்சீதை கூந்தல் அவிழ்ந்தே கிடக்கும் நிலையைத் திரள் திரளாகப் பரவு மேகங்கள் நினைப்பூட்டி வருத்துதற் குரிய தென்பதும் குறிப்பால் பெற வைத்தவாறு. இராமனை வஞ்சித்த அரக்கர் நிறத்தையும் அவர்தம் பாவச் செயலையும் அவர்தம் வஞ்ச நெஞ்சத்தையும் வானம் இருண்டமைக்கு உவமையாக்கியது, கதைத் தொடர்புக்கேற்ற வுவமையாகும். இம்மேகத்தின் கருமையைக் கண்ட இராமனுக்கு வஞ்சனை யரக்கர்தம் வடிவும் செய்கையும் மனமும் நினைவுக்கு வருதல் இயல்பன்றோ? வானம் இருண்டது என்பதற்குப் பல உவமைகளைக் கூறியது பல பொருளுவமையணி. (4)

## மின்னல்

4257. நாட்களி னளிர்கட ஞர நாவுற
வேட்கையிற் பருகிய மேக மின்னுவ
வாட்கைகண் மயங்கிய செருவின் வார்மதப்
பூட்கைக ணிறைந்தபுண் டிறப்ப போன்றவே.

நாட்களின், நளிர்கடல் நாரம் நா உற
வேட்கையின் பருகிய மேகம், மின்னுவ,
வாட்கைகள் மயங்கிய செருவின், வார்மதப்
பூட்கைகள் நிறைந்தபுண் திறப்ப போன்றவே.

பொ :—நாட்படு கள்ளைப் பருகுவது போலக் குளிர்ந்த கடல் நீரை நாக்குப் பொருந்த விருப்பத்தோடு குடித்த மேகங்கள் மின்னுகின்றவை,—வீரரின் வாளேந்திய கைகள் கலந்து செய்யும் போரில், ஒழுகுகின்ற மதத்தையுடைய யானைகளின் உடம்பில் வாளால் வெட்டுண்டு நிறைந்த புண்கள் வாய்திறப்பனவற்றைப் போன்றன.

கு :—கரிய மேகத்தின் இடையிடையே தோன்றும் மின்னல்கள், கரிய யானையின் உடம்பில் தோன்றிய வாட்புண்கள் போல விளங்குகின்றன என்றவாறு. நாட்கள் - நாட்பட்டகள்; 'தேட்கடுப்பன்ன நாட்படு தேறல்' (புறநா - 392) என நாட்பட்டகள்ளின் கடுப்பைச் சிறப்பித்திருத்தல் காணலாம். நளிர் - குளிர்ச்சி. நாரம் - நீர். விலங்குகள் நீரில் நாவைத் தோய்த்துப் பருகும் இயல்பை மேகத்திற்கும் ஏற்றி 'நாவுற வேட்கையிற் பருகிய' என்றார். மேகம் கடல் நீரைப் பருகுவதாகக் கூறுவது மரபு. "நீறணிந்த கடவுள் நிறத்த வான், ஆறணிந்துசென் றார்கலி மேய்ந்து" (பால - ஆற்றுப் - 1) என முன் கூறியிருத்தலும் காணலாம். வேட்கையால் பருகுதற்குரியது நாட்படு கள்ளாகலின் மேகம் நீரை வேட்கையால் உண்டமை புலப்படுத்த நாட்களின் பருகிய' என உவமை கூறியவாறு. மேகமின்னுவ புண் திறப்ப போன்றவே என்றது தொழிலுவமம். மின்னுவ என்பது வினைப்பெயர். அவன் பொருது புண்பட்டு நின்றோனை' (புறநா - 93ஆம் பாடலின் அடிக்குறிப்பு) என்றாற் போன்ற நடையில் வந்தது. 'மின்னுவனவாகிய மேகம் புண் திறக்கும் பூட்கை போன்றன என மாற்றியுரைத்தலுமுண்டு. வாளேந்திய கையை வாட்கை என்றார். வார்தல் - ஒழுகுதல். புழைக்கை என்பது பூழ்க்கையாய்ப் பின் பூட்கை என மருவிற்று; துளை பொருந்திய துதிக்கையை யுடைய யானை என்பது பொருள். பல மேகங்களிலும் பலவிடங்களில் மின்னல் தோன்றுதற்கு உவமையாக வேண்டிப் போர்க்களத்து வாளால் புண்பட்ட பல யானைகளின் புண்கள் திறத்தலை உவமையாக்கினார்; கரிய மேகத்தைக் கிழித்துக் கொண்டு தோன்றும் மின்னலுக்குக் கரியின் கரியதோலைக் கிழித்தலால் தோன்றும் புண், பொருந்திய உவமையாதல் காணலாம். சீதையைக் கவர்ந்து சென்ற அரக்கரோடு போர் செய்தலையே எண்ணிக் கொண்டுள்ள இராமனுக்குக் கார்காலம் போர்க்களமாகக் காட்சியளிப்பது இயல்புதானே? இப்பாடல் 'நீனிறப் பெருங்கரி' என்ற வரும்பாடலுக்குப் பின் இருப்பின் மின்னலைப் பற்றி வரும் பாடல்களோடு இயைபுடையதாய்ப் பொருள் சிறக்கும். (5)

4258. நீனிறப் பெருங்கரி நிரைத்த நீர்த்தெனச்
சூனிற முகிற்குலந் துவன்றிச் சூழ்திரை
மானிற நெடுங்கடல் வாரி மூரிவான்
மேனிறைந் துளதென முழக்க மிக்கதே.

நீல்நிறப் பெருங்கரி நிரைத்த நீர்த்து என,
சூல்நிற முகிற்குலம், துவன்றி, சூழ்திரை
மால்நிற நெடுங்கடல் வாரி, மூரிவான்
மேல் நிறைந்துளது என, முழக்க மிக்கதே.

பொ :—நீலநிறம் வாய்ந்த பெரிய யானைகளை விண்ணில் வரிசையாக நிறுத்திவைத்த தன்மைபோலச், சூல்கொண்ட கருநிறத்தையுடைய மேகக் கூட்டம் நெருங்கி நின்று, பூமியைச் சூழ்ந்துள்ள அலைகளையுடைய கருநிறமுள்ள பெரிய கடல் பெரிய ஆகாயத்தின் மேல் நிறைந்துளது என்னுமாறு இடிமுழக்கம் மிக்கதாயிற்று.

கு :—கரிய யானைகளை விண்ணில் வரிசையாக நிறுத்திவைத்தாற் போன்று கரிய மேகக்கூட்டம் விண்ணில் நெருங்கிநின்று, கடல் விண்ணில் நின்று முழங்குவதுபோல இடிமுழக்கம் செய்தது என்றவாறு. யானைக்கும் மேகத்திற்கும் பொதுத்தன்மை, கருமைப்பண்பும், பலவாய் நெருங்குதல் ஆய தொழிலும் ஆம். கடலுக்கும் மேகத்திற்கும் பொதுத்தன்மை முழங்கல்; இது தொழிலுவமை. கடல் முழக்கம் விண்ணிலிருந்து கேட்கப்படுவது இல்லையாதலின், அந் நெடுங்கடல் பூமியை விடுத்து வான்மேல் நிறைந்தது என்னுமாறு முழக்கமிக்கதென விகாரவுவமை கூறியவாறு. கடல் விண்ணிலிருந்து முழங்குவது போல இருந்தது மேகத்தின் முழக்கம் என்றபடி. “அகன் குன்றின்மேல், இம்பர் வாரியெழுந்தது போன்றதே” (ஆற்றுப்-3) என்றதும் காணலாம். சூல் முகில் என இயையும். குலம் - கூட்டம். மால் - கருமை. மூரி - பெருமை. கடல், வாரி, ஒருபொருட் பன்மொழி. (6)

4259. அரிப்பெரும் பெயரவன் முதலி னோரணி
விரிப்பவு மொத்தன வெற்பு மீதுதீ
எரிப்பவு மொத்தன வேசி லாசைகள்
சிரிப்பவு மொத்தன தெரிந்த மின்னெலாம்.

அரிப்பெரும் பெயரவன் முதலினோர் அணி,
விரிப்பவும் ஒத்தன; வெற்புமீது, தீ

எரிப்பவும் ஒத்தன ; ஏசு இல் ஆசைகள்
சிரிப்பவும் ஒத்தன ;—தெரிந்த மின் எலாம்.

பொ :—விண்ணில் மேகங்களில் காணப்படுகின்ற மின்னல்களெல்லாம், அரி என்னும் பெரும்பெயர்க்குரியவனாகிய இந்திரன் முதலிய தேவர்கள் தம் அணிகலன்களை விரிக்கும் நிலையையும் ஒத்திருந்தன; மலைகளின்மேல் நெருப்புப் பற்றி அங்குள்ள மர முதலியவற்றை எரிக்குந் தோற்றத்தையும் ஒத்திருந்தன; (பகையென்னும்) குற்றமில்லாத திசைகள் தம்முள் மகிழ்ச்சியுடன் சிரிக்குந் தன்மையையும் ஒத்திருந்தன.

கு :—இந்திரன் மேகவாகனன் ஆகலின், மேகத்திலிருந்து தன் அணிகலன்களை விரித்துப் பார்த்து மகிழ்தற்குரியவன் என்ற இயைபு பற்றி அரிப்பெரும் பெயரவன் என்பதற்கு இந்திரன் எனப் பொருள் கூறலாயிற்று. பெரும் பெயர் - பிரசித்தி பெற்ற பெயர். முதலினோர் என்றது அவன் சுற்றத்தை. மடங்கியும் மறைந்தும் இருக்கும் அணிகலன்களை விரித்துப் பார்த்தலும் உண்டு; அவ்வாறு விண்ணிலிருந்து விரித்த பொற்கலன்களின் ஒளிபோல மின்னல்களினொளி இருந்தன என்றவாறு. கரிய மேகங்களிடையே தோன்றும் மின்னல்களின் தோற்றம், கரிய மலைகளில் உண்டாகும் தீயின் கொடிபோன்றிருந்தன என்றவாறு. ஏசு - குற்றம். ஆசை - திசை. பகைமை என்ற குற்றமில்லாத திசைகள் தம்முள் மகிழ்ந்து சிரிப்பது இயல்பு என்ற கருத்தால் எதிர் எதிருள்ள திசைகளில் மாறிமாறித் தோன்றும் மின்னலுக்கு 'ஆசைகள் சிரிப்பவுமொத்தன' என இல் பொருளுவமை கூறினர். ஒரு தொடரில் வந்த மூன்று உவமைகட்கும் தனித்தனியே ஒத்தன என்ற சொல்லைப் பெய்தமையால் இது பலவயிற் போலி யுவமையின்பாற்படும். முன் 'பூட்கைகள் நிறைந்த புண்திறப்ப போன்றவே' என மின்னலுக்கு உவமை கூறிவிட்டமையால் இங்கு விரிப்பவும், எரிப்பவும், சிரிப்பவும் என இறந்தது தழுவிய எச்சவும்மைகள் சேர்க்கப்பெற்றன. (7)

4260. மாதிரக் கருமகன் மாரிக் கார்மழை
யாதினு மிருண்டவிண் ணிருந்தைக் குப்பையின்
கூதிர்வெங் கானெடுந் துருத்திக் கோளமைத்
தூதுவெங் கனலுமி ழுலையு மொத்தவே.

மாதிரக் கருமகன், மாரிக் கார்மழை
யாதினும் இருண்ட விண் இருந்தைக் குப்பையின்,

கூதிர்வெங்கால் நெடுந் துருத்திக் கோள் அமைத்து
ஊது வெங்கனல் உமிழ் உலேயும் ஒத்தவே.

பொ :—மின் எல்லாம், திசைகளாகிய கருமான், மாரிக்காலத்துக் கரிய மேகங்களால் கரிய பொருள்கள் யாவற்றினும் கரியதாக இருண்ட விண் ஆகிய கரிக் குவியலில் கொடிய குளிர் காற்ருகிய நீண்ட துருத்தியைப் பொருந்த அமைத்து ஊதுதலால் உலேக்களம் உமிழ்கின்ற தீக்கொழுந்துகளேயும் ஒத்து விளங்கின.

கு :—மேலேச் செய்யுளில் வந்த மின் எலாம் என்றது, இடை நிலே விளக்காய் நின்று இச் செய்யுளுக்கும் எழுவாயாய், 'ஒத்தவே' என்ற பயனிலேகொண்டு முடிந்தது. கருமகன் துருத்தியமைத்து ஊதுதலால் உலே உமிழ்கின்ற கனல் என்க. கரிய மேகங்களுக் கிடையே தோன்றும் மின்னல்களின் தோற்றம் கரிக் குவியலினி டையே தோன்றும் நெருப்புக் கொழுந்துகள் போன்றிருந்தது என்றவாறு. 'கனலுமிழ் உலேயும் ஒத்தவே' என்ருரேனும், 'உலே யுமிழ் கனலு மொத்தவே' என்பது கருத்தாகக் கொள்க. பரிமே லழகரும் முதற் குறளே இவ்வாறு மாற்றியமைத்து உரை வரைந் திருத்தலும் இங்கு நினேவுகூர்க. கரிக் குவியலுக்குப் புறத்தேயிருந்து துருத்தியால் ஊதுகின்ற கருமகனுகை மேகப் பரப்பிற்கு அப்பாற்பட்ட திசைகளேக் கூறியதும், மேகங்களே ஒன்ருகச் சேர்த்து மின்னலே யுண்டாக்குகின்ற குளிர்காற்றைத் துருத்தியாகக் கூறியதும், மிகவும் பொருத்தமுடைய உருவகங்களாதல் காண்க. கருமுகில் வேறு, ஆகாயம் வேறு என்று உணரவியலாதபடி கரிய மேகங்களால் இருண்டிருக்கும் விண்ணினே இருந்தைக் குவியலாக உருவகஞ் செய் தார், ஒற்றுமை நயங்கருதி. இரும்புத் தொழில் செய்யும் கொல்ல ரைக் கருமகன் என்பர்; அச்சொல் கருமான் என வழங்கும். இருந்தை - கரி. வெங்கூதிர்க்கால் என்க; கூதிர் - குளிர். கொடிய குளிர்காற்று என்பது பொருள். வாடை என்பாருமுளர். துருத்தி, உலேக்களத்துக் காற்றையுண்டாக்கும் தோலாலாகிய கருவி. கோளமைத்தலாவது பொருத்தங் கொள்ள அமைத்தல். மின் எல் லாம் உலேயுமிழ் கனல் ஒத்தன என்பார், அவ்வுலேக்கு இயைபுடைய வாக மாதிரக் கருமகன் எனவும், இருண்டவிண் இருந்தைக் குப்பை எனவும், கால் நெடுந்துருத்தி எனவும் உருவகஞ் செய்தார். இது இயைபுருவக அணி. (8)

4261. சூடின மணிமுடித் துகளில் விஞ்சையர்
கூடுறை நீக்கிய குருதி வாட்களு

மாடுவ பெயர்தொறு மாசை யானையி
னோடைக ளொளிபிறழ் வனவு மொத்தவே.

சூடின மணிமுடித் துகள்இல் விஞ்சையர்
கூடு உறை நீக்கிய குருதி வாட்களும்,
ஆடுவ பெயர்தொறும் ஆசை யானையின்
ஓடைகள் ஒளி பிறழ்வனவும் ஒத்தவே.

பொ :—மின்னல்கள், மணிகள் பதித்த முடிகளைச் சூடியுள்ள குற்றம் இல்லாத வித்தியாதரர்கள், போர் செய்யும் பொருட்டு உறையில் நின்றும் உருவிய குருதி தோய்ந்த வாட்படைகளையும், அசைந்தாடுவனவாய்ச் சிறிது புடைபெயரும்தோறும் திக்கு யானைகளின் நெற்றிப் பட்டங்களின் ஒளி புரள்வனவற்றையும் போன்றன.

கு :—ஏழாம் செய்யுளில் வந்த 'மின்னெலாம்' என்பதே இச் செய்யுட்கும் எழுவாயாய், ஒத்தவே என்ற பயனிலை கொண்டு முடிந்தது. 'மணிமுடி சூடின விஞ்சையர்' என்க. விஞ்சையர் என்பார், பதினெண் தேவகணங்களுள் ஒருவகையினர்; அவர்கள் உடம்பு, அழுக்கு என்னும் குற்றம் அற்றதாய் ஒளியொடு விளங்குதலின் 'துகளில் விஞ்சையர்' எனச் சிறப்பிக்கப் பெற்றார். 'கூடு உறை' ஒருபொருட் பன்மொழி. குருதி, வாளுக்கு அடை; அழகுக்குப் பிடித்த வாளன்று; பகைவரோடு போர் செய்து குருதிக்கறை படிந்துள்ள வாள், என்பது புலப்படுத்தியவாறு. மின்னல்களின் அசைவு விண்ணில் விஞ்சையர்களின் வாட்கள் அசைவன போலவும், திசையானைகளுடைய நெற்றிப் பட்டங்களின் ஒளிகள் விட்டு விட்டு வீசுவபோலவும் இருந்தன என்றவாறு. 'ஆடியல் யானை' (சிலப்- 26: 86) எனப்படுதலின், ஆசை யானைக்கு ஆடுவ பெயர்தல் கூறப் பட்டது. யானையின் நெற்றிப் பட்டத்தொளி அவ்யானையின் அசைவால் மிக்கு வீசுதலின் 'ஆடுவ பெயர்தொறும் ஆசை யானையின் ஓடைகள் ஒளி பிறழ்வனவும் ஒத்தவே' என்றார். ஆசை - திசை. ஓடை - யானையின் நெற்றிப்பட்டம். (9)

**4262.** பிரிந்துறை மகளிரும் பிலத்த பாந்தளு
மெரிந்துயிர் நடுங்கிட விரவி யின்கதி
ரரிந்தன வாமென வசனி நாவென
விரிந்தன திசைதொறு மிசையின் மின்னெலாம்.

பிரிந்து உறை மகளிரும், பிலத்த பாந்தளும்,
எரிந்து உயிர் நடுங்கிட, இரவியின் கதிர்

அரிந்தன ஆம் என, அசனி நா என,
விரிந்தன, திசைதொறும்—மிசையின் மின் எலாம்.

பொ :—தலைவரைப் பிரிந்து இல்லிருக்கும் பெண்டிரும், பூமியின் கீழிடத்தில் அளையில் வாழ்கின்ற பாம்புகளும் உடல் வெதும்பி உயிர் நடுங்குமாறு, விண்ணிலுள்ள மின்னல்களெல்லாம், அரிந்தன வாகிய சூரியனுடைய கதிர்கள் இவையென்று கருதுமாறும், இடியின் நாக்கு இவை என்று கருதுமாறும் திசைகள் தோறும் விரிந்தனவாய் மின்னின.

கு :—தலைவர் குறித்த கார்காலம் வந்துவிட்டது என்பதை மின்னல் மகளிர் கண்முன் மின்னிக் காட்டுதலால் அத் தலைவரைப் பிரிந்த மகளிர் கார் வந்தும் அன்பர் தேர் வரவில்லையே என்ற ஏக்கத்தால் வெதும்பி நடுங்கலாயினர் என்க. தலைவர்கள் பொருள் முதலிய காரணங்களுக்காகத் தலைவியரைப் பிரிந்து செல்லுதல் இயல்பு. பிலம் என்றது இங்குத் தரைக்குக் கீழ் உள்ள அளையை. பாம்புகள் இடியோசையால் வருந்துதல் போலவே மின்னலின் வீச்சினாலும் வருந்துவதுண்டு; "பார்க்கடல் பருகி மேகம் பாம்பினம் பதைப்ப மின்னி" (சீவகசிந்தா - முத்தி - 473) என்றது காண்க. 'அரிந்தனவாம் இரவியின் கதிர் என' என்று மாற்றுக. சூரியன் மறைந்திருக்கும் நிலையில் அவன் கதிர்கள் வீசல் இயலாமை பற்றி 'அரிந்தனவாம் இரவியின் கதிர் என' என்று இல்பொருளுவமை கூறியவாறு. அசனி - இடி. நெருப்புக்கு நாவிருப்பதாகக் கூறும் மரபுண்மையின் நெருப்பு மயமான இடிக்கும் நாக்கு உள்ளதாகக் கொண்டு அதனை மின்னலுக்கு உவமை கூறினர். மின்னல்கள் ஒளியுடன் நீண்டு விளங்குதல் பற்றி அவற்றிற்குச் சூரியனிடத்தி லிருந்து அரியப்பெற்ற கதிர்களையும் இடியின் நாவினையும் உவமை கூறினர்; அவற்றிற்கும் அவ்வியல்புகள் உண்மையான். மின்னெ லாம் மகளிரும் பாந்தளும் நடுங்கிட திசைதொறும் விரிந்தன எனவும், இரவியின் கதிர் அரிந்தன ஆம் என, அசனி நாவென, விரிந்தன, எனவும் தனித்தனி இயையும். மின்னலைக் கண்டு நடுங்கும் இயல்பில் ஒற்றுமை யிருத்தல் பற்றி மகளிரையும் பாந்தளை யும் சேர்த்துக் கூறினர். (10)

4263. எண்வகை நாகங்க டிசைக ளெட்டையும்
நண்ணின நாவளைத் தனைய மின்னகக்
கண்ணன்மெய் வடிவெனக் கருகு கார்விசும்
புண்ணிறை யுயிர்ப்பென வூதை யூதின.

எண்வகை நாகங்கள், திசைகள் எட்டையும்
நண்ணின நா வளைத்தனைய மின் நக;
கண்ணன் மெய்வடிவு எனக் கருகு கார்விசும்பு
உள்நிறை உயிர்ப்பு என ஊதை ஊதின.

பொ :—திருமாலினது திருமேனியின் நிறம் போலக் கறுத்த கருமுகிலில்,—பூமியைத் தாங்கும் எட்டு நாகங்களும் (தாமிருக்கும் பாதலத்தை விடுத்துப் பூதலத்தில் வந்து) திசைகள் எட்டின் கண்ணும் அடைந்தனவாய்த் தன் நாக்குகளை நீட்டி வளைத்தாற் போன்றவாய் மின்னல்கள் மின்னினவாக அந்நாகங்கள் தம்முள் நிறைந்த மூச்சுக் காற்றை விடுத்தாற்போல வாடைக் காற்றும் வீசின.

கு :—எண்வகை நாகங்களாவன : வாசுகி, அநந்தன், தக்ஷகன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன் என்பன. அட்ட நாகங்களின் நாக்குகளைப் போன்று மின்னல்கள் மின்னின; அந்நாகங்களின் உயிர்ப்புப் போல வாடை வீசின என்றவாறு. இதனல், மின்னல், வாடை இவற்றின் கடுமை புலப் படுத்தியவாறு. வாடையைப் பாம்பின் உயிர்ப்பாகக் கூறும் மரபு உண்டு. "மைவா னிறத்து மீனெயிற்று வாடையுயிர்ப்பின் வளர் செக்கர்ப் பைவாயந்திப் படவரவே" (பால - 629) என்று உருவகம் செய்துள்ளமை காண்க. 'ஊதை ஊதின' எனப் பன்மையாற் கூறியது, பல்வேறிடங்களிலும் தனித்தனி வீசுதல் பற்றி என்க. "ஊதைகள் சொரிவன உறையுறு மமுதம்" (பால -82) என முன்னும் பன்மைவாய்பாட்டாற் கூறியுள்ளமை காணலாம். உயிர்ப்பு - மூச்சுக் காற்று. ஊதை - வாடைக் காற்று. (11)

4264. தலைமையுங் கீழ்மையுந் தவிர்த லின்றியே
மலையினு மரத்தினு மற்று முற்றினும்
விலைநினைந் துளவழி விலங்கும் வேசைய
ருலைவுறு மனமென வுலாய வூதையே.

தலைமையும் கீழ்மையும் தவிர்தல் இன்றியே,
மலையினும் மரத்தினும் மற்றும் முற்றினும்,
விலை நினைந்து உளவழி விலங்கும் வேசையர்
உலைவுறும் மனம் என உலாய ஊதையே.

பொ :—வாடைக்காற்று, தலைமையும் கீழ்மையும் நினைந்து ஒன்றையும் விட்டு விடாமல் உயர்ந்த மலையிலும் மரத்திலும் மற்றும் தாழ்ந்

தனவாயுள்ள எல்லாவற்றிலும், விலைப்பொருள் ஒன்றையே நினைந்து அப்பொருள் உள்ள இடத்திற்குப் பாய்ந்து செல்லும் பரத்தையர்தம் நிலையின்றிச் சுழலும் மனம்போல வீசின.

கு :—ஊதை, வேசையர் மனமென மலையினும் மரத்தினும் மற்றும் முற்றினும் உலாய என இயையும். தலைமை நினைந்து மலையை விட்டுவிடுவதோ அல்லது கீழ்மை நினைந்து சிறு செடியை விட்டுவிடுவதோ இல்லாமல் வாடை எல்லாப் பொருள்கள் மேலும் வீசின என்றவாறு. வேசையர் மனம் தலைமையும் கீழ்மையுமாகிய வேறுபாடு கருதாது தம் விலைப்பொருள் உள்வழியெல்லாம் செல்லும் இயல்பினதாகலின் அதனை அவ்வியல்புடைய வாடைக்கு உவமை கூறினர். "நிதிவழி நேய நீட்டும் மன்றலங் கோதை மாதர்மனம்" (ஆரணிய. மாரீசன்வதைப்: 243) என வேசையர் மனம் கூறப்பட்டிருத்தலும் காணலாம். உலைவுறலாவது, ஒருவழி நில்லாது சுழலுதல். பொருளையே நோக்கி மேல் கீழ் நோக்காது திரியும் வேசையர் மனம்போல வாடையும் மேல் கீழ் நோக்காது தன்னால் தாக்கப்படும் பொருள்கள் உள்வழியெல்லாம் தாக்கி வீசின என்க. மற்றும் முற்றினும் என்றது செடி முதலாகிய கீழானவற்றை. (12)

4265. அழுங்குறு மகளிர்த மன்பர்த் தீர்ந்தவர்
புழுங்குறு புணர்முலை கொதிப்பப் புக்குலாய்க்
கொழுங்குறைத் தசையென வீர்ந்து கொண்டது
விழுங்குறு பேயென வாடை வீங்கிற்றே.

அழுங்குறு மகளிர், தம் அன்பர்த் தீர்ந்தவர்,
புழுங்குறு புணர்முலை கொதிப்பப் புக்கு உலாய்,
கொழுங்குறைத் தசை என ஈர்ந்து கொண்டு, அது
விழுங்குறு பேய் என, வாடை வீங்கிற்றே.

பொ :—வாடைக்காற்று, தம் அன்புமிக்க தலைவரைப் பிரிந்தவர்களாய் வருந்துகின்ற பெண்டிர்தம் வெதும்புகின்ற நெருங்கிய கொங்கைகளை மேலும் கொதிப்பு அடையுமாறு புகுந்து உலாவி, (அக்கொங்கையை) செழுமையான மாமிசத் துண்டம் என நினைந்து அதை அரிந்துகொண்டு விழுங்க வந்த பேயைப் போல வளர்ந்தது.

கு :—வாடை, புணர்முலை கொதிப்பப் புக்குலாய், வீங்கிற்று என இயையும். தசையைக் கண்டு உண்ணலுறும் பேய், மகிழ்ச்சியால் வளர்வதுபோல வாடைக்காற்று, மகளிர் முலை கொதிப்பப் புக்குலாய் வீங்கிற்று என்றது, படைத்து மொழிந்த உவமையாகும். பேய்,

காற்று வடிவில் வருவதாகக் கூறுவதுண்டு. ஈர்தல் வாடைக்கும் உண்டு; 'என்பிழை கோப்பதுபோலப் பனிவாடை யீர்கின்ற' (திருவாய்மொழி 1-4-7) என்றல் காண்க. அன்பர்த்தீர்ந்தவராய் அழுங்குறு மகளிர் புழுங்குறு புணர்முலே என்க. பிரிவுத் துயரால் முன்னமே புழுங்கிக் கொண்டிருக்கும் முலையை மேலும் கொதிக்கச் செய்தது என வாடையின் கொடுமையைப் புலப்படுத்தியவாறு. குளிர்ச்சி மிக்க வாடைக் காற்று, தலைவரைப் பிரிந்த மகளிரை வெம்மை மிக்க நெருப்புப்போலத் துன்புறுத்தும் ; 'பனிப்பியல்வாக வுடைய தண்வாடை யிக்கால மிவ்வூர்ப் பனிப்பியல் வெல்லாந் தவிர்ந்தெரி வீசும்" (திருவிருத்தம்-5) என்றது காண்க. "தழல் வீசியுலாவரு வாடை தழீஇ" (சுந்தர - 493) எனப் பின்வருதலும் காணலாம். மென்மை மிக்க கொங்கையை வாடை வன்மையாகத் தாக்கிற்று என்பதே கருத்து. அன்பர்த் தீர்ந்தவர் என இயல்பின் விகாரமாயிற்று; இரண்டன் தொகையாதலின். தீர்தல் - பிரிதல். (13)

4266. ஆர்த்தெழு துகள்விசும் படைத்த லானுமின்
கூர்த்தெழு வாளெனப் பிறழுங் கொட்பினும்
தார்ப்பெரும் பணையின்விண் டழங்கு தாவினும்
போர்ப்பெருங் களமெனப் பொலிந்த தும்பரே.

ஆர்த்து எழு துகள் விசும்பு அடைத்தலானும், மின்
கூர்த்து எழு வாள் எனப் பிறழும் கொட்பினும்,
தார்ப் பெரும் பணையின் விண் தழங்கு தாவினும்,
போர்ப் பெருங் களம் எனப் பொலிந்தது—உம்பரே.

பொ :—(காற்றால்) ஆரவாரித்துக் கொண்டு மேல் எழுகின்ற புழுதி ஆகாயத்தை அடைத்துக் கொள்ளுதலாலும், மின்னல்கள், கூர்மையோடு மேல் எழுகின்ற வாள்போலப் பிறழ்கின்ற சுழற்சியாலும், தூசிப் படையிலுள்ள பெரிய முரசுகளைப் போல மேகம் இடித்து ஒலி செய்கின்ற வலியதன்மையாலும் ஆகாயம் பெரிய போர்க்களம் போல விளங்கிற்று.

கு :—போர்க்களத்தில் படைகளின் இயக்கத்தால் எழுகின்ற துகள், விசும்பை அடைத்தலும் வீரர்களேந்திய வாட்படைகள் பிறழ்தலும் முரசு முழங்குதலும் உண்டு. கார்காலத்து வானத்தினும் அம் மூன்றியல்புகள் இருத்தலால் அவ்வாகாயம் பெரும் போர்க்களம் எனப் பொலிந்தது என ஏது உவமையாகக் கூறியவாறு. கொட்பு - சுழற்சி. காற்றால் துகள் விசும்படைத்தலும், மின்னலாகிய வாள் பிறழ்தலும் இடியின் தழங்குதலும் கார்காலத்தில் நிகழ்ந்தன என்ற

வாறு. "விஞ்சையர் கூடுறை நீக்கிய குருதி வாட்களும் ஒத்தவே," (9) என முன்கூறினமையாலும் மின் வாளெனப் பிறழ்தல் அறிய லாம். பிறழ்தல் - புரளுதல். தார் - தூசிப்படை. பெரும்பணை - முரசு. 'இடியென முழங்கும்:முரசின்' (புறநா - 17) என்றது காண்க. விண், இங்கு மேகத்தை யுணர்த்தியது. 'விண்ணின்று பொய்ப்பின்' (குறள் - 13) என்புழிப்போல. தா-வலிமை; இங்குத் தன்மையைக் குறித்தது. பெரும் போர்க்களம் என மாற்றுக. தழங்குதல்-ஒலித்தல். "அலைநெடும் புனலறக்குடித்தலாலகம் நிலைபெற நிலைநெறி நிறுத் தலானொடு, மலைகளை மண்ணுறவழுத்தலால் தமிழ்த் தலைவனை நிகர்த்ததத் தயங்கு தானையே" (2375) என முன்வந்த ஏது உவமை இங்கு ஒப்புநோக்கத்தகும். (14)

## மழை பொழிதல்

4267. இன்னகைச் சனகியைப்
பிரிந்த வேந்தன்மேல்
மன்மதன் மலர்க்கணை
வழங்கி ஞனெனப்
பொன்னெடுங் குன்றின்மேற்
பொழிந்த தாரைகள்
மின்னெடுந் துவன்றின
மேக ராசியே.

இன் நகைச் சனகியைப் பிரிந்த ஏந்தல்மேல்,
மன்மதன் மலர்க்கணை வழங்கினுன் எனப்
பொன்நெடுங் குன்றின்மேல் பொழிந்த தாரைகள்—
மின்னெடுந் துவன்றின மேக ராசியே.

பொ :—இனிய புன்சிரிப்பையுடைய சீதையைப் பிரிந்துள்ள இராமன்மேல் மன்மதன் மலர் அம்புகளை எய்தான் என்னுமாறு, மின்னலோடு நெருங்கியுள்ள மேகக் கூட்டங்கள் பொன் விளையும் பெரிய மலைமேல் மழைத் தாரைகளைச் சொரிந்தன.

கு :—இராமன்மேல் மன்மதன் மலர்க்கணை சொரிந்தாற் போல மேகராசி குன்றின்மேல் தாரைகள் பொழிந்தன என்றவாறு. ஏந்தல் - பெருமையிற் சிறந்தோன்; இராமன். பிரிவு வருத் தத்தை மிகுவித்தற் கேற்புடைமை தோன்ற 'இன்னகைச் சனகி' என்ருர். மன்மதன் கணை சொரிதலும் மழை சொரிதலும் உடன் நிகழ்ந்தன என்பது தோன்ற இங்ஙனம் உவமை கூறினர். மின்

ளெடு துவன்றின மேகராசி என்றமையால் உவமையிலும், இரதி யோடு துவன்றிய மன்மதன் என வருவிக்க. சனகியைப் பிரிந்த ஏந்தல் மேல் கணை வழங்கும் மன்மதன் இரதியைப் பிரியாதவனாய் இருத்தலே பொருத்தமாதல் காணலாம். தாமரைப் பூ, மாம்பூ, அசோகப் பூ, முல்லைப் பூ, நீலப்பூ என்ற ஐந்து பூக்களும் மன்மதன் ஐங்கணையாம். பொன்னெடுங் குன்று என்றது, இராகவன் தங்கி யிருந்த பிரசிரவணம் என்னும் மலையை. மன்மதன் கரியனாதலின் மேக ராசிக்கு உவமையாதற்கு ஏற்றவனானான். சரமாரி என்னும் மரபுண்மையால் மழைத்தாரைக்கு அவன் மலர்க்கணை வழங்கல் உவமையாயது. அளக்கலாகா அளவும் பெருமையும் துளக்கலாகா நிலையும் தோற்றமுமுடைய மலைக்கு அவ்வியல்பெலாம் நிறைந்த இராமன் உவமையாதற்கேற்றவனாதல் காணலாம். ராசி - கூட்டம். பொழிந்த என்பது அகரவீற்றுப் பலவின்பால் வினைமுற்று. மேகராசி தாரைகள் பொழிந்த என இயையும். ஏனையிடங்களில் பெய்வ தினும் மழை, மலைமேல் பெய்தலே மிகுதியாதலானும், இராமன் தங்கியுள்ள இடமாதலானும் குன்றின்மேல் பொழிதலையே எடுத்துக் கூறினர். (15)

4268. கல்லிடைப் படுந்துளித் திவலை காரிடு
வில்லிடைச் சரமென விசையின் வீழ்ந்தன
செல்லிடைப் பிறந்தசெங் கனல்கள் சிந்தின
அல்லிடை மணிசிறந் தழலி யற்றல்போல்.

கல்லிடைப் படும் துளித்திவலை, கார்இடு
வில்லிடைச் சரம் என விசையின் வீழ்ந்தன ;
செல்லிடைப் பிறந்த செங்கனல்கள் சிந்தின—
அல்லிடை மணி சிறந்து அழல் இயற்றல் போல்.

பொ :—மலைமேல் வீழ்கின்ற மழைத்தாரையாகிய நீர்த்துளிகள், மேகம் தன் வில்லில் தொடுத்து எய்த அம்புபோல வேகத்தோடு வீழ்ந்தன; மேகத்தில் தோன்றிய இடியாகிய செந்நெருப்பின் திரள்கள் (அம்மலையிலுள்ள) மாணிக்க மணிகள் இரவில் மிகுதியாக ஒளி வீசுதல் போலச் சிந்தின.

கு :—கல் - மலை. ‘கல்லிடைப் பிறந்து போந்து’ (பால-ஆற்றுப்-19) என்புழியும் ‘தென்குமரி வடபெருங்கல்’ (புறநா-17) என்புழியும் இப்பொருள் பட்டிருத்தல் காணலாம். துளித்திவலை, ஒருபொருட் பன்மொழி. காரிடு சரம் என இயையும். வில் என்றது இந்திரவில்லை. காரிடு வில் எனக் கிடந்தாங்கே வைத்து வானிடு வில் என்று

பொருள் கூறலும் ஆம். மேகத்தில் வில் தோன்றுதலின் அவ் வில்லிடை விடுத்த சரம் என்னுமாறு மழைத்தாரைகள் மலையில் விசையாக வீழ்ந்தன எனத் தற்குறிப் பேற்றமாகக் கூறினர். மழைத்தாரைகள் வேகமாக வீழ்ந்தன; இடியாகிய நெருப்புத் திரள்களும் வீழ்ந்தன என்றதால், மேகம் முரண்பட்ட நீர் நெருப்பு இரண்டையும் ஒரு காலத்தில் சொரிந்தமை புலப்படுத்தியவாறு. நெருப்பும் புகையும் நீரும் காற்றும் ஆகிய நான்கு பொருள்களும் சேர்ந்த தொகுதியே மேகம் என்பதை இங்கு நினைதல்வேண்டும். "தூமமு மெமது; பவனனு மெமது தோழன்; அத்தோயமு மெமதே; யாமுமிங் கிவற்றேடொன்றுத லொழிதும்; ஈரிரு பொருள்களும் பிரிந்தால் மாமுகிலெனும் பேர் எங்குளது?" (வில்லிபாரதம். காண்டவ - 51) என அங்கியங் கடவுள் கூறுதல் காணலாம். (16)

4269. மள்ளர்கண் மறுபடை மான யானைமேல்
வெள்ளிவே லெறிவன போன்ற மேகங்கள்
தள்ளருந் துளிபடத் தகர்ந்து சாய்கிரி
புள்ளிவெங் கடகரி புரள்வ போன்றவே.

மள்ளர்கள், மறுபடை மான யானைமேல்
வெள்ளிவேல் எறிவன போன்ற மேகங்கள்;
தள்ளருந் துளிபடத் தகர்ந்து சாய்கிரி
புள்ளி வெங் கடகரி புரள்வ போன்றவே.

பொ :—மேகங்கள், (மலைமேல் நீர்த்தாரைகளைச் சொரிவது) வீரர்கள், பகைவர் படையிலுள்ள பெருமை வாய்ந்த யானைகளின் மேல் வெண்மையான வேல்களை எறிவதைப் போன்றிருந்தன; தள்ள இயலாத அந் நீர்த்தாரைகள் விசையுடன் படுதலால் சிதைந்து சாய்கின்ற (சிறிய) மலைகள், (அவ் வேல்கள் படுவதால்) புள்ளிகளையுடைய கொடிய மதயானைகள் புரள்வன போன்றிருந்தன.

கு :—தொழில் உவமையணி யாதலின், உவமைக்கேற்பப் பொருளின் கண்ணும் மேகங்கள், 'மலைமேல் நீர்த்தாரைகளைச் சொரிவது' எனத் தொழில் வருவித்து உரைக்கப்பட்டது. மள்ளர்கள் மேகங்களுக்கும், யானைகள் சிறு மலைகளுக்கும், வேல்கள் மழைத்தாரைகட்கும் உவமை. மள்ளர்கள் - வீரர்கள். மறுபடை - பகைவர் படை. வெள்ளிவேல் என்றது, தேய்வால் வெண்மையான வேல் என்றவாறு. 'வெள்ளி வெண்கோல் நிரைத்தன போற் கொழுந்தாரைகள்' (சீவக - 33) என்றதும் காண்க. இயல்பாகச் சொரிகின்ற நீர்த்தாரைகளைத் தள்ள மலைக்குக் கூடாமை தோன்றத்

'தள்ளருந் துளி' என்றார். தகர்தல் - சிதைதல். கிரி என்றது, பெருமலையிலுள்ள சிறு குன்றுகளை; பெரும்மழையால் இத்தகைய சிறு குன்றுகள் சரிவதுண்டு; யானையை உவமை கூறியதாலும் கிரி என்றது சிறிய குன்றையே என்பது பெறப்படும். 'குன்றத் தன்ன தோர் பெருங்களிறு' (புறநா - 140) என்றதும் காணலாம். கிரி சாய்தல் கரிபுரள்வ போன்றன என்க. யானையின் மத்தகத்துப் புள்ளிகள் இருத்தல் நல்லிலக்கணம் ஆதலின், 'புள்ளிவெங் கடகரி' என்றார். (17)

4270. வானிடு தனுநெடுங் கருப்பு வின்மழை
மீனிடு கொடியவன் பகழி வீழ்துளி
தானெடுஞ் சார்துணை பிரிந்த தன்மைய
ரூனுடை யுடம்பெலா முகுத்த தொத்ததே.

வான்இடு தனு, நெடுங் கருப்பு வில்; மழை,
மீன் இடு கொடியவன்; பகழி வீழ்துளி;
தான் நெடுஞ் சார்துணை பிரிந்த தன்மையர்
ஊனுடை உடம்பு எலாம் உகுத்தது ஒத்ததே.

பொ:—மேகமாகிய, மீனெழுதிய நீண்ட கொடியையுடைய மன்மதன் தான், வானிடு வில்லாகிய நீண்ட கரும்பு வில்லில், வீழ்கின்ற துளிகளாகிய மலரம்புகளை, நெடுஞ்சார்பாகிய துணைவரைப் பிரிந்த தன்மையுடையோர் தம் தசையுடைய உடம்புகள் எல்லாவற்றிலும் எய்ததை ஒத்தது.

கு:—மழைத்துளிகள் பிரிந்தார் உடலில் பட்டவுடன் மன்மதன் அம்பு பட்டவர்களைப் போன்றவராய்ப் பிரிவுத்துயரால் மிக வருந்தும் ஒற்றுமை கருதி இங்ஙனம் இயைபுருவகமாக்கிக் கூறினர். "இன்னகைச் சனகியைப் பிரிந்த ஏந்தல்மேல் மன்மதன் மலர்க்கணை வழங்கினன் என" (14) என முன்னர்க் கூறியுள்ளதும் நினைவு கூர்க. மன்மதன் கணைபோலவே மழைத்துளிகளும் பிரிந்தாருடலில் பட்டு வருத்தின என்பது கருத்து. தனு - வில். 'வானிடு வில்லின்' (நாலடி - 1) என்ற தொடரை நினைந்து 'வானிடுதனு' என்றார். மழை - மேகம். மழையாகிய மன்மதன் தான், வானவில்லாகிய கருப்பு வில்லில் வீழ்துளியாகிய பகழிகளைத் தொடுத்துப் பிரிந்தவர் உடம்பிலெல்லாம் உகுத்ததை ஒத்தது என இயையும். மன்மதனுக்கு மீன் எழுதிய கொடியுண்டாகலின் அவனை மீனிடு கொடியவன் எனக் காரணப் பெயரால் குறித்தவாறு. கொடியவன் தான் என இயையும். நெடுஞ்சார்பாகிய துணை என்றது காதலரை; எழுமையுந் தொடர்

கின்ற சார்பினராதலின் அவரை, "நெடுஞ்சார் துணை" என்றார். பின்னிரண்டடியில் உருவகம் இல்லை. மேகம், வில்லோடு தோன்றி மழைத்தாரை சொரிந்து பிரிந்தாரை வருத்தல், மன்மதன் கருப்பு வில்லில் அருப்புக்கணை தொடுத்துப் பிரிந்தார்மேல் எய்தலை ஒத்தது என விரித்துக் கூறலாம். (18)

4271. தீர்த்தனுங் கவிகளுஞ் செறிந்து நம்பகை
பேர்த்தன ரினியெனப் பேசி வானவ
ரார்த்தென வார்த்தன மேக மாய்மலர்
தூர்த்தன வொத்தன துள்ளி வெள்ளமே.

தீர்த்தனும் கவிகளும் செறிந்து, நம்பகை
பேர்த்தனர் இனி எனப் பேசி வானவர்
ஆர்த்தென, ஆர்த்தன மேகம், ஆய்மலர்
தூர்த்தன ஒத்தன துள்ளி வெள்ளமே.

பொ :—'தூயவனான இராமனும் வானரங்களும் நட்புப் பூண்டமையால் இனி நம் பகையை ஒழித்தனரே ஆவர்' எனப் பேசிக் கொண்டு தேவர்கள் மகிழ்ச்சியால் ஆரவாரித்தாற் போல மேகங்கள் ஆரவாரித்தனவாய்ச் சொரிந்த நீர்த்துளிகளின் பெருக்கம், (அந்தத் தேவர்கள்) சொரிந்து நிரப்பிய அழகிய கற்பக மலர்மாரியை ஒத்தன.

கு :—தீர்த்தன் - தூயவன் ; இராமன். கவிகள் - வானரங்கள் ; சுக்கிரீவன் முதலியோர். செறிதல் - நட்புக்கொள்ளுதல். செறிந்து என்ற வினையெச்சம் காரணப் பொருளில் வந்தது; 'மழை பெய்து நெல் விளைந்தது' என்புழிப்போல. இனிப் பேர்த்தனர் என்றது, தெளிவு பற்றி வந்த காலவழுவமைதி ; எதிர்காலம் இறந்தகாலமாயிற்று. இனிப் பேர்ப்பர் என்பதே கருத்து. மேகத்தின் ஆரவாரம் விண்ணில் நிகழ்கின்றமையால் இங்ஙனம் உவமை கூறினார். மேகத்தின் ஆரவாரம் தேவர்களின் ஆரவாரம் போன்றிருந்தது ; அது மழை சொரிவது, அத் தேவர் மலர்மாரி சொரிவது போலிருந்தது என்றவாறு. தேவர்களின் ஆரவாரத்திற்கும் மலர் மாரிக்கும் காரணம் அரக்கர் பகை நீங்கப் போகின்றோம் என்ற மகிழ்ச்சியே யாகும். சுக்கிரீவனோடு இராமன் நட்புச் செய்து கொண்டதை அறிந்த தேவர்கள் மலர் மாரியால் பூமியைத் தூர்த்தார்கள் என்பதை : "பூவின் மாரி தூர்த்தனர் விண்ணோர் மேகஞ் சொரிந்தன" (நட்புக்கோட் - 28) என முன் கூறியுள்ளதால் அறியலாம். பேர்த்தல் - நீக்குதல். தூர்த்தல் - நிறைத்தல். (19)

4272. வண்ணவிற் கரதலத் தரக்கன் மண்ணொடு
விண்ணிடைக் கடிதுகொண் டேகும் வேலையில்
பெண்ணினுக் கருங்கல மனைய பெய்வளை
கண்ணெனப் பொழிந்தது கால மாரியே.

வண்ண வில் கரதலத்து அரக்கன், மண்ணொடு
விண்ணிடைக் கடிது கொண்டு ஏகும் வேலையில்,
பெண்ணினுக்கு அருங்கலம் அனைய பெய்வளை
கண் எனப் பொழிந்தது—கால மாரியே.

பொ :—அழகிய வில்லையேந்திய கையையுடைய இராவணன் பூமியோடு தன்னைப் பெயர்த்து எடுத்துக்கொண்டு ஆகாய வழியாக விரைந்து செல்லும்போது, பெண்களுக்கெல்லாம் அரிய அணிகலன் போன்ற சீதையின் கண்கள் நீர் பொழிந்ததைப் போலக் கார் காலத்து மழை பெய்தது.

கு :—இராமனோடு போர் செய்ய அஞ்சி வஞ்சனையால் கவர்ந்த இராவணனுக்கு வில், போர் செய்யப் பயன்படாமையின், 'வண்ண விற் கரதலத்தரக்கன்' என்றார்; கைக்கு அலங்காரமாகவே அமைந்தது என்பது கருத்து. மண்ணொடு கொண்டு என இயையும். சீதையிருந்த இடத்தில் ஒரு யோசனையளவு நிலத்தைக் கீண்டு பெயர்த்து எடுத்துச் சென்றான் என்பது முன் கூறப்பட்டது. இராமன் பின் தொடர்ந்து வரலாம் என்ற அச்சத்தால் இராவணன் கடிது கொண்டு ஏகலானான் என்க. பெண்ணினத்திற்கே அழகு தருகின்றவள் சீதை என்ற கருத்தால் அவளைப் 'பெண்ணினுக் கருங்கலம் அனைய பெய்வளை' என்றார். பெய்வளை என்பது வினைத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித் தொகையாய்ச் சீதையை யுணர்த்தியது. கால மாரிபோல் கண்ணீர் சொரிந்தது என்னாது மாற்றிக் கூறியது விபரீத உவமை என்பர். இதனால், சீதையின் கண்ணீர் மிகுதியைப் புலப் படுத்தியவாறு. இராவணன் விண்வழி எடுத்துச் சென்றபோது சீதை கண்ணீர் சொரிந்த நிலையை : "மழைபொரு கண்ணிணை வாரி யோடுதன், இழைபொதிந் திட்டனள்" (கலன்காண் - 2) என்றதால் அறியலாம். 'மழைக்கண் என்பது காரணக் குறியென வகுத்தாள்' (சுந்தர - 335) என்பதும் இங்கு ஒப்புநோக்கத்தகும். விண்ணின்று பொழியும் மழைக்குவமை கூறவேண்டி விண்ணிடைக் கடிது கொண் டேகும் வேலையில் சீதையின் கண்கள் நீர் பொழிந்ததையே கூற வேண்டியதாயிற்று. உயர்வு நவிற்சியாக இங்ஙனம் கூறுவதுண்டு என்பதை : "வறந்தென்னை செய்தியோ வானம்! சிறந்த வென் கண்ணீர்க் கடலாற் கனைதுளி வீசாயோ கொண்மூக் குழீஇ முகந்து" (கலி - 145) எனும் சங்கப் பாடலாலும் அறியலாம். (20)

4273. பரஞ்சுடர்ப் பண்ணவன் பண்டு விண்டொடர்
புரஞ்சுட விடுசரம் புரையு மின்னின
மரஞ்சுடப் பொறிநிமி ரயிலி னாடவ
ருரஞ்சுட வுளைந்தனர் பிரிந்து ளோரெலாம்.

பரஞ்சுடர்ப் பண்ணவன், பண்டு, விண்தொடர்
புரம்சுட விடுசரம் புரையும் மின் இனம்,
அரம் சுடப் பொறிநிமிர் அயிலின் ஆடவர்
உரம் சுட உளைந்தனர் பிரிந்துளோர் எலாம்.

பொ :—பரஞ்சோதியாகிய சிவபிரான், பழங்காலத்து விண்ணில் தொடர்ந்து உலாவுகின்ற திரிபுரங்களை எரிக்கும் பொருட்டு விட்ட அம்பினைப் போன்ற மின்னல்கள், தம்முடைய திண்மையைச் சுடுதலால், அரத்தினால் அராவப்பட்டு ஒளியுடன் நிமிர்ந்து விளங்கும் வேற்படைகளையுடைய வீரர்களாகிய பிரிந்தவர்கள் எல்லோரும் வருந்தினர்.

கு :—பரஞ்சுடர் என்றது சிவபிரானை. "உன்னைப் பரவிடு மடியேன் படுதுயர்களையாய் பாசுபதா பரஞ்சுடரே" (தேவாரம் 7-69-1) என்று சுந்தரமூர்த்தி நாயனார் சிவபிரானை விளித்திருத்தல் காணலாம். பண்ணவன் - தேவன். விண்டொடர்புரம் என்றது, விண்ணில் திரிந்துகொண்டு உயிர்களை யழித்து வந்த திரிபுரங்களை. சரம் என்றது, திருமாலாகிய அம்பினை; "ஓங்குமலைப் பெருவிற் பாம்பு நாண்கொளீஇ ஒருகணை கொண்டு மூவெயிலுடற்றிப் பெருவிற லமரர்க்கு வென்றிதந்த கறைமிடற் றண்ணல்" (புறநா - 55) என்றது இங்கு ஒப்புநோக்கத்தகும். மின்னினம் உரஞ்சுட அயிலினை யுடைய ஆடவராகிய பிரிந்துளோர் எல்லாம் உளைந்தனர் என இயையும். அரஞ்சுடப் பொறி நிமிர் அயில் என்றது, மின்னலைப் போல ஒளிவீசும் அயிற்படை கையிலிருந்தும் ஆடவர் அம்மின்னினம் சுட உளைய வேண்டியவராயினர் என அம்மின்னின் பெருமையைப் புலப்படுத்தியவாறு. ஆடவர் - வீரர். இங்குக் கூறிய 'பிரிந்துளோர்' என்றது, போர்க்குப் பிரிந்த வீரர் என்பது விளங்க 'அயிலின் ஆடவர்' என்றார். கார்காலத்து வருவதாகச் சொல்லிப் பிரிந்து சென்ற வீரர், மின்னலைக் கண்டவுடன் தாம் கூறிய கார்ப் பருவம் வந்தும் தலைவியைக் காணச் செல்ல இயலாமை கருதி உரங் குறைந்தனர் என்பார், 'மின்னினம் உரஞ்சுட உளைந்தனர்' என்றார். அது உரஞ்சுடலாவது, வீரரின் திண்மையைக் குறைத்தலேயாம். பொறி - ஒளி. 'பொறிவரிப்புகர் முகம்' (பெரும்பாண் - 448) என்றது காண்க. உரம் - திண்மை. வீரர்களின் இந்த நிலை

யைத் தொல்காப்பியர் 'பாசறைப் புலம்பல்' (தொல் - பொருள் - 31) என்பர். (21)

4274. பொருடரப் போயினர்ப் பிரிந்த பொய்யுடற்
குருடரு தேர்மிசை யுயிர்கொண் டுய்த்தலான்
மருடரு பிரிவினோய் மாசுணங் கெடக்
கருடனைப் பொருவின கால மாரியே.

பொருள்தரப் போயினர்ப் பிரிந்த பொய் உடற்கு,
உருள்தரு தேர்மிசை உயிர்கொண்டு உய்த்தலால்
மருள்தரு பிரிவின் நோய் மாசுணம் கெடக்,
கருடனைப் பொருவின—கால மாரியே.

பொ :—கார்காலத்து மழை, பொருள் ஈட்டி வரச் சென்ற தலைவரைப் பிரிந்தமையால் (உயிர் நீங்கினாற் போன்று இருந்த தலைவியரின்) பொய்யான உடம்புகட்கு உரிய தலைவர்களாகிய உயிர்களை உருளுகின்ற தேர்மேல் ஏற்றிக் கொண்டு வந்து விடுத்தலால், மயக்கத்தைத் தருகின்ற பிரிவு நோயாகிய பெரும்பாம்பு அழிய வந்த கருடனைப் போன்றன.

கு :—கற்புக் காலத்துப் பிரிவு ஆறனுள் பொருள்வயிற் பிரிவும் ஒன்று. பகைவயிற் பிரிந்தோர் கார்காலம் கண்டு பாசறைப் புலம்பும் நிலையை முன்னைச் செய்யுளிலுணர்த்தி, இச்செய்யுளில், பொருள்வயிற் பிரிந்தோர் கார் வந்ததும் தேர் மிசை வந்ததை யுணர்த்துகின்றார். முன்னோரீட்டிய பொருள் மலையளவிருப்பினும் தன் முயற்சியாலீட்டிய பொருள் கொண்டு இல்லறஞ் செய்தலே நல்லறமென எண்ணித் தலைவர்கள் பொருள் தேடப் பிற நாட்டிற்குச் செல்லுதல் வழக்கம். அவ்வாறு சென்றோர் கார்காலத்து வருவதாகக் கூறிச் சென்ற சொல் பிழையாது கார் வந்ததும் தேர் மிசையேறி வந்தனர் என்றவாறு. தலைவரைப் பிரிந்த நிலையில் உயிர்நீத்த உடல்போல வாடியிருந்த தலைவியர் மகிழத் தலைவர்களை வரச் செய்தது கார்காலமே யாதலின், அது தலைவியரின் பொய் யுடற்கு உயிர்கொண்டு உய்த்ததாகவும்; அதனால் அது பிரிவு நோயாகிய மாசுணங்கெட வந்த கருடனைப் போன்றது எனவும் கூறினார். பாம்பு கருடனால் அழிதல் இயல்பு. பிரிவு நோயாகிய பாம்பு கார்காலமாகிய கருடனால் அழிந்தது என்றவாறு. உயிர் கொண்டுய்த்தலான், மாரி கருடனைப் பொருவின என்றது ஏது உவமையணி. பொய்யுடல் என்றது தலைவியரின் உடம்புகளை. உயிர் என்றது தலைவர்களை. "பண்டுவருங் குறிபகர்ந்து பாசறையிற்

பொருள்வயினிற் ' பிரிந்து போன, வண்டு தொடர் நறுந்தெரியல் உயிரனைய கொழுநர்வர மணித்தேரோடும், கண்டு மனம் களிசிறப்ப ஒளி சிறந்து மெலிவகலுங் கற்பினர் போல்" (பால-715) என்றதும், "விழைவுறு பொருடரப் பிரிந்த வேந்தர் வந் துழையுற வுயிருற வுயிர்க்கு மாதரின்" (25) எனப் பின் கூறுவதும் நினைக. "வினையே யாடவர்க்குயிரே வாணுதல், மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிர்" (குறுந்-135) என்பது ஒப்புநோக்கத்தகும். 'போயினர்ப் பிரிந்த' என்றது இயல்பின் விகாரம்; இரண்டன் தொகை யாதலின். மருள்-மயக்கம். பிரிவினேய் என்புழி இன் தவிர்வழிச் சாரியை. மாசுணம்–பெரும் பாம்பு. பிரிவாற்ருமையாகிய துயர் மிகுதி புலப்பட அதனைப் பாம்பாக உருவகம் செய்தார். மாரி இடப்பன்மையால் பலவாதல் பற்றிப் பொருவின எனப் பன்மையாற் கூறினர். (22)

4275. முழங்கின முறைமுறை மூரி மேகநீர்
வழங்கின மிடைவன மான யானைகள்
தழங்கின பொழிமதத் திவலை தாழ்தரப்
புழுங்கின வெதிரெதிர் பொருவ போன்றவே.

முழங்கின முறை முறை மூரிமேகம், நீர்
வழங்கின, மிடைவன—மான யானைகள்,
தழங்கின பொழிமதத் திவலை தாழ்தரப்
புழுங்கின எதிர் எதிர் பொருவ போன்றவே.

பொ :—பெரிய மேகங்கள் முறைமுறையே முழங்கி, நீர்த்தாரைகளைச் சொரிந்து கொண்டு நெருங்குபவை,—பெரிய யானைகள் பிளிறிக்கொண்டு, தம் உறுப்புகள் பொழியும் மதநீர்த் திவலைகள் சிந்தச் சினந்து எதிர் எதிர் நின்று போர் செய்வனவற்றை ஒத்தன.

கு :—மூரி, மானம்,...பெருமை. மேகங்கள் முழங்கி நீர் வழங்கி மிடையும் தோற்றம்,—யானைகள் பிளிறிக்கொண்டு மதநீர் சிந்திக் கொண்டு போர்செய்வதைப் போன்றிருந்தது என்க.

இது ஒருவயிற் போலியுவமை, "நிழற்கோபமல்க நிறை மலர்ப் பூங் காயா, சுழற்கலவ மேல் விரித்த தோகை—தழற்குலவு, தீம்புகை யூட்டுஞ் செறிகுழலார் போலுங் கார்" (தண்டி - உதாரணச் செய்யுள்) என்பது போல. கார், 'யானைபோல் கருகி அவை பிளிறல் போல் முழங்கி, அவை மதம் சொரிவதுபோல் நீர் வழங்கி அவை பொருவதுபோல் நெருங்கின எனப் பலவிடத்து உவமை யுருபுகளை விரித்துக் கூற வேண்டியிருக்க அவற்றையெல்லாம் ஒரு

தொடராக்கி ஓரிடத்து மட்டும் உவம உருபு விரித்துள்ளமை காண லாம். புழுங்குதல், சினத்தலை யுணர்த்தியது, ‘உள்வேர்ப்பர்’ (குறள் - 487) என்புழிப்போல. முழங்கின, வழங்கின, தழங்கின, புழுங்கின என்பன முற்றெச்சங்கள். மிடைவன, பொருவ, வினைப் பெயர்கள். யானைகள் கருமையாலும் பருமையாலும் மேகங்கட்கு உவமையாயின. யானைகளின் பிளிறல் இடி முழக்கத்திற்கும், அவற் றின் மதநீர் மழை நீர்க்கும், அவை பொருதல் அம்மேகங்கள் நெருங்குதற்கும் உவமையாயின. (23)

**4276.** விசைகொடு மாருத மறித்து வீசலா
லசைவுறு சிறுதுளி யப்பு மாரியி
னிசைவுற வெய்வன வியைவ வாயிருந்
திசையொடு திசைசெருச் செய்த லொத்தவே.

விசைகொடு மாருதம் மறித்து வீசலால்,
அசைவுறு சிறுதுளி அப்பு மாரியின்,
இசையுற எய்வன இயைவவாய், இருந்
திசையொடு திசை, செருச் செய்தல் ஒத்தவே.

பொ :—காற்று மேகங்கொண்டு மாறி மாறி வீசுதலால், (காற்று வீசும் திசையில்) அசைகின்ற சிறிய துளிகளின் தோற்றம், அம்பு மழையினால் எதிர்த் திசையில் பொருந்துமாறு எய்வனவும் (எதிர்த் திசை எய்வனவற்றை) ஏற்பனவுமாய்ப் பெருந் திசையோடு பெருந் திசை போர் செய்வதைப் போன்று விளங்கின.

கு :—கீழ்க்காற்று அடிக்கும்போது மேற்குத் திசை நோக்கி அசையும் நீர்த்துளிகளின் தோற்றம் அம்மேலைத் திசைமேல் கீழ்த் திசை அம்பு மாரி எய்வன போன்றும், மேலைக் காற்று அடிக்கும் போது கிழக்குத் திசை நோக்கி அசையும் நீர்த்துளிகளின் தோற்றம், மேலைத் திசை எய்த அம்பு மாரியை அக்கீழைத் திசை தன்மேல் இயைத்து (ஏற்று)க் கொள்வது போன்றும் இருந்தன என்றவாறு. ஏனைத் திசைக்கும் ஒக்கும். அப்புமாரி என்பது இரட்டுற மொழி தலாய் அம்புமழையென்றும் நீர் மழை என்றும் பொருள்பட நின்றது. ‘மாருதம் வீசலால் அசைவுறு சிறுதுளி’ என இயையும். அப்புமாரியினால் எய்வன; ‘அப்பு மாரியினை இயைவ’ எனத் தனித் தனி இயையும். இன் ஏதுப் பொருளதாகவும் சாரியையாகவும் நின்றது. எய்வனவும் இயைவனவுமாய் என உம்மை விரிக்க. ஒவ்வொரு திசையும், பிற திசைமேல் எய்தலும் பிறதிசை எய்த வற்றை இயைதலும் ஆகிய இரு செயல்களுமுடையன. அசைவுறு

சிறுதுளி ஒத்தவே என இயையும். இயல்பாகக் காற்றால் அசைவுறு மழைத் துளிகளைத் திசையொடு திசை எய்யும் அப்புமாரியாகக் கூறியது தற்குறிப்பேற்ற அணி ஆகும். அப்புமாரி அப்புமாரி போன்ற என்ற சிலேடை நயமும் காணலாம். அம்பு என்ற மென் றொடர்மொழி அப்பு என வன்றொடராயிற்று. சரமாரி என்பது போல, அப்புமாரி என்றார். செரு - போர். இருந்திசை - பெருந் திசை; அவை கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு என்பன. (24)

மரங்கள் பூத்தல்

4277. விழைவுறு பொருடரப் பிரிந்த வேந்தர்வந்
துழையுற வுயிருற வுயிர்க்கு மாதரின்
மழையுற மாமுக மலர்ந்து தோன்றின
குழையுறப் பொலிந்தன வுலவைக் கொம்பெலாம்.

விழைவுறு பொருள்தரப் பிரிந்த வேந்தர் வந்து
உழை உற, உயிர் உற உயிர்க்கும் மாதரின்,
மழை உற, மாமுகம் மலர்ந்து தோன்றின,
குழை உறப் பொலிந்தன உலவைக் கொம்பு எலாம்.

பொ:—யாரும் விரும்பத்தக்க பொருளை யீட்டிக் கொணரப் பிரிந்து பிறநாடு சென்ற தலைவர் பொருளீட்டி மீட்டு வந்து தம்மிடம் சேர்ந்தவுடன் (தம் பொய்யுடலில்) உயிர் பொருந்த மூச்சு விடுகின்ற கற்புடைப் பெண்டிர் (குழை முதலிய அணியுடன் பொலிந்து முக மலர்தல்) போல,-(மழைத்துளி பெறாது) உலர்ந்து கிடந்த மரக் கிளைகள் எல்லாம், மழை வந்தவுடன் உயிருற உயிர்த்துத் தளிர்கள் தளிர்த்துப் பொலிந்தனவாய்த் தம் சிறந்த முகப்பில் மலர்களை யுடையனவாய்த் தோன்றின.

கு:—முகமலர்ந்து தோன்றுதலும், குழையுறப் பொலிதலும் ஆகிய உவமேயத்துக்கு உரிய வினைகள் உவமைக் கண்ணும், உயிருற உயிர்த்தலாகிய உவமைக்குரிய வினை உவமேயத்தின் கண்ணும் சென்றியையும். இவ்வாறு இயைத்துக் கூறுதல் உண்டு என்பதை, "சமன் செய்து சீர்தூக்கும்" என்ற குறளுக்குப் (118) பரிமேலழகர் கூறிய உரையால் உணரலாம். 'முனிவரும் முன்னுவ பொன்னால் முடியும்' (திருக்கோவை - 332) ஆதலின், யாரும் விரும்பும் பொருள் என்பார் 'விழைவுறு-பொருள்' என்றார். 'பிரிந்த வேந்தர் வந்து உழையுற உயிருற உயிர்க்கும் மாதர்' என்றமையால், தலைவர் பிரிந்தக்கால் உயிர் நீங்கினாற்போன்று உயிர்ப்பற்று அணி நீக்கி முக மலர்ச்சியின்றித் தலைவியர் இருந்தமை பெற்றாம். 'பொருடரப்

போயினர்ப் பிரிந்த பொய்யுடல்' (22) என முன் கூறியுள்ளதும் நினையலாம். தலைவரைப் பிரிந்த தலைவியர் குழை முதலிய அணி களைக் களைந்திருப்பர்; "நெடுநீர் வார்குழை களைந்தெனக் குறுங்கண், வாயுறை யழுத்திய வறிது வீழ்காதின்" (நெடுநல்வாடை - 139) எனப் பாண்டிமாதேவியின் நிலையைக் கூறியிருத்தல் காணலாம். அவ்வாறு களைந்த குழை முதலிய அணிகளைத் தலைவர் வந்தவுடன் அணிந்து பொலிவர் தலைவியர் என்க. குழை - தளிர், காதணி. 'முல்லை வைந்நுனை தோன்ற இல்லமொடு பைங்காற் கொன்றை மென்பிணி அவிழ' (அகநா - 4) எனக் கார்காலத்து மரங்கள் பூக்கும் நிலையை யுணர்த்துதல் காணலாம். வேந்தர் வந்ததுபோல மழை வந்தது; தலைவியர் உயிருற உயிர்த்துக் குழையுறப் பொலிந்து முக மலர்தல் போல மரக்கிளைகளும் குழையுறப் பொலிந்து முகம் மலர்ந்து தோன்றின என்றது உவமையணி. குழையுறப் பொலி தலும் முக மலர்ந்து தோன்றுதலும் இரட்டுற மொழிதலாய் மாதர்க் கும் ஏற்புடைத்தாயின. "உயிரனைய கொழுநர்வர......ஒளி சிறந்து மெலிவகலுங் கற்பினர்போல், புண்டரிக முகமலர வகமலர்ந்து பொலிந்தன பூம்பொய்கையெல்லாம்" (பால - 715) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். (25)

**4278.** பாடலம் வறுமை கூரப்
★ பகலவன் பசுமை கூரக்
கோடல்கள் பெருமை கூரக்
குவலயஞ் சிறுமை கூர
வாடின மயில்கள் பேசா
தடங்கின குயில்க ளன்பர்
கேடுறத் தளர்ந்தார் போன்றும்
திருவுறக் கிளர்ந்தார் போன்றும்.

பாடலம் வறுமை கூரப்,
பகலவன் பசுமை கூரக்,
கோடல்கள் பெருமை கூரக்,
குவலயம் சிறுமை கூர
ஆடின மயில்கள்; பேசாது
அடங்கின குயில்கள்—அன்பர்
கேடுறத் தளர்ந்தார் போன்றும்,
திருஉறக் கிளர்ந்தார் போன்றும்.

பொ :—பாதிரி மரம் மலர்கள் இன்றி வறுமை மிக்கதாகவும், சூரியன் (மேகங்களால் மறைப்புண்டு ஒளி மழுங்கிக்) குளிர்ச்சி மிக்க தாகவும், வெண்காந்தள் மலர்கள் பூத்துப் பெருமை மிக்க தாகவும், குவளை மலர்கள் குவிந்து சிறுமை மிக்கதாகவும், தம் அன்பு உடையார் வறுமை அடையத் தளர்ந்தாரைப் போன்றும், தம் அன்பர் செல்வம் அடைய மகிழ்ந்தாரைப் போன்றும், தம் அன்பிற் குரிய சூரியன் கேடு அடையக்கண்டு குயில்கள் பேசாது அடங்கின; தம் அன்பிற்குரிய கார்காலம் ஆக்கம் பெற்றிருப்பதைக் கண்டு மயில்கள் ஆடின.

கு :—கார்காலமாதலின், வேனிலிற் பூக்கும் பாதிரி பூவாது வறுமை கூர்ந்தது 'வரிநிறப் பாதிரி வாட வளிபோழ்ந்'தயிர் மணற் றண் புறவினுலி – புரள, உருமிடி வானமிழிய" (கார்நாற்பது - 3) என்றதும் காண்க. வெய்யவனுகிய பகலவன் பசுமை கூர்தலாவது தன் ஒளி மழுங்கிக் குளிர்ந்தவனுதல். "கடுங்கதிர் நல்கூரக் கார் செல்வமெய்த" (கார்நாற்பது - 2) என்றது காணலாம். வறுமை பசுமை எனச் சொல் முரண்பட்டதேனும் பகலவன் பசுமை கூர்தல், வறுமை கூர்தலேயாம். வறுமை, பசுமை, பெருமை, சிறுமை, ஆட, அடங்கின என முரண்படத் தொடுத்தமையின் முரண்டொடை எனப்படும்; விரோத அணி என்பர் அணி நூலோர். "அன்பர் கேடுறத் தளர்ந்தார் போன்று குயில்கள் பேசாது அடங்கின" எனவும், 'அன்பர் திருவுறக் கிளர்ந்தார் போன்று மயில்கள் ஆடின' எனவும் எதிர் நிரல் நிறையாக இயையும். மயில்கள் காரின் செல்வங் கண்டு கிளர்ந்து ஆடின; குயில்கள் வேனலஞ் செல்வன் கேடுறக் கண்டு பேசாது அடங்கின என்றவாறு. சுக்கிரீவன் திருவுறக் கிளர்ந் தாடிய வானரங்களைப் போன்று மயில்கள் ஆடின; அன்புக்குரிய சீதை கேடுறத் தளர்ந்து பேசாது ஒடுங்கியுள்ள இராம இலக்குவர் போன்று, குயில்கள் பேசாது அடங்கின; எனக் கதைத் தொடர்பு தோன்றக் கூறுதலும் ஆம். இனி, 'அன்பர் கேடுறத் தளர்ந்தார் போன்று பகலவன் பசுமை கூர்தலால் பாடலம் வறுமைகூர, குவ லயம் சிறுமைகூரக், குயில்கள் பேசாதடங்கின; எனவும் அன்பர் திரு வுறக் கிளர்ந்தார் போன்று காரின் வளங்கண்டு கோடல்கள் பெருமைகூர, மயில்கள் ஆடின எனவும் கூறலாம். மயில்கள் ஆடுதல் காரினைக் கண்டே ஆதலின், காரின் செல்வங்கண்டு என்ற காரணம் அனுமான அளவையால் வருவிக்கப்பட்டது. குயில்கள் பேசாதடங்கு தற்குக் காரணம் பகலவன் பசுமை கூர்தல் ஆம். குவலயம்-குவளை. "கூரெயிற்றியர் கண்ணெனக் குவிந்தன குவளை" (36) எனப் பின் இப்படலத்தே கூறுதல் காண்க. (26)

### செங்காந்தளின் மலர்ச்சி

4279. நானிறச் சுரும்பும் வண்டு
நவமணி யணியிற் சாரத்
தேனுற மலர்ந்த சைந்த
சேயிதழ்க் காந்தட் செம்பூ
வேனிலை வென்ற தம்மா
காரென வியந்து நோக்கி
மானிலக் கிழத்தி கைகண்
மறித்தன போன்ற மன்னே.

நால் நிறச் சுரும்பும் வண்டும் நவமணி அணியின் சாரத்,
தேன் உற மலர்ந்து அசைந்த சேயிதழ்க் காந்தள் செம்பூ,
'வேனிலை வென்றது அம்மா, கார்' என வியந்து நோக்கி,
மாநிலக் கிழத்தி கைகள் மறித்தன போன்ற மன்னே.

பொ :—பலவகையான வண்ணங்களையுடைய சுரும்புகளும் வண்டுகளும், நவமணிகளாலாய வளையல் முதலிய அணிகளைப் போலத் தம்பால் சார்ந்து தங்காநிற்கத் தேன் மிக்குப் பொருந்த மலர்ந்து அசைந்த சிவந்த இதழ்களையுடைய செங்காந்தள் மலர்கள், —பெரிய நிலமாகிய பெண், 'கார்காலம், வேனிற்காலத்தை வென்று விட்டதே அம்மா !' என வியப்புடன் பார்த்து அசைத்தனவாகிய கைகளைப் போன்றன.

கு :—நானிறம் என்றது பல நிறம் என்னும் பொருளது. சுரும்பும் வண்டும் வெவ்வேறினம் ஆதல்தோன்ற இரண்டாகக் கூறினர். "சுரும்புகாள் ! வண்டுகாள் ! மகிழ்தேனினங்காள் ! மது, உண்டு தேக்கிடும் ஒண்மிஞிறீட்டங்காள்!" (சீவக - 892) எனச் சீவகன் நால் வகையான வண்டினங்களை விளித்தமை இங்கு நினைவுகூர்தல் தகும். சுரும்பும் வண்டும் கூறித் தேனும் மிஞிறும் இனம் பற்றிக் கொள்ள வைத்தார் எனக் கொள்ளலுமாம். காந்தளில் தேனுண்ண மொய்க்கும் வண்டினங்களின் தோற்றம், கையில் அணிந்த நவமணிகள் பதித்த வளையும் மோதிரமுமாய அணிகள் போலத் தோன்றின ; பூமி தேவியின் கைகளுக்குக் காந்தட் பூக்களை உவமை கூறுகின்றார் ஆதலின், அம் மண்மகள் கை வெறுங்கையாக இருத்தலாகாது என்று வண்டினங்களை நவமணியணியாகக் கூறினர். "வளைகள் காந்தளிற் பெய்தன வனைய கைம்மயிலே" (2163) என முன் உவமை கூறி யிருத்தல் காணலாம். 'சிலம்பு கமழ்காந்தள் நறுங்குலையன்ன நலம் பெறுகை' (ஐங்குறு - 293) என்பர் கபிலர். காந்தள் மலரில் தும்பி மணிபோலத் தோன்றும். "அலங்கு குலைக்காந்தள், நறுந்தா தூதுங்

குறுஞ்சிறைத் தும்பி பாம்புமிழ் மணியிற்ரேன்றும்" (குறுந் - 239) என்றது காணலாம். வண்டினம் சார்தலால் காந்தள் அரும்பு மலர்ந்து அசையும் தோற்றம், நிலமகள், "வேனிலை வென்றதம்மா கார்!" என வியந்து தன் கைகளை யசைத்தாற் போன்றிருந்தது என்பது தற்குறிப் பேற்றம். கையசைத்தல் வியப்பிற்கறிகுறி. பெண்டிர் கைக்கு உவமையாகுங் காந்தள் மலரை இங்கு நிலமகள் கையாகக் கூறியவாறு. மா நிலம் என்பது எதுகை நோக்கி மானிலம் எனவாயிற்று. கார் வேனிலை வென்றது என்றது, வேனிலின் வெப்பம் அடியோடு அழியச்செய்து குளிர் மிகச் செய்ததை. மலர்ந் தசைந்த காந்தட் செம்பூ நிலக்கிழத்தி மறித்தன கைகள் போன்ற என இயையும். செங்காந்தட்பூ என்க. (27)

வெண் காந்தள்

4280. வாளெயிற் றரவம் தம்போல்
வான்றலை தோன்ற வார்ந்த
தாளுடைக் கோட றம்மைத்
தழீஇயன காத றங்க
மீளல வவையு மன்ன
விழைவின வுணர்வு வீந்த
கோளர வென்னப் பின்னி
யவற்ரெடுங் குழைந்து சாய்ந்த.

வாள் எயிற்று அரவம், தம்போல்
வான்றலை தோன்ற வார்ந்த
தாளுடைக் கோடல் தம்மைத்
தழீஇயன, காதல் தங்க
மீளல; அவையும் அன்ன
விழைவின உணர்வு வீந்த
கோள் அரவு என்னப் பின்னி
அவற்ரெடுங் குழைந்து சாய்ந்த.

பொ :—வாள்போன்று கூரிய பற்களையுடைய பாம்புகள், தம்மைப் போல மேல் உயர்ந்த (மலராகிய) தலை தோன்றுமாறு நீண்ட தண்டினையுடைய வெண்காந்தட் செடிகளைக் காதல் பொருந்தத் தழுவியனவாய் மீளாமல் கிடந்தன; அவ் வெண்காந்தட் செடிகளும், அத்தகைய விருப்பமுடையனவாய்க் காமத்தால் உணர்விழந்த

கொடிய பெண்பாம்புகளே என்னுமாறு அப்பாம்புகளோடும் பின்னிக் கொண்டு குழைவுடையனவாய்ச் சாய்ந்தன.

கு :—வெண்காந்தள் செடிகட்கும் பாம்புகட்கும் வேறுபாடின்மை காட்டியவாறு. 'வாளெயிற்றரவம், கோடல் தம்மைக் காதல் தங்கத் தழீஇயனவாய் மீளலவாக; அவையும் கோளரவென்னப் பின்னி அவற்ருெடுங் குழைந்து சாய்ந்த' என இயையும். "அணர்த்தெழு பாம்பின் றலைபோல் புணர்கோடல் பூங்குலை யீன்றபுறவு" (கார் நாற்பது - 11) "கடிசுனைக் கவினிய காந்தளங் குலையினை அருமணி யவிருத்தி யரவு நீருணல் செத்து" (கலி - 45) 'அரவுபைத் தாவித் தன்ன வங்காந்த ளவிழ்ந்தலர்ந்து' (சீவக-1651) 'கோடலரவீனும்' (சம்பந்தர் தேவாரம் - 3-79-11) என்பன இங்கு ஒப்புநோக்கத்தகும். இதனுல் வெண்காந்தட் பூங்குலை பாம்பின் தலைபோலத் தோன்றும் என்பது புலனும். நீட்சியாலும் மேலுள்ள பூவாலும் வெண்காந்தட் செடி பாம்புபோலத் தோன்றின என்பார், 'வான்றலை தோன்ற வார்ந்த தாளுடைக் கோடல்' என்ருர். வார்ந்த - நீண்ட. தாள் - தண்டு. வெண்காந்தட் செடியைப் பாம்பு என மயங்கிப் பாம்புகள் அவற்றைக் காதல் பொருந்தத் தழுவியனவாய் அந்நிலையில் மீளாமல் பின்னிக்கிடந்தன; அவ் வெண்காந்தட் செடிகளும் அவ்வாண் பாம்புகளைப் போன்ற விருப்புடையனவாய்க் காமத்தால் உணர் விழந்த பெண் பாம்புகளே என்று எண்ணுமாறு அவ் வாண்பாம்புகளோடு பின்னிக்கொண்டு குழைந்து சாய்ந்தன என்றது மயக்கவ்வணி.

(28)

### இந்திர கோபம்

4281. எள்ளிட விடனு மின்றி
யெழுந்தன விலங்கு கோபம்
தள்ளுறத் தலைவர் தம்மைப்
பிரிந்தவர் தழுவத் தூமக்
கள்ளுடை யோதி யார்தங்
கலவியிற் பலகாற் கான்ற
வெள்ளடைத் தம்பற் குப்பை
சிதர்ந்தென விரிந்த மாதோ.

எள் இட இடனும் இன்றி எழுந்தன இலங்கு கோபம்—
தள்ளுறத், தலைவர், தம்மைப் பிரிந்தவர் தழுவத் தூமக்
கள்ளுடை ஓதியார்தம் கலவியில், பலகால் கான்ற
வெள்ளடைத் தம்பல் குப்பை சிதர்ந்தென, விரிந்த மாதோ.

பொ :—ஓர் எள்ளைப் போடுதற்கும் இடம் இல்லாதபடி மிக்கு எழுந்தனவாகிய செவ்வொளியுடன் விளங்கும் தம்பலப்பூச்சிகள், (பிரிவாற்ருமையால்) தடுமாறும்படி தம்மைப் பிரிந்தவர்களாகிய தலைவர்கள், (கார்காலம் வந்தவுடன் விரைந்து வந்து) தழுவ, அகிற்புகையூட்டப்பெற்றதும், (சூடிய மலரால்) தேனையுடையதுமான கூந்தலையுடைய தலைவியர், தம் கலவிக்காலத்தில் பலமுறை (மென்று) உமிழ்ந்த வெற்றிலைத் தம்பலங்களின் திரள் சிதறிக் கிடந்தாற் போலப் (பலவிடத்தும் ஊர்ந்து) பரவின.

கு :—கோபம் விரிந்த என இயையும். கார்காலம் துவங்கியவுடன் முல்லை நிலத்தில் துடும் எனத் தோன்றியூரும் இயல்புடைய தம்பலப் பூச்சிகள், பெண்டிர் உமிழ்ந்த தம்பலம் சிதர்ந்தனபோல விரிந்தன என்றவாறு. “பவழஞ் சிதறியவைபோலக் கோபம் தவழும்” (கார் நாற்-5) என்றது காண்க, அப் பூச்சிகளின் மிகுதி தோன்ற, எள்ளிட இடனுமின்றி யெழுந்தன இலங்கு கோபம், என்ருர். ‘எள்ளிடவும் இடன் இன்றி’ என இழிவு சிறப்பும்மையைப் பிரித்துக் கூட்டுக. செம்பட்டின் ஒளியுடன் விளங்குதல் பற்றி ‘இலங்கு கோபம்’ எனச் சிறப்பித்தார். இந்திர கோபம் என்பது இங்கு முதற்குறையாய்க் ‘கோபம்’ என நின்றது. தள்ளுறல் - தடுமாறல். ‘தள்ளித்தளர் நடையிட்டு’ (திவ் - பெரியாழ்வார் - 2-10-6) என்புழியும் இச் சொல் இப்பொருள் படுதல் காணலாம். தள்ளுறத் தம்மைப் பிரிந்தவர் ஆகிய தலைவர் என இயையும். பிரிந்தவர் தலைவர் என்பது இரு பெயரொட்டு. இனி, தலைவர், தம்மைத் தள்ளுறப் பிரிந்தவராய்ப் பின் கார்காலத்து வந்து தழுவ என வேண்டுஞ் சொல் வருவித்து இயைத்தலும் ஆம். தூமம் - அகில் முதலியவற்றின் புகை; இது கூந்தலுக்கு ஊட்டப்பெறுவது. “பல்லிருங் கூந்தற் சின்மலர் பெய்ம்மார், தண்ணறுந் தகரமுளரி நெருப்பமைத்து, இருங்காழகிலொடு வெள்ளயிர் புகைப்ப” (நெடுநல்வா - 54-56) என்பது காண்க. கள் - தேன். ஓதி - கூந்தல். தலைவரைப் பிரிந்திருந்தபோது அணி செய்யப் பெருதிருந்த தலைவியர் கூந்தல் அத்தலைவர் வந்தவுடன் புகையும் பூவும் பெற்றுப் பொலி வெய்தினமை தோன்றத் ‘தூமக்கள்ளுடையோதியார்’ எனத் தலைவியரைக் குறிப்பிட்டார். பலநாள் பிரிந்திருந்து கூடியவராதலின் அன்புமீக் கூர்ந்து தழுவுந்தோறும் தம்பலம் மென்று உமிழ்ந்தமை தோன்றப் ‘பல்கால் கான்ற’ என்ருர். கான்ற—உமிழ்ந்த. வெள்ளடை - வெற்றிலை. தம்பலம், தம்பல் எனக் கடை குறைந்தது. தம்பலப்பூச்சி தம்பலம் சிதர்ந்தென விரிந்த என்ற சொல் நயமும் காணலாம். வெற்றிலைப்பாக்கு மென்று துப்பிய எச்சம் தம்பலம் எனப்படும். (29)

பொன்மலர் கொணரும் நன்மலையருவி

4282. தீங்கனி நாவ லோங்குஞ்
சேணுயர் குன்றிற் செம்பொன்
வாங்கின கொண்டு பாரின்
மண்டுமால் யாறு மான
வேங்கையின் மலருங் கொன்றை
விரிந்தன வீயு மீர்த்துத்
தாங்கின கலுழி சென்று
தலைமயக் குறுவ தம்மில்.

தீங்கனி நாவல் ஓங்கும் சேண் உயர் குன்றின், செம்பொன் வாங்கின கொண்டு, பாரில் மண்டும் மால்யாறு மான, வேங்கையின் மலரும், கொன்றை விரிந்தன வீயும், ஈர்த்து, தாங்கின கலுழி, சென்று தலைமயக் குறுவ தம்மில்.

பொ :—இனிய பழங்களையுடைய நாவல் மரம் உயர்ந்து வளர்ந்திருக்கப்பெற்ற வானளவு உயர்ந்த மேருமலையிலிருந்து செம்பொன்னை இழுத்துக்கொண்டு பூமியின்கண் விரைகின்ற பெரிய (சம்பூ என்னும்) ஆற்றைப்போல,—வேங்கையின் (பொன்னிற) மலர்களையும் கொன்றையின் (பொன்னிறத்தோடு) மலர்ந்த மலர்களையும் இழுத்துக்கொண்டு தம்மேல் தாங்கி வருகின்ற அருவிகள் தரையிற் சென்று தமக்குள் (ஒன்றோடொன்று) கலப்பனவாயின.

கு :—கிட்கிந்தையிலுள்ள மலையருவிகள் அங்குள்ள பொன்னிறமான வேங்கை மலரையும் கொன்றை மலரையும் அடித்துக்கொண்டு வருவது, மேருமலையிலுள்ள பொன்னை அடித்துக்கொண்டு வரும் சம்பூ என்னும் ஆறு போன்றுளது என்றவாறு. நாவல் கனியின் சாறு ஊறிய இடத்தில் பொன் தோன்றும்; அது சாம்பூநதம் என்று பெயர் பெறும். 'நாவலோடு பெயரிய பொலம்புனை அவிரிழை' (திருமுருகாற்றுப் - 18) என அப் பொன்னாலியன்ற அணி சிறப்பிக்கப்படுதல் காணலாம். மேருமலையில் இயல்பாகவுள்ள பொன்னையும் நாவற்கனியின் சாற்றால் விளைந்த பொன்னையும் ஈர்த்துக்கொண்டு வரும் சம்பூ என்னும் ஆறுபோல இம்மலை யருவிகளும் வேங்கை மலரும் கொன்றை மலரும் ஆகிய இருதிறப் பொன்னிற மலர்களை ஈர்த்துக் கொண்டு வந்தன என்க. வேங்கை குறிஞ்சிக்கும், கொன்றை முல்லைக்கும் உரியவாயினும், அவ்விரு நிலங்களும் அடுத்தடுத்திருக்கும் ஒற்றுமை பற்றி. மலையருவி அவ்விருநிலத்து மலர்களையும் ஈர்த்து வருவதாகக் கூறினர்; அங்ஙனங் கூறுங்காலும் மலைக்குரிய வேங்கை மலரை முன்னும் காட்டிற்குரிய கொன்றை மலரைப் பின்னும் ஈர்த்து

வந்ததாகக் கூறிய மரபு நோக்குதற்குரியது. மலையில் பலவிடங்களில் தோன்றும் அருவிகள் தரையில் வந்து ஒன்ருய்க் கலந்து ஆருகப் பெருகும் இயல்பு தோன்றக் 'கலுழி சென்று தலை மயக்குறுவதம்மில்' என்ருர். கலுழி - அருவி; கலங்கிய நீரையுடையது என்ற காரணம் பற்றி வந்த பெயர். தலைமயக்குறுவ - கலப்பன. 'சாறும் வேள்வியுந் தலை மயங்குமே' (பால - 87) என்றதும் காண்க. வாங்கின, முற்றெச்சம்; இழுத்துக்கொண்டு என்னும் பொருளது. 'தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது' (அகநா - 36) என்புழியும் அப்பொருள் படுதல் காணலாம். இந் நாவல் மரம் மேருமலையின் தென் பகுதியிலுள்ளது; அம்மரத்தால் தென் பகுதியிலுள்ள இத் தீவு நாவலந் தீவு எனப் பெயர் பெறும் என்பது புராண மரபு. "பட்ட மார்தரு மாகரி கனிச் சாறு, பெட்ட சம்புமா நதியென வலங்கொடு பெருகி, உட்டெளிந்து பொன் மேருவைச் சுலாய் இனிதோடும்;" "அதிருமப் புனலருந்தின ரருங்கரையசும்பு, ததையும் வெங்கதிர் காற்றுற வுலர்ந்து நற்சாம்பூ நதமெனும் பொனும்" என்ற பாகவதமும் காண்க. (30)

### காந்தளில் கொன்றையும் கோபமும்

4283. நன்னெடுங் காந்தட் போதி
 னறைவிரி கடுக்கை மென்பூத்
துன்னிய கோபத் தோடுந்
 தோன்றிய தோற்றந் தும்பி
யின்னிசை முரல்வ நோக்கி
 யிருநில மகள்கை யேந்திப்
பொன்னெடுங் காசை நீட்டிக்
 கொடுப்பதே போன்ற தம்மா.

நல்நெடுங் காந்தள் போதில்,
 நறை விரி கடுக்கை மென்பூ,
துன்னிய கோபத் தோடும்
 தோன்றிய தோற்றம்—தும்பி
இன் இசை முரல்வ நோக்கி,
 இருநில மகள் கைஏந்திப்,
பொன்னெடும் காசை நீட்டிக்
 கொடுப்பதே போன்றது அம்மா.

பொ :—அழகிதாய் நீண்ட தண்டில் உள்ள செங்காந்தளின் பேரரும்பு வாசனையோடு மலர்ந்த கொன்றையின் மெல்லிய மலர், அங்கு வந்தடைந்த தம்பலப் பூச்சியோடும் காணப்பட்ட காட்சி,— வண்டு இனிய இசை முரல்வதைக் கேட்டுப் பெரிய பூமியாகிய பெண், (மகிழ்ந்து அப்பாடற்குப் பரிசிலாக) பொன்னேடு பவழத்தை யும் கையில் ஏந்தி நீட்டிக் கொடுப்பதைப் போன்றுளது.

கு :—நீண்ட தண்டில் தோன்றியிருந்தமை பற்றி நெடுங் காந்தட் போது' என்றார். போது - பேரரும்பு. நறை - மணம். கடுக்கை - கொன்றை. காந்தட்போதால் ஏந்துதற்குரிய மென்மை யுடைமை தோன்றக் 'கடுக்கைமென்பூ' என்றார். கொன்றை உயர்ந்த மரமாதலின் அக்கொன்றையின் மலர் சிறிய காந்தட் செடி யிலுள்ள மலரில் வீழ்தல் இயல்பு; இந்திரகோபம் அங்கு இருத் தற்கு இயை பென்னை ? என்ற வினவிற்கு விடைதருவார்போலத் 'துன்னிய கோபம்' என்றார். எங்கும் ஊர்ந்து செல்லும் இயல் புடைய தம்பலப் பூச்சி அக்காந்தட்போதிலும் துன்னியதில் வியப் பில்லையன்றே ? வண்டு தேனாடி வந்து பாடுவதற்குரியதும் கொன்றை மலரையும் கோபத்தையும் விழாது தாங்குதற்குரியதும் போதே யாதலான் 'காந்தட் போதின்' என்று பேரரும்பாம் நிலை யினையே கூறினார். நோக்கி என்பது, கேட்டு என்னும் பொருளது; ஒரு பொறிக்குரிய வினையை மற்றொரு பொறிக்குரிய வினையாகக் கூறுவதுண்டு. 'நாற்றங் கேட்டலும்' (பால - 405) எனச் செவிக் குரிய வினையை மூக்கிற்குரிய வினையாகக் கூறியிருத்தலும் காண லாம். இசை, கேட்டற்குரியதன்றி நோக்குதற்குரியதன்மையும் நினைக. காந்தட்போதில் தேனுகர வந்த தும்பி முரலா நிற்க நீண்ட தண்டில் அரும்பிய காந்தட்போதில் பொன்னிறக் கொன்றை யும் பவழநிறக் கோபமும் இருக்கும் தோற்றம், நிலமாகிய பெண், வண்டின் இசை கேட்டு மகிழ்ந்து அதற்குப் பரிசிலாகப் பொன்னையும் பவழத்தையும் எடுத்துக் கைநீட்டிக் கொடுப்பதைப் போன்றிருந்தது என்றது, தற்குறிப் பேற்ற வணி. "வரை சேரும் முகில் முழவ மயில்கள் பல நடமாட வண்டு பாட, விரை சேர் பொன் னிதழிதர மென்காந்தள் கையேற்கும் மிழலை யாமே" (1-132-4) என்ற தேவார மும் இங்கு ஒப்புநோக்கத் தகும்; காந்தட்போது, நிலமகள் பரிசிலை நீட்டிக் கொடுக்கும் கை; கொன்றைப் பூ பொன்; தம்பலப் பூச்சி பவழமணி; தும்பி இசைப் புலவன். பரிசில் கொடுக்குங்கால் கையை நீட்டிக் கொடுக்கும் இயல்பு தோன்ற நீட்டிக் கொடுப்பதே' என்றார். உவமேயத்திலும் நெடுங் காந்தட்போது' என்று கூறியது இம்மரபு விளக்கவேயாம். காசு - மணி; இங்குப் பவழ மணியை யுணர்த்தியது. கோபத்திற்கு உவமையாகத் தக்கது, அப்பவழமே யாதல் நினைக. "மணிமிடை பவளம் போல அணி மிகக் காயாஞ் செம்மல் தாஅய்ப்

பலவுடன், ஈயல் மூதாய் ஈர்ம்புறம் வரிப்ப" (அகநா - 304) என்று ப்வளத்தையே தம்பலப்பூச்சிக்கு உவமை கூறியிருத்தல் காணலாம். அம்மா வியப்பிடைச் சொல். (31)

### மலையில் நாடக அரங்கு

4284. கிளைத்துளை மழலை வண்டு
கின்னர நிகர்த்த மின்னும்
துளிக்குரன் மேகம் வள்வார்த்
தூரியந் துவைப்ப போன்ற
வளைக்கையர் போன்ற மஞ்ஞை
தோன்றிக ளரங்கின் மாடே
விளக்கின மொத்த காண்போர்
விழியொத்த விளையின் மென்பூ.

கிளைத்துளை மழலை வண்டு
கின்னரம் நிகர்த்த, மின்னும்
துளிக் குரல் மேகம் வள்வார்த்
தூரியம் துவைப்ப போன்ற;
வளைக்கையர் போன்ற, மஞ்ஞை;
தோன்றிகள் அரங்கின் மாடே
விளக்கு இனம் ஒத்த; காண்போர்
விழி ஒத்த, விளையின் மென்பூ.

பொ :—மூங்கிலின் துளையில் ஊதும் இனிய வண்டுகளின் ஓசைகள், கின்னர யாழின் ஓசையை ஒத்தன; மின்னும் தன்மையையும் நீர்த் துளிகளையும் உடைய மேகத்தின் இடிக்குரல்கள், வலிய தோற் கயிற்றால் கட்டப்பட்ட மத்தளம் ஒலிப்பதைப் போன்றன. மயில்கள் நடமாடுதல் வளையணிந்த கையையுடைய நடன மங்கையரின் நடம் போன்றிருந்தன; செங்காந்தள் மலர்கள், நாடக அரங்கின் பக்கங்களில் ஒளிவீசும் விளக்கினத்தைப் போன்றிருந்தன; கருவிளையின் மெல்லிய மலர்கள் அந்த நாடகத்தைக் காணும் மக்களின் கண்கள் போன்றிருந்தன.

கு :—மூங்கிலில் துளைகளைச் செய்வதும் அதில் நுழைந்து தங்குவதும் வண்டுகளின் இயல்பு. வண்டின் ஒலியே யாழோசை போன்றது ஆயினும் அவ்வண்டு மூங்கிலின் துளையருகிற் சென்று ஊதும்போது அவ்வோசை மேலும் சிறந்து காட்டுதலின் 'கிளைத் துளை மழலை வண்டு' என்றார். கிளை - மூங்கில். மழலை இங்கு இனி

மையை உணர்த்தவந்தது. கின்னரம், ஒருவகை யாழ். "தந்தங் கின்னரந் தொடுகிலோ மென்றனரே" (திவ்-பெரியாழ்வார் - 3-6-5) என்றது காணலாம். "ஆடமைக்குயின்ற அவிர்துளை மருங்கின் கோடை யவ்வளி குழலிசையாகப், பாடின்னருவிப் பனிநீரின்னிசைத் தோடமை முழவின் றுதைகுரலாகக் கணக்கலை யிகுக்குங் கடுங்குரற் றூம்பொடு மலைப்பூஞ் சாரல் வண்டு யாழாக, வின்பல் லிமிழிசை கேட்டுக் கலிசிறந்து, மந்தி நல்லவை மருள்வன நோக்கக் கழைவள ரடுக்கத் தியலி யாடுமயில், நனவுப்புகு விறலியிற் றோன்றும்" (அகநா-82) எனக் கபிலர் காட்டிய நாடக அரங்கினை அடியொற்றியெழுந்தது இப் பாடல். "தண்டலை மயில்களாடத் தாமரை விளக்கந் தாங்கக் கொண்டல்கள் முழவினேங்கக் குவளை கண் விழித்து நோக்கத் தெண்டிரை யெழினி காட்டத் தேம்பிழி மகரயாழின், வண்டுகளினிது பாட மருதம் வீற்றிருக்குமாதோ" (பால - 35) என்பதும் இங்கு ஒப்பு நோக்குதற்குரியதாகும். 'மேகக் குரல் தூரியம் துவைப்ப போன்ற' என்க. மேகக் குரலாவது இடி முழக்கம். வள் - வலிமை. 'வள்வார் முரசு' (பு-வெ. 3-2. கொளு) என்றது காண்க. துவைத்தல் - ஒலித் தல். நாடக மகளிர் அணிகலன்களால் தம்மை யழகு செய்து கொண்டு 'கைவழி நயனஞ் செல்லக் கண்வழி மனமுஞ் செல்ல ஆடும் இயல்பு தோன்ற அவரை 'வளைக்கையர்' என்ற பெயரால் குறிப்பிட்டார்; தோன்றி - செங்காந்தள் மலர். 'தீயினன்ன ஒண் செங்காந்தள்' (மலைபடுகடாம் - 145) 'சுடர்ப்பூந் தோன்றி' (குறிஞ் சிப் - 90) எனப்படுதலின் இங்கு விளக்கிற்கு உவமையாக்கினர். விளை என்பது கருவிளை என்பதன் முதற்குறை; கருங்காக்கணம்பூ. அது கண்ணுக்கு உவமையாக் கூறப்படுவதுண்டு. 'கருவிளை கண் மலர் போற் பூத்தன' (கார்நாற் - 9) 'கண்ணெனக் கருவிளை மலர' (ஐங்குறு - 464) என்பன காண்க. நாடக அரங்கிற்கு இயைபுடைய வற்றையே உவமஞ் செய்தலின் இது இயைபுவமையணி. ஒவ்வொரு தொடரிலும் உவமையுருபு பெய்தமையின் பலவயிற் போலி உவமை யும் ஆம். (32)

கூதாளம் மலர்தல்

4285. பேடையு ளிமிறும் பாயப்
பெயர்வுறப் பிறக்கு மோசை
யூடுறத் தாக்குந் தோறு
மொல்லொலி பிறப்ப நல்லா

ராடியற் பாணிக் கேற்கு
மரியவவ் வமிழ்தப் பாடற்
கோடியர் தாளங் கொட்டன்
மலர்ந்தகூ தாள மொத்த.

பேடையும் ஞிமிறும் பாயப்
பெயர்வுறப் பிறக்கும் ஓசை
ஊடுறத் தாக்கும் தோறும்
ஒல் ஒலி பிறப்ப, நல்லார்
ஆடு இயல் பாணிக்கு ஏற்கும்
அரிய அவ் அமிழ்தப் பாடல்
கோடியர் தாளம் கொட்டல்
மலர்ந்த கூதாளம் ஒத்த.

பொ :—(எதிர் எதிர் உள்ள கூதாள மலர்களில்) பெண் வண்டும் ஆண் வண்டும் (அம்மலர்கள்) அசையுமாறு (தெத்தே என முரன்று கொண்டு) பாய்தலால் பிறக்கும் ஓசை, (நட்டுவர்) ஒரு தாளத்தின் கண் மற்றொரு தாளம் பொருந்துமாறு தாக்குந்தோறும் அத்தாளத்தில் பிறப்பனவாகிய ஒல் என்னும் ஒலிகளை ஒத்தனவாக; (அவ்வாறு வண்டு பாய்தலால் அசைவுற்று எதிர் எதிர்) மலர்ந்த அக் கூதாள மலர்,—நாடக மகளிர் ஆடும் கூத்தின் இயல்பிற்கு ஏற்புடையதாய அந்த அரிய அமிழ்தம் போன்ற பாடலைப் பாடுகின்ற நட்டுவர் கொட்டும் தாளத்தை ஒத்து விளங்கின.

கு :—மேலைச் செய்யுளில் கார்காலத்து மயில்கள் ஆடும் நாடக அரங்கைக் கூறியவர், இச் செய்யுளில் அவ்வரங்கில் நிகழும் கூத்திற் கேற்பக் கூத்தர்கள் கொட்டும் தாளம் போலக் கூதாள மலர்கள் மலர்ந்தமை கூறுகின்றார். அவ்வாறு உவமை கூறுகின்றவர், அவ்வுவமைக்கேற்பத் தாளத்தின் அசைவும் ஓசையும் கூதாள மலர்கட்கும் உளவாகக் காட்டி உவமையணியைச் சிறப்பிக்கின்றார். எதிர் எதிர் பூத்த கூதாள மலர்களில் தேனருந்தப் பெண் வண்டும் ஆண் வண்டும் தனித்தனி பாய்கின்றன; அவை பாய்தலால் அந்த இரண்டு கூதாள மலர்கள் அசைவது, தாளங்களைத் தாக்குங்கால் உண்டாகும் அசைவு போன்றது எனவும், அவ்வண்டுகள் முரன்று கொண்டு அம்மலரிற் பாயுங்கால் பிறக்கும் ஓசை, தாளங்களைத் தாக்குங்கால் உளவாம் ஒல்லென்ற ஒலிகளைப் போன்றன எனவும், எதிர் எதிரே மலர்ந்த அக் கூதாள மலரின் தோற்றம் நட்டுவர் கொட்டும் தாளத்தை ஒத்தன எனவும் கொள்க. கூதாளமலர் தாளம் போன்ற வடிவமைப் புடைமையால் இங்ஙனம் கற்பனை செய்தார்.

கூதாளம் கூத்தர் தாளம் போன்றன என்ற சொல்லொப்புமையும் காணலாம். 'நல்லார் ஆடியற் பாணிக்கேற்கு மரியவவ் வமிழ்தப் பாடற் கோடியர்' எனக் கோடியர்க்கு அடையாக்குக. நல்லார் என்றது ஆடும் மகளிரை. பாணி - கூத்து. ஆடு பாணி இயலுக்கு ஏற்கும் பாடல் என்க. விறலியர் நடிக்குங்கால் பாடுபவரும் தாளங் கொட்டுபவரும் நட்டுவரே யாதலின், 'பாடற் கோடியர் தாளங் கொட்டல்' என்றார். பேடையும் ஞிமிறும் பெயர்வுறப் பாயப் பிறக்கும்-ஓசை, தாக்குந்தோறும் பிறப்பனவாகிய ஒல்லொலிகளை ஒத்தனவாக மலர்ந்த கூதாளம், கோடியர் கொட்டும் தாளத்தை ஒத்த என இயையும். இறுதியில் நின்ற 'ஒத்த' என்னும் சொல் ஒல்லொலி ஒத்த என மேலும் இயையும்; இறுதி நிலை விளக்கணி. கோடியர் தாளங்கொட்டலை ஒத்த என்றாரேனும் கோடியர் கொட்டும் தாளத்தை ஒத்த என்பதே கருத்தாகக் கொள்க; 'ஆதி பகவன் முதற்றே யுலகு' (குறள் - 1) என்புழிப் பரிமேலழகரும் இவ்வாறு மாற்றிக் கூறியுள்ளமை இங்கு நினைவுகூரலாம். எதிர் எதிர் உள்ள கூதாளப் போதுகளில் பேடையும் ஞிமிறும் தனித்தனியே பாய்தலால் இரண்டு போதுகளும் அசைந்து மலர்ந்த தோற்றம் இரு தாளங்களை அடிப்பது போலக் காணப்பட்டன என்ற கருத்துப் புலப்படவே, வண்டு என ஒன்றாகக் கூறாமல், பேடையும் ஞிமிறும் பாய்ந்ததாகக் கூறினார். காதல் மிக்க அவ்விரண்டு வண்டுகளும் சேய்மையில் அகலாமல் அடுத்து அடுத்துள்ள கூதாளமலர்களில் தேன் உண்ண விழைந்து பாடிக்கொண்டு பாய்தல் இயல்பாதலும் நினைக. பேடை என முன் வந்தமையின் ஞிமிறு ஆண் என்பது பெறப்படும் இத்துணைப் பொருத்தங்களும் தோன்ற உவமைகூறிய கவிஞரின் நுண்ணிய புலமை எண்ணி மகிழ்தற்கு உரியதாகும். (33)

கானயாறும் கொன்றையும்

**4286.** வழைதுறு கான யாறு
மாநிலக் கிழத்தி மக்கட்
குழைதுறு மலைமாக் கொங்கை
சுரந்தபா லொழுக்கை யொத்த
விழைவுறு வேட்கை யோடும்
வேண்டுநர்க் குதவ வேண்டிக்
குழைதொறுங் கனகந் தூங்குங்
கற்பக நிகர்த்த கொன்றை.

வழைதுறு கான யாறு,
மாநிலக் கிழத்தி மக்கட்கு
உழைதுறு மலைமாக் கொங்கை
சுரந்தபால் ஒழுக்கை ஒத்த;
விழைவுறு வேட்கை யோடும்
வேண்டுநர்க்கு உதவ வேண்டிக்,
குழைதொறும் கனகம் தூங்கும்
கற்பகம் நிகர்த்த, கொன்றை.

பொ:—(மலையில் தோன்றிச்) சுரபுன்னை மரங்கள் நெருங்கியுள்ள காட்டு வழியே செல்லுகின்ற ஆறுகளின் தோற்றம்,—பெரிய பூமியாகிய தாய், தன் மக்களுக்காகத் தன் புடைபருத்த மலையாகிய பெரிய முலைகளிலிருந்து (அன்பால்) சுரந்த பாலின் தாரைகளை ஒத்தன; பூத்த கொன்றை, பொன்னை விரும்பும் வேட்கையோடு வந்து தம்மைக் கேட்போர்க்குக் கொடுக்க வேண்டித் தளிர்கள்தோறும் பொற்காசுகளைத் தொங்கவிட்டுக் கொண்டுள்ள கற்பக மரங்களை ஒத்தன.

கு:—கார்காலத்துக் கான்யாறுகள் பெருகின. கொன்றைகள் பொன்னிறப் பூக்களைப் பூத்தன என்றவாறு. கானயாறுகள் பெருகும் தோற்றம், நிலமகளாகிய தாய் தன் மக்கள் வாழவேண்டித் தன் மலைகளாகிய முலைகளில் சுரந்த பாலின் தாரைகள் பெருகுவதுபோல இருந்தது; கொன்றைகள் பொன்னிறப் பூக்களைப் பூத்திருக்கும் தோற்றம், பொன்னை விரும்பும் வேட்கையோடு தன்பால் வந்து வேண்டுவார்க்குக் கொடுக்க வேண்டிப் பொற்காசுகளைத் தொங்கவிட்டுக் கொண்டிருக்கும் கற்பக மரங்களைப் போன்று இருந்தன என உவமை கூறினர். மாநிலக்கிழத்தி, மலைமாக் கொங்கை என்பன உருவகம். வழை - சுரபுன்னை மரம். உழை துறும் என்றது புடை பெருத்தலை. நிலமாகிய நங்கைக்கு மலைகளை முலைகளாகக் கூறும் மரபுண்டு. "அலை நீராடை மலை முலையாகத்து...மண்ணக மடந்தை" (சிலப் - 5: 1-3) என்றதும் காண்க. ஆற்றைத் தாய் முலைப்பாலாகக் கூறுதலுண்டு என்பதை: "சரயு வென்பது தாய்முலை யன்ன திவ்வுரவு நீர்நிலத் தோங்கு முயிர்க்கெலாம்" (பால - 23) என்றதால் அறியலாம். குழை - தளிர். தூங்கும் - தொங்கும். விழைவு என்றது, எனக்கிது வேண்டும் என்னும் அவாவினை; வேட்கை என்றது அப்பொருட்கண் செல்லும் ஆசையை. வேண்டுநர்க்கு அடையாக வந்த 'விழைவுறு வேட்கையோடு' என்பதைக் கற்பகத்திற்கு ஏற்றிக் கூறலுமாம். உதவ வேண்டி, விழைவுறு வேட்கையோடு கனகம் தூங்கும் கற்பகம் என்க. 'பொற்கொன்றை' (பொருநராற் - 200) எனவும், 'தூங்கிணர்க்கொன்றை' (குறிஞ்சிப் - 86) எனவும், 'முறியிணர்க் கொன்றை நன்பொன் கால' (முல்லைப் - 94) எனவும்,

'பொன் செய்புனை யிழை கட்டிய மகளிர், கதுப்பிற்ருேன்றும் புதுப்பூங் கொன்றை' (குறுந் - 21) எனவும், "கார்விரி கொன்றைப் பொன் னேர் புதுமலர்" (அகநா-கடவுள் வாழ்த்து) எனவும் கொன்றை புகழப்படுதல் காணலாம். (34)

மான்கள்

4287. பூவியல் புறவ மெங்கும்
பொறிவரி வண்டு போர்ப்பத்
தீவிய களிய வாகிச்
செருக்கிய காமச் செவ்வி
யோவ லின்மரங்க டோறு
முரைத்தற வுரிஞ்சி யொண்கேழ்
நாவிய செவ்வி நாறக்
கலையொடும் புலந்த நவ்வி.

பூ இயல் புறவம் எங்கும்
பொறி வரி வண்டு போர்ப்பத்,
தீவிய களிய வாகிச்
செருக்கிய, காமச் செவ்வி,
ஓவல்இல் மரங்கள் தோறும்
உரைத்து அற உரிஞ்சி ஒண்கேழ்
நாவிய செவ்வி நாறக்,
கலையொடும் புலந்த நவ்வி.

பொ :—மலர்களின் மயமாகத் தோன்றும் காட்டிடம் எங்கும் புள்ளிகளையும் இசைப் பாட்டையுமுடைய வண்டுகள் மொய்க்குமாறு இனிமை மிக்க தேனையுடையவாகிச் செருக்குற்றனவாய்க் காமச் செவ்வி நீங்குதல் இல்லாத மரங்கள் தோறும் உராய்ந்து தம்முடம்பு முழுமையும் தேய்த்துக்கொண்டு, தம்முடம்பில் ஒளிமிக்க நிறமும் கத்தூரி மானின் மணமும் வீசப்பெற்று வந்தமையால், கலைமான் களோடு நவ்வி மான்கள் ஊடிக்கொண்டன.

கு :—எங்கு நோக்கினும் பூக்களின் தோற்றமே காணப்படுதலின் 'பூவியல் புறவம்' என்ருர். பொறி - புள்ளி. வரி - இசைப்பாட்டு. கானல் வரி, வேட்டுவ வரி, என்புழி வரி இப் பொருள்படுதல் காண

லாம். மரங்களில் மலர்கள் நிறைந்திருத்தலின் அம்மலர்களிலுள்ள தேனையுண்ண வண்டுகள் மொய்த்தல், போர்வை போர்த்தது போலக் காணப்படும் இயல்பு தோன்ற 'வண்டு போர்ப்ப' என்றார். வண்டுகள் மொய்ப்ப என்பதே கருத்து. தீவிய - இனிய. 'களிய வாகி' என்பது, இரட்டுற மொழிதலாய்க் களிப்புடையவாகி எனவும், தேனையுடையவாகி எனவும் பொருள்படும். புளிப்புச் சுவையை நீக்கத் 'தீவிய களியவாகி 'என்றார். மரங்களுக்குக் காமச் செவ்வி நிகழும் காலம், வண்டுகள் தேனுண்ணுமாறு அவை பூத்திருக்கும் நிலையேயாதலின், வண்டு போர்ப்பக் களியவாகிச் செருக்கிய காமச் செவ்வி ஓவலில் மரங்கள் என்றார். காமச் செவ்வியுடைய மரங்களில் கலைமான்கள் தம்முடம்பைத் தேய்த்துக் கொண்டமையால் அவற்றின் உடம்பில் கத்தூரி மானின் மணம் நாறியது; அந்நாற்றத்தை அறிந்த நவ்விமான்கள், அவை கத்தூரி மான்களின் தொடர்பு பெற்று வந்ததாக மயங்கித் தம் கலைமான்களோடு ஊடல் கொண்டன என்க. 'கல்லோங்குகானங் களிற்றின் மதநாறும்' (கார்நாற்பது-24) என்றது காண்க. இதனால் ஓரறிவுயிராகிய மரங்களுக்கும் காமச் செவ்வியுண்டு என்பதும் அச்செவ்வியால் அம்மரங்கள் புதுமணமுடையவாகும் என்பதும் புலப்படுத்தியவாறு. காமச் செவ்வியால் புதுமணமுண்டாகும் என்பதை 'வெற்பிடை மதமென வியர்க்கு மேனியன்' (ஆரணிய. சடாயு உயிர்-26) எனச் சீதையைக் கண்டு காமுற்ற இராவணன் உடம்பில் வியர்வை மத நாற்றம் வீசிய நிலையைக் குறிப்பிடுதலால் அறியலாம். மரங்களுக்கும் காமச் செவ்வி உண்டு என்பதை. "ஒருதனி யோங்கிய திருமணிக்காஞ்சி......காமர் செவ்விக் கடிமலரவிழ்ந்தது" (மணிமே-18. 56-59) எனச் சிலேடையாய்க் கூறியதால் அறியலாம். உரைத்தல்-உராய்தல். உரிஞ்சுதல் - தேய்த்தல். அற உரிஞ்சி என்பது, உடம்பு முழுவதும் தேய்த்து என்றவாறு. கேழ் - நிறம். காமச் செவ்வியுடைய மரங்களில் கலைமான்கள் தம்முடம்பைத் தேய்த்துக் கொண்டமையால் உண்டாய ஒண்கேழும் நாவி மணமும் அவை கத்தூரி மான்களோடு கூடியமையால் உண்டாயின என அவற்றின் பெண் மான்களாய நவ்விமான்கள் கருதி அவற்றோடு ஊடியவாகக் கூறியது மயக்கவணி. நாவி - கத்தூரிமான்; நாவிய செவ்வி என்புழி அகரம் ஆறனுருபு. செவ்வி - வாசனை. நவ்வி - பெண்மான்; "ஏறுடையினத்த நாறுயிர் நவ்வி" (அகநா-7-10) என்புழியும் இச்சொல் இப்பொருள்படுதல் காணலாம். "இல்லை தவறவற் காயினும் ஊடுதல், வல்ல தவரளிக்கு மாறு" (குறள் - 1321) எனத் தலைவி கூறுமாறு போல நவ்வியும் கலையின்பால் தவறில்லாத வழியும் ஊடிய நிலையை யுணர்த்தியவாறு. (35)

குவளை குவிய முல்லை அரும்பல்

4288. தேரி னன்னெடுந் திசைசெலச்
செருக்கழிந் தொடுங்கும்
கூரெ யிற்றியர் கண்ணெனக்
குவிந்தன குவளை
மார னன்னவர் வரவுகண்
டுவக்கின்ற மகளிர்
மூரன் மென்குறு முறுவலொத்
தரும்பின முல்லை.

தேரில் நல் நெடுந் திசை செலச்
செருக்கு அழிந்து ஒடுங்கும்
கூர் எயிற்றியர் கண் எனக்
குவிந்தன குவளை,
மாரன் அன்னவர் வரவு கண்டு
உவக்கின்ற மகளிர்
மூரல் மென்குறு முறுவல் ஒத்து
அரும்பின, முல்லை.

பொ :—(மன்மதனைப் போன்ற தம் தலைவர்) தேரில் ஏறி நல்ல தாகிய நெடிய வடதிசை நோக்கிச் செல்லுதலால், கூர்மையான பற்களையுடைய தலைவியரின், மதர்ப்பு நீங்கப் பெற்று ஒடுங்கியுள்ள கண்களைப் போலக் குவளை மலர்கள் (மலர்ச்சி நீங்கிக்) குவிந்தன; அத்தலைவர் கார்காலத்துத் தப்பாது தேரில் வருதலைக் கண்டு மகிழ் கின்ற அத்தலைவியரின் மெல்லிய புன்சிரிப்பில் தோன்றும் பற்களை யொத்து முல்லைக் கொடிகள் அரும்பின.

கு :—கார் காலத்தில் குவளை குவிந்தன முல்லை அரும்பின என்ற வாறு. கண்கள் இன்பத்தில் மலர்தலும் துன்பத்தில் இடுகுதலும் இயல்பு. வரவுக்கு எழுவாயாக உள்ள மாரனன்னவர் என்பதையே செலவுக்கும் எழுவாயாக இயைக்க; செலவுக்குக் கூறிய ஊர்தியாகிய தேரையே வரவுக்கும் கூட்டுக, வடதிசை புண்ணியத் திசை எனப் படுதலின் அத்திசை நோக்கிச் சென்றதை 'நன்னெடுந் திசை செல' என்றார். கண்ணுக்குச் செருக்காவது மதர்ப்பு. ஒடுங்குதலாவது இடுகு கண்ணுதல். மகிழ்ச்சியில் மலர்ச்சி பெற்ற மகளிர் கண்களுக்கு உவமையாகிய குவளை மலர்களே, துன்பத்தில் இடுக்கணுனபோதும் அவற்றிற்குக் குவிந்து உவமையாயின. கார் காலத்தில் குவளை மலர் கள் மலர்ச்சியின்றிக் குவிந்தேயிருக்கும் இயல்பின. 'கோடல்கள் பெருமை கூரக் குவலயம் சிறுமை கூர' (26) என முன் கூறியுள்ள

தும் காணலாம். மென்குறு முறுவல் மூரல் என இயையும். மூரல் - பற்கள். பற்களின் நுனி சிறிது தோன்ற முறுவலிக்கும் மகளிரியல்பு புலப்பட 'மென்குறுமுறுவல்' என்ருர். 'சிறு முல்லைப் போதெல் லாம்......பேதை வாய் முள்ளெயிறேய்ப்ப வடிந்து' (கார்நாற்-21) என்றது காண்க. 'பொருளே யுவமஞ் செய்தனர் மொழியினும் மருளறு சிறப்பினஃதுவமமாகும்' (தொல்-உவ-9) என்ற விதியால் கண்ணெனக் குவளை குவிந்தன; முல்லை மூரலொத்தரும்பின, எனக் கூறினர். (36)

## அருவி பெருகலும் தாமரை மலர்தலும்

4289. களிக்கு மஞ்ஞையக் கண்ணுள
 ரினமெனக் கண்ணுற்
றளிக்கு மன்னரிற் பொன்மழை
 வழங்கின வருவி
வெளிக்கண் வந்தகார் விருந்தென
 விருந்துகண் டுள்ளம்
களிக்கு மங்கையர் முகமெனப்
 பொலிந்தன கமலம்.

களிக்கும் மஞ்ஞை அக் கண்ணுளர்
 இனமெனக் கண்ணுற்று
அளிக்கு மன்னரின் பொன்மழை
 வழங்கின அருவி;
வெளிக்கண் வந்த கார் விருந்து என,
 விருந்துகண்டு உள்ளம்
களிக்கும் மங்கையர் முகம் எனப்
 பொலிந்தன, கமலம்.

பொ:—கார்கண்டு களித்து ஆடும் மயிலினங்கள், அக்கூத்தரின் இனமான விறலியர் போன்றனவாக, அக்கூத்தைக் கண்டு பொன்னைப் பரிசாக வழங்கும் மன்னர்களைப்போல அருவிகள், பொன்னை மிகுதியாகச் சொரிந்தன; விண்வெளியில் வந்த மேகம், மனைக்கு வெளியே வந்த விருந்து போன்றதாக, அவ்விருந்தைக் கணவரோடு இல்லிருந்து கண்டு உள்ளம் களிக்கும் பெண்டிர் முகம்போலத் தாமரை மலர்கள் நீர் நிலைகளில் மலர்ச்சி பெற்றன.

கு:—கண்ணுளரினம் - கூத்தரின் இனமாக வரும் விறலியர். கண்ணுளர் இனத்தை உவமை கூறியதனல் 'களிக்கு மஞ்ஞை' என்

றது, கார்கண்டு களித்து ஆடும் மயில் என்பதே பொருளாதல் காண லாம். மஞ்ஞை உவமையாதல் பெண்டிர்க்கேயாதலின் கண்ணுள ரினம் என்பதற்கு விறலியர் எனப் பொருள் கூறலாயிற்று. அகரம் பண்டறிசுட்டு. கண்ணுள் - கூத்து. கண்ணுற்று - பார்த்து. அருவி மலையில் தோன்றி வருதலின் அம்மலையிலுள்ள பொன்னை அடித்துக் கொண்டு வந்து சொரியும் இயல்புடையது. 'அவர் மலைப் பொன் னுடி வந்த புதுப்புனல்' (சிலப் - 24-4) எனவும், "தேனளாவியும் செம்பொன் விராவியும் ஆனைமாமத ஆற்றொ டளாவியும், வான வில்லை நிகர்த்தது வாரியே" (பால - 19) எனவும் அருவி பொன் னொடு வருதல் கூறப்பட்டிருத்தல் காணலாம். பொன் மழை என்றது பொன்னின் மிகுதியை உணர்த்தி நின்றது. இயல்பாகவே பொன் சொரியும் அருவியை மயிலாகிய விறலியின் ஆடல் கண்டு பரிசாகப் பொன் வழங்கியதாகக் கூறியது தற்குறிப்பேற்றம். 'வெளி' என் றது ஆகாயத்தையும் மனைக்கு வெளியிடத்தையும் குறித்தது. விருந் தினர் மனைக்கு வெளியே வரும்போதே மனையிலுள்ளோர் கண்டு முகம் மலர்ந்து வரவேற்றல் முறையாகும். 'முகந் திரிந்து நோக்கக் குழையும் விருந்து' (குறள் - 90) என்றதும் அக்குறளுரையில் "சேய் மைக்கட் கண்டுழி இன்முகமும் அது பற்றி நண்ணிய வழி இன் சொல்லும் அதுபற்றி உடன்பட்ட வழி நன்றாற்றலும் என விருந் தோம்புவார்க்கு இன்றியமையாத மூன்றனுள் முதலாய இன்முகம் இல்வழிச் சேய்மைக்கண்ணே வாடி நீங்குதலின் தீண்டிய வழியல் லது வாடாத அனிச்சப் பூவினும் விருந்தினர் மெல்லியர் என்பதாம்" எனப் பரிமேலழகர் விளக்கியிருத்தல் காணலாம். கார்காலத்து நீர் வளத்தால் நீர் நிலையிலுள்ள தாமரைகள் செழிப்புடன் மலரும் இயல்புபற்றி, விருந்து கண்டுகளிக்கும் இல்லுறை மங்கையர் முகம் போலக் கார்கண்டு தாமரை முகமலர்ந்ததாக உவமை கூறினர். விருந்தினரைக் கற்புடை மங்கையர் விரும்பிப் போற்றுதல் மரபு. பெருந்தடங்கண் பிறைநுதலார்க்கெலாம்......விருந்துமன்றி விளை வன யாவவயே" (பால-67) என்பதும், "தொல்லோர் சிறப்பின் விருந்தெதிர் கோடலு மிழந்தவென்னை" (சிலப் – 16-73) எனக் கண்ணகி நினைந்து கழிவிரக்கங் கொள்ளுதலும் காண்க. (37)

தேனீக்கள் தேனைச் சேர்த்தல்

4290. சரத நாண்மல ரியாவையுங்
குடைந்தன தடவிச்
சுரத நூறெறி விடரெனத்
தேன்கொண்டு தொகுப்பப்

பரத நூன்முறை நாடகம்
பயனுறப் பகுப்பா
னிரத மீட்டுறுங் கவிஞரைப்
பொருவின தேனீ.

சரத நாள் மலர் யாவையும் குடைந்தன, தடவிச்,
சுரத நூல் தெரி விடர் எனத் தேன்கொண்டு, தொகுப்பப்,
பரத நூல் முறை நாடகம் பயன் உறப்பகுப்பான்,
இரதம் ஈட்டுறும் கவிஞரைப் பொருவின—தேனீ.

பொ :—தேனீக்கள், காம நூலை அறிந்த காமுகர் போலத், தேனோடு கூடிய, அப்பொழுது அலர்ந்த, மலர்களைத் தேடிக் கண்டு அம்மலர்கள் யாவற்றையும் மூக்கால் குடைந்தனவாய்த் தேனைக் கவர்ந்து கொண்டு வந்து (ஓரிடத்துத் தாம் அமைக்கும் தேன் கூட்டில்) தொகுத்து வைத்தலால், பரத நூலில் கூறிய முறைப்படி ஒரு நாடகத்தை ஒன்பான் சுவையாகிய பயன் தோன்றும்படி செய்யும் பொருட்டுச் சுவைப் பகுதிகளைச் (பல நூலினின்றும் கொணர்ந்து) சேர்க்கின்ற நாடகக் கவிஞரை ஒத்தன.

கு :—தேன் ஒன்றையே நாடி அதனையுடைய புது மலர்களைத் தேடிக் குடைந்து தேனைக் கவரும் வண்டின் செயலுக்கு, இன்பம் ஒன்றையே கருதி மங்கைப் பருவத்துப் பெண்டிர் பலரைத் தேடி இன்பம் நுகரும் காமுகரும், அவ்வாறு மலர் பலவற்றுள்ளும் கவர்ந்த தேனை வண்டுகள் தாம் அமைக்கும் கூட்டில் கொணர்ந்து சேர்க்கும் நிலைக்கு ஒன்பான் சுவையும் விஞ்சுமாறு ஒரு நாடகம் அமைக்கும் பொருட்டுப் பல நூல்களிலும் உள்ள சுவை நலங்களை யெல்லாம் கொணர்ந்து சேர்க்கும் கவிஞனும் உவமைகளாம். ‘தேனீ விடரென நாண்மலர் யாவையும் தேடிக் குடைந்தனவாய்த் தேன் கொண்டு ஓரிடத்துத் தொகுத்தலால் இரதம் ஈட்டுறும் கவிஞரைப் பொருவின’ என இயையும். பின் கூறிய உவமைக்குக் கம்பராம் கவிஞரையே சான்றாகக் கொள்ளலாம்; என்னை? இராமாயணம் என்னும் நாடகக் காப்பியம் சிறப்புற அமைக்க வேண்டிக் கம்பர், தமக்கு முந்திய நூல்கள் பலவற்றுள்ளும் ஒவ்வோரகப்பை மொண்டு கொண்டதாகக் கூறும் மரபு உண்மையான் என்க. காம நூல் ஒன்றையே பயின்றவர், அறனழிவும் பொருளழிவும் நோக்காது சிற்றின்பம் ஒன்றையே கருதிப் பல மங்கையர்பாலும் இன்பம் நுகர்கின்ற இழிதகவினராவர்; இவரே இங்கு விடர் எனப்பட்டார். விடர் - காமுகர். மாதரை மலராகவும் மைந்தரை வண்டாகவும் கூறுதலுண்டு. ‘தவழ் மதுக் கோதை மாதர் தாமரைப் பூவதாக, வுமிழ்சுடர் வேலினானும் ஒண் சிறை மணிவண்டொத்தான்’ (சீவக. 101) என்பதும், “பெண்டிர்

நலம் வௌவித் தன் சாரற் றுதுண்ணும் வண்டின்" (கலி-40: 24) என்பதும் காணலாம். சரசம் என்ற வடசொல் சரதம் எனத் திரிந்தது; தேனுகிய ரசத்தோடு கூடியது என்பது பொருள். நாண்மலர் - அப்பொழுதலர்ந்த மலர்; தேன்மிக்கிருப்பது அம்மலர்களிலேயே ஆதலின், தேனீ அவற்றையே தேடிக் குடைந்தன. குடைதலாவது மலரின் உள்ளிடத்தை மூக்கால் துழாவுதல். தடவுதல் - தேடுதல். தேன் குறைந்த பழம் பூவும் தேன் அற்ற பூவும் இருத்தலானும், புலருமுன் புகுந்தமையானும் தேனுள்ள புதுமலர்களைத் தேடவேண்டியதாயிற்று, 'வேக வெம்பிலந் தடவி' (நட்புக்கோட்-51) என்புழியும் இச்சொல் இப்பொருளில் வந்திருத்தல் காணலாம். தேனீக்களுக்குக் கூறிய இரு உவமைகளும் பொதுத் தன்மையால் வேறுபாடுடையவாதல் நோக்குக. பரதாசிரியரால் போற்றப்பட்டமையால் நாடக நூல் பரத நூல் எனப்பட்டது. பயன் என்றது சுவையை; அது ஒன்பது வகைப்படும்; நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை, நடுவுநிலை என்பன அவை. இரதம் என்பதும் அச்சுவைகளையே. ரசம் என்ற வடசொல் இரதம் எனத் திரிந்து வந்தது. சுரத நூல் - காமநூல். (38)

### மான்களின் களிப்பு

**4291.** நோக்கி னனமை நோக்கழி
கண்டநுண் மருங்குற்
றக்க ணங்கருஞ் சீதைக்குத்
தாங்கருந் துன்ப
மாக்கி னுமுரு வாலெனு
மரும்பெற லுவகை
வாக்கி னலுரை யாமெனக்
களித்தன மான்கள்.

"நோக்கினல் நமை நோக்கு அழிகண்ட நுண்மருங்குல்
தாக்கு அணங்கு அருஞ் சீதைக்குத் தாங்கருந் துன்பம்
ஆக்கினும் உருவால்" எனும் அரும்பெறல் உவகை
வாக்கினல் உரையாம் எனக் களித்தன, மான்கள்.

பொ:—(கார்காலத்தின் தண்மையால் களித்து விளையாடும்) மான்களின் தோற்றம், "தன் கண் நோக்கின் அழகால் நம் கண்ணோக்கம் தோல்வியுறச் செய்த, நுண்ணிய இடையையுடைய தீண்டி வருத்தும் தெய்வம் போன்றவளாகிய அரிய சீதைக்குத் தாங்க முடி

யாத கடுந் துன்பத்தை நம் உருவத்தாலேயே (மாரீசனும் மாய மானுல்) உண்டாக்கி விட்டோம் என்கின்ற பெறற்கரிய மகிழ்ச்சியை வாக்கினுல் சொல்லமாட்டோம் எனத் தமக்குள் குறிப்புச் செய்து கொண்டு களித்தனவற்றை ஒத்திருந்தன.

கு :—மான்கள் களித்த அன என முடிக்க. அகரம் விகாரத்தால் தொக்கு நிற்கக் 'களித்தன' என நின்றது. இங்ஙனம் கொள்ளாக் கால் தற்குறிப்பேற்ற அணியாகாது இயல்பு நிகழ்ச்சியாகக் கொள்ள நேரும் என்பது நினைக. கார்காலத்தின் தண்மையால் மான்கள் களித்துக் குதித்து விளையாடுதல் இயல்பு. "இரும்பு திரித்தன்ன மாயிருமருப்பிற் பரலவ லடைய விரலை தெறிப்ப" (அகநா-4) என் றது காண்க. ருசிய மூகம் என்ற பெயர்க் காரணத்தை அங்குள்ள மான்கள் புலப்படுத்திக் கொண்டு ஒலி செய்யாமல் விளையாடுவதும் இயல்பு. (மதங்க முனிவரின் ஆணையால் அம்மலையிலுள்ள மான்கள் ஒலி செய்யாது ஊமையாயின) இந்த இயல்பு நிகழ்ச்சிகளுக்குக் கதைத் தொடர்புடைய வேறு காரணம் கற்பித்தமையால் இது தற் குறிப்பேற்ற அணியாகும். சீதையின் கண்ணழகிற்குத் தோற்று வருந்திய மான்கள், தம்மினமாகிய மானின் உருவத்தோடு மாரீசன் சென்று தமக்குப் பகையாகிய சீதையைப் பிரித்துப் பெருந் துன்பத் திற்கு ஆளாக்கின செயலை உருவ ஒற்றுமையால் தாமே செய்தன வாகக் கொண்டு மகிழ்ந்து, அம்மகிழ்ச்சியைப் புலப்படுத்தினுல் மாரீச மானுக்கு நேர்ந்த கதி தமக்கும் நேருமே என்ற அச்சத்தால் 'அம் மகிழ்ச்சியை வாக்கினுல் உரைக்க மாட்டோம்' எனத் தமக்குள் குறிப் பால் புலப்படுத்திக் கொண்டு ஒலி செய்யாமல் களிப்பனவற்றைப் போன்றன என்க. நமது நோக்கை அழிகண்ட என உருபு மயக்க மாக்குக ; அன்றி நமை, நோக்கை அழிகண்ட என இரண்டு செயப் படுபொருள் வந்தனவாகக் கூறலுமாம். அழிகண்ட - அழியுமாறு - தோல்வியுறுமாறு செய்த. திருநகரங் கண்ட படலம் என்புழியும் கண்ட என்பது செய்த என்ற பொருளில் வந்தது காணலாம். தமக் குத் துன்பஞ் செய்தாரைத் தம்மினத்தவரே துன்புறுத்தினர்கள் என் பது பெறற்கரிய மகிழ்ச்சிக்குரிய செயலாகும் என்றவாறு. தாக்கும் அணங்கு போன்றவள் சீதை ஆதலின் அவள் தாங்கருந் துன்பமுறு தல் இயல்புதானே என்பனபோலத் 'தாக்கணங் கருஞ் சீதை' என்று சீதைக்கு அடை அமைந்துளது. தாக்கணங்கு, திருமகள் எனலுமாம். பெறலரும் உவகை என்க. களித்த அன என்ற உவமையால் கார் காலத்தின் தண்மையால் களித்தனவாகிய மான்கள் என்பது வருவிக்கப்படும். (39)

### அன்னங்கள்

4292. நீடு நெஞ்சுறு நேயத்தா
னெடிதுறப் பிரிந்து
வாடு கின்றன மருளுறு
காதலின் மயங்கிக்
கூடு நன்னதித் தடந்தொறுங்
குடைந்தன படிவுற்
ருடு கின்றன கொழுநரைப்
பொருவின வன்னம்.

நீடு நெஞ்சு உறு நேயத்தால் நெடிது உறப் பிரிந்து
வாடுகின்றன, மருளுறு காதலின் மயங்கிக்,
கூடு நல்நதித் தடம்தொறும் குடைந்தன, படிவுற்று
ஆடுகின்றன—கொழுநரைப் பொருவின—அன்னம்.

பொ :—அன்னங்கள், (தடாகங்களை) நெடிதுகாலம் இடைப் படப் பிரிந்திருந்து நெஞ்சில் பொருந்திய நீண்ட அன்பினுல் வாடுகின்ற தன்மையவாதலாலும், (கார்காலம் வந்தவுடன்) நல்ல நதிகளின் நீர் வந்து கூடும் தடாகந் தோறும் வியப்படையத்தக்க பெருங் காதலால் மயங்கிப் படிந்து குடைந்து ஆடுகின்ற தன்மையாலும், (தலைவியரைப் பிரிந்து வாடியிருந்து பின் கார்காலம் வந்தவுடன் அவரொடு மகிழ்ந்து ஆடுகின்ற தன்மையுடைய) தலைவர்களை ஒத்து விளங்கின.

கு :—வேனிற்காலத்து நீர் அற்றமையால் குளங்களைப் பிரிந்திருந்து அக்குளங்களின்மேல் வைத்த பேரன்பாலும் வெயிலாலும் வாடியிருந்த அன்னங்கள் கார்காலத்து ஆற்று நீர் வந்து கூடுதலால் நிறைந்த அக்குளங்களை யடைந்து வியக்கத்தக்க பெருங் காதலால் தன்னை மறந்து படிந்து குடைந்தாடுகின்றன. பொருள்வயிற் பிரிந்த தலைவர்களும் பிரிந்து நாள்பல சென்றமையால் தலைவியர் மேல்வைத்த நீண்ட நேயத்தால் வாடுகின்றனர். கார்காலம் வந்தவுடன் விரைந்து வந்து தலைவியரைக் கூடுகின்றனர்; பிரிந்திருந்த துயர் தணிய அத்தலைவியரோடு பலமுறை காதலால் மயங்கி ஆடுகின்றனர். நீடு பிரிந்திருந்து வாடுதலும், கார் வந்தவுடன் மகிழ்ந்தாடுதலும் அன்னங்கட்கும் கொழுநர்க்கும் ஒத்தலின் ‘கொழுநரைப் பொருவின அன்னம்’ என உவமை கூறினர். அன்னங்கட்குத் தலைவர்களும் தடங்கட்குத் தலைவியரும் உவமை, மருளுறு காதல் என்பது வியக்கத்தக்க பெருங் காதலை. மருட்கை - வியப்பு; பெருமை பற்றி வந்தது. மயங்குதலாவது தன்னை மறத்தல். நன்னதி கூடும்

தடம் என்க. குளங்களில் ஆற்றுநீர் வந்து பாய்ந்து நிரப்பும் இயல்புதோன்ற அங்ஙனம் கூறினர். தடம் - குளம். படிவுற்றுக் குடைந்தாடுகின்றன என இயையும். படிதல் - மூழ்குதல். குடைதலாவது மூக்காலும் கால்களாலும் நீரைத் துழாவியாடுதல். தலைவற்குக் கூறுங்கால் ஏற்பன கொள்க. பிரிந்து வாடுகின்றன வாதலாலும், படிவுற்றுடுகின்றன ஆதலாலும் கொழுநரைப் பொருவின என ஏதுவிரித்து ஏது உவமையாக்குக. அற்ற குளத் தறுநீர்ப்பறவை ஆதலின் வேனிலில் நீர் அற்ற குளங்களை விட்டுப் பிரிந்து வாடின என்க. அன்னங்கள் பலவாதலின் தடந்தொறும் எனப் பன்மை கூறினர், (40)

கொக்குகள்

4293. காரெ னும்பெயர்க் கரியவன்
மார்பினிற் கதிர்முத்
தார மாமெனப் பொலிந்தன
வளக்கரு மளக்கர்
நீர்மு கந்தமா மேகத்தி
னருகுற நிரைத்துக்
கூரும் வெண்ணிறத் திரையென
பறப்பன குரண்டம்.

கார் எனும் பெயர்க் கரியவன் மார்பினில் கதிர்முத்து
ஆரம் ஆம் எனப் பொலிந்தன—அளக்கரும் அளக்கர்
நீர் முகந்த மாமேகத்தின் அருகு உற நிரைத்துக்
கூரும் வெண்நிறத் திரையெனப் பறப்பன குரண்டம்.

பொ :—அளவிட முடியாத பெரிய கடல் நீரை முகந்து எழுந்த கரிய மேகத்தின் அருகே பொருந்துமாறு வெண்ணிற அலைகள் போலப் பறக்கின்ற கொக்குகள், கார்ப்பருவம் எனும் பெயரையுடைய கரிய அரசனின் மார்பில் அணிந்த ஒளிமிக்க முத்துமாலை போல விளங்கின.

கு :—அளக்க அரும் என்பது அளக்கரும் என அகரம் தொக்கு நின்றது. அளத்தற்கு அரிய பெருமையுடையது என்றவாறு. அளக்கர் - கடல். மேகம் கடல் நீர் முகந்து மழைபொழிவதாகக் கூறுவது கவிமரபு. கடல் நீர் முகந்தமையால் கரிதாகிய மேகம் என்க. மா - கருமை. கரிய மேகத்தின் அருகில் வெண்ணிறத் திரைபோலப் பறப்பனவாகிய கொக்குகளின் தோற்றம் கார்காலம்

என்னும் கரிய அரசனின் மார்பில் அணிந்த முத்தாரம் போலத் தோன்றின என்பது உவமையணி. கார் என்றது கார்ப்பருவத்தை. பருவத்தை அரசனுகக் கூறும் மரபுண்மை, "காரர சாளன் வாடையொடு வரூஉம் காலம்" (சிலப் - 14: 96) என இளங்கோவடிகள் கூறுவதால் அறியலாம். கார்ப்பருவம் இருண்ட காலமாதலின் 'காரெனும் பெயர்க் கரியவன்' என்ருர். 'காரெனுஞ் செவ்வியோன்' (43) 'மாமேகத்தினருகுற வெண்ணிறத் திரையென நிரைத்துப் பறப்பனவாகிய குரண்டம், என்பர் பின்னும். கரியவன் மார்பினில் முத்தாரம் ஆம் எனப் பொலிந்தது என இயையும். "நெடியோன் மார்பில் ஆரம் போலச், செவ்வாய் வானந் தீண்டி மீனருந்தும், பைங்காற் கொக்கின் நிரைபறையுகப்ப" (அகநா - 120) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். குரண்டம் - கொக்கு. வெண்மையும் தோற்றமும் பற்றி முத்து மாலே உவமை. கூர்தல் - மிகுதல்; உரிச்சொல். (41)

### நாரைகள்

**4294.** மருவி நீங்கல்செல் லாநெடு
மாலேய வானிற்
பருவ மேகத்தி னருகுறக்
குருகினம் பறப்ப
திருவி ஞயக னிவனெனத்
தேமறை தெரிக்கு
மொருவன் மார்பினி னுத்த
ரியத்திஃன யொத்த.

மருவி நீங்கல் செல்லா நெடு மாலேய, வானில்
பருவ மேகத்தின் அருகு உறக் குருகினம் பறப்ப,
'திருவின் நாயகன் இவன்' எனத் தேமறை தெரிக்கும்
ஒருவன் மார்பினின் உத்தரியத்தினே ஒத்த.

பொ :—ஒன்றை ஒன்று நெருங்கிப் பின் நீங்காதனவாய் நீளமாக வரிசைப்பட்டனவாய் ஆகாயத்தில், பெய்யும் பருவத்தில் உள்ள கரிய மேகத்தின் அருகே பொருந்துமாறு நாரைகள் பறப்பவை—'திருமகளின் கேள்வன் இவன்' என்று தெய்வத்தன்மையுடைய வேதங்களால் கூறப்படும் ஒப்பற்றவனுகிய திருமாலின் மார்பில் அசையும் மேலாடையை ஒத்தன.

கு:—மேல் கொக்கின் வரிசையைக் கூறியவர், இங்கு நாரைகளின் வரிசையைக் கூறுகின்றார். "பைங்காற் கொக்கின் மென் பறைத் தொழுதி......செவ்வரி நாரையோ டெவ்வாயுங் கவர" (நெடுநல் - 15-17) எனக் கொக்கும் நாரையும் கார்காலச் சிறப்பில் இடம் பெற்றிருத்தல் காணலாம். கொக்குகளும் நாரைகளும் வரிசைப் பட்டு விண்ணில் பறந்து செல்லுந் தன்மையை இன்றுங் காணலாம். ஒன்றோடு ஒன்று நெருங்கியவை பின் அந் நெருக்கம் குலைய நீங்காமல் வரிசைப்பட்டே செல்லும் இயல்புணர்த்த 'மருவி நீங்கல் செல்லா' என்றார். மாலை - வரிசை. மாலைய என்புழி அகரம் பலவின் குறிப்புவினை விகுதி; எச்சப்பொருளது. 'நீங்கல் செல்லாவாய் மாலையவாய்க் குருகினம் பறப்ப உத்தரியத்தினை ஒத்த' என இயையும். பறப்ப வினைப்பெயர். பறப்பனவாகிய குருகினம் என இயைப்பினும் ஆம். பருவ மேகத்திற்குத் திருமாலும் நாரைகளின் வரிசைக்கு அவன் மார்பிலசையும் உத்தரியமும் நிறமும் வடிவும் பற்றி உவமையாயின. "நீர் செல நிமிர்ந்த மாஅல் போலப், பாடிமிழ் பனிக்கடல் பருகி வலனேர்பு கோடுகொண் டெழுந்த கொடுஞ் செலவெழிலி" (முல்லைப்பாட்டு - 3-5) என்புழியும், பருவ மேகத்திற்குத் திருமாலை உவமை கூறியிருத்தல் காணலாம். "மீயோங்கு செம்பொன் முடியாயிர மின்னிமைப்ப, ஓயா வருவித்திரள் உத்தரியத்தை யொப்பத், தீயோ ருளராகிய தாலவர் தீமை தீர்ப்பான், மாயோன் மகரக்கடனின்றெழு மாண்பதாகி" (சுந்தர - 41) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். தேமறை - தெய்வத்தன்மையுடைய வேதங்கள். ஒருவன் - ஒப்பற்றவன்; திருமால். குருகு - நாரை. (42)

## பசும் புல்

4295. உறவெ துப்புறுங் கொடுந்தொழில்
வேனிலா னொழியத்
திறநி னைப்பருங் காரெனுஞ்
செவ்வியோன் சேர
நிறைம னத்துறு குளிர்ப்பினி
னெடுநில மடந்தை
புறம யிர்த்தலம் பொடித்தன
போன்றன பசும்புல்.

உற வெதுப்புறும் கொடுந்தொழில் வேனிலான் ஒழிய, திறம் நினைப்பருங் கார் எனும் செவ்வியோன் சேர,

நிறை மனத்து உறு குளிர்ப்பினின் நெடுநில மடந்தை
புற மயிர்த்தலம் பொடித்தன போன்றன—பசும்புல்.

பொ :—கார்காலத்து நிலத்தில் முளைத்த பசும்புல்கள் (தன்னையும் தன்கண் வாழ்கின்ற உயிர்களையும்) மிகவும் வெதும்பச் செய்த கொடிய தொழிலையுடைய வேனிற் பருவம் என்கின்ற அரசன் நீங்கினனாக, நினைத்தற்கு அரிய நற்றிறங்களையுடைய கார்காலம் என்கின்ற செவ்விய குணத்தினோன் (அரசனாக வந்து) சேர்தலால், பெரிய நிலமாகிய நங்கையின் நிறைவுற்ற மனத்துப் பொருந்திய மகிழ்ச்சியினால் அவள் உடம்பில் மயிர்க்கூச்சுத் தோன்றினவற்றை யொத்தன.

கு :—மழையால் நிலத்துத் தோன்றும் பசும்புற்களின் தோற்றம், ஒளியாற் செவ்வியனாய் உயிரை வெதுப்பும் கொடுந் தொழில் புரியும் வேனிலானாகிய அரசன் நீங்க, நிறத்தால் கரியனாய் உயிர்களைக் குளிர்வித்து நன்மை புரியும் திறத்தால் செவ்வியோனாகிய கார்காலம் என்னும் அரசன் வந்து சேர்தலால் நிலமடந்தை மனத்துக் கொண்ட மகிழ்ச்சியால் அவளுடம்பில் மயிர்க்கூச்சுத் தோன்றினாற் போன்றிருந்தது என்பது தற்குறிப்பேற்றம். உற - மிகுதியாக. வேனிற்காலம் ஒளியால் செம்மையுடையதாய்ச் செயலால் கொடிதாக இருந்தமையால் ‘கொடுந் தொழில் வேனிலான் ஒழிய’ எனக் கூறினார். கார்காலம் ஒளியின்றி இருண்டு கரியதாய்த் தோன்றினும் உயிர்களைக் குளிர்விக்கும் செயலால் செவ்விதாக இருத்தலின் ‘காரெனும் செவ்வியோன்’ என்றார். செம்மையும் கொடுமையும் அவரவர் செயலாலறிவதன்றி நிறத்தால் அறியலாகாமை புலப்படுத்தியவாறு. “புறங்குன்றி கண்டனையரேனு மகங்குன்றி மூக்கிற் கரியாருடைத்து” (குறள் - 277) “கணை கொடிதி யாழ்கோடு செவ்விதாங்கன்ன வினைபடு பாலாற் கொளல்” (குறள் - 279) என்பன இங்கு நினைதற்குரியவாம். ‘நினைப்பருந் திறமுடைய கார்’ என இயையும். கார் கைம்மாறு கருதாமல் மழையைப் பொழிந்து உயிர்களுக்கு நன்மை செய்யும் பெருமை எண்ணத்திற் கடங்காமையின் அங்ஙனம் கூறினார். நிறைமனம்-திருத்தியடைந்த மனம். குளிர்ப்பு-மகிழ்ச்சி; குளிர்ச்சி. புறத்தலம் மயிர் பொடித்தன என இயையும். புறத்தலம் - உடம்பிடம். பொடித்தல் - தோன்றுதல். “இவன், அடித்தலந் தீண்டலின் அவனிக்கம்மயிர் பொடித்தன நிகர்க்குமாற் புல்லென்றுன்னுவாள்” (ஆரணிய - சூர்ப்பணகைப் - 19) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். மகிழ்ச்சியாலும் குளிர்ச்சியாலும் உடம்பில் மயிர்கூச்சு உண்டாதல் இயல்பு. (43)

## மயில்கள் ஆடலும் அகவலும்

4296. தேனவா மலர்த் திசைமுகன்
முதலினர் தெளிந்தோர்
ஞான நாயக னவையுற
நோக்கின நல்கக்
கானம் யாவையும் பரப்பிய
கண்ணினச் சனகன்
மானை நாடிநின் றழைப்பன
போன்றன மஞ்ஞை.

தேன் அவாம் மலர்த் திசைமுகன் முதலினர் தெளிந்தோர்
ஞான நாயகன் நவைஉற, நோக்கின நல்கக்
கானம் யாவையும் பரப்பிய கண்ணின் அச் சனகன்
மானை நாடி நின்று அழைப்பன போன்றன—மஞ்ஞை.

பொ :—கார்காலத்து மயில்கள் தோகை விரித்தாடி அகவும் தோற்றம், வண்டு விரும்புகின்ற தாமரை மலரில் வாழும் பிரமன் முதலிய தேவர்கட்கும், தெளிந்த முனிவர்கட்கும் ஞான நாயகனுகிய இராமன் சீதையைப் பிரிந்து துன்புற, அந்நிலையை நோக்கினவாய்ச் சீதையைத் தேடித்தர எண்ணி (மயில்கள்) தோகைகளில் பரப்பிய பல கண்களால் அச் சனகன் மகளாகிய மான்போன்ற விழியை யுடைய சீதையை அக்கானக முழுமையும் தேடி, அக் கண்களுக்குப் புலப்படாமையால் அவளை வாயால் கூவி அழைப்பவற்றைப் போன்றன.

கு :—மயிலின் தோகையில் பல கண்களைப் போன்ற அமைப்பு இருத்தலின், தோகை விரித்தாடும் மயில்கள் பல கண்களால் பார்ப்பது போன்று தோன்றுதலானும் அவை அகவும் தோற்றம் யாரையோ அழைப்பது போன்று தோன்றுதலானும் சீதையைப் பிரிந்த இராமன் வருத்தம் தீர்க்க எண்ணிக் கானக முழுமையும் தம் கண்களைப் பரப்பினவாய்ச் சீதையை நாடி நின்று அழைப்பன போன்றன எனத் தற்குறிப்பேற்றமாகக் கூறினர். "ஓடாநின்ற களி மயிலே சாயற் கொதுங்கி யுள்ளழிந்து, கூடாதாரிற் றிரிகின்ற நீயு மாகங் குளிர்ந்தாயோ? தேடா நின்ற வென்னுயிரைத் தெரியக் கண்டாய் சிந்தையுவந், தாடா நின்ரு யாயிரங்கண் உடையாய்க்கு ஒளிக்கு மாறுண்டோ" (பம்பைப் - 26) என இராமன் மயிலை நோக்கிக் கூறியது இங்கு நினையத்தகும். மயில் தோகையில் ஆயிரம் கண் இருப்பதாகக் கூறியிருப்பதும் காண்க. பிரமன் முதலிய தேவர்களின் ஞானத்திற்கும் தெளிந்த முனிவர்களின் ஞானத்திற்கும் நாயகன்

இராமன் என அவன் தெய்வத்தன்மையை விளக்கியவாறு. 'வேதம் வேதியர் விரிஞ்சன் முதலோர் தெரிகிலா ஆதி தேவர்' (ஆரணிய-1) என்பது இங்கு ஒப்புநோக்கத் தகும். துன்புறத்தகாதவன் துன்புறு தலால் மயில்கள் தாமே, அவன் துன்பம் தீரச் சீதையைத் தேடித் தர முயன்றன என்பது தோன்ற ஞானநாயகன் நவையுற' என்றார். நவை - துன்பம். நோக்கின முற்றெச்சம். அவன் நவை நீங்கச் சீதையைத் தர என்பார் 'நல்க' என்றார். 'பரப்பிய கண்ணின் அச் சனகன் மானைக் கானம் யாவையும் நாடி' என இயையும். கண்ணின் நாடியும் காணாமையால் வாயால் நின்று அழைத்தன; செல்லும் வாயெல்லாம் இராமனுக்கு உதவ எண்ணி, 'நாடி நின்றழைப் பன போன்றன மஞ்ஞை' என்றமையால் மயில்கள் கார்கண்டு தோகை யைப் பரப்பி ஆடுதலும் அகவுதலும் செய்தமை புலனாம். தேன் - வண்டு. அவாவுதல் - விரும்புதல்; மலர்க்கு அடை. அழைப்பன, வினைப்பெயர். (44)

### செந்தாமரையின் பொலிவும், கொடிகளின் அசைவும்

**4297.** செஞ்செ வேலவர் செறிசிலைக்
குரிசில ரிருண்ட
குஞ்சி சேயொளி கதுவுறப்
புதுநிறங் கொடுக்கும்
பஞ்சி போர்த்தமெல் லடியெனப்
பொலிந்தன பதுமம்
வஞ்சி போலியர் மருங்கென
நுடங்கின வல்லி.

செஞ் செ(வ்) வேலவர், செறிசிலைக் குரிசிலர், இருண்ட
குஞ்சி சேயொளி கதுவுறப் புதுநிறம் கொடுக்கும்
பஞ்சி போர்த்த மெல் அடி எனப் பொலிந்தன பதுமம்;
வஞ்சி போலியர் மருங்கு என நுடங்கின, வல்லி.

பொ:—(பகைவர் மார்பில் பாய்தலால்) செக்கச் சிவந்த வேலை யுடையவரும் கட்டமைந்த வில்லையுடையவரும் ஆகிய தலைவர்களின் கறுத்த குடுமிகளில் சிவந்த ஒளி பதியுமாறு புதிய நிறத்தைக் கொடுக்கும் செம்பஞ்சு ஊட்டிய (மகளிர்) பாதம் போலத் தாமரை மலர்கள் விளங்கின. பூங்கொடி போன்ற வடிவுடைய அம் மகளிரின் இடை நடுங்குதல் போன்று கொடிகள் அசைந்தன.

கு :—செந்தாமரை மலர்கள் மகளிரின் செம்பஞ்சூட்டிய மெல்லடி போலப் பொலிந்தன என்பார், வீரச் சுவையும் இன்பச் சுவையும் தோன்ற அவ்வடிகளைச் சிறப்பித்தார். செஞ்செவேலவர், செறி சிலைக் குரிசிலர் என்றது தலைவர்களின் வீரவுணர்ச்சியை விளக்குதலும், 'இருண்ட குஞ்சி சேயொளி கதுவப் புது நிறம் கொடுக்கும் பஞ்சி போர்த்த மெல்லடி' என்றது, இன்பச் சுவையை விளக்குதலும் காண்க. மகளிரின் ஊடல் தீர்க்க மைந்தர், அம்மகளிரின் அடி பணிதலும், பணிந்த தலைவர்களின் தலையில் அம்மகளிர் உதைத்தலும், அதனால் அவரடியிலுள்ள செம்பஞ்சுக் குழம்புபட்டு மைந்தரின் கருமயிர்க் குடுமி செந்நிறம் அடைதலும் உய்த்துணர வைத்தவாறு. 'செஞ்சிலைக் கரத்தர் மாதர் புலவிகள் திருத்திச் சேந்த குஞ்சியர்' (பால-மிதிலைக் - 20) என்றதும், "குழலுலாங் களி வண்டார்க்குங் குஞ்சியாற் பஞ்சி குன்ற......மாதருமில்லை" (சுந்தர-ஊர் தேடு - 36) என்பதும் நினைக. "புலந்தவள் கொடியென நடுங்கிப் பொன்னரிச் சிலம்பொடு மேகலை மிழற்றச் சென்னிமேல் அலங்கல் வாய் அடிமலர் அணிந்து......ஏகினள். (சீவக - 1019) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். கொடியென நடுங்கி என்று தேவர் கூறிய உவமையையே 'மருங்கென நுடங்கின வல்லி' என மாற்றிப் பொருளை யுவமஞ் செய்தார். புலந்து தலைவர் முடிமேல் அடிமலரணியும் போது தலைவியர் இடை நடுங்குமாறு போலக் கொடிகள் நுடங்கின என்க. அடிமலர் எனத் தேவர் உருவகமாகக் கூறியதை 'அடியெனப் பொலிந்தன பதுமம்' எனப் பொருளையுவமமாக்கிக் கூறினர். இதனை 'விபரீதவுவமை' என்பர் தண்டியலங்கார முடையார். 'பஞ்சி போர்த்த மெல்லடி என, உவமையைப் புகழ்தலின் புகழ்தலுவமையும் ஆம். செவ் என்புழி வகரம் தொகுத்தல். குஞ்சி-ஆடவர் குடுமிமயிர்; அது இருண்டது ஆகலின், செம்பஞ்சின் சேயொளி கதுவுதலைப்புதுநிறம் என்றார். கதுவுதல்-பற்றுதல். இயற்கையில் சிவந்த மகளிர் பாதங்கள் செம்பஞ்சுக் குழம்பால் மேலும் சிவத்தலின் செந்தாமரை மலர் செழிப்புக்கு உவமையாக்கினர். 'வஞ்சி போலியர் மெல்லடி' என மேலும் கூட்டுக. 'முகமெனப் பொலிந்தன கமலம்' (36) என மேல் கூறியது மலர்ச்சிக்கு எனவும் இங்குச் செவ்வொளிக்கு உவமை எனவும் வேறுபாடு காண்க. (45)

குயில்கள் குரல் காட்டாமை

**4298.** நீயி ரன்னவள் குதலையி
ராதலி னேடிப்
போய தையலைத் தருதிரென்
றிராகவன் புகலத்

தேய மெங்கணுந் திரிந்தன
போந்திடைத் தேடிக்
கூய வாய்க்குரல் குறைந்தபோற்
குறைந்தன குயில்கள்.

'நீயிர் அன்னவள் குதலையிர் ஆதலின் நேடிப்
போய தையலைத் தருதிர்' என்று, இராகவன் புகலத்
தேயம் எங்கணும் திரிந்தன போந்து இடைத் தேடிக்,
கூய ஆய், குரல் குறைந்தபோல் குறைந்தன—குயில்கள்.

பொ :—'நீங்கள் அச்சீதையின் மழலைச் சொல் போன்ற இனிய குரலையுடையவர்கள், (அவளோடு இயைபுடையவர்களாவீர்) ஆதலின், என்னை விட்டுப் போன சீதையைத் தேடித் தாருங்கள்' என்று இராமன் (குயில்களை நோக்கிக்) கூற, (அவன் சொல்லிய வண்ணமே) உலகின் பலவிடங்களிலும் தேடித் திரிந்து வந்து அந்த அந்த இடங்களில் அவளை உரத்துக் கூவி அழைத்தனவாய் (அதனால்) குரல் கம்மினபோலக் குயில்கள் குரல் குறைந்து அடங்கின,

கு :—கார் காலத்தில் குயில் கூவாமையாகிய இயல்பு நிகழ்ச்சிக்கு, இராமன் கட்டளைப்படி அவை சீதையைத் தேடிக் கூவியதால் குரலடங்கினபோல அடங்கின எனக் காரணம் கற்பித்துக் கூறியது தற்குறிப்பேற்ற அணி. அன்னவள் எனச் சுட்டு முன் வந்தது; செய்யுளாதலின். அன்னவள் குதலையிர் என்றது, அச்சீதையின் குதலைச் சொல் போன்ற இனிமையுடைய குரலினிர் என்றவாறு. குரலால் ஒற்றுமையுடையீராதலின் அவளைக் கூவித் தருதற்கு நீயிரே இயைபுடையீர் என இராமன் குயில்களைப் பார்வைப் பறவையாகக் கொண்டு குயின்மொழியினளாகிய சீதையைப் பெற நினைந்தான் என்றவாறு. யானையால் யானையாக்குமாறுபோலக் குயிலால் குயில்மொழியாளைத் தேடிப் பிடிக்க முயன்றவாறு. நேடித்தருதிர் - என இயையும். நேடுதல் - தேடுதல். கூய்வாய் - கூவினவாய். உரத்துக் கூவிக் கொண்டே இருந்தால் குரல் கம்முதல் இயல்பு. குரல் குறைந்தன எனப் பின்னும் இயையும். கார்காலத்தில் குயில் கூவாமை, 'ஆடின' மயில்கள் பேசாது அடங்கின குயில்கள். (26) என முன் கூறியதாலும், "கருங்குயில் கையற மாமயிலால" (கார் நாற் - 16) என வருதலாலும் அறியலாம். இராகவன், இரகுவின் மரபில் பிறந்தவன் என்ற காரணம் பற்றி. இராமனுக்குப் பெயராயிற்று; தந்திதாந்தம் என்பர். குதலை, குழந்தைப் பருவத்திற்கேயுரிய தாயினும் பெண்டிர்க்கு எல்லாப் பருவத்தினும் கூறுதல் கவிமரபு. (46)

ஆம்பியும் பிடவமும்

4299. பொழிந்த மாநிலம் புற்றரக்
குமட்டிய புனிற்ரு
வெழுந்த வாம்பிக ளிடறின
செறிதயி ரேய்ந்த
மொழிந்த தேனுடை முகிழ்முலே
யாய்ச்சியர் முழவிற்
பிழிந்த பால்வழி நுரையினேப்
பொருவின பிடவம்.

பொழிந்த மாநிலம் புல்தரக் குமட்டிய புனிற்ரு
எழுந்த ஆம்பிகள் இடறின, செறிதயிர் ஏய்ந்த;
மொழிந்த தேனுடை முகிழ்முலே ஆய்ச்சியர் முழவில்
பிழிந்த பால்வழி நுரையினேப் பொருவின—பிடவம்,

பொ :—மழை பொழியப் பெற்ற பெரிய நிலம் பசும் புல்லேத் தோற்றுவித்துத்தர அப்புல்லே நிரம்ப மேய்ந்து தெவிட்டிய, கன்றை யீன்ற பசுவின் காலால் (நிலத்தில் மழையால்) எழுந்த காளாம்பிகள் இடறப் பெற்றவை, கட்டித் தயிரைப் போன்று விளங்கின; பிடவச் செடிகளின் வெள்ளிய மலர்கள், சொல்லும் சொல்லாகிய தேனே யுடையவர்களும் நீர்மொக்குள் போன்ற முலேயினேயுடையவர்களு மாகிய இடைச்சியர், குடத்தில் கறந்த பாலிலிருந்து வழிகின்ற நுரை யைப் போன்று விளங்கின.

கு :—கார்காலத்தில் நிலத்தில் தோன்றும் வெண்மையான காளாம்பிகளேப் புல்லே மேய்ந்த ஆக்கள் காலால் இடறிச் சிதறுகின் றன; அவ்வாறு சிதறிய காளாம்பிகளின் தோற்றம் சிந்திய கட்டித் தயிர் போலக் காணப்படுகின்றது. பிடாவின் புதரில் வெள்ளிய மலர்கள் மாலே போலப் பூத்திருக்கும் தோற்றம் இடைக்குல மகளிர் மிடாவில் கறந்த பாலிலிருந்து வழியும் வெள்ளிய நுரைபோலக் காணப்படுகின்றது; என நிறமும் வடிவும் பற்றி உவமை கூறினர். கார்காலத்து முல்லேநிலத்துத் தோன்றும் பொருள்களாகிய காளாம்பி கட்கும் பிடவமலர்க்கும் அந்நிலத்துத் தயிரையும் பால் நுரையினேயும் உவமை கூறியுள்ளமையும், ஆய்ச்சியர் கொங்கைகட்குக் கார் காலத் தில் தோன்றும் நீர்க் குமிழியை உவமை கூறியிருத்தலும் நோக்குக. பொழிந்த என்ற பெயரெச்சம் செயப்படு பொருட் பெயரைக் கொண் டது; உண்ட சோறு என்பதுபோல. புல்லின் விதைகளேத் தன்கண் வைத்திருந்து மழை பொழிந்தவுடன் முளேக்கச் செய்வது நிலமே

யாகலின் ‘ நிலம் புல் தர ’ என்றார். குமட்டுதல், வயிறு நிரம்பி விட்டமையால் தெவிட்டுதல். வயிறு நிரம்பிய மகிழ்ச்சியால் பசுக்கள் அங்குள்ள காளாம்பிகளைக் காலால் சிதறடித்து விளையாடின என்க. ஆக்களுக்கு அவ்வியல்பு உண்டு என்பதை “ மாற்றார் குடையெல் லாங் கீழ்மேலாய் ஆவுதை காளாம்பி போன்ற ” (களவழி - 36) என்றதால் அறியலாம். ஆம்பிக்கும் தயிர்க்கும் ஒப்புமையுண்மை, ‘ஆம்பிவான் முகையன்ன கூம்புமுகிழ் உறையமை தீந்தயிர்’ (பெரும்பாண்-157) என்றதாலறியலாம். மொழிந்ததேன் என்றமையால் சொல்லாகியதேன் என்பது பெறப்படும். தேன் உவமையாகு பெயராய்ச் சொல்லை யுணர்த்தியது. முகிழ் - மொக்குள். ‘ பெயல்துளி முகிழெனப் பெருத்த நின்னிளமுலை ’ (குறிஞ்சிக்கலி - 20) என உவமித்துள்ளதும் காண்க. முழவு என்பது இங்குப் பால் கறக்கும் குடத்தினையுணர்த்தியது. பிடவப் புதர் குடம் போன்றது ; அப்புதரில் மலர்ந்து மாலைபோன்று தொங்கும் மலர்கள் அப்பாற்குடத்தில் தொடர்ந்து வழியும் பால்நுரை போன்றது என்க. ‘ கடத்திடைப் பிடவின் றொடைக்குலை ’ (பதிற்றுப் - 66 ; 17) என்பது காண்க. இடறின, வினைப் பெயர், பிடவம் என்பது ஆகுபெயராய் அதன் மலர்களை யுணர்த்திற்று. பிடவம் செடிவகையுள் ஒன்று ; கார்காலத்துப் பூப்பது. (47)

### நானிலத்து மலர்களும் மலர்தல்

4300. வேங்கை நாறின கொடிச்சியர்
வடிக்குழல் விரைவண்
டேங்க நாகமு நாறின
நுளைச்சிய ரைம்பா
லாங்குநாண் முல்லை நாறின
வாய்ச்சிய ரோதி
ஞாங்க ருற்பல முழத்தியர்
பித்திகை நாற.

வேங்கை நாறின, கொடிச்சியர் வடிக்குழல், விரை வண்டு
ஏங்க ; நாகமும் நாறின, நுளைச்சியர் ஐம்பால் ;
ஆங்கு நாள் முல்லை நாறின ஆய்ச்சியர் ஓதி ;—
ஞாங்கர் உற்பலம் உழத்தியர் பித்திகை நாற.

பொ :—மருத நிலத்து உழத்தியர் கூந்தலில் அந்நிலத்துப் பூத்த செங்கழுநீர் மலர்கள் சூடப் பெற்று மணம்வீச,—குறிஞ்சி நிலத்துக்

குறப்பெண்டிரின் அழகு செய்யப்பெற்ற கூந்தலில் இயற்கை மணத்தை நுகர்ந்து கொண்டிருந்த வண்டுகள் அம்மணத்தை விட்டு விலகி ஏங்குமாறு, அந்நிலத்துப் பூத்த வேங்கை மலர்கள் சூடப் பெற்று மணம் வீசின; நெய்தல் நிலத்து வலைச்சியர் கூந்தலில் அந் நிலத்துப் பூத்த புன்னை மலர்கள் சூடப்பெற்று மணம் வீசின ; முல்லை நிலத்து இடைக்குல மகளிர் கூந்தலில் அந்நிலத்துப் பூத்த புதிய முல்லை மலர்கள் சூடப்பெற்று மணம் வீசின.

கு :—கார்காலத்தில் நானிலத்தும் மலர்கள் பூத்தன என்பதை அவ்வந்நிலத்து மகளிர் கூந்தலில் சூடப்பெற்ற மலர்களின் மண மாகிய காரியத்தால் அனுமானித்து உணர்த்தியவாறு. வேங்கை மலரில் வண்டுகள் தேனுண்பதில்லையாதலின் கொடிச்சியர் அவ் வேங்கை மலரைச் சூடினவுடன் அவர்கள் கூந்தலில் இயற்கை மணத்தை நுகர்ந்து கொண்டிருந்த வண்டுகள் அம்மணத்தை விட் டுப் பறந்து சென்று ஏங்கலாயின. ஏங்குதல் - பழமை நினைந்து வருந்துதல். வடிக்குழல் - அழகு செய்யப் பெற்ற கூந்தல். வடித்தல்- அலங்கரித்தல். குழல் விரைவண்டு என்றது, கூந்தலில் இயல்பாக வுள்ள மணத்தை நுகர்ந்து கொண்டிருந்தவண்டு என்றவாறு. குழல், ஐம்பால், ஓதி, பித்திகை என்ற நான்கு சொற்களும் கூந்தல் என்ற ஒரு பொருளைக் குறித்த திரிசொற்கள். நாறின என்பது மணம் வீசின என்ற பொருளில் நான்கிடத்தும் வந்தன ; சொற்பொருட் பின் வரு நிலையணி. கொடிச்சியர் - குறத்தியர். நுளைச்சியர் - நெய்தல் நிலத்து வலைஞர் மகளிர். ஆங்கு-அசை நிலை. பித்திகை ஞாங்கர் என இயையும். ஞாங்கர் - பக்கம். உற்பலம் - செங்கழுநீர்ப்பூ : இது மருத நிலத்தில் பூப்பது. குறிஞ்சி, நெய்தல், முல்லை, மருதம் என நானி லங்களையும் முறைப்படுத்திக் கொண்டு அவ்வந்நிலங்களில் மலர்ந்த மலர்களைக் கூறினர். வேங்கை, நாகம், முல்லை உற்பலம் என்ற முதற் பெயர்கள் முதலாகுபெயராய்ச் சினையாகிய மலர்களை யுணர்த் தின. உழத்தியர் பித்திகைநாற நாறின என இயையும். ஏங்க, என்பதற்கு ஆரவாரிப்ப எனப் பொருள் கொண்டு வண்டுகள் ஆரவா ரிக்க வேங்கை முதலிய மலர்கள் நாறின என இயைத்துக் கூறலு மாம். நாகம் - புன்னை. (48)

## இராமன் கார்காலம் கண்டு கவலுதல்

4301. தேரைக் கொண்டபே ரல்குலா
டிருமுகங் காணு
ணரைக் கண்டுயி ராற்றுவா
னல்லுணர் வழிந்தான்

மாரற் கெண்ணில்பல் லாயிர
மலர்க்கணே வகுத்த
காரைக் கண்டனன் வெந்துயர்க்
கொருகரை காணுன்.

தேரைக் கொண்ட பேர் அல்குலாள் திருமுகம் காணுன்
ஆரைக் கண்டு உயிர் ஆற்றுவான்? நல் உணர்வு அழிந்தான்;
மாரற்கு எண் இல் பல் ஆயிரம் மலர்க்கணே வகுத்த
காரைக் கண்டனன்; வெந்துயர்க்கு ஒருகரை காணுன்.

பொ :—தேரின் தன்மையைக் கொண்ட பெரிய அல்குலேயுடைய சீதையின் அழகிய முகத்தைக் காணுதவனுகிய இராமன், வேறு யாரைக் கண்டு உயிரோடு ஆற்றியிருப்பான்? (சீதையின் முகம் போன்று அழகிய பொருள் இவ்வுலகத்து வேறு இன்மையால்) தன் நல்ல உணர்வு அழிந்து வருந்துவானுயினுன்: (அவ்வாறு உணர் வழிந்தவன்) அதற்கு மேலும் மன்மதனுக்கு எண்ண இயலாத பல ஆயிரக்கணக்கான மலராகிய அம்புகளே உண்டாக்கிக் கொடுத்த கார் காலத்தைக் கண்டு, அது செய்யும் கொடிய துன்பக் கடலுக்கு ஒரு கரை காணுதவனுயினுன்.

கு :—சீதையின் திருமுகங் காணுமையால் நல்லுணர்வு அழிந்து வருந்தும் இராமன், அதற்கு மேலும் தன்னே வருத்தவேண்டி மன்மதனுக்குப் பல்லாயிரக்கணக்கான மலர்க்கணேகளேப் படைத்துக் கொடுத்த கார்காலத்தைக் கண்டு கரைகாண முடியாத துயர்க்கடலில் அழுந்தினுன் என்றவாறு. சீதையின் திருமுகத்தைக் காணுமையால் உளதாய துன்பத்தை இவ்வுலகத்து வேறு ஒரு பொருள் கண்டு ஆற்ற இயலாது ஆதலின் 'ஆரைக் கண்டுயிராற்றுவான்?' என்ருர். "எப்பெண்பாலுங் கொண்டுவமிப்போர் உவமிக்கும் அப் பெண்தானேயாயின போதிங் கயல்வேருேர் ஒப்பெங்கே கொண் டெவ்வகை நாடி யுரைசெய்வோம்'' (பால - மிதிலே. 24) எனச் சீதைக்கு ஒப்பாரில்லாமையை யுணர்த்தியதும், ''பெருந்தேரல்குற் பெண்ணிவ ளொப்பாள் ஒரு பெண்ணேத் தருந்தான் என்ருல் நான் முகன் இன்னுந் தரலாமே" (மிதிலேக் - 27) எனப் பிரமனும் படைக்க முடியாமையும் கூறியிருத்தல் காண்க. சீதையின் முகத்திற் கொப் பான பொருள் இன்மையால் ஆற்ற கில்லானுய் உயிரும் உணர்வும் தேய்ந்தான் என்பார்; 'ஆரைக் கண்டுயிர் ஆற்றுவான் நல்லுணர் வழிந்தான்' என்ருர். ''ஆகம் பூண்ட மெய்யுயிரே போகப் பொய் யுயிர்போல நின்ற ஆண்டகை'' (சுந்தர - உருக் 77) எனக் கூறுத லும் காணலாம். நானிலத்தும் கார்காலத்து மலர்கள் பூத்தமை மேல் கூறினுராதலின், அவற்றில் மன்மதன் கணேயாய் இராமன்

மேல் எய்தற்குரிய தாமரை முதலிய மலர்கள் அள்விலவாய் இருத்தலின் 'மாரற் கெண்ணில் பல்லாயிர மலர்க்கணை வகுத்த கார்' என்ருர். கார்காலம் பிரிவாற்ருத் துயரை மிகுதிப் படுத்துவதோடு, மன்மதனுக்கும் உதவியாய் மலர்க்கணைகளைத் தருகின்றது என அதன் கொடுமையை மிகுதிப்படுத்தியவாறு. காரைக் கண்டனன், கரை காணுன் என்றது முரண்டொடை. கரை என்ற குறிப்பால் வெந்துயர்க்கடல் என்ற உருவகம் பெறவைத்தமையால் இது குறிப்புருவகம். கரைகாணுன் என்றமையால் வெந்துயர்க் கடலில் ஆழ்ந்தமை புலப்படுத்தியவாறு. கடலுக்குள்ள நாற்கரையில் ஒரு கரையும் கண்டிலன் என்பார் 'ஒரு கரை' என்ருர். காணுன், வினைப்பெயர். கண்டனன், முற்றெச்சம். (49)

**4302.** அளவில் காரெனு மப்பெரும்
பருவம்வந் தணைந்தால்
தளர்வ ரென்பது தவம்புரி
வோருக்குந் தகுமால்
கிளவி தேனினு மமிழ்தினுங்
குழைத்தவள் வளைத்தோள்
வளவி யுண்டவன் வருந்துமென்
ருலது வருத்தோ.

அளவு இல் கார் எனும் அப்பெரும் பருவம் வந்து அணைந்தால்
தளர்வர் என்பது தவம்புரிவோருக்கும் தகுமால்;
கிளவி தேனினும் அமிழ்தினும் குழைத்தவள் வளைத்தோள்
வளவி யுண்டவன் வருந்தும் என்ருல் அது வருத்தோ?

பொ :—கார்காலம் என்கின்ற அந்த அளவிலாத பெரிய பருவம் வந்து அடைந்தால் மன வுறுதியினின்று தளர்ச்சி யடைவார்கள் என்பது (பொறிவழி போவோர்க்கே யன்றி) பொறிகளையடக்கித் தவம் செய்யும் முனிவர்க்கும் பொருந்தும்; ஆதலால், தேனினும் அமிழ்தினும் குழைத்துக்கொண்டாற் போன்ற சொற்களையுடைய சீதையின் வளையல் அணிந்த தோள்களைக் கலந்து துய்த்த இராமன் இக் கார்காலத்தில் வருந்துவான் என்ருல் அவ்வருத்தம் எளிய வருத்தமாக எண்ணப்படுமோ? (படாது).

கு —'வருந்தும் என்ருல் அது விருந்தோ' என்று பாடம் இருப்பின் சிறக்கும். 'கார் எனும் அவ்அளவில் பெரும் பருவம்' என இயையும். ஏனைப் பருவங்களைப் போன்றே கார்ப் பருவமும் இரு

திங்கள் என்னும் கால வரம்பு உடையதாயினும், பிரிந்தார்க்குப் பெருந் துன்பம் விளைத்து மிக நெடிதாகத் தோற்றுதலின், அளவில் பெரும் பருவம் என்றார். அகரம் உலகறி சுட்டு. தவம் புரிவோருக்கும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. பொறிகளை யடக்கித் தவம் புரிவோரையும் தளர்வுறச் செய்யும் கார்ப் பருவத்தில் அழகு மிக்க சீதையினிடத்தில் ஐம்பொறி யின்பத்தை ஆரத் துய்த்தவன் அவளைப் பிரிந்து வருந்துதல் சொல்ல வேண்டுமோ ? என்றவாறு. தேனினும் அமிழ்தினுங் குழைத்த கிளவியள் என்பது கருத்தாகக் கொள்க. தேனினும் அமிழ்தினும் குழைத்தாற் போன்ற இனிய சொற்களையுடையவள் என்றவாறு. 'அஞ்சொற்கள் அமுதில் அள்ளிக் கொண்டவள்' (ஆரணி-மாரீசன்வ-70) என்பதும், "குழலும் யாழும் அமிழ்துங் குழைத்த நின் மழலைக் கிளவிக்கு" (சிலப் - 2: 58) என்பதும், "கரும்புந் தேனும் அமுதும் பாலும் கலந்த தீஞ்சொல்" (சீவக - 2438) என்பதும் இங்கு ஒப்புநோக்கத்தகும். வளைத்தோள்-வளையணிந்த தோள். வளாவுதல் - கலத்தல். கார்காலத்தில் சீதையின் பிரிவால் இராமன் படுதுயர் பெரிது என்பதை இதனல் விளக்கியவாறு. (50)

**4303.** காவி யுங்கருங் குவளையு
நெய்தலுங் காயாம்
பூவை யும்பொரு வானவன்
புலம்பினன் றளர்வா
ஞவி யுஞ்சிறி துண்டுகொ
லாமென வயர்ந்தான்
தூவி யன்னமன் ஞடிறத்
திவையிவை சொல்லும்.

காவியும், கருங்குவளையும், நெய்தலும், காயாம்
பூவையும் பொருவான் அவன், புலம்பினன் தளர்வான்,
'ஆவியும் சிறிது உண்டு கொலாம்' என அயர்ந்தான்,
தூவி அன்னம் அன்னாள் திறத்து இவை இவை சொல்லும்.

பொ :—காவி மலரையும், கருங்குவளை மலரையும், கருநெய்தல் மலரையும், காயாம்பூவையும் நிறத்தால் ஒப்பவனாகிய அந்த இராமன், புலம்பித் தளர்பவனாய், 'இவனுக்கு உயிரும் சிறிது உண்டோ?' என்று கண்டோர் ஐயுறுமாறு மூச்சு அற்றவன் (பின் சிறிது தெளிந்து) தூவியையுடைய அன்னப் பறவை போன்றவ

ளாகிய சீதையின் சார்பாக இந்த இந்தச் சொற்களைச் சொல்பவ னானன். (அவற்றை அடுத்த பன்னிரண்டு கவிகளிற் காண்க).

கு :—காவி, கருங்குவளை, நெய்தல் என்பன ஓரினமாயினும் சிறிது சிறிது வேறுபாடுடையவை. காவி - நீலோற்பலம். காவி முதலிய மூன்று பெயர்களும் ஆகுபெயராய் அவற்றின் மலர்களை யுணர்த்தின. காயா, ஒருவகைச் செடி. இது காசா என வழங்கும். இம் மலர்கள் நான்கும் இராமனுடைய நீல மேனிக்கு உவமை. இது, பல்பொருளுவமை. "எள்ளில் பூவையும் இந்திர நீலமும், அள்ளல் வேலையும் அம்புத சாலமும், விள்ளும் வீயுடைப் பானலும் மேவுமெய் வள்ளல்" (மிதிலைக் - 90) என்றது இங்கு ஒப்புநோக்கத் தகும். பொருவான் அவன் - ஒப்பவனாகிய அவ்விராமன். பொரு வானவன் என்று கொண்டு, ஒக்கின்ற திருமாலாகிய தேவன், என்று பொருள் கூறலும் ஆம். புலம்பு - தனிமைத்துயர். சீதையைப் பிரிந்தமையால் தனிமையுற்றுத் தளர்கின்றவனாய் அயர்ந்தவன் பின் சிறிது தெளிந்து சொல்லும் என்க. தளர்ச்சியால் மூச்சற்ற நிலையில் இராமன் இறந்தவன்போலக் காணப்பட்டான் என்பார் 'ஆவியுஞ் சிறிதுண்டு கொலாமென அயர்ந்தான்' என்றார். அயர்தல், இங்கு மூச்சற்ற நிலையை யுணர்த்தியது. "ஆகம், பூண்ட மெய்யுயிரே போகப் பொய்யுயிர்போல நின்ற ஆண்டகை" (சுந்தர - 77) என் பதும் காணலாம். தூவி - சூட்டு மயிர். 'ஆய்தூவி யனமென' (கலித் தொகை - 56) என்புழியும் பெண்டுக்கு அன்னம் உவமையாதலைக் காணலாம். இதனால் சீதையின் மென்மையும் பிறன்கைப் படுதற் குரிய எளிமையும் புலப்படுத்தியவாறு. திறம் - சார்பு. (51)

## இராமன் காரொடு கூறுதல் 4304-4305

**4304.** ★
வாரேர் முலையா ளைமறைக் குநர்வா
ழூரே யறியே னுயிரோ டுழல்வேன்
நீரே யுடையா யருணின் னிலையோ
காரே யெனதா விகலக் குதியோ.

வார் ஏர் முலையாளை மறைக்குநர் வாழ்
ஊரே அறியேன் ; உயிரோடு உழல்வேன் ;
நீரே உடையாய் ? அருள் நின் இலையோ ?
காரே ! எனது ஆவி கலக்குதியோ ?

பொ :—கரிய மேகமே! கச்சு அணிந்த அழகிய கொங்கையை யுடைய சீதையை மறைத்து வைத்துள்ள இராவணன் வாழ்கின்ற

ஊரையே அறிந்து கொள்ள இயலாமல் (வருந்தி) உயிரோடு திரிந்து கொண்டிருக்கின்றேன்; (அவ்வாறு துன்புறும்) என்னுடைய உயிரை மேலும் கலங்கச் செய்கின்றாயோ? நீரை மட்டுமே நின்பால் உடை யையோ? அந்நீரின் தன்மையாகிய அருள் நின்பால் இல்லையோ?

கு:—கார்காலத்தைக் கண்டவுடன் தலைவன், தலைவியுள்ள ஊர் நோக்கி விரைதலே இயல்பாதலின், இராமன் கார்காலத்தைக் கண்ட வுடன் அவ்வாறு சீதையுள்ள ஊர் நோக்கி விரைய இயலாமை விளக்கியவாறு. சீதையுள்ள இடத்தையே யன்றி அவளை மறைத்து வைத்துள்ள இராவணன் ஊரையும் அறியாமல் வருந்தித் திரிகின்ற இராமனைக் கார்காலம், 'வெந்ததோர் புண்ணின்கண் வேல்கொண்டு நுழைப்பான்போல்' (கலி - 120) மழை பெய்து மேலும் வருத்துத லால் அந்தக் காரினை விளித்து 'நின்பால் அருள் இல்லையோ' என நொந்து வினவியவாறு. வஞ்சித்துக் கொண்ட பேரழகியாகிய சீதை யைப் பிறர் காணாவாறு இராவணன் மறைத்தே வைத்திருப்பான் என்ற துணிவால் 'மறைக்குநர்' என்றான்; இழித்தற்கண் வந்த பன்மை; 'தாம் வந்தார் தொண்டனார்' என்புழிப்போல. சீதையை எடுத்துச் சென்றவன் இராவணனே என்பதைச் சடாயுவின் சொல் லால் தெளிய உணர்ந்தவனாயினும் 'அவன் ஊர் யாண்டுளது' என் பதையும் அறியும் ஆற்றல் தனக்கில்லையே எனத் தன்னை இழித்துக் கூறுவான், 'ஊரே யறியேன் உயிரோடுழல்வேன்' என்றான். 'சாதற் குரிய யான் சாகாது வருந்தித் திரிகின்றேன்' என்றவாறு. நீரின் தன்மை ஈரம் அல்லது அருள் ஆதலின், நீரையுட் கொண்டுள்ள கார் அந்நீரின் தன்மையாகிய அருளை [மேற்கொள்ளாதிருத்தல் வியப்பு என்பான், 'நீரேயுடையாய் அருள்நின் இலையோ' என்றான் கார்க்கு அருளும் இருப்பின் சீதையின் பிரிவால் வருந்துந்தன்னை மேலும் வருத்தாது என்பது கருத்து. வார் - கச்சு. காரே, உழல வேன் எனதாவி கலக்குதியோ? அருள் நின்னிலையோ" என இயையும். (52)

4305. வெப்பார் நெடுமின் னினெயிற் றைவெகுண்
டெப்பா லும்விசும் பினிருண் டெழுவா
யப்பா தகவஞ் சவரக் கரையே
யொப்பா யுயிர்கொண் டலதோ வலையோ.

'வெப்பு ஆர் நெடுமின்னின் எயிற்றை; வெகுண்டு,
எப்பாலும் விசும்பின் இருண்டு எழுவாய்;
அப் பாதக வஞ்ச அரக்கரையே
ஒப்பாய்; உயிர்கொண்டு அலது ஓவலையோ?'

பொ :—'(காரே!) வெம்மை நிறைந்த நீண்ட மின்னலாகிய கோரப் பல்லை யுடையாய்; கோபித்து ஆகாயத்தின் எந்தப் பக்கத்தும் இருண்டு எழுகின்ருய்; ஆதலால், அந்தக் கொடுஞ் செயலையுடைய வஞ்சனை நிறைந்த அரக்கரையே ஒத்து விளங்குகின்ற நீ (அவர் களைப் போல) என் உயிரைக்கொண்டு அல்லது போக மாட்டாயோ?'

கு :—முன்னைச் செய்யுளில் வந்த 'காரே' என்பதையே இச் செய்யுட்கும் எழுவாயாகக் கொள்க. கார் அரக்கர் போன்றது என ஏது உவமை கூறியவாறு. அரக்கர்க்குக் கோரப் பல்லும் விசும்பின் எப்பாலும் இருணிறத்தோடு வெகுண்டெழுதலும் இயல்பு. மேகமும், நெடுமின்னுகிய கோரப் பல் உடையதாய் இடியொலி செய்து வெகுண்டு இருண்டு விசும்பின் எப்பாலும் பரவி எழுகின்றது; எனவே மேகம் அரக்கரையே ஒப்பதாயது. 'என் உயிர் போன்ற சீதையைக் கொண்டு நீங்கிய பாதகச் செயலையுடைய அவ்வரக் கரைப் போல நீயும் என் உயிரைக் கொண்டன்றிப் போக மாட் டாயோ?' என்றவாறு. உறுப்பாலும் கறுப்பாலும் அரக்கரை ஒத்த நீ, பாதகச் செயலாலும் அவரோடு ஒப்பாகவேண்டி என் உயிரைக் கொண்டுதான் போவாயோ? என்பது கருத்து. இதனுல் மேகம் இராமனைக் கொன்ருற்போன்ற வருத்தத்தைச் செய்தது என்பது புலப்படுத்தியவாறு. வெப்பு - வெம்மை; கொடுமை. மின்னின் என் புழி இன் தவிர்வழிச் சாரியை. மின்னெயிறு உருவகம். எயிற்றை என்பதில் ஐகாரம் முன்னிலை ஒருமை விகுதி. பாதகம், உயிர்க் கொலை முதலிய கொடுஞ் செயல்கள். ஓவுதல் - நீங்குதல். "சொல்லா மரபினவற்ருெடு கெழீஇச், செய்யா மரபிற்ருெழிற்படுத் தடக்கியும்" (தொல்-பொருளியல் - 2) என்ற விதியில் காரொடு கூறிய இராமன் கூற்று அடங்குதல் காண்க. (53)

## மயிலொடு மொழிதல்

4306. அயிலேய் விழியார் விளையா ரமிழ்தின்
குயிலேய் மொழியார்க் கொணராய் கொடியாய்
துயிலே ஞெருவே னுயிர்சோர் வுணர்வாய்
மயிலே யெனைநீ வலியா டுதியோ.

'அயில் ஏய் விழியார், விளை ஆர் அமிழ்தின்
குயில் ஏய் மொழியார்க் கொணராய்; கொடியாய்!
துயிலேன் ஒருவேன் உயிர் சோர்வு உணர்வாய்;
மயிலே! எனைநீ வலி ஆடுதியோ?'

பொ :—'மயிலே! வேலைப்போன்ற விழியையுடையவரும் பாற் கடலில் தோன்றிய அரிய அமிழ்தினையும் குயிலின் குரலையும் போன்ற மொழியையுடையவரும் ஆகிய சீதையாரைத் தேடிக் கொணரவு மாட்டாய்; கொடுந்தன்மையுடையோய்! அதற்கு மேலும், அவள் பிரிவால் உறக்கங் கொள்ளாமல் தனித்திருக்கின்ற என்னுடைய உயிர் சோர்ந்திருத்தலை உணர்ந்துள்ள நீ, என்பால் வலிமையும் காட்டுகின்றுயோ ?'

கு :—மயிலின் ஆடல் பிரிவாற்ருமையை மிகுவிப்பதோடு சீதை யின் சாயலையும் நினைப்பித்து வருத்துதலின் இராமன் அம்மயிலை நோக்கி இவ்வாறு வினவலானுன். 'நல்லது செய்தலாற்றீர் ஆயி னும் அல்லது செய்த லோம்புமின்' (புறநா - 195) என்ற ஆன்ருேர் மொழிக்கு ஏற்ப மயில் சீதையைக் கொணர்ந்து தரும் நல்வினையைச் செய்யாதொழியினும், அச் சீதையின் பிரிவால் உறங்காது வருந்தி உயிர் சோர்ந்துள்ள தன்னை வருத்துதலாகிய தீவினை செய்தலை யேனும் தவிர்ந்திருக்கலாம்; அங்ஙனமின்றி, நல்லது செய்யாமை யோடு அல்லது செய்தலையும் மேற்கொண்டமையால் மயிலைக் 'கொடி யாய்!' என்ருன். விழியார், மொழியார் என்பன உயர்த்தற்கண் வந்த பன்மை. அமிழ்தினையும் குயிலையும் ஒத்த மொழி என்க. குயில் ஆகுபெயராய்க் குரலை யுணர்த்தியது. பிரிந்தார்க்கு உறக்கமின்மை இயல்பு. ஒருவேன் என்றது சீதையைப் பிரிந்து தனித்திருக்கும் நிலையை யுணர்த்தியது. ஒருவர் உயிர் சோர்ந்திருக்கும் நிலை கண்டு தன் வலிமை காட்டுதல் வீரம் அன்று ஆதலின், 'உயிர் சோர்வுணர் வாய் எனை நீ வலியாடுதியோ ?' என்ருன். அழிகுநர் புறக்கொடை யயில்வா ளோச்சாக் கழிதறு கண்மை யுடையன் இராமன் ஆதலின், இங்ஙனம் வினவினுன். "ஆளையாவுனக் கமைந்தன மாருதமறைந்த, பூளையாயின கண்டனை யின்று போய்ப் போர்க்கு நாளைவா" (யுத்த-முதற் போர். 256) என இராவணன்பால் கூறுவது காணலாம். "ஓடா நின்ற களி மயிலே!......என்னுயிரைத் தெரியக் கண்டாய்; சிந்தை யுவந்து, ஆடா நின்ருய்; ஆயிரங் கண்ணுடையாய்க்கு ஒளிக்கு மாறுண்டோ?" (பம்பைப் - 26) என இராமன் முன் கூறிய தால் மயில் அவன் சோர்வை உணர்ந்திருக்க வேண்டும் என்ற கருத்தால் இங்கு 'ஒருவேனுயிர் சோர்வுணர்வாய்' என்ருன். ஆடுதல் - செய்தல். இங்கு, வலிமையைக் காட்டுதலை யுணர்த்தியது. எனை, உருபு மயக்கம் - என்பால் என்க. துயிலேன், உணர்வாய், முற் றெச்சம். (54)

### கொடியொடு கூறியது

4307. மழைவா டையொடா டிவலிந் துயிர்மேல்
நுழைவாய் மலர்வாய் நொடியாய் கொடியே
யிழைவா ணுதலா ளிடைபோ லிடையே
குழைவா யெனதா விகுழைக் குதியோ.

'மழைவாடையொடு ஆடி, வலிந்து, உயிர்மேல்
நுழைவாய்; மலர்வாய் நொடியாய்—கொடியே!
இழை வாள் நுதலாள் இடைபோல் இடையே
குழைவாய்; எனது ஆவி குழைக்குதியோ?'

பொ:—'கொடியே! மழையோடும் வாடைக் காற்ருேடும் கூடி ஆடி (அவற்றின் சேர்க்கையால்) வலிமை பெற்று, என்னை வருத்த என் உயிர்மேல் நுழைகின்ருய்; (அதனுல் நான் முகம் வாடியிருக்கும் போது) நீ மலர்ச்சி பெற்றிருக்கின்ருய்; என்னேடு கூடியிருந்த ஒளி மிக்க நெற்றியையுடையவளாகிய சீதையின் இடையைப் போல நடுவே துவண்டு காட்டி என் உயிரை வருத்துகின்ருயோ? சொல்வாயாக.'

கு:—கொடியே! ஆடி, வலிந்து, நுழைவாய், மலர்வாய், இடையே குழைவாய், எனது ஆவி குழைக்குதியோ? நொடியாய் என இயையும். நொந்தவர் உயிர்மேல் நுழைதலும், நொந்தவரைக் கண்டு முகமலர்தலும் பூங்கொடிக்கு இயல்பு அன்மையின், 'மழை வாடை யோடாடி வலிந்து' என்ருன். ஆடுதல் - விளையாடுதல்; அசைதல். கொடி மழையால் வலிமை பெற்று வளர்ந்து மலர்தலும், வாடையால் அசைந்தாடுதலும் இயல்பாதல் நினைந்து இரட்டுற மொழிதல்ாக 'மழை வாடையோடாடி வலிந்து' என்ருன். ஒடுவை மழைக்கும் கூட்டுக. பிரிந்தாரை வருத்தும் இயல்பில் மழையும் வாடையும் சிறப்புடையனவாதலின், அவற்ருேடு கூடி யாடினமை யால் கொடி அவற்றைப் போலவே பிரிந்தாரை வருத்தும் வலிமை பெற்றுத் தன்னுயிர்மேல் நுழைவதாகக் கூறினுன். உயிர்மேல் நுழைதல் என்பது உயிரை விழுங்க நுழைதல் என்னும் கருத்தினது. 'சான்ருண்மை தீயினம் சாரக் கெடும்' (நாலடி - 179) என்பதற்கேற்பக் கொடியும் மழை வாடையோடாடி கொடிதாயிற்று என்றவாறு. பிறர் துன்பங் கண்டு வருந்தாது மகிழ்ந்து முக மலர்தல் கொடியார்க்கே இயல்பாகும். நொடி - சொல். இழைதல் - கூடுதல். 'இழைந்தவர் நலத்தை யெய்தி' (சீவக-2720) என்றது காணலாம். மகளிர் இடைக்குக் கொடி உவமை கூறல் மரபு. மழைக்காலத்துத் தளிர்த்து வளர்ந்து மலர்ந்து வாடையால் அசையும் பூங்கொடி, சீதை

யின் இடையழகை நினைப்பித்து வருத்தியது ஆதலின், ‘குழைவாய் எனதாவி குழைக்குதியோ’ என்றான். குழைதல் - துவளுதல். குழைத்தல் - வருத்துதல். ‘குழைத்தால் பண்டைக் கொடுவினை நோய்’ (திருவாசகம்-குழைத்தபத்து - 1) என்றது காணலாம். மலர் வாய் என்பது இரட்டுற மொழிதல். “தழல் வீச வுலாய் வருவாடை தழீஇ, அழல் வீரெனதாவி யறிந்திலிரோ, நிழல் வீரையனுனுடனீர் நெடுநாள் உழல்வீர் கொடியீர் உரையாடிலிரோ” (சுந்தர - 493) என்பது நினைக. (55)

## உழையொடு உரைத்தல்

4308. விழையேன் விழைவா னருண்மெய்ம் மையினின்
றிழையே னுணர்வே னவையின் மையினால்
பிழையே னுயிரோ டுபிரிந் தனரா
லுழையே யவரெவ் வுழையா ருரையாய்.

‘விழையேன்; விழை வான்அருள் மெய்ம்மையின் நின்று
இழையேன்; உணர்வேன்; நவை இன்மையினால்
பிழையேன்; உயிரோடு பிரிந்தனரால்
உழையே அவர் ஏவ் உழையார்? உரையாய்!’

பொ:—‘மானே! யான் உன்னைப் பிடிக்க விரும்ப மாட்டேன்; விரும்பத்தக்க சிறந்த அருளிலிருந்தும் வாய்மையிலிருந்தும் நெகிழ மாட்டேன்; (மயங்காது) உன் நிலைமையை நன்குணர்வேன்; நின் பால் குற்றம் இன்மையினால் உன்மேல் அம்பு எய்தலாகிய பிழையைச் செய்யமாட்டேன்; என் உயிரோடு பிரிந்தனராகிய அச் சானகியார் எவ்விடத்திருக்கின்றார் என்பதை (ஓடாது நின்று) சொல்லுவாயாக!’

கு:—பொன் மானை எய்தவன் என்ற காரணத்தால் தன்னை நெருங்காமல் மான் ஓடுகின்றதாகக் கருதி இராமன் அம்மானின் அச்சத்தை நீக்கவேண்டி இங்ஙனம் கூறலானான். முன்னம் மானின் பொன்னிறத்தைக் கண்டு அம்மானைப் பிடிக்க விழைந்தது போல இப்பொழுது உன்னைப் பிடிக்க விரும்பேன் என்பான் ‘விழையேன்’ என்றான். விழை வான் அருள் - விரும்பத்தக்க சிறந்த அருள். அருளில் நின்றும் மெய்ம்மையில் நின்றும் நெகிழேன் என்றது, அருளுக்கும் மெய்ம்மைக்கும் மாறான கொலையைச் செய்யேன் என்பதைப் புலப்படுத்த வேண்டி. அருளும் மெய்ம்மையும் கொல்லாமையையே குறிக்கோளாகக் கொண்ட அறங்களாகும். “ஒன்றாக நல்லது

கொல்லாமை மற்றதன் பின்சாரப் பொய்யாமை நன்று" (குறள்-323) என்ற குறளுரையில் பரிமேலழகர் "அதனைப் பின்சார நன்றென்றது, நன்மை பயக்கும் வழிப் பொய்யும் மெய்யாயும், தீமை பயக்கும் வழி மெய்யும் பொய்யாயும் இதனைப் பற்ற (கொல்லாமையைப் பற்ற) அது (பொய்யாமை) திரிந்து வருதலான் என வுணர்க" என்று கூறியுள்ள விளக்கம் இங்கு நினையத்தகும். இழையேன் - நெகிழேன்; தளரேன். பொன் மானைக் கண்டபோது அதன் இயல்பை உணராது மயங்கினவனாதலின் இங்கு 'உணர்வேன்' என்றான். உன் இயல்பை உள்ளவாறு உணர்வேன் என்றவாறு. சீதையை விட்டுப் பிரியச் செய்த வஞ்சகச் செயலாகிய குற்றமுடைமையின் அம் மாய மானைக் கொன்றேன்; அத்தகைய குற்றம் நின்பால் இன்மையினால் அம்பு எய்தலாகிய பிழையைச் செய்யேன் என மானைத் தெளிவித்துச் சீதை எவ்விடத்தவள் என்பதைக் கூறும்படி வேண்டியவாறு. மானால் பிரிக்கப்பட்டவளைத் தேடித்தரும் கடப்பாடு மானுக்கே உண்டு என்றவாறு. சீதையோடு தன் உண்மையான உயிரும் போனமை தோன்ற 'உயிரோடு பிரிந்தனரால்' என்றான். 'பூண்ட மெய்யுயிரே போகப் பொய்யுயிர் போல நின்ற ஆண்டகை' (சுந்தர - 77) என்பது நினைக. உழை - மான்; இடம். 'உழையே அவர் எவ் உழையார்' என்ற சொல் நயம் காண்க. (56)

ஒரு சுவடியில் இச் செய்யுள் பின்வருமாறு அமைந்துளது (45 - குறிப்பு)

"இழைதோய் முலையாய் விழைவெண் ணுகில்நும்
முழைதா னுணர்வே னுயிரின் மையினால்
பிழையே னுயிரோடு பிரிந்தனவால்
உழைகாள் அவளெவ் வுழையா ளுரையீர்."

## உயிரொடு கிளத்தல்

4309. பயில்பா டகமெல் லடிபஞ் சனையார்
செயிரே துமிலா ரொடுதீ ருதியோ
அயிரா துடனே யகல்வா யலையோ
உயிரே கெடுவா யுறவோர் கிலையே.

'பயில் பாடக மெல் அடி பஞ்சு அனையார்
செயிர் ஏதும் இலாரொடு தீருதியோ?
அயிராது உடனே அகல்வாய் அலையோ?
உயிரே! கெடுவாய்! உறவு ஓர்கிலையே!'

பொ :—'என் உயிரே! பொருந்திய பாடகம் என்னும் அணியை யணிந்த மெல்லிய பாதம் பஞ்சுபோன்றதாக வாய்க்கப் பெற்ற வராய்க் குற்றம் சிறிதும் இல்லாதவராகிய சீதையோடு பற்றுவிட்டு நீங்குகின்ருயோ? காலம் தாழ்த்துச் செல்வதா? அல்லது உடனே செல்வதா? என ஐயுருது அவளுடனே செல்லத்தக்காய் அல்லேயோ? கெடுமதியுடையாய்! அவளுக்கும் நினக்கும் உள்ள ஒன்றிய உறவை உணர்கின்ருயில்லேயே!'

கு :—பாடகம் - பெண்டிர் காலில் அணியும் ஒருவகையணி. 'பாடகக் காலடி பதுமத் தொப்பன' (நகரப்-31) என்று முன் கூறி யுள்ளதும் காண்க. மெல்லடி பஞ்சனேயார் என்ருரேனும் பஞ்சனேய மெல்லடியார் என்பதே கருத்தாகக் கொள்க. இதனல் சீதையின் உடல் மென்மை புலப்படுத்தியவாறு. இராவணனல் கவரப்படினும் அவனல் தீண்டப்படாமையால் கற்பில் குறைபாடிலாதவளாய்ச் சென்றமையின் 'செயிர் ஏதுமிலார்' என்ருன். செயிர் - குற்றம் "வடுக்கண் வார்கூந்தலாளே யிராவணன் மண்ணிேேடும் எடுத்தன னேகுவானே யெதிர்ந் தெனதாற்றல் கொண்டு தடுத்தனென்" (சடாயு உயிர்நீத்த-200) எனச் சடாயு கூறியதனுலும் இராமன் சீதை யின் பெருமையைப் பழகியுணர்ந்தவனுதலாலும் இங்ஙனம் கூறினன். தீர்தல் - விடுதல். 'தீர்தலும் தீர்த்தலும் விடற்பொருட்டாகும்' (தொல்-சொல்-318) என்றது காண்க. செயிர் இருப்பினும் தீர்தல் இயல்பாகும். செயரேது மிலாரோடு தீர்தல் முறையன்ருகலின் தீருதியோ? என்ருன். 'பசைந்தாரிற்றீர்தலிற்றீப்புகுதல்நன்று' (நான்மணிக்-13) ஆகலின், உடனே அகல்வாயலேயோ? என்ருன். அயிராது - ஐயங்கொள்ளாது. உடனே என்பது அவள் பிரிந்தவுடன் என்றும், அவளுடனே என்றும் பொருள்படும். இதுகாறும் உயிர் உடம்பில் இருப்பது பொருந்தாது. சீதைக்கும் தனக்கும் உள்ள உறவை ஓர்ந்திருப்பின் முன்னமே உயிர் உடம்பைவிட்டு நீங்கியிருக் கும் என்றவாறு. உறவை ஓராமையின் கெடத்தக்காய் என்பான் 'கெடுவாய்' என விளித்தான். உறவு என்றது, உணர்வு ஒன்றி இரு வரும் மாறிப்புக்கிதயமெய்திய அன்பு நிலையை. ஓர்கிலேயே என்புழி ஏகாரம் இரங்கற்குறிப்புணர்த்தியது. சீதையைப் பிரிந்து கார்காலத் துப் படும் பெருந்துயரினும் உயிர் பிரிதல் நன்று என அத்துயரின் மிகுதியை உயிர்மேல் வைத்துப் புலப்படுத்தியவாறு. (57)

## கொன்றையொடு கூறல்

**4310.** ஒன்றைப் பகராய் குழலுக் குடைவாய்
வன்றைப் புறுநீள் வயிரத் தினேயோ

கொன்றைக் கொடியாய் கொணர்கிற் றிலையோ
என்றைக் குறவா கவிருந் தனையே.

'ஒன்றைப் பகராய்! குழலுக்கு உடைவாய்,
வன் றைப்புறு நீள் வயிரத் தினையோ?
கொன்றைக் கொடியாய்! கொணர்கிற்றிலையோ?
என்றைக்கு உறவாக இருந்தனையே?'

பொ:—'கொன்றை மரமாகிய கொடியவளே! (என் துயர் கண்டும் நீ சீதையைக் கொணர்ந்து கொடாமைக்குக் காரணம்) சீதையின் கூந்தலுக்குத் தோற்றுயாய் (அவள்பால்) வன்மையாக ஊன்றிய நெடிய பகைமையுடையை யாதலோ? அன்றி அவளைக் கொணர உன்னல் மாட்டாமையோ? இவ்விரண்டில் ஒன்றைச் சொல்கின்று யில்லை; (எனக்குச் சொல்ல) என்றைக்கு எம் உறவாக இருந்திருக் கின்றுய்? (என்றும் பகையாக உள்ள நீ எப்படிச் சொல்வாய்?)'

கு:—கொன்றை மரம் கார்காலத்துப் பூத்துக் காய்க்கும் இயல் பினது. அதன் காய்கள் சீதையின் கூந்தலை நினைப்பித்து வருத்து தலின் அதனை நோக்கி இராமன் இரங்கிக் கூறியவாறு. 'என்றயா வுயிர்க்கின்றவனேடவிழ், கொன்றை யாவிப் புறத்திவை கூறியான், பொன்ற யாதும் புகல்கிலை போலுமால், வன்ற யாவிலி யென்ன வருந்தினுன்?' (பம்பைப் - 32) என முன்னும் கொன்றையை நோக் கிக் கூறுதல் காணலாம். 'தான்றுயாக் கோங்கந் தளர்ந்து முலை கொடுப்ப, வீன்றுய் நீ பாவை யிருங்குரவே-யீன்றுள், மொழிகாட்டா யாயினு முள்ளெயிற்றுள் சென்ற, வழிகாட்டாய் ஈதென்று வந்து' (திணைமாலைநூற் - 65) என்று செவிலித்தாய் குராமரத்தை நோக்கிக் கூறியதும் இங்கு ஒப்புநோக்கத்தகும். கொன்றை மரம் தன் மனைவி யைத் தேடிக் கொணர்ந்து கொடாமைக்குக் காரணம் அது சீதையின் கூந்தலுக்குத் தோற்றமையால் பகைமை கொண்டிருத்தலே என இராமன் காரணம் கற்பித்துக் கூறியவாறு. கொன்றைக் காய் கரிய நிறத்தாலும் நீட்சியாலும் மகளிர் கூந்தலுக்கு உவமையாகும். "வீழ் துளியான் மாக்கடுக்கை......ஆயுங் கழலாகிப் பொன் வட்டாய்த் தாராய் மடலாய்க் குழலாகிக் கோல் சுரியாய்க் கூர்ந்து" (திணைமாலை நூற் - 98) என்புழிக் கொன்றைக் காய் குழல் போலுதல் கூறப்பட் டிருத்தல் காணலாம். இன்பக் காலத்தும் துன்பக் காலத்தும் துணை யாய் நின்று, "அளியதாமே சிறு வெள்ளாம்பல், இளையமாகத் தழை யாயினவே, இனியே, பெருவளக் கொழுநன் மாய்ந்தெனப்பொழுது மறுத்து, இன்னுவைகலுண்ணும், அல்லிப் படூஉம் புல்லாயினவே" (புறநா 248) என்னுமாறு உதவி செய்யும் தாவர இனமும் இருக்க, இக் கொன்றை மரம், சீதையைப் பிரியாது இன்புறுங்காலத்து

அவள் கூந்தலுக்குப் பகையாக இருந்து வருத்தி அவளைப் பிரிந்து நின்று துன்புறுங் காலத்தும் அவள் கூந்தலை நினைப்பித்துத் துன்புறுத்துவதன்றி அவளைத் தேடிக் கொணராமைக்குக் காரணமும் கூருமலிருத்தலின், 'என்றைக் குறவாக இருந்தனையே' என்ருன். கொன்றைக் கொடியாய்! வயிரத்தினையோ? கொணர்கிற்றிலையோ? ஒன்றைப் பகராய்! என்றைக் குறவாக இருந்தனை? என இயையும். மரம் வயிரமுடையதாதலும் கொடி படரப் பெற்றிருத்தலும் ஆகிய இயல்பு நிகழ்ச்சிகளும் குறிப்பால் பெற வைத்துள்ள நயம் காண்க. பகையாக உள்ளவர், வருந்தக் காண்டலன்றி உதவார் என்ற உண்மையும் புலப்படுத்தியவாறு. (58)

### முல்லையையும் இந்திர கோபத்தையுங் கண்டு மொழிதல்

4311. குராவரும் பனைய கூர்வா
★ ளெயிற்றுவெங் குருளை நாகம்
விராவுவெங் கடுவிற் கொல்லு
மெல்லிணர் முல்லை வெய்தி
னுராவருந் துயர மூட்டி
யுலைவுற மலைவ தொன்ருே
விராவண கோப நிற்க
விந்திர கோப மொன்ருே.

குரா அரும்பு அனைய கூர்வாள் எயிற்றுவெங் குருளை நாகம்,
விராவு வெங்கடுவின் கொல்லும்; மெல் இணர் முல்லை, வெய்தின்
உரா அருந் துயரம் ஊட்டி உலைவுஉற மலைவது ஒன்ருே?
இராவண கோபம் நிற்க, இந்திர கோபம் ஒன்ருே?

பொ:—கொடிய குட்டிப் பாம்பு குரா அரும்புபோன்ற தன் கூரிய ஒளியுள்ள பற்களில் கலந்துள்ள கொடிய நஞ்சினுல் கொல்லும்; ஆனுல், மெல்லிய கொத்துகளாக உள்ள முல்லை அரும்புகள் (நஞ்சு இல்லாமலே) கொடுமையுடையதாய் நீங்குதல் இல்லாத துயரத்தைக் கொடுத்து என் உயிர் அழியுமாறு போர் செய்வது எளியதொரு சிறு செயலோ? அதுவேயுமன்றி, இராவணன் கோபம் என்னை வருத்தா நிற்க, இந்திர கோபம் என்கின்ற பூச்சி என் உயிர் அழியுமாறு வருத்துவதுதான் எளியதொரு சிறு செயலோ? (வியக்கத்தக்க பெருஞ்செயலன்ருே என்றவாறு).

கு:—குரா மரத்தின் அரும்பு வெண்ணிறத்தானும் கூர்மையானும் பாம்பின் பல்லுக்கு உவமையாயது. குருளை - குட்டி. இளைய

தாயினும் பாம்பு கொலையில் வல்லது ஆதல் போலவே, முல்லை,அரும் பாம் நிலையிலேயே வருத்தும் வன்மையுடையதாயிற்று என்பது புலப் படுத்தக் குருளை நாகமே கூறினன். நாகம் எயிற்று விராவும் கடுவிற் கொல்லும்; முல்லை, கடுவின்றியே மெல்லரும்பினலே உலைவுற மலையும் என்றமையால் பாம்பினும் முல்லை கொடிதாயிற்று என்பது நாட்டியவாறு. வேற்றுமையணி; "தீயினல் சுட்டபுண் உள்ளாறும் ஆருதே நாவினல் சுட்ட வடு" (குறள் - 129) என்ருற்போல. முல்லை அரும்பும் பாம்பின் பல்லும் கொல்லுந் தொழிலில் ஒப்புமையுடைய வாயினும், பாம்பின் பல் வலிதாய் நஞ்சினுற் கொல்ல, முல்லை யரும்பு மெல்லிதாய் நஞ்சில்லாமலே கொல்லவல்லது என்ற வேற்றுமை காண்க. விராவுதல் - கலத்தல். கடு - நஞ்சு. உரா அருந்துயர் - நீங்காத் துயர். உராதல் - செல்லுதல். 'காலென்னக் கடிதுராய்' (மதுரைக் - 125) என்புழி அப்பொருள் பட்டமை காணலாம். உலைவுற - உயிர் அழிய. மலைவது - போர் செய்வது. ஒன்ரே என் பது இருவழியும் சிறிய நிகழ்ச்சியோ என்னும் பொருளது. ஒன்றும் போதாநாயேனை' (திருவாசகம் - 496) என்புழி ஒன்று, சிறிது என்னும் பொருளில் பயின்றமை காணலாம். மெல்லிணர் முல்லை பாம்பினும் வலிதாய்த் தன்னை வருத்துதலும், சிறிய தம்பலப் பூச்சி வில்லேந்திய வீரனுகிய தன்னை வருத்துதலும் எளிய சிறிய நிகழ்ச்சி களல்ல,—வியக்கத்தக்க பெரிய நிகழ்ச்சிகளே என இராமன் தனக் குள் கூறிக் கொண்டவாறு. முல்லை அரும்பு சீதையின் பற்களையும், தம்பலப் பூச்சி அவள் உதட்டையும் நினைப்பூட்டி வருத்துதலின் இங் ஙனம் கூறலானுன். கார்காலத்து முல்லை அரும்பும். 'முல்லை வைந் நுனை தோன்ற' (அகநா - 4) என்றது காணலாம். தம்பலப் பூச்சி கார்காலத்தில் வெளித் தோன்றி ஊரும் இயல்பினது. பெண்களின் பல்லுக்கு முல்லை அரும்பும் வாயிதழ்க்குத் தம்பலப் பூச்சியும் உவமை யாவன. இராவண கோபம் என்றது, சீதையைப் பிரித்தலாகிய காரியத்தை யுணர்த்தியது. சூர்ப்பணகையின் மூக்கறுத்த செயலால் இராவணன் கொண்ட கோபமே,தான் சீதையைப் பிரிதற்குக் காரண மாயிற்று என இராமன் உணர்ந்தவனுதலின், சீதையின் பிரிவை இராவண கோபமாகக் கூறினன். முல்லையும் இந்திர கோபமும் இவ்வாறு வலிமை பெற்றுத் தன்னை வருத்துவதற்கு இராவண கோபமே காரணம் என்பான் 'இராவண கோப நிற்க' என்ருன். இந்திர கோபம் உலைவுற மலைவது எனப் பின்னும் கூட்டுக. இரா வணன் கோபத்தால் யான் சீதையைப் பிரிந்து வருந்தா நிற்க இந்த இந்திரம் கோபம் அச் சீதையின் அதரத்தை நினைப்பித்து வருத்து வது சிறு செயலன்று என்றவாறு. இராவணன் அரக்கன் ஆதலின், அவன் கோபம் என்னை வருத்துவது இயல்பே; என்பால் அன்புள்ள இந்திரன் கோபம் வருத்துவது பொருந்துவதொரு செயல்தானே ? என்ற குறிப்புப் பொருள் பெறப்பட வைத்த நயம் காண்க. 'கோபம்

முன்னது வெகுளி; பின்னது பாதுகாக்கப்படுவது என்னும் பொருளது. கார்காலத்துத் தோன்றிப் பரவும் தம்பலச் பூச்சிகள் மேகநாதனாகிய இந்திரனால் பாதுகாக்கப்படுவது என்பது இயல்பாகும். அக்காரணம் பற்றி இந்திர கோபம் என அது பெயர் பெற்றது. கோபம் என்ற சொல்லொற்றுமை பற்றி இங்கு இங்ஙனம் இயைத்துக் கூறியவாறு. (59)

வாடைக்கு மெலிந்து கூறியது

4312. ஒடைவா ணுதலி ணூ
யொளிக்கலா முபாய முன்னி
நாடிமா ரீச ஞரோ
ராடக நவ்வி யாஞர்
வாடையாய்க் கூற்றி ஞரு
முருவினை மாற்றி வந்தார்
கேடுசூழ் வார்க்கும் வேண்டு
முருக்கொளக் கிடைத்த வன்றே.

'ஓடைவாள் நுதலிஞனை
ஒளிக்கலாம் உபாயம் உன்னி,
நாடி, மாரீசனர் ஓர்
ஆடகநவ்வி ஆனர்;
வாடையாய்க், கூற்றிஞரும்,
உருவினை மாற்றி வந்தார்;
கேடு சூழ்வார்க்கும் வேண்டும்
உருக்கொளக் கிடைத்த அன்றே.'

பொ :—'மாரீசன், நெற்றிப் பட்டம் அணிதற்குரிய ஒளி வாய்ந்த நெற்றியையுடைய சீதையைக் கவர்தற்கு ஏற்ற உபாயத்தை நினைந்து ஆராய்ந்து (முன்) பொன் மான் ஆக உருவம் மாறினன் (இப்பொழுது) எமனும் (என்னை வருத்த) வாடைக் காற்ருகத் தன் உருவத்தை மாற்றிக்கொண்டு வந்தான்; இவ்வாறு எனக்குத் துன்பம் விளைக்கின்ற கொடியவர்க்கும் தாம் வேண்டும் வடிவங்களை மேற்கொள்ளற்கேற்ற ஆற்றல்கள் கிடைத்துள்ளன அல்லவா? (இது தான் வியப்பு!)'

கு :—நன்மை செய்வார்க்கு வேண்டுருவங் கொள்ளும் ஆற்றல் கிடைத்தால் நன்மையுண்டு; கேடு சூழ்வார்க்கு அவ்வாற்றல் கிடைத்

தால் கேடே விளைதலின் கூடாது என்பான், கேடு சூழ்வார்க்கும் என இழிவு சிறப்பும்மை கொடுத்தான். சீதையைக் கவர்தலாகிய கேடு சூழ்ந்த மாரீசனுக்கும், என்னை வருத்தல் ஆகிய கேடு சூழ்ந்த கூற்று வனுக்கும் மானுருவு எடுக்கவும் வாடையுரு வெடுக்கவும் ஆற்றல் கிடைத்தது வியப்பான நிகழ்ச்சி என்பான் 'வேண்டு முருக்கொளக் கிடைத்த அன்றே' என்றான். வாடை, கூற்றுவன் போலத் தன்னைக் கொல்கின்றதாகலின், கூற்றுவனே வாடையாக உருமாறி வந்தான் என்று இராமன் கூறினான். "வெறுப்பினால், வேண்டுருவங் கொண்ட தோர் கூற்றங் கொல்" (கலி - 56) என ஒரு மங்கையைக் கண்ட தலைவன் ஒருவன் கூறியது இங்கு ஒப்புநோக்கத்தகும். 'கூதிர் வாடை வெங் கூற்றினை நோக்கினான்' (அயோமுகிப் - 15) என முன்னம் வாடையை எமனாக உருவகம் செய்துள்ளமை நினைக. மாரீசன் தன் உண்மை யுருவோடு வரின் இராமன் அம்பு தன்னைக் கொல்லும் என்று அஞ்சிப் பொன்மானாக உருவை மாற்றி வந்தான்; எமனும் தன் உண்மை யுருவத்தோடு வந்தால் இராமன் ஆற்றலுக் குத் தோற்றோட வேண்டி வரும் என்று நினைந்து வாடையாக உருவ மாறி வருத்த வந்தான் என்க. "கூதிருருவிற் கூற்றம், காதலர்ப் பிரிந்த எற்குறித்து வருமே" (குறுந் - 197) என்ற பகுதி இப்பாடற்கு அடிப்படையாயது போலும். ஓடை - நெற்றிப் பட்டம். ஒளித்தல் என்றது, வஞ்சித்துச் சார்தலை. நாடி - ஆராய்ந்து. ஆடகநவ்வி - பொன்மான். ஆனார் என்புழி ஆக்கம் வேறுபாடு உணர்த்தியது. சூழ்தல் இங்குச் செய்தலை யுணர்த்தியது. மாரீசனார், கூற்றினார் என்புழிப் பன்மை இகழ்தற் குறிப்பான் வந்தது. (60)

## மேகத்தோடு மொழிதல்

4313. அருவினை யரக்க ரென்ன
வந்தர மதனில் யாரும்
வெருவர முழங்கு கின்ற
மேகமே மின்னு கின்றாய்
தருவலென் றிரங்கி னாயோ
தாமரை மறந்த தைய
லுருவினைக் காட்டிக் காட்டி
யொளிக்கின்றா யொளிக்கின்றாயால்.

அருவினை அரக்கர் என்ன, அந்தரம் அதனில் யாரும்
வெருவர, முழங்குகின்ற மேகமே! மின்னுகின்றாய்;

'தருவல்' என்று இரங்கினுயோ? தாமரை மறந்த தையல்
உருவினைக் காட்டிக் காட்டி ஒளிக்கின்ருய், ஒளிக்கின்ருயால்!'

பொ :—'தடுத்தற்கு அரிய தீவினை புரியும் அரக்கரைப்போல ஆகாயத்தில் நின்று எத்தகையோரும் அஞ்சுமாறு ஆரவாரிக்கின்ற மேகமே! மின்னுகின்ருயாய்த் தாமரை மலரை மறந்தவளாய் (மிதிலையில் பிறந்த) சீதையின் உருவத்தைக் காட்டிக் காட்டிப் பின் மறைக்கின்ருய் மறைக்கின்ருய்; ஆதலால், என்பால் அவளைத் 'தருவல்' என இரக்கங் கொண்டாயோ?'

கு :—பிறரால் தடுத்தற்கரிய கொடிய வினையினர் அரக்கர் என்பான், 'அருவினை அரக்கர்' என்ருன். மேகத்திற்கு அரக்கர் நிறத்தால் மட்டுமன்றி முழக்கத்தாலும் ஒப்பாயினர். அரக்கரென்ன முழங்குகின்ற மேகமே என இயையும். 'பகுவாய் முழை துறந்தோர், வார்த்தையுரை செய்தன ளிடிக்கு மழை யன்னுள்.' (பால - 392) எனத் தாடகையின் சொல்லுக்கு இடியை யுவமை கூறியிருத்தல் காணலாம். "வெப்பார் நெடு மின்னி னெயிற்றை வெகுண்டெப் பாலும் விசும்பி னிருண்டெழுவாய், அப்பாதக வஞ்ச வரக்கரையே யொப்பாய்" (53) என முன் கூறிய உவமையும் இங்கு நினையலாம். மேகமே! மின்னுகின்ருயாய்த் தையல் உருவினைக் காட்டி ஒளிக்கின்ருய். 'தருவல்' என்று இரங்கினுயோ? என இயையும். சீதை திருமகளே என்ற தெளிவால் 'தாமரை மறந்த தையல் என அவளைக் குறித்தான். "மையறு மலரினீங்கி யான் செய் மாதவத்தின் வந்து செய்யவள் இருந்தாள்" (பால-மிதிலைக் - 1) என முன் கூறியுள்ளதும் காண்க. "அரவிந்த மலருணீங்கி யடியிணை படியிற்ருேயத் திருவிங்கு வருவாள் கொல்லோ?" (சூர்ப்பணகைப் - 59) எனச் சீதையைக் கண்டு சூர்ப்பணகை நினைத்ததும் இங்கு நினைக்க. 'தருவல்' என்பது மேகத்தின் கூற்று; இராமன் கொண்டு கூறியவாறு. மேகத்துத் தோன்று மின்னல் சீதையின் உருவம்போல விளங்குதலின் 'மின்னுகின்ருயாய்த் தையலுருவினைக் காட்டி' என்ருன். "சதகோடி மின் சேவிக்க மின்னர சென்னும்படி நின்ருள்" (பால-594) என முன்னும் சீதைக்கு மின்னலை உவமைகூறியிருத்தல் காணலாம். முழக்கத்தால் இரக்கமில் அரக்கர் போன்ற மேகம், மின்னலால் சீதையின் உருவத்தைக் காட்டுதலின் தன்பால் இரக்கங்கொண்டது போலும் என இராமன் கூறியவாறு. அடுக்கு இரண்டும் பன்மையுணர்த்தின. உருவினைக் காட்டுதலும் ஒளித்தலும் பன்முறை நிகழ்த்தின என்றவாறு. இவ்வாறு காட்டிக் காட்டி மறைக்கும் மேகம் பின் மறைக்காமல் கொடுக்க வல்லதே என்ற நம்பிக்கையால் 'தருவல் என்று இரங்கினுயோ?' என்ருன். தன் பொருட்டுத்

தாமரை மறந்து தரையிடைப் பிறந்தவள் எனஅவள் அன்பு மிகுதியைப் புலப்படுத்தியவாறுமாம். (61)

### மன்மதனோடு கூறியது 4314-4315

4314. உண்ணிறைந் துயிர்க்கும் வெம்மை
யுயிர்சுட வுலைவே னுள்ளம்
புண்ணுற வாளி தூர்த்தல்
பழுதினிப் போதி மார
வெண்ணுறு கல்வி யுள்ளத்
திளையவ னின்னே யுன்னைக்
கண்ணுறு மாயிற் பின்னை
யாரவன் சீற்றங் காப்பார்.

உள் நிறைந்து உயிர்க்கும் வெம்மை
உயிர்சுட உலைவேன் உள்ளம்
புண் உற வாளி தூர்த்தல்
பழுது இனிப், போதி ;—மார !—
எண் உறு கல்வி உள்ளத்து
இளையவன், இன்னே, உன்னைக்
கண்ணுறும் ஆயின், பின்னை,
யார், அவன் சீற்றம் காப்பார் ?

பொ :—மன்மதா! உடம்பின் உள்ளிடமெல்லாம் நிறைந்து வெளிப்படுகின்ற (பிரிவாற்றாமை யாகிய) வெப்பம் என் உயிரைச் சுடுதலால் மனம் வருந்திக் கொண்டிருக்கிறேன் ; இந்நிலையில் புண் உண்டாகுமாறு என்மேல் மலரம்புகளை எய்து நிறைத்தல் பயனற்ற செயலாகும் ; ஆதலால், நீ என்னைவிட்டுப் போவாயாக. மேலும், மதிக்கத்தக்க கல்வி பயின்ற மனத்தையுடைய இளையவனாகிய இலக்குவன் இப்போது உன்னைக் காண்பானாயின் அவனுக்கு உண்டாகும் கோபத்தைத் தணிப்பவர் யாருளர் ? (ஒருவருமில்லை என்றபடி)

கு :—பிரிவாற்றாமையாகிய வெம்மையே என் உயிரைச் சுடுதற்குப் போதும். நின் அம்பு மிகையென்பான், 'வாளிதூர்த்தல் பழுது' என்றான். பழுது - பயன் இன்மை. 'பழுது பயமின்றே' (தொல் - சொல். 324) என்றது காண்க. இந்நிலையில் என்மேல் அம்பு தூர்த்தல் செத்த பாம்பை அடிப்பது போன்று பயனற்ற செயலாகும் என்றவாறு. உயிர்த்தல் - வெளிப்படுதல். உலைதல் - வருந்

துதல்; தோற்றலுமாம். பிரிவாற்ருமையாகிய வெம்மை உயிரைச் சுடுதலால் அவ்வெம்மைக்குத்தோற்றுப்போன யான் புண்ணுறுமாறு அம்புகளை மிகுதியாக எய்தல் போர்நெறிக்கு மாருய்க் குற்றம் ஆகும்; ஆதலால் மார! போதி எனலும் ஆம். இப்பொருட்குப் பழுது-குற்றம் என்க. "ஏறுண்டவர் நிகராயினும் பிறரெச்சிலென் றெறியான்" (சீவக - 2261) என்பது இங்கு நினைவு கூர்தல் வேண்டும். தூர்த்தல் என்றமையால் அம்புகளின் மிகுதி புலப்படுத்தியவாறு. சாமோபாயத்தால் கூறிய இச்சொல்லைக் கேட்டுப் போகாமையால் இளையவன் உன்னைக் காணின் அவன் சீற்றம் காப்பார் யார்? எனத் தண்டோபாயத்தால் கூறினன் என்க. எண்ணுறு கல்வி யென்றது ஞானநூல் தெளிவை; மாரனை வெல்லுங் கல்வி அதுவே யாதல் காண்க. இலக்குவன் சீற்றத்தை முன் பன்முறை கண்டு பழகியவன் இராமனுதலின் அச்சீற்றத்தின் வன்மையுணர்ந்து இங்ஙனம் கூறினன். இலக்குவன் சீற்றம், சூர்ப்பணகை உறுப்புக்களை யிழக்கச் செய்ததை உலகறியும்; நின்பால் அவன் சீற்றம் யாது செய் யுமோ என அச்சுறுத்தியவாறு. இலக்குவன் நின்னைக் காணுததே குறை; கண்டானுயின் அவன் சீற்றத்தை யாரும் தணிக்க இயலாமை யால் நின்னைத் தாக்கியே தீரும் என்றபடி. கார்காலத்தில் தலைவி யைப் பிரிந்திருந்த இராமன்மேல் மாரன் தாமரை முதலிய மலரம்பு களை எய்யத் தொடங்கினுகை, அவனை எதிர்பெய்துகொண்டு இராமன் கூறியவாறு. மாரன், இராமன் சொல்லின்படி விலகிச் செல்வதால் அவன், பயனற்றதும் குற்றமானதுமான செயலைச் செய்யும் பழியில் நின்றும் உய்கின்றதோடு, இலக்குவன் சீற்றத் திற்கும் தப்பி உய்ந்து போகலாம் என்றவாறு. உளைவன வியற்றல் ஒல்லை யுன்னிலை யுணருமாயின், இளையவன் முனியு நங்கை ஏகுதி விரைவின்'' (சூர்ப்பணகைப் 67) எனச் சூர்ப்பணகையை நோக்கி யிவ்வாறு கூறியுள்ளதும் நினைக. இலக்குவன் ஞானத்தையும் வீரத்தையும் இராமன் இங்குப் புகழ்ந்தமை காணலாம். (62)

4315. வில்லும்வெங் கணையும் வீரர்
வெஞ்சமத் தஞ்சினர்மேல்
புல்லுந வல்ல வாற்றல்
போற்றலர்க் குறித்தல் போலா
மல்லுநன் பகலு நீங்கா
யனங்கநீ யருளிற் றீர்ந்தாய்
செல்லுமென் றெளிவந் தோர்மேற்
செலுத்தலுஞ் சீர்மைத் தாமோ.

'வில்லும், வெங்கணையும், வீரர்,
வெஞ்சமத்து அஞ்சினர் மேல்
புல்லுந அல்ல; ஆற்றல்
போற்றலர்க் குறித்தல் போலாம்;
அல்லும் நன்பகலும் நீங்காய்
அனங்க! நீ அருளில் தீர்ந்தாய்
'செல்லும்' என்று எளிவந்தோர் மேல்
செலுத்தலும் சீர்மைத்து ஆமோ?

பொ:—(வீரர்க்கு உண்மையான) ஆற்றலாவது பகைவருடைய தாழ்வைக் குறிக்கொண்டு நோக்கி அதற்கேற்ப நடத்தலேயாம்; ஆதலின், வீரர்களின் வில்லும் கொடிய அம்பும், கொடிய போரில் அஞ்சினவர்கள்மேல் செல்லப் பொருந்துவன அல்ல; அங்ஙனமாகவும், மன்மதனே! நீ அத்தகைய அருட்குணத்தில் நின்றும் நீங்கினவனாய், (யான் போதி என்னவும் என்னை விட்டு) நீங்காயாய், (நின்மலரம்புகளை) இரவும் பகலும் (தொடுத்துச்) செல்லுங்கள் என்று எளிமையுடைய என் போன்றோர் மேல் செலுத்துதலும் நினக்குப் புகழுடையதாமே? (ஆகாது காண்.)

கு:—மேல் 'போதி மார' என்று வேண்டிக் கொள்ளவும் நீங்காது நின்று அம்பு எய்கின்ற மன்மதனை விளித்து 'இச்செயல் நின் வீரத்திற்கு இகழ்ச்சியையுண்டாக்கும்; ஆதலின் எய்யவேண்டா' என வேண்டிக் கொண்டது. பகைவர் ஒத்த வலிமையராயின் அவரை வெல்லுதலும், மெலியராயின் அவர் மேல் படை தொடாது விடுத்தலும் ஆகிய இரண்டும் வீரரின் ஆற்றலே எனினும், மெலியார்மேற் படை தொடாமையே வீரரின் ஆற்றலை மிகுவித்துக் காட்டுதலின் அதனையே 'ஆற்றல் போற்றலர்க் குறித்தல் போலாம்' எனச் சிறப்பித்துக் கூறியவாறு. 'அழிகுநர் புறக் கொடை யயில் வாளோச்சாக் கழிதறுகண்மை' (பு - வெ - 55) என்புழி, அது கழி தறுகண்மை எனப் புகழப் பட்டிருத்தலும் காணலாம். போற்றலர் - பகைவர். குறித்தல், குறிக்கொண்டு நோக்குதல்; இங்கு நோக்கு அதற்கேற்ப நடத்தலாகிய செயலை யுணர்த்தியது. குறித்தல் ஆற்றலாகாமையும் குறித்து நடத்தலே ஆற்றல் ஆதலும் நோக்குக. போல், உரையசை. இராமன், இராவணன் மெலிவுகண்டு முதல் நாட் போரிலேயே 'இன்று போய்ப்போர்க்கு நாளைவா' (உயுத்த-முதற்-256) என இக் கொள்கையைச் செயல் படுத்தினமை காணலாம். வீரரின் வில்லும் கணையும் அஞ்சினர்மேல் புல்லுந வல்ல என வீரரின் இயல்பைப் படைமேல் ஏற்றிக்கூறி அத்தகைய கணைகளை எளிமை நிலையிலுள்ள தன்மேல் 'செல்லும்' என ஏவிச் செலுத்தும் மன்மதனின் கொடுமை

புலப்படுத்தியவாறு. புல்லுதல் - பொருந்துதல். வில்லுங் கணையும் அஞ்சினுர்மேற் செல்லப் புல்லுதலே செய்யாமையின் அவர்மேற் செல்லாமை சொல்ல வேண்டாவாயிற்று. 'அனங்க நீ அருளிற்றீர்ந் தாய்' என்றமையால் போற்றலர்க்குறித்த வீரர் அருளொடு நின் றமை பெறப்படும். பகைவர் மெலிவு நோக்கி அவர்மேற் படை தொடாமை அருளானன்றி நிகழாமை யறியலாம். 'மேல் போதி மார' என வேண்டவும் நீங்காது அம்பு எய்யும் கொடுமை புலப்பட, நீங்காய் அல்லும் நன்பகலும் செல்லும் என்று செலுத்தலும் சீர்மைத்தாமோ?' என்ருன். ஆற்றல் போற்றலர்க் குறித்தலே ஆதலின், வீரர் வில்லும் கணையும் அஞ்சினர் மேல் புல்லுந அல்ல; அங்ஙனமாகவும், அனங்க! நீ அருளிற்றீர்ந்தாயாய் என்னை நீங்கா யாய் அல்லும் நன்பகலும் அத்தகைய மலரம்புகளை 'செல்லும்' என்று எளிவந்த என்மேல் செலுத்தலும் சீர்மைத்தாமோ? என வேண்டும் சொல் வருவித்து இயைக்க. இராக்காலத்தினும் பிரிவாற் ருமையாகிய நோய் பகற்காலத்துக் குறைதல் நோக்கி இங்கு 'நன் பகல்' எனச் சிறப்பித்தவாறு. சிவபிரானின் நெற்றிக் கண்ணுல் உடம்பு நீங்கிய நீ என்திறத்து அருளும் நீங்கினுயே என்பான், அனங்க! நீ அருளிற்றீர்ந்தாய்! என்ருன். செல்லும் என்றது மன்மதன் கணைகளை நோக்கிக் கூறிய முன்னிலை ஏவல். செல்மின் எனற்பாலது செல்லும் எனத் திரிந்தது.

இதுகாறும் இராமன் மேகம் முதலிய அஃறிணைப் பொருள்கள் தன் சொற்களைக் கேட்குநபோலவும் அருவாக உள்ள மன்மதன் தன் சொல்லைக் கேட்பது போலவும் கூறியது பிரிவாற்ருமையாகிய துன்ப மிகுதியாலாகும். "ஞாயிறு, திங்கள், அறிவே, நாணே, கடலே, கானல் விலங்கே, மரனே, புலம்புறுபொழுதே புள்ளே, நெஞ்சே, அவையல பிறவும் நுவலிய நெறியாற் சொல்லுந போலவும் கேட்குந போலவும் சொல்லியாங் கமையும் என்மனுர் புலவர்" (தொல் – செய்யுளியல் 201) என்ற விதியும் காணலாம். (63)

## இலக்குவன் தேறுதல் கூறல் 4316-4321

**4316.** என்னவித் தகைய பன்னி
யீடழிந் திரங்கு கின்ற
தன்னையொப் பானை நோக்கித்
தகையழிந் தயர்ந்த தம்பி

நின்னையெத் தகையை யாக
நினைந்தனை நெடியோ யென்னுச்
சென்னியிற் சுமந்த கையன்
றேற்றுவான் செப்ப லுற்ருன்.

என்ன இத்தகைய பன்னி, ஈடு அழிந்து, இரங்கு கின்ற தன்னை ஒப்பானை நோக்கித், தகை அழிந்து அயர்ந்த தம்பி, 'நின்னை எத்தகையையாக நினைந்தனை?—நெடியோய்! என்னுச் சென்னியில் சுமந்த கையன் தேற்றுவான், செப்பலுற்ருன்.

பொ :—என்று இத்தன்மையான சொற்களைப் பன்முறை சொல்லிப் பெருமை அழிந்து வருந்துகின்ற (தனக்குவமை யில்லாதவனுகலின்) தன்னைத்தானே ஒப்பவனுகிய இராமனை நோக்கித் தன்மை கெட்டுத் தளர்வுற்ற தம்பி இலக்குவன்,—தலைமேற்குவித்துக் கொண்ட கையையுடையனும் அவனைத் தேற்றும்பொருட்டு (அவனை நோக்கி) 'நெடியவனே! நின்னை எத்தன்மையுடையனுக நினைந்து விட்டாய்' என்று சொல்லத் தொடங்கினுன்.

கு :—பன்னுதல் - பலகால் சொல்லுதல். தனக்கு உவமமாவார் பிறரின்மையின் இராமன் 'தன்னையொப்பான்' எனப்பட்டான். இதனைப் பொது நீங்குவமை என்பார் தண்டியலங்காரமுடையார். 'தனக்குவமையில்லாதான்' (குறள் - 6) எனக் கடவுள் கூறப்படுதல் காணலாம். இதனுல் இராமன் தெய்வ நிலையை உணர்த்தியவாறு. ஈடு – பெருமை. சீதையின் பிரிவால் மேகம் முதலிய அஃறிணைப் பொருள்களை நோக்கிப் புலம்பிக் கூறல் இராமனுடைய தெய்வ நிலைக்கு ஏலாமை தோன்ற, 'ஈடழிந்திரங்குகின்ற தன்னையொப்பான்' என்ருர். அயர்தல் - தளர்தல். மூவுலகளந்த நெடியோனுகிய நீ நின்பெருந்தன்மையை மறந்து இங்ஙனம் ஈடழிந்து இரங்குகின்ருய் என்பான், 'நெடியோய்' என அப்பெயரால் விளித்தான். 'மூவுலகு மீரடியால் முறைநிரம்பா வகைமுடியத் தாவியசே வடிசேப்பத் தம்பியொடுங் கான்போந்து' (சிலப் – 17. 35) என இவ்விரண்டு அவதாரங்களையும் இணைத்துக் கூறியிருத்தல் இங்கு நினைதல் தகும். செயற்கரிய செய்தற்கேற்ற பெருமையுடைய நீ சிறுமையுடையவர் போல் இரங்குதல் தகாது என்பான், 'நின்னை யெத்தகையையாக நினைந்தனை' என்ருன். நின்பெருமையை நினைந்து பார்த்தால் இங்ஙனம் இரங்க மாட்டாய் என்பது கருத்து. தலைமேல் கைகுவித்து வணங்கிக்கொண்டே இலக்குவன் இங்ஙனம் கூறினுன் என்பார் 'சென்னியில் சுமந்த கையன்' என்ருர். தேற்றுதல் துன்பத்தால் கலங்கிய நிலையினின்றும் தெளிவித்தல். 'வான்' வினையெச்சவிகுதி. (64)

4317. காலநீளிது காருமாரியும்
★ வந்ததென்ற கவற்சியோ
நீலமேனி யரக்கர்வீர
நினைந்தழுங்கிய நீர்மையோ
வாலிசேனை மடந்தைவைகிட
நாடவார லிலாமையோ
சாலநூலுணர் கேள்விவீர
தளர்ந்ததென்னை தவத்தினேய்.

"காலம் நீளிது காரும்; மாரியும்
வந்தது;" என்ற கவற்சியோ?
நீலமேனி அரக்கர் வீரம்
நினைந்து அழுங்கிய நீர்மையோ?
வாலி சேனை மடந்தை வைகு இடம்
நாட வாரல் இலாமையோ?
சால நூல் உணர் கேள்வி வீர!—
தளர்ந்தது என்னை? தவத்தினேய்!

பொ:—'மிகுதியான நூல்களைக் கற்றுணர்ந்த அறிவையும், பெரியோர்பால் கேட்டுணர்ந்த கேள்வி அறிவையும் உடைய வீரனே! தவவேடம் பூண்டவனே! கார்ப்பருவமும் காலம் நீடித்ததாக இருக்கின்றது; இதற்குமேல் கூதிர்ப்பருவமும் வந்துகொண்டு இருக்கின்றது' என்ற கவலைதானோ? அல்லது, கரிய நிறத்தையுடைய அரக்கரின் வீரத்தை நினைந்து (அவரை வெல்ல முடியாதோ? என) வருந்திய தன்மைதானோ? அல்லது, வாலி தொகுத்த வானர சேனை சீதை உள்ள இடத்தைத் தேட வருதல் இல்லாமைதானோ? நீ தளர்ச்சி யடைந்ததற்குக் காரணம் என்னையோ?

கு:—இராமன் தளர்ச்சியுற்றதைக் காட்சியால் அறிந்த இலக்குவன், அத்தளர்ச்சிக்குக் காரணமாய் அவன் உள்ளத்தில் நிகழ்வதை ஐயவுணர்வோடு உய்த்து உணர்வதன்றித் துணிந்து கூற இயலாமையின் இங்ஙனம் வினவலானான். இராமன் தளர்ச்சிக்கு இம் மூன்றும் காரணமாயிருக்கலாம், ஆயினும் அவற்றால் இராமன் தளர்ச்சியுறத்தக்கவன் அல்லன் என்பான், சால நூலுணர் கேள்வி வீர! தவத்தினேய்! என விளித்தான். சால நூல்களைக் கற்றுணர்ந்த அறிவு "நெஞ்சின் மெலிவிற்கோர் துணையுமாகும்" (சீவக-1595) ஆதலாலும் கேள்வி அறிவு, "கற்றிலனாயினுங் கேட்க வஃதொருவற் கொற்கத்தி னூற்றாந்துணை" (குறள்-414) என்றமையால் தளர்ச்சி வந்துழிப் பற்றுக் கோடாய் நின்று அத்தளர்வைப்

போக்கும் ஆதலானும், வீர உணர்ச்சி துன்பத்தைக் கண்டு அஞ்சாது ஆதலானும், உற்ற நோய் நோன்றலாகிய தவம் மேற்கொண்டவர் துன்பத்திற்குத் தளர்தல் தகாது ஆதலானும், இராமன் தளர்ச்சி யுறுதல் அவன் தகுதிக்கு ஏலாமை, விளியானே புலப்படுத்திய நயம் நோக்குதற்குரியதாகும். பருவங்கள் தத்தமக்குரிய இரண்டு திங்கள் என்ற அளவிற்கு உட்பட்டனவேயாயினும் கார்ப்பருவம் பிரிந்தார்க் குப் பெருந்துயர் செய்து நெடிதுபோல் காட்டுதலின் 'காலம் நீளிது காரும்' என்ற எண்ணம் இராமனுக்குத் தோன்றுதல் இயல்பு. கார்ப்பருவம் முடியும் நிலையில் உள்ளமையால் அடுத்து வரத்தக்க கூதிர்ப்பருவத்தை 'மாரியும் வந்தது' என விரைவு பற்றி இறந்த காலத்தாற் கூறினன். மாரி என்றது மழை என்ற பொதுப் பொருளில் வழங்குவதே ஆயினும் கூதிர்ப்பருவம் என்ற சிறப்புப் பொருளில் இங்குக் கம்பர் வழங்கியுள்ளார் என்பதை யுளங்கொளல் வேண்டும். இப்பொருள் தோன்றவே 'காரும் மாரியும்' என இரண்டு பருவங்களை ஒன்ருக இணைத்துக் கூறியுள்ளார்; மேலும் கார்ப் பருவத்திற்குப் பின் கூதிர்ப்பருவம் வந்தது என்று கூறவந்தவர், "மேல் உற்று நின்ற வினைக் கொடும்பிணி யொன்றின்மேலுடன் ஒன்றுராய் மற்றும் வெம்பிணி பற்றினுலென வந்தெழுந்தது மாரியே" (69) என அப்பெயரான் வழங்கியதும், "இத்தகைய மாரியிடை துன்னியிருளெய்த" (84) 'மாரியீதெனின்' (88), மாரிச் சீகரம் (90) எனப் பின்னும் அப்பொருளில் பல்கால் வழங்கித் தன்குறி வழக்கம் மிக வெடுத்துரைத்தல் என்ற உத்தியையும் தாஅனுட்டித் தனது நிறுப்பு என்ற மதத்தையும் கம்பர் கையாண்டுள்ளமை அறியலாம். மேலும், 'மாரி என்ற சொல்லைக் கூதிர்ப்பருவம் என்ற பொருளில் தான் வழங்கியுள்ளேன்' எனப் புலப்படுத்துவார் போலப் பின் அப் பருவம் இறுதியுற்றது என்று கூறும் இடத்தில் 'கூதிரும் இறுதி யுற்றதால்' (95) என மாரி என்ற சொல்லைப் பெய்யவேண்டிய இடத்தில் கூதிர் என்ற சொல்லைப் பெய்து விளக்கியிருத்தலும் காண லாம். தொல்காப்பியர் அகத்திணையியலில் 'நடுவணைந்திணை நடுவணதொழிய' (2) என்புழிப் பாலைக்கு நடுவணது என்ற பெயரை வழங்கிப் பின் 'நடுவுநிலைத்திணை என மேலும் ஆண்டு, புறத்திணை யியலில்' 'வாகைதானே பாலையது புறனே' (73) என நடுவணது புறனே என்று கூற வேண்டிய இடத்தில் 'பாலையது புறனே' என்று கூறி, 'நடுவணது' என யான் குறித்தது பாலைத்திணையையே' என் பார் போலப் பொருள் புலப்படுத்தி யிருத்தல் இங்கு ஒப்புநோக்கத் தகும்.

அவ்வாறு மாரி என்றது கூதிரையே எனப் பொருள் விளக்கம் செய்த பின்னரும் 'மாயையின் மாய்ந்தது மாரிப் பேரிருள்' (104) எனவும் 'இறுதியுண்டே கொல் இம்மாரிக்கு' (102) எனவும் அச்

சொல்லை அப்பொருளில் ஆட்சி செய்திருத்தலும் உளங்கொண்டு நோக்கின் கம்பர் கருத்து இன்னதென்றறியலாம். மாரி என்ற சொல்லைக் கூதிர்ப்பருவம் என்ற பொருளில் முன் ஆண்ட புலவரும் உளரோ எனின்? உளர். ஆசிரியர் நல்லந்துவனுர், கூதிர்காலத்திற்குப் பின் வருவதாகிய முன்பனிக் காலத்து மார்கழித் திங்களைக் கூறவந்தவர், "ஞாயிறு காயா நளி மாரிப் பிற்குளத்து மாயிருந் திங்கள்" (பரி - 11) என மாரி என்ற சொல்லைக் கூதிர் என்ற பொருளில் ஆண்டிருத்தல் காணலாம். 'மாரி என்பதை மழையென்ற பொருளில் வழங்கவில்லை; கூதிர்ப்பருவம் என்ற பொருளில்தான் வழங்கியுள்ளேன்' என்பார் போல 'ஞாயிறு காயாநளி' எனக் கூதிர்ப்பருவத்திற்குரிய அடைமொழிகளையே புணர்த்தியிருத்தலும் நோக்கத்தகும். பித்திகைப்போது முதலிய போதுகள் மலர்வதால் போது உணருமாறு ஞாயிறு காயாமையும், குன்றையும் குளிர்விப்பது போன்ற குளிர் மிகுதியதாதலும் கூதிர்க்கேயுரிய இயல்பு என்பதை நெடுநல்வாடை போன்ற பழந் தமிழ்ப் பாடல்களில் கண்டு கொள்ளலாம். இதனுல் கூதிர்ப்பருவத்தை மாரி என்ற பெயரால் குறிப்பது பண்டேயுண்டு என்பது நினையலாம்.

இனி, மாரி என்பதைக் கம்பர் மழையென்ற பொதுப்பொருளில் தான் வழங்கினுரெனின் 'காலம் நீளிது காரும்' என்று கூறிய கார் பருவத்தில் மழையேயில்லை எனவும் 'மாரியும் வந்தது' என்று கூறியதற்குப் பிறகுதான் மழை பொழிந்தது எனவும் பட்டு, பொன்னெடுங் குன்றின்மேல் பொழிந்த தாரைகள், 'மின்ஞெடுந்துவன்றிய மேகராசியே' (14) எனவும், 'ஆய்மலர் தூர்த்தன வொத்தன துள்ளி வெள்ளமே' (18) எனவும் கார்காலத்து மழை பொழிந்தமையை விளக்கிய கவிகளோடு மாறுபடுதல் காணலாம். மேலும் மாரிப் பருவம் கூறும் பகுதியில் கார்காலம் என்ற சொல்லையே வழங்காமையும் காணலாம்.

கார்காலத்து இராமன் சீதையின் நினைவால் வருந்தினுன் என்பதே உண்மையாயினும் அவனுக்கு வீரவுணர்ச்சியை யெழுப்ப வேண்டி, அரக்கர் வீரம் நினைந்தமுங்கிய நீர்மையோ எனப் பின்னும் வினவினுன். சுக்கிரீவன் சேனையைப் பழைய நினைவால் 'வாலி சேனை' என்ருன்; அது வாலியால் தொகுக்கப்பட்டதாகலின். (65)

4318. மறைதுளங்கினு மதிதுளங்கினும்
வானுமாழ்கடல் வையமும்
நிறைதுளங்கினு நிலைதுளங்குறு
நிலைமைநின்வயி னிற்குமோ
பிறைதுளங்குவ வனையபேரெயி
றுடையபேதையர் பெருமைநின்
இறைதுளங்குறு புருவமென்சிலை
யிடைதுளங்குற விசையுமோ.

'மறை துளங்கினும், மதி துளங்கினும்;
வானும், ஆழ்கடல் வையமும்
நிறை துளங்கினும், நிலை துளங்குறு
நிலைமை நின்வயின் நிற்குமோ?
பிறை துளங்குவ அனைய பேர் எயிறு
உடைய பேதையர் பெருமை, நின்
இறை துளங்குறு புருவ மென்சிலை
இடை துளங்குற இசையுமோ?'

பொ:—வேதநெறி பிறழ்ந்தாலும், சந்திரன் நிலை மாறினாலும் ஆகாயமும் ஆழ்ந்த கடலால் சூழப்பட்ட பூமியும் நிலை மாறினாலும், இயல்பான பெருமை நிலையினின்றும் மாறுபடும் நிலைமை நின்னிடத்தில் நிற்கத் தகுந்ததோ? (அன்று) பிறைகள் பல விளங்குவன போன்ற பெரிய கோரப் பற்களையுடைய அரக்கராகிய அறிவிலிகளின் படைவலிப் பெருமையெல்லாம் நின் விளக்கமுடைய புருவமாகிய வில்லின் நடு சிறிது அசைந்த அளவில் நிற்கக்கூடியனவோ? (நிற்க மாட்டா.)

கு:—மேலைச் செய்யுளில் வினவிய மூன்று வினாக்களில் முதலதாகிய வினாவின்படி சீதையின் பிரிவு வருத்தத்தை மிகுதிப்படுத்தக் காரும் நீளிதாயது; கூதிர்காலமும் வந்தது என்ற கவலையால் இராமன் தளர்ச்சி யுற்றதாக வைத்துக்கொண்டு இச்செய்யுளின் முதலிரண்டடிகளில் அதற்கு அமைதி கூறுவானாய், நிகழக்கூடாதன நிகழ்ந்தாலும் நின்னிலை குலையாத பெருமையுடைய நீ இயல்பாய் நிகழ்வதாய கார்காலம், கூதிர்காலம் கண்டு அவற்றிற்கு ஆற்றாது தளர்தல் பொருந்தாது என்பான் 'மறைதுளங்கினும்......... நிலை துளங்குறு நிலைமை நின் வயின் நிற்குமோ?'' என்றான். "பாஅல் புளிப்பினும் பகலிருளினும் நாஅல் வேத நெறிதிரியினும் திரியாச் சுற்றமொடு" (புறநா - 2) என்றது இங்கு ஒப்பு நோக்கத்தகும். மறை துளங்குதலாவது, வேதத்தினது ஒழுக்கம் வேறுபடுதல். மதி

துளங்குதல் கூறவே இனம்பற்றி 'ஞாயிறு முதலிய கோள்கள் நாள்கள் துளங்குதலும் கொள்ளப்படும். மதிதுளங்குதலாவது தண் ணிலவு' வீசி உயிர்கட்கு இன்பமளிக்கும் நிலையினின்றும் வேறு படுதல். ஞாயிறு முதலியவற்றிற்கும் ஏற்பன கொள்க. வானும் வையமும் நிறைதுளங்கலாவது மேலது கீழதாய்க் கீழது மேலதாய் நிற்கும் நிலை மாறுபடுதல். நிறை - கடவுள் நிறுத்தியுள்ள நிலை. மறை முதலியன துளங்கா இயல்பின ஆகலின், அவற்றின் துளக்கம் நிகழினும் இராமன் பெருமை நிலை மாறுபடாது என அதன் உறுதி புலப்படுத்தியவாறு. "விலங்கலைக் கால் விண்டு மேன்மேலிட விண்ணு மண்ணு முந்நீர்க் கலங்கலைச் சென்ற வன்றுங் கலங்காய் .........துலங்கலைச் சென்ற தென்னோ' (திருக்கோவை - 24) எனத் தோழன் தலைவனை வினவியதுபோல இங்கு இராமனை இலக்குவன் வினவுகின்றான் என்க.

இனி, அரக்கர் வீரம் நினைந்தழுங்கிய நீர்மையனைக்கொண்டு பின் இரண்டடிகளால் அமைதி கூறுகின்றான். அரக்கரின் புற உடம்பை இகழ்ந்து பேரெயிறு, என்பதும் அவர் அகநிலையை இகழ்ந்து 'பேதையர்' என்பதும் கூறப்பட்டன. நிறத்தாலும் வளைந்த வடிவத்தாலும் பிறை அரக்கரின் கோரப் பற்களுக்கு உவமை யாயது. பேரெயிறு பலவாதலின் அவற்றிற்கு உவமையாக வேண்டிப் பிறைகளும் பலவாகக் கூறப்பட்டன; இல்பொருளுவமை. உலகின் தாயாகிய சீதையை வஞ்சித்துக் கவர்ந்து கையல்ல தன்கண் காதன்மை செய்த பேதையுட்பேதை இராவணனாதலின் அவனை யுள்ளிட்ட அரக்கரை யெல்லாம் 'பேதையர்' என்றான். 'பேதைமை யுளெல்லாம் பேதைமை காதன்மை கையல்ல தன்கட் செயல்' (குறள் - 832) என்றது காண்க. பழிபாவங்களாகிய ஏதங்களைக் கொண்டு செல்வம், புகழ் அறங்களாகிய ஊதியங்களைப் போகவிட் டவர் அரக்கராதலின் பேதையர் எனப்பட்டார் எனினும் அமையும். இக்கருத்தானே சடாயு இராவணனை நோக்கி "பேதாய் பிழை செய்தனை" (ஆரணிய - சடாயு உயிர்நீத்த - 95) என அப்பெயரால் விளித்தமையும் நினையலாம். பேதையர் பெருமை என்றது அவர் மெய் வலியும் படைவலியும் போன்ற பெருமைகளை. அவர் பெரு மையை அழித்தற்குப் பெரு முயற்சியும் பெரும்படையும் வேண்டா என்பான், 'பேதையர்' பெருமை நின் புருவமென்சிலை இறை துளங்குற இசையுமோ என்றான். துளங்குறு புருவம் - விளக்க முடைய் புருவம். புருவமென் சிலை என்றது உருவகம். இராமன் வெகுண்டு சிறிது புருவத்தை நெரித்த அளவிலே அவ்வரக்கர் பெருமை யெல்லாம் அழியும் என்றவாறு. 'நீ உடன்று நோக்கும் வாய் எரிதவழ' (புறநா - 38) என்றதுபோல இராமனது ஆற்றலைச் சிறப்பித்து ஆற்றுவிக்க இலக்குவன் இங்ஙனம் கூறினான்.

“கோட்டந் திருப்புருவங் கொள்ளா வவர்செங்கோல்
கோட்டம் புரிந்த கொடைச் சென்னி—நாட்டம்
சிவந்தன வில்லே திருந்தார் கலிங்கம்
சிவந்தன செந்தீத் தெற”

(தண்டியலங்கார. உதார. 79. சூ)

என்றது இங்கு ஒப்பு நோக்கத்தகும். சினத்தால் நின் புருவத்தை நெரித்த அளவில் அழியக்கூடிய அரக்கரின் வலியை மதித்துக் கவலுதல் பொருந்தாது என்றவாறு. (66)

4319. அனும னென்பவ னளவறிந்தன
மறிஞவங்கத ஞதியோ
ரெனேய ரென்பதொ ரிறுதிகண்டில
மெழுபதென்றெணு மியல்பினர்
வினேயின் வெந்துயர் விரவுதிங்களும்
விரைவுசென்றன வெளிதினின்
றனுவெனுந்திரு நுதலி வந்தனள்
சரதம்வன்றுயர் தவிர்தியே.

‘அனுமன் என்பவன் அளவு அறிந்தனம்;
அறிஞ! அங்கதன் ஆதியோர்
எனேயர் என்பது ஓர் இறுதி கண்டிலம்;
எழுபது என்று எணும் இயல்பினர்,
வினேயின் வெந்துயர் விரவு திங்களும்,
விரைவு சென்றன, எளிதின், நின்
தனு எனும் திருநுதலி வந்தனள்;
சரதம்; வன்துயர் தவிர்தியே.

பொ:—அறிவிற்சிறந்தோய்! அனுமன் என்று சொல்லப்படும் ஒருவனுடைய (அறிவு வடிவு, திறமை, முதலியவற்றின்) அளவை மட்டுமே அறிந்தோம்; அங்கதன் முதலியோராகிய எழுபது வெள்ளம் என்று எண்ணப்படும் தகுதியுடையவர்கள் (அவ்வனு மனேப்போல) எத்தன்மையான அறிவும் ஆற்றலும் உடையவர்கள் என்பதோர் வரையறையை இன்னும் கண்டோம் இல்லே; தீவினே யைப்போலக் கொடிய துன்பந்தரும் தன்மை பொருந்திய கார்கால மாதங்களும் விரைவாகக் கழிந்தன; நின் கை வில் போன்ற அழகிய நெற்றியையுடைய சீதை எளிதில் வந்து விட்டாள்; இது உறுதி; ஆதலால், நீ கொடிய துயரத்தை விடுவாயாக.

கு :—அனுமனுடைய சொற்றிறனையும் பேருருவையும் முன்னரே அறியும் வாய்ப்புக் கிடைத்ததுபோல ஏனைய வானரர் அறிவுந்திறனும் காணும் வாய்ப்புக் கிடைத்திலது ஆதலின், "அனுமன் என்பவன் அள வறிந்தனம்' எனவும், 'அங்கதன் ஆதியோராகிய எழுபது என் றெணும் இயல்பினர் ஏனையர் என்பதோர் இறுதி கண்டிலம்' எனவும் கூறினன். 'வாலிசேனை மடந்தை வைகிடம் நாட வாரலி லாமையால் இராமன் தளர்வுற்றதாகக் கொண்டு இச்செய்யுளில் முதலிரண்டடிகளால் அமைதி கூறுகின்ருன். அங்கதன் முதலியோர் அனுமன் அளவினரா? அவனினும் மேம்பட்ட வலியினரா? என்பது அறிந்திலம் என்பான். 'ஏனையர் என்பதொ ரிறுதி கண்டிலம், என்ருன். ஏவல் செய்யும் அனுமனே அத்தகைய அறிவும் வடிவும் திறனும் உடையனுயின் அரசனுகிய சுக்கிரீவனும் இளவரசனுகிய அங்கதனும் ஏனையோரும் எத்துணை அறிவும் வலியும் உடையராவர் என்பது கருதி யுணரத்தக்கது என்றவாறு. எழுபது என்றது ஆகு பெயராய் எழுபது வெள்ளத்தை யுணர்த்தியது. எழுபது வெள்ளச் சேனை இருத்தலின், மழைக் காலம் முடிந்தவுடன் விரைந்து சீதை யைத் தேடித் தருவர் ஆதலின் அவர் இப்போது நாடவாரல் இயலாமையால் வருந்துதல் பொருந்தாது என்றவாறு. இவ்வுரை யாடல் நிகழுங்காலம் புரட்டாசித் திங்கள் முடியும் காலமாதலின், 'வெந்துயர் விரவு திங்களும் விரைவு சென்றன' என்ருன். வினை எனப் பொதுவகையாற் கூறியிருப்பினும் வெந்துயர் எனப் பின் கூறு தலின், தீவினை எனப் பொருள் கூறலாயிற்று. கார்காலம் ஆவணியும் புரட்டாசியும் ஆகிய இரண்டு மாதங்கள் ஆதலின் 'சென்றன எனப் பன்மையாற் கூறினன். இராமன் கருத்தால் 'காலநீளிதுகாரும் என்று கூறியவன் இங்கு ஆறுதல் கூறும் நிலையில் 'வெந்துயர் விரவு திங்களும் விரைவு சென்றன' என்ருன். கார் காலம் முடிதற்கு இன்னும் சில நாள் உளவெனினும் விரைவு பற்றிச் சென்றன என இறந்த காலத்தாற் கூறினன். திருநுதலி எளிதின் வந்தனள் என்பது தெளிவு பற்றிய காலவழுவமைதி. தனு - வில். வளைவுபற்றி நுதலுக்கு வில் உவமையாயது. மழைக் காலம் முடிந்த வுடன் வானர சேனை நாடிச் சீதையைத் தரும் என்ற துணிவு கொண்டு 'வன்துயர்தவிர்தி' என்ருன். சரதம் - சத்தியம்; உறுதி. தவிர்தல் - நீங்குதல்; விடுதல். (67)

**4320.** மறையறிந்தவர் வரவுகண்டுமை
வலியும்வஞ்சகர் வழியொடுங்
குறையவென்றிடர் களைவெனென்றனை
குறைமுடிந்தது விதியினு

லிறைவவங்கவ ரிறுதிகண்டினி
திசைபுனைந்திமை யவர்கடா
முறையுமும்பரு முதவி நின்றரு
ளுணர்வழிந்திட லுறுதியோ.

'மறை அறிந்தவர் வரவு கண்டு, "உமை
வலியும் வஞ்சகர் வழியொடும்
குறைய வென்று, இடர்களைவென்" என்றனை,
குறை முடிந்தது; விதியினால்,
இறைவ! அங்கு அவர் இறுதி கண்டு, இனிது
இசை புனைந்து, இமையவர்கள்தாம்,
உறையும் உம்பரும் உதவி நின்று அருள்;
உணர்வு அழிந்திடல் உறுதியோ?'

பொ:—தலைவனே! வேதம் உணர்ந்த வாலகில்லியர் முதலிய தண்டகவனத்து முனிவர்கள் நின்பால் தம் துன்பங்கூறிச் சரணடைய வந்ததை உணர்ந்து, "உங்களைத் துன்புறுத்தும் அரக்கர்களாகிய வஞ்சகர் குலத்தோடும் அழியுமாறு வென்று, உங்கள் துன்பங்களைக் களைவேன்" என்று உறுதியாக வாக்களித்தாய்; அந்தக் குறையும் (சீதையின் பொருட்டுச் செய்யும் போரால்) முடிந்ததாகும்; முறைப்படி அவ்விராவணன் முதலிய அரக்கரின் அழிவைச் செய்து முடித்து, அதனால் புகழ்மாலை புனைந்துகொண்டு, தேவர்களுக்கு அவர் முன் உரிமையோடு தங்கியிருந்த பொன்னுலகத்தை மீட்டும் கொடுத்து உதவிப், பின் அமைதியுற்றருள்வாயாக! அது செய்யாது அறிவழிந்து தளர்வது உறுதி தரும் செயலாமோ? (ஆகாது).

கு:—சீதையின் பிரிவால் வருந்துவதினும் இராமன், முனிவர் துயர் தீர்க்காமையால் பெரிதும் வருந்தும் உள்ளத்தன் ஆதலின், இலக்குவன் அக்குறையை எடுத்துக் காட்டி அக்குறையும் முடியுங் காலம் வந்தது என ஊக்கம் ஊட்டியாற்றுவித்தவாறு. மறையறிந்தவர் என்றது தண்டகவனத்து முனிவர்களை. வலி - துன்பம்; "யாவர்க்கும் வலியானே யான்பட்ட வலிகாண வாராயோ!" (சூர்ப்பணகைப்-102) என்புழியும் இச்சொல் இப்பொருளில் வந்தமை காணலாம். வலி - என்ற பெயர்ச்சொல் வினைத்தன்மைபட்டு 'வலியும்' என்று வந்தது; 'துன்புறுத்தும்' என்பது பொருள். வழி – மரபு; குலம். குறைதல் இங்கு அழிதலையுணர்த்தியது. தண்டகவனத்து முனிவர்கள்பால் இராமன், 'ஆரறத்திறேடன்றி நின்றுரவர் வேரறுப்பன் வெருவன்மின் நீர்' (அகத்தியப்-22) எனக்

கூறியுள்ளமை நினைந்து இங்கு "உமைவலியும் வஞ்சகர் வழியொடும் குறைய வென்றிடர் களைவெ னென்றனை" என்று இலக்குவன் கூறினன். முனிவர்க்குக் கூறிய வாக்கு முடிவுறாது குறையாகவே இருந்தது; இப்போது சீதையின் பொருட்டுச் செய்ய நேர்ந்த போரால் அக்குறையும் முடிவுறும் என்றவாறு. ஒரு கல்லின் மூன்று மாங்காய் அடிப்பதுபோலச் சீதையை மீட்கச் செய்யும் போரால், முனிவர் குறைதீர்த்தலும், தேவர் குறை தீர்த்தலும் செய்து முடித்ததாக முடியும் என்றவாறு. விதியினால் அங்கவர் இறுதிகண்டு என இயையும். வஞ்சகப்போரை விலக்க 'விதியினால் அங்கவர் இறுதி கண்டு' என்றான். அறப்போரால் அவர் இறுதி காணப் போவதால் இராமனுக்கு வருவது புகழே ஆதலின், 'இனிது இசை புனைந்து' என்றான். இசை - புகழ். அரக்கரின் வன்மைக்குத் தோற்றுத் தேவர் தம் உறைவிடமும் இழந்திருக்கின்றார்களாதலின், 'உறையு மும்பரு முதவி' என்றான். சடாயுவும், "ஆதலால் முனிவாயல்லை யருந்ததி யனையகற்பிற் காதலாடுயர நீக்கித் தேவர்தம் கருத்து முற்றி, வேத நூன் முறையின் யாவும் விதியுளி நிறுவி வேறும் தீதுளதுடைத்தி" (சடாயுவுயிர் நீத்த-212) எனத் தேவர் கருத்து முற்றுவித்தலையும் முனிவர் தீது துடைத்தலையும் சேர்த்தே கூறியுள்ளமை காணலாம். சீதையின் துயர் தீர்த்தலாகிய நம் காரியம், முனிவர் துயர் தீர்த்தலும் தேவர் துயர் தீர்த்தலுமாக அமைந்துள்ளமையின் ஆர்வத்தோடு அக் காரிய முடிக்க முயலுவதை விடுத்துத் துன்பத்தால் தளர்தல் தகாது என்றவாறு. (68)

**4321.** காதுகொற்ற நினக்கலாது
பிறர்க்கெவ்வாறு கலக்குமோ
வேதனைக்கிட மாதல்வீரதை
யன்றுபேதைமை யாமரோ
போதுபிற்பட லுண்டிதோர்பொரு
ளன்றுநின்று புணர்த்தியேல்
யாதுனக்கிய லாததெந்தை
வருந்தலென்ன வியம்பினன்.

'காது கொற்றம் நினக்கு அலாது
பிறர்க்கு எவ்வாறு கலக்குமோ?
வேதனைக்கு இடம் ஆதல் வீரதை
அன்று; பேதைமை ஆம் அரோ;

போது பிற்படல் உண்டு; இது ஓர் பொருள்
அன்று; நின்று புணர்த்தியேல்
யாது உனக்கு இயலாதது? எந்தை!
வருந்தல்' என்ன இயம்பினன்.

பொ:—'எம் தந்தையே! பகைவரைக் கொல்லுதலால் உளதாகும் வெற்றி (அறத்தின் வழிச் செல்லும்) நினக்குக் கிடைப்பதல்லது (அறத்திற்கு மாறுபட்ட) நம் பகைவர்க்கு எவ்வாறு கிடைக்கும்? (கிடைக்காது) ஆதலால், (வெற்றி யார்க்குக் கிடைக்குமோ என நினைந்து) துன்பத்திற்கு இடமாக இருத்தல் வீரம் ஆகாது; பெண் தன்மைக்கு உரிய செயலாகும்; (நாம் நினைத்த வெற்றியைப் பெறுவது) காலம் காரணமாகப் பிற்படுகின்றது என்பது உண்மையே; ஆயினும், இக்காலத்தாழ்ச்சி ஒருபொருட்டன்று; சோர்வுறுது நின்று நீ முயற்சி செய்வாயாயின் உனக்குச் செய்ய இயலாதது யாதுளது? (எல்லாம் செயல்கூடும்) ஆதலால் வருந்தற்க!' என்று சொன்னான்.

கு:—இராமனை இலக்குவன் எந்தை என்று விளித்தது 'நற்றாதையுநீ' (1827) என முன் கூறிய முறையால் பொருந்துவதாகும். காதுதல் - கொல்லுதல். கொற்றம் - வெற்றி. சீதை பொருட்டாக அரக்கரோடு செய்யும் போரில் வெற்றி யார்க்குக் கிடைக்குமோ? என்ற ஐயத்தால் இராமன் தளர்வதாக எண்ணி இலக்குவன் இங்ஙனம் அமைதி கூறுகின்றான். கலத்தல் – பொருந்துதல்; கிடைத்தல். 'அறம் வெல்லும் பாவம் தோற்கும்' என்பது நியதியாகலின் வெற்றி அறவழிச் செல்லும் நினக்குக் கிடைக்குமேயன்றிப் பாவ நெறியிற் செல்லும் அரக்கர்க்கு எவ்வாறு கிடைக்கும்? என்று இராமனுக்கே வெற்றியென்பதை உறுதிப்படுத்தியவாறு. எவ்வாறு என்பதிலேயே வினாப் பொருள் அமைந்திருத்தலின் 'கலக்குமோ' என்புழி ஓகாரம் அசைநிலை ஆம். வேதனை - துன்பம். துன்பத்திற்கு இடமாதல் பெண்டிர் செயலன்றி வீரர் செயல் அன்று என்பான் 'வீரதை யன்று பேதைமை யாம்' என்றான். வீரதை - வீரம். 'கரக்கும் வீரதை' (கும்பகருண - 222) எனப் பின்னும் வருதல் காணலாம். பேதைமை - பெண்ணின்தன்மை. மழைக்காலம் காரணமாகக் காலம் தாழ்த்தாலும் நினைந்த வெற்றிபெறுதல் உறுதி என்பான், 'போது பிற்படலுண்டி தோர்பொருளன்று, என்றான். புணர்த்தல் - முயற்சியொடு பொருந்துதல்; போர்க்கு வேண்டிய உபாயங்களை ஆராய்தல் எனலும் ஆம். (69)

கூதிர் காலம் தொடங்குதல்

4322. சொற்றதம்பி யுரைக்குணர்ந்துயிர்
சோர்வொடுங்கிய தொல்லையோ
னிற்றவின்ன லியக்கமெய்திட
வைகல்பற்பல வேகமே
லுற்றுநின்ற வினைக்கொடும்பிணி
யொன்றின்மேலுட னொன்றுராய்
மற்றுவெம்பிணி பற்றினுலென
வந்தெதிர்ந்தது மாரியே.

சொற்ற தம்பி உரைக்கு உணர்ந்து, உயிர்
சோர்வு ஒடுங்கிய தொல்லையோன்,
இற்ற இன்னல் இயக்கம் எய்திட,
வைகல் பற்பல ஏக, மேல்
உற்று நின்ற வினைக் கொடும்பிணி
ஒன்றின்மேல் உடன் ஒன்று உராய்,
மற்று வெம்பிணி பற்றினுலென,
வந்து எதிர்ந்தது மாரியே.

பொ :—கார்காலத்துப் பிரிவாற்ருமையால் உயிர் தளர்ந்தமை பற்றி இயக்கம் இன்றி ஒடுங்கிக்கிடந்த பழையோனுகிய (திருமாலின் அமிசமான) இராமன், தம்பி சொன்ன தேறுதல் மொழியால் உணர்ச்சி பெற்றுத் துன்பம் நீங்கினவனுய் நடமாட்டத்தை மேற் கொள்ளா நிற்க, அவ்வாறே பலப்பல நாட்கள் கழியவும், பின்னர், முன்னமே உடம்பில் பொருந்தி நின்ற வினையாலாகிய கொடிதாகிய ஒரு நோய்க்குமேல், வேறும் ஒரு கொடிய நோய் உடன் சேர்ந்து வந்து பற்றினுற் போலக் கூதிர்காலம் வந்து தோன்றியது.

கு :—இலக்குவன் "வெந்துயர் விரவு திங்களும் விரைவு சென்றன" எனத் தேறுதல் கூறிய பின்னரும் கார்காலம் முடிவுருது சிலநாள் தாழ்த்தே முடிந்தது என்பார், 'வைகல் பற்பல ஏகமேல்... வந்தெதிர்ந்தது மாரி' என்ருர். இராமனது கடவுள் நிலையை நினைந்து 'தொல்லையோன்' என அவனுக்குப் பெயர் கூறினுர். உரையால் என்பது உரைக்கு என உருபுமயங்கிற்று. உயிர் சோர்வால் ஒடுங்கிய என மூன்றனுருபு விரிக்க. தொல்லையோன் உணர்ந்து இயக்கம் எய்திடவும் வைகல் ஏகவும் மாரி வந்தெதிர்ந்தது என இயையும். இற்ற இன்னலனுய் இயக்கம் எய்திட என்க.

இன்னல் நீங்கியவனாய் நடமாட்டம் மேற்கொள்ள என்பது கருத்து. தம்பியின் தேறுதல் மொழியால் இராமன் உணர்ச்சி பெற்று விட்டமையால் அவன் முன் பட்ட இன்னல் இற்றதாயிற்று. வைகல் பற்பல ஏக மேல் மாரி வந்தெதிர்ந்தது என்க. வினைவயத்தால் வந்த பிணியாகலின் 'கொடும்பிணி' எனப்பட்டது. உற்று நின்றதாகிய பிணியொன்றன்மேல் 'வெம்பிணி மற்றொன்று உடன் உராய்ப் பற்றினாலென' என இயையும். 'உராய்' என்பது செலவின் கண்ணும் வரவின் கண்ணும் வருவதோர் வினையெச்சம். 'கால் என்னக் கடிது உராஅய்' (மதுரைக் - 125) என்றது நினைக. கார்காலம் உற்று நின்ற வினைக் கொடும்பிணி போன்றது எனவும், கூதிரின் வரவு, அப்பிணிக்குமேல் மற்று வெம்பிணியொன்றுஉடன் வந்து பற்றியது போன்றது எனவும் உவமையை விரித்துக் கொள்க. முன் உற்று நின்ற நோயினும் அதன்மேல் வந்துற்ற வெம்பிணி கடிதாகத்தாக்குதல் போலக் காரினும் கூதிர் கடிதாக வருத்தும் என்பதும் புலப்படுத்தியவாறு. மாரி - கூதிர்காலம். 65ஆவது செய்யுளின் உரை காண்க. இப்பாடற்குப்பின் ஒரு பிரதியில் 'கார்காலப் படலம் முற்றும்' என்று காணப்படும் குறிப்பு இருப்பதாக 45 எண்ணுள்ள அச்சுப் புத்தகக் குறிப்பு இருப்பது நோக்கத்தகும். (70)

## கூதிர்ப்பருவ வருணனை 4323-4325

4323. நிறைந்தன நெடுங்குள நெருங்கின தரங்கங்
★ குறைந்தன கருங்குயில் குளிர்ந்த வுயர்குன்றம்
மறைந்தன நெடுந்திசை வருந்தினர் பிரிந்தா
ருறைந்தன் மகன்றிலுட னன்றிலுயி ரொன்றி.

நிறைந்தன நெடுங்குளம்; நெருங்கின தரங்கம்;
குறைந்தன கருங்குயில்; குளிர்ந்த உயர் குன்றம்;
மறைந்தன நெடுந்திசை; வருந்தினர் பிரிந்தார்;
உறைந்தன மகன்றிலுடன் அன்றில் உயிர் ஒன்றி.

பொ:—நீண்ட ஏரிகளில் நீர் நிறைவுற்றன; அவ் ஏரிகளில் அலைகள் ஒன்றன்பின் ஒன்றாய் நெருங்கி வீசின; கருமையான குயில்கள் குளிரால் உடல் வன்மை குறைந்தன; உயர்ந்த குன்றங்களும் குளிர்ச்சி மிக்கன ஆயின; நீண்ட திசைகளும் கூதிர்ப்பருவ மேகங்களால் மறைந்துவிட்டன; பிரிந்த காதலர்கள் குளிர்ச்சி மிகுதியால் வருந்தினார்கள்; பிரியா இயல்பினவாகிய மகன்றிலும் அன்றிலும் புறத்தே போகாமல் தத்தம் உயிர் போன்ற பேடைகளோடு தழுவிக்கொண்டு ஒரிடத்தில் தங்கியிருந்தன.

கு :—நெடுங்குளம் என்றது ஏரியை; கார்காலத்து மழையால் வேனில் வெப்பம் தணிவுற்றுச் சிறிது நீர் தங்கப்பெற்ற ஏரிகள், கூதிர்காலத்து மழையால் நிரம்பி வழிவன ஆயின என்க. தரங்கம் - அலைகள். ஏரிகளின் நிறைவைச் சிறப்பிக்கத் தரங்கம் நெருங்கினமை கூறினர். குயில் குரல் குறைந்தமை 'கூயவாய்க் குரல் குறைந்த போல் குறைந்தன குயில்கள்' (46) எனவும், 'பேசாது அடங்கின குயில்கள் (26) எனவும் முன்னரே கூறியிருத்தலின் இங்குக் 'குறைந்த கருங்குயில்' என்றது குளிர் மிகுதியால் புறத்திற்சென்று இரை தேர்ந்துண்ண முடியாமல் உடல் வன்மை குறைந்ததையே யுணர்த்தியதாகக் கொள்க. முன், வேனில் வெப்பத்தால் வெம்மை மிக்கிருந்த குன்றங்கள் கூதிர்காலத்துக் குளிர் மழையால் குளிர்ச்சி மிக்கனவாயின என்பார், குளிர்ந்த உயர் குன்றம் என்றார். 'குன்று குளிர்ப்பன்ன கூதிர்ப்பானள்' (நெடுநல் வாடை - 12) என்றது இங்கு ஒப்பு நோக்கத்தகும். ஞாயிறு சிறிதும் தோன்ருவாறு மேகம் மறைத்தலின் நெடிதாகத் தோன்றும் திசைகள் மறைந்துபோய்க் குறுகியதாகத் தோன்றுதலால்' மறைந்தன நெடுந்திசை' என்றார். காதலரைப் பிரிந்த ஆடவரும் பெண்டிரும் கூதிர்ப்பருவக் குளிரால் மிகவும் வருந்துதல் இயல்பு. "காதலர்ப் பிரிந்தோர் புலம்பப் பெயல்கனைந்து, கூதிர் நின்றன்றாற் போதே" (நெடுநல்வாடை-71) என்றது காணலாம். பேடையை விட்டுச் சிறிதும் பிரியா இயல்பு மகன்றிலுக்கும் அன்றிலுக்கும் உண்டு; அவ்வியல்பு இக்கூதிர்ப் பருவத்தால் சிறப்பு மிக்கதாயது என்பார், 'உறைந்தன மகன்றிலுடன் அன்றிலுயிர் ஒன்றி" என்றார். மகன்றில் நீர் வாழ் பறவை; அன்றில் பனைமரத்து வாழும் பறவை. இவை இரண்டும் பேடையைப் பிரியா இயல்பில் ஒற்றுமையுடைமையின் சேர்த்துக் கூறியவாறு. உயிர் என்றது உயிர்போன்ற பேடைகளை. ஒன்றுதலாவது உடம்பு ஒன்று என்று எண்ணுமாறு பேடையைத் தழுவி நிற்றல். மகன்றில் தன் பேடையைத் தழுவி நின்றது, அன்றிலும் அவ்வாறே தன் பேடையைத் தழுவி நின்றது என்றவாறு. 'பூவிடைப் படினும் யாண்டு கழித்தன்ன, நீருறை மகன்றில் புணர்ச்சி போலப் பிரிவரிதாகிய தண்டாக்காமமொடு உடனுயிர் போகுக'' (குறுந்-57) என மகன்றிலின் பிரியா இயல்பும் நீர் வாழ் இயல்பும் சிறைக்குடி ஆந்தையார் புலப்படுத்தியுள்ளமை காணலாம். குறுங்கான் மகன்றிலன்ன உடன்புணர்கொள்கைக் காதலோரே" (ஐங் - 381) என்பதும் அலர்ஞெமன் மகன்றினன்னர்ப் புணர்ச்சி" (பரிபா - 8 : 44) என்பதும் காண்க. "நெருப்பினன்ன செந்தலை யன்றில், இறவினன்ன கொடுவாய்ப் பெடையொடு, தடவினேங்கு சினைக் கட்சியிற் பிரிந்தோர், கையற நரலும்" (குறுந்-160) என அன்றிலின் பிரியா இயல்பு முதலியண

வற்றை மதுரை மருதனிளநாகனுர் கூறியிருத்தல் காணலாம். 'பரியரைப் பெண்ணையன்றில்' (நற் - 152) என்றதும் காணலாம். (71)

4324. பாசிழை மடந்தையர் பழிப்பிலக லல்குற்
றூசுதொட ரூசனனி வெம்மைதொடர் வுற்றே
வீசியது வாடைஎரி வெந்தவிரி புண்வீ
ழாசில்யில் வாளியென வாசைபுரி வார்மேல்.

பாசிழை மடந்தையர் பழிப்புஇல் அகல் அல்குல்
தூசு தொடர் ஊசல் நனிவெம்மை தொடர்வுற்றே
வீசியது வாடை எரி வெந்த விரி புண் வீழ்
ஆசு இல் அயில் வாளி என ஆசை புரிவார்மேல்.

பொ :— வாடைக்காற்று, — பசுமையான (பொன்ஞலியன்ற) அணிகலன்களை அணிந்த பெண்டிரின் குற்றமற்ற பரந்த புட்டத்தில் உடுத்த புடவையையும், அவர்கள் தொடர்ந்து ஆடுகின்ற ஊசலையும் சார்ந்து வெப்பத் தொடர்புற்று (அவர்பால்) காதல் கொண்டவர் களாகிய ஆண்மக்களின்மேல் - கனலில் வெந்த விரிந்த புண்ணில் வீழும் குற்றம் அற்ற கூரிய அம்பு என்னலாம்படி எரியை வீசியது.

கு :—பெண்டிர் மேல் ஆசைபுரியும் ஆடவர்மேல் - வாடைக் காற்று, அப்பெண்டிரணிந்த புடவையையும் அவர் அமர்ந்து ஆடும் ஊசலையும் பொருந்தி அங்குள்ள வெப்பத்தோடு தொடர்புடையதாய் வந்து எரியை வீசியது என்க. ஆசை புரிந்தும் அடைய இயலாத பெண்டிர்பால் பட்டு வந்த வாடைக்காற்று அக்காதல் மிக்க ஆட வரை வெம்மை செய்து வருத்தியது என்பார், வாடை எரி வீசியது என்ருர். இயல்பாகவே காதல் நோயால் வருந்துகின்ற ஆடவர் மேல் வாடைக்காற்று வீசி மேலும் வருத்தினமைக்கு, வெந்த விரிபுண் வீழ் அயில் வாளியை உவமை கூறினர். "வெந்ததோர் புண்ணின்கண் வேல்கொண்டு நுழைப்பான்போல் காய்ந்தநோய் உழப்பாரைக் கலக்கிய வந்தாயோ" (கலி - 120) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். பசுமையான பொன்ஞலியன்றமையின் "பாசிழை" எனப்பட்டது. இழை - அணிகலன். வாடை எரி வீசுவதாகக் கூறுவதுண்டு; தழல் வீச வுலாவரு வாடை தழீஇ' (சுந்தர - 494) எனப் பின்னர்க் கூறுவதும் காணலாம். (72)

4325. வேலைநிறை வுற்றன வெயிற்கதிர் வெதுப்புஞ்
சீலமழி வுற்றபுன லுற்றுருவு செப்பிற்
காலமறி வுற்றுணர்தல் கன்னலள வல்லால்
மாலைபக லுற்றதென வோர்வரிது மாதோ.

வேலை நிறைவுற்றன ; வெயில் கதிர் வெதுப்பும்
சீலம் அழிவுற்ற ; புனல் உற்று உருவு செப்பின்
காலம் அறிவுற்று உணர்தல் கன்னல் அளவு அல்லால்,
மாலை பகல் உற்றது என, ஓர்வு அரிது மாதோ !

பொ :—கடல், மழை நீராலும் ஆற்று நீராலும் நிறைந்தன ; சூரிய கிரணங்கள் வெதுப்புகின்ற தம்மியல்பை இழந்தன ; கிடாரத்தில் உள்ள நீரில் கிடந்து (தன்பால் அமைந்த சிறிய துளை வழியாக) நீர் நிறையப்பெற்று அந்நீரில் ஊடுருவி (மூழ்கி) ஒரு நாழிகையை அறிவிக்கும் நாழிகை வட்டில் மூலம் நாழிகையின் அளவை அறிந்து கொண்டு, அதனல், இது பகற்காலம், இது இரவுக் காலம் என்பதை அறிவதல்லது, மாலை வந்தது ; காலை வந்தது எனச் சூரியனைக் கொண்டு இயல்பாக அறிவது அரிதாயிற்று.

கு :—“ மழைகொளக் குறையாது புனல்புக மிகாது கரைபொரு திரங்கும் முந்நீர் ” (மதுரைக்-424) எனக் கடலின் பெருமை புகழப் படினும் மழைநீரும் ஆற்றுநீரும் ஊற்றுநீரும் சேர்ந்திருத்தல் பற்றி முந்நீர் என்று பெயர் பெற்றிருத்தலானும் ‘ கடல்குறை படுத்தநீர் கல்குறைபட எறிந்து ’ (பரிபாடல் : 20 – 1) என மேகம் கடலைக் குறைபடுத்தியதாகக் கூறப்படுதலானும் கடல் குறைபடுதலும், மழை நீராலும் ஆற்றுநீராலும் பின் நிறைதலும் உண்டு என்பது பெறப்படு தலின் இங்கு ‘ வேலை நிறைவுற்றன ’ என்ருர். கூதிர்ப் பருவ மழையால் ஏரி முதலிய நீர்நிலைகள் யாவும் நிறைந்து விட்டமையால் ஆறுகள் யாவும் கடலிடைப் புகுந்து அவற்றை நிரப்பின என்றவாறு. ஞாயிற்றின் கதிர்களுக்கு வெம்மையால் வெதுப்புவதே இயல்பாகவும் மேகத்தில் மறைப்புண்டு ஞாயிறே தோன்ருமையின் வெதுப்பும் சீலம் அழிவுற்றதாகக் கூறினுர். சீலம் - தன்மை. நாழிகை வட்டிலால் நாழிகை யறிந்து மாலை இது, காலை இது; என்று அறிவதல்லது சூரியனைக் கொண்டு அறியும் இயல்பு இல்லையாயது என்பார், ‘ கன்னலளவல்லால் மாலை பகலுற்றதென ஓர்வரிது ’ என்ருர். நாழிகை வட்டிலின் இயல்பு புலப்படுத்த, புனலுற்றுருவு செப்பு என்ருர். நடுவில் சிறிய துளையுடைய வட்டிலை நீர் நிறைந்த கடாரத்தில் இடின், அத்துளை வழியாக நீர் நிறைந்து அவ்வட்டில் நீரில் அமிழ்வது ஒரு நாழிகை எனக்கொள்வது பழைய மரபு. ‘ குறுநீர்க் கன்ன லினைத்தென் றிசைப்ப ’ (முல்லைப் – 58) எனவும், “ குறுநீர்க்

கன்ன லெண்ணுந ரல்லது கதிர்மருங்கறியா தஞ்சுவரப் பாஅய்" (அகநா - 43) எனவும் இந்நாழிகை வட்டில் குறிக்கப்படுதல் காண லாம். இவ்வாறு நாழிகையைக் கணக்கிட்டுக் கூறுவோர் நாழிகைக் கணக்கர் என்ற பெயரோடு அரசவையில் இருப்பர். பகலிரவறியாக் கூதிரியல்பை "மனையுறை புறவின் செங்காற் சேவல், இன்புறு பெடையொடு மன்று தேர்ந் துண்ணாது இரவும் பகலும் மயங்கிக் கையற்று" (நெடுநல் - 45 - 47) என நக்கீரனாரும் புலப்படுத்தியிருத் தல் காணலாம். கன்னல் - நாழிகை. செப்பிற் கன்னலளவு அறி வுற்று காலம்உணர்தல் அல்லால் எனக்கொண்டு கூட்டுக. பகல் என்றது காலையை. மாலை என்றது இரவு எனலும் ஆம். மாலை உற்றது, பகலுற்றது எனத் தனித்தனி இயையும். மாது, ஓ அசை. (73)

மருதம் நெய்தல்களில் கூதிர்

**4326.** நெற்கிழிய நெற்பொதி நிரம்பின நிரம்பாச்
சொற்கிழிய நற்கிளிக டோகையவர் தூய்மென்
பற்கிழி மணிப்படர் திரைப்பரதர் முன்றில்
பொற்கிழி விரித்தன சினைப்பொதுளு புன்னை.

நெல் கிழிய நெற் பொதி நிரம்பின, நிரம்பாச்
சொற்கு இழிய நல்கிளிகள்; தோகையவர், தூய்மென்
பற்கு இழி மணிப்படர் திரைப்பரதர் முன்றில்,
பொற்கிழி விரித்தன, சினைப் பொதுளு புன்னை.

பொ:—நல்ல கிளிகள், மயில்போன்ற பெண்டிரின் எழுத்து நிரம்பாத குதலைச் சொற்களுக்கு (ஒப்பாகப் பேச முடியாமல்) தோல்வியுற்றதால் (அவர் முன் நிற்க அஞ்சி) நென்மணிகள் உதிரு மாறு நெற்கதிர்ப்போரில் பதுங்கி நிறைந்தன; அப்பெண்டிருடைய தூய சிறிய பற்களுக்கு ஒப்பாகாமல் தோற்ற முத்துக்கள் பதுங்கிச் சென்ற கடலைச் சார்ந்திருக்கும் பரதவர்களின் வீட்டு முற்றத்தில் உள்ள புன்னை மரங்கள், தம் கிளைகளில் அடர்ந்துள்ள பொற்கிழி போன்ற அரும்புகளை விரித்தன.

கு:—கூதிர்ப்பருவத்து மருத நிலத்திலும் நெய்தல நிலத்திலும் நிகழ்ந்தவை கூறியவாறு. கிளிகள் மழைக்கு மறைந்து நிற்கவும் பசிக்கு இரை தேரவும் ஏற்ற இடம் நெற்கூட்டுப் போரே ஆதலின் அதில் பதுங்கின. இதனல் மருதநிலத்து நெல்லறுவடையும் கூதிர்ப் பருவத்து நிகழ்ந்தமை குறிப்பிட்டவாறு. கிளிகள் நெற்கதிர்ப்போரில்

மழைக்கு ஒதுங்கிய இயல்பு நிகழ்ச்சியைத் தற்குறிப்பேற்றமாகப் பெண்டிரின் சொற்குத் தோற்றுப் பதுங்கியதாகக் கூறினர். மயில் போன்ற சாயலையுடையவர் பெண்டிர் ஆதலின், அவர் தோகையவர் எனப்பட்டார். 'தோகையவர்' இடைநிலை விளக்காய் மேலும் கீழும் இயையும். மென்பல் என்புழி, மென்மை சிறுமையை உணர்த்தியது. பெண்டிரின் சொற்குக் கிளி உவமை கூறப்படுதல்போலவே பற்களுக்கு முத்துக்களை உவமை கூறும் மரபு உண்மையால் முத்துக்கள் பெண்டிரின் பற்களுக்குத் தோற்றுக் கடலில் புகுந்து சென்றதாகத் தற்குறிப்பேற்றமாகக் கூறியவாறு. திரை - அலை; ஆகுபெயராய்க் கடலை யுணர்த்தியது. திரைப்பரதர் – கடலை அடுத்துள்ள வலைஞர்; கடற்பயன் கொள்ளும் வலைஞர் எனலும் ஆம். மணி - முத்து. மணிப்படர் திரை எனக் கடலுக்கு அடையாக்குக. முன்றில் - இல் முன். புன்னை மரம் நெய்தல் நிலக் கருப் பொருள்; கூதிர்ப்பருவத்து மலர்வது ஆதலின் அதனை இங்குக் கூறினர். சினை - கிளை. புன்னையின் அரும்பு பொற்கிழி போன்றதாகலின் அதனைப் பொற்கிழி என உவமை ஆகுபெயராற் கூறினர். வெள்ளைத்துணியில் பொன்னை முடிந்து வைத்தாற்போன்று புன்னை அரும்பு வெள்ளிய இதழால் மூடப்பட்டு உள்ளே பொன் போன்ற மகரந்தமும் ஆர்க்கும் உடையதாதல் காணலாம். அது மலர்வது பொற்கிழியை விரித்தாற்போன்றதாகலின், புன்னை மலர்ந்தன என்பார், 'பொற்கிழி விரித்தன' என்றார். புன்னையாகிய முதலின் வினையாகக் கூறுதலின் 'விரித்தன' எனப் பிறவினையால் கூறினர். அரும்பின் வினையாகக் கூறின் விரிந்தன' எனல் வேண்டும். மருத நிலத்தில் நெல் முற்றினமையும் கிளிகள் அந்நெற்கதிர்ப்போரின் பதுங்கினமையும் நெய்தல் நிலத்தில் மழைத்துளி ஏற்ற சிப்பிகளில் முத்துக்கள் தோன்றினமையும் புன்னை மலர்ந்தமையும் கூதிர்க்கால நிகழ்ச்சிகளாகக் கூறப்பட்டன. (74)

## குறிஞ்சி நிலத்தில் கூதிர் 4327-4329

**4327.** நிறங்கருகு கங்குல்பக னின்றநிலை நீவா
வறங்கருது சிந்தைமுனி யந்தணரி னாலிப்
பிறங்கரு நெடுந்துளி படப்பெயர்வில் குன்றி
னுறங்கல பிறங்கலய னின்றவுயர் வேழம்.

நிறம் கருகு கங்குல், பகல், நின்றநிலை நீவா
அறம் கருது சிந்தைமுனி அந்தணரின், ஆலிப்
பிறங்கு அரு நெடுந் துளிபடப், பெயர்வில் குன்றின்,
உறங்கல பிறங்கல் அயல் நின்ற உயர் வேழம்.

பொ :—நிறம் கருகித் தோன்றும் (இருள் மிக்க) இரவிலும், பகலிலும் தாம் நின்ற தவநிலையில் நின்றும் நீங்காமல், அறவடிவினனான இறைவனையே கருதுகின்ற சிந்தையையுடைய முனிவர்களாகிய அந்தணரைப் போலவும், ஆலங்கட்டிகளோடு விளங்குகின்ற அரிய நெடிய மழைத்தாரைகள் தன்மேல் படவும் இடம் விட்டுப் பெயராத குன்றத்தைப் போலவும், உயர்ந்த யானைகள், (கூதிர்ப்பருவமழை தம்மேல் வீழ்தலால் இரவும் பகலும்) உறங்காதனவாய் மலைப்பக்கத்தில் அசையாது நின்றன.

கு :—மழையால் உறங்காமல் அசையாமல் நின்ற யானைக்கு முனிவர்களும் மலையும் உவமை. இரவும் பகலும் தாம் நின்ற தவநிலையில் நின்றும் நீங்காமல் அசையாமல் இருத்தல் முனிவர்க்கு இயல்பு. கல் மழை பெய்தாலும் பெயராது நிற்பது குன்றத்தின் இயல்பு. யானை, கங்குல் பகல் நின்றநிலை நீங்காமல் நிற்பதற்கு முனிவரும், நெடுந்துளிபடவும் பெயராமல் நிற்றற்குக் குன்றமும் பொருந்திய உவமையாதல் காணலாம். அந்தணர் - அழகிய தண்ணருளையுடையவர். முனியந்தணர், இருபெயரொட்டு. முனிவர் என்பதில் விகுதி விகாரத்தால் கெட்டது. இனி, முனி அந்தணர் என்பதை வினைத் தொகையாகக் கொண்டு இருவகைப் பற்றையும் வெறுத்த அந்தணர் எனலும் ஆம். அறம் என்றது இங்கு அறவடிவான இறைவனை. ஆலி - ஆலங்கட்டி ; கல். "யானைப் புகர்முகம் பொருத புதுநீராலி, பளிங்கு சொரிவதுபோல் பாறைவிரிப்ப" (அகநா - 108) என்றது காண்க. குன்றம் இயங்கும் பொருள் அன்று ஆகலின், ஆலங் கட்டியோடு பெரிய மழைத்தாரைகள் தன்மீது பட்ட போதும் பெயராது நிற்றற்கே யுரியதாதல் காணலாம். யானைக்குக் குன்றம் வடிவாலும் நிறத்தாலும் உவமையாதலும் நினைக்க. யானை உறங்குங்கால் அசையாமல் நிற்றல் இயல்பு ; ஆயின் மழைக்குத் தப்பிப் புகுமிடம் யானைக்கு வேறு கிடையாமையின் உறங்காத நிலையிலும் மலையை யடுத்து அசையாது நின்றுகொண்டே இருந்தது என்க. விலங்கல் - மலை. ஏழு முழம் உயர்ந்த யானை யாதலின் உயர் வேழம் என்றார்.

இதனால் குறிஞ்சிநிலத்துக் கூதிர்காலக் காட்சியை காட்டியவாறு. (75)

4328. சந்தினடை யிற்படலை வேதிகை தடந்தோ
றந்தியி டகிற்புகை நுழைந்தகுளி ரன்னம்
மந்திதுயி லுற்றமுழை வன்கடுவ னங்கத்
திந்திய மவித்ததனி யோகியி னிருந்த.

சந்தின் அடையின் படலே வேதிகை தடந்தோறு,
அந்தி இடு அகில் புகை நுழைந்த, குளிர் அன்னம்;
மந்தி துயில் உற்ற, முழை; வன்கடுவன், அங்கத்து
இந்தியம் அவித்த தனி யோகியின் இருந்த.

பொ:—கூதிர்ப்பருவத்துக் குளிர்கொண்ட அன்னப்பறவைகள், —சந்தனத் தழைகொண்டு வேய்ந்த மேற்கூரையையுடைய சாலே களில் உள்ள மேடையிலமைத்த ஓம குண்டம்தோறும் காலே மாலே களில் இட்டு எரிக்கின்ற அகிற்கட்டைகளின் புகையில் குளிர்காய நுழைந்தன; மலேக் குகைகளில் பெண் குரங்குகள் படுத்துத் தூங்கின; வலிமையுடைய ஆண் குரங்குகள், உடம்பிலுள்ள ஐந்து பொறிகளேயும் அடக்கித் தனித்திருக்கும் யோகியைப் போலச் (சேட்டையடங்கிக் குளிரால் ஒடுங்கி) இருந்தன.

கு:—மலேச் சுனேகளில் அன்னங்கள் வாழ்தல் உண்டு; அந்த அன்னங்களே குளிர் தாங்கலாற்ருது முனிவர் அந்தியில் அகிற் கட்டைகள் இட்டு வளர்க்கும் ஓமத்தீப் புகையில் நுழைந்து குளிர் காய்ந்தன என்றவாறு. முனிவரின் அருளில் பழகியவாகலின் அஞ்சாது சென்று குளிர் காய்ந்தன. அடை - தழை. மலேவளந் தோன்றச் சந்தனத் தழையால் வேய்ந்த கூரையும் அகிற் சமி தையும் கூறப்பட்டன. ஓமத்தீயில் அகிற்கட்டையும் சேர்த்தல் மரபு. வேதிகை - மேடை. தடம் என்றது ஓம குண்டத்தை; தடவு எனவும் இச்சொல் வழங்கும். 'வடபான் முனிவன்றடவினுட் டோன்றி' (புறநா-201) என்றது காண்க. மந்தி - பெண்குரங்கு; இது குளிரால் நடுங்கியதாக நக்கீரனர் கூறியுள்ளார்; 'மந்தி கூர' (நெடுநல் - 9) என்றல் காணலாம். கடுவன் வன்மையுடையது ஆதலின், மந்தி போல் முழையில் துயிலாது மழையில் தனித்து உட்கார்ந்திருந்தது என்க. இனி முழை மிகச் சிறியதாய் மந்தி துயிலுதற்கு மட்டும் இடமுடையதாயிருந்தமையால் அச்சிறிய இடத்தில் பெண் குரங் கைத் துயிலச் செய்துவிட்டுக் கடுவன் வெளியில் மழையில் நனேந்து கொண்டு ஒரே யிடத்தில் சேட்டை யடங்கித் தங்கியிருந்ததாகவும் கொள்ளலாம். இதனுல் கடுவனின் தன்னலமற்ற அன்புணர்ச்சி புலப்படுதல் காணலாம். அங்கம் - உடம்பு. 'அங்கம் வெந்தன்று தொட் டனங்கனேயாயினுன்' (342) என்றது காண்க. இந்தியம் - ஐம்பொறிகள். மனத்தை யடக்கும் யோகிகள் முதற்கண் சுவை யொளியூறு ஓசை நாற்றம் என்ற ஐம்புலத்தின்மேல் செல்வதாய மெய் வாய் கண் மூக்குச் செவி என்ற ஐம்பொறிகளே அடக்குதல் இன்றியமையாததாகலின் 'இந்தியம் அவித்த தனி யோகி' என்ருர். தனித்திருத்தலும் சேட்டையடங்கியிருத்தலும், மழையையும் பொருட் படுத்தாது அமர்ந்திருத்தலும் ஆகிய இயல்புகளேயுடைமையால்

'கடுவன் யோகியினிருந்த' என்றது பொருத்தமாதல் காணலாம். உவமையணி. இனி, 'அகிற்புகை நுழைந்து குளிருள்ள மந்தி' என்ற பாடங் கொண்டு, குளிர் மிகுதியுள்ள மந்தி அகிற்புகையில் நுழைந்து துயிலுற்ற எனவும் முழையில் வன்கடுவன் யோகியினிருந்த எனவும் பொருள் கொள்ளலாம். மந்தி யாகத்திலும் கடுவன் யோகத்திலும் இருந்தன என்றவாறு. இதனுல் கூதிர்ப்பருவத்து மலேயில் நிகழ்ந்த காட்சிகளேக் காட்டியவாறு. (76)

4329. ஆசில்சுனே வாலருவி யாயிழைய ரைம்பால்
வாசமண நாறலில வானமணி வன்கா
லூசல்வறி தானவித ணெண்மணிகள் விண்மேல்
வீசலில வானநெடு மாரிதுளி வீச.

ஆசு இல் சுனே, வால் அருவி, ஆய் இழையர் ஐம்பால்
வாச மணம் நாறல் இலஆன ; மணி வன்கால்
ஊசல் வறிது ஆன ; இதண் ஒண்மணிகள் விண்மேல்
வீசல் இலவான ; நெடுமாரி துளி வீச.

பொ :—நீண்ட மேகங்கள் மழைத்துளிகளே வீசிக்கொண்டிருத்தலால்,—குற்றமற்ற மலேச் சுனேகளும் தூய மலே அருவிகளும், ஆராய்ந்தெடுத்த அணிகலன்களே யணிந்த பெண்டிரின் கூந்தல் மணம் தம்பால் கமழப் பெருவாயின ; மணிகள் பதித்த வலிய கம்பங்களில் தொங்கும் ஊசல்கள், (அம்மகளிர் ஆடாமையால்.) பயனற்றுக் கிடந்தன ; மலேயிலுள்ள தினேப்புனத்துப் பரண்கள், ஒளிவாய்ந்த மணிகளே விண்ணின்மேல் (பறவைகளே நோக்கி) வீசுதல் இலவாயின.

கு :—குறிஞ்சி நிலத்துப் பெண்டிர் சுனேயும் அருவியும் குடைந்தாடுதலேயும், ஊசலாடுதலேயும் தினேப்புனம் காத்தலேயும் விட்டிருந்தனர் என்றவாறு. மாரி - மேகம். "மாரிமாட்டென்ருற்றுங் கொல்லோவுலகு" (குறள் - 211) என்புழியும் அப்பொருள் படுதல் காணலாம். 'துளிவீச' என்றது, பெருமழையாகப் பொழியாமல் சிறுசிறு துளிகளேயே வீசும் கூதிர் இயல்பைப் புலப்படுத்த வேண்டி. "பெயலுழந்தெழுந்த பொங்கல் வெண்மழை யகலிருவிசும்பிற் றுவலே கற்ப" (நெடுநல் - 19, 20) என்றது நினேக. மழைத்துளி ஓயாமல் விசிக் கொண்டிருத்தலால் மலேயிலுள்ள சுனேகளிலும் அருவிகளிலும் மகளிர் நீராடல் செய்யாமையின் அவர்கள் கூந்தலிலுள்ள இயற்கை மணத்தையும் வாச நெய்யாலும் புகையாலும் நறு மலராலும் பெற்ற செயற்கை மணத்தையும் அச்சுனேகளும் அருவிகளும் பெருதன

ஆயின என்றார். ஐம்பால் - கூந்தல்; ஐந்து பகுப்பாக முடித்தற்குரியது என்ற காரணம் பற்றி வந்தது. வாசமணம், ஒருபொருட் பன்மொழி. எப்பொழுதும் பெண்டிர் கூந்தலின் மணம் நாறிக் கொண்டிருக்கும் சுனையும் அருவியும், மாரிதுளிவீசலால் நாறப்பெருவாயின என்றவாறு. ஆசு - குற்றம்; சருகு ஊறப்பெறுதல், சேறெடுபட்ட சிறுமைத்தாதல் முதலிய குற்றமின்றித் தூயதாய் இனிதாயுள்ள நீரால் நிறைந்திருத்தல் பற்றி 'ஆசில் சுனை' என்றார். கால் என்றது ஊஞ்சல் தொங்கவிட்ட கம்பங்களை; மலைவாழ்நரின் செல்வச் சிறப்புத் தோன்ற 'மணிவன்கால்' எனச் சிறப்பித்தார். மழைத் துளியாலாய குளிரில் புறம் போந்து ஊசலாடுவாரின்மையின் 'ஊசல் வறிதான' என்றார். வறிது - பயனின்மை. ஊசல் தொழிலிழந்தது என்றவாறு. இதண் - பரண். தினைப்புனம் காக்கும் பெண்டிர் பரண்மேலிருந்து கவணில் மணிகளை வைத்துப் புனத்தையழிக்கும் பறவைகள் மேல் எறிதல் இயல்பு. மழையில் பறவைகள் ஒடுங்கிக் கிடந்தமையால் கவண் வீசல் வேண்டாவாயிற்று என்றவாறு. பரணிலுள்ளார் செயலைப் பரண்மேலேற்றி 'இதண் வீசிலில' என்றது உபசாரம். "எற்கொள் மால்வரை யும்பரினிரும்புனங் காக்கும் கொற்கொள் வேற்கணார் குரீஇயினத் தெறிகுரு விந்தக் கற்கள் வானிடை மீனென வீழ்வனகாணாய்" (2151) என்று முன் கூறியது நினைக. (77)

## நெய்தலில் கூதிர்

4330\. கருந்தகைய தண்சினைய கைதைமடல் காதற்
றருந்தகைய போதுகிளை யிற்புடை தயங்கப்
பெருந்தகைய பொற்சிற கொடுக்கியுடல் பேரா
திருந்தகுரு கின்பெடை பிரிந்தவர்க ளென்ன.

கருந்தகைய தண்சினைய, கைதைமடல் காதல்
தருந்தகைய போது கிளையின் புடை தயங்கப்,
பெருந்தகைய பொற்சிறகு ஒடுக்கி உடல் பேராது
இருந்த குருகின் பெடை—பிரிந்தவர்கள் என்ன.

பொ:—கரிய நிறமுள்ள, குளிர்ந்த கிளைகளையுடைய தாழை மரத்தின் மடல்களுக்கு இடையிடையே கண்டோர்க்கு விருப்பம் தரும் தன்மையவாய்த் தோன்றும் தாழை அரும்புகள், (தனக்கு ஆறுதல் கூறும்) சுற்றத்தவரைப்போலப் பக்கத்தில் விளங்கா நிற்க; பெரிய அழகிய சிறகுகளால் உடம்பை ஒடுக்கிக்கொண்டு அசையாமல் பெண் கொக்குத், தலைவரைப் பிரிந்த தலைவியரைப் போலச் சோர்ந்திருந்தன.

கு :—தாழையின் வெள்ளிய போதுகள் கொக்கினைப் போன்ற தோற்றத்தன ஆதலின், கொக்கிற்குச் சுற்றமாகக் கூறப்பட்டன. "கொடுங்கழி மருங்கின் இரை வேட்டெழுந்த கருங்காற் குருகின் கோளுய்ந்து போகிய முடங்குபுற விறவின் மோவா யேற்றை, எறி திரை தொகுத்த வெக்கர் நெடுங் கோட்டுத் துறுகடற்றலைய தோடு பொதி தாழை வண்டுபடு வான்போது வெறூஉம்" (நற்றிணை 211 : 3 - 8) என்பதும், 'அருகு கைதை மலரக் கெண்டை குருகென் றஞ்சும்'' (பெரிய திருமொழி. 5-2-9) என்பதும் காண்க. பிரிந்த வர்கள் என்றது, தலைவியரை; குருகின்பெடைக்கு உவமமாவார் அவராதலின் என்க. தலைவனைப் பிரிந்த தலைவி தோழியரும் செவிலியரும் ஆறுதல் கூறவும் ஆற்ருது சோர்ந்து இருப்பது இயல்பு. "வருதல் தலைவர் வாய்வது நீ நின் பருவரலெவ்வங் களை மாயோய் எனக், காட்டவுங் காணுள் கலுழ்சிறந்து, பூப் போலுண்கண் புலம்பு முத் துறைப்ப'' (முல்லைப் - 20-23) என்பது காணலாம். கூதிர்காலத்துத் தாழை பூத்தலைப் புலப்படுத்துபவர் அக்காலத்து அப் போது போன்ற கொக்கு அத்தாழை மரத்திலிருப்பதையும், அக் காலத்திற்கேற்ற பிரிவு வருத்தத்தோடு இருப்பதையும் காட்டியவாறு. தாழை நெய்தல் நிலக் கருப்பொருள். குருகு பால்பகா அஃறிணைப் பெயர் ஆதலின் 'இருந்த' என்ற பன்மை முடிபு கொண்டது. இடம் பெயராது ஓரிடத்தில் இருந்து வருந்துதல் பிரிந்த தலைவிக்கு உண்டு என்பதை: "இருந்த மாநிலஞ் செல்லரித்திடவுமாண் டெழாதாள்" (சுந்தர - காட்சிப் – 15) எனச் சீதை கூறப்படுதல் கொண்டு உணர லாம். 'சிறகொடுக்கியுடல்' என்றமையால் தலைவியர்க்கும் புடவை யால் உடம்பை மறைத்து ஒடுக்கியிருத்தல் கொள்ளலாம். கைதை - தாழை. மணத்தால் யாரும் விரும்புதற்குரியது தாழம்பூ ஆதலின் 'காதல் தருந்தகையபோது' என்ருர். (78)

## குறிஞ்சியில் கூதிர் 4331—4332

**4331.** பதங்கமுழ வொத்தவிசை பன்ஞிமிறு பன்ன
விதங்களி னடித்திடு விகற்பவழி மேவும்
மதங்கியரை யொத்தமயில் வைகுமர மூலத்
தொதுங்கின வுழைக்குல மழைக்குல முழக்க.

பதங்கம் முழவு ஒத்த; இசை பல் ஞிமிறு பன்ன,
விதங்களின் நடித்திடு விகற்பவழி மேவும்
மதங்கியரை ஒத்த, மயில்; வைகும் மர மூலத்து
ஒதுங்கின, உழைக்குலம்;—மழைக்குலம் உழக்க.

பொ :—பறவைகளின் ஒலி, மத்தளத்தின் ஒலியை ஒத்தனவாக, பல வண்டுகள் ரீங்காரம் செய்ய, அது இசைப்பாடலை ஒத்தனவாக, (மக்கள் விரும்பும் புதிய) மாதிரிகளில் நடிக்கின்ற வேறுபட்ட நடன வகைகளையெல்லாம் பயின்று திறம் பொருந்திய கூத்தியரை ஒத்து விளங்கும் மயில்கள் தங்கியுள்ள மரங்களின் அடியில், மான் கூட்டங்கள்,—மேகக்கூட்டம் மழை பெய்து தம்மை வருத்தலால் வந்து ஒதுங்கி நின்றன.

கு :—பதங்கம் - பறவை. பறவைகளின் சிறகடிக்கும் ஒலி முழவொலி ஒத்தன எனவும் ஞிமிறு பன்னுதல் இசை ஒத்த எனவும் கொள்க. ஒத்த என்பது இடைநிலை விளக்காய்ப் பின்னும் இயையும். பன்னுதல் - ரீங்காரம் செய்தல்; பாடுதல். விதம் - மாதிரி. மக்கள் விரும்பும் விதங்களில் நடித்தற்கேற்ப நாட்டியத்தின் பலவகைகளில் பயிற்சி மேவியவர் என்பார், 'விகற்ப வழி மேவும் மதங்கியர்' என்றார். மதங்கியர் என்பார் மங்கைப் பருவமுடைய விறலியர். மயில்கள் தங்கி நடமாடும் மரங்களுக்கு அடியில் மான்கள் மழைக்கு அஞ்சி வந்து ஒதுங்கின என்றவாறு. மழையை விரும்பிய மயிலுக்கும் அதை வெறுத்த மான்களுக்கும் மரம் ஒன்றே மேலும் கீழும் இடமளித்துக் களிப்பார்க்கும் கவல்வார்க்கும் களிப்பளிக்கும் பொருளாய் விளங்கினமை விளக்கியவாறு. உழக்க - வருத்த. மேகம் வருத்த வந்தடைந்த மான்கள், மழைத்துன்பம் தணிந்ததோடு மயில் நடம் பார்க்கும் மகிழ்ச்சியையும் பெற்றன. இதனால், மரத்தடியில் வந்து சேர்ந்த மான்கள் பார்ப்பவரை யொத்தன என்பதும் குறிப்பால் புலப்படுத்தியவாறு. "ஆடமை குயின்ற வவிர்துளை மருங்கிற் கோடையவ்வளி குழலிசையாகப் பாடின்னருவிப் பனி நீரின்னிசைத் தோடமை முழவின் துதைகுரலாகக் கணக்கலையிகுக்கும் கடுங்குரற் றூம்பொடு, மலைப்பூஞ்சாரல் வண்டு யாழாக வின்பல்லிமிழிசை கேட்டுக் கலிசிறந்து, மந்தி நல்லவை மருள்வன நோக்கக் கழை வளரடுக்கத் தியலி யாடுமயில்" (அகநா - 82) என்ற பகுதி இங்கு ஒப்பு நோக்கத்தகும்.

கூதிர்காலத்தில் குறிஞ்சி நிலத்து மான்கள் வருந்தி யொடுங்குமாறும் மயில்கள் களித்து நடனம் ஆடுமாறும் இச்செய்யுளால் புலப்படுத்தினர். (79)

4332. விளக்கொளி யகிற்புகை விழுங்கமளி மென்கொம்
பிளைக்குமிடை மங்கையரு மைந்தர்களு மேறத்
தளத்தகு மலர்த்தவி சிகந்துநகு சந்தின்
றுளைத்துயி லுவந்துதுயில் வுற்றகுளிர் தும்பி.

விளக்கு ஒளி அகில் புகை விழுங்கு அமளி, மென் கொம்பு
இளேக்கும் இடை மங்கையரும், மைந்தர்களும், ஏற,
தளத்தகும் மலர்த் தவிசு இகந்து, நகு சந்தின்
தொளேத் துயில் உவந்து, துயில்வுற்ற, குளிர் தும்பி.

பொ :—மெல்லிய பூங்கொம்பு (மென்மையால் தனக்கு ஒப்பாகாமல்) இளேத்தற்குக் காரணமான சிற்றிடையுடைய மங்கைப் பருவத்து நங்கையரும், இளமையுடைய ஆடவர்களும், (கீழே மூட்டிய) அகிற்கட்டையின் புகை (படுக்கையறையிலுள்ள) விளக்கொளியை மறைக்கின்ற கட்டிலில் படுத்தற்கு ஏருநிற்கக் கூதிர் காலத்துக் குளிர் கொண்ட வண்டுகள், இதழ்கள் நிறைந்த தகுதி மிக்க தாமரைமலராகிய படுக்கையை விட்டு நீங்கி, மலர்ந்த சந்தன மரத்தின் துளேகளில் தூங்குவதை விரும்பி அத்துளேகளில் சென்று தங்கின.

கு :—குளிரைப் போக்குவதற்கு இட்ட அகிற் புகை, இருளேப் போக்க ஏற்றிய விளக்கையும் விழுங்கும் அமளி என அகிற்புகையின் மிகுதியைப் புலப்படுத்தியவாறு. தொகுவாய்க் கன்னல் தண்ணீருண்ணுர், பகுவாய்த் தடவிற் செந்நெருப் பார" (நெடுநல் - 65, 66) என நக்கீரனுர் இவ்வியல்பை விளக்குதல் கணலாம். விழுங்குதல் - மறைத்தல் - விளக்கின் ஒளியிலும் அகிற்புகையின் வெம்மையே மக்களால் விரும்பப்பட்டது என்றவாறு. அமளி - கட்டில். கட்டில் உயர்ந்திருத்தலின் அதில் படுக்க ஏறவேண்டியதாயிற்று. ஏறத் தும்பி துயில்வுற்ற என்புழிச் செயவெனெச்சம் காரண காரியத் தொடர்பின்றி ‘இது நிகழா நிற்க இது நிகழ்ந்தது’ என்பது பட வந்தது. உயர்திணே மக்களும் வெம்மையை விரும்பினுர்கள்; அஃறிணேயாய் நான்கறிவுடைய வண்டுகளும் வெம்மையுள்ள சந்தன மரத்துளேயை விரும்பின என்க. தளம் - இதழ். மலர்களில் தகுதிமிக்கது தாமரை மலரே ஆகலின் அதனேத் தகுமலர் எனச் சிறப்பித்தார். இகத்தல் – நீங்குதல். குளிர்தும்பியாதலின் குளிர்ச்சி மிக்க நீரில் மலர்ந்த தாமரை மலர்த்தவிசை விட்டு நீங்கியது. வண்டு தாமரை மலரில் உறங்குவதுண்டு என்பதை. “இருஞ்சேற்றகல்வயல் விரிந்து வாயவிழந்த, முட்டாட் டாமரைத் துஞ்சி” (திருமுருகாற் - 72, 73) என நக்கீரனுர் கூறியதுகொண்டுணரலாம். நகுதல் - மலர்தல். சந்து - சந்தன மரம். குளிரை நீக்கி வெம்மை தரவல்லது மரத்துளே ஆதலின் அதைக் கூறுவார் மரங்களினுயர்வுடைய சந்தன மரத்தையே கூறினுர். மலர்களிலுயர்ந்த தாமரையில் துயின்று பழகிய வண்டு மரங்களில் உயர்ந்த சந்தனமரத்தையே நாடிச் செல்வது இயல்புதானே! துயில் – தூக்கம்; தங்குதல். மருதநிலத்திலிருந்து வண்டு குறிஞ்சி நிலத்திற்குச் சென்றது எனத் திணேமயக்கமும் கூறியவாறு. (80)

4333. தாமரை மலர்த்தவி சிகந்துதகை யன்னம்
மாமர னிரைத்தொகு பொதும்பருழை வைகத்
தேமர னடுக்கித ணிடைச்செறி குரம்பைத்
தூமரு வெயிற்றியரொ டன்பர்துயில் வுற்ருர்.

தாமரை மலர்த் தவிசு இகந்து, தகை அன்னம்,
மாமரன் நிரைத் தொகு பொதும்பருழை வைக;
தேமரன் அடுக்கு இதணிடைச் செறி குரம்பைத்
தூமருவு எயிற்றியரொடு அன்பர் துயில்வுற்ருர்.

பொ :—அழகிய அன்னப்பறவைகள் தாம் இருந்த தாமரை மலர் ஆகிய இருப்பிடத்தை விடுத்து நீங்கி, பெரிய மரங்களின் வரிசை சேர்ந்துள்ள சோலையில் சென்று தங்க,—மணமுள்ள சந்தன முதலிய மரப் பலகைகள் அடுக்கியுள்ள பரணிற் பொருந்திய குடிசையில், ஊன்தின்று பழகிய வேட்டுவப் பெண்டிரொடு அவர்களின் அன்பு மிக்க கொழுநராகிய வேடர்கள் தங்கித் தூங்கிஞர்கள்.

கு :—தகை - அழகு. அன்னம் தாமரையில் உறங்கும் இயல் புடையது ஆதலே, 'அன்னம் மாலுண்ட நளினப்பள்ளி வளர்த்திய மழலைப் பிள்ளை' (நாட்டுப் - 13) என்றதாலும், 'அரசவன்னம் பன்மலர்ப் பள்ளி நின்றும் துயிலெழ" (நாட்டுப் - 14) என்றதாலும் அறியலாம். கூதிர்காலத்துக் குளிரால் வருந்திய அன்னம் குளிர்ச்சி மிக்க தாமரைத் தவிசைவிட்டு நீங்கிக் குளிர் இல்லாத உயர்ந்த கிளைகளையுடைய மரங்கள் செறிந்துள்ள சோலையில் தங்கியது; தரையிடைப் படுக்கும் இயல்பினரான எயிற்றியரும் குளிர் நீங்கப் பரணில் அமைந்த உயர்ந்த குடிசையில் படுக்கலாஞர் என்க. மாமரம் என்றே பொருள் கூறலுமாம். பொதும்பர்—சோலே. இனி மரப்பொந்து எனக்கொண்டு அப்பொந்தில் அன்னம் குளிர் நீங்கத் தங்கின எனலும் ஆம். தேமரன் என்றது, சந்தன மரம், தேவதாரு முதலிய மணமிக்க மரங்களின் பலகைகளே. இதண்-பரண். உயர்ந்த பலகைகளே யடுக்கிய பரண் என அதன் சிறப்புணர்த்திய வாறு. 'இனி, தேமரனடுக்கிதண்' என்பதற்கு, மணமுள்ள மரங் களின் உயர்ந்த கிளைகளில் பலகைகளே அடுக்கிக் கட்டிய பரண் எனப் பொருள் கூறலும் ஆம். குரம்பை - குடிசை. தூ - ஊன். வேட்டுவர், காட்டு வாழ்க்கையராய் வேட்டையாடி விலங்குகளின் ஊனே விரும்பியுண்ணும் இயல்பினர் என்பது புலப்படத் 'தூமருவு எயிற் றியர்" என்ருர். எயிற்றியர் என்பது பாலேவனத்து மக்களாகிய எயினரின் பெண்பாற் பெயர்; அப்பெயர் கூறியதுகொண்டு கூதிர் காலத்துப் பாலேவனத்து மக்கள் நிலேயைப் பின்னிரண்டடிகளால் கூறியதாகக் கொள்ளலாம். இனி எயிற்றினையுடையவர் எயிற்றியர்

எனச் சினையால் வருபெயராகக் கொண்டு உரைப்பாருமுளர். வைகத் துயில்வுற்றார் எனக் காரண காரியத் தொடர்பின்றிச் செய வெனெச்சம் வினைகொண்டு முடிந்தது. (81)

## முல்லை நிலத்துக் கூதிர்

4334. வள்ளிபுடை சுற்றியுயர் சிற்றிலை மரந்தோ
றெள்ளரு மறிக்குருளொ டண்டர்க ளிருந்தார்
கள்ளரி னொளித்துழ னெடுங்கழு தொடுங்கி
முள்ளெயிறு தின்றுபசி மூழ்கிட விருந்த.

வள்ளி புடை சுற்றி உயர் சிற்றிலை மரம் தோறு,
எள்ளரு மறிக்குருளொடு அண்டர்கள் இருந்தார்;
கள்ளரின் ஒளித்து உழல் நெடுங் கழுது ஒடுங்கி,
முள் எயிறு தின்று, பசி மூழ்கிட இருந்த.

பொ :—கொடிகளால் சுற்றப் பெற்று உயர்ந்து வளர்ந்துள்ள சிறிய இலைகளையுடைய ஒவ்வொரு மரத்தின் கீழும் இகழாது பாது காத்தற்குரிய ஆட்டுக்குட்டிகளோடு இடையர்கள் தங்கியிருந் தார்கள்; திருடர்களைப்போல (மக்கள் கண்ணில் படாது) மறைந்து திரிகின்ற நீண்ட பேய்களும் பசி சிறிது மறையுமாறு தம் கூர்மை யான பற்களை (வெறிதே) மென்று தின்றுகொண்டு குளிரில் ஒடுங் கிக்கொண்டு இருந்தன.

கு :—புடை சுற்றி என்புழிப் புடை, துணைச் சொல்லாய் வந்தது; புடைபெயர்ச்சி என்புழிப்போல. வள்ளி - கொடி. தன்கீழ் உள்ளார் மேல் மழைநீர்படாது காப்பதில் பெரிய இலைகளையுடைய மரத்தி னும் சிற்றிலை மரமே சிறந்ததாதலும், கொடிகளால் சுற்றப்பட்ட மரம் அதனினும் சிறந்ததாதலும் கண்டு அண்டர்கள் வள்ளிபுடை சுற்றியுயர் சிற்றிலை மரந்தோறும் இருந்தார்கள் என்க. வள்ளி-கொடி. அண்டர்- இடையர்; அவர் பலராதலின் மரந்தோறும் இருந்த தாகக் கூறினர். மழையில் மறியினும் மறிக்குருளையே இகழாமல் காத்தற்கு உரியதாகலின் 'எள்ளரும் மறிக்குருள்' எனச் சிறப்பித் தார். குருளை என்பது குருள் என விகாரப்பட்டு வந்தது. குருளை- குட்டி. மழையால் வருந் துன்பத்தைப் பொறுத்துக்கொள்ளும் முதிர்ந்த ஆடுகள்போல் உடல் வலிமை பெருமையின் மழையில் ஆட்டுக் குட்டிகள் இறந்துபடுதலும் உண்டு என்பது நினைக. கழுது - பேய். நெடிதாகிய பேயும் மழையால் குறியதாக ஒடுங்கித் தோன்றிற்று என்பார், 'நெடுங்கழுதொடுங்கி' என்றார். மழையால்

பிணந்தின்ன வாய்ப்பிழந்தமையால், பசி தீர வழியில்லாது போகவே ‘பல்லசையின் பசியாறும்’ என்ற முறைப்படி தம் கூரிய பற்களை மென்றுகொண்டிருந்தன என்க. ‘பசிக்கலைந்து பாதி நாக்கும் உதடு களிற் பாதியும் தின் ஞெறுவா யானேம்’ (கலிங் - 217) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். மழையால் பேயும் வருந்துவதுண்டு என்பதை: “பெயலு மோவாது கழுதுகண் பனிப்ப வீசும்” (குறுந் - 161) என்ற நக்கீரர் வாக்கால் உணரலாம். பசி மூழ்குதலாவது, மேற்படா திருத்தல். (82)

4335. சரம்பயி னெடுந்துளி நிரந்தபுயல் சார
உரம்பெயர்வில் வன்கரி கரந்துற வொடுங்கா
வரம்பக னெடும்பிரசம் வைகல்பல வைகும்
முரம்பினி னிரம்பல முழைஞ்சிடை நுழைந்த.

சரம் பயில் நெடுந்துளி நிரந்த புயல் சார,
உரம் பெயர்வு இல் வன்கரி கரந்து உற ஒடுங்கா,
வரம்பு அகல் நெடும் பிரசம் வைகல்பல வைகும்
முரம்பினில் நிரம்பல முழைஞ்சிடை நுழைந்த.

பொ :—பரவிய மேகம் பெய்கின்ற, அம்புகளைப் போன்ற, நீண்ட தாரைகள் தம்மேற் படுதலால் இயல்பாக மனவலி கெடாத வலிமை யுடைய யானைகள் ஒடுங்கி, (அம்மழைத் தாரைகள் விழாத இடத் தைக்கண்டு) மறைந்து ஒதுங்கின; அளவற்ற, மிகுதியான தேனீக்கள் தாம் பல நாட்களாகத் தங்கியிருந்த பாறையில் நிரம்பித்தங்காதன வாய்க் குகைகளில் நுழைந்தன.

கு :—சரம் - அம்பு. மழைத்தாரைகள் விண்ணிலிருந்து வீழும் அம்புபோல் வீழ்கின்றமையால் மனவலியும் உடல்வலியும் உடைய யானையும் அவற்றைத் தாங்கலாற்ருது ஒடுங்கிக் கரந்துறைந்தன. உரம் இங்கு மனவலியை யுணர்த்தியது. ஒடுங்கிக் கரந்துற என இயையும். தேனீக்களின் பன்மை புலப்பட ‘வரம்பகல்’ எனவும் ‘நெடும்பிரசம்’ எனவும் கூறினர். பிரசம் - தேனீ. பலநாள் தங்கி யிருந்த உரிமையிடமாகிய பாறை மழையால் நனையும் இடமாயிருத் தலின், அவ்வுரிமையுள்ள இடத்தையும் விடுத்துப் பழகாத குகையில் சென்று தங்கலாயின என்றவாறு. முரம்பு - பாறை. முழைஞ்சு - குகை. இதனுல் யானைமுதல் ஈ யீருக உள்ள உயிர்கள் யாவும் மழையால் அல்லலுற்றமை புலப்படுத்தியவாறு. (83)

## இராமன் இலக்குவனை நோக்கிக் கூறத் தொடங்கல்

4336. இத்தகைய மாரியிடை துன்னியிரு ளெய்த
மத்தக மணிக்குறு நகைச்சனகன் மான்மே
லுய்த்தவுணர் வத்தின னெருப்பிடை யுயிர்ப்பான்
வித்தக னிலக்குவனை முன்னினன் விளம்பும்.

இத்தகைய மாரியிடை, துன்னி இருள் எய்த,
மத்தக மணிக் குறுநகைச் சனகன் மான்மேல்
உய்த்த உணர்வத்தினன், நெருப்பிடை உயிர்ப்பான்,
வித்தகன், இலக்குவனை முன்னினன் விளம்பும்.

பொ :—இத்தன்மையான கூதிர்காலத்தில் இருள் அடர்ந்து வர, அறிவிற் சிறந்த இராமன், சூடாமணி யணிந்தவளும், புன் சிரிப்பையுடையவளுமான சனகன் மகளாகிய மான்போன்ற விழியை யுடைய சீதையின்மேல் செலுத்திய மனத்தையுடையவனாய், நெருப்பு இடைதற்குக் காரணமான வெம்மை மிக்க மூச்சையுடையவனாய், இலக்குவனை நோக்கிச் சொல்லுவானானான்.

கு :—இருள் துன்னுதலாவது, கூதிர்காலத்து மேகத்தால் இருண்டு தோன்றுவது. ஒளி மழுங்கி யிருண்ட அக்கூதிர்காலம் சீதையைப் பிரிந்த இராமனுக்குப் பிரிவாற்றாத் துன்பத்தையுண்டாக்கும் இயல்பினதாகலின், சீதையை நினைந்து நெடிது வெய்துயிர்த்துக்கொண்டு இராமன், இலக்குவனிடம் பேசத் தொடங்கினான் என்க. அவன் விளம்பியவை அடுத்துப் பதினொரு செய்யுளால் கூறப்படும். மத்தகமணி என்றது உச்சியிலணியும் சூடாமணியை. ' மத்தக மணியொடு வயிரங்கட்டிய' (சிலப் - 6, 91) என்புழிக் குறிப்புரையாசிரியர் 'மத்தகமணி - உச்சியிலே வைத்த மாணிக்கம்' எனப் பொருள் வரைந்திருத்தலும் ஈண்டைக்கு நினையலாம். இச் சூடாமணியின் சிறப்புக்கருதிச் சீதை இதை விடாமல் முடிந்துவைத்திருந்து அனுமான்பால் அடையாளமாகக் கொடுத்தமையும் நினைக. மத்தகமணியணிந்த சீதையின் செயற்கையழகும் குறுநகையுடைமையாகியஇயற்கையழகும் இராமன் உள்ளத்தையீர்த்தனஎன்பார்போல் அவ்விரண்டையும் சீதைக்கு அடையாகக் கூறினார். ' சனகன் மான் ' என்றது, சனகன் மகளாகிய மான்போன்ற விழியுடைய சீதை என்னும் பொருளது. உணர்வினன் என்பது, அத்துச் சாரியை பெற்று உணர்வத்தினன் என ஆயிற்று; விண்வத்துக் கொட்கும் என்புழிப்போல. உணர்வத்தினன், உயிர்ப்பான் என்ற குறிப்பு முற்றுக்கள் எச்சப்பொருளவாய் விளம்பும் என்ற வினை கொண்டு முடிந்தன. வித்தகன், உணர்வத்தினன், உயிர்ப்பான் முன்னினன்

விளம்பும் என இயையும். முன்னினன், தெரிநிலைமுற்று; எச்சப் பொருளது. நெருப்பு இடை உயிர்ப்பான் - நெருப்பும் வெம்மை செய்வதில் பின்வாங்குதற்குக் காரணமான உயிர்ப்பினையுடையவன் என்க. இடைதல் - பின்வாங்குதல் - தோற்றல். இராமன் பெரு மூச்சு நெருப்பினும் வெம்மையது என்றவாறு. சீதைமேல் சென்ற மனத்தன் ஆகலின், அவளைக் காணப்பெறாத கவலையால் அவ்வாறு வெம்மையாக உயிர்க்கலானான். முன்னுதல் - கருதுதல்; இங்கு நோக்குதலை யுணர்த்தியது. விளம்பும் என்ற செய்யும் என்முற்று ஆண்பாலையுணர்த்திற்று. மேல் பதின்மூன்று செய்யுட்களால் விரித்துக் கூறியவற்றை யுளங் கொள்ள 'இத்தகைய மாரி' எனத் தொகுத்துச் சுட்டியவாறு. (84)

## இராமன் சொல்லியவை 4337-4347

4337. மழைக்கரு மின்னெயிற் றரக்கன் வஞ்சனை
☆ யிழைப்பருங் கொங்கையு மெதிர்வுற் றின்னலி
னுழைத்தன ளுலைந்துயி ருலக்கு மொன்றினும்
பிழைப்பரி தெனக்குமீ தென்ன பெற்றியோ.

'மழைக் கரு மின் எயிற்று அரக்கன் வஞ்சனை
இழைப்ப, (அ)ருங் கொங்கையும் எதிர்வுற்று, இன்னலின்
உழைத்தனள், உலைந்து உயிர் உலக்கும்; ஒன்றினும்
பிழைப்பு அரிது, எனக்கும்; ஈது என்ன பெற்றியோ?

பொ:—மேகத்தின் நடுவே தோன்றும் மின்னலைப் போன்ற பற்களை உடைய (இராவணன் என்கின்ற) அரக்கன் வஞ்சனை செய்ய, அரிய நகில்களையுடைய சீதையும் அவ்வஞ்சனைக்கு இலக் காகித் துன்பத்தால் வருந்தியவளாய் மெலிந்து உயிர் அழிவாள்; எனக்கும் (மழையும் மின்னலும் செய்யும் துன்பத்தினின்று) ஒரு வகையாலும் பிழைத்தல் அரிதாக இருக்கின்றது. இது என்ன தன்மையோ?

கு:—தனக்கும் சீதைக்கும் துன்பம் துய்த்தலில் ஒற்றுமை யிருத்தல் போலவே தம்மைத் துன்புறுத்தும் பொருள்களிலும் ஒற்றுமையுண்மை காட்டி 'ஈது என்ன பெற்றியோ?' என இராமன் வியந்து கூறியவாறு. சீதை, மின்னல் போன்ற பற்களையுடைய கரிய இராவணனால் துன்புறுகின்றாள். யானோ மேகத்தாலும் மின்ன லாலும் துன்புறுகின்றேன்' என்பது கருத்து. வஞ்சனை இழைப்ப எதிர்வுற்று என இயையும். இழைப்ப அருங் கொங்கையும் என்புழி

அகரம் தொகுத்தல். கொங்கை, சினையாகு பெயராய்ச் சீதையை உணர்த்தியது. அருங்கொங்கையும் உயிருலக்கும்; எனக்கும் ஒன்றினும் பிழைப்பரிது; என்புழி, உம்மைகள் எதிரதும் இறந்ததும் தழுவிய எச்சப் பொருளன. ஒன்று என்றது உபாயத்தை. ஒருபாயத்தானும் பிழைப்பு அரிது என்றவாறு. பிழைப்பு - உய்வு; தொழிற்பெயர். (85)

**4338.** தூநிறச் சுடுசரந் தூணி தூங்கிட
வானுறப் பிறங்கிய வயிரத் தோளொடும்
யானுறக் கடவதே யிதுவு மிந்நிலை
வேனிறத் துற்றதொத் துழியும் வீகிலேன்.

'தூ நிறச் சுடுசரம் தூணி தூங்கிட,
வான் உறப் பிறங்கிய வயிரத் தோளொடும்,
யான் உறக் கடவதே இதுவும்? இந்நிலை
வேல் நிறத்து உற்றது ஒத்துழியும், வீகிலேன்.'

பொ:—பகைவரின் ஊன்படிந்த முகப்பினையுடையதாய் எதிர்க்கின்றவரைச் சுடுகின்ற அம்புகள் செயலற்று அம்பருத் தூணியில் தூங்கா நிற்க, வானளாவ உயர்ந்து விளங்கிய வயிரத்தூண் போன்ற தோளொடும் யான் இத்தகைய இழிநிலையையும் அனுபவிக்கத் தகுமோ? என் தகுதிக்கு ஏலாத இந்தநிலை, வேல் என் மார்பகத்துப் பாய்ந்ததுபோன்று வருத்தியவிடத்தும் இறவாமல் இருக்கின்றேன்; (என்னே வியப்பு!)

கு:—தூ - ஊன். முன் பகைத்தவர் மார்பில் பட்டு உருவிய அம்பு ஆதல் தோன்றத் 'தூநிறச்சரம்' எனவும் இனி எதிர்ப்பவர் மார்பைச் சுடவல்லது என்பது தோன்றச் 'சுடுசரம்' எனவும் சிறப்பித்தவாறு. நிறம் - முகப்பு. படைக்கலங்களில் பகைவரின் ஊனும் குருதியும் தோய்ந்திருத்தலைச் சிறப்பாகக் கூறுவது மரபு. தூங்குதல்-செயலற்றுக்கிடத்தல்; தொழிலின்றி யுறங்க என்ற பொருளும் புலப்படும். தூங்கிடப் பிறங்கிய என இயையும். பகை வெல்லற்கேற்ற படைக் கலத்தாலும் தோள் வலியாலும் குறைவற்றிருந்தும் சீதையைக் கவர்ந்தவனைக் கொல்லவியலாது அல்லலுறுகின்ற நிலை எனக்கு நேரலாகாது என்பான், பிறங்கிய வயிரத் தோளொடும் இதுவும் யானுறக்கடவதே' என்றான். தோளின் உயர்ச்சி தோன்ற 'வானுறப் பிறங்கிய தோள்' எனவும் அதன் வலிமை தோன்ற 'வயிரத் தோள்' எனவும் சிறப்பித்தவாறு. வயிரம் என்றது, வயிரத் தூணினை. இராமன் தன் கரத்தையும் தோளையும் புகழ்தல் தற்

புகழ்ச்சி யாகாதோ எனின் ? ஆகாது ; என்னை ? அவற்றால் பயன் கொள்ள இயலாமை கூறுமிடமாகலின் என்பது. இதுவும் என்றது, பகை தடிந்து மனைவியை மீட்க முடியாது வருந்தும் நிலையை; உம்மை இழிவு சிறப்பு. இந்த இழிதகவு மார்பில் வேல்பட்டாற் போன்று என்னை வருத்தா நிற்கவும் உயிர் நீங்காதிருக்கின்றேனே என வியந்து உயிர்விடுவதே சிறந்தது என்பதைப் புலப்படுத்திய வாறு. (86)

4339. தெரிகணை மலரொடு திறந்த நெஞ்சொடு
மரியவன் றுயரொடும் யானும் வைகுவே
னெரியுமின் மினிமணி விளக்கி னின்றுணைக்
குரீஇயினம் பெடையொடுந் துயிலக் கூட்டினுள்.

'தெரிகணை மலரொடு திறந்த நெஞ்சொடும்,
அரிய வன் துயரொடும், யானும் வைகுவேன்;
எரியும் மின்மினி மணிவிளக்கின், இன்துணைக்
குரீஇ இனம், பெடையொடும் துயிலக் கூட்டினுள்.'

பொ :—குருவிகள், ஒளி வீசுகின்ற மின்மினிப் பூச்சிகளாகிய அழகிய விளக்கொளியில் தம் இனிய துணையாகிய பெண் குருவிகளோடு கூட்டினுள் இனிதாய்த் தூங்காநிற்க, (சீதையைப் பிரிந்துள்ள) யானும், மன்மதன் ஆராய்ந்து எய்த அம்புகளாகிய மலர்களால் பிளக்கப்பெற்ற நெஞ்சத்தோடும் பொறுத்தற்கரிய வலிய துன்பத்தோடும் தங்கியிருக்கின்றேன்.

கு :—பறவையினத்தைச் சேர்ந்த சிறிய குருவிகளுக்கு உள்ள பேறுதானும், ஆறறிவோடு அரச குடும்பத்தில் பிறந்த எனக்கு வாய்த்திலதே ! என்று இராமன் நொந்து கூறியவாறு. குருவிகள் கூட்டில் வாழ, யான் காட்டில் வாழ்கின்றேன்; அவை பெடையோடு துயில, யான் துணை துறந்து துயில்பெறாது தங்கியுள்ளேன் ; அவை மின்மினி விளக்கில் துயில, யான் இருளில் விழித்திருக்கின்றேன் ; என விரித்துரைக்கலாம். குருவியினம் பெடையோடு துயில, யானும் திறந்த நெஞ்சொடும், வன்துயரொடும் வைகுவேன் ; இதில் குறை யென்னை ? என்றவாறு. பெடையொன்றொடு துயிலும் குருவியினும் மன்மதன் கணையால் பிளப்புண்ட நெஞ்சும் பொறுத்தற்கரிய பிரிவுத் துன்பமும் ஆகிய இரண்டோடு விழித்திருக்கின்ற யான் உயர்ந்த வனே அன்றோ ! என்பது கருத்து. குருவியினும் தனக்கு ஒரு மேம் பாடு உள்ளதாகக் கூறிக் குறிப்பால் தன்னிலையை இகழ்ந்ததே ஆதலின், இது புகழ்வதுபோலப் பழித்திறம் புனைதலாகிய இலேச

வணி ஆகும். மலரொடு என்புழி ஒடு எதுப்பொருள்து; "ஊசியொடு குயின்ற தூசும் பட்டும்" என்புழிப்போல. நெஞ்சைப் பிளந்த பின்னும் அம்மலர்க் கணைகள் தன் உடம்பில் கிடக்கின்றமைதோன்ற 'மலரொடு வைகுவேன்' என உடனிகழ்ச்சியும் தோன்றக்கூறினன். இதனுல், தெரிகணை மலரும் தனக்குத் துணையாய் உள்ளது என்பது புல்ப்படுத்தித் துணைமிகுதியுடைமை விளக்கியவாருகக் கொள்க. இனம் என்றது சாதியை. துணை பிரிந்த இராமனுக்குத் துணையொடு வதியும் குருவியின் நிலை துன்பத்தை மிகுவித்தது ஆதலின் இங்ஙனம் கூறினன். குருவி மின்மினியைக் கூட்டில் வைக்கும் இயல்பினது என்பதை: "வாரணம் தாட்டுணைக் குடையத் தகைசான் மணி, மேட்டிமைப்பன மின்மினியாமெனக் கூட்டினுய்க்குங் குரீஇயின் குழாமரோ" (பால - 27) என்றதாலும் அறியலாம். மின்மினி என்பது தன்னுடம்பில் ஒளியுள்ள ஒருவகை ஈ; இது சுடர்க்கடைப் பறவை எனச் சொல்லப்படுகின்றது. (பெரும்பாண். 305) குரீஇயினம் கூட்டினுள் பெடையொடு துயில யானும் நெஞ்சொடும் துயரொடும் வைகுவேன் என இயையும். (87)

**4340.** வானக மின்னினு மழைமு ழங்கினும்
யானக மெலிகுவெ னெயிற்ற ராவெனக்
கானகம் புகுந்தியான் முடித்த காரியம்
மேனகுங் கீழ்நகு மினியென் வேண்டுமால்.

'வானகம் மின்னினும், மழை முழங்கினும்
யான் அகம் மெலிகுவென், எயிற்று அரா எனக்;
கானகம் புகுந்து யான் முடித்த காரியம்,
மேல் நகும்; கீழ் நகும்; இனி என் வேண்டுமால்?'

பொ:—மேகம் மின்னினலும் (அது கண்டும்) மேகம் இடிமுழக்கம் செய்தாலும் (அதைக்கேட்டும்) நச்சுப்பற்களையுடைய பாம்பு வருந்துவதுபோல யான் மனம் வருந்துவேன்; மேலும், யான் காடு புகுந்து செய்து முடித்த செயலைக் கண்டு வானுலகமும் சிரிக்கும்; மண்ணுலகமும் சிரிக்கும்; இதற்கு மேலும் யான் என்ன இழிவை அடைய வேண்டும்? (இதற்கு மேலாக ஓரிழிவு இல்லை என்றவாறு)

கு:—பாம்பு மிக மெல்லிய கட்செவி யுடைமையின் மின்னலாலும் இடியாலும் வருந்துதல் இயல்பு; இராமன், கண்ணும் செவியும் திண்ணிதாகப் பெற்றிருந்தும் பிரிவாற்ருத் துயரால் அஞ்சவேண்டாத மின்னலுக்கும் இடிக்கும் அஞ்சிப் பாம்பு போல் மெலியும் நிலை உண்டாயிற்றே என இரங்கியவாறு. தனக்கு நேர்ந்த இத்தகைய

மெலிவுக்கு மேலும், விண்ணுலகும் மண்ணுலகும் சிரிக்கு நிலை நேர்ந்ததே எனப் பின் இரண்டடியால் இரங்கிக் கூறியவாறு: மனைவியை மாற்றான் கவரப் பிரிந்த நிலையையே' கான்புகுந்து முடித்த காரியம் என்றான். முடித்த காரியம் என்றது, இகழ்ச்சிக் குறிப்புத் தோன்ற நின்றது; என்னை? இராமன் அரிதின் முயன்று செய்து முடித்த காரியம் அஃதன்று ஆதலின் என்பது. கான்புகுந்து தவமுடித்து விண்ணும் மண்ணும் புகழ வரவேண்டும் என நினைந்து வந்த யான், அவம் முடித்து, அவ்விரண்டுலகமும் இகழ்ந்து சிரிக்க நின்றேனே! என்பது உட்கோள். மேல், கீழ் என்பன ஆகுபெயராய் விண்ணுலகையும் மண்ணுலகையும் உணர்த்தின. "வானகும் மண்ணுமெல்லா நகும்' (உயுத் - கும்பகருண – 11) என்பதும் காணலாம். இனி மேலோரும் கீழோரும் நகுவர் என்று பொருள் கூறலும் ஆம். இனி, கீழ் என்பது பாதலத்தைக் குறித்ததாகவும் கொள்ளலாம். நகுதல் என்பது இகழ்தலை உணர்த்தியது; எள்ளல் பற்றிய சிரிப்பு உண்மையும் நினைக. அஞ்சவேண்டாதவற்றிற்கு அஞ்சுதலும் உலகோரால் சிரிக்கப்படுதலும் ஆகிய இந்த இழி நிலைக்கும் கீழான இழிநிலை இல்லை என்பான், இனியென் வேண்டும்? என்றான். இழிவுக்கு வரம்பான நிலை யெய்தியும் உயிரை விடாமல் இருக்கின்றேனே என்பது கருத்து. "இளிவரின் வாழாத மான முடையார்" (குறள்-970) என்றது நினைக. (88)

4341. மறந்திருந் துய்கலேன் மாரி யீதெனி
னிறந்துவிண் சேர்வது சரத மிப்பழி
பிறந்துபின் றீர்வலோ பின்ன ரன்னது
துறந்துசென் றுறுவலோ துயரின் வைகுவேன்.

'மறந்திருந்து உய்கலேன்; மாரி ஈது எனின்,
இறந்து விண் சேர்வது சரதம்; இப்பழி,
பிறந்து பின் தீர்வலோ? பின்னர், அன்னது
துறந்து சென்று உறுவலோ? துயரின் வைகுவேன்!'

பொ:—துன்பத்தில் தங்கியிருப்பேனாகிய யான், சீதையை மறந்திருந்து உயிர்வாழ வல்லேனல்லேன்; கூதிர்ப்பருவம் இத்தன்மையதானால், யான் இறந்து விண்ணுலகத்தை அடைவது உறுதி; (ஆதலால்) பின் இவ்வுலகில் பிறந்து (சீதையை இராவணன் கவர விட்ட) இப்பழியைத் தீர்வேனோ? (அல்லது) பிறந்தபின் பழிதீர வேண்டுமே என்ற சிந்தனையையே துறந்து மீண்டும் விண்ணுலகம் சென்றடைவேனோ? (அறியேன்)

கு:—முன்னமே துயரில் வைகியிருக்கின்றவனுதலின் அத் துயர்க்குமேல் கூதிர்ப்பருவம்வந்து செய்யும் பெருந்துயர்க்குஆற்ருத வனுய் ‘மாரி ஈதெனின் இறந்து விண் சேர்வது சரதம்’ என்ருன். மாரி இவ்வாறே நீடித்து வருத்துமாயின், உயிர் நிற்காது என்பது கருத்து. சீதையின் நினேவே இல்லாமல் இருந்தால் ஒருகால் உய்தல் கூடும்; ஆயின் அவளே மறந்திருக்க இயலவில்லேயே என்பான், ‘மறந்திருந் துய்கலேன்’ என்ருன். பின் பிறந்து இப் பழி தீர்வலோ என இயையும். இறந்து பிறந்தால் முன்னேப் பிறவியில் நிகழ்ந்தவற்றை நினேவு கூர்ந்து இராவணனே வென்று இப்பழிதீர்தல் அரிதென்பான், பிறந்து இப்பழிதீர்வலோ என்ருன். பின்னர் - பிறந்த பின்னர். அன்னது - அப்பழியை. மறுபிறப்பில் பிறந்த பின்னர் முன்னேப் பிறவியில் எய்திய பழி ஒன்று உண்டு என்ற சிந்தனேயே வராமல் இருத்தலும் கூடுமாகலின், பின்ன ரன்னது துறந்து சென்று உறுவலோ’ என்ருன். துறத்தல் இங்கு மறத்தலே யுணர்த்திற்று. சென்று உறுதல் என்றது, முன்போலவே வாழ்க்கையிறுதியில் விண்ணுலகு சென்றடைதலே. “துறக்கப் படாத வுடலேத் துறந்து வெந்தூதுவ ரோடு, இறப்பன் இறந்தால் இரு விசும்பு ஏறுவன் ஏறி வந்து, பிறப்பன், பிறந்தாற் பிறையணி வார் சடைப் பிஞ்ஞகன் பேர், மறப்பன் கொலோ என்றென்னுள்ளங் கிடந்து, மறுகிடுமே” (4-113, 8) என்ற திருநாவுக்கரசர் தேவாரம் இங்கு ஒப்பு நோக்குதற் குரியதாகும். இறந்தவர் விண்சேர்ந்து பின்னரே மறுபிறப்பு எய்துவர் என்ற உண்மை இங்கு விளக்கப் படுதல் காணலாம். பழி தீர்த்துக்கொள்ளாமல் இறந்தால் பின் பிறக்கும் பிறவியில் அப்பழியைத் தீர்த்தல் இயலுமோ? அல்லது அப்பிறப்பில் அந்நினேவையே மறந்துவிடுவேனே? என்று அஞ்சிக் கூறியவாறு. இதனுல் இராமன் இறப்பிற்கு அஞ்சவில்லே என்பதும் பழிக்கே அஞ்சுகின்ருன் என்பதும் புலப்படுத்தியவாறு. (89)

**4342.** ஈண்டுநின் றரக்கர்த மிருக்கை யாமினிக்
காண்டலிற் பற்பல காலங் காண்டுமால்
வேண்டுவ தன்றிது வீர நோய்தெற
மாண்டன னென்றது மாட்சிப் பாலதாம்.

‘ஈண்டு நின்று, அரக்கர்தம் இருக்கை யாம் இனிக்
காண்டலின், பற்பல காலம் காண்டுமால்;
வேண்டுவது அன்று இது; வீர! “நோய் தெற
மாண்டனன்” என்றது மாட்சிப் பாலது ஆம்.’

பொ :—வீரனே! (கூதிர்ப்பருவம் செய்யும் துன்பத்தைப் பொறுத்துக்கொண்டு) இங்கு உயிரோடு நின்று, பின் அரக்கருடைய இருப்பிடத்தை இனித் தேடிக் காண்பதில் பலப்பல காலம் கழி வதைக் காண்போம்; ஆதலால், (சீதையைக் கவர்ந்த அரக்கரிடத் தைத் தேடும்) இம்முயற்சி வேண்டுவதன்று; "சீதையின் பிரிவாற் ருதநோய் வருத்தியதால் இறந்துவிட்டான் இராமன்" எனப்படுவது, சிறப்பின் பாலதாகும்; (ஆகவே இறந்து படுகின்றேன்).

கு :—கூதிர்ப்பருவத்துத் துன்பங்களைத் தாங்கிக்கொண்டு உயி ரோடு நிற்றல் அரிதாதல்தோன்ற, ஈண்டு நின்று, என்றான். கூதிர்ப் பருவம் சென்றவுடன் சீதையைக் காண்போம் என்ற உறுதியும் இல்லை; அவளைக் கவர்ந்த அரக்கர் இருக்கை காணவே பலப்பல காலம் கழியும்; கண்டபின் அவ்வரக்கரோடு போர்செய்து வெல்ல எத்துணைக்காலம் கழியுமோ? எனவே இம் முயற்சியில் பற் பல காலங் கழித்தலைக் காட்டிலும் 'இராமன் சீதையின் பிரிவாற்ருத காதல் நோயால் மாண்டுவிட்டான்' என்று உலகத்தவரால் சொல் லப்படுவதே சிறப்புடையது என்றபடி. நோய் என்றது இங்குப் பிரிவு நோயை. "பசைந்தாரின் தீர்தலில் தீப்புகுதல் நன்று" (நான்மணிக் - 13) என்பவாகலின், சீதையைப் பிரிந்து பலநாள் ஆற்றியிருக்கலாற்ருது இராமன் மாண்டான்' என்று கூறப்படுவது 'மாட்சிப்பாலது' என்ருன். (90)

4343. செப்புருக் கனையவிம் மாரிச் சீகரம்
வெப்புறப் புரஞ்சுட வெந்து வீவதோ
அப்புருக் கொண்டவா ணெடுங்க ணயிழை
துப்புருக் குமுதவா யமுதந் துய்த்தயான்.

செப்பு உருக்கு அனைய இம் மாரிச் சீகரம்
வெப்பு உறப் புரம் சுட, வெந்து வீவதோ
அப்பு உருக் கொண்ட வாள் நெடுங் கண் ஆயிழை
துப்பு உருக் குமுதவாய் அமுதம் துய்த்த யான்?

பொ :—அம்பு போன்ற வடிவத்தைக்கொண்ட ஒளிமிக்க நீண்ட கண்களையுடைய, ஆராய்ந்து அணிந்த அணிகலன்களையுடையவ ளான சீதையின் சிவந்த நிறத்தையுடைய குமுதமலர் போன்ற வாயிதழின் அமுதத்தைப் பருகிய யான், செம்பின் உருக்கைப் போன்ற இக்கூதிர்ப்பருவத்து நீர்த்துளிகள் வெம்மை பொருந்து மாறு என் உடம்பைச் சுடுதலால் வெந்து அழிவது தகுமோ?

கு :—அமுதம் உண்டவர் இறவாதிருப்பதே இயல்பாகலின் சீதையின் குமுதவாயமுதம் துய்த்தயான் வீவது பொருந்துமோ? என்று பொருந்தாமை காட்டுவான்போலக், கூடியிருந்த காலத்துச் சீதைபால் இன்பம் துய்த்த அளவு, அவளைப் பிரிந்த கூதிர்காலத்தில் துன்பமும் துய்த்து, இறந்துபடும் நிலையை யெய்திவிட்டேனே என இராமன் இரங்கிக் கூறியவாறு. மழைத்துளிகள் பிரிந்தார்க்கு வெப்பம் உண்டாக்கும் ஆதலின், 'செப்புருக்கனைய சீகரம்' எனச் செம்பின் உருக்கை உவமை கூறினான். உருக்கிய செம்பு வெம்மையிற் சிறந்தது நினைக. சீகரம் - நீர்த்துளி. 'சீகரம் மகர வேலைக் காவலன் சிந்த' (மாரீசன் - 14) என்றது காணலாம். புரம் - உடம்பு. செம்பு, அம்பு என்பன செப்பு, அப்பு எனத் தம்மினம் வன்றொடராயின. வீதல் - அழிதல் துப்பு - சிவப்பு. குமுதத்திற்கு அடை; செங்குமுதம் என்றவாறு. வாய் என்றது இங்கு வாயிதழை. வாயமுதம் என்றது வாலெயிறூறிய நீரை; அது இனிமையதாய்ப் பருகினானை வாழ்வித்தலின் அமுதம் எனப்பட்டது. இனி, இறப்பதற்கு விழைகின்ற இராமன் இறக்க இயலாத நிலை தனக்கு நேர்ந்து இருப்பதை நினைந்து இரங்கியதாகவும் பொருள் கூறலாம், 'அமுதம் துய்த்தயான் வெந்துவீதல் இயலுவதோ இயலாதே' என்றவாறாகக் கொள்க. (91)

4344. நெய்யடை தீயெதிர் நிறுவி நிற்கிவள்
கையடை யென்றவச் சனகன் கட்டுரை
பொய்யடை யாக்கிய பொறியி லேனெடு
மெய்யடை யாதினி விளித னன்றரோ.

நெய் அடை தீ எதிர் நிறுவி, "நிற்கு இவள்
கை யடை" என்ற அச் சனகன் கட்டுரை
பொய் அடை ஆக்கிய பொறி இலேனொடு,
மெய் அடையாது; இனி, விளிதல் நன்று அரோ.

பொ :—நெய் சொரியப் பெற்ற ஓமத்தீக்கு எதிரில் (சீதையைக் கொணர்ந்து) நிறுத்தி, 'இவள் நினக்கு அடைக்கலம்' என்று(என்னை நோக்கிக்)கூறிய அந்தச் சனகனுடைய உறுதிச் சொல்லைப் பொய் பொருந்தியதாகச் செய்த நல்வினை இல்லாதவனான என்னிடத்தில் இனி மெய்ம்மை என்பது சேராது; ஆகவே யான் இறத்தலே நல்லது.

கு :—சனகன் அக்கினி சான்றாக எனக்கு அடைக்கலமாகக் கொடுத்த சீதையை உடன்பட்டு ஏற்றுக்கொண்டு அவளைப் பாது

காவாது விட்டமையால் அச்சனகன் சொல்லைப் பொய்யாக்கினவ ஞனேன் ; ஒருமுறை பொய்யனுகிய என்னிடத்தில் இனி வாய்மை வந்து சேராது ; வாய்மை தவறி உயிர்வாழ்தலினும் சாதலே நன்று' என்றவாறு. எல்லா அறத்தினும் சிறந்ததாகிய வாய்மையை இழந்து வாழ்ந்தால் மேலும் பொய்த்து உயிர்வாழ நேருமாதலின் அதற்கிடனின்றிச் சாதல் நல்லது எனப்பட்டது. ஓமத்தீ நெய் சொரிந்து வளர்க்கப்படுவதாகலின் அதனை 'நெய்யடை தீ' என்ருன். ஒரு தலைவனுக்குத் தன் மகளை மணஞ் செய்து கொடுப்போர் ஓமத்தீ முன்னர், 'இவள் நினக்கு அடைக்கலம்' என்று கூறிக் கொடுத்தல் மரபு. கட்டுரை - உறுதியான மொழி. பொறி - நல்வினை. அழகும், பண்பும் மிக்க சீதையை மனைவியாகப் பெற்றும் காப்பாற்ற இயலாது போன தன் நிலை நினைந்து இராமன் தன்னைப் 'பொறியிலேன்' என்று கூறிக்கொண்டான். இனி மெய்யடையாது; ஆதலின் விளிதல் நன்று என இயையும். விளிதல் - இறத்தல். அரோ, அசை. (92)

4345. தேற்றுவாய் நீயுளை யாகத் தேறிநின்
ருற்றுவே ஞனுள ஞக வாய்வளை
தோற்றுவா ளல்லளித் துன்ப மாரினி
மாற்றுவார் துயர்க்கொரு வரம்புண் டாகுமோ.

'தேற்றுவாய், நீ உளையாகத், தேறி நின்று
ஆற்றுவேன், நான் உளனுக, ஆய்வளை
தோற்றுவாள் அல்லள்; இத்துன்பம் ஆர் இனி
மாற்றுவார்? துயர்க்கு ஒரு வரம்பு உண்டாகுமோ?'

பொ :—'(யான் துன்புற்றபோது) என்னைத் தேற்றுபவனுய் நீ யிருக்க, நின் சொல்லைக் கேட்டு (அப்பிரிவுத் துன்பத்தைப்) பொறுத்துக்கொள்பவனுக நான் இருக்க, (இம்மட்டிலே) அழகிய வளையலணிந்த சீதை என்முன் தோன்றுபவளாக இல்லை; (அவள் தோன்ருத நிலையில்) இந்தப் பிரிவுத் துன்பத்தை மாற்ற வல்லவர் இனி யாருளர்? அவளைப் பிரிந்த துயரத்திற்கு ஒரு முடிவும் உண்டோ?'

கு:—நீ தேற்றுதலும், யான் ஆற்றுதலும் நிகழ்கின்றனவே யன்றி அவள் வந்து நம்முன் தோற்றுதல் நிகழவில்லையே! அவள் வந்து தோற்ருத வரையில் என் துன்பத்தை மாற்ற முடியாது; ஆகவே, இத்துன்பத்திற்கு முடிவுதான் எப்பொழுது உண்டாகுமோ? என இராமன் இரங்கிக் கூறியவாறு. ஆய்வளை, அன்மொழித்

தொகையாய்ச் சீதையை உணர்த்தியது. ஆய் - அழகு. "ஆய்பொறி யுழுவை" (கலித். 46-4) என்றதும் காணலாம். மருந்து பிறிதறியாப் பெருந்துயர் என்பான், 'இத்துன்ப மாரினி மாற்றுவார்' என்ருன். "பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை தன்னேய்க்குத் தானே மருந்து" (குறள் - 1102) ஆகலின் இங்ஙனம் கூறினன். அவளைக் காணுநாளே தன் துயர்க்கு வரம்பு உண்டாகும் நாளாதலின், அவளைக் காணும் நாளும் உளதாமோ என்பான், 'துயர்க்கொரு வரம்புண்டாகுமோ?' என்ருன். இதனுல் சீதையைக் கண்டன்றி ஆறுதல் மொழி கேட்டுத் தன் துன்பம் தீராது என்பதை இராமன் தெளிவுபடுத்தியவாறு. (93)

4346. விட்டபோர் வாளிகள் விரிஞ்சன் விண்ணேயும்
சுட்டபோ திமையவர் முதல தொல்லையோர்
பட்டபோ துலகமு முயிரும் பற்றறக்
கட்டபோ தல்லது மயிலைக் காண்குமோ.

'விட்ட போர் வாளிகள் விரிஞ்சன் விண்ணேயும்
சுட்டபோது, இமையவர் முதல தொல்லையோர்
பட்டபோது, உலகமும் உயிரும் பற்று அறக்
கட்டபோது, அல்லது, மயிலைக் காண்குமோ?'

பொ:—'(யான் இனி) விடும் போர்க்குரிய அம்புகள் பிரமனது சத்தியலோகத்தையும் சுட்டபோது அல்லாமல்,—தேவர்கள் முதலிய பழமையானவர்கள் (என்னம்பால்) அழிந்தபோது அல்லாமல்,—உலகங்களையும் அவற்றிலுள்ள உயிர்களையும் வேரற அழித்தபோது அல்லாமல் மயில் போன்ற சாயலையுடைய சீதையைக் காணப் போகின்ருேமோ?'

கு:—அல்லது என்பது கடைநிலை விளக்காய்ச் சுட்டபோதல்லது, பட்டபோதல்லது என முன்னும் இயையும். சீதை இருக்கின்ற இடம் இன்னது என்பதைப் பிரமனே தேவர்களோ, மற்றையுயிர்களோ நமக்குத் தெரிவித்திருக்க வேண்டும்; அதைச் செய்யாமையால் என் அம்பைத் தொடுத்துப் பிரமன் முதலியோரை வருத்தினலல்லது அவர்கள் சீதையைக் காட்டமாட்டார்கள்; நாமும் காண முடியாது என்றவாறு. இதுகாறும் அவலச் சுவையில் நின்ற இராமன் இப்போது வெகுளிச் சுவைக்கு மாறுகின்றமை காணலாம். "பெண்டனி யொருத்தி தன்னைப் பேதைவா ளரக்கன் பற்றிக், கொண்டனனேக நீயிக் கோளுறக் குலுங்கல் செல்லா, எண்டிசை யிறுதியான வுலகங்களிவற்றை யின்னே, கண்ட வானவர்களோடுங்

களையுமா றின்று காண்டி" (சடாயு உயிர்நீத்த - 204) என முன்னும் இவ்வாறே இராமன் வெகுண்டு கூறியுள்ளமையும், சடாயு தணிவுரை கூறியதையும் இங்கு நினையலாம். 'விட்ட' என்பது, விரைவுபற்றி எதிர்காலம் இறந்த காலமாய் வந்த வழுவமைதி; விடும் வாளிகள் என்பதே கருத்து. பற்று அறக் கட்டல் என்றது வேரறக் களைதலை யுணர்த்தியது; அடியோடு அற்றுப்போக அழித்தல் என்க. வேடர் விரித்த வலையில் அகப்பட்டு வருந்தும் மயில்போலத் தவவேடனாகிய இராவணன் விரித்த வஞ்சனை வலையில் அகப்பட்டவள் சீதை என்பது புலப்பட அவளை 'மயில்' என்றான்; உவமையாகுபெயர். கட்டபோதல்லது மயிலைக் காண்குமோ? என்றமையால் கட்டபோது காண்கும்; ஆகவே அதைச் செய்கின்றேன் என்பது கருத்தாயிற்று. **(94)**

**4347.** தருமமென் றொருபொரு டன்னை யஞ்சியான்
தெருமரு கின்றது செறுநர் தேவரோ
டொருமையின் வந்தன ரேனு முய்கலா
ருருமென வொலிபடு முரவிலோ யென்றான்.

'தருமம் என்றொரு பொருள் தன்னை அஞ்சி யான்,
தெருமருகின்றது; செறுநர் தேவரோடு
ஒருமையின் வந்தனரேனும் உய்கலார்;—
உரும் என ஒலி படும் உர விலோய்!' என்றான்.

பொ:—'இடிபோல நாண் ஒலி உண்டாகும் வலிய வில்லையுடைய இலக்குவ! யான் (அவ்வாறு உலகங்களையும் உயிர்களையும்) அழிக்காமல் மனம் வருந்துகின்றது தருமம் என்கின்ற ஒரு பொருளுக்கு அஞ்சியே யாம்; (இல்லையேல்) தேவரோடு பகைவர்களாய அரக்கரும் ஒன்றுபட்டு வந்தாலும் (என் அம்பிற்குத் தப்பிப்) பிழைக்க மாட்டார்கள்; (இது உறுதி) என்று கூறினான்.'

கு:—இலக்குவனும் தன்னைப் போன்ற ஆற்றலையுடையவனே என்பது புலப்பட 'உரும் என ஒலிபடும் உரவிலோய்' என விளித்தான். அரக்கர் செய்த குற்றத்திற்கு மற்றவரைத் தண்டித்தல் அறனாகாதே என்ற எண்ணத்தால் அது செய்யவில்லை என்பான், 'தரும மென்றொரு பொருள் தன்னை யஞ்சியான் தெருமருகின்றது' என்றான். தன் மனைவியாகிய சீதையுள்ள இடத்தைக் காட்டாத குற்றத்திற்குத் தண்டித்தல் கூடாதோ எனின் "தாட்செய்த கமலத்தானே முதலினர் தலைபத்துள்ளாற், காட் செய்கின்றார்களன்றி யறஞ் செய்கின்றார்கள் யாரே" (சடாயு உயிர் - 209) எனச் சடாயு

கூறிய அமைதிமொழியே அதற்கு விடையாகும். பிரமன் முதலியோர் தம்முரிமையோடு வாழாமல் இராவணன் அடிமையாக வாழ்கின்ற போது, அவர்கள் சீதையைக் காட்டவில்லை என்று வெகுளுதல் அற மன்று என்றவாறு. தெருமரல் - மனஞ்சுழலல்; செய்வதறியாது மனங்குழம்பி வருந்துதல். இராமன், தன் மனைவியுள்ள இடத்தைக் காட்டாமைக்காகத் தேவரைக் கோபிப்பது போலவே, ஒரு தலைவி தன் தலைவனைத் தேடுதற்கு இடம் விடாத கடலை வெகுண்டு, "பேணான் துறந்தானை நாடு இடம் விடாயாயின், பிறங்கிரு முந்நீர் வெறுமணலாகப், புறங்காலின்போக இறைப்பேன்; முயலின் அறம் புணை யாகலுமுண்டு" (கலி - 144) என்று கூறியிருத்தலும் காண லாம். செறுநரும் தேவரும் ஒருமையின் வருதல் நிகழாது என்பார், வந்தனரேனும் என எதிர்மறையும்மை கொடுத்துக் கூறினார். அவ் விருதிறத்தாரையும் வேரொடு அழிப்பேன் என்பான், 'உய்கலார்' என்றான். இவ்வாறே முன் தண்டகவனத்து முனிவர்க்கு, "சூர றுத்தவனுஞ் சுடர் நேமியும் ஊரறுத்த வொருவனுமோம்பினு மார றத்தினோ டன்றி நின்றாரவர் வேரறுப்பன்" (அகத்தியப் - 22) எனக் கூறியதும் இங்கு ஒப்பு நோக்கத்தகும். இனிச் சீதையும், இங்கு இராமன் கூறியது போலவே, "அல்லன் மாக்க ளிலங்கைய தாகுமோ, எல்லை நீத்த வுலகங்கள் யாவுமென், சொல்லினாற் சுடுவேன் அது தூயவன், வில்லி னாற்றற்கு மாசென்று வீசினேன்" (சூளாமணிப் - 18) எனத் தன் ஆற்றலைப் பற்றி அனுமனிடம் கூறி யுள்ளதும் காணலாம். (95)

## இலக்குவன் ஆறுதல் கூறுதல்

4348. இளவலு முரைசெய்வா னெண்ணு நாளினு
முளவல கூதிரு மிறுதி யுற்றதால்
களவுசெய் தவனுறை காணுங் காலம்வந்
தளவிய தயர்வதெ னாணை யாழியாய்.

இளவலும் உரை செய்வான், 'எண்ணும் நாள் இனும்
உள அல; கூதிரும், இறுதி உற்றதால்;
களவு செய்தவன் உறை காணும் காலம் வந்து
அளவியது; அயர்வது என்?—ஆணை ஆழியாய்!'

பொ :—(இராமன் சொல்லைக் கேட்ட) தம்பியாகிய இலக்குவனும் (இராமனை நோக்கிச்) சொல்லுகின்றான் :—'ஆணைச் சக்கரத்தை யுடையவனே! (சீதையைத்தேடுதற்குப் பொருந்தாத நாட்கள் என்று நாம்) எண்ணிய மழைநாட்கள் இன்னும் இருக்கின்றன அல்ல;

கூதிர்ப்பருவமும் முடிவடைந்தது; ஆதலால், சீதையைக் கவர்ந்தவனாகிய இராவணன் இருக்கும் இடத்தைத் தேடிக் காணுதற்கு உரிய காலம் வந்து சேர்ந்தது; நீ வருந்துவது எதற்கு?'

கு:—எண்ணுநாள் என்றது, முன் சீதையைத் தேடுதற்குப் பொருந்தாது என்று கருதி விலக்கிய மழை நாட்களை; அவை கார்காலமாகிய ஆவணி, புரட்டாசியும், கூதிர்காலமாகிய ஐப்பசி, கார்த்திகையும் ஆகிய நான்கு மாதங்கள். 'இல்லை' என்னாது 'உளவல' என்றதும், 'கூதிரும் இறுதியுற்றதால்' என்றதும் இன்னும் சில நாட்கள் இருப்பதை உணர்த்துவனவாம். முன் சுக்கிரீவனிடம் "என்கண் வருவழி மாரிக்காலம் பின்னுற முறையினுன்றன் பெருங்கடற் சேனையோடும் துன்னுதி" (அரசியற் - 16) எனக் கூதிர்க்குப் பின்வருமாறு பணித்ததும் நினைக. சீதையை வஞ்சித்துக் கவர்ந்த இராவணனைக் 'களவு செய்தவன்' என்றார். உறை - இருப்பிடம். காணுங்காலம் என்றது மார்கழித் திங்களை. இராவணன் இருக்கை காண்டலே சீதையைக் காண்டலும் ஆகும் ஆதலின், இனிச் சீதையை நினைந்து சோர்வது வேண்டா என்றவாறு. சக்கரவர்த்தி திருமகன் என்ற நினைவால் 'ஆணை ஆழியாய்' என இராமனை விளித்தான். ஆணை உலக முழுதும் செல்லும் இயல்பு பற்றி அதனைச் சக்கரமாகக் கூறுவது மரபு. (96)

4349. திரைசெயத் திண்கட லமிழ்தஞ் செங்கணு
னுரைசெயத் தரினுமத் தொழிலு வந்திலன்
வரைமுதற் கலப்பைகண் மாடு நாட்டித்தன்
குரைமலர்த் தடக்கையாற் கடைந்து கொண்டனன்.

திரை செய் அத் திண்கடல், அமிழ்தம் செங்கணன்
உரை செயத் தரினும், அத்தொழில் உவந்திலன்;
வரை முதல் கலப்பைகள் மாடு நாட்டித், தன்
குரை மலர்த் தடக்கையால் கடைந்து கொண்டனன்.

பொ:—அலைகள் வீசுகின்ற அந்த வலிய பாற்கடல், சிவந்த கண்களையுடைய திருமால், (கொடு) என்று சொன்ன அளவிலே அமிழ்தத்தைத் தரத்தக்கதே ஆயினும், அவ்வாறு தன் ஆணையின் வலிமை காட்டி எளிதிற் பெறுவதை அத்திருமால் விரும்பாதவனாய், மந்தர மலை யாகிய மத்து முதலிய கருவிகளை அக்கடலிடத்தில் நட்டுத் தன்னுடைய தாமரைமலர் போன்ற பெரிய கைகளால் வருந்திக்கடைந்து (அந்த அமிழ்தத்தைப்)பெற்றுக் கொண்டான்.

கு:—திருமால் தன் ஆணைக்கு அடங்கி நடக்கும் கடலிடத்தும் ஆணையால் எளிதில் அமிழ்தத்தைப் பெருது, மத்து முதலிய கருவிகளைக்கொண்டு கையால் முயன்று கடைந்து அந்த அமிழ்தத்தைப் பெற்றது போல, நீயும் தேவர் முதலியோரைத் துன்புறுத்திச் சீதையைக் காணும் ஆற்றலுடையவனே எனினும் அது செய்யாது, வானரப் படையின் துணைகொண்டு தேடி முறைப்படி பகைவரை வென்று சீதையைக் காண்பதே தக்கது என்றவாறு. உவமையைக் கூறி உவமேயத்தைக் கூருது புலப்படுத்திய இது பிறிது மொழிதல் என்னும் அணியாகும். செங்கணன் என்றது திருமாலே. “கண்ணும் திருவடியும் கையும் திருவாயும் செய்ய கரியவனே” (சிலப்-ஆய்ச்சியர் குரவை. 36) எனத் திருமாலின் கண் இயல்பாகச் சிவந்திருத்தலைப் புலப்படுத்தியிருத்தல் காணலாம். கலப்பை - கருவி. மாடு - இடம். குரை - அசைநிலை. (79)

4350. மனத்தினி னுலகெலாம் வகுத்து வாய்ப்பெயும்
நினைப்பின னயினு நேமி யானெடு
மெனைப்பல படைக்கல மேந்தி யாரையும்
வினைப்பெருஞ் சூழ்ச்சியிற் பொருது வெல்லுமால்.

மனத்தினின் உலகு எலாம் வகுத்து, வாய்ப் பெயும்
நினைப்பினன் ஆயினும், நேமியான் நெடும்
எனைப்பல படைக்கலம் ஏந்தி, யாரையும்,
வினைப்பெருஞ் சூழ்ச்சியின் பொருது வெல்லுமால்.

பொ:—சக்கரப் படையுடைய திருமால் தன் மனத்தில் நினைத்த அளவிலே உலகங்களை யெல்லாம் படைத்துப் பின் அழித்தற்கு உரிய சங்கற்ப வலிமை யுடையவனுயினும், அவ்வாறு செய்யாமல் நெடிய மிகப்பல ஆயுதங்களைத் தாங்கிச் சென்று பகையாய் வந்த அவுணர் அரக்கர் முதலிய யாரையும் போர்வினைக்குரிய பெரிய உபாயத்தோடு போர் செய்து வெல்லுவான்.

கு:—மனத்தால் நினைத்த அளவில் அழிக்கும் ஆற்றல் உடைய திருமாலும் தன் பகைவரை அவ்வாறு அழிக்காது, பெரும்படைக்கலன்களை யேந்திப் போர்க்குரிய உபாயங்களை மேற்கொண்டு போர் செய்தே வெல்லும் இயல்பினனுவான். அவனைப்போன்ற பேராற்றலையுடைய நீயும் இருந்த இடத்தே நின்று உலகங்களையழிக்கும் ஆற்றலுடையையாயினும் அவ்வாறு செய்யாமல் சேனையோடு சென்று சாமம், பேதம், தானம், தண்டம் என்ற உபாயங்களை மேற்கொண்டு பகைவரோடு போர் செய்து அழித்தலே முறை என்ற

வாறு. வகுத்தல் - படைத்தல். வாய்ப் பெய்தல் என்பது அழித்தல் என்னும் கருத்தினது. நேமியான்-சக்கரப்படையையுடைய திருமால். சூழ்ச்சி - உபாயம். (98)

4351. கண்ணுடை நுதலினன் கணிச்சி வானவன்
விண்ணிடைப் புரஞ்சுட வெகுண்ட மேலைநா
ளெண்ணிய சூழ்ச்சியு மீட்டிக் கொண்டவு
மண்ணலே யொருவரா லறியற் பாலவோ.

கண்ணுடை நுதலினன், கணிச்சி வானவன்,
விண்ணிடைப் புரம்சுட வெகுண்ட மேலைநாள்,
எண்ணிய சூழ்ச்சியும், ஈட்டிக் கொண்டவும்,
அண்ணலே! ஒருவரால் அறியற் பாலவோ?

பொ :—பெருமையிற் சிறந்தவனே! கண்பொருந்திய நெற்றியை யுடையனுகிய மழுவாயுதத்தையுடைய சிவபிரான், ஆகாயத்தில் திரியும் முப்புரங்களைச் சுடவேண்டும் என்று கோபித்த முற்காலத்தில் அதற்காக எண்ணிய ஆலோசனைகளும், அப்போர்க்காகச் சேகரித் துக்கொண்ட தேர் முதலிய கருவிகளும் ஒருவரால் கணக்கிட்டு அறியத்தகுவனவோ? (மிகப்பல என்றவாறு)

கு :—சிவபிரான் பகைவரை யெரித்தற்குரிய நெற்றிக்கண்ணையும் அழித்தற்குரிய மழுவையும் உடையனுயிருந்தும் அவற்றைக்கொண்டு திரிபுரத்தை அழிக்காமல், பூமியைத் தேராகவும், சூரிய சந்திரர்களைச் சக்கரங்களாகவும் தேவர்களைத் தேர்க்கால்களாகவும் நான்கு வேதங்களைக் குதிரைகளாகவும் பிரமனைத் தேர்ப்பாகனுகவும் மேரு மலையை வில்லாகவும் ஆதிசேடனை நாணுகவும் திருமாலை அம்பாக வும் கொண்டு அதை அழிக்கச் சென்றுன் ஆகலின், 'ஈட்டிக் கொண்டவும் ஒரு வரா லறியற் பாலவோ' என்றுன். "ஓங்கு மலைப் பெருவிற் பாம்புநாண்கொளீஇ ஒரு கணை கொண்டு மூவெயி லுடற்றிப் பெருவிறலமரர்க்கு வென்றிதந்த கறைமிடற் றண்ணல்" (புறநா - 55) என இவ்வரலாற்றைச் சுருங்கக் கூறியிருத்தல் காணலாம். இராவணனை வெல்லுதற்கும் பல சூழ்ச்சிகளும் படைகளை யீட்டிக்கொள்ளுதலும் வேண்டும் என்பது கூறியவாறு. இவ்வாறே கவந்தனும், "பழிப்பறு நிலைமை யாண்மை பகர்வதென் பதுமபீடத், துழிப்பெருந்தகைமை சான்ற வந்தண னுயிர்த்த வெல்லாம் அழிப் பதற்கொருவனுன வண்ணலு மறிதி ரன்றே, ஒழிப்பருந்திறல் பல் பூத கணத்தொடு முறையு முண்மை" (கவந்தப் - 55) எனச் சிவ பிரான் இயல்பையே எடுத்துக் கூறியிருத்தல் காணலாம். கணிச்சி -

மழுப்படை. நெற்றிக் கண்ணும் மழுப்படையும் சிவபிரானுக்குரிய சிறப்படையாளங்களாதலின் அவற்றைக் கூறவே சிவபிரான் என்பது விளங்குதலின் அது கூறுது வானவன் என்ற பொதுப் பெயர் மட்டும் கூறியவாறு. (99)

4352. ஆகுநர் யாரையுந் துணைவ ராக்கிப்பின்
னேகுறு நாளிடை யெய்தி யெண்ணுவ
சேகுறப் பன்முறை தெருட்டிச் செய்தபின்
வாகையென் றொருபொருள் வழுவற் பாலதோ.

ஆகுநர் யாரையும் துணைவர் ஆக்கிப், பின்
ஏகுறு நாளிடை எய்தி, எண்ணுவ
சேகு உறப் பல்முறை தெருட்டிச், செய்தபின்
வாகை என்றொருபொருள் வழுவற் பாலதோ?

பொ:—நம் நோக்கத்திற்குத் தக்கவர் எல்லோரையும் நம் துணைவர்களாக ஆக்கிக் கொண்டு, ஆலோசிக்க வேண்டியவற்றை உறுதியாகப் பலமுறை ஆலோசித்துத் தெளிவு பெற்றுப், பிறகு போர்க்குச் செல்லவேண்டிய நாளில் காலதாமதமின்றிச் சென்று போரைச் செய்தால் வெற்றி என்று சொல்லக்கூடிய ஒரு பொருள் தவறக் கூடியதோ? (அன்று என்றபடி)

கு:—ஆகுநர் - தக்கவர். தகாதவரை நீக்குதலும் புலப்படுத்திய வாறு. எண்ணுவ என்றது "வினைவலியுந் தன்வலியும் மாற்றான் வலியும் துணைவலியும்" (குறள் - 471) ஆகியவற்றை. சேகு-வயிரம்; இங்கு உறுதியைக் குறித்தது. தெருட்டுதல் - தெளிவித்தல்; இங்குத் தன் வினைப் பொருளில் வந்தது; தெளிந்து என்பது பொருள். பன்முறை எண்ணித் தெளிந்து என ஒரு சொல் வருவிக்க. ஆக்கி, தெருட்டி, எய்திச் செய்தபின் வாகை வழுவற்பாலதோ என இயையும். "ஒல்வ தறிவ தறிந்ததன் கட்டங்கிச் செல்வார்க்குச் செல்லாததில்" (குறள்-472) என்றலின், 'வாகை என்றொரு பொருள் வழுவற்பாலதோ' என்றான். வெற்றி பெற்றவர் சூடும்பூ வாகைப்பூ ஆதலின், இங்கு வெற்றியையே வாகை என ஒற்றுமை நயத்தால் கூறியவாறு. காலங் கருதி யிடத்தாற் செய்தல் வேண்டும் என்பான், 'ஏகுறு நாளிடை எய்தி' என்றான். 'கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன் குத்தொக்க சீர்த்தவிடத்து' (குறள்-490) என்றவாறே சீர்த்த இடத்துக் கொக்கின் குத்தொக்கத் தப்பாமல் செய்தபின் வாகை வழுவாது என்றவாறு. (100)

4353. அறத்துறை திறம்பின ரரக்க ராற்றலர்
மறத்துறை நமக்கென வலிக்கும் வன்மையோர்
திறத்துறை நன்னெறி திறம்ப லுண்டெனின்
புறத்தினி யார்திறம் புகழும் வாகையும்.

அறத்துறை திறம்பினர், அரக்கர், ஆற்றலர் ;
'மறத்துறை நமக்கு' என வலிக்கும் வன்மையோர் ;
திறத்துறை நல் நெறி திறம்பல் உண்டு எனின்,
புறத்து, இனி யார் திறம் புகழும் வாகையும் ?

பொ :—அரக்கர் ஆற்றல் மிக்கவரே ; ஆயினும், தரும நெறியினின்றும் மாறுபட்டிருக்கின்றனர் ; பாவநெறிகளெல்லாம் நமக்கேயுரிய எனத் துணிந்து செய்யும் கொடுமையுடையவர்களாக இருக்கின்றனர் : எனவே, நிலைபேறுடைய வழியாகிய சன்மார்க்கத்தினின்றும் மாறுபடுதல் அவர்கள்பால் உண்டு என்றால், வெற்றியும் அவ்வெற்றியாலாய புகழும் (நன்னெறிச் செல்லும் நின்னிடத்தே சேர்வதன்றி) இனி வேறு யாரிடத்துச் சேரத்தக்கன ?

கு :—மேல், துணைவலியாலும் தேர்ந்து தப்பாமல் விரைந்து செய்யும் வினைவலியாலும் வாகைபெறலாம் எனக் கூறிய இலக்குவன் அரக்கர் ஆற்றலுடையராகலின் அவரை வெல்லுதல் யாங்ஙனம்? என்னும் வினாவை எழுப்பிக்கொண்டு, அதற்கு விடைகூறுவானாய், 'அரக்கர் ஆற்றல் மிக்கவரே ஆயினும், அவர் அறத்துறை விடுத்து மறத்துறையை விரும்பிச் செய்கின்ற கொடுமையுடையோராயினர் ; நிலைபேறுடைய நன்னெறி திறம்பிய குற்றம் அவர்பால் உண்டு ஆகலின், அறம் உள்ளவழித் தங்கும் வாகையும் புகழும் அவர்பால் தங்கா ; அறநெறிச் செல்லும் நின்பாலே தங்குவன அன்றி, இனி வேறு யாரிடத்துத் தங்குவன' எனக் காரணங்காட்டி இராமனுக்கே வாகையுரியது என்பதை வற்புறுத்தியவாறு. "பாவந் தோற்றது தருமமே வென்றதிப் படையால்" (தானைகாண் - 38) எனப் பின் கூறுதலும், 'வெல்லுமோ தீவினை யறத்தை மெய்ம்மையால்' (சுந்தர - 405) என அனுமன் நினைத்தலும் இங்கு ஒப்பு நோக்கத் தகும். திறம்புதல் - மாறுபடுதல். மறத்துறை - பாவநெறி. வலித்தல்- துணிந்து செய்தல். வன்மை - கொடுமை. திறத்துறை - நிலைபேறுடைய வழி. நல்நெறி - அறநெறி. இராவணன்பால் நன்னெறி திறம்பல் இருப்பதே இராமனுக்கே வாகையுரியது என்பதை நிறுவும் என்றவாறு. இனிப்புறத்து யார் திறம் என இயையும். புறம், வேறு என்னும் பொருளது. திறம் - இடம். வாகையும் புகழும் என மாற்றுக. இனி, புகழத்தக்கவாகையும் என வாகைக்கு அடையாக்கலுமாம். (101)

4354. பைந்தொடிக் கிடர்களை பருவம் பையவே
வந்தடுத் துளதினி வருத்த நீங்குவா
யந்தணர்க் காகுநா மரக்கர்க் காதுமோ
சுந்தரத் தனுவலாய் சொல்லுநீ யென்றான்.

'பைந்தொடிக்கு இடர்களை பருவம் பையவே
வந்து அடுத்துளது; இனி, வருத்தம் நீங்குவாய்!
அந்தணர்க்கு ஆகும் நாம், அரக்கர்க்கு ஆதுமோ?
சுந்தரத் தனுவலாய்! சொல்லுநீ' என்றான்.

பொ:—'பசுமையான தொடியென்னும் வளையல் அணிந்த சீதைக்கு நேர்ந்த துன்பத்தைப் போக்குதற்குரிய காலம் மெல்ல வந்து சேர்ந்துளது; ஆதலால், இனி (அவளை நினைந்து வருந்தும்) வருத்தம் நீங்குவாயாக. (அறத்திற்கு மாறுபட்ட இராவணன் முதலிய அரக்கரைக் கொன்று) அந்தணர்களுக்கு உதவியாக வேண்டிய நாம், அது செய்யாது துன்பத்திலழுந்திச் சோர்ந்திருந்து அவ்வரக்கர்க்கு ஆக்கம் தந்தவர்களாய் ஆவேமோ? அழகிய வில்லில் வல்ல வீரனே! நீ சொல்வாயாக' என்று கூறினான்.

கு:—கூதிர்ப்பருவத்திற்கு அடுத்துவரும் முன்பனிப் பருவம் சீதையைத் தேடுதற்குரிய பருவமாகலின் அதைச் சீதையின் இடர் களை பருவமாகக் கூறினான்; என்னை? அச்சீதையைத் தேடிக்கண்ட பின் இடர்களைதல் தப்பாது செய்யப்படுமாகலின் என்க. இடர்களை தலாவது, இராவணனைக் கொன்று சீதையை மீட்டலேயாம். இராமன் உள்ளம் சீதையின் இடர்களைதலினும் அந்தணர் இடர் களைதலில் ஈடுபாடு மிக்கதாகலின், அதை யெடுத்துச் சொல்லி இராமனைத் தேற்றுதல் எளிது என்ற கருத்தான் 'அந்தணர்க்காகு நாம் அரக்கர்க்காதுமோ?' என்று கூறினான். அந்தணர்க்கு ஆத லாவது, அவர்க்குப் பகையாய் நின்று நலிவு பல செய்யும் அரக்கரை அழித்தலே யாம்; இராவணன் முதலிய அரக்கரைக் கொன்று அந்தணர்க்கு உதவவேண்டியவர்களாகிய நாம், அதைச் செய்யாமல் பிரிவுத் துன்பத்தில் ஆழ்ந்திருந்தால் அரக்கர்க்கு உதவி செய்தவர் களாவேம் என்பது கருத்து. என்னை? துன்பத்தில் ஆழ்ந்து சோர்ந்திருந்தால் அரக்கரைக் கொல்ல இயலாமல் போகும்; அரக்கர் ஆக்கம் பெற்று மேலும் அந்தணரைத் துன்புறுத்துவர்; எனவே அரக்கர்க்கு ஆக்கம் அளித்தவராவோம் என்றவாறு. சுந்தரத் தனுவலாய்! என்ற விளி அரக்கர்க்கு ஆக்கம் தரத்தக்கவன் அல்லன் என்னும் கருத்தினது; என்னை? வில்லில் வல்லவனாதலின் அரக்கர்க்கு அஞ்சாது போர்செய்து அழித்தற்குரியவன் என்னும் பொருளதாகலின் என்க. ஆதும் தன்மைப் பன்மை வினைமுற்று;

வினு ஒகாரம் பெற்று 'ஆதுமோ' என ஆயிற்று; வினு ஒகாரம் எதிர் மறைப் பொருள் தந்தது. அரக்கர்க்குத் துணையாய்ச் சோர்ந்திருத் தற்குரியமல்லோம் என்றவாறு. எனவே வருத்தம் நீங்கி முயற்சி மேற்கொள்க என்று ஊக்கியவாறு. "மடிமை குடிமைக்கட் டங் கிற்றன் ஞென்னுர்க் கடிமை புகுத்திவிடும்.'' (குறள் - 608) என்பதும், "அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும் பெருமை முயற்சி தரும்" (குறள் - 611) என்பதும் நினைந்து இலக்குவன் இவ்வாறு இராமனை ஊக்குவானுயினன் என்க. (102)

## கூதிர்ப்பருவம் தேய்ந்து மாய்ந்து போதல்

4355. உறுதியஃ தேயென வுணர்ந்த வூழியா
னிறுதியுண் டேகொலிம் மாரிக் கென்பதோர்
தெறுதுய ருழந்தனன் றேயத் தேய்வுசென்
றறுதியை யடைந்ததப் பருவ மாண்டுபோய்.

உறுதி அஃதே என உணர்ந்த ஊழியான்,
'இறுதி உண்டே கொல் இம்மாரிக்கு?' என்பது ஓர்
தெறு துயர் உழந்தனன் தேயத் தேய்வு சென்று
அறுதியை அடைந்தது, அப்பருவம் ஆண்டு போய்.

பொ:—இலக்குவன் கூறிய அக்கருத்தே உறுதியானது என்று உணர்ந்துகொண்ட காலதத்துவனுகிய இராமன், 'இந்தக் கூதிர்ப் பருவத்திற்கு முடிவும் உளதாமோ' என்று எண்ணுதலாகிய ஒப்பற்ற கொடிய துன்பத்தால் வருந்தி மெலியாநிற்க, அக்கூதிர்ப்பருவம், தன் ஆட்சியைச் செய்துவிட்டுச் சிறிது சிறிதாகத் தன் வலிமை தேய்ந்துபோய் முடிவடைந்தது.

கு:—தனக்கு இளையவன் கூறியதுதானே என்று இகழாமல் இராமன் ஏற்றுக்கொண்டமை தோன்ற, 'உறுதி அஃதே என உணர்ந்த ஊழியான்' என்ருர். முன்னம் இளையவன் சொல்லை நன்று என ஏலாமையால் வந்த பெருந்துயரை அனுபவிக்கின்றவ ஞதலின் இப்பொழுது 'உறுதி யஃதே' என ஏற்றுக்கொண்டான். இலக்குவன் சொல்லை உறுதியென உண்ர்ந்தும் மாரிக்காலம் முடி வடையாமை நினைந்து மெலிந்தான் என்க. ஊழி - காலம். காலதத் துவனுகிய திருமால் அமிசமான இராமன், அக்காலதத்துவத்துள டங்கிய கூதிர்காலத்துக்கு அஞ்சி வருந்த நேர்ந்ததே என்ற இரக்கக் குறிப்புத் தோன்ற "ஊழியான் இறுதியுண் டேகொலிம் மாரிக்கு' என்பதோர் தெறுதுய ருழந்தனன் தேய" என்ருர். தெறுதல் -

அழித்தல். துயரத்தின் மிகுதி புலப்பட 'ஓர், தெறுதுயர்' எனச் சிறப்பித்தவாறு. இராமன் தேய அப்பருவமும் இரக்கங்கொண்டு தேய்வு சென்றது என்ற நயம் காணலாம். தேய்வுசெல்லுதலாவது, தேய்தல்; அப்பருவம் ஆண்டு தேய்வு சென்றுபோய் அறுதியை அடைந்தது என இயையும். ஆண்டு - ஆட்சி செய்து. மாண்டு போய் (மீண்டுவாராமல்) அறுதியை யடைந்தது எனக் கூறலும் ஆம். இதனுல் கார்காலத்திற்குப் பின்னதாகிய கூதிர்காலம் முடிவடைந்தமை புலப்படுத்தியவாறு. இலக்குவன் முன் 'பைந்தொடிக் கிடர்களை பருவம் வந்தடுத்துளது' என்ற கூறியது விரைவு பற்றிய காலவழுவமைதியாகும் என்பதும், அவன் கூறிய பின்னும் சிலநாள் மாரிப் பருவம் இருந்தே பின் முடிவுற்றது என்பதும் இதனுல் அறியலாம். (103)

### மேகம் வெளுத்தல்

4356. மள்கலில் பெருங்கொடை மருவி மண்ணுளோ
ருள்கிய பொருளெலா முதவி யற்றபோ
தெள்கலி லிரவலர்க் கீவ தின்மையால்
வெள்கிய மாந்தரின் வெளுத்த மேகமே.

மள்கல் இல் பெருங்கொடை மருவி, மண்உளோர்
உள்கிய பொருள் எலாம் உதவி, அற்ற போது
எள்கல் இல் இரவலர்க்கு ஈவது இன்மையால்,
வெள்கிய மாந்தரின் வெளுத்த—மேகமே.

பொ :—குறைதல் இல்லாத பெரிய கொடைத்தொழிலே மேற்கொண்டு, உலகத்தோர் தம்பால் பெறக்கருதியபொருள் எல்லாவற்றையும் கொடுத்துவிட்டு, தம்மிடத்துப் பொருள் அற்றுவிட்டபோது, (வந்து கேட்கும்) இகழ்தற்கு உரியரல்லாத இரப்பார்க்கு(க் கொடுக்கக்கூடிய பொருள் இல்லாமை பற்றிக்) கொடுக்கமாட்டாமையால் நாணிவெளுத்த பெருமக்கள்போல, மேகங்கள் (தம்மிடத்துள்ள நீரையெல்லாம் பெய்துவிட்டமையால்) வெளுத்துத் தோன்றின.

கு :—மேகம் மழைபொழிவது, வள்ளல்கள் கொடுப்பது போன்றதாகலின், பொழிந்து வறிதாய மேகத்திற்குக் கொடுத்து வறியராய வள்ளல்களையே உவமை கூறினர். "உள்ளி உள்ளவெல்லா முவந்தீயுமவ் வள்ளியோரின் வழங்கின மேகமே" (ஆற்றுப் - 4) என மழைபொழியும் மேகத்திற்கும் வள்ளியோரையே உவமை கூறியிருத்தல் காணலாம். மள்குதல்-குறைதல். உலகத்தோர் வேண்டிய

பொருளெலாம் உதவுங் கொடையாதலின் 'மள்கலில் பெருங் கொடை' என்றார். மருவுதல் - மேற்கொள்ளுதல். குறிப்பறிந்தீதலே கொடையாதலின் 'மண்ணுளோர் உள்கிய பொருளெலாம்' என்றார். யான் இலன் என்னும் துன்பச் சொல்லைச் சொல்லாத முன்னரே அவர் மனக் குறிப்பறிந்து கொடுத்து, என்றவாறு. உள்குதல் - நினைத்தல். எள்கல் - இகழ்தல். இரப்பவரை அத் தொழில்பற்றி இகழ்தல் கூடாது என்பார், 'எள்கலில் இரவலர்' என்றார். பெருங்கொடை செய்து பழகியவராதலின், தம்பால் வந்து இரந்தோர்க்குக் கொடுக்க இயலாமை நேர்ந்தபோது நாணி யுடல் வெளுத்தல் இயல்பு என்பார், 'ஈவதின்மையால் வெள்கிய மாந்தரின் வெளுத்த' என்றார். "இன்மை யுரைத்தார்க்கது நிறைக்க லாற்றாக்கால் தன்மெய் துறப்பான்" (கலி. 43) என்பதும், "சாதலி னின்னாத தில்லை யினிததூஉ மீத லியையாக் கடை" (குறள்-230) என்பதும் காணின், கொடுக்க இயலாமையால் சான்றோர்க்கு உளதாம் துன்பம் புலனும். வெள்குதல் -நாணுதல். நாணத்தால் உடல் வெளுத்தல் இயல்பு. "மயில் நடக்கும், திருத்தத்தை நாணி வெளுத்த வென்னுதயனூர்தி செங்கோல் பொருத்தத்தனூர் தியும் பண்டே விளர்த்துப் புகழ் கொண்டவே" (தணிகைப் புரா - களவுப் - 81) என்றது காணலாம். (104)

மாரிப் பேரிருள் மாய்தல்

4357. தீவினை நல்வினை யென்னத் தேற்றிய
பேய்வினைப் பொருடனை யறிந்து பெற்றதோ
ராய்வினை மெய்யுணர் வணுக வாசறு
மாயையின் மாய்ந்தது மாரிப் பேரிருள்.

தீவினை, நல்வினை என்னத் தேற்றிய
பேய்வினைப் பொருள்தனை அறிந்து, பெற்றது ஓர்
ஆய்வினை மெய்யுணர்வு அணுக, ஆசுஅறும்
மாயையின் மாய்ந்தது—மாரிப் பேர் இருள்.

பொ :—தீவினை, நல்வினை என்று நூல்கள் தெரிவித்த கொடுமை யுடைய இருவினையின் இயல்பை உள்ளவாறு அறிந்து பிறவிக்கு ஏதுவாகிய அவ்விருவினையினின்றும் நீங்கற்பொருட்டு, ஆசிரியர் பக்கல்) பெற்றதாகிய ஒப்பற்ற, ஆராயுந்தொழிலையுடைய, மெய் யுணர்வு வந்தவுடன் உயிரைப் பற்றுதல் விட்டு நீங்குகின்ற அவிச்சைபோலக் (முன்பனிப்பருவம் வந்தவுடன்) கூதிர்ப்பருவத்துத் தோன்றிய பெரிய இருள் நீங்கி மறைந்தது.

கு :—தேற்றுதற்கு வினைமுதலாகிய நூல் என்னும் சொல் அவாய் நிலையான் வந்து கிடைத்தது. இது நல்வினை, இது தீவினை என வரையறை செய்து உணர்த்துவது நூலே யாதல் தெளிக. பொருள் என்பது இங்கு இயல்பினையுணர்த்தியது. வினையியல்பறிதலாவது, இருவினையும் மயக்கம் பற்றி வருவது என அதன் காரணத்தையும் இருவினையும் பிறவிக்குக் காரணம் என அதன் காரியத்தையும் உணர்தல். ‘இருள்சே ரிருவினையும் சேரா’ (குறள் - 5) என்றதும் ‘நல்வினையும் பிறத்தற்கு ஏதுவாகலான் இருவினையுஞ் சேராவென்றுங் கூறினர்’ எனப் பரிமேலழகர் கூறிய உரையும் காண்க. இருவினையும் பிறவித்துன்பத்திற்கு ஏதுவாதல் பற்றி அவற்றினின்றும் நீங்குதற்கு உபாயமாகிய மெய்யுணர்வை ஆசிரியர் பக்கல் உபதேசத்தால் பெற்றவுடன் அவ்விருவினைக்குக் காரணமாய அவிச்சை அவ்வுயிரைப் பற்றுதல் விட்டு நீங்கும் என்க. “இருணீங்கி யின்பம் பயக்கும் மருணீங்கி மாசறு காட்சி யவர்க்கு” (குறள் - 352) என்புழி அவிச்சையினீங்குதல் முன்னும் மெய்யுணர்வு பெறுதல் பின்னும்நிகழ்வன என்பதுபடக் கூறியிருப்பினும் விளக்கின் வரவும் இருளின் நீக்கமும் ஒருகாலத்து உடன் நிகழ்வன என்பதே கருத்தாதலின் இங்கு ‘மெய்யுணர்வணுக ஆசறும் மாயை’ என மாற்றிக் கூறினர்; கூறினும் கருத்தொன்றே என்க. உவமையில் மாயை நீங்குதற்குக் காரணமாக மெய்யுணர்வு அணுகுதல் கூறினமையால் உவமேயத்திலும் முன் பனிப் பருவம் வந்தமையால் மாரிப் பேரிருள் நீங்கிற்று என வருவித்துரைக்கப்பட்டது. ஆசிரியர் பக்கல் பெற்றதோர் மெய்யுணர்வு என்க. ஆய்வினை என்பது மெய்யுணர்வுக்கு அடை. மெய்யுணர்வாவது பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீத வையங்களானன்றி உண்மையானுணர்தலே யாதலின் ஆராயுந் தொழிலையுடைய மெய்யுணர்வு எனச் சிறப்பித்தார். ஆசு - பற்று. “ஆசாகெந்தை யாண்டுளன்கொல்லோ” (புறநா - 235) என்றது காணலாம். ஆசறுதலாவது மெய்யுணர்வு பெற்ற உயிரை மாயை பற்றுதல் விட்டு நீங்குதல். மாயை - அவிச்சை; அஞ்ஞானம். (105)

### இடியும் மின்னலும் இலவாதல்

4358. மூளமர் தொலைவுற முரச விந்தபோல்
கோளமை கணமுகில் குமுற லோவின
நீளடு கணையெனத் துளியு நீங்கின
வாளுறை யுற்றென மறைந்த மின்னெலாம்.

மூள் அமர் தொலைவுற, முரசு அவிந்த போல்,
கோள் அமை கணமுகில் குமுறல் ஓவின ;

நீள் அடு கணை எனத் துளியும் நீங்கின ;
வாள் உறை உற்றென மறைந்த மின்எலாம்.

பொ :—(வேந்தர் இருவர்க்குள்) மூண்ட போர் முடிவுற்ற அளவில், முரசங்கள் ஒலியடங்கியது போல மாரிக்காலமுடிந்தவுடன் கடல் நீரைக் கொள்ளுதல் அமைந்த கூட்டமான மேகங்களின் முழக்கம் நீங்கின : நீண்டதாய்ப் பகைவரை யழிக்கின்ற அம்புகள் (போர் முடிந்தவுடன்) எய்யப்படாமைபோல மழைத்தாரைகளும் சொரியப்படாமல் நீங்கின; போர் முடிந்த அளவில் வாட்படைகள் உறையில் செருகப்பட்டு மறைந்தாற்போல மின்னல்களெல்லாம் மறைந்தன.

கு :—போர் நிகழுங்கால் முரசங்கள் முழங்குதலும், நீண்ட அம்புகள் எய்யப்படுதலும், வாட்படைகள் அசைதலும் உண்டு ; அப்போர் முடிந்த அளவில், முரசங்கள் ஒலி அவிதலும், அம்புகள் எய்யப்படாமையும், வாட்படைகள் உறையுள் மறைதலும் இயல்பு. அதுபோல மாரிக்காலத்து இருந்த முகிலின் முழக்கமும் மழைத் துளிபொழிதலும் மின்னலும் அம்மாரிக்காலம் முடிந்தவுடன் இலவாயின என்றவாறு. இடிக்கு முரசம் உவமையாதலே 'வென்றி முரசின் இரங்கி யெழில் வானம்" (கார்நாற்பது-35) என்புழிக் காணலாம். மழைத்துளிக்கு அம்புகள் உவமை யாதலே, "சரம்பயில் நெடுந்துளி" (83) என முன் கூறியுள்ளமையாலும், மின்னலுக்கு வாள் உவமையாதலே, 'மின்கூர்த்தெழுவாளெனப் பிறழுங் கொட்பினும்' (14) என முன்கூறியுள்ளமையாலும் அறியலாம். போரில் மக்களுக்கு உள்ள வெறுப்புத் தோன்ற அமர்முடிவுற என்னாது, 'அமர் தொலேவுற' என்ருர். கோள்அமை - கடல் நீர் முகந்து கொள்ளும் தன்மை அமைந்த. கோள் - முதனிலே நீண்ட தொழிற் பெயர். குமுறல் - முழங்கல். ஓவுதல் - நீங்குதல். துளியும் நீங்கின என உவமேயத்தில் புணர்த்திய வினையால் 'கணை நீங்கினுலென்ன என உவமையின் கண்ணும் வினை வருவிக்க. 'அமர்தொலேவுற' என்ற ஏதுவைப் பின்னும் கூட்டுக. உவமையின்கண் அமர் தொலேவுற என ஏதுக் கூறியதால், உவமேயத்தின் கண்ணும் மாரி முடிவுற, முகில் குமுறல் ஒவின ; துளியுநீங்கின ; மறைந்த மின்னெலாம் என ஏது வருவிக்கப்பட்டது. இச் செய்யுள் பல்வயிற் போலியுவமை. (106)

4359. தடுத்ததா ணெடுந்தடங் கிரிக டாழ்வரை
யடுத்தநீ ரொழிந்தன வருவி தூங்கின
எடுத்தநூ லுத்தரி யத்தொ டெய்திநின்
றுடுத்தவா னிறத்துகி லொழிந்த போன்றவே.

தடுத்த தாள் நெடுந் தடங்கிரிகள் தாழ்வரை
அடுத்த நீர் ஒழிந்தன, அருவி தூங்கின,
எடுத்த நூல் உத்தரியத்தொடு எய்தி நின்று,
உடுத்த வால் நிறத் துகில் ஒழிந்த போன்றவே.

பொ :—(நடைத்தொழில் நிகழாமல் பூமிக்குள்) தடுக்கப்பெற்ற அடிப் பகுதியை யுடைய உயர்ந்த பெரிய மலைகள், தம் தாழ்வரைகளில் தங்கிய நீர் ஒழியப் பெற்றனவாய், (மேற்பகுதியிலுள்ள) அருவி மட்டும் தணிந்து சிறிதாக ஒழுகப் பெற்றவை, தாங்கிய பூணூலாகிய உத்தரீயத்தோடு பொருந்தி நின்று, அரையில் உடுத்த வெண்ணிறத்தையுடைய ஆடையை, நீக்கியிருந்த நிலையை ஒத்து விளங்கின.

கு :—மாரிக்காலத்து மலையின் அடிவாரத்தில் மழைநீர் பரவியிருந்தமையும், சிகரங்களிலிருந்து அருவி பெருக வீழப்பெற்றமையும், அம்மலையாகிய மனிதன் அரையில் வெள்ளாடையுடுத்துத் தோளில் மேலாடை யணிந்திருந்தது போலக் காணப்பட்டது. மாரிக்காலம் நீங்கியவுடன், மலையடிவாரத்தில் பரவியிருந்த நீரெல்லாம் கழிந்தது, மலையுச்சியிலிருந்து அருவி மட்டும் தணிந்து சிறியதாய் ஒழுகிக் கொண்டிருக்கிறது. இந்த நிலையில் அம்மலையின் தோற்றம், அரையிலுடுத்த ஆடையை நீக்கிவிட்டு மேலாடையையும் நீக்கிவிட்டுப் பூணுலாகிய உத்தரீயத்தை மட்டும் அணிந்திருந்தது போலக் காணப்பட்டது. மேலாடை அணியாததால் உளதாகும் குற்றம் நீங்கும் பொருட்டு இல்லறத்தார் இயல்பாக அணியும் இரண்டு பூணூல்களுடன் மேலாடையின் பொருட்டு ஒரு பூணூலைச் சேர்த்து அணிதல் மரபு என்பதையும் நினைக. பெருமழையில் நனைந்த ஒருவன் வெயிலில் தன் உடம்பு முழுமையும் நன்கு படுமாறு அரையிலுடுத்த ஆடையையும் மேலாடையையும் நீக்கிவிட்டுப் பூணூலோடு நிற்பதுபோல, இம்மலைகளும் நின்றன போலக் காணப்பட்டன என்றவாறு.

மலையின் வேர்ப்பகுதி தரையில் மறைந்திருப்பதைப் புலப்படுத்த ‘தடுத்ததாள் நெடுந்தடங்கிரிகள்’ என்றார். மக்களின் தாள்கள் நடக்கின்றன ; ஆனால் மலையின் தாள்கள் நடவாதபடி தரையினுள் தடுக்கப் பெற்றுள்ளன என்றவாறு. மலைக்குத் தாளாவது தரையில் மறைந்துள்ள வேர்ப்பகுதி. தாழ்வரை - மலையடிவாரம். அருவி தூங்குதலாவது, தணிந்து சிறிதாய் ஒழுகுவது. நூலுத்தரீயம் - பூணூலாகிய மேலாடை. அருவி பெரிதாய் ஒழுகியபோது மலை, மேலாடை தரித்தது போலக் காணப்பட்டது; அது சிறிதாய்த் தணிந்து ஒழுகும்போது மலை பூணூல் தரித்தது போலக் காணப்படுகின்றது என்றவாறு. இது தற்குறிப்பேற்ற உவமையணி. வால்

நிறம் - வெண்ணிறம் கிரிகள் நீரொழிந்தனவாய் அருவி தூங்கப் பெற்றவை, உத்தரியத்தோ டெய்தி நின்று துகில் ஒழிந்தபோலுமே என இயையும். தூங்கின, வினைப்பெயர். (107)

## ஆறு வாரியறல்

**4360.** மேகமா மலைகளின் புறத்து வீதலால்
மாகயாறி யாவையும் வாரி யற்றன
வாகையாற் றகவிழந் தழிவி னன்பொருள்
போகவா றொழுகலான் செல்வம் போலவே.

மேகம் மாமலைகளின் புறத்து வீதலால்,
மாக யாறு யாவையும் வாரி அற்றன;
ஆகையால், தகவு இழந்து, அழிவில் நன்பொருள்
போக, ஆறு ஒழுகலான் செல்வம் போலவே.

பொ:—தன்பால் செல்வம் மிகுதியாகப் பெருகிவிட்டதால் பெருந்தன்மை இழந்து செருக்கித், தன்னிடத்துள்ள அழியாத நல்ல பொருள் முழுவதும் அழிந்து போகுமாறு (தீயநெறியில் ஒழுகி) அறநெறியில் ஒழுகாதவனுடைய செல்வம் தேய்ந்து இல்லையாதல் போல, மேகம் மலையிலிருந்து நீங்கி விட்டதால் அம்மலைமேல் முன் தோன்றிய ஆறுகள் யாவும் நீர் குறைந்து பின் இல்லையாயின.

கு:—ஆகை - ஆகுதல்; செல்வம் பெருகுதல். ஆகையால் - செல்வம் மிகுதியாகப் பெருகியதால் "ஓஒதல் வேண்டு மொளிமாழ்கு செய்வினை யாஅது மென்னு மவர்" (குறள்-653) என்புழி 'ஆதல்' மேலாதலைக் குறித்தல் காண்க. செல்வம் வந்தபோது கீழோர் செருக்கிப் பெருந்தன்மை யிழத்தலும் அறநெறி ஒழுகாமையும் உடையராவர் என்பதற்கு இராவணனே தக்க எடுத்துக்காட்டு ஆவான். மாரீசன், "திறத்திறனாலே செய்தவ முற்றித் திருவுற்றாய்.........அறத்திறனாலே யெய்தினையன்றேவது நீயும், புறத்திறனாலே பின்னு மிழக்கப் புகுவாயோ" (மாரீசன்வதை - 179) என இராவணன் செல்வச் செருக்கால் தீநெறியொழுகி அச்செல்வத்தை யிழக்கப்புகும் நிலையை அவனுக்கே விளக்கியிருத்தல் காணலாம். "செல்வம் வந்துற்ற காலைத் தெய்வமுஞ் சிறிதுபேணார்.........வல்வினை விளைவு மோரார் மண்ணின்மேல் வாழுமாந்தர்" (வி. பாரதம். கிருட்டிணன் தூது: 143) என்றதும் காண்க. பொருளின் மிகுதி தோன்ற, 'அழிவில்பொருள்' என்றும், அறம் செய்தற்குரியதாதல் பற்றி 'நன்பொருள்' என்றும் சிறப்பித்தார். அறநெறி ஒழுகாதான் எனவே அருத்தாபத்தியால்

தீநெறி யொழுகுகின்றவன் என்பது கூறியவாருயிற்று. நன் பொருள் போகத் தீநெறி யொழுகுகின்றவன் என அருத்தா பத்தி யால் போந்த பொருளுக்கு அடையாக்குக. செல்வக் குடியில் பிறந்த கோவலன், "சலம்புணர்கொள்கைச் சலதியொ டாடிக், குலந்தரு வான்பொருள் குன்றந் தொலைந்த, இலம்பாடு நாணுத் தரும்" (சிலப்-9 : 69) எனத் தான் பெருஞ்செல்வன் ஆகையால் தகவிழந்து அழிவில் நன்பொருள் போகத் தீநெறியொழுகி வறுமையுற்ற நிலையைத் தானே கூறியுள்ளமை காணலாம். செல்வம் வீதற்குக் காரணம் ஆறொழுகாமை; அதுபோல ஆறு வாரி யற்றதற்குக் காரணம் மேகம் நீங்குதல் என்க. வாரி-நீர். மலையின் தலையில் ஆறு தோன்றுவதால் அதனை 'மாக யாறு' என்ருர். மாகம்-மேலிடம். (108)

### மேகத்தின் மறைப்பு நீங்கச் சந்திரன் ஒளிவீசுதல்

4361. கடந்திறந் தெழுகளி
றனைய கார்முகி
லிடந்திறந் தேகலிற்
பொலிந்த திந்துவும்
நடந்திற னவில்வுறு
நங்கை மார்முகம்
படந்திறந் தொருவலிற்
பொலியும் பான்மைபோல்.

கடம் திறந்து எழுகளிறு அனைய கார்முகில்
இடம் திறந்து ஏகலின் பொலிந்தது இந்துவும்;
நடம் திறன் நவில்வுறு நங்கைமார் முகம்
படம் திறந்து ஒருவலின் பொலியும் பான்மைபோல்.

பொ :—(கன்னம் கபாலம் முதலியவற்றிலிருந்து) மதத்தைப் பொழிந்து விட்டுச் செல்கின்ற களிற்றியானை போன்றவாய கரிய மேகங்கள் விண்ணிடத்தை யடைத்துக்கொள்ளாது திறந்துவிட்டுச் சென்றமையால், சந்திரனும்—அரங்கில், திரைச்சீலை திறந்து இரு புறமும் நீங்குதலால், நடனத்தைத் திறம்படச் செய்யும் மகளிரின் முகம் விளங்கும் தன்மைபோல விளங்கித் தோன்றிற்று.

கு :—கடம்-மதம். திறத்தல் என்பது இங்குக் கன்ன முதலியவற்றைத் திறந்து சொரிதலை உணர்த்தியது. மழை பொழிந்து விட்டுச் செல்லும் மேகத்திற்கு மதம் சொரிந்து விட்டுச் செல்லும்

களிறு உவமை. மேகங்களின் மறைப்பு நீங்கச் சந்திரன் விளக்கம் பெற்றுத் தோன்றுதற்கு, அரங்கில் திரை மறைப்பு நீங்கப் பெற்ற நவன மாதர் முகம் உவமை. திரைபோன்றது மேகம், நடன மாதர் முகம் போன்றது சந்திரன்; அரங்கு போன்றது வானம் என்பது குறிப்பால் பெறப்படும். காரினும் மாரியினும் மேகத்தால் மறைப் புண்டு தோன்ருதிருந்த சந்திரன் கூதிரினிறுதியில் அம்மேக ம்றைப்பு நீங்கப் பெற்றமையால் விளங்கி ஒளிவீசினுன் என்றவாறு. நவிலுதல் - பயிலுதல்; இங்கு நடித்தலை யுணர்த்தியது. படம் - திரைச்சீலை. ஒருவல் - நீங்குதல். பொருமுக எழினி ஆதலின் அரங்கின் இருபுறத்தும் நீங்கின என்பார். , படந்திறந்து ஒருவலின்' என்ருர். இந்து - சந்திரன். (109)

### குளிர்காற்று நறுங்காற்ருதல்

4362. பாசிழை மடந்தையர் பகட்டு வெம்முலை
பூசிய சந்தனம் புழுகு குங்குமம்
மூசின முயங்குசே றுலர மொண்டுற
வீசிய நறும்பொ்டி விண்டு வாடையே.

பாசிழை மடந்தையர் பகட்டு வெம்முலை
பூசிய சந்தனம், புழுகு, குங்குமம்,
மூசின முயங்கு சேறு உலர, மொண்டு உற
வீசின நறும்பொடி விண்டு வாடையே.

பொ :—பசுமையான பொன் அணியணிந்த பெண்டிரின் பெரிய விரும்பத்தக்க முலையில் பூசப்பட்ட சந்தனம், புழுகு நெய், குங்குமப்பூ இவை நெருங்கிக் கலந்த கலவைச் சாந்து உலருமாறு, வாடைக் காற்று மலர்களிலுள்ள நறுமணமிக்க மகரந்தப் பொடியை முகந்து மிகுதியாக வீசின.

கு :—பசும் பொன்னுலியன்ற அணி ஆதலின் பாசிழை எனப் பட்டது. பகடு - பெருமை. "பகட்டா வீன்ற கொடு நடைக் குழவி" (பெரும்பாண் - 243) என்புழியும் அப்பொருள் பட்டிருத்தல் காணலாம். வெம்மை – விருப்பம், வெப்பம் எனலும் ஆம். பூசிய சேறு என இயையும். சந்தனம், புழுகு, குங்குமம் மூசின முயங்கு சேறு எனச் சேற்றுக்கு அடையாக்குக. சந்தனமும் புழுகு நெய்யும் குங்குமப்பூவும் நெருங்கிக் கலந்த கலவைச்சாந்து என்க. மூசுதல் - நெருங்குதல். முயங்குதல் - கலத்தல். சேறு என்றது கலவைச் சாந்தினை; அது குழம்பாக இருத்தலின் அப்பெயர் பெற்றது. மடந்தையர் முலை பூசிய சேறு உலர, வாடை நறும்பொடி மொண்டுற

வீசின என இயையும். வாடை விண்டு என மாற்றி வாடைக்காற்று எனப் பொருள் கூறப்பட்டது. நறும்பொடி என்றது மலர்களிலுள்ள மகரந்தப்பொடியை. மொண்டு - முகந்து. உற - மிகுதியாக. காற்று வீசப்படும் இடங்கள் பலவாதல் பற்றி வீசிய எனப் பன்மையாகக் கூறினர். மூசின, முற்றெச்சம். இனி 'விண்டு' என்பதற்கு நறும் பொடியை மலர்களினின்றும் வெளிப்படுத்தி எனப் பொருள் கூறலும் ஆம். (110)

### அன்னங்கள் பறக்கத் தொடங்குதல்

4363. மன்னவன் றலைமகன் வருத்த மாற்றுவா
னன்னெடும் பருவமும் நணுகிற் றாதலால்
பொன்னினை நாடிய போது மென்பபோ
லன்னமுந் திசைதிசை யகன்ற விண்ணின்வாய்.

மன்னவன் தலைமகன் வருத்தம் மாற்றுவான்,
நன்னெடும் பருவமும் நணுகிற்று ஆதலால்,
''பொன்னினை நாடிய போதும் என்ப போல்
அன்னமும் திசைதிசை அகன்ற விண்ணின்வாய்.''

பொ :—'தயரத சக்கவரர்த்தியின் முதல் மகனான இராமன்படும் பிரிவாற்றாமையாகிய வருத்தத்தை மாற்றுதற்குரிய நல்ல நீண்ட முன் பனிப்பருவமும் வந்துவிட்டது; ஆதலால், சீதையைத் தேடுதற்குப் போவோம்' என்று எண்ணிப் புறப்பட்டதுபோல அன்னப்பறவைகளும் வானத்தில் திசைகள் தோறும் புறப்பட்டுப் போயின.

கு :—கூதிர்ப்பருவத்தின் குளிர் ஆற்றாமல் அன்னப்பறவைகள் நீர்நிலைகளை விடுத்து மரப்பொதும்பரில் வைகியதாக முன் (81) கூறினர். அக்கூதிர்ப் பருவம் நீங்கி முன்பனிப் பருவம் வந்த அளவில் அங்கு நின்றும் புறப்பட்டு விண்ணில் பறந்து விரும்பிய திசைகளுக்குச் செல்லத் தொடங்கின என்பது கருத்து. இயல்பாக நிகழும் அன்னங்களின் இச்செயலைச் சீதையைத் தேடுதற்காகப் புறப்படுவோம் என்று எண்ணிப்புறப்பட்டதுபோல விண்ணின்வாய் அகன்றன என்றது தற்குறிப்பேற்றவணி. பொன் என்றது; திருமகள் அமிசமான சீதையை. வானரங்கள் பொன்னினை நாடிய போவதேயன்றி அன்னமும் பொன்னினை நாடிய போதும் என்ப போல் என்று பொருள் தருதலின், உம்மை எதிரது தழுவிய எச்சப் பொருளது. வருத்தம் மாற்றுவான் பொன்னினை நாடிய போதும் என இயையும். வருத்தம் ஆற்றுவான் எனப் பிரித்தலும் ஆம். (111)

### மயில்கள் ஒடுங்குதல்

**4364.** தஞ்சிறை யொடுக்கின தழுவு மின்னல
நெஞ்சுறு மம்மரு நினைப்பு நீண்டன
மஞ்சுறு நெடுமழை பிரிந்த மாமயி
லெஞ்சின மிதிலைநாட் டன்ன மென்னவே.

தம்சிறை ஒடுக்கின, தழுவும் இன்னல,
நெஞ்சு உறு மம்மரும் நினைப்பும் நீண்டன
மஞ்சு உறு நெடு மழை பிரிந்த மாமயில்
எஞ்சின, மிதிலை நாட்டு அன்னம் என்னவே.

பொ :—மேகங்கள் பொருந்திய பெரிய மழைக்காலத்தைப் பிரிந்த பெருமையுடைய மயில்கள், தம் சிறகுகளை ஒடுக்கிக் கொண்டு துன்பம் பொருந்தினவாய், மனத்தில் பொருந்திய பிரிவு மயக்கமும் நினைவும் மிக்கனவாய், மிதிலை நாட்டில் பிறந்த சீதையைப் போலச் சோர்ந்து ஒடுங்கின.

கு :—காரெழில் வண்ணனாகிய இராமனைப் பிரிந்த சீதை தன்னுடம்பை ஒடுக்கிக்கொண்டு இன்னல் பொருந்தியவளாய், மனத்தில் பொருந்திய பிரிவுத்துயராலாய மயக்கமும் சிந்தனையும் மிக்கவளாய்ச் சோர்ந்திருத்தல்போல, மயில்கள் மழைக்காலத்தைப் பிரிந்தமையால் தம் சிறகுகளை யொடுக்கிக்கொண்டு துன்பம் பொருந்தினவாய் மயக்கமும் நினைவும் மிக்கனவாய் ஒடுங்கின என உவமையை விரித்துரைக்க. தழுவுமின்னல என்றாராயினும் இன்னல் தழுவின என்பதே கருத்தாகக் கொள்க. இன்னல் - துன்பம். மம்மர் - மயக்கம்; துன்பமிகுதியால் மயக்கம் வருவதுண்டு. நினைப்பு என்றது மழைக் காலத்துத் தாம் எய்திய இன்பங்களைப் பற்றிய சிந்தனையை. மஞ்சு - மேகம். நெடு மழை என்றது இங்குப் பருவத்தை யுணர்த்தியது. கார்காலம் தொடங்கிய பொழுது 'ஆடின மயில்கள் பேசாதடங்கின குயில்கள்' (26) எனக் கூறப்பட்டிருத்தல் நினைவு கூரலாம். அவ்வாறு கார்கண்டு களித்தாடிய மயில்கள் அம்மழைக் காலம் நீங்கியவுடன் துன்புற்று ஒடுங்கும் இயல்புணர்த்தியவாறு. எஞ்சுதல் – மகிழ்ச்சி குறைந்து சோர்தல். அன்னம் உவமையாகு பெயராய்ச் சீதையை யுணர்த்தியது. மயில்கள் மிதிலைநாட்டு அன்னம் என்ன எஞ்சின என இயையும். (112)

### நீர் தெளிதலும் மீன் பிறழ்தலும்

**4365.** வஞ்சனைத் தீவினை மறந்த மாதவர்
நெஞ்செனத் தெளிந்தன நீர நீர்தொறும்

பஞ்செனச் சிவக்குமென் பாதப் பேதைய
ரஞ்சனக் கண்ணெனப் பிறழ்ந்த வாடன்மீன்.

வஞ்சனைத் தீவினை மறந்த மாதவர்
நெஞ்சு எனத் தெளிந்தன நீரம், நீர்தொறும்
'பஞ்சு' எனச் சிவக்கும் மென்பாதப் பேதையர்
அஞ்சனக் கண் எனப் பிறழ்ந்த ஆடல் மீன்.

பொ:—வஞ்சனைக்கு இடமான தீவினையை அறியாத பெரிய தவமுனிவரின் மனம்போல, ஆறு குளம் முதலியவற்றிலுள்ள நீர் கலங்கல் நீங்கித் தெளிந்தன; தெளிந்த அந்நீர் தோறும் ஆடுகின்ற மீன்கள், - பஞ்சு என்ற சொன்னவுடன் அது உறுத்துமே என்று அஞ்சிச் சிவக்கும் மெல்லிய பாதங்களையுடைய பெண்டிரின் மைதீட்டிய கண்கள் பிறழ்வது போலப் பிறழ்ந்தன.

கு:—மாதவர் தவமன்றிப் பிறிதறியார் ஆதலின், தீவினையை மறந்தவர் ஆயினர். மனம் தெளிவற்றுக் கலங்குதற்குக் காரண மான தீவினை நீங்கினமையும் அது தெளிவு மிகுதற்குக் காரணமாகச் செம்பொருளையே நீடுநினைதலும் உடையவர் மாதவர் ஆதலின், அவர் மனம் தெளிவுடையதாகும். கார்காலத்தும் கூதிர்காலத்தும் பெய்த மழையால் கலங்கியிருந்த நீர் நிலைகள், முன்பனிக்காலத்துத் தெளிந்திருந்தமைக்கு மாதவர் மனத்தை யுவமை கூறியவாறு. தெளி வின்றிச் செல்லும் யாற்று நீருக்குக் கள்ளுண்ட மாக்களையுவமை கூறியுள்ளதை: "உள்தெளிவின்றியே, தேக்கெறிந்து வருதலிற் றீம்புனல், வாக்கு தேனுகர் மாக்களை மானுமே" (பால-ஆற்றுப்-10) என்பதால் அறியலாம். நீரம் என்பது நீர் அம்முச்சாரியை பெற்று வந்தது. நீர் நிற்கும் இடங்கள் பலவாதலின் தெளிந்தன என நீர்க்கும் பன்மை கூறினர். தெளிந்தோடும் நீரில் மீன்கள் பிறழ்தல் தெளிவாகக் காணப்படுதலின் நீர் தெளிந்தமை கூற வந்தவர் மீன் பிறழ்தலையும் உடன் கூறினர். "கயலறலெதிரக் கடும்புனல் சாஅய்" (நெடுநல் - 18) என்பது இங்கு ஒப்புத்நோக்கத் தகும். பெண்டிரின் பாதங்கள் மிக மென்மையுடைய என்பது புலப்படப் 'பஞ்செனச் சிவக்கும் மென்பாதம்' என்றார். பஞ்சினும் மெல்லியபாதம் என்றவாறு. "பஞ்சு கொண்டூட்டினும் பையெனப் பையெனவென் றஞ்சிப்பின் வாங்குமடி" (நாலடியார் - 396) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். பேதையர் என்பது பருவங் குறியாது பெண்டிர் என்னும் பொருளில் வந்தது. "சேல்போல் பிறழுந் திருநெடுங்கண் (தண்டி-விரிஉவமை) எனக் கண்ணுக்கும் மீனுக்கும் உள்ள ஒற்றுமை கூறுதல் காணலாம். கண்ணெனப் பிறழ்ந்த மீன் என்றது விபரீதவுவமை. (113)

## தாமரை பொலிவிழத்தலும் செங்கிடை மலர்தலும்

4366. ஊடிய மடந்தையர் வதன மொத்தன
தாடொறு மலர்ந்தன முதிர்ந்த தாமரை
கூடினர் துவரிதழ்க் கோலங் கொண்டன
சேடுறு நறுமுகை விரிந்த செங்கிடை.

ஊடிய மடந்தையர் வதனம் ஒத்தன,
தாள்தொறும் மலர்ந்தன முதிர்ந்த தாமரை;
கூடினர் துவர் இதழ்க் கோலம் கொண்டன
சேடு உறு நறு முகை விரிந்த செங்கிடை.

பொ:—நாளங்கள் தோறும் மலர்ந்தனவாய் முதிர்ந்து (பொலி விழந்த) தாமரை மலர்கள், கொழுநரோடு ஊடிய பெண்டிரின் முகம் போன்றன; அழகு பொருந்திய நறுமணமுள்ள அரும்புகள் மலரப் பெற்ற செங்கிடை மலர்கள், கொழுநரைப் பிரியாது கூடிவாழும் பெண்டிரின் சிவந்த வாயிதழ்போல, அழகுடன் விளங்கின.

கு:—பனிக்காலத்துத் தாமரை மலர்கள் பொலிவிழந்து தோன்றும் இயல்பும், செங்கிடை மலர்கள் சிவந்து பொலிவுடன் தோன்றும் இயல்பும் புலப்படுத்தியவாறு. கார்காலத்தில் தாமரை மலர்கள் பொலிவுற்ற நிலையை: "செஞ்செவேலவர் செறிசிலைக் குரிசில ரிருண்ட, குஞ்சி சேயொளி கதுவுறப் புதுநிறங் கொடுக்கும் பஞ்சிபோர்த்த மெல்லடி யெனப் பொலிந்தன பதுமம்" (45) எனவும், "விருந்து கண்டு உள்ளம் களிக்கும் மங்கையர் முகம் எனப் பொலிந்தன கமலம்" (36) எனவும் முன் உவமைகூறி விளக்கி யிருத்தல் காணலாம். பனிக்காலத்தில் தாமரை மலர்கள் பொலி விழந்து தோன்றும் என்பதை. "தாமரை முகங்கள் வாட்டும் தண் பனிக்காலந்தன்னில்" (நைடதம் - அன்னத்தைக் கண்ணுற்ற - 9) என்றதாலும் அறியலாம். செங்கிடை என்பது, நீரில் தோன்றும் சிவப்பு நெட்டி. கூடினர் என்றது தலைவரைப் பிரியாது உடனுறை யப்பெற்ற மகளிரை. அம்மகளிர் வாயிதழ் சிவந்திருப்பதுபோலச் செங்கிடை மலர்கள் பனிக்காலத்தில் செந்நிறமுடையவாய் மலர்ந் திருந்தன என்க. இருவகை மலர்க்கும் உவமையாக, ஊடிய மகளிர் வதனத்தையும் கூடிய மகளிர் அதரத்தையும் கூறிய நயம் காண்க. துவர் - செந்நிறம். செங்கிடையென்றது ஆகுபெயராய் மலரை யுணர்த்தியது. சேடு - அழகு. தாள் என்றது தண்டினை. (114)

## தவளை ஒலி அடங்கல்

4367. கல்வியிற் றிகழ்கணக் காயர் கம்பலைப்
பல்விதச் சிருரெனப் பகர்வ பல்லரி
செல்லிடத் தல்லதொன் றுரைத்தல் செய்கலா
நல்லறி வாளரி னவிந்த நாவெலாம்.

கல்வியின் திகழ் கணக்காயர் கம்பலைப்
பல்விதச் சிருர் எனப் பகர்வ பல்அரி,
செல் இடத்து அல்லது ஒன்று உரைத்தல் செய்கலா
நல் அறிவாளரின், அவிந்த நா எலாம்.

பொ :—கல்வியால் விளக்கம்பெற்றுள்ள ஆசிரியரின்கீழ் ஆரவாரத்தோடு கல்வி கற்கின்ற பலவகையான பள்ளிச் சிறுவர்போல, மழைக்காலத்தில் கத்திய பலவகையான தவளைகள், தம்சொல் பலிக்கும் இடத்திலன்றிப் பிறவிடத்து ஒன்றும் சொல்லாத நல்லறிவாளரைப்போலப் (பனிக்காலத்து ஒலி செய்யாமல்) தம் நாக்கெல்லாம் அடங்கின.

கு :—கணக்கு - நூல்; ஆயர் - ஆராய்ந்தவர்; ஆசிரியர்க்குக் காரணப் பெயர். தொடக்கப்பள்ளி ஆசிரியர் கூறியபடி மாணவர்கள் ஒருங்கே திருப்பிச் சொல்லும் ஆரவாரம் போலத் தவளைகள் மழைக்காலத்தில் ஒருங்குகூடிக் கத்தும் இயல்பின என்றவாறு. கம்பலை - ஆரவாரம். பகர்வனவாகிய அரி என்க. பகர்தல்-ஒலித்தல். அரி - தவளை. மழைக்காலத்தில் மாணவர்போல ஆரவாரித்த தவளைகள் முன்பனிக்காலம் வந்தவுடன் அறிவு முதிர்ந்த நல்லோர் போல் வாயடங்கின என்க. ஒன்றும் அறியா மண்டூகத்திற்குக் கல்விப் பயிற்சியுடையோரையும் கல்வி முதிர்ச்சியுடையோரையுமே உவமை கூறியுள்ளமை காண்க. செல்லிடம் என்றது நல்லவையை. அல்லிடம் புல்லவை. நல்லறிவாளர் நல்லவையிலன்றிப் புல்லவையுள் சொல்லார் என்பது விளக்கியவாறு. "அங்கணத்துளுக்க வமிழ்தற்ருல் தங்கணத்த ரல்லார்முன் கோட்டி கொளல்" (குறள் – 720) என்பது காண்க. இனி இடம் என்றது காலத்தை யுணர்த்தியாகக் கொண்டு, நல்லறிஞர் தம் சொல் செல்லும் காலத்திலன்றிப் பிற காலத்துச் சொல்லார்; அதுபோலத் தவளைகள் தம் ஒலி செல்லுங் காலமாகிய மழைக்காலத்தில் ஆரவாரம் செய்து, செல்லாக்காலமாகிய முன்பனிக்காலத்து நாவடங்கின எனக் கூறலும் ஆம். அவிதல் - அடங்குதல். ஒலிசெய்தற்குரியது நாவே யாகலின் 'அவிந்த நாவெலாம்' என்ருர். (115)

